# AN APPEAL TO EDUCATED HINDUS

Emanuel Swedenborg was an illustrious and far-seeing man of Science, a luminous and original philosopher, an enlightened Seer and heaven-directed theologian and one of the greatest geniuses of his age. Although his eminence as a Scientist was great, his claim to distinction lay in his Theological Writings. He reconciled modern scientific discoveries with the Truths of Religion and revealed an Universal Religion and Philosophy, adapted to this Age of Reason.

The Hindu Philosophers like our four great Acharyas knew no science and we therefore find no scientific explanations in their commentaries. Therefore, the harping of our Pandits from time immemorial upon their old inarticulate tunes, resulted in making Religion and Philosophy, repugnant to most of the English educated men of our country. The spiritual philosophy of Swedenborg which appeals at once to reason and to the heart, leavens all religious thoughts and changes all arbitrary Theologies into a spiritual rationalism. In fact, the philosophical writings of Swedenborg form scientific commentaries upon Saiva Siddhanta. By the help of many Doctrines, he enunciated for the first time and are unknown to India, he made it easy to understand the most difficult problems of Religion and Philosophy that baffle human intellect so long.

That this Philosophy of the New Revelation through Swedenborg bears the closest resemblance to Saiva Siddhanta has been stated by such an eminent scholar like Dr. L. D. Barnett, the greatest orientalist on the Agamanta and by many of the most distinguished scholars of Saiva Siddhanta in this country.

Seeing the great spiritual benefit the teachings of Swedenborg confer, I have translated some of the important works of his from Latin into Tamil, in the hope that many of our Hindu brethren would read them for their spiritual uplift.


D. GOPAUL CHETTY.

*Late Editor, "New Reformer."*

**Royapettah, Madras.**

# TRANSLATION FROM SWEDENBORG

## (DIVINE PROVIDENCE)

# ஈசுவர இராச்சிய பரிபாலனப் பிரபாவம்

D. கோபால செட்டியார் மொழிபெயர்ப்பு

**606** பக்கங்கள். விலை ரூ. **1—8—0**

குறைத்த விலை **0—12—0**

*மனம் வாக்குக் காயமுயிர் மன்னி யசைப்பானும்*
*அனமாதி போக மளிப்பானும்—நனவாதி*
*கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறவி*
*ஆட்டிவிடு வானுமரன்.* சிவபோகசாரம்.

இந்த ஞான நூல், ஈசுவர இராச்சிய பரிபாலனத்தின் சுபாவத்தையும் தொழிற்பாடுகளையும் எடுத்துக் காண்பித்து, ஈசுவரனுடைய அந்த சன்மார்க்க இராச்சியம் நடத்தப்படும் சட்டங்களையும் மிகவும் விவரித்து வெளிப்படுத்துகிறது. அதனுடன் பிரபஞ்சமானது, ஆண்டவரின் ஞானசக்தியினால் நடத்தப்பட்டு, அவருடைய இச்சா சக்தியினால் ஆளப்படுவது நிரூபிக்கப்படுகிறது. ஆன்மாக்கள் ஆண்டவருடைய திருவடியை அடையும்பொருட்டு செய்யப்படும் இந்த இரண்டு சக்திகளின் தொழிற்பாடுகள் வேறு எந்த நூலிலும், இவ்வளவு விவரமாய்க் கூறப்படவில்லை. மேலும், அத்திருவடியை அடைய ஆன்மாக்கள் செய்யவேண்டியது, "ஏகனாகி இறைபணி நிற்றல்" என்று சிவஞான போதம், 10-வது சூத்திரத்தில் கூறியது நன்கு விளக்குகிறது. எல்லா சமயங்களின் சாரமும், ஈசுவரன் ஒருவரிருக்கிறார் என்பதிலும், ஆன்மாக்கள் பற்றற்று, அவர் காட்டும் அருள்வழி சென்று, அவருடைய சீர்பாதம் அடைய வேண்டுமென்பதிலும், அப்பேறு பெறுதற்பொருட்டு அவரிடத்திலும், சகல ஆன்மாக்களிடத்திலும், அன்பு பாராட்டி, நமக்காக யாதொன்றுமின்றி, பிறர் நன்மைக்காகவே தொழில்படவேண்டுமென்பதிலும் அமைந்திருக்கிறது. அந்த அருள்வழி நடக்கும்

தரும வாழ்வைக் குறித்த பல நீதி சாஸ்திரங்கள் எல்லா சமயங்களிலும் இருக்கினும், இந்நூல்போன்று, எவ்வளவு தீயோனாயினும், அவ்வாழ்வை ஏற்றுக்கொண்டு, நன்னெறிக்கு திருப்பக்கூடிய நூதன வழியில் விளக்கிக்காட்டும் நூல், இதுகாறும் வெளியானதில்லை. இந்நூலில் அதிக பிரகாசமுள்ள தீபங்கள் ஏற்றப்பட்டு, சுவர்க்கத்துக்கு போகும்வழி காண்பிக்கப்பட்டிருக்கிறது. மேலும், இந்நூல் எல்லா சமயங்களுக்கும் பொதுவானது. எச்சமயத்தையும் உயர்த்தவும், தாழ்த்தவும், நிலைப்படுத்தவும் எழுதப்படவில்லை. இந்நூல் ஆசிரியருக்கு எல்லா சமயங்களும் சம்மதமே. ஈசுவரனை ஏற்றுக்கொண்டு, அவர் காட்டும் அருள்வழி சென்று, தருமவாழ்வை நடத்தப்பட்டவர்கள் எச்சமயத்தை சேர்ந்தோராயினும், மோக்ஷம் அடைவார்களென்று, இந்நூலிலேயேயும், வேறு இதர நூல்களிலும் அவர் தெளிவாய்க் கூறியிருக்கின்றனர்.

---

## Some Select Opinions on this Book.

சில மதிப்புரைகள்.

The *Hindu*, the leading Daily of Madras says: "Mr. D. Gopaul Chettiar, Late Editor, "New Reformer" is a leading exponent of Saiva Siddhantha philosophy and has made many significant contributions to the subject. His name is however, most prominently associated with his work on the writings of the Swedish scientist, philosopher and mystic, Emanuel Swedenborg. He has been contending as a result of deep study no doubt, that there is a remarkable identity between the doctrines of the Swedish Philosopher and the tenets of Saiva Siddhanta........."

சென்னையில் சைவ சித்தாந்த பத்திரிகையாகிய சித்தாந்தம் கூறுவது :—

"இந்நூலை மகிழ்ச்சியோடு வரவேற்கின்றோம். ஸ்வீடன்பர்க் ஆசிரியரது நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் தெய்வத் திருத்தொண்டை அன்புடன் ஏற்று, திரு. கோபால செட்டியாரவர்கள் செவ்வனே நடத்திவருவது நமது நேயர்கட்குத் தெரியும். நமது பார்வைக்கு இப்போது வந்துள்ள நூல் ஸ்வீடன்பர்க் இயற்றிய "Divine Providence" என்ற லத்தீன் நூலின் மொழிபெயர்ப்பு. இந்நூலில் இச்சாசத்தி, ஞானசத்திகள் தொழிற்படும் முறை சிறந்த அநுபூதிவகையில் கூறப்பட்டுள்ளது. அநுபூதியில் கிடைக்கும் பற்பல நுட்பமான பொருள்கள், இந்நூலில் மிகத்

[illegible] விளக்கப்பட்டுள்ளன. நமது சித்தாந்த சாத்திரங்களில் [illegible]மாகவும் விளங்காமலும் உள்ள பகுதிகளை யறிய இந்நூல் பெருந்துணையாகும். சைவ நன்மக்கள் இதை வாங்க வேண்டும்."

யாழ்ப்பாணத்தில் பிரசுரமாகும் சைவ சித்தாந்தப் பத்திரிகையாகிய "இந்து சாதனம்" கூறுவது:—

"இதனை நுட்பமாக மொழி பெயர்த்தவர் சுத்தாத்துவித சைவ சித்தாந்த பரிமளக பல அரிய நூல்களை எழுதிய, சென்னை ஸ்ரீ D. கோபால் செட்டியாராவர். இந்நூல் இறைவனுடைய திருவருட்டிறத்தையும் தொழிற் பேதங்களையும் இன்ன பிறவற்றையும் மிகவும் நுட்பமாக எடுத்துக்காட்டுவதாம். 'ஏகனாகி இறைபணி நிற்றல்' என்றற்றொடக்கத்து, சிவஞானபோதம் பத்தாம் சூத்திரத்தில் கண்ட பொருள், இந்நூலின்கண் இயன்றவரையில் நூதனமாக விரித்துரைக்கப்பட்டிருக்கிறது. மேலும், இந்நூல் எச்சமயவாதிகட்கும் பொதுவாகவே அமைக்கப் பெற்றுள்ளது. அறிஞர் எவரும் வாங்கி ஆராயத்தக்கது."

சென்னையில் பேர்பெற்ற தமிழ் நாடு என்னும் பத்திரிகை கூறுவது:—

"ஆஸ்திகம் குன்றி, நாஸ்திகம் வளரும் இக்காலத்தில் இத்தகைய ஞான நூல்கள் அவசியமென்பதை எவரும் மறுக்கமுடியாது. எம்மதமும் சம்மத மென்பதையும், இந்த உலகத்தை, எங்கும் நிறைந்த ஒரு பராசக்தி ஆட்டிவைக்கிறதென்ற உண்மையையும், இதில் தெளிவாய்த் தமிழ் மதத்திற்கிசைந்த முறையில், பல மேற்கோளுடனும்.........மொழி பெயர்க்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ............

மனித தர்மம் என்ன? மனிதன் தன் சுதந்திரத்தையும், அறிவையும் கொண்டு எந்த விதமான அருள் வழியிலும் தரும வாழ்க்கையிலும் ஈடுபட வேண்டுமென்பதும், இந்த நூலின் ஒரு முக்கிய தத்துவமாகும். ஆகவே, இந்த ஞான நூலை ஒவ்வொரு தமிழரும் அவசியம் வாசித்துக் கருணாநிதியான கடவுளின் அரிய அருள் செயலென்னவென்பதை அறிய வேண்டியது அவசியம்."

**Mr. T. Ramalingam Pillay, M. A., Tamil Translator to the Government of Travancore says :—**

"Your work evidently treats about a subject of paramount importance to mankind. It calls for close and careful study. It is not a book merely to be skimmed and laid aside."

# Translations from Swedenborg.

## (Divine Love and Wisdom)

# பதி பசு பாச விளக்கம்.

## D. கோபால செட்டியார் மொழி பெயர்ப்பு.

பதி பசு பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்பு எனு மிரண்டையும் மயக்கமற காட்டுதற்கு வெளிப்படுத்தப்பட்டது, வேத வேதாந்த சிந்தாந்தங்களுக்குத் திறவுகோலாயுள்ள சிவ ஞான போதமாகும். அதன் பொருளை திருவருட் தோன்றலாகிய மாதவ சிவஞான சுவாமிகள், தெளிவாய் உணர்த்தினர். மேலும், நீலகண்ட சிவாச்சாரியார் பிரம சூத்திரத்துக்கு சைவ சித்தாந்த கோட்பாடுகளை அனுசரித்து பாஷியமும் இயற்றியுள்ளார். இந் நூலும், பதி பசு பாசம் என்பவைகளைக் குறித்தே சுத்தாத்துவித சைவ சித்தாந்தத்தை அனுசரித்து, அரும்பெறல் அனுபூதிமானு கிய சுவாமியார் ஸ்வீடன்பர்க் என்பவரால் இயற்றப்பட்டது. இது சிவஞானபோத கோட்பாடுகளுக்கு ஓர் பெரும் பாஷியமாகவே யிருக்கிறது. முன் கூறிய பாஷியங்கள் நவீன மேல் நாட்டு (Science) பூத சாஸ்திரங்களை அனுசரித்து எழுதப்பட்டவைகளல்ல. இந்நூல் அங்ஙனம் எழுதப்பட்டுள்ளது. இதுவரையில் உலகத் தில் வெளிவந்த நூல்கள் எல்லாம் தத்துவ திரயங்களைக் குறித்து, மனிதர்களுக்கு ஒரு திட்டமான அபிப்பிராயத்தை வெளியிடாமல் புதைப் பொருளாகக் கூறியதால் மானிடர் மயங்கி நின்றனர். இந்நூல் சூக்குமப் பொருள்களின் சுபாவத்தையும் உருவத்தையும் அதிசயிக்கத்தக்க நூதன வழியில் கூறி, அநேக நூற்றாண்டுகளாக தத்துவசாஸ்திரிகள் உலகத்தில் மலைவுற்ற அநேக விஷயங்களை மிக தெளிவாய் விளக்கிக்காட்டுகிறது. உதா ரணமாக, அன்பு சிவசொரூபமாகவும், ஞானம் அதன் தடத்தமாக வும் நம் நூல்களில் கூறப்படினும், தத்துவ திரயங்களுக்கு அவை களை அரோபித்து, சிருட்டி முதலிய விஷயங்களை விளக்கிக் காட்டினவர் ஒருவருமில்லை. ஆதலின், இந்நூல் ஈசுவரனுடைய ஓர் புதிய வெளிப்பாடாக மிளிர்கின்றது. இதை யாவரும் வாசித்து, அதன் பெரும்பயனை அடையும் பொருட்டு பிரார்த்திக்கின்றனன்.

(504 பக்கங்கள்) விலை ரூ 1-8-0 குறைத்த விலை ரூ. 0-12-0

# Translations from Swedenborg.

## பதி பசு பாச விளக்கம்.

### (Divine Love and Wisdom)

"நியு ரிபார்மர்" பத்திராதிபர்

D. கோபால செட்டியார் மொழி பெயர்ப்பு

## SOME SELECT OPINIONS.

திருச்சிறுப்பள்ளி ஹீபர் காலேஜ் தமிழ் வித்துவான் திருவாளர், ந. மு. வேங்கிடசாமி நாடார் கூறுவது:—

"மொழிப்பெயர்ப்பாசிரியர் கூறுவதுபோன்றே இந்நூலின் உண்மைகள் பல சைவ சித்தாந்தத்துடன் ஒத்துள்ளன. ........ தத்துவ ஆராய்ச்சி செய்யும் ஒவ்வொருவரும் அவ்வுண்மைகளை புதிய முறையில் வெளிப்படுத்தும் இந் நூலை வாங்கிப்படித்தலால் நல்ல பயனெய்தலாகும் .....தாங்கள் புரியும் பணி மிகவும் போற்றற்பாலதாகும். இந் நூலைப்படித்தலால் என் அறிவிற்கு தெளிவுவுண்டாகின்றது.

**Mr. T. Ramalingam Pillay**, M. A., Head Tamil Translator to Travancore Government says :—

"You have placed the Tamil world under a deep and heavy debt of obligation to you by publishing this monumental work..............."

**Mr. M. S. Purnalingam Pillay**, B.A., L.T., Emeritus Professor of English and a great Tamil Scholar says : "The Tamil world will certainly appreciate him (Swedenborg) as Western expounder of oriental mysticism and evaluate his advancement on scientific lines better than the "city building", "market going races." The labours of Mr. Chettiar during the past decade or so, to exhibit the great philosopher of Sweden to the thoughtful minds of India deserve every encouragement.

"**The Hindu**," the leading daily of Madras says:—

"This Tamil rendering has its own intrinsic value as a notable addition to the library of works on Western Philosophy in Tamil."

"**Bharata Dharma**," a famous religious Journal says:—"In this age of Science, religion has to be presented in a scientific garb, so that the facts of Science may lead to the confirmation of the claims of Faith. Emanuel Swedenborg, both a deep scholar in the Sciences and a devoted student of Faith attempted this task in his several works. A peculiar sanction which this great author claims for his conclusions is his own personal realizations of spiritual truths."

செந்தமிழ்:—இதில் பதி, சிவ சூரியன், காரண காரிய வேற்றுமைகள், சிருட்டி, பசு என்னும் விஷயங்கள் சற்றேறத் தாழச் சைவ சமயக்கொள்கைகளைப் பின்பற்றி எழுதப்பட்டு இருப்பனவாகத் தோன்றுகின்றன.

# TRANSLATIONS FROM SWEDENBORG.

# பரம இச்சாஞான தீபிகை

**(Tamil "Doctrine of Uses.")**

D. கோபால செட்டியார் மொழி பெயர்ப்பு.

அநாதி முத்த சித்தருவாகிய சிவபெருமானின் இச்சாஞான சத்திகளின் சுபாவத்தையும், விரிவான தொழிற்பாடுகளையும் குறித்து, இந்த ஞானநூல் எழுதப்பட்டுள்ளது. இது வரையில் கிரகிக்க முடியாத சிதம்பர இரகசியங்கள்போன்ற அநேக தத்துவ சாஸ்திர உண்மைகள் இந்நூலில் யாவருமறிய முதல் முதல் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## Some Select Opinions.

**Mr. M. S. Purnalingam Pillay,** B. A., L. T., writes :— "His exposition of the relationship of three great verities or entities in the way of the South Indian Saiva Siddhantam, is really admirable and the Tamil world cannot but be indebted to you for..............."

**Mr. T. Baktavatsalam Pillay,** B. A., writes :—"I commend the book to the public, and would exhort you to bring out works of the same kind in the near future for the edification of the religiously and philosophically inclined people."

**Mr. V. M. Kalyanasundram Pillay,** B.A., B.L., writes :—" I heartily thank you for your valuable work on behalf of the Siddhanta Public of South India."

திருவாளர் ந. மு வேங்கிடசாமி நாடார்:—" அன்பு ஞானம் என்பவைகளைப்பற்றிய சில புதிய கருத்துகள் இந்நூலில் வெளியிடப்பட்டிருக்கின்றன."

சுதேசமித்திரன்:—" கடவுள் ஆன்மா இவைகளைப்பற்றின திட்டமான அபிப்பிராயம் சில இதில் காணப்படும்."

தமிழ்நாடு:—" இத்தத்துவ நூலில் தெய்வ உண்மைகள் பல தென்படுகின்றன. கொள்கைகளனைத்தும் சைவாசித்தாந்தத்தைத் தழுவியிருக்கின்றன. இதில் இறைவனது இச்சா சக்தியைப்பற்றியும், ஞானசக்தியைப்பற்றியும் எழுதப்பட்டிருக்கிறது. பரம இச்சாசக்தியை விவரிக்கப் புகுந்த இடத்தில் அன்பைக் குறித்து சில சிறந்த சித்தாந்தங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. இப்புத்தகத்திலுள்ள ஆன்மாவும், கடவுளும், சாரீரமும் எப்படி வேலை செய்கின்றனவென்ற விவரங்கள் அவசியம் அறியவேண்டியவை. தத்துவ விசாரணையுடையவரொவ்வொருவருக்கும் இந்நூல் இன்றியமையாததென்று சிபார்சுசெய்கிறோம் பிறரும் இதனை வாங்கிவாசித்து நல்லவழி ஒழுகி பயனடைவாராக." குறைத்த விலை ரூ. 0-8-0

# வாழ்க்கை போதம்

D. கோபால செட்டியார் மொழிபெயர்ப்பு.

விலை ரூ. 0-2-0

---

### D. Gopaul Chetty's Philosophical Works.

### A RARE PHILOSOPHICAL WORK !!!

## Chidambara Rahasyam Revealed.

**By D. Gopaul Chetty, Late Editor, "New Reformer" Madras.**

The secrets of worship at Chidambaram and other connected mysteries are for the first time explained in a scientific and elaborate manner, in this book. The treatment of the secret regarding God's stay in the heart of man, is wonderfully new and not known to India hitherto.

### SOME SELECT OPINIONS.

**The Hindu Organ**, the leading Saiva Siddhanta paper of Ceylon says :—"The author of the above book, Mr. D. Gopaul Chetty, is a well-known student of Saiva Siddhanta Philosophy. He has made notable contribution to Saiva Siddhanta Philosophy as the Editor of the "New Reformer" and by his exposition of Swedenborg's philosophy and its similarity with the tenets of Saiva Siddhanta. The present work as stated by the author is an attempt to explain the meaning of the sacred mysteries, connected with the Chidambaram Temple. In explaining the mysteries, the author draws his inspiration from Swedenborg . . . The spiritual principle on which the Temple is built and the mysteries, connected with its worship are explained in the book. It is a book that deserves study and we commend it to all those who are anxious to know and understand the spiritual aspect of Siva's dance."

**Siddhantam**, the leading Saiva Siddhanta Magazine of Madras says :—"The author of the book is a great man who compares the tenets of Saiva Siddhanta with those of the philosopher, Swedenborg of the West and explains many subtleties. With the help of the Science of Correspondence stated by Swedenborg, the author reveals the secrets of worship at Chidambaram. This book treats the subject well in a new way." (*Tamil opinion translated.*)

**Mr. K. S. Surya Murthi Pillay,** Tamil scholar of great fame as an expounder of the inner sense of the Saiva Scriptures and Government Pensioner says :—

"I am in thankful receipt of your book, "Chidambaram Rahasyam Revealed." The way in which you have explained the subtleties of worship at the Temple by the help of Saiva Siddhanta and Swedenborg deserves praise. Such expositions are to-day and for ever an ambrosia to the intelligence of men. I pray God that He may condescend to grant you the power and the long life to publish several books containing such revelation."

**Price Re. 1—0—0**

றது. அதனால்தான் வேதத்தில் சுவர்க்கமென்பது, ஆண்டவரின் உறைவிடமென்றும் சிங்காசனமென்றும் சுவர்க்கத்திலிருப்பவர்கள், ஆண்டவரின் [illegible]தாகவும், சொல்லப்படுகிறது. ஆனால், அந்த தேவத்துவம் ஆண்டவரிடமிருந்து எவ்விதமாய்ப் புறப்பட்டு, சுவர்க்கத்தை நிரப்புகிறதென்பது பின்வருவதில் சொல்லப்படும்.

**9**. தேவர்கள், தங்கள் ஞானத்தின் உதவியால், இன்னும் அப்பால் போய், ஆண்டவரிடமிருந்து, நன்மையானதும் உண்மையானதுமாகிய ஒவ்வொன்றுமட்டுமல்லாமல், உயிரின் எல்லாம்கூட வருகிறதாகச் சொல்லுகிறார்கள். எதுவும் தன்னிடமே இருந்து ஜீவிக்காதென்பதினாலும், ஆனால் தனக்கு முந்தின ஒன்றிலிருந்து ஜீவிக்குமென்பதினாலும், ஆதலால், எல்லா பொருள்களுக்கும் உயிராயிருக்கிற பரமாத்துமா என்று அவர்கள் சொல்லுகிற ஓர் முதற்பொருளிலிருந்து எல்லாம் ஜீவிக்குமென்பதினாலும், அதை அவர்கள் ஊர்ஜிதப்படுத்துகிறார்கள். வேறொன்றினால் தொடர்ச்சியாக நிலைத்திருத்தல், இடைவிடாத நிலைத்திருத்தலானபடியினாலும், மத்தியமானவைகளால், முதற்பொருளோடு சம்பந்தப்பட்டு தொடர்ச்சியாய் வைக்கப்படாதவைகள் உடனே நாசமடைந்து, முழுமையும் சிதறுவிக்கப்படுகிறபடியினாலும், அம்மாதிரியே எல்லா பொருள்களும் வேறொன்றினால் நிலைத்திருக்கிறது. இன்னும் அவர்கள் உயிரின் ஒரே ஒரு ஊற்றுக் கண் இருப்பதாயும், மனிதனுடைய உயிர் தன் ஊற்றுக் கண்ணிலிருந்து இடைவிடாமல் வேண்டியது கொடுக்கப்படாவிட்டால், உடனே பெருக்கு நின்றுவிடுகிற, அதிலிருந்துவரும் ஒரு சிற்றாறு என்றும் கூட சொல்லுகிறார்கள். இன்னும் ஆண்டவராயிருக்கிற உயிரின் அந்த ஒரே ஒரு ஊற்றுக்கண்ணிலிருந்து, தெய்வீக நன்மையும் தெய்வீக உண்மையும் தவிர வேறொன்றும் புறப்படுகிறதில்லை யென்றும், ஏற்றுக்கொள்ளுதலுக்குத் தக்கபடி, இவைகள் ஒவ்வொருவனையும் இயக்குகிறதென்றும், இவைகளை விசுவாசத்திலும் வாழ்விலும் பெற்றுக்கொள்ளுகிறவர்கள், தங்களுக்குள்ளேயே சுவர்க்கத்தை உடைத்தாயிருப்பதாயும், ஆனால், நன்மையை தீமையாகவும், உண்மையைப் பொய்யாகவும், இவ்விதமாக உயிரை மரணமாகவும் திருப்புகிறபடியினால், தெய்வீக நன்மையையும் தெய்வீக உண்மையையும் தள்ளி, திக்குமுக்காடப்பண்ணுகிறவர்கள், அவைகளை நரகமாக திருப்புகிறார்களென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள்.

இன்னும், உயிர் முழுமையும், ஆண்டவரிடமிருந்து வருகிற தென்பதை, மனிதனுடைய அன்பின் உயிராயிருக்கிற, அவனுடைய சித்தத்தில் உயிர் நன்மைக்கும், அவனுடைய விசுவாசத்தின் உயிராயிருக்கிற, அவன் புத்தியின் உயிர், உண்மைக்கும் சேர்ந் திருப்பதின் நிமித்தம் பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும், நன்மைக்கும் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிற தென்பதினால் கூட, அவர்கள் ஊர்ஜிதப்படுத்துகிறார்கள். நன்மையும் உண்மையு மான ஒவ்வொன்றும் மேலே இருந்து வருகிறபடியினால், உயிர் முழுமையும் அப்படியே வருகிறதென்பது இதிலிருந்து ஏற்படு கிறது.

தேவர்கள் இதை நம்புகிறபடியினால், தாங்கள் செய்கிற நன்மைக்குக் கொடுக்கும் வந்தனங்களை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை; எவனாவது ஒருவன் அவர்கள் பேரில் நன்மையைச் சுமத்தினால், கோபம் வந்து, விலகிப்போய்விடுகிறார்கள். தன்னிடமே யிருந்து தான் ஞானமுள்ளவனா யிருக்கிறானென்றும், தன்னிடமே இருந்து தான் நன்மை செய்கிறானென்றும், எப்படி எவனாவது ஒருவன் நம்பக்கூடுமென்று அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். தன்னிடமே யிருந்து செய்யப்படுகிறபடியினால், தன் ஆத்மார்த்தமாக நன்மை செய்தலை, அவர்கள் நன்மை என்று சொல்லுகிறதில்லை. ஆனால் நன்மையின் பொருட்டு நன்மை செய்தலை, தேவத்துவத்திலிருந்து வந்த நன்மையென்று சொல்லுகிறார்கள்; இந்த நன்மையானது ஆண்டவராயிருப்பதினால், இதுதான் சுவர்க்கத்தை ஏற்படுத்துகிற நன்மை என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

**10.** உலகத்திலிருக்கும்போது, தாங்கள் செய்யும் நன்மை யும், தாங்கள் நம்புகிற உண்மையும், தங்களிடமிருந்தே வருகிறதாக வும், அல்லது தங்களுடைய சொந்தமாக உரித்தாகப்படுகிறதாகவும் ஓர் நம்பிக்கையில் ஊர்ஜிதப்பட்ட அவ்வுலகத்து ஆன்மாக்கள் (நற்செய்கைகளில் பாத்திரம் வைக்கிறவர்களும், நீதிமான்கள் என்று பாராட்டுகிறவர்களும், அந்த நம்பிக்கையிலிருக்கிறார்கள்.) சுவர்க்கத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகிறதில்லை. தெய்வத்தை யல் லாமல் தங்களையே இடைவிடாமல் நோக்குகிறபடியினால் மூடர்க ளென்றும், ஆண்டவரிடமிருந்து அவருடையதை எடுத்துக்கொள்ளு கிறபடியினால் திருடர்களென்றும், இவ்விதமாக அவர்களை மூடர்க ளாகவும், திருடர்களாகவும் எண்ணி, தேவர்கள் அவர்களை விட்டு

நீங்குகிறார்கள். இப்பேர்ப்பட்ட அபிப்பிராயங்கள், தேவர்களால் ஏற்றுக் கொள்ளப்படுகிற ஆண்டவரின் தேவத்துவம், சுவர்க்கத்தை உண்டாக்குகிற தென்கிறதாயிருக்கிற சுவர்க்கத்து நம்பிக்கைக்கு, விரோதமாயிருக்கின்றன.

**11.** "என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன்; கொடியானது திராட்சச் செடியில் நிலைத்திராவிட்டால் அது தானாய் கனி கொடுக்கமாட்டாததுபோல், நீங்களும் நிலைத்திராவிட்டால், கனி கொடுக்கமாட்டீர்கள்" என்றும், "நானே திராட்சச் செடி, நீங்கள் கொடிகள். ஒருவன் என்னிலும், நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான்; என்னையல்லால் ஒன்றும் செய்யக்கூடாது" (யோ. XV. 4·5) என்றும் ஆண்டவர் கூறியபோது, சுவர்க்கத்திலும் திருச்சபையிலும் இருக்கப்பட்டவர்கள் ஆண்டவரிலும், ஆண்டவர் அவர்களிலும் இருக்கிறதாக அவர் கற்பித்தார்.

**12.** ஆண்டவரிடமிருந்து வருவது அவரே யானபடியினாலும், ஆதலால், தங்களுக்குச் சொந்தமானது ஏதுவுமல்லாமல், ஆண்டவரிடமிருந்து வரும் நன்மையானது தேவர்களுக்கு சுவர்க்கமாயிருக்கிறபடியினாலும், தனக்கு சொந்தமாயிருக்கிறதில் சுவர்க்கத்து தேவர்களோடு ஆண்டவர் வசிக்கிறாரென்றும், இவ்விதமாக ஆண்டவர் சுவர்க்கத்து எல்லாப் பொருள்களிலும் எல்லாமாயிருக்கிறாரென்றும், இவைகளிலெல்லாமிருந்து இப்பொழுது அறிந்து கொள்ளப்படலாம்.

## III

## சுவர்க்கத்தில், ஆண்டவரின் தேவத்துவம் அவரிடத்தில் அன்பும், அயலானிடத்தில் தருமமுமாயிருக்கிறது.

**13.** ஆண்டவரிடமிருந்து புறப்படும் தேவத்துவம் பின் வருவதில் காணப்படும் காரணத்துக்காக, சுவர்க்கத்தில் தெய்வீக உண்மை என்று சொல்லப்படும். இந்த தெய்வீக உண்மையானது, சுவர்க்கத்துக்குள் ஆண்டவரிடமிருந்து, அவருடைய தெய்வீக அன்பினால், பாய்கிறது. அன்பானது சூரியனுடைய நெருப்பைப் போலும், அதிலிருந்து வரும் உண்மை, அதன் வெளிச்சத்தைப் போலவும் இருப்பதின் நிமித்தம், தெய்வீக அன்பும், அதிலிருந்து வரும் தெய்வீக உண்மையும், ஒப்பீடாய், சூரியனுடைய நெருப்பைப் போலவும், உலகத்தில் அதிலிருந்துவரும் வெளிச்சம் போலவுமிருக்கிறது. இதுவன்றியும், காரணகாரிய சம்பந்தத்தால், நெருப்பு அன்பையும், வெளிச்சம், அன்பிலிருந்துவரும் உண்மையையும் அருத்தம் கொள்ளுகிறது.

இதிலிருந்து, ஆண்டவரின் தெய்வீக அன்பிலிருந்து புறப்படுகிற தெய்வீக உண்மையானது, தன் சத்தில் தெய்வீக உண்மையோடு சேர்க்கப்பட்ட தெய்வீக நன்மையாக யிருக்கிறதாகவும், அப்படி சேர்க்கப்பட்டிருப்பதினால், உலகத்தில் வெளிச்சத்துடன் சேர்க்கப்பட்ட சூரியனுடைய சூடு வசந்தம், வேனிற்காலங்களில் போல், பூமியிலுள்ள எல்லா பொருள்களையும் கனி கொடுக்கச் செய்கிறதுபோல, சுவர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களுக்கும் அது உயிரைக் கொடுக்கிறதாகவும் விசதமாகிறது. சூடும் வெளிச்சமும் சேர்ந்திராதபோது அதாவது வெளிச்சம் குளிர்ந்திருக்கும் போது, விஷயம் வேறு மாதிரி. அக்காலத்தில், எல்லா பொருள்களும் அசைவற்றும், உயிரற்றும் போகின்றன. தேவர்கள் விஷயத்தில், சூட்டுக்கு ஒப்பிடப்பட்ட இந்த தெய்வீக நன்மை, அன்பின் நன்மையாயிருக்கிறது; வெளிச்சத்துக்கு ஒப்பிடப்பட்ட தெய்வீக உண்மையானது, அதின் மூலமாயும் அதிலிருந்தும் அன்பின் நன்மை வரப்பட்டதாயிருக்கிறது.

**14.** அன்பானது, ஆத்மார்த்தமான புணர்ச்சியாயிருப்பதி ஞல், சுவர்க்கத்தை உண்டாக்குகிற சுவர்க்கத்திலிருக்கும் தேவத்து வம் அன்பாயிருக்கிறது. அன்பானது தேவர்களை ஆண்டவருடன் கூட்டுகிறது. அதனுடன் அவர்களை ஒருவரோடு ஒருவரை சேர்க் கிறது. ஆண்டவரின் நோக்கத்தில் அவர்கள் எல்லாரும் ஒன்ரு யிருப்பதாகத்தோன்றும்படியாகச் சேர்க்கிறது. இதுவன்றியும், அன் பானது ஒவ்வொருவர் உயிர் விஷயத்திலும் உயிரின் சொரூபமா யிருக்கிறது; ஆகையினுல், அன்பிலிருந்து தேவர்களும் மனிதர் களும் உயிரை உடைத்தாயிருக்கிருர்கள்; அன்பின் முன்பாக, ஒவ்வொருவனும் சூடுள்ளவனுகவும், அது இல்லாதபோது குளிர்ந்த வனுகவுமாய், அது இல்லாமல் செய்யப்பட்டபோது அவன் இறந்து போகிறபடியினுல், யோசித்துப்பார்க்கும் ஒவ்வொருவனும், மனிதனுடைய மிகவும் உள்ளான ஜீவசக்தி அன்பிலிருந்து வருகிற தாகத்தெரிந்துகொள்ளக்கூடும். ஆனுல், ஒவ்வொருவனுடைய உயி ரும், அவனுடைய அன்பு இருக்கிறதுபோ லிருப்பதாக தெரிந் திருக்கப்படவேண்டும்.

**15.** ஆண்டவரிடத்து அன்பென்றும், அயலானிடத்து அன்பென்றும், சுவர்க்கத்தில் இரண்டு வேறு வேருன அன்புக ளிருக்கின்றன. அதிக உள்ளான அல்லது மூன்ருவது சுவர்க்கத் தில், ஆண்டவரிடத்து அன்பு இருக்கிறது; இரண்டாவது அல்லது நடுசுவர்க்கத்தில் அயலானிடத்து அன்பு இருக்கிறது. இரண்டும் ஆண்டவரிடமிருந்து புறப்படுகிறது. மேலும் அந்த இரண்டும் சுவர்க்கத்தை உண்டாக்குகின்றன. இந்த இரண்டு அன்புகளுக் குள்ளுமிருக்கிற வித்தியாசமும், அதனுடன் அவைகள் சேர்க்கப் பட்டிருக்கிற விதமும், சுவர்க்கத்தில் தெளிவான வெளிச்சத்தி லும், ஆனுல் உலகத்தில் மங்கலாய் மாத்திரமும் தோன்றுகிறது. சுவர்க்கத்தில் ஆண்டவரை நேசித்தலென்பது அவருடைய சரீரம் விஷயம் நேசித்தலல்லாமல், அவரிடமிருந்து வருகிற நன்மையை நேசித்தலென்றும், நன்மையை நேசித்தலென்பது, அன்பிலிருந்து இச்சித்து நன்மையைச் செய்தலென்றும் அருத்தம்; அம் மாதிரியேகூட அயலானை நேசித்தலென்பது, ஒரு தோழனை அவன் சரீரம் விஷயம், நேசித்தலல்லாமல், வேதத்திலிருந்துவரும் உண்மையை நேசித்தலென்றும், உண்மையை நேசித்தல் அதை இச்சித்து செய்தலென்றும், அருத்தம். ஆனபடியினுல், இந்த

இரண்டு அன்புகளும், நன்மையையும் உண்மையையும் போல வேறு வேறானதாயிருக்கிறதாகவும், நன்மை உண்மையோடு சேர்க்கப்பட்டிருக்கிறது போல அவைகள் சேர்க்கப்பட்டிருக்கிறதாகவும், விசதமாகிறது. ஆனால், அன்பு என்பது என்னவென்றும், நன்மை என்னவென்றும், அயலான் யாரென்றும் தெரியாதவர்களுக்கு, இவைகளை எல்லாம் தெரிந்து கொள்ளுதல் கஷ்டமாயிருக்கும்.

**16**. நான் சில வேளைகளில், இந்த விஷயத்தைப் பற்றி தேவர்களுடன் பேசியிருக்கிறேன். தானே நேசித்தலாகாத, ஒருவன் விரும்புவதைச் செய்யாமல் அவனை நேசித்தல் நேசித்தலல்லாமல், மற்றவன் விரும்புவதை இஷ்டப்பட்டு செய்வதினால் ஒருவன் அன்பை எடுத்துக் காட்டுகிறானென்றும், இதுதான் அந்யோந்ய அன்பையும் இணைவையும் கொண்டுவருகிறதென்றும், தங்களுக்குத் தெரிந்திருக்கவேண்டியதாயிருக்கும்போது, திருச்சபையின் மனிதர்களுக்கு ஆண்டவரையும் அயலானையும் நேசித்தலென்பது, நன்மையானதையும் உண்மையானதையும் நேசித்தலென்று தெரியாமலிருப்பது தங்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறதென்று அவர்கள் சொன்னார்கள். ஆண்டவர் அதிலிருப்பதினால், அவரிடமிருந்து புறப்படும் நன்மையானது அவருடைய சாயலென்றும், இச்சித்து செய்வதினால், நன்மையையும் உண்மையையும் தங்கள் உயிருக்குச் சொந்தமாக செய்கிறவர்கள், ஆண்டவரின் சாயல்களாகவும், அவருடன் சேர்க்கப்பட்டிருக்கிறார்களென்றும் கூட அவர்கள் சொன்னார்கள். இச்சித்தலென்பது செய்ய விரும்புதல். "என் கற்பனைகளைப்பெற்றுக்கொண்டு அவைகளைக்கைக்கொள்ளுகிறவனே என்னிடத்தில் அன்பாயிருக்கிறான்; நானும் அவனிடத்தில் அன்பாயிருந்து அவனுடன் வாசம் செய்வேன்" (யோவா. xiv. 21, 23) என்றும், மறுபடியும், "நீங்களும் என் கற்பனைகளைக் கைக்கொண்டிருந்தால், என்னுடைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள்" (யோவா. xv. 10) என்றும், ஆண்டவர் சொல்லி, இது இப்படி இருக்கிறதென்று அவர் வேதத்தில் கற்பித்தார்.

**17**. ஆண்டவரிடமிருந்து புறப்படுகிறதும், தேவர்களை இயக்குகிறதும், சுவர்க்கத்தை உண்டாக்குகிறதுமான தேவத்துவம், அன்பென்று சுவர்க்கத்தில் பெற்ற எல்லா அனுபவமும்சாட்சியிடுகிறது. ஏனென்றால், அங்கே இருப்பவர்களெல்லாம் அன்பி

னுடையவும் தருமத்தினுடையவும் வடிவங்களாகவும் இருந்து தங்கள் முகங்களிலும், பேச்சிலும், தங்கள் உயிரின் ஒவ்வொரு நுண்ணியதிலுமிருந்து அன்பானது ஒளிவீசிக்கொண்டு, சொல்லமுடியாத அழகோடு காணப்படுகிறார்கள். இதுவன்றியும் ஒவ்வொரு தேவனிடமிருந்தும், ஒவ்வொரு உலகத்தை விட்ட ஆன்மாவிடமிருந்தும், அவர்களை சூழ்ந்திருக்கிறதும், அவர்கள் அன்பின் ஆசைகளின் குணம்விஷயத்தில் சிலவேளையில் வெகுதூரம் வரையில் அவர்கள் தெரிந்துகொள்ளப்படுகிறதுமான உயிரின் ஆன்மார்த்த கோளங்கள் புறப்படுகின்றன. ஏனென்றால், இந்த கோளங்கள், ஆசையின் உயிரிலிருந்தும், அதினின்று நினைவின் உயிரினின்றும் அல்லது அன்பின் உயிரிலிருந்தும், அதினின்று ஒவ்வொருவனுடைய விசுவாசத்தின் உயிரிலிருந்தும் புறப்படுகின்றன. தேவர்களிடமிருந்து புறப்படும் கோளங்கள், அவர்கள்கூட இருக்கிறவர்களின் அதிக உள்ளான உயிரை நடத்தும்படியாக அவ்வளவு அன்பால் நிறைந்திருக்கின்றன. நான் சிலவேளைகளில் அவைகளைப் பார்த்திருக்கிறேன்; அவைகள் அம்மாதிரி என்னை இயக்கின.

தேவர்களுக்கு உயிர்வருதல் அன்பிலிருந்து என்பது, மற்ற வாழ்வில் ஒவ்வொருவனும் தன்னுடைய அன்பிற்குத் தக்கபடி தானே திருப்பிக்கொள்ளுகிறானென்பதிலிருந்துகூட வெளிப்படையாகிறது. ஆண்டவரிடத்து அன்பிலிருக்கிறவர்களும் அயலானிடத்தில் அன்பிலிருக்கிறவர்களும், ஆண்டவரிடம் எப்பொழுதும் தாங்களே திரும்புகிறார்கள். ஆனால், தங்களையே நேசித்தலிலிருப்பவர்கள் ஆண்டவரிடமிருந்து பின்னோக்காய் எப்பொழுதும் தாங்களே திரும்புகிறார்கள். இது அவர்களுடைய சரீரத்தின் ஒவ்வொரு இயக்கத்திலும் சம்பவிக்கிறது; ஏனென்றால் இந்த வாழ்வில், இடங்கள் அவர்களின் உள்ளானவைகளின் நிலைமைக்குத் தக்கபடியும் அதனுடன் உலகத்தில் போல் நாட்டப்படாமல், அவர்கள் முகங்களின் தோற்றத்துக்கு தக்கபடி நிர்மாணிக்கப்படுகிற திக்குகளும், அம்மாதிரியே இருக்கின்றன. அல்லாமலும் ஆண்டவர்பக்கம் தாங்களே திரும்புகிறவர்கள் தேவர்களல்ல, ஆனால் தன்னிடமிருந்து வருகிறவைகளைச் செய்ய விரும்புகிறவர்களை ஆண்டவர் தன் பக்கமே திருப்புகிறார். ஆனால், மற்ற வாழ்வின் திக்குகளைக் குறித்து நாம் பேசும்போது இந்த விஷயங்களைக் குறித்து அதிகமாய் சொல்லப்படும்.

**18.** சமாதானமாகவும், புத்தியாகவும், ஞானமாகவும், சுகமாகவுமிருக்கிற சுவர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களுக்கும் அன்பானது கொள்கலமா யிருக்கிறபடியினால், சுவர்க்கத்தில், ஆண்டவரின் தேவத்துவம் அன்பாயிருக்கிறது. ஏனென்றால், தன்னுடனே ஏக சுபாவமான ஒவ்வொன்றையும் எல்லாவற்றையும் அன்பு ஏற்றுக் கொள்ளுகிறது; அது அவைகளால் இடைவிடாமல் செழிப்பிக்கப்பட்டு, பூரணமாக்கப்பட இஷ்டப்படுகிறபடியினால், அது அவைகள் பேரில் அவாவுகிறது, அவைகளை தேடுகிறது, தானாகவே அவைகளை குடிக்கிறது. மனிதனுடைய அன்பானது தன்னுடன் ஒத்துப்போகிற எல்லா பொருள்களையும் தன்னுடைய ஞாபகத்திலிருக்கிற பொருள்களிலுமிருந்து இழுத்து, சோதித்து, அவைகள் தன்னுடைய சொந்தமாயிருக்க தன்னிலேயும், தனக்கு உதவியாயிருக்க தனக்கு கீழேயும், இவ்விதமாக தன்னிலேயும் தனக்கு கீழேயும், அவைகளைச் சேர்த்து, ஒழுங்குபடுத்தி, ஆனால் ஒத்துப்போகாத மற்றவைகளை தள்ளி, நாசப்படுத்துகிறபடியினால், இது அவனுக்குக் கூட தெரிந்திருக்கிறது.

அன்பில் தன்னுடனேயே ஏக சுபாவமான உண்மைகளை ஏற்றுக்கொள்வதற்கு எல்லா திராணியும், தன்னுடனேயே அவைகளைச் சேர்க்க ஆவலுமிருக்கிறதென்பது, உலகத்தில் பேதமையாயிருந்த போதிலும், தேவர்கள் மத்தியிலிருக்கும்போது, தேவர்களுக்கு அடுத்த ஞானத்தையும், சுவர்க்கத்து வரங்களையும் பெற்ற, சுவர்க்கத்துக்கு கொண்டு போகப்பட்டவர்களிடமிருந்துகூட வெளிப்படையாயிருக்கிறது. அவர்கள் நன்மையையும் உண்மையையும், நன்மைக்காகவும் உண்மைக்காகவும் நேசித்து, தங்கள் வாழ்க்கையினால், அதை நட்டு, அதனால், சுவர்க்கத்தின் வாக்குக் கெட்டாத சம்பூரணங்களோடு அதை ஏற்றுக்கொள்ள சக்தியுள்ளவர்களாய் விட்டார்களென்பது, இதற்குக் காரணமாயிருந்தது. ஆனால், தன்னையேயும் உலகத்தையும் நேசிக்கிறவர்கள், இவைகளை ஏற்றுக்கொள்ள சக்தியற்றவர்களாக யிருக்கிறார்கள்; அவைகளை வெறுத்து, தள்ளி, அவைகளை முதலில் தொட்டபோதும் உட்பெருக் கெடுத்தபோதும், தங்களுக்கு சொந்தமாயிருக்கும் ஆசைகளுக்கு ஒத்த ஆசைகளிலிருக்கும் நரகத்திலுள்ளவர்களுடன் தாங்களை ஓடிப்போய் சேர்ந்துகொள்ளுகிறார்கள்.

சுவர்க்கத்து அன்பின், இவ்விதமானவைகளிலிருக்கிறதென்பதை சந்தேகித்து, அது அப்படியிருக்கிறதா என்பதை தெரிந்து

கொள்ள ஆவல்கொண்ட அருபிகளுமிருந்தார்கள்; அதின்பேரில் அவர்கள் தடித்தவைகளை கொஞ்ச நேரம் நீக்கி விடப்பட்டு, சுவர்க்கத்துக்கு அடுத்த அன்பின் ஓர் நிலைமையில் விடப்பட்டு, தேவர்கள் சுவர்க்கம் இருந்த இடத்துக்கு கொஞ்ச தூரம் கொண்டு வரப்பட்டார்கள்; அதிலிருந்து அவர்கள் தங்களுடைய முந்திய நிலைமைக்கு திரும்பிப் போக வேண்டுமே என்று அதிகமாய் துக்கித்துக்கொண்டு வார்த்தைகளால் சொல்லக்கூடியதைவிட தாங்கள் அதிக உள்ளான சுகத்தை கண்டதாக எனக்கு சொன்னார்கள். மற்றவர்களும்கூட சுவர்க்கத்துக்கு கிளப்பப்பட்டார்கள்; அதிக உள்ளுக்குள்ளாயும் அல்லது அதிக உன்னதமாயும் எடுத்துக்கொள்ளப்பட்ட போது, தங்களுக்கு முன்னிட்டு கிரகிக்க முடியாதிருந்தவைகளை பார்க்க சக்தியுள்ளவர்களாயிருக்கும்படி, அவர்கள் புத்தியுள்ளவர்களாகவும் ஞானமுள்ளவர்களாகவுமானார்கள். ஆகவே ஆண்டவரிடமிருந்து புறப்படும் அன்பு சுவர்க்கத்தினுடையவும், அதில் உள்ள எல்லா பொருள்களுடையவும் கொள்கலமென்று விசதமாகிறது.

**19**. ஆண்டவரிடத்து அன்பும் அயலானிடத்து அன்பும் எல்லா தெய்வீக உண்மைகளையும் அடக்குகிறதென்பது இந்த இரண்டு அன்புகளைப்பற்றியும் ஆண்டவரே சொன்னதினால் விசதமாகிறது.

"உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்மாவோடும்.........அன்பு கூறுவாயாக; இது முதலாம் பிரதான கற்பனை; இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்பு கூறுவது போலப் பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக என்பதே. இவ்விரண்டு கற்பனைகளிலும் நியாய பிரமாணம் முழுமையும் தீர்க்க தரிசனங்களும் அடங்கி யிருக்கிறது." (மத்தே. xxii. 37, 40.)

"நியாயப் பிரமாணமும் தீர்க்க தரிசனங்களும்" முழு வேதமாயும், இவ்விதமாக எல்லா தெய்வீக உண்மையாகவு மிருக்கின்றன.

# IV

## சுவர்க்கமானது இரண்டு இராச்சியங்களாக வகையறுக்கப்பட்டிருக்கிறது.

**20**. சுவர்க்கத்தில் முடிவற்ற விகற்பங்கள் இருக்கிறபடியினுலும், எந்த ஒரு கூட்டமும், அல்லது எந்த ஒரு தேவனும், மற்ற எந்த ஒன்றைப்போலவும் சரியாய் இல்லாதபடியினுலும், சுவர்க்கத்தில் பொதுவானதும், இனஞ்சார்ந்ததும், சுட்டானதுமான வகுப்புகளிருக்கின்றன. பொதுவான வகுப்பு இரண்டு இராச்சியங்களாகவும், இனஞ்சார்ந்தது மூன்று சுவர்க்கங்களாகவும், சுட்டானது கணக்கற்ற கூட்டங்களாகவும் இருக்கின்றன. இந்த பல வகுப்புகளைப் பற்றி, இப்பொழுது சொல்லப்படவேண்டும். சுவர்க்கம் என்பது கடவுளின் இராச்சியமென்று சொல்லப்படுகிறபடியினுல், பொதுவான வகுப்பில் சுவர்க்கங்கள் இராச்சியங்களென்று சொல்லப்படுகின்றன.

**21**. சில தேவர்கள் ஆண்டவரிடமிருந்து புறப்படும் தேவத்துவத்தை அதிக உள்ளாயும், சிலர் குறைவாக உள்ளாயும், ஏற்றுக் கொள்ளுகிறுர்கள். அதிக உள்ளாய் அதைப்பெற்றுக் கொள்ளுகிறவர்கள் சுவர்க்கர் என்றும், குறைவாக உள்ளாய் பெற்றுக்கொள்ளுகிறவர்கள், ஆத்துமார்த்த தேவர்களென்றும் சொல்லப்படுகிறுர்கள். அதனுல்தான், அவைகளில் ஒன்று தெய்வலோகமென்றும், மற்றது சூக்கும லோகமென்றும், சுவர்க்கம் இரண்டு இராச்சியங்களாக வகையறுக்கப்பட்டிருக்கிறது.

**22**. தெய்வலோகத்தை ஏற்படுத்துகிற தேவர்கள், ஆண்டவரின் தேவத்துவத்தை அதிக உள்ளாய் ஏற்றுக்கொள்ளுகிறபடியினுல், அவர்கள் உள்ளான அல்லது உயர்ந்த வானேர்களென்று சொல்லப்படுகிறுர்கள்; அதே காரணத்துக்காக, அவர்களால் ஏற்படும் சுவர்க்கங்கள், உள்ளானதும், உன்னதமானதுமாகிய சுவர்க்கங்களென்று சொல்லப்படுகின்றன. உள்ளானவைகள் உயர்ந்ததென்றும், வெளியானவைகள் தாழ்ந்ததென்றும் சொல்லப்படுகிறபடியினுல், அவைகள் உயர்ந்ததென்றும் தாழ்ந்ததென்றும் சொல்லப்படுகின்றன.

**23.** தெய்வலோகத்தி லிருக்கிறவர்களிருக்கிற அன்புக்கு, தெய்வலோகத்து அன்பு என்று சொல்லப்படுகிறது; சூக்கும இராச்சியத்திலிருக்கப் பட்டவர்களிருக்கிற அன்புக்கு, சூக்கும அன்பு என்று சொல்லப்படுகிறது. தெய்வலோகத்து அன்பு ஆண்டவரிடத்து அன்பாயிருக்கிறது; சூக்கும அன்பு அயலானிடத்து தருமமாயிருக்கிறது. (எவனுக்கும் தான் நேசிப்பது நல்லதாயிருக்கிறதினால்) எல்லா நன்மையும் அன்பிலிருந்து வருகிறதின் நிமித்தம் ஒரு இராச்சியத்தின் நன்மைகூட தெய்வலோகத்தைச் சேர்ந்ததென்றும், மற்றதின் நன்மை சூக்குமமான அல்லது ஆத்துமார்த்தமான தென்றும் சொல்லப்படுகின்றன. ஆகவே, இந்த இரண்டு இராச்சியங்களும், எந்த விஷயத்தில் ஒன்றிலிருந்து மற்றது வகையறுக்கப்படுகிறதென்பது, அதாவது, ஆண்டவரிடத்து அன்பின் நன்மை, அயலானிடத்து அன்பின் நன்மையிலிருந்து வகையறுக்கப்படுவது போலவே என்று விசதமாகிறது. ஆண்டவரிடத்து அன்பின் நன்மை உள்ளான நன்மையாயிருப்பதினாலும், அந்த அன்பு உள்ளான அன்பாயிருப்பதினாலும், தெய்வலோகத்து தேவர்கள், உள்ளுக்குள்ளான தேவர்கள்; அவர்கள் உயர்ந்த தேவர்களென்று சொல்லப்படுகிறார்கள்.

**24.** தெய்வலோகம், ஆண்டவரின் குருத்துவத்துக்கு அடுத்த இராச்சியமென்றும், வேதத்தில் அவர் உறைவிடமென்றுங்கூட சொல்லப்படுகிறது; சூக்கும இராச்சியம், அவருடைய இராஜரிகமான இராச்சியமென்றும், வேதத்தில், அவருடைய சிங்காசனமென்றும் சொல்லப்படுகிறது. ஆண்டவர் உலகத்தில் பரம தேவத்துவத்திலிருந்து இயேசு என்றும், சூக்கும தேவத்துவத்திலிருந்து கிறிஸ்து என்றும் சொல்லப்பட்டார்.

**25.** ஆண்டவருடைய பரலோகத்திலிருக்கும் தேவர்கள் ஆண்டவரின் தேவத்துவத்தை அதிக உள்ளுக்குள்ளாய் ஏற்றுக்கொள்வதின் நிமித்தம், அவருடைய சூக்கும இராச்சியத்திலிருக்கும் தேவதூதர்களைவிட, ஞானத்திலும் மகிமையிலும் அதிகம் மேற்பட்டிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் அவரிடத்தில் அன்பு பாராட்டுகிறார்கள்; அதனால், அவருக்குச் சமீபமாயும், அவருடன் அதிக இறுக்கமாயும், சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். சூக்கும இராச்சியத்தில் இருப்பவர்கள் போல, முதலில் ஞாபகத்திலும் நினைவிலுமல்லாமல், தெய்வீக உண்மைகளை நேராய் அவர்கள்

தங்களுடைய உயிரில் பெற்றுக் கொண்டிருந்தபடியினலும், பெற்றுக்கொண்டே யிருக்கிறபடியினலும், அவர்கள் அவ்வித குணமுள்ளவர்களா யிருக்கிருர்கள். இவ்விதமாக, அவைகளை தங்கள் இருதயங்களில் எழுதிவைக்கப்பட் டிருக்கிருர்கள்; அவர்கள் அவைகளை கிரகிக்கிருர்கள், அதாவது தங்களுக்குள்ளேயே அவைகளைப் பார்க்கிருர்கள்; உண்மை அப்படியா அல்லவா என்று அவைகளைக் குறித்து எப்பொழுதும் அவர்கள் விசாரிக்கிறதுமில்லை. அவர்கள் எரேமியாவில் விவரிக்கப்பட் டிருக்கிறவர்கள்போ லிருக்கிருர்கள்.

"நான் என் நியாயப் பிரமாணத்தை அவர்கள் உள்ளத்திலே வைத்து, அவர்கள் இருதயத்திலே எழுதிவைப்பேன். இனி ஒருவன் தன் அயலானையும், ஒருவன் தன் சகோதரனையும் நோக்கி, கர்த்தரை அறிந்துகொள் என்று போதிப்பதில்லை. அவர்களில் சிறியவன் முதல் பெரியவன் மட்டும் எல்லாரும் என்னை அறிந்து கொள்வார்கள்" (xxxi. 33,34,); மேலும் ஏசாயாவில், "கர்த்தரால் போதிக்கப்பட்டவர்கள்" (liv 13) என்று சொல்லப்படுகிருர்கள். கர்த்தரால் போதிக்கப்படுகிறவர்கள், ஆண்டவரால் போதிக்கப் படுகிறவர்களென்று யோவானில் (vi. 45, 46) அவரே கற்பித்தார்.

**26**. இந்த தேவர்கள், தெய்வீக உண்மைகளை தங்கள் உயிரில் உடனே பெற்றுக்கொண்டிருப்பதாலும், பெற்றுக் கொண்டேயு மிருப்பதினலும், அவர்கள் மற்றவர்களை விட, ஞானமும் மகிமையும் அதிகமாய் உடைத்தாயிருப்பதாக சொல்லப்பட் டிருக்கிறது. இப்பேர்ப்பட்ட தேவர்கள், தெய்வீக உண்மைகளை கேட்ட உடனே, தங்கள் ஞாபகல அவைகளைச் சேர்த்து, பின்னிட்டு அவைகள் உண்மையா என்று யோசிக்காமல், இச்சித்து அவைகளைச் செய்வார்கள். ஆண்டவரிடமிருந்து வரும் உட்பெருக்கினல், தாங்கள் கேள்விப் படும் உண்மை உண்மையா அல்லவா என்பதை உடனே அறிந்து கொள்ளுகிருர்கள்; ஏனென்றல், ஆண்டவர் மனிதனுடைய இச்சையில் நேராயும், ஆனல், அவனுடைய இச்சையின் மூலமாய் நினைவில் ஒன்றின் மூலமாயும் ஒழுங்கீனமாய் பிரவேசிக்கிருர். அல்லது அதேவாகிறபடி, ஆண்டவர், நன்மையில் நேராயும், ஆனல் நன்மையின் மூலமாய் உண்மையில் ஒழுங்கீனமாய் பிரவேசிக் கிருர். சித்தத்திற்கும், அதிலிருந்து வரும் செய்கைக்கும் சேர்ந்ததை நன்மை என்கிருர்கள்; ஞாபகத்துக்கும், அதிலிருந்து வரும்

நினைவுக்கும் சேர்ந்ததை உண்மை என்கிறார்கள்; அதுவுமல்லாமல் ஒவ்வொரு உண்மையும் சித்தத்தில் பிரவேசித்த உடனே, நன்மையாக மாற்றப்பட்டு, அன்பில் நடப்படுகிறது; ஆனால், உண்மையானது ஞாபகத்திலும், அதிலிருந்துவரும் நினைவிலும் இருக்கிறவரையில், நன்மையாகிறதில்லை, அது உயிரோடிருக்கிறதுமில்லை, அது மனிதனுக்கு உரித்தாக்கப்படுகிறதுமில்லை; ஏனென்றால், சித்தத்திற்கு வேறான புத்தியிலிருந்து அல்லாமல், சித்தத்திலிருந்தும், அதிலிருந்து புத்தியிலிருந்தும் மனிதன் மனிதனாகிறான்.

**27.** தெய்வலோகத்து தேவர்களுக்கும் சூக்குமலோகத்து தேவர்களுக்கும் அவ்வித வித்தியாசமிருப்பதினால், அவர்கள் சேர்ந்து வசிக்கிறதுமில்லை, ஒருவரோடொருவர் உறவாடுகிறதுமில்லை. திவ்விய சூக்குமமென்று சொல்லப்பட்ட மத்தியிலுள்ள தேவதூதருக்கடுத்த கூட்டங்கள் மூலமாய் மாத்திரம் அவர்களுக்குப் போக்குவரவு உண்டு; அவர்கள் மூலமாய் தெய்வலோகம் ஆத்துமார்த்த இராச்சியத்தில் பிரவேசிக்கிறது. இதனால்தான், பரமண்டலம் இரண்டு இராச்சியங்களாக பிரிக்கப்பட்டாலும், அது ஒன்றேதானாகிறது. ஆண்டவர், தங்கள் மூலமாய் போக்குவரவும், சேர்க்கையுமிருக்கிற இவ்விதமான மத்தியிலுள்ள தேவதூதர்களை எப்பொழுதும் முன்னறிந்து ஏற்படுத்துகிறார்.

**28.** இனிமேல் இந்த இரண்டு இராச்சியங்களின் தேவதூதர்களைப்பற்றி அதிகம் சொல்லப் போகிறபடியினால், விசேஷ சங்கதிகள் இங்கே சொல்லாமல் விடப்பட்டது.

## V

## மூன்று பரமண்டலங்களிருக்கின்றன.

**29**. ஓர் அந்தரங்கமானது அல்லது மூன்றாவது, ஓர் மத்தியமானது அல்லது இரண்டாவது, மிகவும் வெளியான அல்லது முதலாவது என்று, சொல்லப்பட்ட மூன்று ஒன்றுக்கொன்று முழுமையும் வேறு வேறான மூன்று பரமண்டலங்களிருக்கின்றன. மனிதனுடைய மிகவும் உயர்ந்த பாகம் அல்லது அவன் தலையைப்போலவும், மத்தியிலுள்ள பாகம் அல்லது சரீரம் போலவும், மிகவும் தாழ்ந்தது அல்லது பாதங்கள் போலவும், அல்லது ஒரு வீட்டின், மேலான மத்தியிலுள்ள மிகவும் தாழ்ந்த அடுக்குகளைப்போலவும், இவைகள் ஒன்றுக்கொன்று ஒரே மாதிரியான ஒழுங்கும் சம்பந்தமும் உடைத்தாயிருக்கின்றன. அந்த ஒழுங்கில், ஆண்டவரிடமிருந்து புறப்பட்டு, இறங்குகிற தேவத்துவமும் இருக்கிறது; ஆதலால் ஒழுங்கின் ஆவசியகத்திலிருந்து, சுவர்க்கம் மும்மடங்காயிருக்கிறது.

**30**. தன்னுடைய உள்ளானதும், வெளியானதுமாகிய மனதுக்குச் சேர்ந்தவைகளாகிய மனிதனுடைய உள்ளானவைகள்கூட அவ்வித ஒழுங்கிலிருக்கின்றன. அவனுக்கு மிகவும் ஓர் உள்ளானதும், மத்தியிலுள்ளதும், மிகவும் வெளியானதுமாகிய பாகம் இருக்கிறது; ஏனென்றால், மனிதன் சிருஷ்டிக்கப்பட்டபோது, தெய்வீக ஒழுங்கின் எல்லா பொருள்களும், அவனிடத்து சேர்த்துக்கொண்டுவரப்பட்டது; அதனால், அவன் உருவத்தில் தெய்வீக ஒழுங்காயினான். ஆதலால், அவன் சிற்றுருவில் சுவர்க்கமாயினான். இந்த காரணத்துக்காக மனிதன் தன்னில் உள்ளானவைகள் விஷயத்தில் சுவர்க்கங்களோடு போக்குவரவு செய்து, உலகத்திலிருக்கும் ஆண்டவரிடமிருந்து தெய்வீக நன்மையையும் உண்மையையும் ஏற்றுக்கொள்ளுதலுக்கு தக்கபடி, மிகவும் உள்ளான மத்தியிலுள்ள அல்லது மிகவும் வெளியிலுள்ள பரமண்டலத்தில் உள்ள தேவர்கள் மத்தியில் இறந்த பிறகு வருகிறான்.

**31**. ஆண்டவரிடமிருந்து உள்ளே பிரவேசிக்கிறதும், மூன்றாவது அல்லது மிகவும் உள்ளான சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப்

படுகிறதுமான தேவத்துவம் பரத்துக்கடுத்ததென்று சொல்லப்படுகிறது. அதனால், அங்கேயிருக்கும் தேவர்கள் பரத்துக்கடுத்த தேவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்; ஆண்டவரிடமிருந்து உட்பிரவேசிக்கிறதும், இரண்டாவது அல்லது மத்தியிலுள்ள சுவர்க்கத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகிறதுமான தேவத்துவம், ஆத்மார்த்தமானது என்று சொல்லப்படுகிறது; அதனால் அங்கே இருக்கும் தேவர்கள் அயலானுக்கு அடுத்த தேவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்; ஆண்டவரிடமிருந்து உட்பிரவேசிக்கிறதும், எல்லாவற்றிற்கும் வெளியே உள்ள அல்லது முதல் சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப்படுகிறதுமான தேவத்துவம், ஜடத்துவமானது என்று சொல்லப்படுகிறது. ஆனால் அந்த சுவர்க்கத்து ஜடத்துவம், உலகத்து ஜடத்துவத்தைப்போலல்லாமல், தன்னில் ஆத்மார்த்தமானதையும் பரமார்த்தமானதையும் வைத்திருப்பதினால், அந்த சுவர்க்கமானது ஆத்துமார்த்த ஜடத்துவமானதென்றும், பரமார்த்த ஜடத்துவமானதென்றும் சொல்லப்படுகிறது. அதனால் அங்கிருக்கும் தேவர்கள் ஆத்துமார்த்த ஜடவமானவர்களென்றும், பரமார்த்த ஜடவமானவர்களென்றும் சொல்லப்படுகிறார்கள். ஆத்துமார்த்த சுவர்க்கமாயிருக்கிற மத்தியிலுள்ள அல்லது இரண்டாவது சுவர்க்கத்திலிருந்து உட்பெருக்கைப் பெற்றுக்கொள்ளுகிறவர்கள், ஆத்துமார்த்த ஜடத்துவமானவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்; பரத்துக்கடுத்த சுவர்க்கமாயிருக்கிற மூன்றாவது அல்லது மிகவும் உள்ளான சுவர்க்கத்திலிருந்து உட்பெருக்கை ஏற்றுக்கொள்ளுகிறவர்கள், பரத்துக்கடுத்த ஜடத்துவமானவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். ஆத்துமார்த்த ஜடத்துவ தேவர்களும், பரமார்த்த ஜடத்துவதேவர்களும், ஒருவருக்கொருவர் வேறு வேறானவர்களா யிருக்கிறார்கள்; அப்படியிருந்தும், அவர்கள் ஒரே திட்டத்திலிருப்பதினால், ஒரு சுவர்க்கமாகிறார்கள்.

**32.** ஒவ்வொரு சுவர்க்கத்திலும், ஒரு உள்ளானதும் ஒரு வெளியானது மிருக்கிறது; உள்ளானதிலிருப்பவர்கள், அங்கே உள்ளான தேவர்களென்று சொல்லப்படுகிறார்கள்; ஆனால், வெளியானதி லிருக்கப்பட்டவர்கள், புறம்பான தேவர்களென்று சொல்லப்படுகிறார்கள். பரமண்டலங்களில் அல்லது ஒவ்வொரு பரமண்டலத்திலும் இருக்கிற புறம்பானதும் உள்ளானதும், மனிதனுடைய இச்சா சக்தியைப்போலவும், அதிலிருந்து

வந்த ஞான சக்தியைப்போலவு மிருக்கிறது; உள்ளானது தன்னிஷ்டமான உயிரைப்போலவும், புறம்பானது அதிலிருந்துவரும் அதன் புத்தி சம்பந்தமான உயிரைப்போலவு மிருக்கிறது. ஒன்று மற்றொன்றில்லாமல் நிலைக்காதபடியினால், சித்தத்தைச் சேர்ந்த ஒவ்வொன்றும் புத்தி சம்பந்தமான காட்சியை உடைத்தாயிருக்கிறது. சித்தத்தைச் சேர்ந்தது ஒப்பனையில் சுவாலையைப்போலிருக்கிறது; அதனுடைய புத்தி சம்பந்தமான தோற்றம் அதிலிருந்து வந்த வெளிச்சம்போ லிருக்கிறது.

**33**. தேவர்களின் உள்ளானவைகள் தாங்கள் இருக்கப்பட்ட சுவர்க்கத்தை தீர்மானிக்கிறதென்பது தெளிவாய் தெரிந்திருக்கப்படவேண்டும்; ஏனென்றால், அவர்களுடைய உள்ளானவைகள் ஆண்டவருக்கு எவ்வளவு அதிகமாய் திறந்துவைக்கப்பட்டிருக்கிறதோ, அவர்களிருக்கப்பட்ட சுவர்க்கம் அவ்வளவு உள்ளாயிருக்கிறது. தேவனானும், அரூபியானும், மனிதனானும், ஒவ்வொருவரோடும் உள்ளானவைகளின் மூன்று திட்டங்களிருக்கின்றன. மூன்றாவதுபடி திறக்கப்பட்டவர்கள் மிகவும் உள்ளான சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; இரண்டாவதுபடி திறக்கப்பட்டவர்கள், மத்தியிலுள்ள சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; முதலாவதுபடி திறக்கப்பட்டவர்கள் எல்லாவற்றிலும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருக்கிறார்கள். தெய்வீக நன்மையையும் தெய்வீக உண்மையையும் ஏற்றுக்கொள்ளுவதினால்,உள்ளுக்குள்ளானவைகள் திறக்கப்படுகின்றன. தெய்வீக உண்மைகளால் இயக்கப்பட்டு வாழ்வில், அதாவது சித்தத்திலும், அதிலிருந்து செயலிலும் உடனே அவைகளைச் சேர்த்துக்கொள்ளுகிறவர்கள், எல்லாவற்றிலும் உள்ளுக்குள்ளான அல்லது மூன்றாவது சுவர்க்கத்திலிருந்துகொண்டு, உண்மையினிடத்து ஆசையிலிருந்து நன்மையை ஏற்றுக்கொள்ளுதலுக்குத் தக்கபடி ஒரு நிலையை அனுபவிக்கிறார்கள்; தெய்வீக உண்மைகளை உடனே சித்தத்தில் சேர்க்காமல், ஞாபகத்திலும், அதிலிருந்து புத்தியிலும் சேர்த்து இதிலிருந்து இச்சித்து செய்கிறவர்கள், மத்தியிலுள்ள அல்லது இரண்டாவது சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; சன்மார்க்கமாய் வாழ்ந்து, ஒரு தெய்வீகப் பொருளை நம்பி, ஆனால் கற்பிக்கப்பட்ட அவ்வளவு அதிகமாய் விசாரப்படாதவர்கள், எல்லாவற்றிலும் தாழ்ந்த அல்லது முதல் சுவர்க்கத்திலிருக்கிறார்கள். "தேவனுடைய ராச்சியம் பிரத்தியட்ச

மாய் வராது. இதோ, இங்கே என்றும், அதோ, அங்கே என்றும், சொல்லப்படுவதற்கும் ஏது விராது; இதோ, தேவனுடைய ராச்சியம் உங்களுக்குள் இருக்கிறதே" என்று (லூக். 20, 21) ஆண்டவர் சொல்லியபோது, அவர்கூட கற்பித்தபடி, உள்ளானவைகளின் நிலைமைகள் சுவர்க்கத்தை உண்டாக்குகிறதென்றும், வெளியே யில்லாமல் ஒவ்வொருவனுக்குள்ளே சுவர்க்கம் இருக்கிறதாயும், இதிலிருந்து விசதமாகிறது.

**34.** அந்தரங்கமானவைகள் தெய்வத்துக்கு அதிக சமீபத்திலும், அவைகளே அதிக சுத்தமாயு மிருப்பதினாலும், ஆனால் புறம்பானவைகள் தெய்வத்துக்கு அதிக தூரமாயும், அவைகளே, அதிக பருத்ததாயுமிருப்பதினால், எல்லா சம்பூரணமும் உட்பாகங்களில் அதிகப்பட்டு, வெளிபாகங்களில் குறைகிறது. தேவர்கள் சம்பூரணம் புத்தியிலும், ஞானத்திலும், அன்பிலும், ஒவ்வொரு நன்மையிலும், அதிலிருந்து வரும் சுகத்திலும் அமைந்திருக்கிறது; ஆனால் அவைகளை நீக்கிய சுகத்தில் அது கிடையாது. ஏனென்றால், அவைகள் இல்லாமல் சுகம் என்பது புறம்பானது, அந்தரங்கமானதல்ல. எல்லாவற்றிலும் மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவர்களின் உட்பாகங்கள், மூன்றுவது படியில் திறக்கப்படுகிறபடியினால், தங்கள் உட்பாகங்கள் இரண்டாவதுபடியில் திறந்திருக்கிற, மத்தியிலுள்ள சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் சம்பூரணத்துக்குளல்லையின்றி, அவர்களுடைய சம்பூரணம்மேற்பட்டிருக்கிறது. அப்படியே, மத்தியிலுள்ள சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் சம்பூரணம், அந்த அளவிலேயே மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களுடைய சம்பூரணத்துக்கு மேற்படுகிறது.

**35.** இந்த வித்தியாசத்துக்காக, ஒரு சுவர்க்கத்துதேவன், மற்ற ஒரு சுவர்க்கத்தின் தேவர்கள் மத்தியில் பிரவேசிக்க முடியாது; அதாவது, எவனும் அதிக தாழ்ந்த ஒரு சுவர்க்கத்திலிருந்து ஏறவு முடியாது, அதிக உயர்ந்த சுவர்க்கத்திலிருந்து இறங்கவு முடியாது. அதிக தாழ்ந்த சுவர்க்கத்திலிருந்து மிக உயர்ந்த சுவர்க்கத்துக்கு ஏறும் எவனும், வருத்தப்படுத்துகிற கவலையில் அகப்பட்டு, அங்கே இருக்கப்பட்டவர்களைப் பார்க்க முடியாமலும், இன்னும் குறைவாய் அவர்களுடன் பேசவுமுடியாமல் போய் விடுகிறான்; ஆனால், மிக உயர்ந்த சுவர்க்கத்திலிருந்து மிக தாழ்ந்த சுவர்க்கத்திற்கு இறங்குகிறவன், தன்னுடைய ஞானம் நீக்கப்பட்டு,

தன் பேச்சில் நாக்குளறி, முடியாத காரியமென்று விட்டுவிடுகிருன். தேவர்களின் உட்பாகங்களை அனுசரித்து சுவர்க்கம் அமைந்திருக்கிறதென்று, இதுவரையில் கற்பிக்கப்படாத எல்லாவற்றிலும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருந்து வந்த சிலர், தாங்கள் மிக உயர்ந்த தேவர்களிருக்கும் சுவர்க்கத்திற்குக் கொண்டு போகப்பட்டால், தாங்கள் சுவர்க்கத்துக்கடுத்த உயர்ந்த சுகத்தை அடையலாமென்று நம்பிஞர்கள்; ஆகையிஞல், அவர்கள், அவர்களிடத்தில் செல்ல உத்திரவு கொடுக்கப்பட்டார்கள். ஆனுல், அவர்கள் அங்கே இருந்தபோது, பெருங்கூட்ட மிருந்தபோதிலும், அவர்கள் எவ்வளவு அதிகமாய் தேடிப்பார்த்தாலும், ஒருவனையும் காணவில்லை; ஏனென்ருல், புதிதாய் வந்தவர்களின் உட்பாகங்கள் அங்கேயிருக்கும் தேவர்களின் உட்பாகங்களைப்போல், ஒரே அளவில் திறக்கப்படவில்லை. அதனுல் அவர்கள் பார்வையும் அப்படி திறக்கப்படவில்லை. கொஞ்ச நேரத்துக்குள் தாங்கள் உயிரோடிருப்பதும் இல்லாததும்கூட தெரியாமல் போகும்படியான அவ்வளவு வேதனைக் குள்ளாஞர்கள்; ஆகையிஞல், தங்களைப் போன்றவர்களிடத்தில் செல்ல சந்தோஷப்பட்டும், தங்கள் வாழ்விற்கு ஒத்துவராத அதிக மேலான பொருள்கள்பேரில் இனிமேல் ஆசைப்படுகிறதில்லை என்று பிரதிக்ஞைசெய்து கொண்டும், தாங்கள் வந்த சுவர்க்கத்துக்குச் சீக்கிரமாய்த் திரும்பிப் போஞர்கள். மிக உயர்ந்த சுவர்க்கத்திலிருந்து கீழே விடப்பட்டு, தங்கள் சொந்த சுவர்க்கத்தின் குணமே என்ன என்பது தெரியாமல் போகிற வரையில், அவர்கள் ஞானம் நீக்கப்படுவதைக்கூட நான் பார்த்திருக்கிறேன். அடிக்கடி செய்யப்படுகிறதுபோல், அதன் மகிமையைப் பார்க்க, அதிக தாழ்ந்த சுவர்க்கத்திலிருந்து, அதிக உயர்ந்த சுவர்க்கத்துக்கு, தேவர்களை ஆண்டவர் உயர்த்துதல் வேறு விஷயமாயிருக்கிறது; ஏனென்ருல், அவர்கள் அப்பொழுது, முன்னதாகவே பக்குவம் செய்யப்பட்டு, தாங்கள் கூடி இருக்க, நேரிடுகிறவர்களோடு சம்பந்தம் வைத்திருக்கிற மத்தியிலுள்ள தேவர்களால் சூழப்பட்டிருக்கிருர்கள். இவைகளிலெல்லா மிருந்து, மூன்று சுவர்க்கங்களும் ஒன்றுக்கொன்று வேறு வேருனதா யிருக்கிறதென்று தெளிவாயிருக்கிறது.

**36**. ஒரே சுவர்க்கத்திலிருக்கிறவர்கள், அங்கே இருக்கும் ஒவ்வொருவனேடும் கூடியிருக்கக் கூடும். ஆனுல், அவர்கள் இணக்

கத்தின் சந்தோஷங்கள், தாங்கள் இருக்கப்பட்ட நன்மையின் உடன்பாட்டிற்குத் தக்கபடி யிருக்கின்றன; இதைப்பற்றி சீக்கிரத்தில் அதிகம் சொல்லப்படும்.

**37.** ஒரு சுவர்க்கத்து தேவர்கள் மற்ற சுவர்க்கத்து தேவர்களோடு கூடியிருக்கக் கூடாதபடி சுவர்க்கங்கள் வெவ்வேறானதாயிருந்த போதிலும், ஆண்டவர் எல்லா சுவர்க்கங்களுக்கும் தன்னிடமே இருந்து நேராக உட்பெருக்கினாலும், ஒரு சுவர்க்கத்திலிருந்து மற்றதற்கு மத்தியஸ்தமான உட்பெருக்கினாலும், இவ்விதமாக நேராயும் ஒன்றின் மூலமாயும் எல்லா சுவர்க்கங்களையும் கூட்டுகிறார். இவ்விதமாக அவர் மூன்று சுவர்க்கங்களை ஒன்றாகவும், ஒன்றுங்கொன்று சம்பந்தப்படாதது ஒன்றுமில்லாதபடி, முதற் பொருளிலிருந்து கடைசி வரையில் அவ்வித சம்பந்தம் எல்லாவற்றிற்கும் இருக்க செய்கிறார். முதற் பொருளோடு மத்தியிலுள்ளப் பொருள்கள் மூலமாய் சம்பந்தப்படாத எதுவும் நிலைமையாக இருக்காமல், நீக்கப்பட்டு ஒன்றுமில்லாமல் போய் விடுகிறது.

**38.** பிரமாணங்கள் சம்பந்தப்பட்டவரையில், தெய்வீக ஒழுங்கின் சுபாவம் தெரியாதவன், சுவர்க்கங்கள் எம்மாதிரி வேறுவேறு யிருக்கிற தென்றாவது, உள்ளான மனிதனென்பதற்கும், புறம்பான மனிதன் என்பதற்கும் அருத்தம் என்னவென்றாவதுகூட அறிந்துகொள்ள மாட்டான். உலகத்தில் அநேகருக்கு, உள்ளானவைகளைப் பற்றியும், புறம்பானவைகளைப் பற்றியும் அல்லது மேலானவைகளைப் பற்றியும் கீழானவைகளைப் பற்றியும், மிக சுத்தமானதிலிருந்து கனத்தது வரையில், தொடர்ச்சியினால், தொடர்ச்சியானது அல்லது கூடினது என்பதைவிட வேறு அபிப்பிராயமில்லை. ஆனால், உள்ளான பொருள்களும் புறம்பான பொருள்களும் தொடர்ச்சியா யல்லாமல், காரண காரிய சம்பந்தமாயிருக்கிறது. தொடர்ச்சியான பிரமாணங்களென்றும், தொடர்ச்சியில்லாத பிரமாணங்களென்றும், இரண்டுவித திட்டங்களிருக்கின்றன. தொடர்ச்சியான பிரமாணங்கள், தன் சுவாலையிலிருந்து கருகலாகிற வரையில் வெளிச்சம் குறைதலின் பிரமாணங்கள் போலும், வெளிச்சத்திலிருக்கும் பொருள்களிலிருந்து, மந்தாரத்திலிருக்கும் பொருள்களுக்கு போகும்போது திருஷ்டியினுடைய குறைவின் பிரமாணங்கள் போலவும், அடியி

லிருந்து உச்சிவரையில் ஆகாயத்தின் சுத்தத்தினுடைய பிரமாணங்கள் போலும் இருக்கின்றன. இந்த பிரமாணங்கள் தூரங்களினால் தீர்மானிக்கப்படுகின்றன.

தொடர்ச்சியாயில்லாமல், பேதமான பிரமாணங்கள் ஒன்றிலிருந்து ஒன்று, முந்தியதையும் பிந்தியதையும் போலவும், காரணத்தையும் காரியத்தையும் போலவும், உண்டாக்குவதையும் உண்டாக்கப்பட்டதைப் போலவும் வகையறுக்கப்படுகின்றன. ஆராய்ச்சி செய்கிறவன் முழுஉலகத்திலும், பொதுவாகவும் சிறப்பாகவும் எல்லா பொருள்களிலும், ஒன்றிலிருந்து மற்றொன்றும் அதிலிருந்து மூன்றாவதும், இன்னன பல உண்டாகும்படியாக உற்பத்தியினுடையவும் கலப்பினுடையவும், அவ்வித பிரமாணங்களிருக்கிறதாகக் காண்பான்.

இந்த பிரமாணங்களை அறிந்துகொள்ளாதவன், சுவர்க்கங்களின் வித்தியாசங்களையும், மனிதனுடைய உள்ளானதும் புறம்பானதுமாகிய சக்திகளின் வித்தியாசங்களையும், சூக்கும உலகத்திற்கும் ஸ்தூல உலகத்துக்கும் உள்ள வித்தியாசத்தையும், மனிதனுடைய ஆன்மாவிற்கும் அவனுடைய சரீரத்திற்கும் உள்ள வித்தியாசத்தையும் எந்த வழியிலும் தெரிந்துகொள்ளமாட்டான். ஆகவே, காரண காரிய சம்பந்தங்களினுடையவும், ஒப்பனையினுடையவும் சுபாவத்தையும் மூலத்தையும், உட்பெருக்கின் சுபாவம் என்னவென்பதையும் அவன் அறிந்துகொள்ளமாட்டான். வாயிற்காட்சி மூலமாய் மாத்திரம் வாழ்கிறவர்கள், இந்த பிரமாணங்கள் விஷயத்தில் கூட எல்லா அதிகரிப்பையும் குறைவையும், தொடர்ச்சியானவைகளென்று எண்ணுகிறபடியினால், அவர்கள் இந்த வித்தியாசங்களை கிரகிக்கிறதில்லை. ஆகையினால், ஆத்தும சம்பந்தமானதைப்பற்றி ஏதோ ஒரு அதிக சுத்தமான ஸ்தூலப் பொருள் என்பதைத் தவிர வேறு விதமாய் அவர்களுக்கு நினைக்க முடியாது. இந்த காரணத்துக்காகக் கூட அவர்கள் புத்திக்கு வெளியேயும் அதிதூரத்திலுமிருக்கிறார்கள்.

**39.** கடைசியாய், பிரமாணங்கள் அறிந்துகொள்ளப்படாதபடியினால், எவனுக்கும் இதுவரையில் தோன்றாத, மூன்று சுவர்க்கங்களின் தேவர்களைக் குறித்த ஒரு இரகசியம் சொல்லப்படலாம். ஆண்டவரின் தேவத்துவம் முதலிலாவது அதிக நேரேயாவது பாய்கிறதும், அதிலிருந்து ஒழுங்கின் பிரமாணங்களுக்கு தக்கபடி தொடர்

கிற அவனிலிருக்கும் மற்ற உள்ளானவைகளை அது ஒழுங்காக்குகிறதுமாகிய, ஒரு மிகவும் அந்தரங்கமான அல்லது மிகவும் உயர்ந்த பிரமாணம் அல்லது மிகவும் அந்தரங்கமானதும் மிகவும் உயர்ந்ததுமானது ஏதோ ஒன்று, ஒவ்வொரு தேவனிடத்திலும் ஒவ்வொரு மனிதனிடத்திலுமிருக்கிறது. இந்த எல்லாவற்றிலும் உள்ளான அல்லது எல்லாவற்றிலும் உயர்ந்த பிரமாணம் தேவன் அல்லது மனிதனுக்கு வாயிலென்றும், அவர்களில் அவருடைய விசேஷமான உறைவிடமென்றும் சொல்லப்படலாம். இந்த மிகவும் உள்ளானதினாலும் அல்லது மிகவும் உயர்ந்ததினாலும்தான் மனிதன் மனிதனாயிருக்கிறான்; மேலும், அதை உடைத்தாயிராத மிருக பிராணிகளிலிருந்தும் அவன் வகையறுக்கப்படுகிறான். இதனால்தான், மிருகங்களைப்போலல்லாமல், மனிதனானவன், அவன் மனதிற்கும், குணத்திற்கும் சார்ந்த அவனுடைய அந்தரங்கமானவைகள் விஷயத்தில், ஆண்டவரால் அவரிடமே தூக்கப்படவும், ஆண்டவரை நம்பவும், ஆண்டவரிடத்து அன்பினால் அசைக்கப்படவும், அதனால் அவரைப் பார்க்கவும், புத்தியையும், ஞானத்தையும் பெற்றுக் கொள்ளவும், அறிவோடு பேசவும் சக்தியுள்ளவனாயிருக்கிறான். மேலும், இதனால்தான் அவன் சதாகாலம் உயிரோடு இருக்கிறான். ஆனால், இந்த மிகவும் அந்தரங்கமான பிரமாணத்தில் ஆண்டவரால் ஒழுங்கு படுத்தப்பட்டு, முன்னறிந்து ஏற்படுத்தப்பட்டது, அவனுடைய நினைவிற்கு மேற்பட்டும், அவனுடைய ஞானத்தைக் கடந்தும் இருப்பதனால், அது எந்த தேவனுடைய உணர்ச்சியிலும் தெளிவாய் விழுகிறதில்லை.

**40.** மூன்று சுவர்க்கங்களைப் பற்றியும், இப்பொழுது இவைகள்தான் பொதுவான உண்மைகள்; ஆனால், பின்வருவதில் மூன்று சுவர்க்கங்களைப் பற்றியும், விசேஷமாய் சொல்லப்படும்.

## VI

## சுவர்க்கங்கள் கணக்கற்ற கூட்டங்களால் அமைந்திருக்கின்றன.

**41.** ஒரு சுவர்க்கத்தின் தேவர்கள் ஒரு இடத்தில் சேர்ந்திருக்கிறதில்லை. ஆனால் தாங்கள் இருக்கப்பட்ட அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் நன்மையின் வித்தியாசங்களுக்கு தக்கபடி, அதிக பெரிய அல்லது அதிக சிறிய கூட்டங்களாக வகையறுக்கப்படுகிறார்கள். ஒரே விதமான நன்மையி லிருக்கப்பட்டவர்கள் ஒரு கூட்டமாகிறார்கள். சுவர்க்கங்களில், நன்மையின் முடிவற்ற வேற்றுமை இருக்கிறது; ஒவ்வொரு தேவனுடைய குணமும், அவனுடைய சொந்த நன்மையால் தீர்மானிக்கப்படுகிறது.

**42.** சுவர்க்கங்களிலுள்ள வானோர் கூட்டங்கள், தங்களுடைய நன்மைகள், பொதுவாயும் சிறப்பாயும் வித்தியாசப்படுகிறதற்கு தக்கபடி, ஒன்றிலிருந்து ஒன்று தூரமாய்கூட இருக்கின்றன; ஏனென்றால், ஆன்மார்த்த உலகத்தில் தூரங்கள், உள்ளானவைகளின் நிலைமையினுடைய வித்தியாசங்களிலிருந்து தனியே உற்பத்தியாகின்றன; ஆகவே, சுவர்க்கங்களில், அன்பின் நிலைமைகளினுடைய வித்தியாசங்களிலிருந்து உண்டாகின்றன. ஒப்பனை அவர்களை சேர்க்கிறபடியினால், அதிகம் வித்தியாசப்படுகிறவர்கள் வெகு தூரத்திலிருக்கிறார்கள். கொஞ்சம் வித்தியாசப்படுகிறவர்கள் சமீபத்திலிருக்கிறார்கள்.

**43.** ஒரே கூட்டத்திலிருப்பவர்கள் ஒருவரிலிருந்து ஒருவர் அதேமாதிரி வகையறுக்கப்படுகிறார்கள். அதிக பூரணமாயிருக்கப்பட்டவர்கள், அதாவது, நன்மையில் மேற்பட்டவர்கள், ஆகையினால், அன்பிலும், ஞானத்திலும், புத்தியிலும் மேற்பட்டவர்கள் மையத்திலிருக்கிறார்கள்; குறைவாய் மேற்பட்டவர்கள், சுற்றிலுமிருந்து, தங்களுடைய சம்பூரணம் குறைகிறதற்கு தக்கபடி தூரத்திலிருக்கிறார்கள். வெளிச்சமானது மையத்திலிருந்து சுற்றளவுக்கு குறைகிறதுபோல், அது இருக்கிறது. மையத்திலிருப்பவர்கள் எல்லாவற்றிலும் பெரிய வெளிச்சத்திலிருக்கிறார்கள். சுற்றளவிலிருக்கப்பட்டவர்கள் குறைந்த குறைந்ததிலிருக்கிறார்கள்.

**44.** ஒருவருக்கொருவர் ஒரே மாதிரி இருக்கிறவர்கள் தானாகவே சேர்க்கப்பட்டதுபோ லிருக்கிறார்கள்; ஏனென்றால், தங்களைப் போன்றவர்களுடனிருக்கும்போது, அவர்கள் தங்களுடைய சொந்தமானவர்களுடன் இருப்பதுபோலும் அல்லது வீட்டிலிருப்பதுபோலும் இருக்கிறார்கள்; ஆனால், மற்றவர்களுடன் இருக்கும்போது அன்னியர்களுடன் இருப்பதுபோலும் தூரமாகவும் இருக்கிறார்கள். தங்களைப் போன்றவர்களுடன் இருக்குங் காலத்தில், தங்களுடைய சுயாச்சியில் கூடவும், அதிலிருந்து உயிரின் எல்லா சந்தோஷத்திலுமிருக்கிறார்கள்.

**45.** ஆகவே, சுவர்க்கத்திலுள்ளவர்கள் எல்லாரையும், நன்மையானது சேர்க்கிறதென்றும், அதன் குணத்துக்கு தக்கபடி அவர்கள் வகையறுக்கப்படுகிறார்க ளென்றும் விசதமாகிறது. அப்படியிருந்தாலும், தேவர்களே, தாங்களே இம்மாதிரி சேர்ந்துக் கொள்ளுகிறதில்லை; ஆனால் நன்மைக்கு மூலமாயிருக்கிற ஆண்டவர் அப்படி செய்கிறார். அவர், அவர்கள் நன்மையிலிருக்கிற அளவு, அவர்களுக்கு வழிகாட்டி, ஒன்று சேர்த்து, ஒழுங்குபடுத்தி, அவர்களை சுயாதீனத்தில் வைக்கிறார்; இம்மாதிரியாக, அவர் ஒவ்வொருவனையும் தன்னுடைய சொந்தமான அன்பு, விசுவாசம், புத்தி, ஞானம் இவைகளின் உயிரிலும், அதனால் சுகத்திலும் வைக்கிறார்.

**46.** முன் எப்பொழுதும் பார்த்திராவிட்டாலும், உலகத்திலுள்ளவர்கள் தங்கள் இனத்தாரையும், பந்துக்களையும், சிநேகிதர்களையும் தெரிந்துக்கொள்ளுகிறதுபோல், ஒரேவிதமான நன்மையிலிருக்கிறவர்கள் ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ளுகிறார்கள்; ஏனென்றால், இதர வாழ்வில் ஆன்மார்த்தமானதைவிட அதாவது அன்பிலிருந்தும், விசுவாசத்திலிருந்தும் தோன்றுகிறதைவிட, வேறு இதர உறவும், பந்துத்துவமும் சிநேகிதமும் இல்லை. நான் அரூபியாய் இவ்விதமாக சரீரத்திலிருந்து நீக்கப்பட்டு, அதனால் தேவர்கள் கூட்டத்திலிருக்கும்போது, சில வேளைகளில் இதைப் பார்க்க எனக்கு உத்திரவு கொடுக்கப்பட்டது; அப்பொழுது அவர்களில் சிலர், சிறு பிராயம் முதல் எனக்கு தெரிந்தவர்கள்போல் தோன்றினார்கள்; ஆனால், மற்றவர்கள் எனக்கு முற்றும் தெரியாதவர்கள்போல் தோன்றினார்கள்; சிறு பிராயமுதல் எனக்கு தெரிந்தவர்கள்போல் தோன்றினவர்கள், என்னுடைய ஆன்மாவின் நிலை

மைக்கு ஒத்த நிலைமையிலிருந்தார்கள். ஆனால், தெரியாதவர்கள், ஒவ்வாத நிலைமையிலிருந்தார்கள்.

**47**. ஒரே தேவர்கள் கூட்டத்தை சேர்ந்தவர்களுக்கு, தனித்த வித்தியாசங்கள் நீங்கலாக, பொதுவாக முக ஒப்பு இருக்கிறது. பொதுவான ஒப்பனைகள் குறிப்பான வேறுபாடுகளுக்கு எப்படி இடங்கொடுக்கிறதென்பது, உலகத்தில் ஒரே மாதிரியான பொருள்களிலிருந்து கொஞ்சம் தெரிந்துகொள்ளலாம். ஒவ்வொரு வமிசத்தாருக்குள்ளும், மற்ற எல்லா வமிசத்தார்களிடமிருந்தும் தெரிந்து வகையறுக்கப்படுகிற, முகத்தினுடையவும் கண்களுடையவும் ஒரு பொதுவான ஒப்பனை இருப்பதாக நன்றாய் தெரிந்திருக்கிறது. இது வேறான குடும்பங்கள் விஷயத்தில் இன்னும் அதிக உண்மையாயிருக்கிறது. சுவர்க்கங்களில் எல்லா உள்ளான ஆசைகளும் முகத்தில் தோன்றி, அதிலிருந்து பிரகாசிக்கிறபடியினால், அங்கே இது இன்னும் அதிக தெளிவாய் பார்க்கப்படுகிறது; ஏனென்றால், அங்கே முகமானது, அந்த ஆசைகளின் புறம்பானதும், பிரதிநிதியுமானதுமாகிய உருவமாயிருக்கிறது. அங்கே எவனுக்கும், தன்னுடைய சொந்தமான ஆசைகளுக்கு அடுத்தவைகளைத் தவிர, வேறு இதர முகம் கிடையாது.

இந்த பொதுவான சாயல், ஒரே கூட்டத்திலுள்ளவர்கள் விஷயத்தில், நுண்ணியவைகளில் எப்படி வேறுபடுகிறதென்பது எனக்கு கூட காண்பிக்கப்பட்டது. ஒரே கூட்டத்திலிருப்பவர்கள் விஷயத்தில் இருப்பதுபோல், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் ஆசைகளுக்கு தக்கபடி வேறாக்கப்பட்ட ஓர் தேவனுடையது போன்ற ஒரு முகம் எனக்கு தோன்றியது. அந்த வேறுபாடுகள் நெடுங்காலம் நிலைத்திருந்தன; மேலும், அதே பொதுவான முகம் ஒரு கடைக்காலாக இருந்ததையும், மற்றவைகள் அதிலிருந்து வந்ததாகவும், நிர்மாணிக்கப்பட்டதாகவும் கருத்தாய் பார்த்தேன், ஒரு கூட்டத்திலிருப்பவர்கள் முகங்கள் மாறுபடுகிற முழு கூட்டத்தின் ஆசைகள், இந்த முகத்தின் மூலமாய் காண்பிக்கப் பட்டது; ஏனென்றால், சற்று முன் சொல்லியபடி, தேவர்கள் முகங்கள், அவர்களுடைய உள்ளானவைகளின் வடிவங்களாயும், இவ்விதமாக அன்பிற்கும் விசுவாசத்துக்கும் சேர்ந்த அவர்களுடைய ஆசைகளின் வடிவங்களாகவும் இருக்கின்றன.

**48.** இந்த காரணத்துக்காகத்தான், ஞானத்தில் மேற்படுகிற ஒரு தேவன், மற்ற ஒரு தேவனுடைய குணத்தை முகத்திலிருந்து உடனே காண்கிறான்; ஏனென்றால், சுவர்க்கத்தில் எவனுக்கும், தன்னுடைய தோற்றத்தினால், தன்னுடைய உள்ளானவைகளை மறைக்கவும், மாரீசம் பண்ணவும், தந்திரத்தினாலும், பாசாங்கினாலும், எவ்விதத்திலாவது மோசம் செய்து, துர்நெறிகாட்டவும் முடியாது. தங்கள் உள்ளானவைகளை மறைக்கவும், ஒரு கூட்டத்திற்கு சேர்ந்தவர்கள் இருக்கப்பட்ட நன்மையின் வடிவத்தில் தோன்றும்படியாக, தங்களுடைய புறம்பானவைகளை ஒழுங்குபடுத்தவும், இம்மாதிரியாக வெளிச்சமுள்ள தேவர்களாக பாசாங்கு செய்யவும், கற்றுக்கொண்டு, வேஷதாரிகள், கூட்டங்களில் தாங்களே உபாயமாய் உட்செல்லுகிறதும் உண்டு. ஆனால், உள்ளே போய் தங்களை இயக்குகிற உயிரின் முரணினால், உள்வேதனையை உணரவும், சித்திரவதைக்கு உட்படவும், முகத்தில் நிறம் மங்கலாகவும், உயிர் அற்றவர்போலாகவும் அவர்கள் ஆரம்பிக்கிறபடியினால், அங்கே நெடுங்காலம் நிற்கமுடியாது. ஆகையால், அவர்கள், தங்களை ஒத்தவர்களிருக்கப்பட்ட நரகத்தில், தாங்களே சீக்கிரமாய் விழுந்து அப்புறம் எப்பொழுதும் ஏறவிரும்புகிறதில்லை. கல்லியாண வஸ்திரம் தரித்திராமல், புறம்பான இருளில் போடப்பட்ட, அழைக்கப்பட்ட விருந்தாளிகளில் கண்டுபிடிக்கப்பட்ட மனிதனால் கருதப்பட்டவர்கள், இவர்கள்தான். (மத்தே. xxii. 11-மும் பின்வருவதும்.)

**49.** சுவர்க்கத்திலுள்ள எல்லா கூட்டங்களுக்கும், பகிரங்கமான சகவாசத்தாலல்லாவிட்டாலும், ஒன்றோடொன்றுக்கு போக்கு வரவு உண்டு. தங்கள் சொந்த கூட்டத்தை விட்டுப்போகுதல், தங்களிடமேயிருந்தும், அல்லது தங்களுடைய சொந்த உயிரிலிருந்தும் போய், ஏக சுபாவம் குறைந்த வேறு ஒரு வாழ்விற்கு போவதுபோலிருப்பதினால், சிலர் தான் தங்கள் சொந்த கூட்டத்தைவிட்டு மற்றதற்கு போகிறார்கள். ஆனால், எல்லா கூட்டங்களும் ஒவ்வொன்றினுடைய உயிரிலிருந்து வெளியே போகிற கோளத்தின் விரிவினால் போக்கு வரவு வைத்திருக்கின்றன. உயிரின் இந்த கோளம் அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் ஆசைகளின் கோளமாயிருக்கிறது. இந்த கோளம் சுற்றிலுமிருக்கும் கூட்டங்களுக்குள் தூரமாகவும் அகலமாகவும் தானே விசாலித்து,

ஆசைகள் எவ்வளவு அதிக உள்ளாகவும் பூரணமாகவும் இருக்கிற தோ, அவ்வளவு அதிக தூரமாகவும் அதிக அகலமாகவும் பெருகு கிறது; ஆகையினால், தேவர்களுக்கு, புத்தியும் ஞானமும் இந்த விசாலத்துக்கு தக்கபடி உண்டு. அதிக அந்தரங்கமான சுவர்க்கத்தி லும், அதன் மத்தியிலும் இருக்கப்பட்டவர்கள், தங்களுடைய கோளத்தை சுவர்க்கம் முழுமையும் பரப்புகிறார்கள்; அதினால், சுவர்க்கத்தில் உள்ளவர்க ளெல்லாருக்கும், ஒவ்வொருவனோடும், ஒவ்வொருவனுக்கும் எல்லாரோடும் போக்கு வரவு இருக்கிறது. ஆனால், இந்த விரிவைப்பற்றி, தேவர்கள் கூட்டங்கள் ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கிற சுவர்க்கத்துக்கு அடுத்த வடிவைப்பற்றியும், தேவர்களின் புத்தியைப்பற்றியும், ஞானத்தைப்பற்றியும்கூட நாம் பேசும்போது, கீழே முழுவதும் சொல்லப்படும்; ஏனென்றால், ஆசைகளுடையவும் நினைவுகளுடையவும் விரிவு, அந்த உருவத்தை அனுசரித்து போகிறது.

**50.** மிக பெரியதும், மிக சிறியதுமான கூட்டங்கள் சுவர்க் கத்திலிருப்பதாக மேலே சொல்லப்பட்டிருக்கிறது. அதிக பெரிய கூட்டங்கள் பதினாயிரங்கள் கணக்கான தேவர்களாலும், அதிக சிறிய கூட்டங்கள் சில ஆயிரங் கணக்கான தேவர்களாலும், சின் னஞ் சிறிய கூட்டங்கள் சில நூறுகள் கணக்கான தேவர்களாலும் அமைந்திருக்கின்றன. வேறு வேறான வீடுகளிலும் குடும்பங்களி லும்போல், தனியே வாழும் சில தேவர்கள்கூட இருக்கிறார்கள். ஆனால், இந்தமாதிரி இவர்கள் இந்த கலைந்த மாதிரி வாழ்ந்தாலும், ஞானமுள்ளவர்கள் மத்தியிலும், மிகவும் பேதைமையானவர்கள் எல்லைகளிலுமாக, கூட்டங்களில் வாழ்கிறவர்கள்போல் ஓர் ஒழுங் கில் வைக்கப்படுகிறார்கள் இப்பேர்ப்பட்டவர்கள் ஆண்டவரின் தெய்வீக பரிபாலனத்தில் மிகநேராயிருக்கிறார்கள்; மேலும், தேவர் களுக்குள் உத்தமர்களாக இருக்கிறார்கள்.

# VII

## ஒவ்வொரு கூட்டமும் அதிக சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமாகவும், ஒவ்வொரு தேவனும் சின்னஞ்சிறிய உருவத்தில் சுவர்க்கமாகவும் இருக்கின்றன.

**51.** அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் நன்மை சுவர்க்கமாகிறபடியினாலும், இந்த நன்மையானது சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டத்திலும், ஒரு கூட்டத்தின் ஒவ்வொரு தேவனிலும் இருக்கிறபடியினாலும், ஒவ்வொரு கூட்டமும் அதிக சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமாகவும், ஒவ்வொரு தேவனும் சின்னஞ் சிறிய உருவத்தில் சுவர்க்கமாகவும் இருக்கின்றன. இந்த நன்மையானது எவ்விடத்திலும் பேதப்பட்டு வேறாகிறது முக்கியமானதல்ல; ஏனென்றால், அப்படியிருந்தும் அது சுவர்க்கத்தின் நன்மையாயிருக்கிறது. சுவர்க்கமானது இங்கே ஒரு குணமும், அங்கே வேறொன்றுமாக இருக்கிறது என்பது மாத்திரம் வித்தியாசம். ஆகையினால், எவனாவது ஒருவன் சுவர்க்கத்தின் ஒரு கூட்டத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டால், அவன் "சுவர்க்கத்திற்கு போய்விட்டானென்று" சொல்லப்படுகிறது; அங்கே இருக்கப்பட்டவர்கள் சுவர்க்கத்திலும் "ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்தமானதிலும் இருப்பதாக சொல்லப்படுகிறது. மற்றைய வாழ்வில் இருப்பவர்களெல்லோருக்கும், இது தெரியும்; அப்படியிருப்பதால், சுவர்க்கத்துக்கு வெளியே அல்லது கீழே நிற்பவர்கள், தூரத்தில் தேவர்கள் கூட்டங்களை பார்க்கும்போது, சுவர்க்கம் இங்கே அல்லது அங்கே இருக்கிறதென்று சொல்லுகிறார்கள். ஒருவன் மேலேயும் மற்றவன் கீழேயும், தத்தமக்கேற்ற வீடுகளில் அல்லது அறைகளில் அவர்கள் தனிபாய் வசித்தபோதிலும், அரசனுக்கு தங்களுடைய பல தொழில்களில் தொண்டு செய்யத் தயாராயிருந்து கொண்டு, எல்லாரும் ஒரு அரண்மனையில் அல்லது ஒரு ராஜ பரிவாரத்தில் இருக்கிற ஒரு ராஜ அரண்மனையில் அல்லது ராஜபரிவாரத்திலிருக்கும் பிரபுக்களோடும், உத்தியோகஸ்தர்களோடும், ஏவலாளிகளோடும், இந்த விஷயத்தை ஒப்பிடலாம். என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்களுண்டு" (யோவா. xiv. 2) என்று ஆண்டவர் சொல்லியதற்கும், தீர்க்கதரிசனங்களில் "சுவர்க்

கத்தின் வாசஸ்தலங்கள்'' என்பதற்கும், ''சுவர்க்கங்களுக்கு சுவர்க்கங்கள்'' என்பதற்கும் என்ன அருத்த மென்பது இதி லிருந்து தெளிவாகிறது.

**52.** ஒவ்வொரு கூட்டமும் ஓர் சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமென்பது, ஒவ்வொரு கூட்டமும், முழு சுவர்க்கத்தையும் போல், ஒரு சுவர்க்கத்துக் கடுத்த உருவத்திலிருக்கிற தென்பதி லிருந்து கூட அறிந்துகொள்ளப்படலாம். சுவர்க்கம் முழுமையும், மற்றவர்களுக்கு மேலானவர்கள் மையத்திலிருக்கிறார்கள்; அவர் களைச் சுற்றி, குறைந்த ஒழுங்கில், எல்லைகள் வரையில்கூட, கொஞ்சம் குறைந்த மேலானவர்கள் முன் அத்தியாயத்தில் செ. 43-ல் சொல்லியபடி இருக்கிறார்கள். எல்லாரும் ஒரு தேவனு யிருப்பதுபோல், முழு சுவர்க்கத்திலிருப்பவர்கள் எல்லாரையும் அதே மாதிரி ஒவ்வொரு கூட்டத்திலிருப்பவர்களையும், ஆண்டவர் நடத்துகிறாரென்பதிலிருந்து அந்த விஷயம்கூட விசதமாகிறது. ஆகவே, ஆண்டவரால் எனக்கு பார்க்க உத்திரவு கொடுக்கப்பட்ட படி, ஒரு முழு வானவர் கூட்டமும் சில வேளைகளில் தேவர்களுக் கடுத்த உருவத்தில் ஒரு தனித்த தேவன்போல் தோன்றுகிறது. அதுவுமன்றி, தேவர்கள், மத்தியில் ஆண்டவரே தோன்றும்போது, ஒரு கும்பினால் சூழப்பட்டவர்போல் தோன்றுகிறதில்லை; ஆனால், தேவர்களுக்கு அடுத்த உருவத்தில் ஒன்றாக தோன்றுகிறார். அதனால் தான், வேதத்தில் ஆண்டவர் என்பது ஒரு தேவனென்றும், அத னுடன் ஒரு முழுகூட்டமும் அம்மாதிரியே சொல்லப்படுகிறது. மைகேல், காப்ரீல், ராபேயல் என்று சொல்லப்பட்டது, தங்க ளுடைய தொழில்களிலிருந்து அம்மாதிரி பேரிடப்பட்ட தேவர்கள் கூட்டங்கள் தவிர வேறொன்றுமில்லை.

**53.** ஒரு முழு கூட்டமும் அதிக சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமா யிருக்கிறதுபோல், ஒரு தேவனும், சின்னஞ்சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமா யிருக்கிறான்; ஏனென்றால், சுவர்க்கம் என்பது ஒரு தேவனுக்கு வெளியேயில்லாமல், அவனுக்குள்ளே யிருக்கிறது. ஏனென்றால், அவன் மனதுக்கு சேர்ந்த உள்ளான வைகள் சுவர்க்கத்து உருவத்திலும், இவ்விதமாக, அவனுக்கு வெளியே இருக்கப்பட்ட எல்லா பொருள்களையும் ஏற்றுக் கொள்ளவும் ஒழுங்குபடுத்தப்பட் டிருக்கிறது. இவைகளை ஆண் டவரிடமிருந்து தன்னிடமிருக்கும் நன்மையின் குணத்துக்கு தக்க

படி அவன் ஏற்றுக்கொள்ளுகிறான். ஆகவே, ஒரு தேவன் ஒரு சுவர்க்கமாகவும்கூட இருக்கிறான்.

**54**. சுவர்க்கமானது, எவனுக்காயினும் வெளியே இருப்பதாக எவ்விதத்திலும் சொல்லப்பட முடியாது; ஆனால், அது அவனுக்குள்ளே யிருக்கிறது. ஏனென்றால், ஒவ்வொரு தேவதூதனும், தனக்குள்ளிருக்கும் சுவர்க்கத்துக்கு தக்கபடி தன்னை சுற்றியிருக்கும் சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளுகிறான். சுவர்க்கமானது ஒருவனுக்குள்ளாய் இல்லாவிட்டால், அவனுக்கு சுற்றிலுமுள்ள சுவர்க்கத்தின் எதுவும் உள்ளே போய், ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை, என்பது உண்மையாயிருக்கையில், சுவர்க்கத்துக்கு வருதலென்பது ஒருவன் தன் உள்ளான குணங்கள் விஷயத்தில் எப்படி யிருந்தாலும், தேவர்கள் கூட்டத்திற்கு தூக்கப்படுதல் மாத்திரம் என்றும், இவ்விதமாக எவனுக்கும் நிபந்தனையில்லாத இரக்கத்தின் ஒரு செயலினால் சுவர்க்கம் அளிக்கப்படுமென்றும் நம்புகிறவன் எவ்வளவு ஏமாற்றப்படுகிறானென்று, இது தெளிவாய்க் காண்பிக்கிறது. அநேக அரூபிகள் இதை நம்புகிறார்கள்; மேலும் இந்த காரணத்துக்காக அவர்கள் சுவர்க்கத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் அங்கே வந்தபோது அவர்களுடைய உள்ளான உயிர், தேவர்கள் உயிருக்கு எதிரிடையாயிருந்தபடியினால், தங்களுடைய புத்திக்கு சம்பந்தமான விஷயங்களில் அவர்கள் குருடராய் கடைசியில், பைத்தியக்காரர்போலாய், அவர்கள் உன்மத்தர்கள்போல் நடக்கிறவரையில் சித்தத்திற்கு சம்பந்தப்பட்டவைகள் விஷயத்தில் சித்திரவதை செய்யப்பட்டார்கள். சுருங்கச்சொல்லில் பொல்லாதவர்களாய் வாழ்ந்து, பிறகு சுவர்க்கத்துக்கு வருகிறவர்கள், அங்கே வெகு வருத்தத்துடன் மூச்சுவிட்டு, தண்ணீரில் இருந்து, காற்றில் கொண்டுவரப்பட்ட மீன்கள்போலவும், அல்லது ஒரு வாயுச் சாம்பிலிருந்து காற்று நீக்கப்பட்டபோது, ஆகாய நுண்ணணுவிலிருக்கும் பிராணிகளைப் போலவும் துடிக்கிறார்கள். ஆகவே, சுவர்க்கம் என்பது ஒரு மனிதனுக்கு வெளியேயல்லாமல் அவனுக்குள்ளே இருக்கிறதென்று விசதமாகிறது.

**55**. தங்களைச் சுற்றியிருக்கும் சுவர்க்கத்தை தங்களுக்குள்ளிருக்கும் சுவர்க்கத்தின் குணத்துக்கு தக்கபடி எல்லாரும் ஏற்றுக்கொள்ளுகிறபடியினால் ஆண்டவரின் தேவத்துவம் சுவர்க்கத்தை உண்டாக்குகிறதின் நிமித்தம் அதேமாதிரி ஒவ்

வொருவனும் ஆண்டவரை எற்றுக்கொள்ளுகிறன். ஆகவே, ஆண்டவர் எந்த கூட்டத்திலாவது பிரசன்னமாகும்போது, அக்கூட்டமிருக்கும் நன்மையின் குணத்துக்கு தக்கபடி அங்கே தோன்றுகிறார்; ஆகையினுல், அவர் ஒரு கூட்டத்திலிருப்பது போல் மற்றதிலிருக்கிறதில்லை. இந்த ஒப்பின்மை ஆண்டவரிடத்தில் இல்லை; தங்களுடைய சொந்த நன்மையிலிருந்தும், இவ்விதமாக தங்களுடைய நன்மைக்குத் தக்கபடியும், அவரைப் பார்க்கிறதேவர்களிடத்தில் அது இருக்கிறது. தேவர்கள், தங்கள் அன்பின் குணத்துக்கு தக்கபடி, ஆண்டவர் பார்க்கும்போது இயக்கப் படுகிறார்கள்; ஏனென்றால், அவரை மிகவும் உள்ளுக்குள்ளாய் நேசிக்கிறவர்கள், மிகவும் உள்ளுக்குள்ளாய் இயக்கப்படுகிறார்கள்; அவரைக் குறைவாய் நேசிக்கிறவர்கள், குறைவாய் இயக்கப்படுகிறார்கள்; சுவர்க்கத்துக்கு வெளியேயிருக்கும் துன்மார்க்கர்கள் அவர் சந்நிதியில் சித்திரவதையடைகிறார்கள். ஒரு கூட்டத்தில் ஆண்டவர் தோன்றும்போது, அங்கே அவர் தேவனைப்போல் தோன்றுகிறார்; ஆனுல் பிரகாசித்துக்கொண் டிருக்கிற தேவத்துவத்தினுல், அவர், மற்ற தேவ தூதர்களிலிருந்து வகையறுக்கப்படுகிறார்.

**56**. ஆண்டவர் ஒத்துக்கொள்ளப்பட்டு, நம்பப்பட்டு, அன்பு பாராட்டப்படுகிற எந்த இடத்திலும்கூட சுவர்க்கம் இருக்கிறது. பல விதக் கூட்டங்களிலிருக்கும் நன்மையின் விகற்பத்திலிருந்து உற்பத்தியாகும், அவரிடத்து செலுத்தும் ஆராதனையின் விகர்ப்பம், நஷ்டத்துக்கு காரணமல்ல; ஆனுல் அது பிரயோசனமாகவே யிருக்கிறது; ஏனென்றால், சுவர்க்கத்தின் சம்பூரணம், அந்த வேற்றுமையின் பயனுயிருக்கிறது. கற்றோர் இருக்கும் உலகத்தில் உபயோகப்படுத்தப்படும் வார்த்தைகளை உபயோகப் படுத்தாமல், எப்படி சுவர்க்கத்தின் பரிபூரணம் வேற்றுமையின் பயனுகயிருக்கிறது என்பதை, தெளிவாய் விவரித்துச் சொல்லுவது கஷ்டமாயிருக்கிறது; ஆனுல், அவைகளின் உதவியால், ஒரு சம்பூரணமானது, பல பாகங்களிலிருந்து எப்படி உண்டாக்கப்படுகிற தென்பதை நாம் விவரிக்கலாம். பல பகுதிகளால் உண்டாக்கப்படாத ஒரு முழு பொருள், சூனியமாய், உருவில்லாமல், ஆகையினுல், குணமில்லாமல் போய்விடுகிறபடியினுல், ஒவ்வொரு முழு பொருளும் பல பகுதிகளால் உண்டாக்கப்பட்டிருக்கிறது; ஆனுல், ஒரு முழுப்பொருள் பலவித பகுதிகளால் உண்டாக்கப்பட்டு, ஒவ்வொருபாகமும் மற்றவைகளோடுஒரு

ஏகசுபாவமான இணக்கத்தின் தொடர்ச்சியில் தானே சேருகிற, ஒரு சம்பூரணமான உருவத்தில் வெவ்வேறு பாகங்கள் இருக்கும் போது, அக்காலத்தில் அது சம்பூரணமாயிருக்கிறது. ஆகையால், சுவர்க்கமானது, மிகவும் சம்பூரணமான உருவத்தில் ஒழுங்குபடுத்தப்பட்ட பலவிதமான பகுதிகளால் உண்டாக்கப்பட்ட ஒரு முழு பொருள்; ஏனென்றால், சுவர்க்கத்துக்கு அந்த உருவம் எல்லா உருவங்களிலும் மிகவும் சம்பூரணமானது. எல்லா சம்பூரணமும் விகர்ப்பங்களின் ஒத்துவாழ்க்கையிலிருந்து உற்பத்தியாகிற தென்பது, ஐம்புலன்களையும் புறம்பான மனதையும் நடத்துகிற எல்லா அழகிலிருந்தும் சந்தோஷத்திலிருந்தும், உவமையிலிருந்தும் விசதமாகிறது; ஏனென்றால், இந்த குணங்கள், ஒழுங்கில் ஏககாலத்திலிருக்கிறதும் அல்லது ஒன்றன்பின் ஒன்றாய் வருகிறதுமான அநேக இசைவானதும், ஏக சுபாவமானதுமாகிய பகுதிகளின் இணக்கத்திலிருந்தும் பொருத்தத்திலிருந்தும் தவிர வேறு எந்த மூலத்திலிருந்தும் உண்டாகி பாய்கிறதில்லை; ஒரு முழு பொருளிலிருந்து அவ்வித பகுதிகளில்லாமல், எப்பொழுதும் அப்படி பாய்கிறதில்லை. இதிலிருந்துதான் விகர்ப்பம் சந்தோஷத்தை தருகிறதென்கிற வசனம் வந்தது; தெரிந்திருக்கிறபடி விகர்ப்பத்தின் சுபாவம் தான் அந்தசந்தோஷத்தை தீர்மானிக்கிறது. இவைகளெல்லாமிருந்து, சுவர்க்கத்தில்கூட சம்பூரணமானது, விகர்ப்பத்திலிருந்து எப்படி வருகிறதென்பது, ஒரு கண்ணாடியில் பார்ப்பதுபோல் அறிந்துகொள்ளலாம். ஏனென்றால், ஸ்தூலலோகத்தில் இருக்கும் பொருள்களிலிருந்து சூக்குமலோகத்து பொருள்கள் ஒரு கண்ணாடியில்போல் பார்க்கலாம்.

**57.** திருச்சபையானது, பூமியின்பேரில் ஆண்டவருடைய சுவர்க்கமாயிருப்பதினால், சுவர்க்கத்தைப் பற்றி சொல்லிய தெல்லாம், திருச்சபையைப் பற்றியும் சொல்லலாம். அநேக திருச்சபைகள்கூட இருக்கின்றன; என்றாலும், ஒவ்வொன்றும், அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் நன்மை அதில் அரசாளுகிறவரையில், திருச்சபை என்று சொல்லப்படுகிறது; திருச்சபையாகவுமிருக்கிறது; இங்கேகூட ஆண்டவர், பலவித பகுதிகளிலிருந்து ஒன்றையும், இவ்விதமாக அநேக திருச்சபைகளை ஒன்றாகவும் செய்கிறார். பொதுவாக திருச்சபையைப் பற்றி சொல்லியது, அதாவது, திருச்சபை, மனிதனுக்கு வெளியே யல்லாமல், அவனுக்குள்ளே

இருக்கிற தென்பதையும், ஒவ்வொரு மனிதனும், ஆண்டவர், அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் நன்மையில் இருக்கிற ஒரு திருச்சபை என்பதையும், சிறப்பாக திருச்சபையின் மனிதனுக்கும்கூட சொல்லலாம்.

மறுபடியும், சுவர்க்க மிருக்கப்பட்ட ஒரு தேவனைப் பற்றி சொல்லியதெல்லாம், திருச்சபை இருக்கப்பட்ட மனிதனைக் குறித்தும் சொல்லலாம்; ஏனென்றால், ஒரு தேவன் சின்னஞ் சிறிய உருவத்தில் சுவர்க்கமாயிருக்கிறதுபோல், அவனும் சின்னஞ் சிறிய உருவத்தில் ஒரு திருச்சபையாயிருக்கிறான்; நிஜமாகவே மனிதன் சுவர்க்கத்துக்குப்போய் ஒரு தேவனாகும் பொருட்டு, சிருஷ்டிக்கப் பட்ட படியினால், திருச்சபை இருக்கப் பெற்ற மனிதன் ஒரு தேவனைப்போல சமமாக ஒரு சுவர்க்கமா யிருக்கிறானென்பதையும் சொல்லலாம்; ஆகையினால், ஆண்டவரிடமிருந்து நன்மையை யடைந்தவன், ஒரு மனித—தேவனாயிருக்கிறான்.

மனிதனுக்கு தேவர்களுடன் பொதுவாக என்ன இருக்கிற தென்பதையும், தேவர்களைவிட அவனுக்கு அதிகமாய் என்ன இருக்கிற தென்பதையும், இங்கே சொல்லுவது நல்லது.

மனிதனுடைய உள்ளானவைகள், தேவர்களுடைய உள்ளானவைகளைப்போல, சுவர்க்கத்தின் சாயலில் உண்டாக்கப் பட்டிருக்கிற தென்பதும், அவன் அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் நன்மையில் இருக்கிற அளவு, சுவர்க்கத்தின் சாயலாகிறானென்பதும், மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் பொதுவான விஷயங்கள், மனிதனுடைய புறம்பானவைகள் உலகத்தின் சாயலில் செய்யப்பட்டிருக்கிற தென்பதினாலும், அவன் நன்மையிலிருக்கிறதற்குத் தக்கபடி, அவனிருக்கும் உலகம் சுவர்க்கத்துக்குகீழே தாழ்த்தப்பட்டு, சுவர்க்கத்துக்கு தொண்டு செய்கிறது என்பதினாலும், மனிதன் தேவர்களைவிட அதிகமாய் உடைத்தாயிருக்கிறான்; அப்பொழுது, ஆண்டவர் உலகத்திலும் சுவர்க்கத்திலும் இரண்டிலும், அவன் தன்னுடைய சுவர்க்கத்தில் இருந்தது போல், அவனில் இருக்கிறார்; ஏனென்றால், கடவுள் ஒழுங்கேயானபடியினால், இரண்டு உலகங்களிலும் தன்னுடைய தெய்வீக ஒழுங்கில் இருக்கிறார்.

**58**. கடைசியாய், தன்னிலேயே சுவர்க்கத்தை உடைத்தாயிருக்கிறவன், அதை அவனுடைய மிகவும் பெரிய அல்லது

பொதுவான பொருள்களில் மாத்திரமல்லாமல், அவனுடைய சின்னஞ் சிறிய அல்லது நுண்ணிய பொருளிலுங்கூட உடைத்தாயிருக்கிறனென்றும், அவனிலிருக்கும் சின்னஞ்சிறிய பொருள்களும் மிகவும் பெரிய பொருள்களின் சாயல் என்றும் சொல்லப்படவேண்டும். ஒவ்வொருவனும் அவனுடைய சொந்த அன்பாகவும், அவனுடைய அரசாளும் அன்பு இருக்கிறதுபோலவும் இருக்கிறன் என்கிற உண்மையிலிருந்து இது ஏற்படுகிறது; ஏனென்றால், அரசாளும் அன்பு, மிகவும் நுண்ணியவைகளில் பாய்ந்து, அவைகளை ஒழுங்குபடுத்தி, எவ்விடத்திலும் தன்னுடைய சொந்த சாயலை செய்விக்கிறது. சுவர்க்கங்களில் ஆண்டவர் எல்லாவற்றையும்விட மேலாக நேசிக்கப்படுகிறபடியினால், அங்கே அரசாளும் அன்பு அவரிடத்து அன்பு பாராட்டலாயிருக்கிறது. ஆகவே, ஆண்டவர் அங்கே, எல்லாவற்றிலும் எல்லாமாய், எல்லாவற்றிற்குள்ளும் ஒவ்வொன்றிலும் பாய்ந்து, அவைகளை ஒழுங்குபடுத்தி, அவைகளின் பேரில் தன்னுடைய சாயலை செய்வித்து, தான் இருக்குமிடத்தில் சுவர்க்கமிருக்கச் செய்கிறர். இதுதான் ஒரு தேவனை சின்னஞ் சிறிய உருவத்தில் சுவர்க்கமாகவும், ஒரு கூட்டத்தை ஒரு அதிக பெரிய உருவத்தில் சுவர்க்கமாகவும், ஒன்றுசேர்க்கப்பட்ட எல்லா கூட்டங்களையும் எல்லாவற்றிலும் பெரிய உருவத்தில் ஒரு சுவர்க்கமாகவும் செய்கிறது. ஆண்டவரின் தேவத்துவம் சுவர்க்கத்தை உண்டாக்குகிறதென்பதும், அவர் எல்லாவற்றிலும் எல்லாமாய் இருக்கிறரென்பதும் மேலே (செ. 7-12) பார்க்கப்படலாம்.

# VIII

## ஏகச்சகட்டில் முழுசுவர்க்கமும் ஒரு மனிதனைப்போ லிருக்கிறது.

**59**. ஏகச்சகட்டில், சுவர்க்கமானது ஒரு மனிதனைப்போ லிருக்கிறதென்பது, இன்னும் உலகத்தில் தெரியாத இரகசியம்; ஆனால், சுவர்க்கங்களில் அது வெகு நன்றாய் தெரிந்திருக்கிறது. இந்த உண்மையையும் அதற்கு சேர்ந்த குறிப்பானதும், நுண்ணியதுமான விஷயங்களையும் சேர்த்து தெரிந்துகொள்ளுதல், அங்கே இருக்கும் தேவர்களின் புத்திக்கு முக்கியமானதாயிருக்கிறது; அது அவர்கள் பொதுவான கோட்பாடாய் இல்லாவிட்டால், அவர்களுடைய மனங்களின் அபிப்பிராயங்களில் தீர்க்கமாயும், தெளிவாயும் பிரவேசிக்காத அநேக பொருள்கள் இதன்பேரில் சார்ந்திருக்கின்றன. எல்லா சுவர்க்கங்களும் அவைகளின் கூட்டங்களும் ஒரு மனிதனைப்போ லிருக்கிறதென்று தேவர்களுக்கு தெரிந்திருக்கிறபடியினால், சுவர்க்கத்தை மகாமனிதனென்றும் ஆண்டவரின் தேவத்துவம் சுவர்க்கம் உண்டாக்குகிறபடியினால், தெய்வீக மனிதனென்றும் சொல்லுகிறார்கள்.

**60**. ஆத்துமார்த்தமானதும், பரமார்த்தமானதுமாகிய பொருள்களைப்பற்றி நியாயமான அபிப்பிராயம் கொள்ளாதவர்கள் சுவர்க்கத்துக் கடுத்ததும், ஆத்துமார்த்தமானதுமாகிய பொருள்கள் ஒரு மனிதனுடைய உருவத்திலும் சாயலிலும் ஒழுங்குபடுத்தப்பட்டு, சேர்க்கப்பட்டிருக்கிறதென்று தெரிந்துகொள்ள சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள். மனிதனுடைய மிகவும் புறம்பான சுபாவத்தை ஏற்படுத்துகிற உலக சம்பந்தமானதும் ஸ்தூலமானதுமாகிய பொருள்கள் மனிதனுக்குகிறதென்றும், இவைகளில்லாமல் மனிதன் மனிதனல்லவென்றும், அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால், மனிதன் மனிதனாயிருப்பது இவைகளிலெல்லாமிருந்து அல்லாமல், உண்மையானதை தெரிந்துகொள்ளும் சக்தியிலிருந்தும், நன்மையான இச்சிக்கும் சக்தியிலிருந்தும் அப்படியாகிறானென்று அவர்களுக்கு தெரிந்திருக்கட்டும். இந்த ஆத்துமார்த்தமானதும் பரமார்த்தமானதுமாகியவைகள்தான் மனிதனாக செய்யப் பட்டவைகள். இதுவும் தவிர, புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் குணம், மனிதனுடைய குணமென்று

நன்றாய் தெரிந்திருக்கிறது; மனிதனுடைய மண் சரீரம் உலகத்தில் சித்தத்திற்கும் புத்திக்கும் தொண்டு செய்யவும், பிரகுருதியின் இறுதியான கோளத்தில் அவைகளுக்கு இணங்கி உபயோகங்களை செய்யவும் உண்டாக்கப்பட்டிருக்கிறதென்றும்கூட தெரிந்திருக்கலாம். இந்த காரணத்துக்காக, சரீரம் தன்னாலேயே ஒன்றும் செய்யமுடியாது; ஆனால், மனிதன் நினைப்பதெல்லாம், அவனுடைய நாவினாலும் உதடுகளாலும் பேசும்படிக்கும், அவன் இச்சிப்பதெல்லாம் அவனுடைய சரீரத்தினாலும் அவயவங்களினாலும் செய்யும்படிக்கும், இவ்விதமாக சரீரமே தானே ஒன்றும் செய்யாதிருக்கையில், புத்தியும் சித்தமும் செயல்படுகிறவைகளாயிருக்கும் அளவு, புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் கட்டளைகளுக்கு இணங்கி எப்பொழுதும் ஆட்டுவிக்கப்படுகிறது. ஆகவே, புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் பொருள்கள்தான் மனிதனாக செய்கிறவைகள் என்பது விசதமாகிறது; அந்தரங்கமானது புறம்பானதிற்குள் செயல்படுகிறதுபோல், இவைகள் சரீரத்தின் நுண்ணியவைகளில் செயல்படுகிறதினால், அவைகள் ஒரே வடிவத்தில் இருக்கவேண்டும்; இந்த காரணத்துக்காகத்தான், மனிதன் அந்தரங்கமான அல்லது ஆத்துமார்த்தமான மனிதன் என்று சொல்லப்படுகிறான். சுவர்க்கமே தன்னுடைய மிகவும் பெரியதும் மிகவும் சம்பூரணமானதுமாகிய உருவத்தில் அவ்வித மனிதனாயிருக்கிறது.

**61**. மனிதனைப்பற்றி தேவர்களுக்கிருக்கும் அபிப்பிராயம் இவ்விதமாயிருக்கிறது; ஆகையினால், தேவர்கள், மனிதன் சரீரத்தைக் கொண்டு செய்வதை எப்பொழுதும் கவனிக்கிறதில்லை; ஆனால் சரீரம் செயல்படுகிறதற்கு மூலமான சித்தத்தைக் கவனிக்கிறார்கள்; ஏனென்றால் சித்தத்தை மனிதனே என்றும், சித்தத்துடன் ஒன்றுபோல் செயல்படுகிறவரையில் புத்தியும்கூட மனிதனே என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள்.

**62** முழு சுவர்க்கமும் எந்த தேவனுடைய பார்வைக்கும் அகப்படாதபடியினால், தேவர்கள், உண்மையாகவே, சுவர்க்கத்தை அதன் பல பொருட் கலப்பில் ஒரு மனிதனாக பார்க்கிறதில்லை. ஆனால், அநேக ஆயிரங்கள் கணக்கான தேவர்களால் அமைந்த தூரத்திலுள்ள கூட்டங்களை அவ்வித உருவத்தில் ஒன்றுபோல் அவர்கள் அப்போதைக்கப்போது பார்க்கிறார்கள்; ஒரு பாகமாக ஒரு

கூட்டத்திலிருந்து, சுவர்க்கமாயிருக்கிற முழுவதைப்பற்றியும் நிர்மானிக்கிறார்கள். ஏனென்றால், மிகவும் சம்பூர்ணமான உருவத்தில், முழுவதும் பாகங்களைப்போலவும், பாகங்கள் முழுவதைப்போலவுமிருக்கின்றன; அவைகளுக்குள் வித்தியாசம் பரிமாணத்தால் வித்தியாசப்படுகிறது என்பதுதான். ஆகவே தெய்வமானது, மிகவும் அந்தரங்கமானதிலிருந்தும், பிரதானமானதிலிருந்தும், எல்லாவற்றையும் பார்க்கிறபடியினால், அவர்களால் பார்க்கப்படும்போது ஒரு தனித்த கூட்டமிருப்பதுபோல், முழு சுவர்க்கமும் ஆண்டவரின் பார்வையில் அவ்விதமாயிருப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள்.

**63**. சுவர்க்கத்தின் உருவம் அவ்விதமாயிருப்பதினால், ஆண்டவரால், ஒரு மனிதனைப்போல், இவ்விதமாக ஒன்றாக ஆளப்படுகிறது. ஏனென்றால், முழுவதிலும் ஒவ்வொரு பாகத்திலும் மனிதன் கணக்கற்ற பொருள்களின் விகற்பங்களால் அமைந்திருந்தாலும், (முழுவதிலும் அவயவங்களாலும், அங்கங்களாலும் ஆந்திரிகங்களாலும்; ஒவ்வொரு பாகங்களிலும், தசைநார்களாலும், நரம்புகளாலும், இரத்தக் குழாய்களாலும், இவ்விதமாக, அவையவங்களுக்குள் அவயவங்களினாலும், பாகங்களுக்குள் பாகங்களினாலும்) அவன் செயல்படும்போது, ஒன்றாக செயல்படுகிறானென்று தெரிந்திருக்கிறது. ஆண்டவரின் அரசாட்சியிலும் வழிகாட்டுதலிலும் சுவர்க்கம் அம்மாதிரியேகூட இருக்கிறது.

**64**. மனிதனுக்குள் பொது நன்மைக்கு ஏதோ ஒன்று உதவாததும், ஏதோ ஒரு உபயோகமானதை செய்யாததுமாகிய யாதொன்றும் இல்லாதபடியினால், அவ்வளவு அநேக வேறான பாகங்கள் அவனுக்குள் ஒன்றைப்போல் செயல்படுகின்றன. முழுவதும் சேர்ந்து அதன் பாகங்களுக்கு ஒரு உபயோகமானதை செய்கிறது, பாகங்கள் முழுவதற்கும் ஒரு உபயோகத்தை செய்கின்றன; ஏனென்றால், தொகுதியானது பாகங்களால் அமைந்திருக்கிறது. பகுதிகள் தொகுதியை உண்டாக்குகின்றன; ஆகையினால், அவைகள், ஒன்றுக்கொன்று வேண்டியதை கொடுத்து, ஒன்றுக்கொன்று மரியாதையாய் நடந்து, பொதுவாகவும், ஒவ்வொன்றாகவும் இரண்டு விதத்திலும் எல்லாம், தொகுதிக்கும் அதன் நன்மைக்கும் சம்பந்தம் உடைத்தாயிருக்கும்படியாக, அவ்வித வடிவத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவ்விதமாகத்தான் அவைகள் ஒன்றாக

செயல்படுகின்றன. சுவர்க்கத்தில் தங்களுடைய உபயோகங்களுக்கு தக்கபடி எல்லாரும் ஒரே உருவத்தில் சேர்க்கப்பட்டு, அதனால் ஒரு கூட்டத்திற்கு ஒரு உபயோகமுமா யில்லாதவர்கள், வேற்றியல்பானவர்க ளானபடியினால், அவர்கள் சுவர்க்கத்துக்கு வெளியே தள்ளப்படுகிறதின் நிமித்தம், சுவர்க்கத்தில் கூட்டங்களெல்லாம் ஒரே மாதிரியிருக்கின்றன. ஒரு உபயோகத்தை செய்தலென்பது பொது நன்மையின் பொருட்டு மற்றவர்கள் க்ஷேமத்தை விரும்புதலாயிருக்கிறது. பொது நன்மையின் பொருட்டல்லாமல் தனக்காகவே, மற்றவர்களின் க்ஷேமத்தை கோருதல், ஒரு உபயோகத்தை செய்தலாகிறதில்லை, பின் சொல்லியதை செய்கிறவர்கள்தான், எல்லாவற்றிற்கும் மேலாய் தங்களையே நேசிக்கிறவர்கள்; ஆனால், முன் சொல்லியதை செய்கிறவர்கள் ஆண்டவரை எல்லாவற்றிற்கும் மேலாய் நேசிக்கிறார்கள். இவ்விதமாகத்தான் சுவர்க்கத்திலிருக்கப்பட்டவர்கள் ஒன்றாக செயல்படுகிறார்கள்; அப்படி செய்தலும் தங்களிடமே இருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து நடக்கிறது; ஏனென்றால் அவர்கள், அவரை எல்லா பொருள்களுக்கும் ஒரே ஒரு உற்பத்தி ஸ்தான மென்றும், அவருடைய இராச்சியத்தை, கவனிக்கவேண்டிய பொது க்ஷேமமென்றும் எண்ணுகிறார்கள். "முதலாவது தேவனுடைய இராச்சியத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள்; அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும்" (மத்தே. vi. 33) என்று ஆண்டவர் சொன்னபோது இதுதான் கருதப்பட்டது. அவருடைய நீதியை தேடுதலென்பது", அவருடைய நன்மையை தேடுதலென்று அருத்தம்.

தங்கள் தேசத்தின் நன்மையை தங்கள் சொந்தமானதைவிட அதிகமாயும், தங்கள் அயலானிட நன்மையை தங்கள் சொந்தமாகவும், நேசிக்கும் உலகத்திலுள்ளவர்கள்தான், இதர வாழ்வில் ஆண்டவரின் இராச்சியத்தை நேசித்து அதை தேடுகிறவர்கள்; ஏனென்றால், அங்கே ஆண்டவரின் இராச்சியம், தங்கள் தேசத்திற்கு பதிலாகயிருக்கிறது; மேலும், தனக்காக அல்லாமல், நன்மையின் பொருட்டு, மற்றவர்களுக்கு நன்மை செய்ய விரும்புகிறவர்கள், அயலானை நேசிக்கிறார்கள்; ஏனென்றால், சுவர்க்கத்தில் அன்புதான் அயலானாயிருக்கிறது. அப்பேர்பட்டவர்கள் எல்லாம் இந்த மகாமனிதனில், அதாவது சுவர்க்கத்திலிருக்கிறார்கள்.

**65.** முழு சுவர்க்கமும் ஒரு மனிதனைப்போலிருப்பதினாலும் தோற்றத்திலும், மிக பெரிய உருவிலும் ஒரு ஆத்துமார்த்த தெய்வீக மனிதனாக இருப்பதினாலும், சுவர்க்கமானது, மனிதனைப் போல அவயவங்களாகவும், பகுதிகளாகவும் ஒழுங்கு படுத்தப் பட்டு, இவைகள் ஒரே மாதிரியாய் பெயரிடப்பட்டிருக்கின்றன இதுவுமன்றி தேவர்களுக்கு, ஒவ்வொரு கூட்டமும் எந்த அவயவத்தில் இருக்கிறதென்றுகூட தெரியும்; ஒரு கூட்டமானது சிரசிலாவது, அல்லது சிரசின் ஏதோ ஒரு பாகத்திலும், மற்ற ஒன்று மார்பிலாவது அல்லது மார்பின் ஒரு பாகத்திலும், மற்றொன்று இடுப்பிலாவது, இடுப்புகளின் ஒரு பாகத்திலும் இருப்பதாகவும், இம்மாதிரியாக அவர்கள் சொல்லுகிறார்கள். பொதுவாக மிகவும் உயர்ந்தது அல்லது மூன்றாவது சுவர்க்கம் தலை முதல் கழுத்து வரையிலாகிறது; மத்தியிலுள்ள அல்லது இரண்டாவது சுவர்க்கம். மார்பு முதல் கீழே இடுப்புகள் முழங்கால்கள் வரையிலாகிறது; மிகவும் தாழ்ந்த அல்லது முதல் சுவர்க்கம் பாதங்கள் முதல் கீழே உள்ளங்கால் வரையிலும், அதனுடன் புஜங்கள் முதல் விறல்கள் வரையிலும்மாகிறது; ஏனென்றால், புஜங்களும் கைகளும், பக்கங்களிலிருந்தபோதிலும் மனிதனுடைய இறுதியான பாகங்களாயிருக்கின்றன. ஆகவே, ஏன் மூன்று சுவர்க்கங்களிருக்கிற தென்பது இன்னமும் விசதமாகிறது.

**66.** சுவர்க்கத்துக்கு கீழே இருக்கும் அரூபிகள், சுவர்க்கமானது கீழேயும் மேலேயும் இருக்கிறதாக கேழ்விப்படுகிற போதும், பார்க்கிறபோதும், மிகவும் ஆச்சரியப்படுகிறார்கள்; ஏனென்றால், உலகத்திலுள்ள மனிதர்களைப்போல், சுவர்க்கம் மேலே மாத்திரம் இருக்கிறதென்கிற ஒரே மாதிரியான அபிப்பிராயத்தையும் நம்பிக்கையையும் அவர்கள் உடைத்தாயிருக்கிறார்கள்; அவர்களுக்கு சுவர்க்கங்களின் நிலையானது, சிலது மேலாகவும் சிலது கீழாகவும், இருக்கிற மனிதனிலிருக்கும் அவயவங்கள், அங்கங்கள், ஆந்திரிகங்கள்போல இருக்கிறதென்றும், சிலது உள்ளாகவும் சிலது புறம்பாகவும் இருக்கிற மனிதனிலிருக்கும் ஒவ்வொரு அவயவத்திலும், அங்கத்திலும் ஆந்திரிகத்திலுமிருக்கும் பகுதிகளின் நிலையைப்போல அது இருக்கிறதென்றும் அவர்களுக்கு தெரியாது. ஆகவே அவர்கள் சுவர்க்கத்தைப்பற்றி மலைவான அபிப்பிராயத்தை உடைத்தாயிருக்கிறார்கள்.

**67.** இந்த ஞானம் முன்னிட்டே இல்லாவிட்டால், சுவர்க்கத்தைப்பற்றி பின்வருவதை எந்தவிதத்திலும் அறிந்துகொள்ளமுடியாதெனகிறதற்காகவும், சுவர்க்கத்தின் உருவத்தைப் பற்றியும், சுவர்க்கத்துடன் ஆண்டவரின் ஐக்கியத்தைப் பற்றியும், மனிதனுடன் சுவர்க்கத்தின ஐக்கியத்தைப்பற்றியும், ஸ்தூல லோகத்துக்குள் செல்லும் ஆத்துமார்த்த லோகத்தின் உட்பெருக்கைப் பற்றியும், காரண காரிய சமபந்தமானவைகளைப் பற்றியும், எந்த தெளிவான அபிப்பிராயமும் உடைத்தாயிருக்க முடியாதென்பதற்காகவும், ஒரு மகா மனிதனைப்போல் சுவர்க்கத்தைப்பற்றி, இவைகளெல்லாம் கூறப்பட்டன. இப்பொழுது பின்வருவதில், இந்த விஷயங்களைப் பற்றி அவைகளின் ஒழுங்கில் நாம் சொல்லுவோம். ஆகையினுல் இவ்விஷயங்களைப்பற்றி வெளிச்சம் கொடுக்க மேல் கூறியவைகள் முகவுரையாய் சொல்லப்பட்டன.

## IX

### சுவர்க்கத்தில் ஒவ்வொரு கூட்டமும் ஒரு மனிதனைப்போ லிருக்கிறது.

**68**. சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டமும், ஒரு மனிதனைப் போலிருக்கிறதென்பதையும், அதனுடன் ஒரு மனிதன் சாயலி லிருக்கிற தென்பதையும் பார்க்க, சில வேலைகளில் எனக்கு அருள் செய்யப்பட்டது. வெளிச்சத்தில் உள்ள தேவர்களைப்போல் எப் படி பாசாங்கு செய்கிறதென்பது தெரிந்து, ஆனால் வேஷதாரிகளா யிருந்த அநேகர் உபாயமாய் அதின் உள்ளே சென்ற ஒரு கூட்ட மிருந்தது. தேவர்களிலிருந்து இவர்கள் பிரிக்கப்பட்டபோது, முழுகூட்டமும் ஒரு தெளிவற்ற சரீரமாக தோன்றியது; பிறகு படிப்படியாய் மானிட உருவத்திலும், அப்படி யிருந்தாலும் தெளி வற்றும், கடைசியில் ஒரு மனிதனைப்போல் தெளிவாயும் தோன் றியது. அந்த மனிதனிலிருந்து அவனை உண்டாக்கினவர்கள், அந்த கூட்டத்தின் நன்மையிலிருந்தார்கள். அந்த மனிதனிலில் லாமல் அவனை உண்டாக்காமலிருந்த மற்றவர்கள், தள்ளப்பட்ட வேஷதாரிகளாயிருந்தார்கள்; ஆனால் மற்றவர்கள் நிருத்தி வைத்துக் கொள்ளப்பட்டார்கள்; இவ்விதத்தில் பிரிவினை செய்யப்பட்டது. நன்றாய் பேசி, நன்றாய் செய்து, ஆனால் ஒவ்வொன்றிலும், தங் களையே பேணுகிறவர்கள்தான் பாசாங்கர்களாக யிருக்கிறார்கள். ஆண்டவரைப்பற்றியும், சுவர்க்கத்தைப் பற்றியும், அன்பைப்பற்றி யும், சுவர்க்க வாழ்வைக் குறித்தும் தேவர்களைப்போல் அவர்கள் பேசுகிறார்கள்; பேச்சுகளிலிருப்பதுபோல் செய்கையில் அப்படி யிருப்பதாக தாங்கள் தோன்றும்படி, சரியாயும்கூட செய்வார்கள். ஆனால், அவர்களுக்கு இதர எண்ணங்கள் உண்டு; அவர்கள் எதை யும் நம்புகிறதில்லை; தங்களைத் தவிர வேறு யாருக்கும் நன்மையை செய்யவிரும்புகிறதில்லை. அவர்கள் நன்மை செய்தலென்பது, தனக்காகத்தான் இருக்கும், அல்லது மற்றவர்களின் பொருட்டா யிருந்தால், தோற்றத்துக்கு மாத்திரம் அப்படியிருக்கும், இவ்வித மாக தனக்காகவேயிருக்கும்.

**69**. சந்நிதிகொடுக்க ஆண்டவர் வெளியாகும்போது ஒரு முழு தேவர்கள் கூட்டமும் மானிட உருவத்தில், ஒரு சரீரம் போல் தோன்றுகிற தென்பதைப் பார்க்கக்கூட எனக்கு அருள்

செய்யப்பட்டது. கிழக்கு புறத்திலே மேலே, சிவப்பான நிறத்துடன் கலந்து பிரகாசிக்கிற வெண்மைநிறமான ஒரு மேகம்போல, ஏதோ ஒன்று சிறிய நட்சத்திரங்களால் சூழப்பட்டு தோன்றியது. அது கீழே இறங்கிக்கொண்டு வந்தது; அது படிப்படியாய் இறங்கியபோது ஒரு சம்பூரணமான மானிட உருவத்தில் கடைசியில் பார்க்கப்படுகிற வரையில், அதிக பிரகாசமாயிக்கொண்டிருந்தது. அந்த மேகத்தை சுற்றியிருந்த சிறிய நட்சத்திரங்கள், ஆண்டவரிடமிருந்து வரும் ஒளியினால், நட்சத்திரங்கள்போல் தோன்றிய தேவர்களாயிருந்தார்கள்.

**70.** ஒரு சுவர்க்கத்தின் கூட்டத்திலிருப்பவர்கள், எல்லாம் சேர்த்து ஒன்றாக பார்க்கும்போது, ஒரு மனிதன் சாயலில் தோன்றின போதிலும், எந்த கூட்டமும், மற்ற கூட்டத்தைப் போல் மனிதனாக சரியாக இல்லை என்பது தெரிந்திருக்கவேண்டும். கூட்டங்கள் ஒன்றுக்கொன்று, மேலே (நெ. 47) கூறிய காரணத்துக்காக, ஒரு குடும்பத்திலிருக்கும் பலருடைய முகங்கள்போல் வித்தியாசப்படுகின்றன; அதாவது தாங்கள் இருக்கும் நன்மைக்கு தக்கபடி அவைகள் வித்தியாசப்படுகின்றன. ஏனென்றால், நன்மையானது அவைகளின் உருவத்தை நிர்மானிக்கிறது. மிகவும் அந்தரங்கமான அல்லது மிகவும் உயர்ந்த சுவர்க்கத்தில் இருக்கப்பட்ட கூட்டங்களும், முக்கியமாய் அதன் மத்தியிலிருக்கப்பட்டவைகளும், மிகவும் சம்பூரணமானதும், மிகவும் அழகானதுமான மானிட உருவத்தில் தோன்றுகின்றன.

**71.** எல்லாம் ஒன்றாக செயல்பட்டு, சுவர்க்கத்தின் எந்த கூட்டத்திலாவது எவ்வளவு அதிகமாயிருக்கிறார்களோ, அவ்வளவு அதனுடைய மானிட உருவம் அதிக சம்பூரணமாயிருக்கிறதென்று சொல்லுவது தகுதியாகும். ஏனென்றால், சுவர்க்கத்தின் உருவில் ஒழுங்கு செய்யப்பட்ட விகற்பங்கள் மேலே (நெ. 56) காண்பித்தபடி சம்பூரணத்தை உண்டாக்குகிறது; மேலும், எண்கள் தான் விகற்பத்தை உண்டாக்குகின்றன. சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டமும், கூட எண்ணில் பிரதிதினமும் அதிகமாகிறது. அது அப்படி அதிகரிக்கும்போது அதிக சம்பூரணத்தை அடைகிறது. சுவர்க்கமானது கூட்டங்களால் அமையப்பட்டிருப்பதினால், இவ்விதமாக, கூட்டமானது மாத்திரம அல்லாமல, சுவர்க்கம்முழுமையும்கூட சம்பூரணமாக்கப்படுகிறது. எண்கள் அதிகமாகிற காரணத்

தினுல், சுவர்க்கமானது சம்பூரணமாகிறபடியினுல், சுவர்க்கம் நிறைந்தபோது அது மூடப்படுமென்று நம்புகிறவர்கள், எவ்வளவு ஏமாற்றப்பட்டார்களென்று விசதமாகிறது. சுவர்க்கத்தின் நிறைவு எவ்வளவோ, அவ்வளவு அதன் சம்பூரண மிருக்கிறபடியினுல், அது எப்பொழுதும் மூடப்படாது என்கிற எதிர் பேச்சு உண்மை யாயிருக்கிறது. ஆகையினுல், தேவர்கள் தங்களிடம் புதிது புதிதாய் தேவதா விருந்தாளிகள் வரவேண்டுமென்பதைவிட அவ்வளவு அதிகமாய் எதையும் விரும்புகிறதில்லை.

**72**. முன் அத்தியாயத்தில் காண்பித்தபடி, சுவர்க்கம், தொகுதியில் ஒரு மனிதனுக தோன்றுகிறதின் நிமித்தம், ஒவ்வொரு கூட்டமும் தொகுதியில் அம்மாதிரியே தோன்றுகிறது; இதுவுமன்றி, சுவர்க்கத்தின் உருவ மிருக்கிறதுபோல, மிகவும் சம்பூரண மான உருவத்தில், பாகங்கள் தொகுதிக்கும், குறைந்த உருவங்கள் பெரியதற்கும் ஒரு சாயலிருக்கிறது. சுவர்க்கத்தின் அதிக குறைந்த உருவங்களும் பாகங்களும், அது அமைக்கப்பட்டிருக்கிற கூட்டங்களாயிருக்கின்றன. இவைகள் அதிக குறைந்த உருவத்தில் சுவர்க்கங்களென்பது, மேலே (நெ. 51-58) பார்க்கப்படலாம். சுவர்க்கங்களில், எல்லாருடைய நன்மைகளும், ஒரு தனித்த அன்பிலிருந்து, அதாவது ஒரு தனித்த மூலத்திலிருந்து உண்டாகிறபடியினுல், இந்த சாயல் சாசுவதமானது. சுவர்க்கத்தில் எல்லாருடைய நன்மையின் மூலமாயிருக்கிற தனித்த அன்பு, ஆண்டவரிடமிருந்து ஆண்டவருக்கு அன்பு பாராட்டுதலாயிருக்கிறது. இதனுல்தான், பொதுவாக முழு சுவர்க்கமும், குறைவாய் பொதுவாக ஒவ்வொரு கூட்டமும், சிறப்பாக ஒவ்வொரு தேவனும், மேலே (நெ. 58) காண்பித்தபடி ஆண்டவரின் சாயலா யிருக்கிறது.

# X

## ஆகவே, ஒவ்வொரு தேவனும் முழு மானிட உருவத்திலிருக்கிறுன்.

**73.** முன் வந்த இரண்டு அத்தியாயங்களில், தொகுதியில் சுவர்க்கமும், அதனுடன் சுவர்க்கத்தில் ஒவ்வொரு கூட்டமும், ஒரு மனிதனைப்போ லிருக்கிறதென்று காண்பிக்கப்பட்டிருக்கிறது. அங்கே எடுத்துக் காண்பித்த காரணங்களின் தொடர்ச்சியிலிருந்து, ஒவ்வொரு தேவன் விஷயத்திலும் அதே நிஜமென்றுதொடருகிறது. சுவர்க்கமானது மிகவும் பெரிய உருவத்தில் ஒரு மனிதனுகவும், சுவர்க்கத்தின் ஒரு கூட்டம் ஒரு குறைந்த மனிதனுகவும் இருக்கிறதுபோல், சின்னஞ் சிறியதில், ஒரு தேவன் அம்மாதிரி யிருக்கிறுன்; ஏனென்ருல், சுவர்க்கத்தைப் போன்ற ஒரு மிகவும் சம்பூரணமான உருவத்தில், ஒவ்வொரு பாகத்திலும் தொகுதியின் ஒரு சாயலும், தொகுதியில் ஒவ்வொரு பாகத்தின் சாயலும் இருக்கிறது. சுவர்க்கமானது தனக்குள்ளதை எல்லாம் ஒவ்வொருவருக்கும் பங்கிட்டுக் கொடுத்து, ஒவ்வொருவனும் தனக்குள்ளதை இதிலிருந்து பெற்றுக்கொள்ளுகிற ஒரு ஐக்கியமென்பது, இதற்கு காரணமாயிருக்கிறது. ஒரு தேவன் எல்லா சுவர்க்கத்து பொருள்களையும், அதைப்பற்றி பேசிய அத்தியாயத்தில் காண்பித்தபடி பெற்றுக் கொள்பவனுயிருக்கிற படியினுல், சின்னஞ் சிறிய உருவத்தில் சுவர்க்கமாயிருக்கிறுன். ஒரு மனிதன் சுவர்க்கத்தை ஏற்றுக் கொள்ளுகிற அளவு, அவன்கூட ஒரு பெற்றுக்கொள்ளுபவனுயும் ஒரு சுவர்க்கமாகவும், ஒரு தேவனுகவும் இருக்கிறுன் (நெ. 57 ஐப் பார்க்கவும்). வெளிப்படுத்தின விசேஷத்தில் இது இவ்விதமாக விவரிக்கப்பட்டிருக்கிறது:—"அவன் அதன் மதிலே அளந்தபோது, அது தூதனுடைய அளவாகிய மனுஷ அளவின்படியே நூற்று நாற்பத்து நான்கு முழமாயிருந்தது (வெளி. xxi. 17)." இங்கே பேசிய 'எருசலேம்' ஆண்டவருடைய திருச்சபையாகவும், உயர்ந்த அருத்தத்தில், சுவர்க்கமாகவும் இருக்கிறது; அதன் "சுவர்" என்பதற்கு, பொய்களுடையவும், தீமைகளுடையவும் தாக்குதலிலிருந்து காப்பாற்றுகிற உண்மை என்று அருத்தம்; "நூற்று நாற்பத்து நான்கு" என்பதற்கு தொகுதியில் எல்லா

நன்மைகளும் உண்மைகளும் என்று அருத்தம்; "அளவு" என்பது அதன் குணம் என்று அருத்தம் கொள்ளுகிறது; "மனிதன்" என்பது பொதுவாகவும் சிறப்பாகவும் நன்மைகளும் உண்மைகளும் இருக்கப்பட்டவனென்றும், இவ்விதமாக சுவர்க்கம் இருக்கப்பட்டவனென்றும் அருத்தம் கொள்ளுகிறது. இதிலிருந்துதான் ஒரு தேவன் மனிதனுகிறபடியினுல், "தூதனுடைய அளவாகிய மனுஷ அளவு" என்று சொல்லப்பட்டது. இந்த வார்த்தைகளுக்கு இதுதான் ஆத்துமார்த்தமான அருத்தம். அந்த அருத்தமில்லாவிட்டால், "பரிசுத்த எருசலேம் நகரத்தின் சுவர்" தூதனுடைய "அளவாகிய மனுஷ அளவு" என்று எப்படி அறிந்து கொள்ளலாம்?

**74.** அனுபவத்தில் கண்டதை இனி சொல்லலாம். தேவர்கள் மானிட உருவங்கள் அல்லது மனிதர்களாயிருக்கிறுர்களென்று, நான் ஆயிரம் சமயங்களில் பார்த்திருக்கிறேன். நான் அவர்களோடு மனிதன் மனிதனேடு பேசுகிறதுபோல், சில சமயங்களில் ஒரு தேவனேடும், சில சமயங்களில் கூட்டத்தில் அநேகரோடும் பேசியிருக்கிறேன்; அவர்களுடைய வடிவத்தில், மானிட வடிவத்திலிருந்து வித்தியாசமாக எதையும் பார்த்ததில்லை; மேலும், அவர்கள் அப்படியிருப்பதைக் கண்டு நான் அடிக்கடி ஆச்சரியப்பட்டிருக்கிறேன். இது ஒரு மாயம் அல்லது மனேராச்சியக் காட்சி என்று சொல்லப்படாதபடி, முழுமையும் விழித்திருக்கும்போதும், அல்லது என்னுடைய ஐம்புல அறிவுகளால் நிறைந்திருக்கும்போதும், தெளிவான உணர்ச்சியிலிருக்கும்போதும், தேவர்களைப் பார்க்க எனக்கு அருள்செய்யப்பட்டது. அவைகளைப்பற்றி உயிர் இருக்கப்பட்ட ஏதோ ஒரு ஆகாய சம்பந்தமான பொருள் என்பதைவிட, வேறு அபிப்பிராயம் கொள்ளாத, உருவமில்லாத மனதுகளாகவும் அல்லது கேவல சிந்தனைகளாகவும்கூட தேவர்களும் அரூபிகளும் இருப்பதாக நம்பும்படியாக அவ்வளவு பெரும் அஞ்ஞானத்தில் கிறிஸ்துவ உலகத்திலுள்ள மனிதர்கள் இருப்பதாக, நான் அடிக்கடி அவர்களுக்கு சொல்லியிருக்கிறேன். இவ்விதமாக அவர்கள், அரூபிகளுக்கு ஒரு நினைக்கும் மனேசக்தியைத் தவிர, வேறு எந்த மானிடத் தன்மையும் ஆரோபிக்காதபடியினுல், தங்களுக்கு கண்ணில்லாதபடியினுல் தாங்கள் பார்க்கிறதில்லை என்றும், காது இல்லாதபடியினுல் கேட்கிறதில்லை என்றும்,

வாயும் நாவும் இரண்டும் இல்லாதபடியினால் பேசுகிறதில்லை என்றும் அவர்கள் நம்புகிறார்கள்.

உலகத்தில் அநேகரிடத்தில் அவ்வித நம்பிக்கை இருப்பதாகவும், அது கற்றவர்களிடத்திலேயும் இருப்பதாயும், அதனுடன் தாங்கள் ஆச்சரியப்படும்படியாக குருக்களிடத்திலும் அது இருப்பதாயும், தங்களுக்குத் தெரியும் என்று தேவர்கள் பதில் சொன்னார்கள். தலைவர்களாகவும், தேவர்களைப் பற்றியும் அரூபிகளைப் பற்றியும் இவ்வித அபிப்பிராயத்தை முதலில் வெளியிட்டவர்களாகவுமிருந்த கற்றோர், அவர்களைப் பற்றிய அபிப்பிராயத்தை புறம்பான மனிதனுடைய இந்திரிய ஞானத்திலிருந்து, அவர்களைக் குறித்த அபிப்பிராயத்தை கொண்டார்களென்பதையும், உள்ளான வெளிச்சத்திலிருந்தும், ஒவ்வொருவனுக்குள்ளே நடப்பட்டிருக்கும் பொது அபிப்பிராயத்திலிருந்தும் அல்லாமல், இவைகளிலிருந்து நினைப்பவர்கள், புறம்பான மனிதனுடைய இந்திரிய ஞானங்கள், இயற்கைக்கு மேலான எதையும், இவ்விதமாக சூக்கும உலகத்து எதையும் அல்லாமல், இயற்கைக்கு சேர்ந்ததை மாத்திரம் ஏற்றுக்கொள்ளுகிறபடியினால், இவ்வித கதைகளை கற்பிக்க வேண்டி இருந்ததென்பதையும் காரணமாக அவர்கள் சொன்னார்கள். வழிகாட்டிகளாக இந்த தலைவர்களிடமிருந்து, தேவர்களைக் குறித்த இந்த பொய்யான எண்ணம், தங்களுக்குள்ளேயே தாங்களே நினைத்துப்பார்க்காமல், தங்களுடைய தலைவர்களின் சிந்தனைகளை ஏற்றுக்கொண்டவர்களுக்குள்ளும் பரவியது; மற்றவர்களிடமிருந்து தங்கள் கருத்துகளை முதலில் ஏற்றுக்கொண்டு, அந்த கருத்தை நம்பி, பிறகு தங்கள் புத்தியைக்கொண்டு அதைப் பார்க்கிறவர்கள், அதிலிருந்து சுலபமாய் விலகமுடியாது. அநேகர் அதை ஸ்திரப்படுத்துவதில் திருப்தியடைகிறார்கள்.

விசுவாசத்திலும் இருதயத்திலும், பேதைமையானவர்கள், தேவர்களைப்பற்றி அவ்வித அபிப்பிராயங்களை கொள்ளாமல், சுவர்க்கத்தின் மனிதர்களென்று நினைக்கிறார்களென்றும் கூட தேவர்கள் சொன்னார்கள். ஏனென்றால், சுவர்க்கத்திலிருந்து தங்களுக்குள் நடப்பட்டிருப்பதை கல்வியினால் அவர்கள் அழிக்கவுமில்லை, உருவமில்லாத எதையும் அவர்கள் நினைக்கவும் முடியாது. இந்த காரணத்துக்காகத்தான், தேவாலயங்களில் தேவர்கள் கொத்துவேலையிலும் சித்திரவித்தையிலும் மனிதர்களைப்போல்

காண்பிக்கப்படுகிறார்கள். சுவர்க்கத்திலிருந்து நடப்பதைப்பற்றி, விசுவாசத்தினுடையவும் வாழ்க்கையினுடையவும் நன்மையில் இருக்கப்பட்டவர்களுக்கு அது தெய்வப்பெருக்கென்று அவர்கள் சொன்னார்கள்.

**75.** அநேக வருஷங்களாக நீடித்து வந்த என்னுடைய எல்லா அனுபவத்திலிருந்து, உருவம் சம்பந்தப்பட்ட வரையில், தேவர்கள் எல்லா விஷயத்திலும் மனிதர்களென்றும், அவர்களுக்கு முகங்களும், கண்களும், காதுகளும், சரீரமும், புஜங்களும், கைகளும், கால்களும் உண்டென்றும், அவர்கள் பார்க்கிறார்களென்றும், கேட்கிறார்களென்றும், ஒருவரோடொருவர் பேசுகிறார்களென்றும், சுருங்கச் சொல்லில் ஜட சரீரங்களால் உடுக்கப்பட்டிருக்கவில்லை என்பதைத் தவிர, மனிதனுக்கு சேர்ந்த எதிலும் அவர்கள் குறைந்திருக்கவில்லை என்றும் சொல்ல நான் சக்தியுள்ளவனாயிருக்கிறேன். உலகத்தின் மத்தியான வெளிச்சத்தைவிட அநேக மடங்கு அதிகமாயிருக்கிற அவர்களுடைய சொந்த வெளிச்சத்தில் நான் அவர்களைப் பார்த்திருக்கிறேன்; அந்த வெளிச்சத்தில், அவர்களுடைய சாயல்கள், பூமியின் பேரில் மனிதர்களுடைய முகங்கள் காணப்படுவதைவிட, அதிக தெளிவாயும் தீர்க்கமாயும் காணப்பட்டது. மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் ஒரு தேவனை பார்க்கக்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது. அவனுடைய முகரூபம், தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களுடைய முகங்களைவிட மகா ஜோதியுள்ளதாயிருந்தது. அவனை நான் மிகவும் கவனமாய் பார்த்தேன். அவனுக்கு எல்லா சம்பூர்ணமான மானிட உருவமிருந்தது.

**76.** ஆனால், மனிதனுடைய ஆன்மா, சூக்குமலோகத்தில் இருப்பதாலும், சரீரத்துக்கு சம்பந்தப்பட்டவைகளெல்லாம் ஜடலோகத்திலிருப்பதாலும், தேவர்களை சரீரத்தின் கண்களினாலல்லாமல், மனிதனுக்குள் இருக்கும் ஆன்மாவின் கண்களினால் மாத்திரம் அவனால் பார்க்கக்கூடுமென்று சொல்லப்படவேண்டும்; ஒரேமாதிரியிருப்பதினால் ஒரேமாதிரி யிருப்பது, அதேமாதிரி இருப்பதை பார்க்கிறது. அதுவுமன்றி, சரீரபார்வைக்கு அவயமாயிருக்கிற கண்ணானது, பெரிதாக்கிக் காட்டும் கண்ணாடிகளின் உதவியினால் தவிர, இயற்கையின் அதிக சிறிய பொருள்களைக்கூட பார்க்கக்கூடாதபடி, அவ்வளவு பருத்ததாயிருக்கிறதென்று, ஒவ்வொருவனுக்கும் தெரியும்; ஆகையினால், சூக்குமலோகத்தில் எல்லா பொருள்

களும் இருக்கிறதுபோல் இருக்கும் இயற்கைக்கு மேலான பொருள்களை, இன்னும் குறைவாய்தான் அது பார்க்கும்; ஆனால் மனிதன் சூக்சும பொருள்களை பார்க்கவேண்டுமென்று ஆண்டவருக்கு அருள்வந்தபோது ஒரு நொடியில் நடக்கிறதுபோல், மனிதனைவன் சரீரக்காட்சியிலிருந்து நீக்கப்பட்டு, ஞானக்கண் திறக்கப்பட்டபோது, அவனால் அவைகள் பார்க்கப்படலாம். அக்காலத்தில், தான் அவைகளை சரீரக்கண்களினால் பார்க்கிறான் என்பதைத் தவிர வேறொன்றும் அவன் அறியான். இம்மாதிரியாக ஆபிரகாமினாலும், லாட் என்பவராலும், மனோவா என்பவராலும் தீர்க்கதரிசிகளாலும் தேவர்கள் பார்க்கப்பட்டார்கள். இம்மாதிரிகூட, ஆண்டவர் உயிர்த்தெழுந்த பிறகு சீஷர்களால் பார்க்கப்பட்டார். அதேமாதிரிகூட, என்னால் தேவர்கள் பார்க்கப்பட்டார்கள். தீர்க்கதரிசிகள் இவ்விதமாக பார்த்தபடியினால், அவர்கள் ஞானதிருஷ்டகர்களென்றும், கண்திறக்கப்பட்டவர்களென்றும் சொல்லப்பட்டார்கள் (1. சாமு. ix. 9, எண்–xxiv. 3); இந்த ஞானக்கண் திறத்தலை கண்திறத்தல் என்று சொல்லப்பட்டது. எலிசாவின் வேலைக்காரன் விஷயத்தில் இப்படிதான் நடந்தது. அவனைப்பற்றி சொல்லியதாவது: “அப்பொழுது எலிசா விண்ணப்பம்பண்ணி: கர்த்தாவே இவன் பார்க்கும்படி இவன் கண்களைத்திறந்தருளும் என்றான்; உடனே கர்த்தர் அந்த வேலைக்காரன் கண்களைத் திறந்தார். இதோ எலிசாவைச் சுற்றிலும் அக்கினிமயமான குதிரைகளாலும் இரதங்களாலும் அந்த மலை நிறைந்திருக்கிறதை அவன் கண்டான் (II இராஜா. vi. 17).

**77**. இந்த விஷயத்தைப்பற்றி நான் பேசிய நல்ல அரூபிகள் சுவர்க்கத்தினுடையவும் அரூபிகளுடையவும், தேவர்களுடையவும், நிலைமையைப்பற்றி, திருச்சபையிலிருக்கும் அவ்வித அஞ்ஞானத்தைக்குறித்து மிகவும் விசனப்பட்டார்கள்; மேலும் தாங்கள் வடிவமில்லாத மனங்கள் அல்லவென்றும், ஆகாய சுவாசங்களல்லவென்றும், ஆனால் தாங்கள் உருவமுடைய மனிதர்களென்றும், உலகத்தில் உள்ள மனிதர்களைப்போல் சமமாய் தாங்கள் பார்க்கிறதாகவும், கேட்கிறதாகவும் உணருகிறதாகவும் சொல்ல கோபமாய் எனக்கு கட்டளையிட்டார்கள்.

## XI

## முழு சுவர்க்கமும், அதன் ஒவ்வொரு பாகமும், ஆண்டவரின் தெய்வீக மானிடத் தன்மையிலிருந்து உண்டாகிறபடியினால், அது ஒரு மனிதனைப்போ லிருக்கிறது.

**78.** முழு சுவர்க்கமும் அதன் ஒவ்வொரு பாகமும் ஆண்டவரின் மானிடத்தன்மையிலிருந்து உண்டாகிறபடியினால், அது ஒரு மனிதனைப்போ லிருக்கிற தென்பது, முன்வந்த அத்தியாயங்களில் சொல்லப்பட்டவைகளிலெல்லா மிருந்து ஏற்பட்ட ஒரு தீர்மாணம்; ஏனென்றால், (i) ஆண்டவர் சுவர்க்கத்து கடவுளென்றும், (ii) ஆண்டவரின் தெய்வீகத்தன்மை சுவர்க்கமாகிறதென்றும், (iii) சுவர்க்கம் கணக்கற்ற கூட்டங்களாக அமைந்திருக்கிறதென்றும், ஒவ்வொரு கூட்டமும் குறைந்த வடிவத்தில் சுவர்க்கமென்றும், ஒவ்வொரு தேவனும் சின்னஞ் சிறிய உருவத்தில் தேவனென்றும், (iv) முழு சுவர்க்கமும், தொகுதியில் பார்த்தால், ஒரு மனிதனைப் போலிருக்கிறதென்றும், (v) சுவர்க்கத்திலுள்ள ஒவ்வொரு கூட்டமும் கூட ஒரு மனிதனைப்போ லிருக்கிறதென்றும், (vi) ஆகையினால் ஒவ்வொரு தேவனும் சம்பூரணமான மானிட உருவத்திலிருக்கிறா ரென்றும், நாம் காண்பித்திருக்கிறோம். இந்த சித்தாந்தங்கள் தெய்வமானது சுவர்க்கமாகிறபடியினால், உருவத்தில் மானிடத்தன்மையாயிருக்கிறது என்கிற தீர்மானத்தை நிலைநிறுத்துகிறது. இந்த தெய்வமானது ஆண்டவரின் தெய்வீக மானிடத்தன்மை என்பது, இந்த அத்தியாயத்திற்கு ஒரு அருத்தாபத்தியுரையாக கொடுக்கப்பட்ட, தெய்வலோக இரகசியங்கள் என்று சொல்லப்பட்ட நூலிலிருந்து எடுத்த பிரதிகளிலிருந்து சுருக்கமாய் இருப்பதினால், இன்னும் அதிக தெளிவாக பார்க்கப்படலாம். ஆண்டவருடைய மானிடத்தன்மை தெய்வீகமானதென்பதும், அவருடைய மானிடத்தன்மை தெய்வீகமானதல்லவென்று திருச்சபையில் நம்பப்படுகிறபடி நிஜமல்லவென்பதும், இந்த பிரதிகளிலிருந்துகூட அறிந்துகொள்ளலாம்; புதிய எருசலேமும் அதன் சுவர்க்க கொள்கையும் எனும் நூலில் கூறிய ஆண்டவரைக் குறித்த அத்தியாயத்திலிருந்துகூட அறிந்து கொள்ளலாம்.

**79.** அது அப்படியிருக்கிறதென்பது, அதிக அனுபவத்தில் எனக்கு விசதமாக்கப்பட்டது; அதில் சில பாகம் இப்பொழுது சொல்லப்படும். எல்லா சுவர்க்கங்களிலுமிருக்கும் எந்த தேவனும், மானிட வடிவத்தைத் தவிர வேறு எந்த வடிவத்திலும் தெய்வத் தன்மையை எப்பொழுதும் பார்க்கிறதில்லை; ஆச்சரியமென்ன வென்றால், அதிக உயர்ந்த சுவர்க்கங்களிலிருப்பவர்கள் தெய்வத் தைப்பற்றி வேறு எந்த விதத்திலும் நினைக்க முடியாது. இம்மாதிரி நினைப்பதற்கு ஆவசியகம், உள்ளே பாயும், தெய்வத்தினிடமே இருந்தும், அவர்கள் சிந்தனைகள் பொருந்தி பரவுகிற சுவர்க்கத் தின் உருவத்திலிருந்தும், ஏற்படுகிறது. ஏனென்றால், ஒரு தேவனுடைய ஒவ்வொரு சிந்தனையும், சுவர்க்கத்தில் பரவு கிறது; தேவர்களுக்கு அந்த விரிவிற்கு தக்கபடி பகுத்தறிவும் ஞானமுமிருக்கிறது. அதனால்தான், சுவர்க்கத்தில் எல்லாரும் ஆண் டவரை ஒத்துக்கொள்ளுகிறார்கள்; ஏனென்றால், ஆண்டவரிடத்தில் மாத்திரம் தெய்வீக மானிடத்தன்மையிருக்கிறது. இவைகள் எல் லாம் தேவர்களால் எனக்கு சொல்லப்பட்டதுமட்டு மல்லாமல், சுவர்க்கத்து உள்ளான திரட்சிக்கு உயர்த்தப்பட்டபோது, நான் அதைப் பார்க்க சக்தியுள்ளவனாயிருந்தேன். தேவர்கள் எவ்வளவு ஞானமுள்ளவர்களா யிருக்கிறார்களோ, அவ்வளவு தெளிவாய் இந்த உண்மையை பார்க்கிறார்களென்று இதிலிருந்து விசதமாகி றது; இதுதான் ஆண்டவரைப் பார்க்க அவர்களுக்கு சக்தியுண்டாக் குகிறது; ஏனென்றால், கண்களுக்கு புலப்படாத தெய்வத்தை நம்புகிறவர்களாலல்லாமல், தோற்றமுள்ள தெய்வத்தை ஒத்துக் கொண்டு நம்புகிறவர்களால் மாத்திரம், மானிட உருவமாயிருக்கிற தெய்வீகதேவரூபத்தில் ஆண்டவர் பார்க்கப்படுகிறார்; ஏனென்றால், பின் கூறியவர்கள் தங்களுடைய தெய்வத்தைப் பார்க்கக்கூடும், ஆனால் முன் கூறியவர்கள் அப்படி தங்களுடையதை பார்க்கமுடி யாது.

**80.** தேவர்களுக்கு ரூபமற்ற கடவுள் என்று சொல்லுகிற கண்களுக்கு புலப்படாத தெய்வத்தைப்பற்றி, யாதொரு உணர்ச்சியு மல்லாதபடியினால், மானிட உருவத்தில் உள்ள ஒரு தோற்றமுள்ள தெய்வத்தை மாத்திரம் பார்க்கிறதின் நிமித்தம், ஆண்டவர் மாத் திரம் மனிதனென்றும், அவரிடமிருந்துதான் அவர்கள் மனிதர் களாயிருக்கிறார்களென்றும், ஒவ்வொருவனும் ஆண்டவரை ஏற்றுக்

கொள்ளுவதற்குத் தக்கபடி, ஒரு மனிதனுயிருக்கிறுனென்றும் அவர்கள் சொல்ல பழகியிருக்கிறுர்கள். ஆண்டவர் தன்னுடைய சொந்த நன்மையிலும், தன்னுடைய சொந்த உண்மையிலுமிருக்கிறபடியினுல், ஆண்டவரை ஏற்றுக்கொள்ளுதலென்பதினுல், அவரிட மிருந்துவரும்,நன்மையையும் உண்மையையும் ஏற்றுக்கொள்ளுதல் என்று, அவர்கள் கருதுகிறுர்கள். இதைத்தான் அவர்கள் ஞானமென்றும், அறிவென்றும் சொல்லுகிறுர்கள். ஒவ்வொருவனுக்கும், அறிவும் ஞானமும் மனிதனை உண்டாக்குகிறதென்றும், இவைகளல்லாமல் முகமே அப்படி உண்டாக்காதென்றும் தெரியுமென்று அவர்கள் சொல்லுகிறுர்கள். ஆண்டவரிடமிருந்து வரும் நன்மையிலும் உண்மையிலும், அதிலிருந்து ஞானத்திலும் அறிவிலும் இருக்கிற, அந்தரங்கமான சுவர்க்கங்களிலிருக்கும், தேவர்களின் தோற்றத்திலிருந்து, இந்த உண்மை விசதமாகிறது; ஏனென்றுல், அவர்கள் மிகவும் அழகுள்ளதும், மிகவும் சம்பூரணமான மானிட உருவத்திலிருக்கிறுர்கள்; தாழ்ந்த சுவர்க்கங்களின் தேவர்கள், குறைந்த சம்பூரணமும் குறைந்த அழகும் உள்ள மானிட உருவத்திலிருக்கிறுர்கள். ஆனுல், நரகத்தில் விஷயம் கவிழ்க்கப்பட்டிருக்கிறது. சுவர்க்கத்து வெளிச்சத்தில் பார்க்கப்பட்டபோது, அங்கே இருக்கப்பட்டவர்கள், மனிதர்களாயல்லாமல் குரூபாங்கிகள்போல் தோன்றுகிறுர்கள்; ஏனென்றுல், அவர்கள் நன்மையிலும் உண்மையிலும் அல்லாமல், தீமையிலும், பொய்யிலும், அதனுல் அறிவுக்கும் ஞானத்துக்கும் எதிரிடையானவைகளில் இருக்கிறுர்கள். இந்த காரணத்துக்காக கூட அவர்களுடைய உயிர், உயிர் என்று சொல்லப்படாமல், சூக்கும மரணமென்று சொல்லப்படுகிறது.

**81.** சுவர்கமானது, முழுவதிலும் அதின் பாகத்திலும், ஆண்டவருடைய தெய்வீக மானிடத்தன்மையிலிருந்து, ஒரு மனிதனைப்போ லிருக்கிறபடியினுல், தேவர்கள் தாங்கள் ஆண்டவரிலிருக்கிறதாக சொல்லுகிறுர்கள். சிலர் அவருடைய சரீரத்திலிருப்பதாக சொல்லுகிறுர்கள்; அப்படி சொல்லுவதினுல், அவருடைய அன்பின் நன்மையில் தாங்கள் இருப்பதாக அவர்கள் எண்ணுகிறுர்கள். இதையே, ஆண்டவர் தாமே அடியில் குறித்தபடி சொல்லி கற்பிக்கிறுர்:— "என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன்; கொடியானது திராட்க்ஷச் செடியில் நிலைத்திராவிட்டால்,

அது தானாய் கனிகொடுக்கமாட்டாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்திராவிட்டால், கனிகொடுக்கமாட்டீர்கள்...........என்னை யல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது.....என்னுடைய அன்பிலே நிலைத்திருங்கள்........நீங்களும் என்கற்பனைகளைக் கைக் கொண்டிருந்தால், என்னுடைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள்" (யோவா. xv, 4-10).

**82.** சுவர்க்கங்களில் தெய்வத்தை குறித்த அவ்வித உணர்ச்சி இருக்கிறபடியினால், ஒரு மானிட உருவத்திலிருப்பதுபோல் கடவுளைக்குறித்து நினைத்தல், சுவர்க்கத்திலிருந்து எவ்வித பெருக்கையும் ஏற்றுக்கொள்ளுகிற ஒவ்வொரு மனிதனிடத்திலும் நடப்பட்டிருக்கிறது. பூர்வீக ஜனங்கள் இம்மாதிரி நினைத்தார்கள்; திருச்சபையைச் சேர்ந்தவர்களும் சேராதவர்களுமாகிய இக்காலத்திய ஜனங்கள் கூட இம்மாதிரி நினைக்கிறார்கள். பேதைமையானவர்கள் அவரை சிந்தனையில், பிரகாசத்தினால் சூழப்பட்ட பூர்வீக ஒன்றாக பார்க்கிறார்கள். ஆனால் இந்த உட்பார்வை, தங்கள் சொந்த அறிவினாலும், கெட்ட வாழ்வினாலும் சுவர்க்கத்திலிருந்துவரும் உட்பெருக்கை தள்ளிவிட்டவர்கள் எல்லாரிடத்திலும் அழிக்கப்பட்டிருக்கிறது. தங்கள் சொந்த அறிவினால் அதை அழித்தவர்கள், கண்களுக்கு புலப்படாத ஒரு கடவுளை விரும்புகிறார்கள்; தீமையான வாழ்வினால், அதை அழித்தவர்கள், எந்த கடவுளையும் விரும்புகிறதில்லை. தங்களுக்கு உட்பார்வையில்லாதபடியினால், இந்த இருவகையாருக்கும் அவ்வித உட்பார்வை இருக்கிறதாக தெரியாது; என்றாலும், மனிதன் சுவர்க்கத்திற்கு பிறந்திருக்கிறபடியினாலும், எவனும் தெய்வத்தைக் குறித்த ஒரு அபிப்பிராயமில்லாமல் சுவர்க்கத்தில் பிறவேசிக்காததினாலும், மனிதனுக்குள் சுவர்க்கத்திலிருந்து முதன்மையாய் பாய்கிறது, சுவர்க்கலோகத்து தெய்வமே.

**83.** இந்த காரணத்துக்காக, சுவர்க்கத்தைப்பற்றி அதாவது சுவர்க்கம் உண்டாக்கப்பட்ட தெய்வத்தைப்பற்றி, யாதொரு அபிப்பிராயமுமில்லாதவன், சுவர்க்கத்து முதல் வாயற்படிக்கு தூக்கப்பட மாட்டான். அப்பேர்பட்டவன், சுவர்க்கத்திற்கு சமீபத்தில் போன உடனே, ஒரு எதிர்ப்பையும் ஒருபலத்த தள்ளுதலையும் காண்கிறான்; ஏனென்றால், அவனிடத்தில் சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளவேண்டிய உள்ளானவைகள், சுவர்க்கத்தின் வடிவத்தில் இல்லாமல், அதினால் மூடப்பட்டிருக்கிறது; அவன் சுவர்க்கத்துக்கு சமீபத்தில்

போகும்போது இன்னும் அதிக நெருக்கமாய் மூடப்படுகின்றன திருச்சபைக்குள்ளிருந்துகொண்டு, ஆண்டவரை மறக்கிறவர்களுடையவும், சோசினியர்களைப்போல் அவருடைய தேய்வத் தன்மையை மறக்கிறவர்களுடையவும் கதி அம்மாதிரியிருக்கிறது. ஆனால், திருச்சபைக்கு வெளியே பிறந்து, வேதம் இல்லாதபடியினால், ஆண்டவரைப் பற்றி ஒன்றும் தெரியாதவர்களுடைய கதி என்னவென்பதைப் பற்றி பின்வரும் பக்கங்களில் காணலாம்.

**84**. பூர்வகாலத்து மனிதர்களுக்கு தெய்வத்தைக் குறித்த அபிப்பிராயம் மானிடரூபமாயிருந்ததென்பது, ஆபிரகாமுக்கும், லாட்டுக்கும், ஜோசுவாவிற்கும், கிடியனுக்கும், மானோவாவுக்கும், அவருடைய மனைவிக்கும் மற்றவர்களுக்கும் அருள் செய்த தெய்வ காட்சியிலிருந்து விசதமாகிறது. இவர்கள் கடவுளை மனிதனாக பார்த்தார்கள்; அப்படியிருந்தாலும், பரமண்டலத்துக்கும் பூமிக்கும் அவரை கடவுளென்றும், ஏகோவா என்றும் பெயரிட்டு, பிரபஞ்சத்துக்கு கடவுளென்று அவரை ஆராதித்தார்கள். ஆபிரகாம் என்பவரால் பார்க்கப்பட்டது, ஆண்டவர்தான் என்று, அவரே யோவானில் (viii. 56) கற்பிக்கிறார்; மற்றவர்களால் பார்க்கப்பட்டது, அவர்தான் என்பது அவர் கூறிய அடியில் கண்ட வார்த்தைகளால் விசதமாகிறது:—

"தேவனை ஒருவனும் ஒருக்காலும் கண்டதில்லை. நீங்கள் ஒருக்காலும் அவர் சத்தத்தைக் கேட்டதுமில்லை, அவர் ரூபத்தைக் கண்டதுமில்லை" (யோவா. i. 18; v. 37.)

**85**. ஆனால் கடவுள் மனிதன் என்பது, புறம்பான மனிதனுடைய ஐம்புலனுக்கு அடுத்த அபிப்பிராயங்களிலிருந்து எல்லாவற்றையும் தீர்மானிக்கிறவர்களால் கஷ்டத்துடன் கிரகிக்க படக்கூடும். ஏனென்றால், இந்திரிய ஞானத்தைக் கொண்டு தீர்மானிக்கிறவன் உலகத்திலிருந்தும், அதிலிருக்கும் பொருள்களிலிருந்தும் தவிர வேறு விதமாய் தெய்வத்தை நினைக்க முடியாது; ஆகையினால், அவன் தெய்வீகமானவனும் சூக்குமமானவனுமாகிய மனிதனைப் பற்றி, ஜடமானவனென்பதையும் பிரகுருதி சம்மந்தமானவனென்பதையும் தவிர, வேறு விதமாய் நினைக்க முடியாது: ஆகையினால், கடவுள் மனிதனாயிருந்தால், பிரபஞ்சமிருக்கும் அளவு இருப்பார் என்றும், அவர் சுவர்க்கத்தையும் பூமியையும் அரசாட்சி செய்தால், உலகத்து அரசர்கள் செய்வது

போல, அநேக உத்தியோகஸ்தர்கள் மூலமாய் அப்படி செய்வார் என்றும் அவன் தீர்மானிக்கிறான். சுவர்க்கத்தில் உலகத்தில்போல், இடத்தின் விரிவு இல்லை யென்று அவனுக்கு சொல்லப்பட்டால், அவன் அதை கிரகிக்கமாட்டான்; ஏனென்றால், பிரகுருதியிலிருந்தும், அதன் வெளிச்சத்திலிருந்தும் மாத்திரம் நினைக்கிறவன். தன் கண்கள் முன்பாக இருக்கிறது போல, விரிவைமாத்திரம் நினைக்கிறான்; ஆனால் சுவர்க்கத்தைப் பற்றி இவ்விதமாக நினைத்தல், ஒரு பெரிய தப்பிதமாயிருக்கிறது: உலகத்தில் விரிவு என்பது எல்லையுள்ளதாயும், ஆகையினால் அளக்கக் கூடியதாயுமிருப்பதினால், சுவர்க்கத்தில் விரிவு என்பது உலகத்தில் இருக்கும் விரிவைப்போலில்லை; ஆனால், சுவர்க்கத்தில் விரிவு எல்லையுள்ளதல்ல; ஆகையினால், அளக்கப்படக்கூடாது. சூக்கும லோகத்திலிருக்கும் கால இடவரையைப் பற்றி நாம் பேசும்போது சுவர்க்கத்தின் விரிவைப்பற்றி அதிகம் சொல்லுவோம்.

இன்னமும், ஒவ்வொருவனுக்கும் கண்ணின் பார்வை எவ்வளவு தூரம் செல்லுகிறது என்று அதாவது அவ்வளவு தூரத்திலுள்ள சூரியன் வரையிலும், நட்சத்திரங்கள் வரையிலும் செல்லுகிறதென்று தெரியும். மிகவும் ஆழ்ந்து நினைக்கிறவன்கூட சிந்தனைக்குச் சேர்ந்த உட்பார்வை, இன்னும் அதிக தூரம் செல்லுமென்றும், அதனால், இன்னும் அதிக உட்பார்வை, இன்னும் அதிக தூரம் விரியுமென்றும், தெரிந்துக்கொண்டேகூட இருக்கிறான். அப்படியானால் எல்லாவற்றிற்கும் மிகவும் அந்தரங்கமாகவும், உயர்ந்ததாகவுமிருக்கும், தெய்வ பார்வைக்கு எட்டாதது எது இருக்கும்? சிந்தனைகளுக்கு அவ்வளவு பரிமாணமிருக்கிறபடியினால், சுவர்க்கத்து எல்லா பொருள்களும், இவ்விதமாக சுவர்க்கத்தை உண்டாக்குகிறதும், அதை நிரப்புகிறதுமான தெய்வத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும், முன் அத்தியாயங்களில் காண்பித்தபடி, அங்கே யிருக்கும் ஒவ்வொருவருக்கும் பங்கிட்டு கொடுக்கப்படுகின்றன.

**86**. கடவுளைப்பற்றி நினைக்கும்போது, கண்ணுக்கு புலப்படாததை, அதாவது எந்த உருவத்திலும் கிரகிக்கக்கூடாததை நினைக்கிற மனிதர்கள், தாங்களே புத்திசாலிகளென்றும், வேறு விதமாய் நினைப்பவர்களை, உண்மை எதிரிடையா யிருக்கையில், புத்திசாலிகளல்லவென்றும் பேதைமையானவர்களென்றும், நினைப்

பதைக் குறித்து, சுவர்க்கத்து குடிகள் ஆச்சரியப்பட்டார்கள். தாங்களே புத்திசாலிகளென்று, இவ்விதமாக நம்புகிறவர்கள், தங்களில் சிலர் தங்கள் கண்கள் முன்பாக இருக்கும் பிரகுருதியை யும், மற்றவர்கள் பிரகுருதியின் கண்களுக்கு புலப்படாததையும் இவ்விதமாக பிரகுருதியை கடவுளாக நினைக்கிறதில்லையா என்றும், கடவுள் என்னவென்றும், தேவன் என்னவென்றும், அரூபி என்னவென்றும், இறந்த பிறகு வாழும் ஆன்மா என்னவென்றும், மனிதனில் சுவர்க்கத்து வாழ்வு என்னவென்றும், புத்தியை அமைக்கிற இன்னும் அநேக விஷயங்கள் என்னவென்றும் தெரி யாதபடி, அவ்வளவு குருட்டுத்தனமாய் தாங்கள் இல்லையா என்றும், தாங்களே யோசித்து பார்க்கட்டுமென்று அவர்கள் சொல்லுகிறார் கள்; என்றாலும், பேதைமையானவர்களென்று அவர்கள் சொல் லப்பட்டவர்கள், இந்த விஷயங்களைப்பற்றி தங்களுடைய சொந்த வழியில் தெரிந்திருக்கிறார்கள். கடவுளைப்பற்றி அவர் மானிட உருவில் ஒரு தெய்வமென்றும், தேவனைப்பற்றி, அவன் பரமண் டலத்து மனிதனென்றும், இறந்த பிறகு வாழ்கிற தங்கள் சொந்த ஆன்மாவைப்பற்றி, அது ஒரு தேவனைப்போலிருக்கிறதென்றும், மனிதனிடத்தில் சுவர்க்கத்தின் வாழ்வைப்பற்றி, தெய்வ கட்டளை கள்படி வாழ்தலென்றும், அவர்கள் அபிப்பிராயம் கொள்ளுகிறார் கள். ஆகையினால், இவர்களை தேவர்கள் புத்திசாலிகள் என்றும், சுவர்க்கத்துக்கு பாத்திரர்களென்றும், மற்றவர்களை எதிரிடையாய் புத்திசாலிகள் அல்ல என்றும் சொல்லுகிறார்கள்.

# XII

## மனிதனிடமிருக்கும் எல்லா பொருள்களுடனும், சுவர்க்கத்து எல்லா பொருள்களுக்கும் ஒரு அன்னுவய சம்பந்தமிருக்கிறது.

**87.** அன்னுவயம் என்பது என்னவென்று தற்காலத்தில் யாருக்கும் தெரியாது. இந்த அஞ்ஞானம் அநேக காரணங்களால் உண்டாகிறது; ஆனால், மனிதனானவன் தன்னையும் உலகத்தையும் நேசிப்பதினால், சுவர்க்கத்திலிருந்து தானே நீக்கிக்கொண்டானென்பது முக்கியமான காரணம். ஏனென்றால், தன்னையும் உலகத்தையுமே மற்ற எல்லாவற்றிற்கும் மேலாய் தானே நேசிக்கிறவன், உலக பொருள்கள் புறம்பான ஐம்புலன்களை உவப்பாக்கி, அவனுடைய இயற்கையான ஆசைகளை இதமாக்குகிறபடியினாலும், அந்தக் கரணங்களை உவப்பாக்கி, ஆன்மாவிற்கு ஆனந்தத்தைத் தருகிற பரமார்த்த விஷயங்களைப்பற்றி கொஞ்சங்கூட கவனிக்காதபடியினாலும், உலகப் பொருள்களை மாத்திரம் மதிக்கிறான். ஆகையால், அப்பேர்ப்பட்டவர்கள் பரமார்த்த விஷயங்களை, அவைகள் நினைக்கும் பொருள்களாக இருக்க, அதிக உயரமாயிருக்கிறதென்று சொல்லி, தள்ளிவிடுகிறார்கள். பூர்வீக ஜனங்கள் விஷயத்தில் விஷயம் வேறுமாதிரி; ஏனென்றால், அவர்களுக்கு, அன்னுவய ஞானம் எல்லா ஞானங்களைவிட முக்கியமானதாயிருந்தது. அதன் மூலமாய்கூட விவேகத்தையும் ஞானத்தையும் அவர்கள் சம்பாதித்தார்கள்; மேலும் அதன் மூலமாக திருச்சபையைச் சேர்ந்தவர்கள், சுவர்க்கத்துடன் சம்பந்தம் வைத்திருந்தார்கள். ஏனென்றால், அன்னுவய ஞானமென்பது, தேவர்களுக்கு அடுத்த ஞானமாயிருக்கிறது. பரமலோகத்தைச் சேர்ந்த மிகவும் பூர்வீக ஜனங்கள், தேவர்களைப்போல் அன்னுவய சம்பந்தத்தினாலேயே நினைத்தார்கள். இந்த காரணத்துக்காக, அவர்கள் தேவர்களோடுகூட பேசினார்கள்; ஆண்டவரேகூட அவர்களால் பார்க்கப்பட்டு, அவரும் அவர்களுக்கு கற்பித்தார். ஆனால் அன்னுவயம் என்பது என்னவென்று தெரியாதபடிக்கு அந்த ஞானம் அவ்வளவு முழுமையும் போய்விட்டது.

**88.** அன்னுவயம் என்பது என்னவென்று தெரியாமல் போனால், பரமார்த்த உலகத்தைப் பற்றியாவது, ஜட உலகத்திற்

குள் செல்லும் அதன் உட்பெருக்கைப் பற்றியாவது, ஜடத்தை நோக்கும்போது உறவாய் சூக்குமம் என்னவென்றுவது, ஆன்மா என்று சொல்லப்பட்ட மனிதனுடைய அசரீரியைப் பற்றியாவது, அது சரீரத்தில் தொழில்படும் விதத்தைப் பற்றியாவது, இறந்த பிறகு மனிதன் நிலைமையைப் பற்றியாவது, தெளிவான ஞானம் இருக்க முடியாதபடியினுல், அன்னுவய மென்பது என்னவென்றும், அதன் சுபாவம் என்னவென்றும் விவரிப்பது ஆவசியகமாயிருக்கிறது. இந்த வழியினுல், பின் வருவதற்கு வழி ஏற்படும்.

**89.** ஆகவே, அன்னுவயம் என்பது என்னவென்று சொல்லப்படவேண்டும். ஸ்தூல லோகம் பொதுவாக அல்லாமல், அதன் ஒவ்வொரு சிறப்பிலும், முழு ஸ்தூல லோகமும் சூக்கும உலகத்துடன் அன்னுவயப்படுகிறது. ஆகையினுல், சூக்கும லோகத்திலிருந்து வரப்பட்ட எந்த ஸ்தூல லோகப் பொருளும் அதன் அன்னுவய சம்பந்தமுள்ள பொருள் என்று சொல்லப்படுகிறது. ஒரு காரியமானது அதைக் காரியப்படுத்துகிற காரணத்திலிருந்து வருகிறதுபோல், ஸ்தூல லோகமானது சூக்கும லோகத்திலிருந்து வந்து ஜீவிக்கிறதென்று தெரிந்திருக்க வேண்டியது. ஸ்தூல லோகம் என்பதினுல், சூரியனுக்கு கீழிருந்து, அதனிடமிருந்து சூட்டையும் வெளிச்சத்தையும் பெற்றுக் கொள்வதெல்லாம் கருதப்படுகிறது; அதிலிருந்து ஜீவியத்தை அடையும் எல்லா பொருள்களும் அந்த உலகத்துக்கு சேர்ந்தவைகள். ஆனுல் சூக்கும உலகுதான் சுவர்க்கம்; அந்த உலகத்துக்கு சேர்ந்த எல்லா பொருள்களும், சுவர்க்கங்களிலிருக்கிற எல்லா பொருள்களாயிருக்கின்றன.

**90.** மிகவும் பெரியதின் பிரதிமையை அனுசரித்து (மேலே செ. 57-ஐப் பார்க்கவும்) சின்னஞ் சிறிய உருவத்தில் மனிதன் ஒரு சுவர்க்கமாகவும், ஒரு உலகமாகவும்கூட இருப்பதினுல், அவனில் ஒரு சூக்கும லோகமும், ஒரு ஸ்தூல லோகமும் இருக்கின்றன. அவனுடைய மனதுக்கு உரித்தாய், புத்திக்கும் சித்தத்திற்கும் சம்பந்தப்பட்டிருக்கிற உள்ளானவைகள் அவனுடைய சூக்கும லோகமாகின்றன. ஆனுல், அவனுடைய சரீரத்துக்கு உரித்தாகி, அதன் பஞ்சேந்திரியங்களுக்கும் செயல்களுக்கும் சம்பந்தப்பட்ட புறம்பானவைகள் அவனுடைய ஸ்தூலலோகமாகின்றன. ஆதலால், அவனுடைய சூக்கும லோகத்திலிருந்து அதாவது அவனுடைய

மனதிலிருந்தும், அதன் புத்தியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் உண்டாகிற அவனுடைய ஸ்தூல லோகத்தில் அதாவது அவனுடைய சரீரத்திலும் அதன் பஞ்சேந்திரியங்களிலுமிருக்கும் ஒவ்வொரு பொருளும், அன்னுவய சம்பந்தமுடையவைகளென்று சொல்லப்படும்.

**91.** அன்னுவயத்தின் சுபாவம் மானிட முகத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். கள்ளம் பண்ண கற்பிக்கப்படாத ஒரு முகத்தில், மனதின் எல்லா ஆசைகளுமே ஸ்தூல உருவத்தில் அவைகள் இருக்கும் அடையாளத்தில், கண்களுக்கு புலப்படும்படியாக பிரத்தியக்ஷமாக்குகின்றன. ஆகையினுல் முகமானது மனதின் குறி என்று சொல்லப்படுகிறது. இவ்விதமாக, மனிதனுடைய சூக்குமலோகம், அவனுடைய ஸ்தூலலோகத்தில் புலப்படுகிறது. அதேமாதிரியாக, அவனுடைய புத்தியின் அபிப்பிராயங்கள் அவனுடைய பேச்சிலும் அவனுடைய சித்தத்தின் தீர்மானங்கள், அவன் சரீரத்தின் அபிநயங்களிலும் தாங்களே வெளிப்படுகின்றன. ஆகையால் முகத்திலாவது, பேச்சிலாவது, அபிநயங்களிலாவது இவைகளில் எதிலிருந்தாவது சரீரத்தில் செய்யப்படும் எல்லா பொருள்களும், அன்னுவய சம்பந்தபட்டவைகள் என்று சொல்லப்படுகின்றன.

**92.** இந்த நிரீட்சணங்களால் அந்தரங்கமான மனிதன் என்னவென்றும், புறம்பான மனிதன் என்னவென்றும் கூட அறிந்து கொள்ளலாம்; ஏனென்ருல், அந்தரங்கமானது சூக்குமமனிதனென்றும், புறம்பானது ஸ்தூல மனிதனென்றும் சொல்லப்படுகிறது. சுவர்க்கம் உலகத்திலிருந்து வேருயிருப்பதுபோல், ஒன்று மற்ருென்றிலிருந்து வேருனதாயிருக்கிறது. புறம்பான மனிதன் அல்லது ஸ்தூலமனிதனில் செய்யப்படுகிறதும் நிலைக்கிறதுமாகிய எல்லா பொருள்களும், அந்தரங்கமான மனிதன் அல்லது சூக்குமமான மனிதனிலிருந்து செய்யப்படுகிறதும் நிலைக்கிறதுமாயிருக்கிறது.

**93.** புறம்பான அல்லது ஸ்தூல மனிதனுடன் அந்தரங்கமான அல்லது சூக்கும மனிதனுடைய அன்னுவயத்தைப்பற்றி இவ்வளவு சொல்லப்பட்டது. இப்பொழுது நாம், மனிதனுடைய ஒவ்வொரு பாகத்துடனும் முழு சுவர்க்கத்தின் அன்னுவயத்தைப் பற்றி பேசுவோம்.

**94.** முழு சுவர்க்கமும் ஒரு மனிதனைப்போ லிருக்கிறதென்றும், அது ஒரு மனிதன் உருவத்திலிருக்கிறதென்றும், ஆகையினால், அது மகா மனிதனென்று சொல்லப்படுகிறதென்றும் காண்பிக்கப் பட்டிருக்கிறது சுவர்க்கம் உண்டாக்கப்பட்டிருக்கிற தேவர்கள் கூட்டங்கள், மனிதனிலிருக்கும் அவயவங்கள் போலவும், அங்கங்கள் போலவும், ஆந்திரீகங்கள் போலவும் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறதென்றுகூட காண்பிக்கப்பட்டிருக்கிறது; ஆகையினால், சிலர் தலையிலும், சிலர் மார்பிலும், சிலர் புயங்களிலும், சிலர் அந்த அவயவங்களில் ஒவ்வொரு குறிப்பான பாகங்களிலும் இருக்கிறார்கள் (மேலே. செ. 59-72 பார்க்கவும்). ஆதலால், சுவர்க்கத்தில் எந்த அவயவத்திலிருக்கிற கூட்டங்களும், மனிதனில் அதே அவயவத்திற்கு அன்னுவயப்படுகிறது; உதாரணமாக, தலையிலிருக்கும் கூட்டங்கள், மனிதனில் தலைக்கு அன்னுவயப்படுகிறது. மார்பிலிருப்பவைகள் மனிதனிலிருக்கும் மார்புக்கு ஒத்துப்போகின்றன; புயங்களிலிருப்பவைகள் மனிதனில் புயங்களுக்கு ஒத்துப்போகின்றன. இம்மாதிரியே மற்றவைகள் விஷயத்திலும் இருக்கின்றன. மனிதன் சுவர்க்கத்தைவிட வேறு எந்த மூலத்திலும் ஜீவிக்காதபடியினால், அவன் இந்த அன்னுவயத்தினால்தான் ஜீவிக்கிறான்.

**95.** சுவர்க்கமானது, ஒன்று பாரமார்த்த இராச்சியமென்றும், மற்றது ஆன்மார்த்த இராச்சியமென்றும், இரண்டு இராச்சியங்களாக வகையறுக்கப்படுகின்றனவென்று, ஒரு தனித்த அத்தியாயத்தில் முன்னமே காண்பிக்கப்பட்டிருக்கிறது. பாரமார்த்த இராச்சியம், பொதுவாக இருதயத்திற்கும், முழுசரீரத்தில் இருதயத்திற்கு சேர்ந்த எல்லாவற்றிற்கும் ஒத்திருக்கிறது; ஆத்துமார்த்த இராச்சியம் சுவாசாசயங்களுக்கும் முழு சரீரத்தில் அவைகளுக்கு சேர்ந்த எல்லாவற்றிற்கும் ஒத்துப்போகிறது. இருதயமும் சுவாசாசயங்களும், நிஜமாக மனிதனில் இரண்டு இராச்சியங்களாகின்றன. இருதயமானது, அவற்றில் சுத்த இரத்தக் குழாய்களாலும் அசுத்த ரத்தக் குழாய்களாலும், சுவாசாசயங்கள் நரம்புசம்பந்தமானதும் தற்போக்கானதுமான நார்களாலும் அரசாட்சி செய்கின்றன. அந்த இரண்டும் ஒவ்வொரு முயற்சியிலும் செய்கையிலும் சேருகின்றன. ஒவ்வொரு மனிதனிலும், அவனுடைய சூக்கும மனிதன் என்று சொல்லப்படுகிற அவனுடைய சூக்கும உலகத்தில்கூட, இரண்டு இராச்சியங்கள் இருக்கின்றன. ஒன்று சித்தத்தைச் சேர்ந்தது, மற்றது புத்தி

மைச் சேர்ந்தது. சித்தமானது நன்மைக்காகக்கொள்ளும் ஆசைகளினாலும், புத்தியானது, உண்மையினிடத்து கொள்ளும் ஆசைகளினாலும் அரசாட்சிசெய்கின்றன. இந்த இராச்சியங்கள்கூட சரீரத்தில் இருதயத்தினுடையவும் சுவாசாசயங்களுடையவும் இராச்சியங்களுடன் ஒத்துப்போகின்றன. சுவர்க்கங்களிலும்விஷயம் அதைப் போன்றதே. பரமார்த்த இராச்சியம் சுவர்க்கத்தினுடைய சித்தத்தின் பாகமாயிருக்கிறது, அதில் அன்பின் நன்மை அரசாளுகிறது; ஆன்மார்த்த இராச்சியம் சுவர்க்கத்தினுடைய புத்தி பாகமாயிருக்கிறது, அதில் உண்மை அரசாளுகிறது. இவைகள்தான் மனிதனில் இருதயத்தினுடையவும் சுவாசாசயங்களுடையவும் தொழிற்பாடுகளுக்கு அன்னுவயப்படுகிறவைகள். இந்த அன்னுவயத்தால் தான் வேதத்தில் இருதயமென்பது சித்தத்தையும், அன்பின் நன்மையையும்கூட அருத்தம் கொள்ளப்படுகிறது; மேலும் சுவாசாசயங்களின் சுவாசம் புத்தியையும், விசுவாசத்தின் உண்மையையும் கருதுகிறது. அதனால்கூட, ஆசைகள் இருதயத்தில் இல்லாவிட்டாலும், அதிலிருந்து உற்பத்தியாகாவிட்டாலும் அவைகள் அதற்கு ஆரோபிக்கப்படுகின்றன.

**96**. இருதயத்துடனும் சுவாசாசயத்துடனும் இருக்கும் சுவர்க்கத்து இரண்டு இராச்சியங்களின் அன்னுவயம் என்பது மனிதனுடன் சுவர்க்கத்து பொது அன்னுவயமாயிருக்கிறது; ஆனால் அவனுடைய அவயவங்கள், அங்கங்கள் ஆந்திரீகங்களாகிய ஒவ்வொன்றோடும், ஒரு குறைந்த பொதுவான அன்னுவயமிருக்கிறது; அதன் சுபாவத்தை இப்பொழுது விவரிப்போம். சுவர்க்கமாயிருக்கிற மகா மனிதனில் சிரசில் இருக்கப்பட்டவர்கள், ஒவ்வொரு நன்மையிலும் மற்றவர்களைவிட மேற்பட்டிருக்கிறார்கள். ஏனென்றால், அவர்கள், அன்பிலும், சமாதானத்திலும், மனப்புனிதத்திலும், ஞானத்திலும், விவேகத்திலும், அவைகளிலிருந்து சந்தோஷத்திலும் சுகத்திலும் இருக்கிறார்கள். இவைகள் மனிதனுடைய சிரசிலும், சிரசுக்கு சேர்ந்த பொருள்களிலும் பாய்ந்து அவைகளுடன் அன்னுவயப்படுகின்றன. மகா மனிதன் அல்லது சுவர்க்கத்தில், மார்பில் இருக்கப்பட்டவர்கள், தருமத்தினுடையவும் விசுவாசத்தினுடையவும் நன்மையில் இருந்து, மனிதனுடைய மார்பில் பாய்ந்து அதனுடன் அன்னுவயப்படுகிறார்கள். மகா மனிதன் அல்லது சுவர்க்கத்தில், அரைகளிலும், ஜெனனத்துக்கு நியமிக்கப்பட்ட அங்

கங்களிலு மிருக்கப்பட்டவர்கள், விவாக அன்பிலிருக்கிறார்கள்; பாதங்களிலிருக்கப்பட்டவர்கள், ஸ்தூல சூக்கும நன்மை என்று சொல்லப்பட்ட, சுவர்க்கத்து அதிக தாழ்ந்த நன்மையிலிருக்கிறார்கள். புயங்களிலும், கைகளிலு மிருக்கப்பட்டவர்கள், நன்மையிலிருந்துவந்த உண்மையின் வசத்திலிருக்கிறார்கள்; கண்களிலிருக்கப்பட்டவர்கள் புத்தியிலிருக்கிறார்கள்; காதுகளில் இருக்கப்பட்டவர்கள் கருத்திலும் கீழ்ப்படிதலிலுமிருக்கிறார்கள்; நாசித்துவாரங்களிலிருக்கப்பட்டவர்கள், உணர்ச்சியிலிருக்கிறார்கள்; வாயிலும் நாவிலுமிருக்கப்பட்டவர்கள்,புத்தியிலிருந்தும் உணர்ச்சியிலிருந்தும் வரும் பேச்சிலிருக்கிறார்கள்; புக்கத்தில் இருக்கப்பட்டவர்கள், பரிசோதித்தும், பிரித்தும் திருத்துகிற உண்மையிலிருக்கிறார்கள். பித்தாசயத்திலும், கணையத்திலும், மண்ணீரலிலும் இருக்கப்பட்டவர்கள், நன்மையினுடையவும் உண்மையினுடைய பல சுத்திகரிப்புகளில் சாமார்த்தியமுள்ளவர்களா யிருக்கிறார்கள். மற்றவர்கள் விஷயத்திலும் அப்படியே. இவைகள் மனிதனுடைய அம்மாதிரியான பாகங்களில் பாய்ந்து, அவைகளுடன் அன்னுவயப்படுகின்றன. சுவர்க்கத்தின் உட்பெருக்கு, அவயவங்களின் தொழிற்பாடுகளிலும், உபயோகங்களிலும் செல்லுகிறது; சூக்குமலோகத்திலிருந்து வரும் உபயோகங்கள், ஸ்தூல லோகத்திலிருக்கப்பட்ட பொருள்களினால் ஒரு உருவத்தை தரித்துகொண்டு இவ்விதமாக காரியங்களில் திரட்டப்படுகின்றன. இதிலிருந்துதான் அன்னுவயம் உண்டாகிறது.

**97**. அதே காரணத்துக்காகத்தான், இந்த அவயவங்களும், அங்கங்களும், ஆந்திரீகங்களும் வேதத்தில் அதைப்போன்ற அருத்தம் கொள்ளுகின்றன; ஏனென்றால், அங்கே ஒவ்வொரு பொருளும் அன்னுவயங்களை அனுசரித்து ஒரு அருத்தம் கொள்ளுகின்றது. இவ்விதமாக தலை என்பதினால், புத்தியும் ஞானமும், மார்பு என்பதினால் தருமமும், இடுப்புகள் என்பதினால் விவாக அன்பும், புயங்கள் கைகள் என்பவைகளால் உண்மையின் சக்தியும், பாதங்கள் என்பதினால் ஸ்தூலமானதும், கண்கள் என்பதினால், புத்தியும், நாசித்துவாரங்கள் என்பதினால் உணர்ச்சியும், காதுகளினால், கீழ்படிதலும், புக்கங்கள் என்பதினால், உண்மையின் சுத்திகரிப்பும், இம்மாதிரியே மற்றவைகளுக்கும் அருத்தம் கொள்ளப்படுகிறது. அதனால்தான், மனிதனுடைய சாதாரண பேச்சில் புத்தியுள்ளவனாகவும் ஞானமுள்ளவனாகவும் இருக்கப்

பட்ட ஒருவனைப்பற்றி, அவனுக்கு ஒரு தலை யிருக்கிறதாகவும், தருமம் நிறைந்தவனை பிராண சிநேகிதன் என்றும், உணர்ச்சியில் மேல்பட்டவனை, கூர்மையாக கந்தமறியப்பட்டவனென்றும், புத்தியில் பேர்பெற்றவனை கூர்மையான பார்வையுள்ளவனென்றும், ஒரு மிக பலமான மனிதனை அவனுக்கு நீண்டகைகள் இருக்கிறதென்றும், அன்பிலிருந்து இச்சிப்பவனை, அது இருதயத்திலிருந்து வருகிறதென்றும், சொல்லப்படுகிறது. மனிதனுடைய பேச்சுகளில் இவைகளும், இன்னும் அநேக இதர வசனங்களும், அன்னுவயத்திலிருந்து வருகின்றன; ஏனென்றால், இவ்வித சொற்கள், மனிதனுக்கு தெரியாவிட்டாலும், சூக்கும உலகத்திலிருந்து வருகின்றன.

**98**. மனிதனுடைய எல்லா பொருள்களோடும் சுவர்க்கத்தின் எல்லா பொருள்களின் அவ்வித அன்னுவயமிருக்கிறதென்று அதிக அனுபவத்தினால், நிஜமாகவே, சந்தேகமில்லாமலிருக்கப்பட்டதும், தானே பிரத்தியக்ஷமாகப்பட்டதுமான ஒரு பொருளைப்போல் அதைப்பற்றி எனக்கு அறிஉறுத்தும்படியாக அவ்வளவு அனுபவத்தினால், எனக்கு தெளிவிக்கப்பட்டது. ஆனால், இந்த அனுபோகம் எல்லாம் இங்கே விவரிப்பது அனவசியம்; மேலும் அது திரளாயிருப்பதினால் சரியாகவுமிருக்காது. அன்னுவயங்களும் ஒப்பனைகளும்,ஸ்தூல உலகத்திற்குள்,சூக்குமஉலகத்து உட்பெருக்குகளும், ஜீவ சரீர உறவுகளும் சொல்லப்பட்ட தெய்வலோக இரகசியங்கள் என்னும் நூலில் அவைகள் சொல்லப்பட்டிருப்பதை பார்க்கப்படலாம்.

**99**. ஆனால், சரீரம் விஷயத்தில் மனிதனுக்கு சேர்ந்த எல்லா பொருள்களும், சுவர்க்கத்துக்கு சேர்ந்த எல்லா பொருள்களுடனும் அன்னுவயப்பட்டாலும், மனிதனானவன், அவனுடைய புறம்பான உருவத்தில் சுவர்க்கத்தின் பிரதிமையல்லாமல், அவனுடைய உள்ளான உருவத்தில் அப்படியிருக்கிறான். ஏனென்றால், மனிதனுடைய உள்ளானவைகள் சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளுகின்றன; ஆனால், அவனுடைய புறம்பானவைகள் உலகத்தை ஏற்றுக்கொள்ளுகின்றன. ஆகையினால், அவனுடைய உள்ளானவைகள் எவ்வளவு தூரம் சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளுகிறதோ, அவ்வளவு தூரம் அவைகள் சம்பந்தப்பட்டவரையில், மனிதனானவன், மிகவும் பெரியதின் பிரதிமையில், சின்னஞ்சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமாயிருக்கிறான்; ஆனால், அவனுடைய உள்ளானவைகள் எ

வளவுதூரம் சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளுகிறதில்லையோ, அவ்வளவுதூரம் அவன் சுவர்க்கமுமல்ல, மிகவும் பெரியதின் பிரதிமையும் அல்ல. அப்படியிருந்தாலும் உலகத்தை ஏற்றுக்கொள்ளுகிற அவனுடைய புறம்பானவைகள், உலகத்தின் ஒழுங்கை அனுசரித்து ஒரு உருவத்திலும், இவ்விதமாக வேறுபடுகிற அழகிலும் இருக்கலாம். ஏனென்றால், சரீரத்துக்கு சேர்ந்த புறம்பான அழகு, பெற்றோர்களிடமிருந்தும், கருப்பாசயத்தில் உருவமைப்பதிலிருந்தும் வந்து, பின்னிட்டு உலகத்திலிருந்து வரும் ஒரு பொதுவான உட்பெருக்கினால் காப்பாற்றப்படுகிறது. அதனால்தான், மனிதனுடைய ஸ்தூல உருவம், அவனுடைய சூக்ஷும மனிதனுடைய உருவத்திலிருந்து மிகவும் வித்தியாசப்படுகிறது.

மனிதனுடைய ஆன்மாவின் உருவம் என்னவென்று எனக்கு அடிக்கடி காண்பிக்கப்பட்டது. பார்வைக்கு அழகாகவும், மனதைக் கவரும்படியாகவும் இருந்த சிலரில், அந்த ஆன்மா, சுவர்க்கத்தினுடையதல்லாமல், நரகத்தினுடைய பிரதிமை என்று சொல்லும்படியாக, அவ்வளவு அவலக்ஷணமாயும், கருப்பாகவும், குரூபமாகவும் காணப்பட்டது. ஆனால், புறம்பாய் அழகுள்ளவர்களாக இல்லாதசிலரில், ஆன்மாவானது அழகாய் உருவாக்கப்பட்டு, சுத்தமாகவும், தேவர்களைப்போலுமிருந்தது. மேலும், இறந்த பிறகு, மனிதனுடைய ஆன்மா, உலகத்தில் இருந்தபோது, அதை உடுத்த சரீரத்தில் அது இருந்ததுபோல் தோன்றுகிறது.

**100**. ஆனால், சுவர்க்கங்கள் ஒன்றுக்கொன்று அன்னுவயப்படுகிறபடியினால், அன்னுவயம் என்பது மனிதனுக்கு அப்பால் விசாலமாய் விரிகிறது. இரண்டாவது அல்லது மத்தியிலுள்ள சுவர்க்கம் மூன்றாவது அல்லது மிகவும் அந்தரங்கமானதுடனும், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த சுவர்க்கம் இரண்டாவது அல்லது மத்தியிலுள்ளதுடனும், அன்னுவயப்படுகின்றன. முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த சுவர்க்கம், மனிதனுடைய அவயவங்கள், அங்கங்கள், ஆந்திரீகங்கள் என்று சொல்லப்பட்ட அவனிலிருக்கும் சரீர உருவங்களோடுகூட அன்னுவயப்படுகிறது. இவ்விதமாக மனிதனுடைய ஸ்தூல பாகம் என்பது சுவர்க்கம் கடைசியாய் முடிகிறதும், தன் அஸ்திவாரத்தின் மேல் நிற்பதுபோல், அது நிற்கிறதுமானதாயிருக்கிறது. ஆனால், இந்த இரகசியம், வேறு இடத்தில் அதிக விரிவாய் சொல்லப்படும்.

**101**. அப்படி யிருந்தாலும், சுவர்க்கத்துடன் எல்லா அன்னுவயமும், முன் அத்தியாயங்களில் காண்பித்தபடி, சுவர்க்கம் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், அவரே சுவர்க்கமாயிருக்கிறபடியினாலும், அவருடைய தெய்வீக மானிட தன்மையுடனிருக்கிறதென்பது பத்திரமாய் குறிப்பிடப்பட வேண்டியது. ஏனென்றால், தெய்வீக மானிடத் தன்மை, சுவர்க்கத்தின் எல்லா பொருள்களிலும், அன்னுவயங்கள்படி உலகத்தின் எல்லா பொருள்களிலும் பாய்ந்தாலொழிய, தேவனாவது மனிதனாவது இருக்க மாட்டான். ஆகவே, ஆண்டவர், ஏன் மனிதனாக்கப்பட்டு, முதலிலிருந்து கடைசிவரையில் அவருடைய தெய்வீகத் தன்மையை மானிடத் தன்மையில் தரித்தார் என்பது மறுபடியும் வெளிப்படையாகிறது; ஏனென்றால் எல்லா சுவர்க்கங்களுக்கும் அஸ்திவாரமாயிருக்கிற மனிதன், ஒழுங்கு என்பதை கவிழ்த்து, அழித்துவிட்டதின் நிமித்தம், ஆண்டவர் வருகிறதற்கு முன், சுவர்க்கம் உண்டாக மூலமாயிருந்த தெய்வீக மானிடத் தன்மை, எல்லா பொருள்களையும் ஆதரிக்க சக்தியுள்ளதாயில்லை. ஆண்டவர் வருவதற்கு முன் இருந்த தெய்வீக மானிடத் தன்மையில் சுபாவமும் குணமும், அக்காலத்தில் சுவர்க்கத்தின் நிலைமையும் முன் அத்தியாயத்திற்கு சேர்க்கப்பட்ட சங்கிரகத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

**102**. எல்லா பொருள்களையும், தெய்வத்துக்கு ஒன்றுமல்லாமல், பிரகுருதிக்குசாட்டி, சுவர்க்கத்தின் அவ்வளவு அநேக ஆச்சரியங்கள் சேர்க்கப்பட்டிருக்கிற தங்கள் சரீரங்கள் பிரகுருதியினால் உருவாக்கப்படுகிறதென்றும், நம்புகிற மனிதர்கள் இருக்கிறார்களென்று கேழ்விப்படும்போது தேவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். மனிதர்கள் தங்கள் மனங்களை கொஞ்சம்மாத்திரம் தூக்கினால், அப்பேர்ப்பட்ட பொருள்கள் பிரகுருதியிலிருந்து அல்லாமல் தெய்வத்திலிருந்து வருகிறதென்று, அறிந்துகொள்ளக் கூடியதாயிருக்கையில், மனிதனுடைய பகுத்தறியும் சக்தி பிரகுருதியிலிருந்து வருகிறதாக நம்பப்படுகிறதென்றும், பிரகுருதியானது, சூக்குமமானதற்கு உடுத்தவும், ஒழுங்கின் கடைசியாளதில் ஒரு இணங்குகிற உருவத்தில் அதை காண்பிக்கவும், சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதென்றும், கேட்டு இன்னும் அதிகமாய் ஆச்சரியப்படுகிறார்கள். வெளிச்சத்தில் அல்லாமல், இருட்டில் பார்க்கிற ஆந்தைகளுக்கு அவ்வித மனிதர்களை அவர்கள் உவமிக்கிறார்கள்.

# XIII

## பூமியின் எல்லா பொருள்களோடும் சுவர்க்கத்தின் ஒரு அன்னுவயமிருக்கிறது.

**103**. அன்னுவயம் என்பது என்னவென்று முன் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், பிராணிகளின் சரீரத்தினுடைய எல்லா பொருள்களும் ஒவ்வொரு பொருளும் அன்னுவயங்கள் என்று அங்கே காண்பிக்கப்பட்டிருக்கிறது. பூமியின் எல்லா பொருள்களும், பொதுவாக பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களும் அன்னுவயங்களென்று, அடுத்து இப்பொழுது சொல்லவேண்டும்.

**104**. பூமிக்குச் சேர்ந்த எல்லா பொருள்களும், இராச்சியங்கள் என்று சொல்லப்பட்ட மூன்று வகைகளாக, அதாவது பிராணிவர்க்கமென்றும், விருக்ஷவர்க்கமென்றும், தாவரவர்க்கமென்றும், வகையறுக்கப்படுகின்றன. பிராணிவர்க்கத்தின் பொருள்கள், உயிரோடிருப்பதினால், அவைகள் முதல் தரமான அன்னுவயங்கள்; விருக்ஷவர்க்கத்தின் பொருள்கள், வளருகிற குணம் ஒன்று மாத்திரம் இருப்பதினால் இரண்டாம் தரம் அன்னுவயங்கள்; தாவரவர்க்கத்தின் பொருள்கள், உயிரில்லாமலும் வளராமலுமிருப்பதினால், மூன்றாவது தரமான அன்னுவயங்கள். பிராணிவர்க்கத்தில் அன்னுவயங்கள் பூமியின் பேரில் நடந்து ஊர்கின்ற இருவகையும், காற்றில் பறக்கப்பட்டவைகளுமாகிய பற்பல விதமான உயிருள்ள பிராணிகளா யிருக்கின்றன. ஆனால், அவைகள் நன்றாய் தெரிந்திருக்கிறபடியினால், இங்கே அவைகள் குறிப்பாய் சொல்லப்படவில்லை. விருக்ஷவர்க்கத்தில் அன்னுவயங்கள், தோட்டங்களிலும், சிறு காடுகளிலும், வயல்களிலும், புற்றரைகளிலும் வளர்ந்து செழிக்கிற எல்லா பொருள்களுமா யிருக்கின்றன. இவைகள்கூட நன்றாய் தெரிந்திருக்கிறபடியினால், சொல்லப்படவில்லை. தாவாவர்க்கத்தில் அன்னுவயங்கள், மேலானதும் கீழானதுமாகிய இருவகை உலோகங்களும், விலை உயர்ந்ததும் அப்படியல்லாததுமாகிய கற்களும், பலவித மண்களும், அதனுடன் நீர்களுமாயிருக்கின்றன. இவைகள் அல்லாமல், எல்லா

வித ஆகாரங்களும், உடுப்பும், வீடுகளும், ஊர் மாளிகைகளுமாகிய பொருள்களும் இன்னும் அநேக பொருள்களும்போல, மானிட உழைப்பினால் அவைகளிலிருந்துதான் செய்யப்பட்டவைகளும் கூட அன்னுவபங்களா யிருக்கின்றன.

**105**. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் போன்ற பூமிக்கு மேலிருக்கும் பொருள்களும், மேகங்கள், மூடுபனி, மழை, மின்னல், இடிபோன்ற காற்றிலிருக்கும் பொருள்களும்கூட, அம்மாதிரியே அன்னுவபங்களா யிருக்கின்றன. வெளிச்சமும், நிழலும், சூடும், குளிர்ச்சியும் போன்ற, சூரியன் இருக்கும்போதும் இல்லாதபோதும் உண்டாகிற பொருள்களும், வசந்த காலமென்றும், வேனிற் காலமென்றும், இலையுதிர் காலமென்றும், மாரி காலமென்றும் சொல்லப்பட்ட வருஷத்தின் பருவங்களைப்போன்ற, அதிலிருந்து தொடர்பாய் வருபவைகளும், காலை, மத்தியானம், மாலை, இரவு போன்ற பகலின் காலங்களும்கூட அன்னுவபங்களா யிருக்கின்றன.

**106**. சுருங்கச் சொல்லில், சின்னஞ் சிறியதிலிருந்து மிகவும் பெரியது வரையில், பிரகுருதியிலிருக்கும் எல்லா பொருள்களும் அன்னுவபவங்களா யிருக்கின்றன. ஸ்தூல உலகமும், அதிலிருக்கும் எல்லா பொருள்களும், சூக்ஷும உலகத்திலிருக்கும் இரண்டு உலகமும் தெய்வத்திலிருந்து உற்பத்தியாகி, ஜீவிக்கிறபடியினால், அவைகள் அன்னுவபங்களாயிருக்கின்றன. ஜீவித்தலென்பது காயமாய் தோன்றுதலானபடியினால், ஒவ்வொரு பொருளும், அது உற்பத்தியாக்கும் பொருளிலிருந்து ஜீவிக்கிறதினாலும், அதனுடன்கூட, எந்த பொருளும், தனக்கு முந்திய பொருளிலிருந்து மாத்திரம், இவ்விதமாக ஒரு முதற் பொருளிலிருந்து மாத்திரம் ஜீவிக்குமே ஒழிய, தன்னிடமேயிருந்து ஜீவிக்காதபடியினாலும், அதிலிருந்து பிரிக்கப்பட்டால், அது முழுமையும் அழிந்துபோய் கண்ணுக்குத் தெரியாமல் போய்விடுமாகையாலும், அவைகள் ஜீவிக்கிறதாகக்கூட சொல்லப்படுகிறது.

**107**. பிரகுருதியில், தெய்வீக ஒழுங்கிலிருந்து உற்பத்தியாகி ஜீவிக்கிற ஒவ்வொரு பொருளும், ஒரு அன்னுவபமாயிருக்கின்றது. ஆண்டவரிடமிருந்துவரும் தெய்வீக நன்மை தெய்வ ஒழுங்கை ஏற்படுத்துகிறது. அது அவரிடமிருந்து ஆரம்பித்து, சுவர்க்கங்கள் மூலமாய் உலகத்திற்குள் தொடர்பாய் அவரிடமிருந்துபோய்,

இறுதிப் பொருள்களில் முடிவாகின்றது. அங்கே ஒழுங்கை அனுசரித்திருக்கும் ஒவ்வொருபொருளும், ஒரு அன்னுவயமாயிருக்கிறது. உபயோகத்திற்கு நல்லதாகவும் சம்பூர்ணமாகவும், அங்கே இருக்கிற எல்லா பொருள்களும் ஒழுங்கின்படி இருக்கின்றன; ஏனென்றால், உபயோகத்திற்குத் தக்கபடி, ஒவ்வொரு நன்மையும் நன்மையாயிருக்கிறது. உண்மையானது நன்மையின் உருவமாயிருக்கிறபடியினால், அதன் உருவம் உண்மைக்கு சம்பந்தப்பட்டிருக்கிறது. இந்த காரணத்துக்காகத்தான், உலகத்தின் சுபாவமுடையதும் தெய்வீக ஒழுங்கில் இருப்பதுமான, முழு உலகத்திலிருக்கும் எல்லா பொருள்களும், நன்மைக்கும் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

**108**. உலகத்திலிருக்கும் எல்லா பொருள்களும் தெய்வத்திலிருந்து உற்பத்தியாகி, அங்கே நிலைத்து உபயோகத்தை செய்து, இவ்விதமாக அன்னுவயப்பட சக்தியை அவைகளுக்கு உண்டாக்குகிற பிரகுருதியிலிருக்கும் அவ்வித பொருள்களால் உடுத்தப்படுகிறதென்பது, பிராணிவர்க்கத்திலும் விருக்ஷவர்க்கத்திலும் இரண்டிலும் பார்க்கப்பட்ட பலவிதப் பொருள்களிலிருந்து தெளிவாய் விசதமாகிறது. அவை இரண்டிலும் அந்தரங்கமாய் நினைக்கின்றவன் எவனும், சுவர்க்கத்திலிருந்து வந்ததாக அறிந்துகொள்ளக்கூடிய பொருள்கள் இருக்கின்றன. திருஷ்டாந்தமாக, கணக்கற்ற உதாரணங்களிலிருந்து சிலது சொல்லப்படலாம்; முதலில் பிராணிவர்க்கத்திலிருந்து சிலது சொல்லலாம்.

ஒவ்வொரு பிராணிக்குள்ளும் நடப்பட்டதுபோலிருக்கிற, ஆச்சரியம் உண்டாக்கக்கூடிய அறிவு விஷயம், சாதாரணமாய் தெரிந்திருக்கிறது. தேனீக்களுக்கு, புஷ்பங்களிலிருந்து தேனை சேர்த்து, அந்த தேனை சேர்த்து வைக்க, மெழுகினால் சிற்றறைகளைக் கட்டி தங்களுக்கும் தங்கள் குடும்பத்திற்கும் இனி வரும் மாரி காலத்துக்குகூட, இவ்விதமாக ஆகாரத்தை சம்பாதிக்கும் விதம் தெரியும். அவைகளுடைய இராணி தேனீ முட்டைகளை இடுகிறது; மற்றவைகள் அவைகளை ஜாக்கிரதையாய் கவனித்து, ஒரு புதிய வம்சம் உண்டாக அவைகளை மூடி வைக்கின்றன. இயற்கையறிவிலிருந்து எல்லாருக்கும் தெரிந்திருக்கிற ஓர்வித அரசாட்சியில் அவைகள் வசிக்கின்றன. உபயோகமானவைகளை வைத்துக்கொண்டு உபயோகமில்லாதவைகளை, அவைகளின் இறக்கைகளை நீக்கி வெளியே

தள்ளிவிடுகின்றன; இதுவுமன்றி உபயோகத்திற்காக சுவர்க்கத்தி லிருந்து அவைகளில் நடப்பட்ட இன்னும் இதர ஆச்சரியமானவை களுமிருக்கின்றன; ஏனென்றால், அவைகளின் மெழுகு, மெழுகு திரிகளுக்காகவும் அவைகளின் தேன் ஆகாரத்தை தித்திப்பாக்கவும், மானிட வமிசத்திற்கு எவ்விடத்திலும் உபயோகப்படுகிறது.

மறுபடியும் பிராணிவர்க்கத்தில் தாழ்ந்தவைகளாகிய புழுக் களில் என்ன ஆச்சரியத்தை நாம் பார்க்கிறோம்? தங்கள் சுபாவத் துடன் ஒத்துப்போகிற இலைகளின் சாற்றினால் வளர்ந்து, பின் னிட்டு குறிப்பிட்ட காலத்தில், ஓர் போர்வை போட்டுக்கொண்டு, ஒரு கருப்பையிற்குள் போல பிரவேசித்து, இவ்விதமாக, தங்கள் சொந்த இனத்தைச் சேர்ந்த ஒரு சந்ததியை குஞ்சுபரிபலிக்கும் விதம் அவைகளுக்குத் தெரியும்; சிலது நூல் நூற்கிற வனதேவதைக ளாகவும் கூட்டுப் புழுக்களாகவும் முதலில் மாற்றப்படுகின்றன; வேலை முடிந்தவுடன், அவைகள் இறகுகளால் அலங்கரிக்கப் பட்ட வேறுவிதமான உருவமுடைய சரீரத்தை போர்த்துகொண்டு, வெளியே வந்து, தங்கள் சுவர்க்கத்தில் போல் காற்றில் பறந்து, ஒன்றோடொன்று இணைந்து, முட்டைகளிட்டு, தங்களுக்காக ஒரு சந்ததியை ஏற்படுத்துகின்றன. இந்த குறிப்பான திருஷ்டாந்தங் கள் தவிர பொதுவாக காற்றில் பறக்கும் எல்லா பிராணிகளுக்கும், அவைகளுக்கு தகுந்த ஆகாரம் எதுவென்றும், அது வென்ன வென்பதுமாத்திரமல்லாமல், அது எங்கே அகப்படு மென்பதும் தெரிந்திருக்கின்றன. ஒரு இனம் ஒரு விதத்திலும், மற்றது மற்ற விதத்திலுமாக, கூண்டுகளை தாங்களே கட்டிக்கொள்ளவும், அந்தக் கூண்டுகளில் தங்கள் முட்டைகளை இடவும், அவைகளின் பேரில் உட்காரவும், தங்கள் குஞ்சுகளைப் பொரித்து, அவைகளுக்கு உணவு கொடுக்கவும், தாங்களே சம்பாதித்துக்கொள்ள சக்தி வரும்போது, வீட்டைவிட்டு அவைகளை துரத்தவும், அவைகளுக்கு தெரியும். தாங்கள் தள்ளவேண்டிய பகையாளிகள் யார் என்றும், தாங்கள் கூடவேண்டிய சிநேகிதர்கள் யாரென்றும்கூட, இளம் பிராயத்தி லிருந்து அவைகளுக்கு தெரியும். குஞ்சுகளின் உற்பவத்திற்கும் போஜனத்திற்கும் தங்கள் ஒழுங்கில் எல்லா பொருள்களும் தயாரா யிருக்கிற முட்டைகளிலேயே இருக்கும் அதிசயங்களையும் இன்னும் இதர கணக்கற்றவைகளையும் சொல்லவே வேண்டியதில்லை.

தன்னிடமிருந்து உற்பத்தியானதற்கு ஒரு சரீரத்தினால் உடுத்து வதிலும், காரணத்தில் சூக்குமமாயிருப்பதை காரியத்தில் காண்பிப்பதிலும், ஸ்தூல உலகம் தொண்டுசெய்கிற சூக்கும உலகத்தைவிட வேறு எந்த மூலத்திலிருந்து, இந்த இயற்கை அறிவுகள் வருகின்றனவென்று, பகுத்தறிவுள்ள ஞானத்திலிருந்து நினைக்கிற எவன் சொல்லுவான்? பூமியிலுள்ள மிருகங்களும், காற்றிலுள்ள பட்சிகளும், இந்த அறிவுகளுடன் பிறக்கின்றன; அவைகளைவிட அதிக மேன்மையான மனிதன் அப்படி பிறக்கிறதில்லை. பிராணிகளுக்கு பகுத்தறியும் சக்தியில்லாதபடியினால், அவைகள் தங்கள் வாழ்வின் ஒழுங்கில் இருந்துகொண்டு, சூக்கும உலகத்திலிருந்து வந்து, அவைகளுக்குள் இருப்பதை அழிக்கச் சக்தியில்லாமல் போய்விட்டதென்பது, அதற்கு காரணமாயிருக்கிறது. ஆனால், சூக்கும உலகத்திலிருந்து நினைக்கிற மனிதன் விஷயத்தில், விஷயம் வேறுமாதிரியிருக்கிறது; ஏனென்றால், அந்த உலகத்திலிருந்து தன்னிடமிருப்பதை, தன்னுடைய பகுத்தறியும் சக்தி உபகரித்த ஒழுங்கிற்கு எதிரிடையான ஓர் வாழ்வினால், அவன் தாறுமாறாக்கினபடியினால், அவன் அவசியமாய் மூடனாய் பிறந்து, பின்னிட்டு தெய்வீக காரணங்களால் சுவர்க்கத்தின் ஒழுங்குக்குள் மறுபடியும் திருப்பப்படவேண்டும்.

**109.** விருக்ஷவர்க்கத்தின் பொருள்கள் எப்படி அன்னுவயப்படுகின்றனவென்பது, சிறிய விதைகள் மரங்களாய், இலைகளை வெளியிட்டு, புஷ்பங்களையும், மறுபடியும் விதைகளைவைக்கிற பழங்களையும் உற்பத்தி செய்கிறதுபோலவும், இந்த காரியங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் சம்பவித்து, சில வார்த்தைகளில் விவரிக்க முடியாத அவ்வளவு ஆச்சரியமான ஒழுங்கில் இருக்கின்றனவென்பது போலவும், அநேக உதாரணங்களிலிருந்தும் விசதமாகும். நிஜமாகவே, அவைகளைப்பற்றி பல புஸ்தகங்கள் எழுதினபோதிலும், பூதசாஸ்திரத்தினால் காலிசெய்ய முடியாத அவைகளின் உபயோகங்களுக்கு மிகவும் நெருக்கமாய் சம்பந்தப்பட்ட அந்தரங்கமான இரகசியங்கள் இன்னும் நிற்கும்; இவைகளும்கூட, ஒரு வேறான அத்தியாயத்தில் காண்பிக்கப்பட்டபடி, மனிதனுடைய உருவத்திலிருக்கிற சூக்கும உலகத்திலிருந்து அல்லது சுவர்க்கத்திலிருந்து வருகிறபடியினால், இந்த வர்க்கத்திலுள்ள ஒவ்வொரு பொருளும், கற்றோர் உலகத்தில் சிலருக்குகூட தெரிந்திருக்கிறபடி, மனிதனுக்குள்ளிருக்

கும் ஏதோ ஒன்றுடன் ஒரு சம்பந்தத்தை உடைத்தாயிருக்கிறது. இந்த வர்க்கத்திலுள்ள எல்லாபொருள்களும் அன்னுவயங்க ளென்பது, அதிக அநுபவத்தில் எனக்கு விசதமாக்கப்பட்டது. ஏனென்றால், அடிக்கடி, நான் தோட்டங்களில் இருந்துகொண்டு, மரங்களையும், பழங்களையும், புஷ்பங்களையும், மரக்கறி பதார்த்தங் களையும் பார்த்துக்கொண்டிருக்கும்போது, சுவர்க்கத்தில் அவை களின் அன்னுவயங்களைப் பார்த்திருக்கிறேன்; அவைகள் இருந்த வர்களோடு பேசியுமிருக்கிறேன்; அவைகளின் உற்பத்தியையும் குணத்தையும் குறித்து கற்பிக்கப்பட்டுமிருக்கிறேன்.

**110**. ஆயினும், உலகத்திலிருக்கும் ஸ்தூலப் பொருள்க ளோடு அன்னுவயப்படுகிற, சுவர்க்கத்திலிருக்கும் சூக்குமபொருள் களை தெரிந்துகொள்ளுதல், அன்னுவயங்கள் ஞானம் முழுமையும் போய்விட்டபடியினால், சுவர்க்கத்திலிருந்து வரும் வெளிப்பாட்டி னால் தவிர, வேறு எந்த விதத்திலும் எந்த மனிதனாலும், முடியாது. ஆனால், ஸ்தூல பொருள்களோடு சூக்கும பொருள்களின் அன்னு வயத்தின் சுபாவத்தைப்பற்றி, சில உதாரணங்களால் திருஷ்டாந்தப் படுத்துகிறேன்.

பொதுவாக பூமியின்பேரில் உள்ள பிராணிகள் ஆசைகளுடன் அன்னுவயப்படுகின்றன; பழகியதும் உபயோகமானதுமாகிய பிராணிகள் நல்ல ஆசைகளுக்கும், குரூரமானதும், உபயோகமில்லா ததுமாகிய பிராணிகள் கெட்ட ஆசைகளுக்கும் அன்னுவயப்படுகின் றன. சிறப்பாக, இடபமும், எருதுகளும், ஸ்தூல மனதின் ஆசை களுக்கும், ஆடுகளும் ஆட்டுக்குட்டிகளும் சூக்கும மனதின் ஆசை களுக்கும், அன்னுவயப்படுகின்றன; ஆனால், இறகுள்ள பிராணிகள், அவைகளின் இனங்களுக்கு தக்கபடி, ஸ்தூல மனது அல்லது சூக் கும மனதின் புத்திக்கடுத்த பொருள்களோடு அன்னுவயப்படுகின் றன; இந்த காரணத்துக்காகத்தான், இடபங்களும், எருதுகளும் செம்மறி கடாக்களும், ஆடுகளும், ஆண் பெண் வெள்ளாடுகளும், ஆண் பெண் ஆட்டுக்குட்டிகளும், புறாக்களும், மணி புறாக்களும் போன்ற பலவித பிராணிகள், இஸ்ரவேல் திருச்சபையில் பரிசுத்த மான உபயோகங்களுக்கு ஏத்துக்கொள்ளப்பட்டன; ஏனென்றால், அந்த திருச்சபையானது பிரதிநிதி சபையாக இருந்தது. அந்த பிராணிகள் பலிகளாகவும் சுடப்பட்ட நிவேதனங்களாகவும் உபயோ கப்படுத்தப்பட்டன. ஏனென்றால், அந்த உபயோகத்தில், அன்னுவ

யங்கள்படி, சுவர்க்கத்தில் அறிந்துகொள்ளப்பட்ட சூக்குமபொருள்களுக்கு, அவைகள் அன்னுவயப்பட்டன. பிராணிகள்கூட, உயிரோடிருப்பதினால் அவைகளின் இனங்கள் வருக்கங்கள்படி, ஆசைகளாயிருக்கின்றன; ஒவ்வொன்றின் உயிரும், ஆசையிலிருந்தும் அதை அனுசரித்தும் தவிர வேறு எந்த மூலத்திலுமில்லை. அதனால்கூட, ஒவ்வொரு பிராணியும், அதன் உயிரின் ஆசைக்குத் தக்கபடி இயல்பான அறிவை உடைத்தாயிருக்கிறது. மனிதனானவன், தன்னுடைய ஸ்தூல பாகம் சம்பந்தப்பட்டவரையில் பிராணிகளைப்போலிருக்கிறான்; ஆகையினால், சாதாரண பேச்சில் அவன் அவைகளுக்கு ஒப்பிடப்படுகிறான்; அவன் சாதுவாயிருந்தால், ஒரு ஆடு என்றும் அல்லது ஒரு ஆட்டுக்குட்டி என்றும் சொல்லப்படுகிறான்; மூர்க்கமாயிருந்தால், ஒரு கரடி என்றும் ஓநாய் என்றும் சொல்லப்படுகிறான்; தந்திரமுள்ளவனாயிருந்தால், அவன் குள்ளநரி அல்லது ஒரு சர்ப்பமென்றும், இம்மாதிரியாகவே பல விதமாய் சொல்லப்படுகிறான்.

**111**. விருக்ஷ வர்க்கத்துப் பொருள்களோடு அதைப் போன்ற ஒரு அன்னுவயமிருக்கிறது; இவ்விதமாய், தோட்டமென்பது பொதுவாக, விவேகத்துக்கும் ஞானத்துக்கும் சம்பந்தப்பட்டவரையில் சுவர்க்கத்துடன் அன்னுவயப்படுகிறது; இந்த காரணத்துக்காக, சுவர்க்கமென்பது, கடவுளின் தோட்டமென்றும், மோக்ஷ ஸ்தலமென்றும், மனிதர்களால் சுவர்க்கத்து ஆனந்த ஸ்தலமென்றும் சொல்லப்படுகிறது. இனங்களுக்கு தக்கபடி, மரங்கள், விவேகமும் ஞானமும் வருகிற நன்மையினுடையவும் உண்மையினுடையவும் உணர்ச்சிகளுக்கும் அறிவுகளுக்கும் அன்னுவயப்படுகின்றன. இந்த காரணத்துக்காகத்தான், அன்னுவய ஞானத்தில் சாமார்த்தியமுள்ளவர்களாயிருந்த பூர்வீகர்கள், தங்கள் பரிசுத்தமான ஆராதனையை தோப்புகளில் நடத்தினார்கள். அதனால்தான், மரங்கள் வேதத்தில் அடிக்கடி சொல்லப்படுகின்றன; சுவர்க்கமும், திருச்சபையும், மனிதனும், திராட்சக் கொடிக்கும், ஒலிவை மரத்துக்கும், தேவதாருவுக்கும் இன்னும் இதர மரங்களுக்கும், அவர்களுடைய நற்செய்கைகள் பழங்களுக்கும் ஒப்பிடப்படுகின்றன. மரங்களிலிருந்தும்கூட, முக்கியமாய், வயலின் தானிய விளைவிலிருந்தும் உண்டாக்கப்பட்ட ஆகாரம், நன்மையினுடையவும் உண்மையினுடையவும், ஆசைகளுக்கு அன்னுவயப்படுகிறது

ஏனென்றால், இவைகள் பூமியின்பேரிலுள்ள ஆகாரம் ஜட உயிரை போஷிக்கிறதுபோல, சூக்கும உயிரை போஷிக்கின்றன. ஆகவே, பொதுவாக ரொட்டி என்பது எல்லா நன்மையினிடத்தும் கொள்ளும் ஆசைக்கு அன்னுவயப்படுகிறது; ஏனென்றால், அது மற்ற ஆகாரங்களைவிட உயிரை வெகு நன்றாய் காப்பாற்றுகிறது; மேலும் ரொட்டி என்றால், எல்லா ஆகாரமும் கருதப்படுகிறது. இந்த அன்னுவயத்திற்காக, ஆண்டவர் உயிரின் அப்பம் என்று தன்னையே சொல்லிக்கொள்ளுகிறார்; அதே காரணத்துக்காககூட, ரொட்டி என்பது, இஸ்ரவேல் திருச்சபையில் பரிசுத்தமாய் உபயோகப்படுத்தப்பட்டது; ஏனென்றால், அவைகள் கூடாரத்தில் ஒரு மேஜையின் பேரில் வைக்கப்பட்டு முகங்களின் ரொட்டி என்று சொல்லப்பட்டது. பலிகளினாலும், சுடப்பட்ட நிவேதனங்களாலும், நடத்தப்பட்ட எல்லா தெய்வீக ஆராதனையும், அப்பம் என்றுகூட சொல்லப்பட்டது. இந்த அன்னுவயத்தின் காரணமாககூட, கிருஸ்துவ திருச் சபையிலிருக்கும் மிகவும் பரிசுத்தமான சம்ஸ்காரம், ரொட்டியும் திராக்ஷரசமும் கொடுக்கப்பட்ட பரிசுத்த போஜனமாயிருக்கிறது. இதை சில உதாரணங்களால் அன்னுவயத்தின் சுபாவம் தெரிந்துகொள்ளலாம்.

**112.** உலகத்துடன் சுவர்க்கத்தின் சேர்க்கை அன்னுவயங்களால், எப்படி செய்யப்படுகிறதென்பதுகூட சுருக்கமாய் விவரிக்கப்படவேண்டும்.

ஆண்டவருடைய இராச்சியம், உபயோகங்களாயிருக்கிற முடிவுகளின் இராச்சியமாயிருக்கிறது; அல்லது அதே அர்த்தமாகிறபடி அது முடிவுகளாயிருக்கிற உபயோகங்களின் இராச்சியமாயிருக்கிறது. இந்தகாரணத்துக்காக உபயோகங்களானது, முதலில் சுவர்க்கத்திலும், பின்னிட்டு உலகத்திலும், இவ்விதமாக படிப்படியாகவும் தொடர்பாயும் இயற்கையின் இறுதிப் பொருள்கள் வரையில்கூட செய்கையிலும், காரியத்திலும் காட்டப்பட, எவ்விடத்திலும் அம்மாதிரி உடுத்தப்படும்படியாக, பிரபஞ்சமானது தெய்வத்தினால் அம்மாதிரி சிருஷ்டிக்கப்பட்டு, உருவாக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, சூக்குமமானதுடன் ஸ்தூலப்பொருள்களுடையவும், சுவர்க்கத்துடன், உலகத்தினுடையவும், அன்னுவயமானது, உபயோகங்களால் நிறைவேற்றப்படுகிறதென்பதும், உபயோகங்கள் அவைகளை சேர்க்கிறதென்பதும், உபயோகங்கள் உடுத்தப்படுகிற உருவங்கள், உபயோகங்

களின் உருவங்களாயிருக்கிற வரையில், அன்னுவயங்களாயும், ஐக்கியத்திற்கு உபகரணங்களாகவு மிருக்கின்றனவென்பதும் விசதமாகியது. பிரகுருதியில், அதன் மூவகையான வர்க்கத்தில் ஒழுங்கின்படி இருக்கிற எல்லா பொருள்களும் உபயோகங்களின் உருவங்களாக, அல்லது உபயோகத்திற்காக உபயோகத்திலிருந்து உருவாக்கப்பட்ட காரியங்களாயிருக்கின்றன; ஆகையினால் பிரகுருதியிலுள்ள பொருள்கள் அன்னுவயங்களாயிருக்கின்றன. ஆனால் மனிதன் விஷயத்திலோ, அவன் தெய்வீக ஒழுங்கின்படி, எவ்வளவு தூரம் வாழ்கிறானோ, இவ்விதமாக ஆண்டவரிடத்து அன்பிலும், அயலானிடத்து தருமத்திலும் எவ்வளவு தூரம் இருக்கிறானோ, அவ்வளவு தூரம் அவனுடைய செயல்கள் உருவத்தில் உபயோகங்களாகவும், சுவர்க்கத்துடன் அவன் சேர்க்கப்படுகிற அன்னுவயங்களாயிருக்கின்றன. ஆண்டவரிடத்திலும் அயலானிடத்திலும் அன்பு பாராட்டல் என்பது, பொதுவாக உபயோகமான காரியங்களை செய்தலாயிருக்கிறது. இன்னும், மனிதனானவன் சூக்குமஉலகத்துடன் ஸ்தூல உலகம் சேர்க்கப்படுகிற வழி வகையென்றும், அல்லது அவன் அந்த சேர்க்கைக்கு உபகரணமென்றும் தெரிந்திருக்க வேண்டியிருக்கிறது. ஏனென்றால், அவனிடத்தில் ஸ்தூல உலகமும் சூக்கும உலகமும் இரண்டும் இருக்கின்றன (மேலே செ. 57 பார்க்கவும்); ஆகையினால், மனிதன் சூக்குமமாயிருக்கிற வரையில், அவன் சேர்க்கைக்கு உபகரணமாயிருக்கிறான், ஆனால் அவன் சூக்குமமாயல்லாமல், ஸ்தூலமாயிருக்கிறவரையில், சேர்க்கைக்கு உபகரணமாயில்லை. அப்படியிருந்தாலும், தெய்வீக பெருக்கு, மனிதனுடைய மத்தியஸ்தமில்லாமல், உலகத்திலும், அதனுடன், அவனுடைய பகுத்தறியும் சக்தியில் அல்லாமல், உலகத்தைச் சேர்ந்த மனிதனுக்கு சார்ந்த பொருள்களிலும், பாய்ந்துகொண்டேயிருக்கிறது.

**113**. தெய்வ ஒழுங்கை அனுசரித்த எல்லா பொருள்களும், சுவர்க்கத்துடன் அன்னுவயப்படுகிறபடி, தெய்வ ஒழுங்கிற்கு எதிரிடையான எல்லா பொருள்களும், நரகத்துடன் அன்னுவயப்படுகின்றன. சுவர்க்கத்துடன் அன்னுவயப்படுகிற பொருள்கள் நன்மையுடனும் உண்மையுடனும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; ஆனால், நரகத்துடன் அன்னுவயப்படுகிறவைகள், தீமையுடனும் பொய்யுடனும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

**114.** அன்னுவயங்களைக் குறித்த அறிவைப்பற்றியும், அதன் உபயோகத்தைப்பற்றியும், இப்பொழுது சிலது சொல்லப் படவேண்டும். சுவர்க்கமாயிருக்கிற சூக்கும உலகு, ஸ்தூல உலகத் துடன் அன்னுவயங்களால் சேர்க்கப்பட்டிருக்கிறதென்று மேலே கூறப்பட்டது; ஆகையினால், மனிதன் சுவர்க்கத்துடன் அன்னு வயங்களினால் போக்குவரவு வைத்திருக்கிறான். ஏனென்றால், சுவர்க் கத்து தேவர்கள், மனிதன் செய்கிறதுபோல, ஸ்தூல பொருள்களி லிருந்து நினைக்கிறதில்லை. அப்படி இருப்பதினால், மனிதனுக்கு அன்னுவய ஞானமிருக்கும்போது, அவன் மனதிலுண்டாகும் சிந் தனைகள் சம்பந்தப்பட்டவரையில், தேவர்கள் கூட்டத்தில் இருப் பான்; அதனால், அவனுடைய சூக்கும அல்லது அந்தரங்கமான மனி தன் சம்பந்தப்பட்டவரையில் அவர்களோடு சேர்க்கப்படுவான். பொதுவாகவும் சிறப்பாகவும் சுவர்க்கத்திலிருக்கும் எல்லா பொருள் களும் அன்னுவயங்களா யிருக்கிறபடியினால், மனிதனுடன் அத னுடைய சேர்க்கை இருக்கும்பொருட்டு, வேதமானது, முழுமை யும் அன்னுவயங்களால் எழுதப்பட்டது. ஆகையினால், மனித னுக்கு அன்னுவய ஞானமிருக்கும் பட்சத்தில், வேதத்தை அதன் தத்துவார்த்தத்தில் அவன் அறிந்துகொண்டு, இவ்விதமாக, சொல் லார்த்தத்தில் அவனுக்கு ஒன்றும் விளங்காத இரகசிய ஞானம் கொடுக்கப்படும். ஏனென்றால், வேதத்தில், ஒரு மூலார்த்தமும் ஒரு தத்துவார்த்தமும் இருக்கிறது. மூலார்த்தமானது, உலகத்திலிருக் கப்பட்டதுபோன்ற பொருள்களாலும், ஆனால், தத்துவார்த்தமா னது, சுவர்க்கத்திலிருக்கிறதுபோன்ற பொருள்களாலும் அமைந் திருக்கிறது; உலகத்துடன் சுவர்க்கத்தின் சேர்க்கையானது அன்னு வயங்களால் நேரிடுகிறபடியினால், ஒரு சின்னஞ்சிறிய அணுவரையில் கூட ஒவ்வொரு பொருளும், அதன் அன்னுவயத்தை உடைத்தா யிருக்கிற ஒரு வேதமானது கொடுக்கப்பட்டது.

**115.** சுவர்க்க பதவிக்கு சார்ந்த மனிதர்களாயிருந்த, நம்ம பூமியின்பேரிலிருந்த மிகவும் பூர்வீக ஜனங்கள், தாங்களே அன்னு வயங்களிலிருந்து நினைத்தார்களென்றும், தங்கள் கண்கள் முன் பாக இருந்த உலகத்தின் ஸ்தூல பொருள்கள், இம்மாதிரி நினைக்க வழிவகைகளாக உதவி செய்தனவென்றும், அவ்வித நடத்தை உள்ளவர்களாயிருந்தபடியினால், அவர்கள் தேவர்களுடன் இணங்கி, அவர்களுடன் பேசினார்களென்றும், இவ்விதமாக அவர்கள் மூல

மாய் சுவர்க்கமானது உலகத்துடன்சேர்க்கப்பட்டதென்றும், சுவர்க்கத்திலிருந்து எனக்கு கற்பிக்கப்பட்டது. இந்த காரணத்துக்காக, அந்தக் காலத்தை பொன்போன்ற யுகமென்றூர்கள்; அதைப்பற்றி கூட பூர்வீக கிரந்தகர்த்தாக்கள், அக்காலத்தில் சுவர்க்கத்து, குடிகள், மனிதர்களுடன் வசித்ததாகவும், சினேகிதர், சினேகிதர்களுடன் இணங்குகிறதுபோல், அவர்களோடு கூடியிருந்ததாகவும் சொன்னூர்கள். ஆனல், அவர்கள் காலம் சென்றபிறகு, தாங்களே அன்னுவயங்களிலிருந்து நினைக்காமல், அன்னுவய ஞானத்திலிருந்து நினைத்தவர்கள் வந்தார்கள்: அப்பொழுதுகூட மனிதனுடன் சுவர்க்கத்து சேர்க்கை இருந்தது; ஆனல் அது அவ்வளவு உள்ளுக்குள்ளானதாய் இல்லை; அவர்கள் காலமானது வெள்ளி யுகமென்று சொல்லப்பட்டது. முந்தினவர்கள்போல சூக்குமநன்மையிலில்லாமல், ஸதூல நன்மையிலிருந்தபடியினல், தங்கள் அறிவிலிருந்து நினைக்காமல், அன்னுவயங்கள், நிஜமாகவே, தெரிந்திருந்தவர்கள் பின்னிட்டு வந்தார்கள். அவர்களுடைய காலம் செம்பு காலமென்று சொல்லப்பட்டது. இதன்பிறகு, மனிதனனவன் படிப்படியாய் புறம்பானவனுய், கடைசியில் ஜடவாதியானன்; அப்பொழுது அன்னுவயங்கள் ஞானம் முழுமையும், அதனுடன் சுவர்க்கத்தினுடையவும், சுவர்க்கத்துக்கு சேர்ந்த அநேகபொருள்களுடையவும் ஞானம் போய்விட்டது. பொன் என்பது மிகவும் பூர்வீக ஜனங்கள் இருந்த சுவர்க்கத்துக்கடுத்த நன்மையையும், வெள்ளி என்பது, அதற்கு பின்வந்த பூர்வீக ஜனங்களிருந்த சூக்கும நன்மையையும், செம்பு என்பது, அவர்களுக்கு அடுத்த பின் சந்ததி இருந்த ஸ்தூல நன்மையையும், ஆனல், கடைசி யுகத்துக்கு பேர்கொடுத்த இரும்பு, நன்மை அல்லாமல் அழுத்தமான உண்மையையும் காண்பிக்கிறபடியினல், இந்த யுகங்கள் அன்னுவயத்தை அனுசரித்து பொன்னிலிருந்தும், வெள்ளியிலிருந்தும், செம்பிலிருந்தும் பெயரிடப்பட்டன.

# XIV

## சுவர்க்கத்தில் இருக்கும் சூரியன்

**116.** இந்த உலகத்து சூரியன் முழுமையும் ஸ்தூலமாயிருப்பதினால், வானத்தில் அதுவும், அதினிடத்திலிருந்து வரும் எதுவும் கண்ணுக்கு புலப்படுகிறதில்லை. உண்மையில், பிரகுருதி இந்த சூரியனிடமிருந்து ஆரம்பிக்கிறது. அதனால் உற்பத்தியாக்கப்பட்ட எதுவும், ஸ்தூலமானதென்று சொல்லப்படுகிறது. ஆனால், சுவர்க்கம் இருக்கப்பட்ட சூக்குமமானது. பிரகுருதிக்கு மேலே இருக்கிறது; மேலும், அது ஸ்தூலமானதற்கு முழுமையும் வேறானதாயிருக்கிறது; அன்னுவயங்களால் தவிர, அந்த இரண்டுக்கும் வேறு சம்பந்தமில்லை. அவைகளுக்குள்ள பேதத்தின் சுபாவம், பிரமாணங்களைக் குறித்து மேலே சொன்னதிலிருந்தும், (செ. 38) அந்த சம்பந்தத்தின் சுபாவம், அன்னுவயங்களைக் குறித்து முன் வந்த இரண்டு அத்தியாயங்களில் சொன்னதிலிருந்தும், அறிந்து கொள்ளப்படலாம்.

**117.** ஆனால், இந்த உலகத்து சூரியனும், அந்த சூரியனிடமிருந்து வரும் எந்த பொருளும், வானத்தில் தோன்றாவிட்டாலும், அங்கே ஒரு சூரியனும், ஒளியும், சூடும், உலகத்திலிருப்பதுபோல் எல்லா பொருள்களும், அதே உற்பத்தி ஸ்தானமில்லாத கணக்கற்ற இதர பொருள்களும் இருக்கின்றன. ஏனென்றால், வானத்திலுள்ள எல்லா பொருள்களும் சூக்குமமாயிருக்கின்றன. உலகத்திலுள்ளவைகள் ஸ்தூலமாயிருக்கின்றன. பரமண்டலத்து சூரியன் ஆண்டவர்; அங்கே யிருக்கும் ஒளி தெய்வீக உண்மை, சூடு தெய்வீக நன்மை, இந்த இரண்டும் சூரியனாக ஆண்டவரிடமிருந்து புறப்படுகின்றன. இந்த தொடக்கத்திலிருந்துதான், பரமண்டலங்களில் நிலைத்து பார்க்கப்படுகிற எல்லா பொருள்களும் வருகின்றன ஆனால், ஒளியைப்பற்றியும் சூட்டைப்பற்றியும், சுவர்க்கத்தில் அவைகளிலிருந்து வரும் பொருள்களைப்பற்றியும், பின்வரும் அத்தியாயங்களில் அதிகமாய் சொல்லப்படும்; இந்த அத்தியாயத்தில் அங்கிருக்கும் சூரியனைப்பற்றி மாத்திரம் பேசலாம். இந்த உலகத்து சூரியனால் எல்லா ஸ்தூல பொருள்களும் உண்டாகிற

படியினாலும், எல்லா சூக்கும பொருள்களும் உண்டாகிற தெய்வீக அன்பாக ஆண்டவர் இருக்கிறபடியினாலும், ஆண்டவர் அந்த சூரியனாக காணப்படுகிறார். இந்த அன்புதான் சூரியனாக பிரகாசிக்கிறது.

**118.** ஆண்டவர் வானத்தில் சூரியனாக நிஜமாய் காணப்படுகிறாரென்பது, தேவர்களால் எனக்கு சொல்லப்பட்டது மாத்திரமல்லாமல், சில சமயங்களில் பார்க்கவும்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது. ஆண்டவரைப் பற்றி சூரியனாக நான் அப்பொழுது கேழ்விப்பட்டதையும் பார்த்ததையும், சில வார்த்தைகளில் இங்கே நான் விவரமாய் சொல்லுகிறேன்.

வானத்தில் அல்லாமல், வானங்களுக்கு மேலே உயரத்திலும், தலைக்கு நேராய் மேலேயும், உச்சியிலேயு மல்லாமல் நடுத்தரமான உயரத்தில், தேவர்களின் முகங்களின் முன்பாகவும், ஆண்டவர் சூரியனாக காணப்படுகிறார். வெகு தூரத்தில், ஒன்று வலது கண்ணுக்கு முன்பாகவும், மற்றது இடது கண்ணுக்கு முன்பாகவும் இரண்டு வேறான இடங்களில் அவர் காணப்படுகிறார். வலது கண்ணுக்கு முன்பாக சரியாய் ஒரு சூரியனைப்போலவும், பிரகாசத்திலும் அளவிலும் உலகத்து சூரியனைப்போலவும், அவர் தோன்றுகிறார்; ஆனால், இடது கண்ணுக்கு முன்பாக சூரியனைப் போலல்லாமல், சந்திரனைப்போலவும், அளவிலும் பிரகாசத்திலும், நம்முடைய பூமியின் சந்திரனைப்போலவும், ஆனால் ஒவ்வொன்றும் அம்மாதிரியே பிரகாசமாயும் சோதியுடனும் இருக்கப்பட்ட அநேக குறைந்த சந்திரர்களால் சூழப்பட்டதுபோல், அதிக சோதியுடனும் தோன்றுகிறார். இம்மாதிரியாக ஆண்டவர் இரண்டு இடங்களிலும் வித்தியாசமாய் தோன்றுகிறார்; ஏனென்றால், அவர் அவரை ஏற்றுக்கொள்ளுதலின் குணத்துக்கு தக்கபடி ஒவ்வொருவனாலும் பார்க்கப்படுகிறார்; ஆகையினால், அவரை அன்பின் நன்மையில் ஏற்றுக்கொள்ளப்படுகிறவர்களால் ஒருவிதமாகவும், விசுவாசத்தின் நன்மையில் அவரை ஏற்றுக்கொள்பவர்களால் வேறுவிதமாகவும் காணப்படுகிறார். அன்பின் நன்மையில் அவரை ஏற்றுக்கொள்ளப்படுகிறவர்களால், ஏற்கைக்கு தக்கபடி தகதகவென்று சுவாலிக்கிற சூரியனைப்போல் அவர் காணப்படுகிறார். இவர்கள் அவருடைய பரம இராச்சியத்தில் இருக்கிறார்கள். ஆனால், விசுவாசத்தின் நன்மையில் அவரை ஏற்றுக்கொள்ளப்படுகிறவர்

களால், ஏற்கைக்கு தக்கபடி பிரகாசமுள்ளதும், ஒளிவீசுகிறதுமான சந்திரனைப்போல அவர் காணப்படுகிறார். இவர்கள் அவருடைய ஞானசம்பந்தமான இராச்சியத்திலிருக்கிறார்கள். அன்பின் நன்மையானது நெருப்புக்கு அனுவயப்படுகிறது என்பது காரணமாகயிருக்கிறது; ஆகையினால், நெருப்பு என்பது ஞானார்த்தத்தில் அன்பாயிருக்கிறது; விசுவாசத்தின் நன்மை வெளிச்சத்துக்கு அனுவயப்படுகிறது; நெருப்புகூட ஞானார்த்தத்தில் விசுவாசமாயிருக்கிறது.

மனதுக்கு சேர்ந்த உள்ளானவைகள், அன்பின் நன்மையிலிருந்து வலதுகண் மூலமாகவும், விசுவாசத்தின் நன்மையிலிருந்து இடதுகண் மூலமாகவும், இம்மாதிரியாக கண்கள் மூலமாக பார்க்கிறபடியினால், ஆண்டவர் கண்கள்மூலமாக தோன்றுகிறார்; ஏனென்றால், தேவர்களிலும் மனிதர்களிலும் வலது பக்கத்தில் இருப்பவைகளெல்லாம் உண்மை வருகிற நன்மைக்கு அனுவயப்படுகிறது; இடது பக்கத்தில் இருப்பவைகள் நன்மையிலிருந்து வருகிற உண்மைக்கு அனுவயப்படுகிறது. விசுவாசத்தின் நன்மை தன் சத்தில். நன்மையிலிருந்து வருகிற உண்மையா யிருக்கிறது.

**119**. அதனால்தான், வேதத்தில், அன்பை நோக்கி, சூரியனுக்கும், விசுவாசத்தை நோக்கி சந்திரனுக்கும் ஒப்பிடப்படுகிறது; அன்றியும், ஆண்டவரிடமிருந்து, ஆண்டவரிடத்து கொள்ளும் அன்பு சூரியனையும், ஆண்டவரிடமிருந்து, ஆண்டவரில் கொள்ளும் விசுவாசம் சந்திரனையும், பின்வரும் வாக்கியங்களில் போலவும்; வேறு இடங்களிலும் அர்த்தங் கொள்ளப்படுகிறது:—

"சந்திரனுடைய வெளிச்சம் சூரியனுடைய வெளிச்சத்தைப் போலவும், சூரியனுடைய வெளிச்சம் ஏழுத்தனையாய் ஏழுபகலின் வெளிச்சத்தைப் போலவும் இருக்கும்" (ஏசா. XXX. 26).

"உன்னை நான் அணைத்துப் போடுகையில், வானத்தை மூடி, அதின் நட்சத்திரங்களை இருண்டுபோகப் பண்ணுவேன்; சூரியனை மேகத்தினால் மூடுவேன், சந்திரனும் தன் ஒளியை கொடாதிருக்கும், நான் வான சோதியான விளக்குகளை எல்லாம் உன்மேல் இருண்டு போகப் பண்ணி, உன் தேசத்தின்மேல், அந்தகாரத்தை வரப் பண்ணுவேன்" (ஏசேக். xxxii. 7-8). "சூரியன் உதிக்கையில் இருண்டு போம்; சந்திரன் ஒளிகொடாதிருக்கும்" (ஏசா. xiii. 10). சூரியனும் சந்திரனும் இருண்டுபோகும்; நட்சத்திரங்கள் ஒளிமழுங்

கும்......சூரியன் இருளாகவும், சந்திரன் இரத்தமாகவும் மாறும்" (யோவே. ii. 10, 31; iii. 15).

"சூரியன் கறுப்புக் கம்பளியைப்போலக் கறுத்தது; சந்திரன் இரத்தம்போ லாயிற்று. நட்சத்திரங்களும் பூமியிலே விழுந்தது" (வெளி. vi. 12,13). "அந்நாட்களின் உபத்திரவம் முடிந்த உடனே, சூரியன் அந்தகாரப்படும், சந்திரன் ஒளியை கொடாதிருக்கும், நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், வானத்தின் சத்துவங்கள் அசைக்கப்படும்" (மத்தே. xxiv. 29).

இந்த வாக்கியங்களில், 'சூரியன்' என்பது அன்பையும், 'சந்திரன்' என்பதுசுவாசத்தையும், நட்சத்திரங்கள் என்பவை, நன்மையினுடையவும் உண்மையினுடையவும், அறிவுகளையும் கருதப்படுகிறது. இவைகள் இல்லாமல்போகும் காலத்தில் இருண்டுபோகப்படுமென்றும், தங்கள் வெளிச்சத்தை இழக்குமென்றும், வானத்திலிருந்து விழுமென்றும் சொல்லப்படுகின்றன. ஆண்டவர் வானத்தில் சூரியனைப்போல பார்க்கப்படுகிறாரென்பது, பேதுரு, ஜேம்ஸ், யோவான் இவர்கள் முன்பாக அவர் வேற்றுரு வெடுத்து, முகம் சூரியனைப் போல பிரகாசித்ததிலிருந்து தெளிவாகிறது (மத்தே. xvii. 2). சரீரத்திலிருந்து அப்பொழுது சீடர்கள் நீக்கப்பட்டு, அவர்கள் வானத்து வெளிச்சத்தில் இருந்தபோது, அவர்களால் இம்மாதிரியாக ஆண்டவர் பார்க்கப்பட்டார். இந்த காரணத்துக்காகத்தான், ஒரு அறிகுறியான திருச்சபையோடிருந்த பூர்வீகர்கள், தெய்வ ஆராதனை காலத்தில் கிழக்கிலிருந்த சூரியனிடத்து முகத்தை திருப்பினார்கள்; மேலும், இந்த காரணத்துக்காகத்தான் கோயில்களுக்கு கிழக்குப் பார்வை கொடுக்கப்பட்டது.

**120.** பரம அன்பு எவ்வளவு பெரிய தென்பதும், அது என்ன வென்பதும், தன்னுடைய அதிக உக்கிரத்திலிருக்கும்போது, உலகத்து சூரியனுடன் ஒப்பிடுவதால் அறிந்துகொள்ளப்படும்; அது நீர் நம்பும் பட்சத்தில், அந்த சூரியனைவிட, அதிக உக்கிரமானதாயிருக்கிறது. இந்த காரணத்துக்காக, சூரியனாக ஆண்டவர் வானங்களில் நேராய் பாயாமல், அவருடைய அன்பின் உக்கிரம் வழியில் படிப்படியாய் பதப்படுத்தப்படுகிறது. இந்தப் பதப்படுத்துதல், சூரியனைச் சுற்றி பிரகாசமான அரைக் கச்சுகள்போல் தோன்றுகிறது. தேவர்களும் கூட உட்பெருக்கினால் பழுதாக்கப்படாதபடி, மெல்லிய தகுதியான மேகத்தினால் மறைக்கப்படுகிறார்கள். இந்த காரணத்

துக்காகத்தான், பரமண்டலங்கள், அவைகளை ஏற்றுக்கொள்ளுத லுக்கு தக்கபடி, ஆண்டவருக்கு தூரத்திலிருக்கின்றன. அதிக உயர்ந்த பரமண்டலங்கள் அன்பின் நன்மையிலிருப்பதினால், அவைகள் சூரியனாக ஆண்டவருக்கு மிகவும் சமீபத்திலிருக்கின்றன; அதிக தாழ்ந்த பரமண்டலங்கள் விசுவாசத்தின் நன்மையிலிருப்ப தினால், அதிக தூரத்திலிருக்கின்றன; நன்மையில் இல்லாதவர்கள், நரகவாசிகளைப்போல், மிகவும் அதிக தூரத்திலிருக்கிறார்கள்; இந்த தூரமும், நன்மையை எதிர்க்கும் அளவுக்குத் தக்கபடி இருக்கிறது.

**121**. அடிக்கடி நேரிடுகிறபடி, ஆண்டவர் வானத்தில் காணப்படும்போது சூரியனால் சூழப்படாமல், அவருடைய முகத்தி லிருந்து பிரகாசிக்கிற தேவத்துவத்தினால் வானோர்களிலிருந்து வகையறுக்கப்பட்ட ஒரு வானோருக்குரிய உருவத்தில் காணப்படு கிறார். ஏனென்றால், நேரிலே ஆண்டவர், சூரியனால் எப்பொழுதும் சூழப்பட்டிருப்பதினால், அவர் அங்கே நேரில் இல்லை; ஆனால் அங்கே நோக்கத்திலிருக்கிறார். ஏனென்றால், தாங்கள் நிஜமாக இருக்கும் இடத்துக்கு அதிக தூரத்தில் இருந்தாலும், தங்கள் நோக்கம் நாட்டப்பட்ட அல்லது முடிவாகிற இடத்தில் ஜனங்கள் இருப்பதாக காணப்படுதல் சுவர்க்கத்தில் சாதாரணமாயிருக்கிறது. இந்த பிரசன்னம், உட்பார்வையின் பிரசன்னமென்று சொல்லப் படுகிறது; இதைப்பற்றி இனிமேல் நாம் பேசுவோம். ஆண்டவரை நான் சூரியனுக்கு வெளியேயும், பெரும் உயரத்தில் சூரியனுக்கு கொஞ்சம் கீழேயும்கூட பார்த்திருக்கிறேன்; மேலும் பிரகாசிக் கிற முகத்துடன் அம்மாதிரியான உருவத்தில் சமீபத்திலும், ஒரு தரம் சுவாலைபோன்ற ஜோதியைப்போல் வானோர் மத்தியிலும் நான் பார்த்திருக்கிறேன்.

**122**. உலகத்து சூரியன், வானத்து சூரியனுக்கு எதிரில், ஏதோ ஒரு இருண்டபொருளைப்போலவும், சந்திரன், வானத்தின் சந்திரனுக்கு எதிரில் அதிலும் குறைவான இருண்ட பொருளைப் போலவும் தோன்றுகின்றன. இது அடிக்கடி நேரிடுகிறது. உலகத்து கடுஞ் சூடு தன்னையே நேசித்தலுக்கு அனுவயப்படுகிறது என் பதும், அதிலிருந்து வரும் வெளிச்சம், அந்த அன்பிலிருந்து வந்த பொய்யானதற்கு அனுவயப்படுகிறது என்பதும், அதற்குக் கார ணமாயிருக்கிறது. தன்னையே நேசித்தல், தெய்வ அன்புக்கு நேராய் எதிரிடையா யிருக்கிறது; தன்னையே நேசித்ததிலிருந்து வந்த

பொய்யானது, தெய்வ உண்மைக்கு நேராய் எதிரிடையா யிருக்கிறது; தெய்வ அன்புக்கும் தெய்வ உண்மைக்கும் எதிரிடையானது, வானோர்களுக்கு கனமான இருளா யிருக்கிறது. அதனால்தான் ஸ்தூல உலகத்து சூரியனையும் சந்திரனையும் தொழுதலும், அவைகள் முன்பாக வணங்குதலும், வேதத்தில் தன்னையேயும், அந்த அன்பிலிருந்து வந்த பொய்களையும், நேசித்தலென்று அருத்தம்கொள்ளப்படுகிறது; அப்பேர்ப்பட்டவர்கள் வெட்டப்படுவார்களென்று சொல்லப்படுகிறது(உபாக. iv. 9; அத்தி. xvii. 3,4, 5;எரேமி.viii. 1, 2; எசேக். viii. 15, 16, 18; வெளி. xvi. 8; மத்தே. xiii. 6).

**123.** ஆண்டவர் தன்னிடமிருப்பதும் தன்னிடமிருந்து வருவதுமான பரம அன்பிலிருந்து, வானத்தில் சூரியனாக காணப்படுகிறபடியினால், பரம இராச்சியத்தில் இருப்பவர்கள், அவரிடத்து சூரியனாகவும், ஞானசம்பந்தமான இராச்சியத்தில் இருப்பவர்கள் அவரிடத்து சந்திரனாகவும்,இவ்விதமாக தாங்களே அவரிடத்து அடிக்கடி திரும்புகிறார்கள். ஆனால், நரகத்தி லிருக்கப்பட்டவர்கள், எதிர்முகமான திக்கிலிருக்கும் நள்ளிருளுக்கும் கருகலுக்கும்,இம்மாதிரியாக ஆண்டவருக்கு பின்னேக்காய், தாங்களே திரும்பிக் கொள்ளுகிறார்கள். அப்படி திரும்புதலும், நரகத்திலிருப்பவர்கள் எல்லாம் தன்னையேயும் உலகத்தையுமே நேசித்தலினும், இவ்விதமாக ஆண்டவருக்கு விரோதமாகவும் இருக்கிறார்கள் என்கிற காரணத்தினால் ஏற்படுகிறது. இந்த உலகத்து சூரியன் இருக்கிற இடத்தில் இருக்கிற நள்ளிருளுக்குதாங்களே திருப்பிக்கொள்ளுகிறவர்கள், பின்புறத்திலிருக்கும் நரகங்களிலிருக்கிறார்கள். அவர்கள் பூதகணங்கள் என்று சொல்லப்படுகிறார்கள்; ஆனால் சந்திரன் இருக்கப்பட்ட இடத்தில் இருக்கிற இருட்டுக்கு தாங்களே திரும்புகிறவர்கள், அதிகமாய் முன் புறத்தில் இருக்கும் நரகங்களிலிருக்கிறார்கள்; அவர்கள் ஆவிகள் என்று சொல்லப்படுகிறார்கள். இந்த காரணத்துக்காகத்தான், நரகத்திலிருக்கப்பட்டவர்கள் இருட்டிலும், சுவர்க்கத்திலிருக்கப்பட்டவர்கள் வெளிச்சத்திலிருப்பதாக சொல்லப்படுகிறார்கள். இருட்டு என்பதுகூட தீமையிலிருந்து வந்த பொய்யையும், வெளிச்சம் என்பது நன்மையிலிருந்துவந்த உண்மையையும் அருத்தம் கொள்ளப்படுகிறது. மறு வாழ்வில் எல்லாரும், தங்களுடைய அகத்தில் அரசாளும் பொருள்களிடத்தில் அதாவது தங்களுடைய ஆசைகளிடத்து நோக்கம் வைக்கிறபடியினாலும், தேவர்

கள் விஷயத்திலும் ஆவிகள் விஷயத்திலும் உள்ளானவைகள் முகத்தை தீர்மானிக்கிறபடியினாலும், அவர்கள் தாங்களே இம்மாதிரி திரும்பி கொள்ளுகிறார்கள். ஸ்தூல உலகத்தைப்போல், ஞான சம்பந்தமான சூக்கும உலகத்தில்கூட ஸ்திரமான இடங்கள் இல்லை. ஆனால் முகம்தான் அவைகளை ஸ்திரப்படுத்துகிறது. மனிதன்கூட தன் ஆவி சம்பந்தப்பட்டவரையில், தன்னுடையவும் உலகத்தினுடையவும் அன்பில் இருந்தால், ஆண்டவருக்கு பின்புறமும், ஆண்டவரிடத்தும் அயலானிடத்தும் அன்பிலிருந்தால், ஆண்டவர் பக்கமும், அதே மாதிரி திரும்புகிறான். ஆனால், சூரியன் உதயத்தையும் அஸ்தமனத்தையும் அனுசரித்து, இடங்கள் ஸ்திரப்படுத்தப்படுகிற ஸ்தூல உலகத்தில் மனிதன் இருக்கிறபடியினால், இது அவனுக்கு தெரியாது. ஆனால், இது மனிதர்களுக்கு அறிந்துக் கொள்ளுதல் பிரயாசமானதாயிருக்கிறபடியினால், நாம் இருப்பிடங்களையும், வெளிகளையும், காலத்தையும்பற்றி பேசுங்காலத்தில், இதைப்பற்றி இன்னும் அதிகமாய் விவரித்துச் சொல்லுவோம்.

**124**. ஆண்டவர் சுவர்க்கத்தின் சூரியனாக இருக்கிறபடியினாலும், அவரிடமிருந்து வருகிற எல்லாப் பொருள்களும் அவரை எதிர் பார்க்கிறபடியினாலும், எல்லா கட்டளைகளும் தீர்மானங்களும் புறப்படுகிற மையமாககூட ஆண்டவரிருக்கிறார். இவ்விதமாக, சுவர்க்கங்களிலும் பூமிகள்பேரிலும், இரண்டிலும் கீழே யிருக்கும் எல்லா பொருள்களும் அவருடைய சந்நிதியிலும் அவருடைய பரிபாலணத்திலு மிருக்கின்றன.

**125**. இவைகளிலெல்லா மிருந்து, ஆண்டவரைக் குறித்து முந்திய அத்தியாயங்களில் சொல்லி காண்பிக்கப்பட்டவைகள், மிகவும் தெளிவான வெளிச்சத்தில் பார்க்கப்படலாம்; அதாவது: அவர் சுவர்க்கத்து தேவர் என்பதும் (நெ. 2 முதல் 6 வரையில்), அவருடைய தேவத்துவம் சுவர்க்கத்தை உண்டாக்குகிற தென்பதும் (நெ. 7 முதல் 12 வரையில்), சுவர்க்கத்தில் ஆண்டவரின் தேவத்துவம் அவரிடத்து அன்பும், அயலானிடத்து தருமமாயிருக்கிற தென்பதும் (நெ. 13 முதல் 19 வரையில்), உலகத்தின் எல்லா பொருள்களின் ஒரு அன்னுவயம் சுவர்க்கத்துடனும், சுவர்க்கத்தின் மூலமாக ஆண்டவருடன் இருக்கிறதென்பதும் (நெ. 87 முதல் 115 வரையில்), மேலும், ஸ்தூல உலகத்தின் சூரியனும் சந்திரனும் அவ்வித அன்னுவயங்களை உடைத்தாயிருக்கின்றன என்பதும் (நெ. 105) அப்படி பார்க்கப்படலாம்.

# XV

## சுவர்க்கத்தில் வெளிச்சமும் சூடும்

**126**. பரமண்டலங்களில் வெளிச்சம் இருக்கிறதென்று, பிரகுருதியிலிருந்து மாத்திரம் நினைப்பவர்களுக்கு கிரகிக்கப்பட முடியாது; அல்லாமலும், பரமண்டலங்களில் வெளிச்சமானது, உலகத்து மத்தியான வெளிச்சத்தைவிட, அநேக பாகம் மிஞ்சும் படியாக, அவ்வளவு பெரியதாயிருக்கிறது. நான் சாயங்காலத்திலும் இரவிலும்கூட அதை அடிக்கடி பார்த்திருக்கிறேன். சுவர்க்கத்தின் வெளிச்சத்துடன் ஒப்பிடும்போது, இந்த உலகத்தின் வெளிச்சமானது இருளைவிட கொஞ்சம்கூட அதிகமில்லை என்று தேவர்கள் சொல்லுவதை நான் கேட்டபோது, முதலில் நான் ஆச்சரியப்பட்டேன்; ஆனால் அதை இப்பொழுது பார்த்திருக்கிறபடியினால், அது அப்படி இருக்கிறதென்று நான் சாட்சி சொல்லக்கூடும். சுவர்க்கத்தின் வெளிச்சத்தினுடைய சோதியும் மினுக்கும் விவரிக்க முடியாதபடி இருக்கிறது; சுவர்க்கங்களில் நான் பார்த்தவைகளெல்லாம், அந்த வெளிச்சத்தில் நான் பார்த்திருக்கிறேன்; இவ்விதமாக இந்த உலகத்திலுள்ள பொருள்களைவிட அதிக தெளிவாயும் திருத்தமாயும் பார்த்திருக்கிறேன்.

**127**. சுவர்க்கத்தின் வெளிச்சமானது உலகத்தின் வெளிச்சத்தைப்போல ஸ்தூலமாயில்லாமல் சூக்குமமாயிருக்கிறது; ஏனென்றால், அது ஆண்டவரிடமிருந்து சூரியனைப்போல புறப்படுகிறது; முன் அத்தியாயத்தில் காண்பித்தபடி அந்த சூரியன் பரம அன்பாக இருக்கிறது. ஆண்டவரிடமிருந்து சூரியனாக புறப்படுகிறது, தன் சத்தில் பரம உண்மையுடன் சேர்க்கப்பட்ட பரம நன்மையாக இருந்தபோதிலும், சுவர்க்கங்களில், அது பரம உண்மை என்று சொல்லப்படுகிறது. பரம உண்மையிலிருந்து வெளிச்சமும், பரம நன்மையிலிருந்து சூடுமாக, வெளிச்சத்தையும் சூட்டையும் தேவர்கள் இதிலிருந்து அடைகிறார்கள். சுவர்க்கத்தின் வெளிச்சமும், சூடும்கூட, அவ்வித மூலத்திலிருந்து வருகிறபடியினால், அவைகள் தெளிவாக, ஸ்தூலமாயில்லாமல், சூக்குமமாயிருக்கின்றன.

**128**. தேவர்கள் ஸ்தூலமாயல்லாமல், சூக்குமமாயிருக்கிறபடியினால், பரம உண்மையானது, அவர்களுக்கு

வெளிச்சமாயிருக்கிறது. சூக்கும பிராணிகள், தங்களுடைய சொந்த சூரியனிடமிருந்தும், ஸ்தூல பிராணிகள் தங்களுடைய சூரியனிலிருந்தும் பார்க்கிறார்கள். பரம உண்மை என்பதிலிருந்துதான், தேவர்களுக்கு அறிவு வருகிறது; அவர்களுடைய அறிவு என்பது உள்ளே பாய்ந்து புறம்பான பார்வையை உற்பத்தி செய்கிற அவர்களுடைய உள்ளான பார்வையாயிருக்கிறது; ஆகையினால், சுவர்க்கத்தில், ஆண்டவரிடமிருந்து சூரியனாக பார்க்கப்படுகிறதெல்லாம் வெளிச்சத்தில் பார்க்கப்படுகிறது. சுவர்க்கத்தில் வெளிச்சத்தின் மூலம் இப்படியிருப்பதினால், ஆண்டவரிடமிருந்து பரம உண்மையை ஏற்றுக் கொள்ளுதலுக்கு தக்கபடி, அல்லது அதே அருத்தமாகிறதாகிய தேவர்கள் இருக்கப்பட்ட புத்திக்கும் ஞானத்திற்கும் தக்கபடி, அது வேறுபடுகிறது. ஆகையினால், பரம இராச்சியத்தின் வெளிச்சம், ஞான சம்பந்தமான இராச்சியத்தின் வெளிச்சத்திலிருந்து வேறுபடுகிறது; அது ஒவ்வொரு கூட்டத்திலும்கூட வேறுவிதமாயிருக்கிறது. பரம இராச்சியத்தில் வெளிச்சம் சுவாலையுள்ளதாக தோன்றுகிறது. ஏனென்றால், அங்கேயிருக்கும் தேவர்கள், ஆண்டவரிடமிருந்து சூரியனாக வெளிச்சத்தை பெற்றுக்கொள்ளுகிறார்கள்; ஆனால், ஞான சம்பந்தமான இராச்சியத்தில் வெளிச்சம் வெண்மையாயிருக்கிறது. ஏனென்றால், அங்கிருக்கும் தேவர்கள் ஆண்டவரிடமிருந்து சந்திரனாக வெளிச்சத்தை பெற்றுக்கொள்ளுகிறார்கள் (மேலே, நெ. 118-ஐப் பார்க்கவும்). வெளிச்சம்கூட ஒரு கூட்டத்திலிருக்கிற மாதிரி மற்றொன்றில் இருக்கிறதில்லை. ஒவ்வொரு தனித்த கூட்டத்திலும் அதேமாதிரி வித்தியாசப்படுகிறது; ஏனென்றால், மத்தியிலிருக்கப்பட்டவர்கள் பெரிய வெளிச்சத்திலிருக்கிறார்கள், சுற்றளவிலிருக்கப்பட்டவர்கள் குறைந்த வெளிச்சத்திலிருக்கிறார்கள் (நெ. 43 பார்க்கவும்). சுருங்கச் சொல்லில், தேவர்கள் பரம உண்மையை ஏற்றுக்கொள்ளுகிற அளவு, அதாவது, ஆண்டவரிடமிருந்து புத்தியிலும் ஞானத்திலுமிருக்கிற அளவு, அவர்கள் வெளிச்சத்தை உடைத்தாயிருக்கிறார்கள். இதினால்தான், சுவர்க்கத்து தேவர்கள் வெளிச்சமுள்ள தேவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

**129.** சுவர்க்கங்களிலுள்ள ஆண்டவர் பரம உண்மையாயிருப்பதினாலும், அங்கே பரம உண்மை வெளிச்சமாயிருப்பதினா

னும், வேதத்தில் ஆண்டவர், வெளிச்சம் என்று சொல்லப்படுகிறார்; மேலும், அவரிடமிருந்து வரும் ஒவ்வொரு உண்மையும், பின்வரும் வாக்கியங்களில்போல, வெளிச்சம் என்று சொல்லப்படுகிறது: இயேசு சொன்னதாவது: "நான் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன், என்னை பின்பற்றுகிறவன் இருளிலே நடவாமல், ஜீவ ஒளியை அடைந்திருப்பான்" (யோவா. viii. 12): "நான் உலகத்திலிருக்கையில், உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன்" (யோவா. ix. 5). இயேசு சொன்னதாவது: "இன்னும் கொஞ்சகாலம், ஒளி உங்களிடத்தில் இருக்கும்; இருளில் நீங்கள் அகப்படாதபடிக்கு ஒளி உங்களோடிருக்கையில், நடவுங்கள்...ஒளி உங்களோடிருக்கையில் நீங்கள் ஒளியின் பிள்ளைகளாகும்படி, ஒளியினிடத்தில் விசுவாசமாயிருங்கள்.....என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனெவனும் இருளில் இராதபடிக்கு, நான் உலகத்தில் ஒளியாக வந்தேன்" (யோவா. 35, 36, 46). "ஒளியானது உலகத்திலே வந்திருந்தும், மனிதர்கள் ஒளியைப் பார்க்கிலும் இருளை விரும்பினார்கள்" (யோவா. iii. 19). ஆண்டவரைக் குறித்து யோவான் சொன்னதாவது: "எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளி" (யோவா. i. 4, 9). "இருளில் இருக்கும் ஜனங்கள் பெரிய வெளிச்சத்தைக் கண்டார்கள்; மரண இருளின் திசையிலிருக்கிறவர்களுக்கு வெளிச்சம் உதித்தது" (மத்தே. iv. 16). "நீர் பூமியின் கடைசி பரியந்தம் என்னுடைய ரட்சிப்பாயிருக்கும்படி, உம்மை ஜாதிகளுக்கு ஒளியாயும் வைப்பேன்" (ஏசா. xlix. 6). இரட்சிக்கப்படுகிற ஜனங்கள் அதின் வெளிச்சத்திலே நடப்பார்கள்" (வெளி. xxi. 24). உமது வெளிச்சத்தையும் உமது சத்தியத்தையும் அனுப்பியருளும்: அவைகள் என்னை நடத்தட்டும்" (சங்கீதம் xliii. 3). இவைகளிலும் இதர வாக்கியங்களிலும் தன்னிடமிருந்து வரும் பரமார்த்த உண்மை விஷயத்தில் ஆண்டவர் ஒளி என்று சொல்லப்படுகிறார்; உண்மையே கூட ஒளி என்று சொல்லப்படுகிறது. சுவர்க்கத்து ஒளி ஆண்டவரிடமிருந்து சூரியனாக புறப்படுகிறபடியினால், பேதுரு, ஜேம்ஸ், யோவான் இவர்கள் முன்பாக அவர் வேற்றுருவுவாக்கப்பட்டபோது, "அவர் முகம் சூரியனைப்போல் பிரகாசித்தது: அவருடைய வஸ்திரம் உறைந்த மழையைப்போல் பூமியிலே எந்த வண்ணானும் வெளுக்கக்கூடாத வெண்மையாய் பிரகாசித்தது." (மார்க். ix. 3; மத்தே. xvii. 2). ஆண்டவருடைய வஸ்திரங்கள், சுவர்க்கங்களில்

அவரிடமிருந்து வருகிற பரமார்த்த உண்மையை சாயல் காட்டின படியினால், அவைகள் இவ்விதமாக தோன்றின; ஆகையினால், வேதத்தில் வஸ்திரங்கள் என்பது, உண்மைகளை கருதப்படுகின்றன; தாவீதில் இதனால்தான் "ஏகோவாவே, ஒரு வஸ்திரத்தால் போல், ஒளியினால் நீர் தரித்துக்கொள்ளுகிறீர். (சங்கீதம். civ. 2.)

**130.** சுவர்க்கங்களில் ஒளியானது ஆத்மார்த்த மானதென்பதும், இந்த ஒளி பரமார்த்த உண்மை என்பதும், தேவர்களைப் போல் மனிதர்களும்கூட சூக்கும ஒளியை உடைத்தாயிருக்கிறார்களென்கிறதும், பரம உண்மையிலிருந்து அறிவிலும் ஞானத்திலுமிருக்கிற வரையில், அந்த ஒளியிலிருந்து மனத்தெளிவை அடைகிறார்களென்கிறதுமாகிய உண்மையிலிருந்து கூட அனுமானிக்கப்படலாம். மனிதனுடைய சூக்கும ஒளி அவனுடைய புத்தியின் ஒளியாயிருக்கிறது; அந்த ஒளியின் விஷயங்கள் தான், கூட்டங்களாக கூறுகூறாய் ஒழுங்கு படுத்தியும், காரணங்களாக உருவு படுத்தியும், தொடர்ச்சியாக அவைகளிலிருந்து முடிவுகளை கிரகிக்கிற உண்மைகளாயிருக்கின்றன. புத்தி, இவ்விதமான பொருள்களை பார்க்கிற ஒளியானது உண்மையான ஒளியென்று ஸ்தூல மனிதனுக்கு தெரியாது; ஏனென்றால், அவன் அதை கண்களால் பார்க்கிறதுமில்லை, சிந்தனையினால் உணருகிறதுமில்லை; என்றாலும், அநேகர் அதை தெரிந்துகொண்டு சூக்குமமாய் அல்லாமல், ஜடமாய் நினைக்கிறவர்கள் இருக்கப்பட்ட ஸ்தூல வெளிச்சத்திலிருந்து அதை வகையறுக்கிறார்கள். உலகத்தை மாத்திரம் எதிர்பார்த்து, எல்லா பொருள்களையும் பிரகுருதிக்கு சாட்டுகிறவர்கள் ஸதூலமாய் நினைக்கிறார்கள்; ஆனால், சுவர்க்கத்தை எதிர்பார்த்து எல்லா பொருள்களையும் தெய்வத்திற்கு சாட்டுகிறவர்கள் சூக்குமமாய் நினைக்கிறார்கள். மனதை தெளிவிக்கிற ஒளி, ஸ்தூலமானதென்று சொல்லப்படுகிற ஒளியைவிட முழுமையும் வேறானதாயிருக்கிற உண்மையான ஒளியாயிருக்கிறதென்று உணரவும், பார்க்கவும்கூட எனக்கு அடிக்கடி அருள் செய்யப்பட்டது. அந்த ஒளிக்குள் உள்ளுக்குள்ளாய் படிப்படியாய் நான் உயர்த்தப்பட்டேன்; மேலும், நான் அப்படி உயர்த்தப்பட்டபோது முன்னமே பார்க்காதவைகளையும், கடைசியாய் ஸ்தூல ஒளியிலிருந்து சிந்தனையினால் கிரகிக்கக் கூடமுடியாத பொருள்களையும் நான் பார்க்கக்கூடியபடி, என்னுடைய புத்தியானது அவ்வளவு தெளிவானது. இவைகளெல்லாம்,

சுவர்க்கத்தின் வெளிச்சத்தில், அவ்வளவு துலக்கமாயும் சுத்தமாயும் பார்க்கக்கூடியதாயிருக்கையில், அவைகள் ஸ்தூல வெளிச்சத்தில் கிரகிக்க முடியவில்லை என்று நான் சில சமயங்களில் கிலேசப்பட்டேன். புத்திக்கு சேர்ந்த அதன் ஒரு ஒளியிருப்பதினால், கண் பார்க்கிறதாகவும், அது பார்க்கும்போது ஒளியிலிருப்பதாகவும் அது பார்க்காதபோது, மங்கலிலும் இருட்டிலுமிருப்பதாகவும், இன்னனபல கண்ணைப்பற்றி சொல்லுவதுபோல, அதைப்பற்றியும் அதேமாதிரி சொல்லப்படுகின்றன.

**131** சுவர்க்கத்தின் ஒளி, பரம உண்மையாயுமிருக்கிறபடியினால், இந்த ஒளி பரம ஞானமாகவும் அறிவாகவும்கூட இருக்கிறது. ஆகையினால், சுவர்க்கத்தின் ஒளிக்கு உயர்த்தப்படுதல் என்பது, அறிவுக்கும் ஞானத்துக்கும் உயர்த்தப்பட்டு தெளிவாக்கப்படுதலென்கிறதே யாகிறது. இந்த காரணத்துக்காக தேவர்கள், தங்களுக்கு எவ்வளவு அறிவும் ஞானமுமிருக்கிறதோ, அவ்வளவே பிரமாணம், ஒளியை உடைத்தாயிருக்கிறார்கள். சுவர்க்கத்தின் ஒளி பரமஞானமாயிருக்கிறதினால், அந்த ஒளியில், ஒவ்வொருவனுடையகுணமும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஒவ்வொருவனுடைய உள்ளானவைகள், அவைகள் இருக்கிறபடி சின்னஞ் சிறியதுகூட மறைக்கப்படாமல், அவனுடைய முகத்தில் பார்வைக்கு வெளியாயிருக்கிறது. உள்ளான தேவர்கள்கூட நன்மையானதைத்தவிர, வேறு யாதொன்றையும் மனங்கொள்ளாதபடியினால், தங்களுக்குள்ளே இருப்பவைகள் எல்லாம் வெளிப்படையாக வேண்டுமென்று விரும்புகிறார்கள். நன்மையானதை மனங்கொள்ளாத சுவர்க்கத்திற்கு கீழே இருப்பவர்கள் விஷயத்தில் அது வேறுமாதிரி; இந்த காரணத்துக்காக சுவர்க்கத்தின் வெளிச்சத்தில் பார்க்கப்பட அவர்கள் மிகவும் பயப்படுகிறார்கள். நரகத்திலிருக்கிறவர்கள் ஒருவருக்கொருவர் மனிதர்களாகவும், ஆனால் சுவர்க்கத்தின் வெளிச்சத்தில், தங்கள் சொந்த தீமையின் சரியான உருவங்களாகிய பயங்கரமான முகத்தையும் வடிவத்தையுமுடைய குரூபாங்கிகளாக, அவர்கள்தோன்றுகிறார்கள் என்று சொல்வது பிரமிப்பிக்கிறதாயிருக்கிறது. தேவர்களால் பார்க்கப்பட்டபோது, மனிதன் விஷயத்திலும், அவன் ஆன்மா சம்பந்தப்பட்ட வரையில் அதேமாதிரியிருக்கிறது. அவன் நல்லவனாயிருந்தால், தன் நன்மைக்குத் தக்கபடி அழகுடன் ஒரு மனிதனைப்போல் தோன்றுகிறான்; துன்மார்க்கனாயிருந்தால், அவன் துன்மார்க்கத்துக்கு தக்கபடி அவலக்ஷ

ணத்துடன் ஒரு குருபாங்கியைப்போல் தோன்றுகிறுன். ஆதலால், எல்லா பொருள்களும் சுவர்க்கத்தின் வெளிச்சத்தில் வெளிப்படையாகின்றனவென்பது விசதமாகிறது. சுவர்க்கத்தின் வெளிச்சம் பரம உண்மையாயிருப்பதினுல் வெளிப்படையாக்கப்படுகின்றன.

**132.** பரம உண்மையானது சுவர்க்கங்களில் ஒளியாயிருப்பதினுல், எல்லா உண்மைகளும் ஒரு தேவன் உள்ளேயாவது அவனுக்கு வெளியேயாவது, சுவர்க்கங்களிலாவது அவைகளுக்கு வெளியாவது, எங்கேயிருந்தபோதிலும் ஒளியுடன் பிரகாசிக்கின்றன. என்றுலும், சுவர்க்கங்களுக்கு வெளியே இருக்கும் உண்மைகள், சுவர்க்கங்களுக்கு உள்ளேயிருக்கும் உண்மைகளைப்போல் பிரகாசிக்கிறதில்லை. சுவர்க்கங்களுக்கு வெளியேயிருக்கும் உண்மைகள், சுவர்க்கங்களுக்குள்ளிலிருக்கும், உண்மைகளைப்போல், நன்மையிலிருந்து தங்கள் சத்தை அடையாதபடியினுல், அவைகள், சூடில்லாத உறைபனிபோல் குளிர்ந்து பிரகாசிக்கின்றன. ஆகையினுல், அந்த குளிர்ந்த ஒளி, சுவர்க்கத்தின் ஒளி அதின்பேரில் படும்போது மறைந்து போகிறது; கீழேதீமையிருந்தால், அது இருட்டாக மாற்றப்படுகிறது. இதையும், இங்கே சொல்லாமல் விடவேண்டிய உண்மையின் பிரகாசத்தைப்பற்றி, இதர அநேக கவனிக்கத்தக்க விஷயங்களையும் நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன்.

**133.** சுவர்க்கத்தின் சூட்டைப்பற்றி சிலது இப்பொழுது சொல்லப்பட வேண்டும். தன் சத்தில், இந்த சூடானது அன்பாகயிருக்கிறது. முன் அத் யத்தில் காண்பிக்கப்பட்டபடி, ஆண்டவரிலும், ஆண்டவரிட ந்தும் வருகிற பரம அன்பாயிருக்கிற, ஆண்டவரிடமிருந் சூரியனாக அது வருகிறது. சுவர்க்கத்தின் சூடு, சுவர்க்கத்தின் ஒளி அதே மூலத்திலிருந்து வருகிறபடியினுல், அவைகள் சூக்குமமாயிருக்கிறது. ஆண்டவரிடமிருந்து சூரியனாக புறப்படுகிற பரம உண்மை பரம நன்மை என்கிற இரண்டு பொருள்கள் இருக்கின்றன: சுவர்க்கங்களில் பரம உண்மை ஒளியாகவும், பரம நன்மை சூடாகவும் தோன்றுகின்றன: ஆனுல் பரம உண்மையும் பரம நன்மையும், இரண்டல்லாமல் ஒன்றுகும்படி சேர்க்கப்பட்டிருக்கின்றன. என்றுலும் தேவர்களிடத்தில் அவைகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஏனென்றுல், சில தேவர்கள் பரம உண்மையைவிட அதிகமாய் பரம நன்மையை பெற்றுக்கொள்ளுகிறுர்கள். மற்றவர்கள் பரம நன்மையைவிட

பரம உண்மையை அதிகமாய்ப் பெற்றுக் கொள்ளுகிறார்கள். பரம நன்மையை அதிகமாய்ப் பெற்றுக் கொள்ளுகிறவர்கள், ஆண்டவருடைய பரம இராச்சியத்திலிருக்கிறார்கள். பரம உண்மையை அதிகமாய்ப் பெற்றுக்கொள்ளுகிறவர்கள், ஆண்டவருடைய ஞானசம்பந்தமான சூக்கும உலகத்தில் இருக்கிறார்கள்; ஆனால், மிகவும் பரிபூரணமான தேவர்கள், இரண்டையும் ஒரே பிரமாணத்தில் ஏற்றுக் கொள்ளுகிறவர்களா யிருக்கிறார்கள்.

**134.** சுவர்க்கத்தின் ஒளியைப்போல், சுவர்க்கத்தின் சூடு, எவ்விடத்திலும் வேறுபட்டிருக்கிறது. ஞான இராச்சியத்தில் அது இருப்பதைவிட பரம இராச்சியத்தில் வேறானதாயிருக்கிறது. அங்கே ஒவ்வொரு கூட்டத்திலும் அது வேறானதாயிருக்கிறது. அளவிலும் குணத்திலும் இரண்டிலும் அது வித்தியாசப்படுகிறது. ஆண்டவருடைய பரம இராச்சியத்தில், அது அதிக நெருங்கியதாகவும் சுத்தமாகவுமிருக்கிறது; ஏனென்றால் அங்கிருக்கும் தேவர்கள் பரம உண்மையை அதிகமாய் அங்கீகாரம் செய்பவர்களாயிருக்கிறார்கள். ஆண்டவருடைய ஞானசம்பந்தமான இராச்சியத்தில், அது குறைவாக நெருங்கியும் சுத்தமாகவுமிருக்கிறது; ஏனென்றால், அங்கிருக்கும் தேவர்கள் பரம உண்மையை அதிகமாய் அங்கீகாரம் செய்பவர்களா யிருக்கிறார்கள்; அது ஒவ்வொரு கூட்டத்திலும் ஏற்கைக்குத் தக்கபடி வித்தியாசப்படுகிறது. நரகங்களிலும்கூட சூடு இருக்கிறது; ஆனால் அது அசுத்தமாயிருக்கிறது. சுவர்க்கத்திலிருக்கும் சூடு பரிசுத்தமானதும், சுவர்க்கத்திற்கு அடுத்ததுமாகிய தீயினால் கருதப்படுவதாயிருக்கிறது; நரகத்தின் சூடு, அசுத்தமானதும், நரகத்திற்கு அடுத்ததுமாகிய தீயினால் கருதப்படுகிறதாயிருக்கிறது: இரண்டும் அன்பைக் காண்பிக்கிறது. சுவர்க்கத்தின் தீயானது, ஆண்டவரிடத்து அன்பையும், அயலானிடத்து அன்பையும், அந்த அன்புகளிலிருந்து வந்த ஒவ்வொரு நேசத்தையும் காண்பிக்கிறது; நரகத்தின் தீயானது, தன்னையே நேசித்தலையும், உலகத்தை நேசித்தலையும், அந்த அன்புகளிலிருந்து வந்த ஒவ்வொரு துராசையையும் காண்பிக்கிறது. சூக்கும மூலத்திலிருந்து வந்த சூடாய், அந்த அன்பு இருக்கிறதென்பது, ஒருவன் அன்பினால் சூடாகிறதிலிருந்து விசதமாகிறது; அதன் சுபாவத்திற்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி ஒரு மனிதன் அனலாய், சூடுள்ளவனாகிறான்; அவனுடைய அன்பு எதிர்க்கப்பட்டபோது, அந்த

சூடானது கண்ணுக்குப் புலப்படுகிறது. அதனால்தான், நன்மையி னிடத்து காட்டும் அன்பிலிருந்து வருகிற, நேசங்கள் விஷ யத்திலும், தீமையினிடத்து காட்டும் அன்பினுடைய மோகங் கள் விஷயத்திலும்கூட இரண்டிலும், தீ மூட்டப்பட்டதென்றும், சூடாகுதலென்றும், எரிகிறதென்றும், கொதிக்கிறதென்றும். நெருப்பின் பேரில் இருக்கிறதென்றும் பேசுதல் வழக்கமாயிருக் கிறது.

**135**. ஆண்டவரிடமிருந்து வருகிற பரம நன்மையிலிருந்து, தேவர்களின் உள்ளானவைகள் அன்பில் இருப்பதினாலும், ஆகவே, ஆதலால் சூடாகிற அவர்களுடைய புறம்பானவைகள் சூட்டிலிருப் பதினாலும், சூரியனாக ஆண்டவரிடமிருந்து வருகிற அன்பு சுவர்க் கத்தில் சூடாக உணரப்படுகிறது. அதனால்தான் இப்பொழுது தான் சொன்னபடி, சுவர்க்கத்தில் ஒவ்வொருவனும், அவன் அன் பின் குணத்துடன் அன்னுவயப்படுகிற சூட்டின் மாதிரியையும் பிரமாணத்தையும் உடைத்தாயிருக்கும்படியாக, சூடும் அன்பும் சுவர்க்கத்தில் ஒன்றுடன் ஒன்று அன்னுவயப்படுகிறது. உலகத்தின் சூடு, அதிக பருத்ததாக இருக்கிறதினாலும், சூக்குமமா யில்லாமல் ஸ்தூலமா யிருப்பதினாலும், அது சுவர்க்கங்களுக்குள் பிரவேசிக் கிறதேயில்லை; மனிதர்கள் சூக்கும உலகத்திலும் ஸ்தூல உலகத்தி லும் இரண்டிலும் இருப்பதினால், அவர்கள் விஷயத்தில் அது வேறு மாதிரி. ஆன்மா விஷயத்தில், அவர்களுடைய ஆசைகளுக்கு தக்கபடி முற்றும் ஆவியின் சூடாக வளர்கின்றன; சரீரம் விஷயத்தில் ஆவியின் சூட்டிலிருந்தும் உலகத்தின் சூட்டிலிருந்தும் அவைகள் சூடாக வளர்கின்றன. அன்னுவயப்படுகிறபடியினால், முன் கூறியது பின் கூறியதில் பாய்கின்றது. தங்கள் இனத்தைப்போன்ற சந் ததியை உற்பத்தி செய்யும் ஆசை முக்கியமானதாயிருக்கிற அவைக ளுடைய ஆசைகள், வசந்த காலத்தினுடையவும், கோடை காலத்தி னுடையவும், சூடாயிருக்கிற உலகத்து சூரியனிடமிருந்து வருகிற சூட்டினுடைய சமுகத்திற்கும் செல்வாக்குக்கும் தக்கபடி உடைந்து தொழில் படுகிறபடியினால், சூட்டின் இருவிதங்களின் அன்னுவயத் தினுடைய சுபாவமும் குணமும், பிராணிகளிலிருந்து பார்க்கப்பட லாம். ஸ்தூலத்திலிருந்து சூக்குமத்திற்கு அல்லாமல், சூக்குமத்தி லிருந்து ஸ்தூலத்திற்கு மாத்திரம் உட்பெருக்கு இருக்கிறபடியி னால், உலகத்தின் சூடு உள்ளே பாய்ந்து, இந்த ஆசைகளை எழுப்பு கிறதென்று, நினைக்கிறவர்கள் தவறாயுணர்கிறார்கள். இந்த உட்

பெருக்கு பரம ஒழுங்கிற்கு சேர்ந்தது; ஆனால், மற்றது பரம ஒழுங்கிற்கு எதிரிடையாயிருக்கும்.

**136**. மனிதர்களைப்போல் தேவர்களுக்கும் புத்தியும் சித்தமும் இருக்கின்றன. சுவர்க்கத்தின் வெளிச்சமானது, பரம உண்மையாகவும், அதிலிருந்து பரம ஞானமாகவும் இருக்கிறபடியினால், சுவர்க்கத்தின் ஒளி அவர்கள் புத்தியின் உயிரை உண்டாக்குகிறது; சுவர்க்கத்தின் சூடு பரம நன்மையாகவும், அதிலிருந்து பரம அன்பாகவுமிருப்பதினால், சுவர்க்கத்தின் சூடு அவர்கள் சித்தத்தின் உயிரை உண்டாக்குகிறது. தேவர்களின் உயிரே, அதில் சூடு இருக்கிறது மட்டும் தவிர, ஒளியிலிருந்தல்லாமல், அந்த சூட்டிலிருந்து வருகிறது. சூட்டை நீக்கின உடனே உயிர் அழிந்து போகிறபடியினால், அந்த உயிரானது சூட்டிலிருந்து வருகிறதென்பது விசதமாகிறது. அன்பில்லாத விசுவாசத்துடனும், நன்மையில்லாத உண்மையுடனும், அது அம்மாதிரியே இருக்கிறது; ஏனென்றால், விசுவாசத்தின் உண்மை என்று சொல்லப்படுகிற உண்மை, வெளிச்சமாயிருக்கிறது; அன்பின் நன்மை என்று சொல்லப்படுகிற நன்மை, சூடாயிருக்கிறது. சுவர்க்கத்தின் சூடும் ஒளியும் அன்னுவயப்படுகிற உலகத்தின் சூட்டிலிருந்தும் ஒளியிலிருந்தும், இவைகளெல்லாம் மிக தெளிவாய் தோன்றுகின்றன. ஒளியுடன் சேர்ந்த உலகத்தின் சூட்டிலிருந்து, பூமியின் பேரிலுள்ள எல்லா பொருள்களும் உயிரடைந்து வளர்கின்றன; அவைகள் வசந்த காலத்திலும் கோடைகாலத்திலும் ஒருப்படுகின்றன. ஆனால், சூட்டிலிருந்து பிரிக்கப்பட்ட ஒளியிலிருந்து, வளர எதுவும் உயிர்ப்பிக்கப்படுகிறதில்லை. ஆனால், எல்லா பொருள்களும், அவைகளிலிருந்து இறந்து போகின்றன; ஒளியிருந்தபோதிலும், சூடில்லாதிருக்கும் மாரிகாலத்தில் அவைகள் ஒருப்படுகிறதில்லை. இந்த அன்னுவயத்திலிருந்து, பரமண்டலம் சுவர்க்கம் என்று சொல்லப்படுகிறது; ஏனென்றால், அங்கே, பூமியின்பேரில் வசந்த காலத்தில் சூட்டுடன் ஒளி சேர்ந்திருப்பதுபோல், உண்மையானது நன்மையுடன் அல்லது விசுவாசம் அன்புடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. சுவர்க்கத்தில் ஆண்டவரின் தேவத்துவம் அவரிடத்து அன்பையும், அயலானிடத்து தருமத்தையும் பாராட்டுதல் என்கிற அதன் சொந்த அத்தியாயத்தில் (நெ. 13-19) சொல்லப்பட்ட உண்மையை, இவைகள் எல்லாம் மிக தெளிவுபடுத்துகிறது.

**137.** யோவானில் சொல்லப்பட்டதாவது: "ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது; சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவராலே அல்லாமல் உண்டாகவில்லை. அவருக்குள் ஜீவனிருந்தது, அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது. அவர் உலகத்திலிருந்தார், உலகம் அவர் மூலமாய் உண்டாயிற்று. அந்த வார்த்தை மாம்சமாகி, நமக்குள்ளே வாசம் பண்ணினார்; அவருடைய மகிமையைக் கண்டோம்," (i. 1, 3, 4, 10, 14). வார்த்தையானது மாம்சமானதென்று சொல்லப்பட்டபடியினால் "வார்த்தை" என்பதினால், ஆண்டவர் இங்கே கருதப்படுகிறாரென்பது விசதமாகிறது; ஆனால் "வார்த்தை" என்பதினால், என்ன குறித்து சொல்லப்படுகிறதென்பது இன்னும் தெரிந்து கொள்ளப்படவில்லை; ஆகையினால் அது விவரிக்கப்படவேண்டும். இந்த வாக்கியத்தில், "வார்த்தை" என்பது, ஆண்டவரிலும் ஆண்டவரிடமிருந்தும் வருகிற பரம உண்மையாயிருக்கிறது. இந்த காரணத்துக்காக, இந்த அத்தியாயத்தின் முன் பாகத்தில் காண்பிக்கப்பட்டபடி, பரம உண்மையாயிருக்கிற வெளிச்சமென்று இங்கேகூட அவர் சொல்லப்படுகிறார். எல்லா பொருள்களும் பரம உண்மையினால் உண்டாக்கப்பட்டு சிருஷ்டிக்கப்பட்டதென்று இப்பொழுது விவரிக்கப்படவேண்டும்.

பரம உண்மையானது சுவர்க்கத்தில் சகல வல்லமையையும் உடைத்தாயிருக்கிறது; அதைத்தவிர எந்த வல்லமையும் இல்லை. தேவர்கள் எல்லாம் பரம உண்மையிலிருந்து வந்த சக்திகள் என்று சொல்லப்படுகிறார்கள்; நிஜமாய், அதை ஏற்பவைகளாய் அல்லது அதற்கு கொள்கலமாய் இருக்கிறமட்டும், அவர்கள் சக்திகளாயிருக்கிறார்கள். அதனால், நரகங்களேயும் தங்களை எதிர்க்கிறவர்களையும் வெல்லுகிறார்கள். அங்கே, ஆயிரம் சத்துருக்கள், பரம உண்மையாயிருக்கிற சுவர்க்கத்தின் ஒளியினுடைய ஒரு கதிரை தாங்கமாட்டார்கள். பரம உண்மையை ஏற்றுக்கொள்வதினால், தேவர்கள் தேவர்களாயிருப்பதினால், சுவர்க்கம் தேவர்களால் அமைந்திருப்பதின் நிமித்தம், முழு சுவர்க்கமும் வேறு எந்தமூலத்திலிருந்தும் வருகிறதில்லையென்று ஏற்படுகிறது.

பரம உண்மையில் அவ்விதமான அளவற்ற சக்தி தங்குகிறதென்பது உண்மையைப்பற்றி மற்றவர்கள் கீழ்ப்படிதலின் பொருட்டு செய்கிறவரையில் தவிர, தன்னிடமே ஒரு சக்தியுமில்

லாத சிந்தனை அல்லது பேச்சைப்போன்றது, என்பதல்லாமல், வேறு இதர அபிப்பிராயம் கொள்ளாதவர்கள் நம்பமாட்டார்கள். ஆனால், பரம உண்மையில், அதனால் சுவர்க்கமும், உலகமும் அதிலிருக்கும் எல்லா பொருள்களும் சிருஷ்டிக்கப்பட்ட அவ்வித சுபாவமுள்ள சக்தி தன்னிடமே யிருக்கிறது. பரம உண்மையில் அவ்வித சக்தி யிருக்கிறதென்பது, மனிதனிலிருக்கும் உண்மையினுடையவும் நன்மையினுடையவும், சக்தியினாலும், உலகத்திலிருக்கும் சூரியனிடமிருந்து வரும் வெளிச்சத்தினுடையவும், சூட்டினுடையவும் சக்தியினாலும், இந்த இரண்டு ஒப்பனைகளாலும் தெளிவிக்கப்படலாம்.

(1) மனிதனிலிருக்கும் உண்மையினுடையவும் நன்மையினுடையவும் சக்தியினால்.

மனிதன் செய்வதெல்லாம், நன்மையினால், சித்தத்திலிருந்தும் உண்மையினால் புத்தியிலிருந்தும் அதாவது புத்தியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் செய்கிறான்; ஏனென்றால், சித்தத்திலிருக்கும் எல்லா பொருள்களும் நன்மைக்கு சம்பந்தப்பட்டிருக்கிறது, புத்தியிலும் எல்லா பொருள்களும் உண்மைக்கு சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையினால், இவைகளிலிருந்து முழுசரீரமும் சேட்டிக்கப்படுகிறது. அங்கிருக்கும் ஆயிரம் பொருள்கள் அதன் உத்திரவுபடிக்கும், இஷ்டத்தின்படிக்கும், ஒரே உடன்பாட்டுடன் பாய்கின்றன. இதனால், முழுசரீரமும் நன்மைக்கும் உண்மைக்கும், துணையாயிருக்க உண்டாக்கப்பட்டதென்றும், ஆதலால், அது நன்மையிலிருந்தும் உண்மையிலிருந்தும் உண்டாக்கப்பட்டதென்றும் விசதமாகிறது.

(2) உலகத்திலிருக்கும் சூரியனிடமிருந்து வரும் சூட்டினுடையவும் வெளிச்சத்தினுடையவும் சக்தியினால்.

மரங்கள், தானியம், புஷ்பங்கள், புற்கள், பழங்கள், விதைகள் போன்ற, உலகத்தில் வளரும் எல்லா பொருள்களும் சூரியனுடைய சூடும் ஒளியும் தவிர வேறு எந்த மூலத்திலிருந்து உண்டாகிறதில்லை. இதிலிருந்து அந்த சூட்டிலும் ஒளியிலும் என்ன உற்பத்தி செய்யும் சக்தியிருக்கிறதென்பது வெளிப்படுகிறது. அப்படியிருந்தால் பரம உண்மையாயிருக்கிற, பரம ஒளியின் சக்தியும், பரம நன்மையாயிருக்கிற, பரம சூட்டின் சக்தியும் என்னமாயிருக்கவேண்டும்! இவைகளிலிருந்து, சுவர்க்கம் உண்டாகிறபடி

யினால், உலகமும்கூட உண்டாகிறது; ஏனென்றால், மேலே காண்பித்தபடி, உலகமானது சுவர்க்கத்தினால் உண்டாகிறது.

இவைகளிலெல்லாமிருந்து, சகலமும் வார்த்தையின் மூலமாய் உண்டானதென்பதையும், அவராலே அல்லாமல் செய்யப்பட்டது எதுவும் உண்டாகவில்லை என்பதையும், அதனுடன், உலகம் அவரால் அதாவது வேதத்திலிருக்கும் தெய்வீக உண்மையினால் சிருஷ்டிக்கப்பட்டதென்பதையும், எப்படி அறிந்து கொள்ளப்படுகிறது என்பது விசதமாகலாம். இந்த காரணத்துக்காக, சிருஷ்டியைப்பற்றி கூறும் நூலில், ஒளி முதலிலும், பிறகு, ஒளியிலிருந்து வரும் பொருள்களும் பேசப்பட்டிருக்கிறது (ஆதியா. i. 3-4). இந்த காரணத்துக்காகத்தான் சுவர்க்கத்திலும் உலகத்திலும் இந்த இரண்டிலும் சேர்த்து பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களும், உண்மையான உள்பொருள்களாயிருக்க, நன்மைக்கும் உண்மைக்கும், அவைகளின் இணைவுக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

**138.** இந்த நெம்பர் முதல் நூலில் விடப்பட்டிருக்கிறது.

**139.** ஆண்டவரிடமிருந்து சூரியனாக சுவர்க்கத்திலிருக்கிற பரம நன்மை பரம உண்மையும், ஆண்டவரில் அல்லாமல் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்று கவனிக்கப்பட வேண்டியது. ஆண்டவரில் சுவர்க்கங்களில் பரம உண்மையும் பரம நன்மையும் உண்டாகிற சொரூப நிலையாயிருக்கிற பரம அன்பு மாத்திரம் இருக்கிறது. இதுகூட உலகத்தின் சூரியனுடன் ஒப்பிடுவதினால் திருஷ்டாந்தப் படுத்தப் படலாம்; ஏனென்றால் உலகத்திலிருக்கும் சூடும் ஒளியும், சூரியனிடமில்லாமல், சூரியனிடமிருந்து வருகின்றன. சூரியனில் சூடும் ஒளியும் உண்டாய் வெளியே போகிற நெருப்பைத் தவிர வேறொன்றுமில்லை.

**140.** சூரியனாக ஆண்டவர், பரம அன்பாயிருப்பதினாலும், பரம அன்பு, பரம நன்மையாகவே இருப்பதினாலும், அவரிடமிருந்து புறப்பட்டு, சுவர்க்கத்தில் அவருடைய தேவத்துவமாயிருக்கிற தேவத்துவமானது, தான் பரம உண்மையுடன் சேர்ந்த பரம நன்மையாக இருந்தபோதிலும், தெளிவிக்கப்பட பரம உண்மையென்று சொல்லப்படுகிறது. இந்த பரம உண்மை அவரிடமிருந்து புறப்படும் பரிசுத்த ஆவி என்று சொல்லப்படுகிறதாயிருக்கிறது.

## XVI

## சுவர்க்கத்தின் நான்கு திக்குகள்

**141.** உலகத்திலிருப்பதுபோல, சுவர்க்கத்திலும், கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, என்று நான்கு திக்குகள் இருக்கின்றன; இரண்டு உலகங்களிலும் அவைகள் சூரியனால் நிச்சயிக்கப்படுகின்றன; சுவர்க்கத்தில், ஆண்டவராயிருக்கிற சுவர்க்கத்தின் சூரியனாலும், உலகத்தில், உலகத்தின் சூரியனாலும், அப்படி நிர்மானிக்கப்படுகிறது என்றாலும், அவைகளுக்குள் பெரிய வித்தியாசங்கள் இருக்கின்றன.

பூமிக்குமேல் சூரியன், தன் மிகப் பெரிய உச்சத்திலிருக்கும் திக்குக்கு தெற்கென்றும், பூமிக்கு கீழே எதிரிடையான இடத்தில் அது இருக்கும் இடத்துக்கு வடக்கு என்றும், சமராத்திரத்தில் அது எழும் இடத்துக்கு கிழக்கென்றும், அது அப்பொழுது அஸ்தமிக்கும் இடத்துக்கு மேற்கு என்றும் உலகத்தில் சொல்லப்படுகிறது. இவ்விதமாக, உலகத்தில் எல்லா திக்குகளும் தெற்கிலிருந்து நிர்மானிக்கப்படுகிறது. ஆனால், சுவர்க்கத்தில், ஆண்டவர் சூரியனாக தோன்றுகிற திக்குக்கு கிழக்கு என்று சொல்லப்படுகிறது; எதிரில் மேற்கு இருக்கிறது; சுவர்க்கத்தில் வலது பக்கத்தில் தெற்கும், இடது பக்கத்தில் வடக்கு மிருக்கிறது; தேவர்கள் தங்கள் முகத்தையும் சரீரத்தையும் எங்கே திருப்பினாலும் விஷயம் இப்படித்தான். இவ்விதமாக சுவர்க்கத்தில் எல்லா திக்குகளிலும் கிழக்கிலிருந்து நிர்மானிக்கப்படுகிறது. உயிரின் எல்லா உற்பத்தியும், சூரியனாக அவரிடமிருந்து வருகிறபடியினால், ஆண்டவர் சூரியனாக பார்க்கப்படுகிற இடத்துக்கு கிழக்கு என்று சொல்லப்படும்; அதுவும் தவிர, தேவர்கள் ஆண்டவரிடமிருந்து சூட்டையும் வெளிச்சத்தையும் அல்லது அன்பையும் அறிவையும் அடையும்மட்டும், அவர் அவைகளின்பேரில் எழுகிறதாக சொல்லப்படுகிறார். அதே காரணத்துக்காக வேதத்தில் ஆண்டவருக்கு கிழக்கு என்று சொல்லப்படுகிறது.

**142.** தேவர்களுக்கு கிழக்கு முகத்திற்கு முன்பாகவும், மேற்கு பின்புறத்திலும், தெற்கு அவர்கள் வலது பக்கத்திலும், வடக்கு இடது பக்கத்திலும் இருக்கிறதென்பது, இன்னம் ஒரு வித்தியா

சமாயிருக்கிறது. மனிதன் தன்னுடைய முகத்தை ஒவ்வொரு திக்கிலும் திரும்புகிறதின் நிமித்தம், இது சுலபமாய் அறிந்து கொள்ள முடியாதபடியினால், அது இப்பொழுது விரித்துரைக்கப் படவேண்டும். முழு சுவர்க்கமும், அதன் பொது மையத்துக்கு போல் ஆண்டவரிடம் தானே திரும்புகிறது ; ஆகையினால், எல்லா தேவர்களும், அவரிடம் தாங்களே திரும்புகிறார்கள். நன்றாய் தெரிந்திருக்கிறபடி, பூமியின்பேரில், எல்லா பொருள்களுக்கும் ஒரு பொது மையத்துக்கு நோக்கமிருக்கிறது; ஆனால், சுவர்க்கத்திலிருக்கும்நோக்கம் உலகத்தில் இருப்பதற்கு வித்தியாசப்படுகிறது; ஏனென்றால், சுவர்க்கத்தில் முன்னுள்ள பாகங்கள் பொது மையத்துக்கு திருப்பப்பட்டிருக்கிறது; ஆனால் உலகத்தில் சரீரத்தின் கீழ்பாகங்கள் அப்படி திருப்பப்பட்டிருக்கிறது. உலகத்தில் இந்த வழிகாட்டுகை, மத்தியாபிகரமான தென்றும், ஆகருஷணம் என்றும் சொல்லப்படுகிறது. தேவர்களின் உள்ளானவைகள் உண்மையாய் முன்புறத்துக்கு திருப்பப்பட்டிருக்கிறது; அந்த உள்ளானவைகள் முகத்தில் வெளிப்படுத்தப் படுகிறபடியினால், முகமானது திக்குகளை நிச்சயிக்கிறது.

**143**. தேவர்கள் முகத்தையும் சரீரத்தையும் எந்த பக்கம் திருப்பினாலும், அவர்களுக்கு முன்பாக கிழக்கு இருக்கும் என்பது, மனிதனுக்கு தான் திரும்புகிற திக்குக்கு தக்கபடி, எந்த திக்கும் அவன் முன்பாக நிற்கும் என்கிற காரணத்தினால், உலகத்தில் அறிந்து கொள்ளுதல் இன்னும் அதிக பிரயாசமாயிருக்கும். இது கூட விரித்துரைக்கப்படவேண்டும்.

தேவர்கள் திரும்புதல், மனிதர்களின் திரும்புதலுக்கு மாறுபட்டு, வேறு மூலத்திலிருந்து வருகிறபடியினால், அவர்கள் மனிதர்களைப்போல், எல்லா திக்குகளிலும் தங்கள் முகங்களையும் சரீரங்களையும் திருப்பி சாய்க்கிறார்கள் ; அப்படி இருந்தாலும், தங்கள் கண்கள் முன்பாக எப்பொழுதும் கிழக்கு இருக்கிறது. நிஜமாகவே, அவர்கள் ஒரே மாதிரி தோன்றுகிறார்கள் ; என்றாலும் அவர்கள் அப்படியில்லை. அரசாளும் அன்புதான் மூலம், இதிலிருந்துதான் தேவர்களுக்கும் அசரீரிகளுக்கும் எல்லா திக்குகளும் ஏற்படுகின்றன; ஏனென்றால், இப்பொழுது தான் சொல்லப்பட்டபடி அவர்களுடைய உள்ளானவைகள், சுவர்க்கத்தில் சூரியனை ஆண்டவராயிருக்கிற தங்களுடைய பொது மையத்திற்கு நிஜமாக திருப்பப்படுகின்றன. இந்த காரணத்துக்காக, அன்பானது அவர்கள்

உள்ளானவைகள் முன்பாக தொடர்ச்சியா யிருக்கிறது, முகமும் உள்ளானவைகளிலிருந்து ஏற்படுகிறது; ஏனென்றால், அது அவர்களுடைய புறம்பான உருவம்; ஆகையினால், அவர்களுக்குள் அரசாளும் அன்பு அவர்கள் முகத்தின் முன்பாக தொடர்ச்சியாய் இருக்கிறது. ஆகவே, சூரியனாக ஆண்டவர் சுவர்க்கத்தில் முகத்தின் முன்பாக தொடர்ச்சியாய் இருக்கிறார்; ஏனென்றால், அவரிடமிருந்துதான் தேவர்கள் தங்கள் அன்பை அடைகிறார்கள்; ஆண்டவர் தாமே தேவர்களோடு தன் சொந்த அன்பில் இருக்கிறபடியினால் அவர்கள் எந்த பக்கம் திரும்பின போதிலும், தன்னையே பார்க்கச் செய்கிறவர் ஆண்டவரா யிருக்கிறார். இவைகள் எல்லாம் இப்பொழுது விவரமாய் சொல்லப்படமுடியாது; ஆனால், பின்வரும் அத்தியாயங்களில், முக்கியமாய் சுவர்க்கத்தில் பாவனைகள், தோற்றங்கள், காலம், இடம் இவைகளைப்பற்றி பேசும் அத்தியாயங்களில், புத்திக்கு மிகத் தெளிவாய் அவைகள் தெரிய காட்டப்படும். தேவர்கள், தங்கள் முகத்தின் முன்பாக ஆண்டவரை அடிக்கடி உடைத்தாயிருக்கிறார் என்பது அதிக அனுபவத்திலிருந்து தெரிந்துகொண்டு, உணர எனக்கு அருள் செய்யப்பட்டது; ஏனென்றால், தேவர்கள் கூட்டத்தில் நான் இருந்தபோதெல்லாம், ஆண்டவருடைய சந்நிதி என் முகத்தின் முன்பாக, கவனிக்கப்பட்டது; பார்க்கப்படாவிட்டாலும், அவர் வெளிச்சத்தில் உணரப்பட்டார். தேவர்கள்கூட அது அப்படியிருக்கிறதென்று, அடிக்கடி சாட்சி யிட்டார்கள். ஆண்டவர், தேவர்கள் முகங்களின் முன்பாக அடிக்கடி இருக்கிறபடியினால், ஆண்டவரை நம்பி, அவரிடத்து அன்பு பாராட்டுகிறவர்கள் விஷயத்தில், அவர்கள் முகத்தின் முன்பாகவும் கண்கள் முன்பாகவும், கடவுள் இருக்கிறாரென்றும் அவர்கள் அவரை நாடி, பார்க்கிறார்களென்றும் சொல்லப்படுகிறது, இம்மாதிரி பேசுதல் சூக்கும உலகத்திலிருந்து வருகிறது; ஏனென்றால், மனிதனுக்கு அவைகள் எங்கிருந்து வருகிறதென்று தெரியாவிட்டாலும், மானிட பாஷையில் அநேகம் சூக்கும உலகத்திலிருந்து வருகின்றன.

**144**. ஆண்டவரிடம் அவ்வித ஒரு திரும்புதல் இருக்கிறதென்பது, சுவர்க்கத்தின் ஆச்சரியங்களில் ஒன்று. ஒரு இடத்தில் சிலர் ஒரு பக்கமும், மற்றவர்கள் ஒரு பக்கமும் முகத்தையும் சரீரத்தையும் திருப்பிக்கொண்டு, அநேகர் இருக்கலாம்; என்றாலும், தங்கள் முன்பாக ஆண்டவரை எல்லாரும் பார்க்கிறார்கள்; ஒவ்வொருவ

னுக்கும், தனது வலதுகை பக்கத்தில் தெற்கும், இடது பக்கத்தில் வடக்கும், பின்புறத்தில் மேற்கும் இருக்கிறது. தேவர்கள் நோக்கமானது எப்பொழுதும் கிழக்குபக்கமிருந்தாலும், மற்ற மூன்று திக்குகள் பக்கம்கூட ஒரு பார்வை இருக்கிறதென்பது, சுவர்க்கத்தின் ஆச்சரியங்களில் வேறு ஒன்று; ஆனால், இந்த திக்குகள் பக்கம் அவர்கள் பார்வை, சிந்தனைக்கு சேர்ந்த அவர்களுடைய உள்ளான பார்வையிலிருந்து வருகிறது. சுவர்க்கத்தில் எவனும் மற்ற ஒருவன் பின்புறத்தில் நின்றுகொண்டு, அவன் தலையின் பின்புறத்தை பார்க்கிறது, சட்ட விரோதமாயிருக்கிறதென்பது, சுவர்க்கத்தின் ஆச்சரியங்களில் மற்ற ஒன்று; ஏனென்றால், அப்படி செய்தால், ஆண்டவரிடமிருந்து வரும் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் உட்பெருக்கானது தடைபடுத்தப்படும்.

**145**. தேவர்கள் ஆண்டவரை ஒரு வழியில் பார்க்கிறார்கள், ஆண்டவர் தேவர்களை வேறு வழியில் பார்க்கிறார், தேவர்கள் ஆண்டவரை கண்கள் மூலமாக பார்க்கிறார்கள்; ஆனால் ஆண்டவர் நெற்றியானது அன்பிற்கு அன்னுவயப்படுகிறபடியினால், தேவர்களை நெற்றியில் பார்க்கிறார்; மேலும், ஆண்டவர் அன்பினால் அவர்களுடைய சித்தங்களில் ஓடி, கண்கள் அன்னுவயப்படுகிற புத்தியின் மூலமாக பார்க்கப்படத்தானே செய்கிறார்.

**146**. ஆண்டவர், தன்னுடைய பரம இராச்சியத்தில் தேவர்களால் சூரியனாகவும், ஆனால் தன்னுடைய ஞான சம்பந்தமான சூக்கும இராச்சியத்தில் சந்திரனாகவும் பார்க்கப்பட்டு, ஆண்டவர் பார்க்கப்படுகிற திக்கு கிழக்காக இருக்கிற காரணத்துக்காக, ஆண்டவருடைய பரம இராச்சியத்தை அமைக்கிற சுவர்க்கங்களிலிருக்கும் திக்குகள், அவருடைய ஞான சம்மந்தமான இராச்சியத்தை அமைக்கிற சுவர்க்கங்களிலிருக்கும் திக்குகளிலிருந்து வித்தியாசப்படுகின்றன. சுவர்க்கத்தில் சூரியனுக்கும் சந்திரனுக்கும் மத்தியிலிருக்கும் தூரம் முப்பது பாகைகள்; ஆகவே திக்குக்களுக்கு மத்தியில் அதேமாதிரி வித்தியாசமிருக்கிறது. சுவர்க்கமானது, பரம இராச்சியமென்றும், ஞான சம்பந்தமான இராச்சிய மென்றும் சொல்லப்படுகிற இரண்டு இராச்சியங்களாக வகையறுக்கப்படுகிறது என்பது, அதன் சொந்த அத்தியாயத்திலும், (நெ. 20 முதல் 28 வரையில்) பரம இராச்சியத்தில் சூரியனாகவும், ஞான சம்பந்தமான இராச்சியத்தில் சந்திரனாகவும், ஆண்டவர் பார்க்கப்

படுகிறார் என்பது செ. 118-லும் பார்க்கப்படலாம். அப்படியிருந்தாலும், ஞான சம்பந்தமான தேவர்கள் அன்பு சம்பந்தமான தேவர்களிடம் ஏறமுடியாதபடியினாலும், அன்பு சம்பந்தமான தேவர்கள் ஞான சம்பந்தமான தேவர்களிடம் மேலே செ. 35ல் பார்க்கக்கூடியபடி இறங்க முடியாதபடியினாலும், சுவர்க்கத்தின் திக்குகள், இந்த காரணத்துக்காக திகைக்கிறதில்லை.

**147.** ஆண்டவர் எவ்விதத்திலும் தன்னிடமிருந்து புறப்படும் நன்மையிலும் உண்மையிலும் ஒவ்வொருவனிடத்திலும், மேலே செ. 12-ல் சொல்லப்பட்டபடி தேவர்களிடத்தில் தன்னுடைய சொந்தமானதிலும், இருக்கிறார் என்று சொல்லப்பட்ட சுவர்க்கங்களில் ஆண்டவருடைய சந்நிதியின் சுபாவம், இதிலிருந்து வெளிப்படையாகிறது. ஆண்டவருடைய சந்நிதியை உணருதல் அவர்களுடைய உள்ளானவைகளிலிருக்கிறது; மேலும் இவைகளிலிருந்துதான் அவர்களுடைய கண்கள் பார்க்கின்றன; இந்த தொடர்ச்சியினால்தான், ஆண்டவரை தங்களுக்கு வெளியே அவர்கள் பார்க்கிறார்கள். ஆண்டவர் அவர்களிலும், அவர்கள் ஆண்டவரிலும் இருத்தல் என்பதினால், அவர் வார்த்தைகளின்படியே, அதாவது, "என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன்" (யோவா. xv. 1), "என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம் பண்ணுகிறவன், என்னிலே நிலைத்திருக்கிறான், நானும் அவனிலே நிலைத்திருக்கிறேன்" (யோவா. v. 56) என்று சொல்லியபடி, என்ன அருத்தம் என்று இது காண்பிக்கிறது. ஆண்டவருடைய "மாம்சம்" பரம நன்மையையும், அவருடைய "இரத்தம்" பரம உண்மையையும் கருதுகிறது.

**148.** சுவர்க்கங்களில், திக்குகளுக்கு தக்கபடி எல்லாரும் வெவ்வேறாயிருக்கிறார்கள். கிழக்கிலும் மேற்கிலும் அன்பின் நன்மையிலிருக்கிறவர்கள் இருக்கிறார்கள்; கிழக்கில், அதை தெளிவாய் உணருகிறவர்களும், மேற்கில், அதை தெளிவற்று உணருகிறவர்களும் இருக்கிறார்கள். தெற்கிலும் வடக்கிலும், இந்த அன்பின் நன்மையிலிருந்து உற்பத்தியான ஞானத்திலிருக்கப்பட்டவர்கள் இருக்கிறார்கள்; தெற்கில் ஞானத்தின் தெளிவான வெளிச்சத்திலிருக்கப்பட்டவர்களும், வடக்கில் ஞானத்தில் தெளிவற்ற வெளிச்சத்திலிருக்கப்பட்டவர்களும் இருக்கிறார்கள். அதே ஒழுங்கில் ஆண்டவருடைய ஞானசம்பந்தமான இராச்சியத்தி

லிருக்கப்பட்ட தேவர்களும், அவருடைய பரம இராச்சியத்தி லிருக்கப் பட்டவர்களும் வசிக்கிறார்கள்; என்றாலும், அன்பின் நன்மைக்கும், நன்மையிலிருந்து வந்த உண்மையின் வெளிச் சத்திற்கும் தக்கபடி ஒரு வித்தியாசம் இருக்கிறது. பரம இராச்சியத்தில், அன்பு என்பது ஆண்டவரிடத்து அன்பாயிருக் கிறது; அதிலிருந்துவரும் உண்மையின் வெளிச்சம் ஞானமாயிருக் கிறது; ஆனால், ஞான உலகத்தில் அன்பு என்பது, தருமமென்று சொல்லப்பட்ட அயலானிடத்து அன்பாயிருக்கிறது; அதிலிருந்து வரும் உண்மையின் வெளிச்சம், விசுவாசம் என்று சொல்லப் பட்ட சைதன்னியமாய் இருக்கிறது (மேலே செ. 23 பார்க்கவும்). திக்குகள் விஷயத்தில்கூட அவைகள் வித்தியாசப்படுகின்றன. ஏனென்றால் அந்த இரண்டு இராச்சியங்களிலும், திக்குகள் இப் பொழுதுதான் (மேலே செ. 146) சொல்லியபடி, ஒன்றுக்கொன்று முப்பது பாகைகள் தூரத்திலிருக்கின்றன.

**149.** ஒருவருக்கொருவர் சம்பந்தப்பட்ட வரையில், சுவர்க் கத்தின் ஒவ்வொரு கூட்டத்தின் தேவர்களும், அதைப்போன்ற ஒழுங்கில் வசிக்கிறார்கள்; கிழக்கில் அதிக பெரிய அன்பிலும், தருமத்திலும் இருக்கப்பட்டவர்களும், மேற்கில் அவைகளில் குறைந்தவர்களும், தெற்கில் ஞானத்தினுடையவும் விவேகத்தி னுடைய அதிக பெரிய வெளிச்சத்திலிருக்கப்பட்டவர்களும், வடக்கில் அவைகளில் குறைந்தவர்களும் இருக்கிறார்கள். ஒவ் வொரு கூட்டமும் சுவர்க்கத்தை சாயல்காட்டுகிறபடியினாலும், அதனுடன், அது குறைந்த உருவத்தில் சுவர்க்கமாயிருப்பதினாலும், (மேலே 51 முதல் 58 வரையில் பார்க்கவும்), தேவர்கள் இவ்வித மாக தனித்திருக்கிறார்கள். அவர்களுடைய சபைகளில் அதே ஒழுங்கு மேற் கொள்ளுகிறது. ஒவ்வொருவனும், தன்னுடைய சொந்த இடத்தை தெரிந்துக்கொள்ளுகிற சுவர்க்கத்தின் உருவத் தினால், அவர்கள் இந்த ஒழுங்கில் கொண்டுவரப்படுகிறார்கள். ஆண்டவர், ஒவ்வொரு கூட்டத்திலும், சுவர்க்கமானது, உருவம் விஷயத்தில் எவ்விடத்திலும் அதைப்போலவே இருக்கவேண்டும் என்கிற எண்ணத்துடன், ஒவ்வொருவகையிலும் சிலர் இருக்கும் படிகூட ஏற்படுத்தியிருக்கிறார். அப்படியிருந்தாலும், முழு சுவர்க் கத்தின் ஒழுங்கு, முழுதும் அதன் பாகங்களிலிருந்து வித்தியாசப் படுகிறதுபோல், ஒரு கூட்டத்தின் ஒழுங்கிலிருந்து வித்தியாசப்படு கிறது; ஏனென்றால், கிழக்கிலிருக்கும் கூட்டங்கள், மேற்கிலிருக்கும்

கூட்டங்களை விடவும், தெற்கிலிருக்கிறவைகள் வடக்கிலிருக்கிறவைகளை விடவும் மேற்பட்டிருக்கின்றன.

**150.** அதனால்தான், சுவர்க்கங்களிலிருக்கும் திக்குகள், அங்கே வசிக்கிறவர்களிடத்தில் காணப்படுகிற குணங்களை கருதுகிறது. இவ்விதமாக, கிழக்கு என்பது தெளிவான உணர்ச்சியில் அன்பையும், அதன் நன்மையையும், மேற்கு என்பது தெளிவில்லாத உணர்ச்சியில் முன் சொல்லியதையும், தெற்கு என்பது தெளிவான வெளிச்சத்தில் ஞானத்தையும் விவேகத்தையும், வடக்கு என்பது தெளிவில்லாத வெளிச்சத்தில் முன்சொல்லியதையும் காண்பிக்கின்றன. சுவர்க்கத்தில், திக்குகளின் அருத்தம் அப்படியிருப்பதினால், வேதத்தின் உள்ளான அல்லது ஞானார்த்தத்தில் அதே அருத்தம் கொள்ளுகிறது; ஏனென்றால், வேதத்தின் உள்ளான அல்லது ஞானார்த்தம், சுவர்க்கத்திலிருக்கிறதற்கு தக்கபடி முற்றுமிருக்கிறது.

**151.** நரகங்களிலிருக்கிறவர்கள் விஷயத்தில், அது மாறுபாடாயிருக்கிறது. அவர்கள் ஆண்டவரை சூரியனாக அல்லது சந்திரனாக பார்க்கிறதில்லை; ஆனால், அவர்கள் ஆண்டவருக்கு பின்னாக தூரத்தில் உலகத்தின் சூரியன் இருக்கப்பட்ட இடத்தில் இருக்கிற அந்த கன்னிருளையும், பூமியினுடைய சந்திரன் இருக்கப்பட்ட இடத்தில் இருக்கிற இருளையும் பார்க்கிறார்கள். பூதகணங்கள் என்று சொல்லப்பட்டவர்கள், உலகத்தின் சூரியனுடைய இடத்தில் இருக்கப்பட்ட கன்னிருளைப் பார்க்கிறார்கள்; ஆவிகள் என்று சொல்லப்பட்டவர்கள், பூமியின் சந்திரனுடைய இடத்திலிருக்கப்பட்ட இருளைப் பார்க்கிறார்கள். உலகத்தின் சூரியனும், பூமியின் சந்திரனும் ஞானலோகத்தில் தோன்றுகிறதில்லை; ஆனால், அதனுடைய சூரியனுக்கு பதிலாக, சுவர்க்கத்தின் சூரியனுக்கு எதிரில் ஒரு கன்னிருளும், சந்திரனுக்கு பதிலாக, சுவர்க்கத்தின் சந்திரனுக்கு எதிரில் ஒரு இருளும், பார்க்கலாமென்று மேலே காண்பிக்கப்பட்டிருக்கிறது (செ. 122). ஆகையினால், நரகத்திலிருக்கும் திக்குகள், சுவர்க்கத்திலிருக்கும் திக்குகளுக்கு எதிரில் இருக்கின்றன. அவர்களுக்கு கிழக்கு அந்த கன்னிருளும், இருளும் இருக்கப்பட்ட இடமாயிருக்கிறது; சுவர்க்கத்தின் சூரியன் இருக்கப்பட்ட இடம் மேற்கு; தெற்கு வலது பக்கமும், வடக்கு இடது பக்கமும் இருக்கிறது; இந்த சம்பந்தம்கூட சரீரம் எந்த திக்கில் திருப்பப்பட்டாலும் நிலைக்கிறது; அவர்களின் உள்ளானவைகளுடைய ஒவ்வொரு நோக்கமும் அதி

லிருந்து ஒவ்வொரு தீர்மானமும், அந்த பக்கம் சார்ந்து போராடு கிறபடியினால், அவர்கள் வேறுவிதமாய் நோக்கவும் முடியாது. உள்ளானவைகளின் நோக்கமும், அதிலிருந்து இதர வாழ்வில் எல்லாருடைய உண்மையான தீர்மானமும், அவர்களுடைய அன்பிற்குத் தக்கபடி இருக்கிறதென்பது செ. 143-ல் பார்க்கப்படலாம். நரகங்களில் இருக்கப்பட்டவர்கள் அன்பு, தன்னையே நேசித்தலும், உலகத்தையே நேசித்தலுமாயிருக்கிறது; அந்த அன்புகள் உலகத்தின் சூரியனாலும் பூமியின் சந்திரனாலும் தெரிவிக்கப்படுகின்றன (செ. 122-ஐ பார்க்கவும்). மேலும், இந்த அன்புகள் ஆண்டவரிடத்து அன்புக்கும், அயலானிடத்து அன்பிற்கும் எதிரிடையானவைகளாய்கூட இருக்கின்றன. இதனால்தான் ஆண்டவருக்கு பின் பக்கமாக இந்த நள்ளிருளுக்கும் இருளுக்கும் அவர்கள் திரும்புகிறார்கள். நரகங்களில் இருக்கப்பட்டவர்கள்கூட, தங்கள் திக்குகளுக்கு தக்கபடி வசிக்கிறார்கள். தன்னையே நேசித்தலிலிருந்து தீமைகளிலிருக்கப்பட்டவர்கள், தங்களுடைய கிழக்கிலிருந்து, தங்களுடைய மேற்கு வரையில் வசிக்கிறார்கள்; தீமையின் பொய்களில் இருக்கப்பட்டவர்கள், தங்களுடைய தெற்கிலிருந்து தங்களுடைய வடக்கு வரையில் வசிக்கிறார்கள்: ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி, நாம் நரகத்தைப்பற்றி பேசும்போது சீக்கிரமாய் அதிகம் சொல்லப்படும்.

**152.** எந்த பொல்லாத ஆவியாவது நல்லவைகள் மத்தியில் வந்தால், அந்த நல்லவைகளுக்கு தங்கள் கிழக்கு எங்கே யிருக்கிறதென்று தெரியாதபடி, திக்குகளைப்பற்றி அவ்வளவு மலைவு அடைகின்றன. இது சில வேளைகளில் சம்பவித்ததை நான் பார்த்திருக்கிறேன்; மேலும், அதன்பொருட்டு, துக்கித்துக்கொண்டிருந்த ஆவிகளிடமிருந்துகூட நான் அதைப்பற்றி கேழ்விப்பட்டிருக்கிறேன்.

**153.** பொல்லாத ஆவிகள் சில வேளைகளில் சுவர்க்கத்தின் திக்குகள் பக்கம் திரும்பி இருப்பது பார்க்கப்படுகிறது; அப்பொழுது அவைகளுக்கு, விவேகமும், உண்மையின் உணர்ச்சியும் இருக்கிறது; ஆனால், அவைகளுக்கு நன்மையினிடத்து அன்பு இல்லை; ஆகையினால், அவைகள் பின்புறமாய் தங்கள் சொந்த திக்குகளுக்கு தாங்களே திரும்பும்போது, அறிவிலும், உண்மையின் உணர்ச்சியிலும் இருப்பதை விட்டுவிட்டு, தாங்கள் முன்னமே கேழ்விப்பட்டு, உணர்ந்த உண்மைகள், உண்மைகள் அல்லவென்றும், ஆனால் பொய்களென்றும் சொல்லுகின்றன: அன்றியும் பொய்கள் உண்மை

களாயிருக்க அவைகள் விரும்புகின்றன. இந்த திரும்புதலைப்பற்றி, துன்மார்க்கர்கள் விஷயத்தில், சித்தமல்லாமல், புத்தியானது அப்படி திருப்பப்படக்கூடுமென்றும், ஒவ்வொன்றும் உண்மையைப் பார்த்து ஒத்துக்கொள்ள சக்தியுள்ளதாயிருக்கவும், ஆனால், எப்பொழுதும் தீமையல்லாமல், உண்மைகளை ஏற்றுக்கொள்ளுகிறது நன்மையாயிருப்பதின் நிமித்தம், எவனும், தான் நன்மையிலிருந்தாலொழிய, அவைகளை ஏற்றுக்கொள்ள முடியாதிருக்கவும், ஆண்டவரால் முன்னறிந்து ஏற்படுத்தப்பட்டிருப்பதாகவும் எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. மனிதன் உண்மைகளால் சீர்படுத்தப்பட்ட அவன் விஷயத்தில் சங்கதி அதேமாதிரி யிருக்கிறது; அப்படியிருந்தாலும் அவன் நன்மையிலிருப்பதைவிட அதிகமாய் சீர்படுத்தப்படுகிறதில்லை. இந்த காரணத்துக்காக, மனிதன் அம்மாதிரியே ஆண்டவர் பக்கம் திருப்பப்படக்கூடும்; ஆனால் வாழ்க்கை விஷயத்தில் அவன் தீமையிலிருந்தால், அவன் உடனே மறுபடியும் தானே பின் திரும்பி, தான் அறிந்துகொண்டு பார்த்த உண்மைகளுக்கு, எதிரிடையாக, அவனுடைய தீமைகளின் பொய்களை தன்னிடமே உறுதிப்படுத்துகிறான்: அவன் தனக்குள்ளாகவே தன்னுடைய சொந்த உள்ளான நிலைமையிலிருந்து நினைக்கிறபோது, இது சம்பவிக்கிறது.

## XVII

## சுவர்க்கத்தின் தேவர்கள் நிலைமையின் மாறுபாடுகள்

**154**. தேவர்களின் நிலைமையின் மாறுபாடுகள் என்பதால், அன்பு விஷயத்திலும், விசுவாசம் விஷயத்திலும், அதிலிருந்து ஞானம் விஷயத்திலும், விவேகம் விஷயத்திலும், இவ்விதமாக அவர்கள் வாழ்க்கையின் நிலைமைகள் விஷயத்திலும், அவர்களுடைய மாறுபாடுகள் அருத்தம் கொள்ளப்படுகின்றன. நிலைமைகள், பிராணனுக்கும், பிராணனுக்கு சேர்ந்தவைகளுக்கும் சொல்லப்படுகின்றன; தேவர்களின் பிராணன் அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும், அதிலிருந்து ஞானத்தினுடையவும், விவேகத்தினுடையவும் பிராணனாய் இருப்பதினால், இவைகளுக்கு நிலைமைகள் சொல்லப்பட்டு, அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும், ஞானத்தினுடையவும் விவேகத்தினுடையவும் நிலைமைகள் என்று சொல்லப்படுகின்றன. தேவர்கள் விஷயத்தில் இந்த நிலைமைகள் மாற்றப்படுகின்றன என்பதை இப்பொழுது விவரிக்கப்பட வேண்டும்.

**155**. தேவர்கள் அன்பு விஷயத்தில் ஒரே நிலைமையில் அடிக்கடி இருக்கிறதில்லை; ஆகையினால் ஞானம் விஷயத்தில் அவர்கள் ஒரே நிலைமையில் இருக்கிறதில்லை; ஏனென்றால், அவர்களுடைய எல்லா ஞானமும், அன்பிலிருந்தும், அன்பை அனுசரித்துமிருக்கின்றது. சில சமயங்களில் அவர்கள், மிகுந்த அன்பின் நிலைமையிலும், சில சமயங்களில் அவ்வளவு அதிகம் நெருங்காத அன்பின் நிலைமையிலும், இருக்கிறார்கள். அந்த நிலைமையானது, படிப்படியாய் அதின் மிகவும் பெரிய உக்கிரத்திலிருந்து, சின்னஞ்சிறிய உக்கிரம் வரையில் குறைகிறது. அவர்கள் அன்பின் மிகப்பெரிய பிரமாணத்திலிருக்கும்போது, அவர்கள் பிராணனுடைய வெளிச்சத்திலும் சூட்டிலும், அல்லது அவர்களுடைய சோதியிலும் இன்பத்திலும், இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் சின்னஞ்சிறிய பிரமாணத்திலிருக்கும்போது, இருளிலும் குளிரிலும், அல்லது அவர்களுடைய மங்கலிலும் துன்பத்திலும் இருக்கிறார்கள். இந்த கடைசி நிலைமையிலிருந்து, முதல் நிலைமைக்கும், இம்மாதிரியாகவே திரும்பிக்கொண்

டிருக்கிறார்கள். இந்த நிலைமைகள், நாளுக்குநாள் ஒன்றன்பின் ஒன்றாய் வருகின்றன.

அந்த நிலைமைகள், இருளினுடையவும், வெளிச்சத்தினுடையவும், சூட்டினுடையவும், குளிர்ச்சியினுடையவும், மாறுபாடுகள் போலவும், அல்லது, காலை, மத்தியானம், மாலை, இரவுபோலவும், தினம்தினம், வருஷம் முழுதும் இடைவிடாமல் பலவிதங்களாக ஒன்றன்பின் ஒன்றாய் வருகின்றன. இந்த இயற்கையான ஒப்புகள் அன்னுவயங்களாய்கூட இருக்கின்றன; ஏனென்றால், காலை என்பது பிரகாசத்தில், அவர்களுடைய அன்பின் நிலைமைக்கும், மத்தியானம் என்பது பிரகாசத்தில், அவர்களுடைய ஞானத்தின் நிலைமைக்கும், மாலை என்பது அவர்களுடைய ஞானத்தின் நிலைமைக்கும், இரவு என்பது அன்பும் ஞானமும் இல்லாத நிலைமைக்கும் அன்னுவயப்படுகின்றன. ஆனால், சுவர்க்கத்திலிருப்பவர்களின் உயிரின் நிலைமைகளோடு, இரவின் அன்னுவயம் இல்லை என்பது தெரிந்திருக்கவேண்டும். காலைக்கு முன்வரும் சந்திவெளிச்சத்துடன் அங்கே ஒரு அன்னுவயமிருக்கிறது; ஆனால் இரவின் அன்னுவயம், நரகத்திலிருப்பவர்களுடன் இருக்கிறது. இந்த அன்னுவயத்திலிருந்து, வேதத்தில் நாட்களும் வருஷங்களும், பொதுவாக உயிரின் நிலைமைகளை அருந்தம் கொள்ளுகின்றன. சூடும் ஒளியும், அன்பையும் ஞானத்தையும், காலை என்பது அன்பின் முதன்மையானதும் மிகவும் உயர்ந்ததுமாகிய பிரமாணத்தையும், நடுபகல், தன் வெளிச்சத்தில் ஞானத்தையும், மாலை, தன் இருளில் ஞானத்தையும், விடியற்காலம் என்பது காலைக்கு முன்வரும் இருளையும், ஆனால் இரவு என்பது அன்பும் ஞானமும் இல்லாமையையும் கருதுகின்றன.

**156**. தேவர்களின் அன்புக்கும் ஞானத்திற்கும் சேர்ந்த அவர்களின் உள்ளானவைகளின் நிலைமையுடன் சேர்ந்து, அவர்களுக்கு வெளியேயுள்ள தங்கள் கண்களால் பார்க்கிற பலவித பொருள்களின் நிலைமைகள் மாற்றப்படுகின்றன; ஏனென்றால், அவர்களுக்கு வெளியேயுள்ள பொருள்கள், அவர்களுக்கு உள்ளிருக்கும் பொருள்களுக்கு தக்கபடி ஒரு தோற்றத்தை எடுத்துக் கொள்ளுகின்றன. ஆனால், அந்தப் பொருள்கள், என்ன என்பதும், அவைகளின் சுபாவமும், சுவர்க்கத்திலிருக்கும் அறிகுறிகளையும், தோற்றங்களையும்பற்றி நாம், பேசப்பட்ட பின்வரும் அத்தியாயங்களில் விவரிக்கப்படும்.

**157.** ஒவ்வொரு தேவனும், அன்றியும் மொத்தத்தில் ஒவ்வொரு கூட்டமும், நிலைமையின் இவ்வித மாறுபாடுகளை அடைகின்றன; என்றாலும், தேவர்கள் அன்பிலும் ஞானத்திலும் வித்தியாசப்படுகிறபடியினால், ஒவ்வொரு தேவனும் மற்றவனைவிட பலவிதமாய் மாறுகிறார்கள்; ஏனென்றால், மத்தியிலிருப்பவர்கள், சுற்றளவுகளுக்கு சுற்றிலும் இருக்கப்பட்டவர்களைவிட அதிக சம்பூர்ணமான நிலைமையிலிருக்கிறார்கள் (நெ. 43, 128 பார்க்கவும்.). ஒவ்வொருவரும் தன்னுடைய அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும் குணத்துக்கு தக்கபடி மாறுதல் அடைகிறபடியினால், நிலைமையின் வித்தியாசங்களை குறிப்பிடுதல் சள்ளையானதாயிருக்கும். ஆகவே, மற்றவன் தன்னுடைய மங்கலிலும், துக்கத்திலும் இருக்கும்போது, ஒருவன் தன்னுடைய சோதியிலும் சந்தோஷத்திலுமிருப்பான்; இது ஓரே காலத்திலும், ஓரே கூட்டத்திலும் இருக்கும். மேலும், ஒரு கூட்டத்திலிருக்கும் மாறுபாடுகள் மற்றதிலிருப்பவைகளிலிருந்தும், பரம இராச்சியத்தின் கூட்டங்களின் மாறுபாடுகள், ஞான இராச்சியத்தின் கூட்டங்களிலிருப்பவைகளிலிருந்தும் வித்தியாசப்படுகின்றன. அவர்களுடைய நிலைமையின் மாறுபாடுகளில் இருக்கும் வித்தியாசங்கள், பொதுவாக பூமியின் பேரில் இருக்கும் வெப்பம் குளிர்ச்சியின் விசேஷங்களில், பலவித தேசங்களின் நாளின் நிலைமையினுடைய விகற்பங்கள்போல இருக்கின்றன; மற்றவர்கள் விஷயத்தில் மாலையாயிருக்கும்போது சிலர் விஷயத்தில் காலையாயிருக்கிறது; மற்றவர்களுக்கு குளிர்ச்சி இருக்கும்போது, சிலருக்கு சூடு இருக்கிறது.

**158.** இவ்வித நிலைமையின் மாறுபாடுகள் ஏன் இருக்கின்றனவென்று சுவர்க்கத்திலிருந்து எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. அநேக காரணங்கள் இருக்கின்றனவென்று தேவர்கள் சொன்னார்கள். ஆண்டவரிடமிருந்து வரும் அன்பிலிருந்தும் ஞானத்திலிருந்தும், தாங்கள் அடைகிற பிராணனுடையவும் சுவர்க்கத்தினுடையவும் சந்தோஷம், அவர்கள் எப்பொழுதும் அதிலிருந்தால், விகற்பமில்லாமல், மகிழ்ச்சியினுடையவும் சந்தோஷத்தினுடையவும் சுகானுபவத்தில் இருப்பவர்கள் விஷயத்தில்போல் தன்னுடைய விலைமதிப்பை படிப்படியாய் இழந்துவிடுமென்பது முதல் காரணமாயிருக்கிறது.

மனிதர்களைப்போல் தேவர்களும், தன்னையே நேசித்தலாயிருக்கிற தங்களுடைய சொந்தமானதை வைத்திருக்கிறார்களென்பது

இரண்டாவது காரணமாயிருக்கிறது; சுவர்க்கத்திலிருப்பவர்கள் எல்லாரும், தங்களுக்கு சொந்தமானதாயிருக்கிறதிலிருந்து மறிக்கப் படுகிறார்கள்; அதிலிருந்து ஆண்டவரால் அவர்கள் மறிக்கப்படுகிற அளவு அன்பிலும் ஞானத்திலும் இருக்கிறார்கள்; ஆனால், அவர்கள் மறிக்கப்படாத அளவு, தன்னையே நேசித்தலில் இருக்கிறார்கள்; மேலும், தனக்கு சொந்தமாயிருப்பதை ஒவ்வொருவனும் நேசித்து அதனால் இழுக்கப்படுகிறபடியினால், அவர்களுக்கு நிலைமையின் மாறுபாடுகள் அல்லது தொடர்பான பிரதி கிருத்தியங்களை உடைத்தாயிருக்கிறார்கள்.

மூன்றாவது காரணம், அவர்கள் இந்த விதமாய் சம்பூரணமாக்கப்படுகிறார்களென்பதாயிருக்கிறது; ஏனென்றால், அவர்கள் இவ்விதமாக ஆண்டவரிடத்து அன்பில் பிடிக்கப்படவும், தன்னையே நேசித்தலிலிருந்து மறிக்கப்படவும் பழகி விடுகிறார்கள்; மேலும் அவர்களுடைய உணர்ச்சியும், நன்மையை அறிதலும், இவ்விதமாய் இன்ப துன்பங்கள் மாறிமாறி வருதலினால், அதிக உன்னதமானதாக செய்யப்படுகிறது.

ஆண்டவர் சூரியனாக சூட்டுடனும் ஒளியுடனும் அதாவது அன்புடனும் ஞானத்துடனும் எப்பொழுதும் உள்ளே பாய்கிறபடியினால், அவர் அவர்களுடைய நிலைமையின் மாறுபாடுகளை உண்டாக்குகிறதில்லை என்று தேவர்கள் சேர்த்து சொன்னார்கள்; ஆனால், எப்பொழுதும் ஆண்டவரை விட்டு தூரமாக அவர்களை நடத்துகிற தங்களுடைய சொந்தமானதை அவர்கள் நேசிப்பதினால் காரணமானது அவர்களிடமே யிருக்கிறது. உலகத்தின் சூரியனுடன் ஒப்பிட்டு இதை அவர்கள் திருஷ்டாந்தப் படுத்தினார்கள்; ஏனென்றால், சூரியன் நிலைபெற்றதாயிருந்து, ஆனால் காரணம் பூமியிலிருப்பதின் நிமித்தம், ஒவ்வொரு வருஷமும், ஒவ்வொரு நாளும், சூட்டினுடையவும் குளிர்ச்சியினுடையவும், வெளிச்சத்தினுடையவும் இருட்டினுடையவும், நிலைமையின் மாறுபாடுகளின் காரணம் சூரியனிடத்தில் இல்லை.

**159.** சூரியனாக ஆண்டவர் தேவர்கள் முன்பாக தங்கள் முதல் நிலைமையிலும், இரண்டாவது நிலைமையிலும், மூன்றாவது நிலைமையிலும், பரம இராச்சியத்தில் எப்படி தோன்றுகிறாரென்று எனக்கு காண்பிக்கப்பட்டது. சூரியனாக ஆண்டவர், விவரிக்கமுடியாத ஒரு பிரகாசத்துடன் முதலில் தகதகவென்று கதிருமிழ்ந்து

கொண்டிருப்பது பார்க்கப்பட்டது. தேவர்கள் முன்பாக தங்கள் முதல் நிலைமையில் அவர் இம்மாதிரி தோன்றுகிறாரென்றும் எனக்கு சொல்லப்பட்டது. பின்னிட்டு, சூரியனைச்சுற்றி, ஒரு பெரிய இருண்ட அறைக்கச்சு தோன்றியது; இதனால், அதற்கு அவ்வித பிரகாசத்தை கொடுத்த அதனுடைய முதல் சோதியும் பிரகாசமும், அதீக்ஷ்ணமாயிற்று; சூரியனானவன் அவர்கள் முன்பாக இம்மாதிரியாக அவர்களுடைய இரண்டாவது நிலைமையில்தோன்றுகிறாரென்று எனக்கு சொல்லப்பட்டது. பிற்பாடு அது கடைசியில் முழுமையும் வெண்மையாகிறவரையில், அந்த அறைக்கச்சுபடிப்படியாய் அதிக அடர்த்தியாய் வளர்ந்தும், சூரியன்குறைவாய் எரிந்துகொண்டிருப்பதாக தோன்றியது; தேவர்கள் முன்பாக சூரியன் அம்மாதிரி அவர்களுடைய மூன்றாவது நிலைமையில் தோன்றுகிறதாக எனக்கு சொல்லப்பட்டது. கடைசியில், அந்த பிரகாசிக்கும் வெண்மையான மண்டலம், சுவர்க்கத்தின் சந்திரனை நோக்கி இடது பக்கம் இயங்கி, அதன் வெளிச்சத்துடன் தானே சேர்ந்துகொள்வது பார்க்கப்பட்டது; அதனால், சந்திரன், அபூர்வமானபிரகாசத்துடன்பிரகாசித்தது; இது பரம இயக்கியத்தில் இருக்கிறவர்களுக்கு நான்காவது நிலைமை என்றும், ஞான இராச்சியத்திலிருக்கிறவர்களுக்கு இது முதல் நிலைமைஎன்றும், ஒவ்வொரு இராச்சியத்திலும், நிலைமையின் மாறுபாடுகள், இம்மாதிரி மாறிமாறி வருமென்றும், என்றாலும், முழு இராச்சியத்திலும் உடனே அல்லாமல், ஒரு கூட்டத்தின் பின் ஒரு கூட்டத்தில்வருமென்றும், எனக்கு சொல்லப்பட்டது. இன்னமும் இந்த மாறிமாறி வருதல், ஸ்திரமானதல்லவென்றும், ஆனால் அவர்களுக்கு தெரியாமல், ஏதோ ஒரு சமயத்தில் அவர்களுக்கு நேரிடுகிறதென்றும் எனக்கு சொல்லப்பட்டது. சூரியனே இம்மாதிரி உண்மையாய் மாறுபடுகிறதில்லை என்றும், அது தன்னுடைய இடத்தை மாற்றுகிறதில்லை என்றும், ஆனால், அவர்கள் அதிக அன்பிலிருக்கும்போது பிரகாசித்தும், குறைவாய் பின்னிட்டு பிரகாசித்தும், கடைசியில் அன்பு இல்லாமல் போனபோது வெண்மையாயும், ஒவ்வொருவனுடைய நிலைமையின்குணத்துக்கு தக்கபடி ஆண்டவர் ஒவ்வொருவர் முன்பாகவும் தோன்றுகிறபடியினாலும், ஒவ்வொருவனுடைய நிலைமையின் குணமும், சூரியனுடைய சோதியிலும் வெளிச்சத்திலும் காணும், இந்த பிரத்தியட்சமானமாறுபாடுகளைசூரியனிடத்தில் உண்டாக்குகிற இருண்ட அறைக்கச்சினால் வெளிப்படுத்தப்படுகிறபடியினாலும், தங்களுடைய

சொந்த நிலைமைகளின் தொடர்பான அபிவிர்த்திக்குத் தக்கபடி அது பார்க்கப்படுகிறதென்றுங்கூட அவர்கள் சொன்னார்கள்.

**160**. தங்களுக்கு சொந்தமானதில் அவர்கள் இருக்கும்போது, ஏற்படுகிற, இந்த நிலைமைகளின் கடைசியில் தேவர்கள் இருக்கும்போது, அவர்கள் விசனமுள்ளவர்களாயிருக்க ஆரம்பிக்கிறார்கள். நான் அவர்களுடன் அந்த நிலைமையில் இருக்கும்போது பேசியிருக்கிறேன்; அவர்களுடைய விசனத்தையும் பார்த்திருக்கிறேன்; ஆனால், தாங்கள் தங்களுடைய முந்திய நிலைமைக்கு, இவ்விதமாக மறுபடியும் சுவர்க்கத்துக்கு போவதுபோல் சீக்கிரம் திரும்பிப் போக நம்பினதாகவும் அவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், அவர்களுக்கு, தங்களுக்கு சொந்தமானதிலிருந்து தடுக்கப்படுதல் சுவர்க்கமாயிருக்கிறது.

**161**. நரகங்களில், நிலைமைகளின் மாறுதல்கூட இருக்கின்றன, ஆனால் நரகத்தைப்பற்றி பேசும்போது இவைகள் விவரிக்கப்படும்.

# XVIII

## சுவர்க்கத்தில் காலம்

**162.** சுவர்க்கத்திலிருக்கும் எல்லா பொருள்களுக்கும் அவைகளுடைய தொடர்ச்சிகளும் அபிவிர்த்திகளும் உலகத்தில் போல் இருந்தபோதிலும், தேவர்களுக்கு காலம் இடம் என்பதைப் பற்றிய எந்த எண்ணமும், அல்லது அபிப்பிராயமும் கிடையாது; காலம் இடம் என்பவை என்னவென்று தெரியாதபடிகூட அவ்வித அபிப்பிராயம் முழுமையும் இல்லாதபடி அவர்கள் இருக்கிறார்கள். ஆகையினால், இப்பொழுது சுவர்க்கத்தில் காலம் என்பதைப் பற்றியும், இன்னம் ஒரு அத்தியாயத்தில் இடம் என்பதைப் பற்றியும் நாம் பேசுவோம்.

**163**. தேவர்கள் விஷயத்தில் ஒரு வித்தியாசமும் இல்லாமல், உலகத்தில்போல் எல்லா பொருள்களின் தொடர்பான அபிவிர்த்தி யிருந்தபோதிலும், காலமென்பது என்னவென்று அவர்களுக்கு தெரியாது; சுவர்க்கத்தில் வருஷங்களுக்கும் நாட்களுக்கும் பதிலாக, நிலைமைகளின் வேறுபாடுகள் இருக்கின்றனவென்பதும், வருஷங்களும் நாட்களும் இருக்குமிடத்தில், காலங்கள் இருக்கின்றனவென்பதும், ஆனால் நிலைமையின் வேறுபாடுகள் இருக்கிற இடத்தில் நிலைமைகள் இருக்கின்றனவென்பதும் காரணமாயிருக்கிறது.

**164.** உலகத்தின் சூரியன் ஒரு பாகையிலிருந்து மற்றதற்கு, தொடர்பாய் போகிறதாகவும், இவ்விதமாக, வருஷத்தின் பருவங்கள் என்று சொல்லப்பட்ட காலங்களை உண்டாக்குகிறதாகவும் தோன்றுகிறபடியினால், உலகத்தில் காலங்கள் இருக்கின்றன; இதுவுமன்றி, அது பிரத்தியக்ஷமாய் பூமியைச் சுற்றிலும் சுழன்று, பகலின் காலங்கள் என்று சொல்லப்பட்ட காலங்களை உண்டாக்குகின்றன; இந்த வேறுபாடுகள் ஒழுங்கான இடைகாலங்களில் நேரிடுகின்றன. சுவர்க்கத்தின் சூரியன் விஷயத்தில் அப்படியில்லை. அந்த சூரியன் தொடர்பான அபிவிருத்திகளாலும், பரிவிருத்திகளாலும், வருஷங்களையும் நாட்களையும் குறிப்பிடுகிறதில்லை. ஆனால், அது தோன்றும் வழியில் நிலைமையின் மாறுதல்களைக் குறிப்பிடுகிறது; இதுவும், முன் அத்தியாயத்தில் காண்பிக்

கப்பட்டபடி, ஒழுங்கான இடைகாலங்களில் செய்யப்படுகிறதில்லை. ஆதலால், தேவர்களுக்கு காலத்தைக் குறித்த எந்த அபிப்பிராயமும் இருக்க முடியாது; ஆனால், அதற்குப் பதிலாக, நிலைமையின் ஓர் அபிப்பிராயத்தை அவர்கள் உடைத்தாயிருக்கிறார்கள். நிலைமை என்பது என்னவென்று மேலே (நெ. 154-ல்) பார்க்கப்படலாம்.

**165.** உலகத்திலிருக்கும் மனிதர்களைப்போல், காலம் என்பதிலிருந்துவந்த எந்த அபிப்பிராயமும் தேவர்களுக்கு இல்லாதபடியினால், காலத்தைப்பற்றியும், காலத்துக்கு சம்பந்தப்பட்டவைகளைப்பற்றியும், அவர்களுக்கு எந்த அபிப்பிராயமும் கிடையாது. ஒரு வருஷமென்றும், ஒரு மாதமென்றும், ஒரு வாரமென்றும். ஒரு நாள் என்றும், ஒரு மணி என்றும், இன்று என்றும், நாளை என்றும், நேற்று என்றும் சொல்லப்பட்டவைகள்போன்ற காலத்தின் பகுதிகள்கூட என்னவென்றும் அவர்களுக்கு தெரியாது. தேவர்கள் மனிதனால் அவைகள் பெயரிடப்படுவதைக் கேட்டபோது (ஆண்டவரால் தேவர்கள் மனிதனுடன் எப்பொழுதும் சேர்க்கப்படுகிறபடியினால்), அவைகளுக்கு பதிலாக நிலைமைகளையும், நிலைமைகளுக்கு சம்பந்தப்பட்ட பொருள்களையும் மாத்திரம் அவர்கள் அறிந்துகொள்ளுகிறார்கள்; இவ்விதமாக மனிதனுடைய ஸ்தூல அபிப்பிராயம், தேவர்கள் விஷயத்தில் சூக்ஷ்ம அபிப்பிராயமாக மாற்றப்படுகிறது. அதனால்தான் வேதத்தில் காலங்கள் என்பவை நிலைமைகளையும், மேலே கூறியவை போன்ற காலப்பகுதிகள் என்பவை அவைகளுக்கு அனுவயப்படுகிற சூக்ஷ்மப் பொருள்களையும் அருத்தம் கொள்ளுகின்றன.

**166.** வசந்த காலமென்றும், கோடை காலமென்றும், இலையுதிர் காலமென்றும், மாரி காலமென்றும் சொல்லப்பட்ட வருஷத்தின் நான்கு பருவங்கள் போன்றதும், காலை என்றும், நடுபகல் என்றும், மாலை என்றும், இரவு என்றும் சொல்லப்பட்ட நாளின் நான்கு காலங்கள் போன்றதும், இளம்பிராய மென்றும், வாலிப மென்றும், புருடத்துவ மென்றும், விருத்தாப்பிய மென்றும், சொல்லப்பட்ட மனிதனுடைய நான்கு வயசுகள் போன்றதுமாகிய காலவரைக்கு உட்பட்ட எல்லாவற்றினிடத்தும், காலவரைக்குட்பட்டதும், அல்லது காலவரிசையில் ஒன்றன்பின் ஒன்றாய் வரும் இதர எல்லாக் கால எல்லைகளிடத்தும் விஷயம் ஒரேமாதிரி யிருக்கிறது. அவைகளைப்பற்றி நினைப்பதில், மனிதன் காலவரைக்குட்பட்டு நினைக்கிறான், ஆனால் ஒரு தேவனோ நிலைமையிலிருந்து நினைக்கிறான்;

அதனால், மனிதனுடைய எண்ணத்தில் காலத்திலிருந்துவந்தது, ஒரு தேவனிடத்தில் நிலைமையின் ஒரு அபிப்பிராயமாக திருப்பப்படுகிறது. வசந்த காலமும் காலையும் தேவர்களில் அவர்களுடைய முதல் நிலைமையில் அவைகள் இருக்கிறபடி அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் நிலைமையின் ஒரு அபிப்பிராயமாகவும், கோடை காலமும் நடுபகலும், இரண்டாவது நிலைமையில் அவைகள் இருக்கிறபடி அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் ஒரு அபிப்பிராயமாகவும், இலையுதிர்காலமும் மாலையும், மூன்றாவது நிலைமையில் இருக்கிறபடிக்கும், இரவும் மாரிகாலமும் நரகத்திலிருக்கிற ஒரு நிலைமையின் ஒரு அபிப்பிராயமாகவும் திருப்பப்படுகின்றன. அதனால்தான், ஒரே மாதிரியிருக்கும் பொருள்கள் வேதத்தில் அந்த காலங்களால் கருதப்படுகின்றன (மேலே செ. 155-ல் பார்க்கவும்). மனிதனுடைய சிந்தனையில் இருக்கும் ஸ்தூல அபிப்பிராயங்கள் அவனுடன் இருக்கும் தேவர்கள் விஷயத்தில் சூக்ஷுமமாகிற தென்பது, இவ்விதமாக விசதமாகிறது.

**167**. தேவர்களுக்கு காலத்தைக் குறித்த எந்த அபிப்பிராயமும் இல்லாதபடியினால், நித்தியத்தைக் குறித்து, பூமியின் பேரில் இருக்கும் மனிதர்கள் வைத்திருக்கும் அபிப்பிராயத்தை விட வேறு அபிப்பிராயத்தை அவர்கள் உடைத்தாயிருக்கிறார்கள். நித்தியம் என்பதினால், தேவர்கள் முடிவற்ற காலத்தை அல்லாமல், முடிவற்ற நிலைமையைப் பார்க்கிறார்கள். நித்தியத்தைப்பற்றி நான் ஒரு முறை நினைத்துக்கொண்டிருந்தேன்; நித்தியம் என்பது என்ன அருத்தம் கொள்ளுகிறது என்பதை, நித்தியத்திலிருந்து என்பது என்ன அருத்தம் கொள்ளுகிறது என்பதல்லாமல், இவ்விதமாக கடவுள் சிருட்டிக்கு முன் நித்தியத்திலிருந்து என்ன செய்திருந்தார் என்பதல்லாமல் முடிவற்று இருத்தல் என்று காலத்தின் அபிப்பிராயத்தைக் கொண்டு அறிந்துகொள்ள நான் சக்தியுள்ளவனாயிருந்தேன். இந்த விஷயத்தைப்பற்றி, என்னுடைய மனதில் கவலையுண்டானபோது, சுவர்க்கத்தின் கோளத்திற்கும், இவ்விதமாக, நித்தியம் என்பதைப்பற்றி தேவர்களுக்கு இருக்கும் உணர்ச்சிக்கு நான் தூக்கப்பட்டேன். அப்பொழுது, நித்தியம் என்பது காலத்திலிருந்தல்லாமல், நிலைமையிலிருந்து நினைக்கப்பட வேண்டுமென்று எனக்கு தெளிவாக்கப்பட்டது; அப்பொழுது, நித்தியத்திலிருந்து என்பது என்னவென்று, எனக்கு அப்பொழுது நேர்ந்தபடி நாம் அறிந்துகொள்ளலாம்.

**168.** மனிதர்களுடன் பேசும் தேவர்கள், காலம், இடம், மாயை, இவைகளைப்போன்றவைகளிலிருந்து வருகிற, மனிதனுக்கு தகைமையான ஸ்தூல அபிப்பிராயங்களால் எப்பொழுதும் பேசாமல், தேவர்களுக்குள்ளேயும் அவர்களுக்கு வெளியேயுமிருக்கும் நிலைமைகளிலிருந்தும், அவைகளின் பலவித மாறுபாடுகளிலிருந்தும் வருகிற சூக்கும அபிப்பிராயங்களால் பேசுகிறார்கள். அப்படியிருந்தும், சூக்குமமான இந்த தேவர்களின் அபிப்பிராயங்கள் மனிதர்களுக்குள் பாய்ந்தபோது, சூக்கும அபிப்பிராயங்களுடன் பூர்ணமாய் அன்னுவயப்படுகிற மனிதர்களுக்கு தகுதியான ஸ்தூல அபிப்பிராயங்களாக அவைகளாலேயே ஒரு நொடி நேரத்தில் மாற்றப்படுகின்றன. அது அப்படி இருக்கிறதென்று தேவர்களுக்காவது மனிதர்களுக்காவது தெரிந்திருக்கவில்லை. மனிதற்குள் பாயும் சுவர்க்கத்தின் எல்லா உட்பெருக்கின் சுபாவமும் அவ்விதமாககூட இருக்கின்றன. சில தேவர்கள் என்னுடைய சிந்தனைகளில் அதிக சமீபமாயும், காலத்திலிருந்தும் இடத்திலிருந்தும் அநேக பொருள்கள், இருந்த ஸ்தூல சிந்தனைகளுக்குள் கூடவும் பிரவேசிக்க விடப்பட்டார்கள்; ஆனால், அவர்கள் ஒன்றையும் தெரிந்துகொள்ளாதபடியினால், சடுதியில் பிரிந்துபோனார்கள்; அவர்கள் அப்படி நீங்கின பிறகு, அவர்கள் தாங்கள் இருளில் இருந்ததாக சொல்லிக்கொண்டு பேசிக்கொண்டிருந்ததை நான் கேட்டிருக்கிறேன்.

தேவர்கள் காலம் என்பதைப்பற்றி எவ்வளவு அறியாமையில் இருக்கிறார்களென்று, அனுபோகத்தில் தெரிந்துகொள்ள எனக்கு அருள்செய்யப்பட்டது. மனிதன் உடைத்தாயிருக்கிறதுபோன்ற ஸ்தூல அபிப்பிராயங்களில் பிரவேசிக்க சக்தியுள்ளதாயிருந்த சுவர்க்கத்திலிருந்து வந்த ஒருவன் இருந்தான்; நான் மனிதன் மனிதனோடு பேசுகிறதுபோல் அவனுடன் பின்னிட்டு பேசினேன். முதலில் நான் காலம் என்று சொல்லியது அவனுக்கு தெரியவில்லை; அதனால், நம்ம பூமியைச்சுற்றி, சூரியன் எப்படி கொண்டுபோகப்பட்டு வருஷங்களையும் நாட்களையும், உண்டாக்குகிறதென்றும், எப்படி வருஷங்கள் அதனால் நான்கு பருவங்களாகவும், மாதங்களாகவும் வாரங்களாகவும், நாட்கள் இருபத்திநான்கு மணிகளாகவும் பிரிக்கப்படுகிறதென்றும், எப்படி இந்த காலங்கள் ஸ்திரமான பிரதிகிருத்தியங்களால் திரும்பிவருகிறதென்றும், இது எப்படி காலங்களுக்கு உற்பத்தி என்றும், அதைப்பற்றி அவனுக்கு எல்லாம் சொல்ல நேரிட்டது. இதைக்கேட்டபிறகு, அவன் மிகவும் ஆச்சரியப்பட்டு, இவ்வித

மான விஷயங்கள் தனக்கு ஒன்றும் தெரியாதென்றும், ஆனால் நிலைமைகள் என்பது என்னவென்று தனக்கு தெரியுமென்றும் சொன்னான். எங்களுடைய சம்பாஷணை நடக்கும் காலத்தில், சுவர்க்கத்தில் காலமென்பது இல்லை என்று உலகத்தில் தெரிந்திருக்கிறதாகவும், குறைந்தபக்ஷம், தங்களுக்கு அது தெரியும்போல் மனிதர்கள் பேசுகிறதாகவும்கூட நான் சொன்னேன்; ஏனென்றால், இறந்துபோகிறவர்களைப்பற்றி, காலப்பொருள்களை விட்டுவிடுகிறார்களென்றும், காலத்துக்கு வெளியே போகிறார்களென்றும், அதனால் உலகத்துக்கு வெளியே போகிறார்களென்கிற அருத்தத்துடன் அவர்கள் சொல்லுகிறார்கள். இதமானதும், சந்தோஷமானதுமாகிய நிலைமைகளில் இருக்கப்பட்டவர்களுக்கு குறுகினதாகவும், ஒவ்வாததும் விசனகரமுள்ள ஆசைகளிலிருக்கப்பட்டவர்களுக்கு நீண்டதாகவும், நம்பிக்கையினுடையவும் எதிர்பார்த்தலினுடையவும் நிலைமையிலிருக்கப்பட்டவர்களுக்கு பலவிதமாகவும், தங்களுடைய ஆசையின் நிலைமைகளுக்கு, தக்கபடி அவர்கள் இருக்கிறார்களென்கிற சந்தர்ப்பத்திலிருந்து, காலங்கள் உற்பத்தியில் நிலைமைகளென்று சிலருக்குத் தெரியுமென்றுகூட நான் சொன்னேன்; இது கற்றோரை காலமும் இடமும் என்னவென்று விசாரிக்க ஏவுகிறது; சிலர் காலமென்பது ஸ்தூல மனிதனுக்கு சேர்ந்ததென்று ஒத்துக்கொள்ளுகிறார்கள்.

**169**. காலத்தையும், இடத்தையும், ஸ்தூலப் பொருள்களையும் நீக்கிவிடப்பட்டால், ஸ்தூல மனிதன், தனக்கு சிந்தனை இல்லாமல் போகுமென்று நினைக்கக்கூடும்; ஏனென்றால், இந்த அபிப்பிராயங்களின்பேரில், மனிதனுடைய எல்லா சிந்தனையும் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், சிந்தனைகள், காலம், இடம், ஜடப் பொருளாகிய இவைகளைப் பகிர்ந்துகொள்ளுகிற அளவு வரையறுக்கப்பட்டு அடைக்கப்படுகிறதென்றும், மனது அவ்வளவு சரீர சம்பந்தமானதும் உலக சம்பந்தமானதுமாகிய பொருள்களுக்கு மேலே உயர்த்தப்பட்டிருப்பதினால், அவைகளை அவைகள் பகிர்ந்துக்கொள்ளாத அளவு எல்லையற்றதென்றும் விரிந்ததென்றும் அவனுக்கு தெரிந்திருக்கட்டும். ஆதலால், தேவர்களுக்கு ஞானமுண்டு; அந்த ஞானமானது, உலக சம்மந்தமானதும் ஸ்தூலமானதுமாகிய பொருள்களில்மாத்திரம் அமைந்திருக்கிற அபிப்பிராயங்களில் விழாதபடியினால், அது அறியக்கூடாததென்று சொல்லப்படுகிறது.

# XIX

## சுவர்க்கத்தில் அறிகுறிகளும் தோற்றங்களும்

**170.** ஸ்தூல ஒளியிலிருந்து மாத்திரம் நினைக்கும் மனிதன், சுவர்க்கத்திலிருக்கும் எந்த பொருளும் உலகத்திலிருப்பதுபோல, இருக்கக் கூடுமென்று கிரகிக்க முடியாது; ஏனென்றால், அந்த ஒளியிலிருந்து அவன் நினைத்து, தேவர்கள் மனதுகளாக மாத்திரம் இருக்கிறார்களென்கிறதும், மனதுகள் ஒரு மனிதனைப்போல, ஐம் புலன்களையும், இவ்விதமாக கண்களையும், கண்களில்லாவிட்டால் பார்க்கும் பொருள்களையும் உடைத்தாயிராத ஆகாயத்துக்கடுத்த ஆவிகளாக பிரத்தியக்ஷமாய் இருக்கின்றனவென்கிறதுமாகிய அபிப் பிராயத்தில் தானே ஸ்திரப்பட்டிருந்தான்; அப்படியிருந்தும் தேவர் களுக்கு, மனிதனுக்கிருக்கும் எல்லா புலன்களுமிருக்கின்றன; நிஜ மாக, அவனுடைய புலன்களைவிட அவைகள் அதிக சூக்குமமான தாயிருக்கின்றன; அவர்கள் பார்க்கப்பட்ட ஒளி, மனிதன் பார்க்கப் பட்ட ஒளியைவிட அதிக பிரகாசமாயிருக்கிறது. தேவர்கள், மிக வும் சம்பூரணமான உருவத்தில் மனிதர்கள் என்பதும், அவர்கள் ஒவ்வொரு புலனையும் அநுபவிக்கிறார்களென்பதும் மேலே (நெ. 73 முதல் 77 வரையிலும்), சுவர்க்கத்திலிருக்கும் ஒளி உலகத்திலிருக் கும் ஒளியைவிட அதிக பிரகாசமாயிருக்கிறதென்பது (நெ. 126 முதல் 132 வரையிலும்) பார்க்கப்படலாம்.

**171.** சுவர்க்கங்களில் தேவர்களால் பார்க்கப்பட்ட பொருள் களின் சுபாவம், சில வார்த்தைகளில் விவரிக்கப்பட முடியாது; அதிகமாய், பூமியின்பேரில் இருக்கும் பொருள்களைப்போல் அவை கள் இருக்கின்றன; ஆனால், உருவம் விஷயத்தில் அதிக பூரணமாக வும் எண்ணில் மிகுந்து மிருக்கின்றன. புதிய கோயிலுக்கும் புதிய பூமிக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றி எசேக்கியேல் என்பவரால் போலவும் (xl முதல் xlviii வரையில் விவரிக்கப்பட்டபடி) தானி யேல் என்பவரால் போலவும் (vii அத்தியாயம் முதல் xii வரை யில்), யோவான் என்பவரால் போலவும் (வெளிப்படுத்தின விசேஷம் முதல் அத்தியாயம்முதல் கடைசிவரையில்), வேதத்தின் சரித்திர சம்பந்தமான பாகத்திலும் தீர்க்கதரிசனத்துக்கடுத்த பாகத்திலும் மற்றவர்களால் விவரிக்கப்பட்டதுபோலவும், தீர்க்கதரிசிகளால்பார்க்

கப்பட்ட பொருள்களிலிருந்து சுவர்க்கங்களில் அவ்விதபொருள்கள் இருக்கின்றனவென்று விசதமாகிறது. அவர்களுக்கு சுவர்க்கம் திறக்கப்பட்டபோது இந்த பொருள்களை அவர்கள் பார்த்தார்கள்; மனிதனுடைய அசரீரி ஆன்மாவாகிய ஆவியின் பார்வையாயிருக்கிற உள்ளான பார்வை திறக்கப்பட்டபோது, சுவர்க்கம் திறக்கப்படுகிறதாக சொல்லப்படுகிறது. ஏனென்றால், சுவர்க்கங்களிலிருக்கப்பட்டது, மனிதனுடைய அசரீரி ஆவியினால் தவிர, அவனுடைய சரீரத்தின் கண்களால் பார்க்கப்பட முடியாது. ஆண்டவருக்கு நன்மையாக தோன்றும்போது, இவைகள் திறக்கப்படுகின்றன; அப்பொழுது, சரீரத்தின் ஐம்புலன்களிலிருந்து வரும் அவன் இருக்கப்பட்ட ஸ்தூல வெளிச்சத்திலிருந்து மனிதன் பிரிக்கப்பட்டு தன்னுடைய ஆவியிலிருந்து அவன் இருக்கப்பட்ட ஸ்தூல வெளிச்சத்திற்கு உயர்த்தப்படுகிறான். அந்த வெளிச்சத்தில், சுவர்க்கத்திலிருக்கும் பொருள்களை நான் பார்த்திருக்கிறேன்.

**172.** சுவர்க்கங்களில் தோன்றுகிற பொருள்கள், அநேகமாய், பூமியின்பேரி லிருக்கப்பட்டவைகள்போல இருக்கிறபோதிலும், தத்துவத்தில் அவைகள் அவைகளைப்போல் இல்லை; ஏனென்றால், சுவர்க்கங்களிலிருக்கும் பொருள்கள், சுவர்க்கத்தின் சூரியனிடமிருந்து உண்டாகின்றன; அப்படியிருக்கையில், பூமியின்பேரில் இருப்பவைகள், உலகத்தின் சூரியனிடமிருந்து உண்டாகின்றன; சுவர்க்கத்தின் சூரியனிடமிருந்து உண்டாகிற பொருள்கள், சூக்குமமானதென்று சொல்லப்படுகின்றன; ஆனால், உலகத்தின் சூரியனிடமிருந்து உண்டாகிறவைகள் ஸ்தூலமானதென்று சொல்லப்படுகின்றன.

**173.** சுவர்க்கத்திலிருக்கும் பொருள்கள், பூமியிலிருப்பவைகள்போல ஒரேமாதிரி உண்டாகிறதில்லை. சுவர்க்கங்களிலிருக்கும் எல்லா பொருள்களும் தேவர்களின் உள்ளானவைகளோடு அன்னுவயப்படுகிறதற்கு தக்கப்படி, ஆண்டவரிடமிருந்து உண்டாகின்றன. தேவர்களுக்கு உள்ளானவைகளும் புறம்பானவைகளும் உண்டு; அவர்களுடைய உள்ளானவைகளிலிருக்கும் பொருள்கள், அன்பிற்கும் விசுவாசத்திற்கும், இவ்விதமாக, சித்தத்திற்கும் புத்திக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், சித்தமும் புத்தியும் அவர்களுடைய கொள்கலமாயிருக்கின்றன; புறம்பானவைகள் உள்ளானவைகளுடன் அன்னுவயப்படுகின்றன. புறம்பானவைகள் உள்ளானவைகளுடன் அன்னுவயப்படுகிறதென்பது மேலே

பார்க்கப்படலாம் (செ. 87 முதல் 115 வரையில்). சுவர்க்கத்தின் சூட்டைப்பற்றியும் ஒளியைப்பற்றியும் மேலே சொன்னதினால், அதாவது, தேவர்களுக்கு அவர்களுடைய அன்பின் குணத்திற்குத் தக்கபடி, சூடும், அவர்களுடைய ஞானத்தின் குணத்துக்குத் தக்க படி ஒளியும் உண்டென்பதினால் (செ. 128 முதல் 134 வரையில்), இது திருஷ்டாந்தப் படுத்தப்படலாம்; தேவர்களின் புலன்களுக்கு தோன்றுகிற மற்றப் பொருள்கள் விஷயத்திலும் இதேமாதிரிதான்.

**174.** தேவர்கள் கூட்டத்திலிருக்க எனக்கு அருள் செய்யப் பட்டபோதெல்லாம், அவர்களைச்சுற்றி இருந்தவைகள் உலகத்தில் பொருள்களைப் பார்த்ததுபோலவே இருந்ததையும், நான் உலகத்தி லும், ஒரு அரசனுடைய அரண்மனையிலும் இருந்ததைத் தவிர வேறொன்றும் தெரிந்துகொள்ளாதபடி அவ்வளவு தெளிவாயும் பார்த்திருக்கிறேன். நான் ஒரு மனிதன் மனிதனோடு பேசுகிறது போல், அவர்களுடன்கூட பேசினேன்.

**175.** உள்ளானவைகளுடன் அன்னுவயப்படுகிற எல்லா பொருள்களும்கூட அவைகளை சாயல் காட்டுகிறபடியினால், அவை கள் அறிகுறிகள் என்று சொல்லப்படுகின்றன; தேவர்களின் உள் ளானவைகளுடைய நிலைமைகளுக்குத் தக்கபடி அவைகள் வேறுபடு கிறபடியினால், அவைகள் தோற்றங்கள் என்று சொல்லப்படுகின்றன; அப்படியிருந்தாலும், சுவர்க்கத்தில் தேவர்களின் கண்கள் முன்பாக தோன்றுகிறதும், அவர்களுடைய புலன்களால் உணரப்படுகிறதுமா கிய பொருள்கள், பூமியின்பேரிலிருக்கும் பொருள்கள் மனிதனுக்கு தோன்றுகிறதுபோலவும், இன்னும் அதிக தெளிவாகவும், தீர்க்கமாயும் காணக்கூடியதாயும், அவ்வளவு முழுமையும் உயி ருள்ளதுபோலவும், அவர்களுடைய கண்களுக்கும் பஞ்சேந்திரியங் களுக்கும் தோன்றுகின்றன. சுவர்க்கத்தில் இவ்விதமான தோற் றங்கள், அவைகள் நிஜமாய் நிலைத்திருக்கிறபடியினால், நிஜமான தோற்றங்கள் என்று சொல்லப்படுகின்றன. உண்மையில்லாத தும்,உண்மையாகவே பார்வைக்கு காண்பிக்கப்படுகிறதுபோலிருந்து, ஆனால் உள்ளானவைகளுடன் அன்னுவயப்படாததுமான உண்மையில்லாத தோற்றங்கள்கூட இருக்கின்றன. இவைகளைப் பற்றி பின்னிட்டு பேசுவோம்.

**176.** அன்னுவயங்களின்படி, தேவர்களின் பார்வைக்கு காண்பிக்கப்படுகிற பொருள்கள் என்னவென்பதை காண்பிக்க ஒரு தனித்த உதாரணத்தை திருஷ்டாந்தத்தின் பொருட்டு நான்

சொல்லுகிறேன். விவேகத்தி லிருக்கப்பட்டவர்களுக்கு, எல்லாவித மரங்களாலும் புஷ்பங்களாலும் நிறைந்த தோட்டங்களும் ஆனந்த ஸ்தலங்களும் தெரிய காட்டப்படுகின்றன. மரங்கள் வில்வினோந்த வாயில்களுடனும் சுற்றியிருக்கும் கதிகளுடனும் கொடி படர்ந்த பந்தர்களாக, வார்த்தைகளால் சொல்லக்கூடியதைவிட எல்லாம் அதிக அழகுடன் சேர்க்கப்பட்டு மிகவும் அழகான ஒழுங்கில் நடப்பட்டிருக்கின்றன. விவேகமுள்ளவர்கள் இந்த ஆனந்த ஸ்தலங்களில் நடந்து, புஷ்பங்களைச் சேர்த்து, தங்களுடைய சிறிய குழந்தைகளை அலங்கரிக்கிற பூமாலைகளாக செய்கிறார்கள். எப்பொழுதும் பார்க்கப்படாததும், உலகத்திலிருக்கக்கூடாததுமாகிய மரங்களும் புஷ்பங்களின் இனங்களும்கூட அங்கே யிருக்கின்றன. அந்த மரங்கள், புத்திசாலிகளிருக்கப்பட்ட அன்பின் நன்மைக்கு தக்கபடி பழங்களை தருகின்றன. ஒரு தோட்டமென்பதும், ஒரு ஆனந்த ஸ்தலமென்பதும், பழங்களை தரும் மரங்களும், புஷ்பங்கள் என்பதும் விவேகத்திற்கும் ஞானத்துக்கும் அன்னுவயப்படுகிறபடியினால், அவர்கள் அவ்வித பொருள்களைப் பார்க்கிறார்கள். சுவர்க்கத்தில் அவ்விதமான பொருள்கள் இருக்கின்றனவென்பது பூமியின்பேரிலும்தெரிந்திருக்கிறது; ஆனால் நன்மையிலிருக்கப்பட்டவர்களுக்கும், ஸ்தூல ஒளியினாலும் அதன் பொய்களாலும் சுவர்க்கத்தின் ஒளியை தங்களுக்குள் அணைத்துவிடாதவர்களுக்கும் மாத்திரம் அப்படி தெரிந்திருக்கிறது; ஏனென்றால், அவர்கள், சுவர்க்கத்தைப்பற்றி பேசும் காலத்தில் கண் பார்க்காததும் காது கேட்காததுமான அவ்வித பொருள்கள் இருக்கின்றனவென்று நினைத்து பேசுகிறார்கள்.

# XX

## தேவர்கள் உடுத்திருப்பதாக தோன்றுகிற ஆடைகள்.

**177.** தேவர்கள் மனிதர்களாய், பூமியின்மேலிருக்கும் மனிதர்களைப்போல் கூட்டமாக சேர்ந்து வசிக்கிறபடியினுல், அவர்கள் அதிக சம்பூரணமான நிலைமையிலிருக்கிறதின் நிமித்தம், எல்லா பொருள்களை மிகப் பெரிய சம்பூரணத்தில் உடைத்தாயிருக்கிறார்களென்கிற வித்தியாசத்துடன், ஆடைகளையும், வீடுகளையும் அதே மாதிரியான இதர பொருள்களையும் அவர்கள் உடைத்தாயிருக்கிறார்கள். ஏனென்றால், தேவர்கள் ஞானமானது, சொல்ல முடியாததென்று சொல்லும்படி அவ்வளவு அளவுமானிட ஞானத்தை விட மேற்படுகிறபடியினுல், தேவர்களால் பார்க்கப்பட்டு உணரப்படுகிற எல்லா பொருள்கள் விஷயத்திலும், அவைகள் எல்லாம் அவர்களுடைய ஞானத்திற்கு அன்னுவயப்படுகிறதின் நிமித்தம், அப்படியேயிருக்கின்றன (மேலே தெ. 173 பார்க்கவும்).

**178.** தேவர்கள் உடுத்திருக்கும் ஆடைகள், அவர்களோடு, சம்பந்தப்பட்ட இதர பொருள்கள்போல அன்னுவயப்படுகின்றன, அவைகள் அன்னுவயப்படுகிறபடியினுல், அவைகள்கூட உண்மையாய் இருக்கின்றன (மேலே தெ 175 பார்க்கவும்). அவர்களுடைய உடுப்புகள் அவர்களுடைய புத்தியுடன் அன்னுவயப்படுகின்றன; ஆகையால், சுவர்க்கங்களிலிருக்கும் எல்லாரும், தங்கள் விவேகத்திற்கு தக்கபடி உடுத்திருப்பது பார்க்கப்படுகின்றன. மேலும் சிலர் மற்றவர்களைவிட புத்தியில் மேற்படுகிறபடியினுல் (தெ. 43, 128), அவர்கள் அதிக அழகாய் உடுக்கப்படுகிறார்கள். மிகவும் புத்திசாலியானவர்கள் சுவாலையுடன் எரிகிற ஆடைகளையும், சிலர் ஒளியுடன் பிரகாசிக்கிறவைகளையும், புத்தியில் குறைந்தவர்கள் தேசு இல்லாமல் பிரகாசமாயும் வெண்மையாயும் இருக்கிற ஆடைகளையும், அதிலும் குறைந்த புத்தியுள்ளவர்கள் பலவித நிறங்களுடைய ஆடைகளையும், உடைத்தாயிருக்கிறார்கள்; ஆனுல் மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவர்கள் உடுத்திருக்கப்படவில்லை.

**179.** தேவர்களுடைய ஆடைகள் அவர்களுடைய புத்தியுடன் அன்னுவயப்படுகிறபடியினுல், எல்லா விவேகமும் தெய்வீக உண்மையிலிருந்து வருகிறதின் நிமித்தம் அவைகள் உண்மையுடன்

கூட அந்நுவயப்படுகின்றன; ஆகையினால், தேவர்கள், தங்கள் விவேகத்திற்கு தக்கபடி என்றாவது அல்லது, தெய்வீக உண்மைக்கு தக்கபடி என்றாவது நீங்கள் சொன்னால், ஒரே பொருளாகிறது. சுவாலை நன்மைக்கும், ஒளி நன்மையிலிருந்து வரும் உண்மைக்கும் அந்நுவயப்படுகிற படியினால், சிலருடைய ஆடைகள், சுவாலையுடன்போல எரிகின்றன, மற்றவர்களின் ஆடைகள் ஒளியுடன் போல் பிரகாசிக்கின்றன. தெய்வீக நன்மையும் உண்மையும் குறைவாய் பிரகாசமுள்ளவைகளா யிருப்பதினாலும், விவேகத்தில் குறைந்தவர்களால் பலவிதமாய்கூட ஏற்றுக்கொள்ளப்படுகிறபடியினாலும்கூட, சிலருடைய ஆடைகள் தேசு இல்லாமல் பிரகாசமாயும் வெண்மையாயுமிருக்கின்றன; மற்றவர்களுடைய ஆடைகள் பலவிதமான நிறங்களுள்ளதா யிருக்கின்றன. சோதியும் வெண்மையும் உண்மைக்கும், நிறங்கள் அதன் விகற்பங்களுக்கும் அந்நுவயப்படுகின்றன. மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவர்கள் மனப்புனிதத்தி லிருக்கிறபடியினாலும், மனப்புனிதம் என்பது நிர்வானத்துக்கு அந்நுவயப்படுகிறபடியினாலும், அவர்கள் உடுத்திருக்கப்படுகிறதில்லை.

**180.** தேவர்கள் சுவர்க்கத்தில் ஆடைகளால் உடுத்தப்படுகிற படியினால், அவர்கள் உலகத்தில் பார்க்கப்படும்போது தீர்க்கதரிசிகளால் பார்க்கப்பட்டவைகள்போலவும், ஆண்டவரின் சமாதியண்டை பார்க்கப்பட்டவைகள் போலவும், அதாவது அவர்கள் "தோற்றம் மின்னல்போலவும், அவர்களுடைய ஆடைகள் வெண்மையாகவும்," (மத்தே. xxviii. 3; மார். xvi. 5; லூக். xxiv. 4; யோவா. xx. 12, 13), ஆடைகளால் உடுத்தப்பட்டுகூட தோன்றினார்கள்; யோவானால் சுவர்க்கத்தில் பார்க்கப்பட்டவர்கள், "மெல்லிய புடவைகளையும் வெண்மையான ஆடைகளை போட்டுக்கொண்டிருந்தார்கள்" (வெளி. iv. 4; xix. 14). விவேகமானது தெய்வீக உண்மையிலிருந்து வருகிறபடியினால், ஆண்டவரின் ஆடைகள், அவர் வேற்றுருவு எடுத்தபோது, ஒளியைப்போல் மின்னிக் கொண்டும் வெண்மையாகவும் இருந்தன (மத்தே. xvii. 2; மார். ix. 3; லூக். ix. 29). அந்த ஒளியானது, ஆண்டவரிடமிருந்துவரும் தெய்வீக உண்மை என்பது மேலே பார்க்கலாம் (நெ. 129). அதனால்தான், வேதத்தில் ஆடைகள் என்பது உண்மைகளையும், அவைகளிலிருந்து வந்த விவேகத்தையும் அடியில் கண்டவைகளில்போல கருதப்படுகின்றன: யோவானில், "தங்கள் ஆடைகளை அழுக்காக்காதவர்கள், பாத்திர

மானவர்களானபடியினால், வெண்மையான உடுப்புகளுடன் என்னுடன் நடப்பார்கள். மேற்கொள்ளுகிறவர்கள் வெள்ளை உடுப்புகளால் உடுத்தப்படுவார்கள்'' (வெளி. iii. 4,5.). "தன்னுடைய ஆடைகளை காத்திருந்து வைத்திருப்பவன் ஆசீர்வதிக்கப்படுவான்'' (xvi. 15.) உண்மையில் இருக்கிற திருச்சபை என்று கருதப்படுகிற எருசலேம் நகரத்தைப்பற்றி, ஏசாயாவில் இவ்விதமாக எழுதப்பட்டிருக்கிறது: "எழும்பு சீயோனே, உன்வல்லமையைத்தரித்துக்கொள்; எருசலேமே உன் அலங்கார வஸ்திரங்களை உடுத்திக்கொள்'' (lii); எசேக்கியேலில், "மெல்லிய புடைவை உனக்கு கட்டி, உன்னை பட்டுசால்வையால் மூடினேன். உன்னுடைய ஆடைகள் நேர்த்தியான புடைவைகளாலும் பட்டினாலும் செய்யப்பட்டிருக்கிறது.'' (xvi. 10, 13); இதர அநேக வாக்கியங்களை சொல்லவேண்டியதில்லை. உண்மைகளில் இல்லாதவன், மத்தேயுவில் சொல்லியபடி, விவாக ஆடையினால் உடுக்கப்படவில்லையென்று சொல்லப்படுகிறான்: "ராஜா உள்ளே பிரவேசித்தபோது கல்யாணவஸ்திரம். தரித்திராத ஒரு மனுஷனை கண்டான்; சினேகிதனே, நீ கல்யாணவஸ்திரமில்லாதவனாய், இங்கே எப்படி வந்தாய் என்று அவர் கேட்டார்? ஆகையினால், அவன் புறம்பான இருளிலே போடப்பட்டான்'' (xxii. 11, 12, 13). விவாகம் நடத்தப்பட்ட வீடு என்பது, ஆண்டவர் தம்முடைய தெய்வீக உண்மையினால் அவைகளுடன் சேருதலின் நிமித்தம் சுவர்க்கத்தையும் திருச்சபையையும் அருத்தம் கொள்ளுகிறது; ஆகையினால், வேதத்தில் ஆண்டவர் மணவாளன் என்றும் கணவனென்றும், திருச்சபையோடு சுவர்க்கம் என்பவைகள் மணமகளென்றும், மனைவி என்றும் சொல்லப்படுகிறது.

181. தேவர்களுடைய ஆடைகள், ஆடைகளாக மாத்திரம் தோன்றாமல், அவைகள் உண்மையான ஆடைகளாக இருக்கின்றன என்பது, தேவர்கள் அவைகளைப் பார்க்கிறார்களென்பதிலிருந்தும், அவைகளை உணருகிறார்களென்பதிலிருந்தும், அவர்களுக்கு அநேக ஆடைகள் இருக்கிறதென்பதிலிருந்தும், அவர்கள் அவைகளைத் தரித்துக்கொண்டும் தரிக்காமலும் இருக்கிறார்களென்பதிலிருந்தும், உபயோகத்தில் இல்லாதவைகளை அவர்கள் காப்பாற்றி, வேண்டியபோது அவைகளை மறுபடியும் தரித்துக்கொள்ளுகிறார்களென்பதிலிருந்தும் விசதமாகிறது. நான் ஆயிரம் சமயங்களில் பலவித ஆடைகளால் அவர்கள் உடுத்தப்படுகிறார்க

ளென்பதை பார்த்திருக்கிறேன். அந்த ஆடைகளை எங்கிருந்து சம்பாதித்தார்களென்று நான் கேட்டேன்; அது ஆண்டவரிடமிருந்து வந்ததாகவும், அவர்கள் அவைகளை கொடைகளாக ஏற்றுக்கொள்வதாகவும், எப்படி என்று தெரியாமலே சில வேளைகளில் தாங்கள் உடுத்தப்படுகிறதாகவும், சொன்னார்கள். தங்களுடைய ஆடைகள் மாற்றப்படுகிறதென்றும், தங்களுடைய முதல் நிலைமையிலும் இரண்டாவது நிலைமையிலும், அவைகள் ஒளி வீசி, துலக்கமாய் வெண்மையாயிருக்கிறதென்றும், மூன்றாவது நான்காவது நிலைமைகளில் கொஞ்சம் மங்கலாயிருக்கிறதென்றும், விவேகம் ஞானம் விஷயங்களில் அவர்களுக்கு நிலைமையின் மாறுதல்களிருக்கிறபடியினால், இதுகூட அன்னுவயத்திலிருந்து வருகிறதென்றும் அவர்கள் சொன்னார்கள். (இதைப்பற்றி நெ. 154 முதல் 161 வரையில் பார்க்கவும்).

**182** சூக்கும லோகத்தில் இருக்கும் ஒவ்வொருவனுக்கும் விவேகத்திற்கு தக்கபடி, இவ்விதமாக, விவேகம் உண்டாகிற உண்மைகளுக்கு தக்கபடி ஆடைகள் இருக்கிறபடியினால், நரகங்களிலிருக்கப்பட்டவர்கள், உண்மைகளை உடைத்தாயிராதபடியினால், உண்மையாகவே ஆடைகளாலும், ஆனால், ஒவ்வொருவனும் தன்னுடைய பைத்தியத்திற்கு தக்கபடி கந்தையானதும், பூஞ்சணம் பிடித்ததும், அழுக்கானதுமாகியவைகளால் உடுத்தப்பட்டிருப்பதாக தோன்றுகிறார்களென்பது தொடருகிறது; மற்ற எதையும் அவர்கள் தரிக்க முடியாது. அவர்கள் நிர்வாணமாக பார்க்கப்படாதபடி உடுத்துக்கொள்ளப்பட, ஆண்டவர் அவர்களை விடுகிறார்.

# XXI

## தேவர்களின் இருப்பிடங்களும் வீடுகளும்

**183.** சுவர்க்கத்தில் கூட்டங்களிருக்கிறபடியினாலும், தேவர்கள் மனிதர்களைப்போல் வசிக்கிறபடியினாலும், அவர்களுக்கு இருப்பிடங்களும்கூட இருக்கின்றன; இவைகள் ஒவ்வொருவனுடைய உயிரின் நிலைமைக்குத்தக்கபடி வித்தியாசப்படுகின்றன. உயர்ந்த பதவியிலிருப்பவர்களுக்கு, அவைகள் மகத்துவமானதாயிருக்கின்றன; தாழ்ந்த நிலைமையிலிருப்பவர்களுக்கு, குறைவாய் சிறப்புற்றிருக்கின்றன. நான் சில வேளைகளில் தேவர்களுடன் சுவர்க்கத்தின் இருப்பிடங்களைப்பற்றி பேசி, சிலர் தாங்கள் அவைகளைப் பார்க்காதபடியினாலும், சிலருக்கு தேவர்கள் மனிதர்களென்று தெரியாதபடியினாலும், மற்றவர்கள் தேவர்களின் சுவர்க்கம், தங்கள் கண்களால் பார்க்கிற தங்களைச் சுற்றியிருக்கும் சுவர்க்கமென்று நம்புகிறபடியினாலும், அது ஒருவருமில்லாமல் வெறுமையாயிருக்கிறதாக தோன்றுகிறபடியினாலும், தேவர்கள் பரமாணுவுக்கடுத்த உருவங்களென்று நினைக்கிறபடியினாலும் அவர்கள் சூக்குமியில் இருக்கிறதாக தீர்மானிக்கிறதின் பொருட்டும், இக்காலத்தில் எவனும் அவர்களுக்கு இருப்பிடங்களும் வீடுகளுமிருக்கிறதாக நம்புகிறதில்லை என்றும் சொன்னேன். இதுவுமன்றி சூக்குமமானதைப்பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாதபடியினால், ஸ்தூல உலகத்திலிருப்பதுபோல் சூக்கும உலகத்திலும் அவ்விதப் பொருள்களிருக்கின்றனவென்றும் அவர்கள் நினைக்கிறதில்லை. தற்காலத்தில் அவ்வித அறியாமை உலகத்தில் பிரபலமாயிருக்கிறதென்று தெரியுமென்றும், அது முக்கியமாய் திருச்சபைக்குள்ளும், அறிவில்லாதவர்கள் என்று சொல்லப்படுகிறவர்களைவிட புத்திசாலிகளிடத்தில் அதிகமாய் இருக்கிறதென்றும், ஆச்சரியப்படுவதாகவும் தேவர்கள் பதில் சொன்னார்கள். பார்க்கப்பட்டவர்கள், மனிதர்களாக பார்க்கப்பட்டபடியினாலும், தன்னுடைய மானிடத்தன்மையை தன்னுடன் எடுத்துக்கொண்ட ஆண்டவர், அம்மாதிரி தோன்றியபடியினாலும், வேதத்திலிருந்துகூட தெரிந்து கொள்ளப்படலாமென்று கூட அவர்கள் சொன்னார்கள். அவர்கள் மனிதர்களாயிருக்கிறபடியினால், அவர்களுக்கு இருப்பிடங்களும், வீடுகளும் உண்டென்

றும், தேவர்கள் பைத்தியம் என்று சொல்லுகிற அவர்களுடைய அறியாமையினால் சிலர் நினைக்கிறபடி, அவர்கள் காற்றில் பறக்கிறதில்லை என்றும், அவர்களை ஆவிகள் என்று சொல்லப்பட்டாலும், காற்றுகள் அல்லவென்றும் தெரிந்திருக்கப்படலாம்.

முன்னமே கொண்ட அபிப்பிராயங்கள்படி யல்லாமல், தேவர்களைப்பற்றியும் சூக்கும சரீர ஆவிகளைப்பற்றியும் நினைத்தால்மாத்திரம் இதை மனிதர்கள் கிரகிக்கலாமென்றும், அது அப்படி யிருக்கிறதா என்கிற கேள்வி விசாரணையின்நேரான விஷயமாகக்கொள்ளாவிட்டால், அவர்கள் அப்படி செய்கிறார்களென்றுங்கூட அவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், தேவர்கள் மானிட உருவத்திலிருக்கிறார்களென்றும், சுவர்க்கத்தின் மாளிகைகளென்று அவர்கள் சொல்லுகிற இருப்பிடங்கள் அவர்களுக்கிருக்கிறதென்றும், பூமியிலிருக்கும் வாச ஸ்தலங்களைவிட அவைகள் மிகவும் மகத்துவமானதென்றும், ஒவ்வொருவனுக்கும் ஒரு சாதாரண அபிப்பிராயமிருக்கிறது. ஆனால், சுவர்க்கத்திலிருந்து வருகிற இந்தப் பொது அபிப்பிராயம், அது அப்படியிருக்கிறதா என்கிற கேள்வி சிந்தனையின் மத்தியிலுள்ள விஷயமாககொள்ளும் பட்சத்தில் உடனே ஒழிக்கப்படுகிறதென்று அவர்கள் சொன்னார்கள். தங்களுக்கெதிராய் சுவர்க்கத்தையும், அதன் வெளிச்சத்தின் பிரவேசத்தையும், தங்கள் சொந்த விவேகத்தினால் தாங்களே மூடிக்கொண்டவர்களாகிய கற்றவர்கள் விஷயத்தில் இதுமுக்கியமாய்நேரிடுகிறது.

இறந்தபிறகு மனிதனுடைய வாழ்க்கையைப் பற்றிகொள்ளும் நம்பிக்கைப்பற்றியும்,விஷயம்அம்மாதிரியே.அதைப்பற்றிபேசி, அதே காலத்தில், ஆன்மாவைக் குறித்த கலைஞானத்திலிருந்து, அல்லது சரீரத்துடன் அது திரும்ப ஐக்கியப்படுகிற தென்பதைக்குறித்த கொள்கையிலிருந்து நினைக்காதவன், இறந்தபிறகு அவன் ஒரு மனிதனாகவும், தான் நன்றாக வாழ்ந்திருந்தால் தேவர்கள் மத்தியிலும், வாழப் போகிறதாகவும், அப்பொழுது அவன் மகத்துவமான பொருள்களைப் பார்க்கப் போகிறதாகவும், சந்தோஷங்களை காணப் போகிறதாகவும் நம்புகிறான்; ஆனால், சரீரத்துடன் திரும்பஐக்கியப் படுதல் என்கிற கொள்கையைக்குறித்தாவது, அல்லது ஆன்மாவைக் குறித்த சாதாரண கற்பனையைக்குறித்தாவது, அவனுடைய சிந்தனைகளை திருப்பி, ஆன்மாவானது அவ்வித சுபாவமுள்ளதா அதாவது அது அப்படியிருக்கிறதா என்கிற எண்ணம் தோன்றிய உடனே, அவன் முன் கொண்ட அபிப்பிராயம் நீக்கப்படுகிறது.

**184**. ஆனால், அனுபவசாட்சியத்தை எடுத்துக்காட்டுவது அதிக நல்லது. நான் தேவர்களுடன் முகமுகமாய்நின்று பேசிய போதெல்லாம், அவர்களுடைய உறைவிடங்களில் அவர்களோடு இருந்திருக்கிறேன்; அவர்களுடைய உறைவிடங்கள், வீடுகள் என்று சொல்லப்பட்ட பூமியின் பேரில் குடியிருக்கும் இடங்களைப்போல இருக்கின்றன; ஆனால் அவைகள் அதிக அழகுள்ளவைகளாயிருக்கின்றன. அவைகளில், அறைகளும், அந்தப்புரங்களும், படுக்கை அறைகளும், அநேகம் இருக்கின்றன. அதுவுமன்றி, கொலுமண்டபங்களும், அவைகளைச் சுற்றி தோட்டங்களும், செடித்தோட்டங்களும், வயல்களும் இருக்கின்றன. கூட்டங்களாக அவர்கள் வசிக்கும் இடங்களில், அவர்கள் வாசஸ்தலங்கள், ஒன்றுக்கொன்று அடுத்தும், நம்முடைய பூமியின் பேரிலிருக்கும் நகரங்களைப்போல திட்டமாய், தெருக்களுடனும், பாதைகளுடனும், சதுரங்களுடனும், ஒரு நகரத்தின் உருவத்தில் ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகள் மூலமாய் நடந்துபோகவும், ஒவ்வொரு பக்கமும் பார்க்கவும், அப்போதைக்கப்போது வீடுகளில் பிரவேசிக்கவும் நான் விடப்பட்டேன். நான் முழுமையும் விழித்திருக்கும் நிலைமையிலும், என்னுடைய அந்தரங்க பார்வை திறக்கப்பட்டபோதும், இது சேர்ந்தது.

**185**. சுவர்க்கத்தில் சொல்லமுடியாத மகத்துவமான அரண்மனைகளை நான் பார்த்திருக்கிறேன். அவைகளின் மேல்பாகங்கள், சுத்தமான பொன்னைப்போலவும், கீழ் பாகங்கள் விலை உயர்ந்த கற்களைப் போலவும், அதிக பிரகாசமுள்ளவைகளாயிருந்தன; சிலது மற்றவைகளைவிட அதிக சிறப்பாயிருந்தன. வீட்டின் அறைகளின் உட்பாகங்கள் இவ்வித அலங்கரிப்புகளால்கூட ஜோடிக்கப்பட்டிருந்தன. வார்த்தைகளும் அறிவும் அவைகளை விவரிக்க முடியாது. தெற்கு பார்க்கும் பக்கத்தில், எல்லா பொருள்களும் அதே மாதிரியாய் ஜோதியுள்ளதாயிருந்த ஆனந்த ஸ்தலங்கள் இருந்தன. சில இடங்களில் மரங்களின் இலைகள் வெள்ளியைப்போலவும், பழங்கள் பொன்னைப்போலவும் இருந்தன; தங்கள் பாத்திகளில் புஷ்பங்களின் நிறங்கள் வானவிற்களைப்போல உருவாகின. பார்வை முடிந்த எல்லைகளுக்கப்பால், இதர ஆனந்த ஸ்தலங்கள் பார்க்கப்பட்டன. சித்திர வித்தை, அங்கே அதன் சித்திர வித்தையிலிருப்பதாக ஒருவன் சொல்லும்படியாக சுவர்க்கத்தின் சித்திர வேலையிலிருந்தது; சித்திர வேலை என்பதே சுவர்க்கத்திலிருந்து

வந்தபடியினால், இது ஆச்சரிய படவேண்டியதா இல்லை. அவ்வித பொருள்களும் இன்னும் அதிக சம்பூரணமான கணக்கற்ற மற்றவைகளும், ஆண்டவரால் தங்கள் கண்கள் முன்பாக வைக்கப்படுகின்றனவென்று தேவர்கள் சொன்னார்கள்; அப்படியிருந்தாலும், அவைகள் ஒவ்வொன்றிலும், அன்னுவயங்களையும் அன்னுவயங்கள் மூலமாய் தெய்வீகப்பொருள்களையும், அவர்கள் பார்க்கிறபடியினால், இவைகள் அவர்கள் கண்களைவிட மனங்களுக்கு அதிக இன்பமாயிருக்கின்றன.

**186**. அன்னுவயங்களைப்பற்றி, அரண்மனைகளும் வீடுகளும் மட்டுமல்லாமல், அவைகளுக்குள்ளேயும் வெளியேயுமிருக்கும் எல்லாபொருள்களும், ஒவ்வொரு பொருளும்கூட ஆண்டவரிடமிருந்து தேவர்களிடத்தில் இருக்கும் உள்ளான பொருள்களுடன் அன்னுவயப்படுகின்றனவென்றும், வீடே பொதுவாக அவர்களின் நன்மையுடனும், அதற்குள்ளிருக்கும் பல பொருள்கள் அவர்கள் நன்மைகள் அமைந்திருக்கிற பல நுண்ணியவைகளுடனும் அன்னுவயப்படுகிறதென்றும், வீட்டிற்கு வெளியே இருப்பவைகள், நன்மையிலிருந்து வந்த உண்மைகளுடனும், அதனுடன் அவர்கள் உணர்ச்சிகளுடனும் அறிவுகளுடனும், அன்னுவயப்படுகின்றனவென்றும், அன்பு நன்மைக்கும், ஞானம் நன்மைக்கும் உண்மைக்கும், விவேகம் நன்மையிலிருந்துவந்த உண்மைக்கும் சேர்ந்தபடியினால், ஆண்டவரிடமிருந்து அவர்கள் அடைகிற நன்மைகளுடனும் உண்மைகளுடனும், இவைகள் அன்னுவயப்படுகிறதின் நிமித்தம், அவைகள் அவர்களுடைய அன்புடனும் அன்பிலிருந்துவந்த அவர்களுடைய ஞானத்துடனும் விவேகத்துடனும் அன்னுவயப்படுகின்றனவென்றும் எனக்கு தெரிவிக்கப்பட்டது. அந்தப் பொருள்களைப் பார்க்கும்போது தேவர்களால் காணப்படுவது இவ்விதமான பொருள்களாயிருக்கின்றன; இந்த காரணத்துக்காக இவைகள் அவர்கள் கண்களைவிட மனங்களை உவப்பித்து அசைக்கின்றன.

**187**. ஆண்டவர், தாமே எருசலேம் நகரத்திலிருக்கும் ஆலயம் என்று ஏன் சொல்லிக்கொண்டார் என்பதும் (யோவா. ii. 19, 21), புதிய எருசலேம் நகரமானது, சுத்தபொன்னினாலும், அதன் வாசல்கள் முத்துகளாலும், அதன் அஸ்திவாரங்கள் விலை உயர்ந்த இரத்தினக்கல்லுகளாலும் செய்யப்பட்டிருப்பதாக ஏன் தோன்றியது என்பதும் (வெளி. xxi), இதனால், அதாவது ஆலய

மானது ஆண்டவருடைய தெய்வீக மானிடத்தன்மையை சாயல் காட்டியது என்பதினலும், புதிய எருசலேம் நகரம் இனிமேல் ஏற்படுத்தப்படும் திருச்சபையை அருத்தம் கொள்ளுகிறது என்பதினலும், தெளிவாக்கப்படுகிறது. அதன் பன்னிரண்டு வாசல்கள், நன்மைக்கு வழிகாட்டுகிற உண்மைகளையும் அதன் அஸ்திவாரங்கள், அது ஏற்படுத்தப்பட்டிருக்கும் உண்மைகளையும் குறிக்கின்றன.

**188**. ஆண்டவருடைய பரம இராச்சியம் உண்டாக்கப்பட்டிருக்கிற தேவர்கள், பூமியிலிருந்து எழுகிற மலைகளைப்போல் தோன்றுகிற உன்னதமான இடங்களில் அநேகமாய் வசிக்கிறார்கள். ஆண்டவருடைய ஆன்மார்த்த உலகம் உண்டாக்கப்பட்டிருக்கிற தேவர்கள், குன்றுகளைப்போல் தோன்றுகிற குறைவாய் உயர்த்தப்பட்ட இடங்களிலும் வசிக்கிறார்கள்; ஆனல், சுவர்க்கத்தின் மிகவும் தாழ்ந்த பாகங்களில் இருக்கும் தேவர்கள் கற்பாறைகள்போல் தோன்றுகிற இடங்களில் வசிக்கிறார்கள். உள்ளான பொருள்கள் உயர்ந்ததற்கும், புறம்பானவைகள் தாழ்ந்ததற்கும் அனுவயப்படுகிறபடியினல், இவைகள் எல்லாம்கூட அனுவயத்திலிருந்துகூட உண்டாகின்றன. இதனல்தான் வேதத்தில் மலைகள் என்பது பாரத்துக்கடுத்த அன்பையும், குன்றுகள், ஆன்மார்த்த அன்பையும், பாறைகள், விசுவாசத்தையும் அருததம் கொள்ளுகின்றன.

**189**. கூட்டங் கூட்டங்களாக அல்லாமல், வீடு வீடாய் தனித்தனியாய் வசிக்கும் தேவர்கள்கூட இருக்கிறார்கள். இவர்கள் தேவர்களில் மிகவும் சிறந்தவர்களானபடியினல் சுவர்க்கதின் மத்தியிலிருக்கிறார்கள்.

**190**. தேவர்கள் வசிக்கும் வீடுகள், உலகத்திலிருக்கும் வீடுகளைப்போல் கட்டப்படுகிறதில்லை; ஆனல், உண்மையையும் நன்மையையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளுகிறதற்கு தக்கபடி அவைகள் ஆண்டவரால் அவர்களுக்கு கைம்மாறின்றி கொடுக்கப்படுகின்றன. மேலே (செ. 154 முதல் 160 வரையில்) சொல்லப்பட்ட, அவர்களுடைய உள்ளானவைகளின் நிலைமைகளுடைய மாறுதல்களுக்கு தக்கபடி, அவைகள் கொஞ்சம் வேறுபடுகின்றன. தேவர்கள் வைத்திருக்கும் எந்த பொருளையும் ஆண்டவரிடமிருந்து வந்த கொடைகளாக வைத்திருக்கிறார்கள்; அவர்களுக்கு வேண்டியது ஏதாயினும் அவர்களுக்கு கொடுக்கப்படுகிறது.

# XXII

## சுவர்க்கத்தில் இடம்.

**191**. சுவர்க்கத்தில் எல்லா பொருள்களும் இடத்திலும் வெளியிலும் உலகத்தில்போல் சரியாய் தோன்றுகின்றன; அப்படியிருந்தாலும், தேவர்களுக்கு இடத்தைப் பற்றியும் வெளியைப் பற்றியும் எந்த எண்ணமும் அபிப்பிராயமும் கிடையாது. இது அசத்தியா பாசமாக தோன்ற வேண்டியிருக்கிறது; விஷயம் மிகவும் உபயோகமானதா யிருப்பதினால், இந்த விஷயத்தை தெளிவான வெளிச்சத்தில் காண்பிக்க நான் விரும்புகிறேன்.

**192**. இடம் மாறுதல், நிலைமை மாறுதல் என்பதைவிட வேறல்ல எனும்படியாக, சூக்கும லோகத்தில் இடம் மாறுதல்கள் எல்லாம், உள்ளானவைகளின் நிலைமையினுடைய மாறுதல்களால் உண்டாக்கப்படுகின்றன. இம்மாதிரியாககூட நான் சுவர்க்கங்களுக்கும், பிரபஞ்சத்திலுள்ள பூமிகளுக்கும், ஆண்டவரால் கொண்டு போகப்பட்டேன். என்னுடைய உடம்பு ஓரே இடத்தில் இருந்த போது, இது என் ஆன்மா விஷயத்தில் செய்யப்பட்டது. எல்லா தேவர்களும் இம்மாதிரியாக அசைகிறார்கள்; அதனால் அவர்களுக்கு தூரமென்பது இல்லை; அவர்களுக்கு தூரமில்லாதபடியினால், அவர்களுக்கு வெளிகளும் இல்லை, ஆனால் அவைகளுக்கு பதிலாக நிலைமைகளும், அவைகளின் மாறுதல்களும் உண்டு.

**193**. இந்த விதமாக ஸ்தல மாறுதல்கள் உண்டாக்கப்படுகிறபடியினால், கிட்டுமானங்கள் உள்ளானவைகளின் நிலைமையின் சாயல்களென்பதும், நீக்கங்கள் மாறுபாடுகளென்பதும் விசதமாகிறது. ஆகவேதான், ஓரேவித நிலைமைகளிலிருக்கிறவர்கள், ஒருவருக்கொருவர் சமீபமாகவும், வித்தியாசமான நிலைமைகளிலிருக்கிறவர்கள், தூரமாகவும் இருக்கிறார்கள்; மேலும் சுவர்க்கத்தில் வெளிகள் உள்ளான நிலைமைகளுடன் அனுவயப்படுகிற புறம்பான நிலைமைகளாக மாத்திரம் இருக்கின்றன. இந்த காரணத்தினால் மாத்திரம் சுவர்க்கங்களும், அதனுடன் ஒவ்வொரு சுவர்க்கத்தின் கூட்டங்களும், ஒவ்வொரு கூட்டத்திலுமுள்ள, ஒவ்வொருவனும் வேறுவேறு யிருக்கின்றன; இன்னமும், நரகங்கள் எதிரிடையான நிலைமையிருப்பதினால், அவைகள் முழுமையும் சுவர்க்கங்களிலிருந்து பிரிக்கப்பட்டிருக்கின்றன.

**194.** அதே காரணத்துக்காககூட, சூக்கும உலகத்தில், ஒருவன் மற்றவன் பிரசன்னத்தை மிகுதியாய் கோரும் பட்சத்தில் மட்டும், மற்றவன் பிரசன்னமாகிறான். ஏனென்றால், அவன் இவ் விதமாக, சிந்தனையில் மற்றவனைப் பார்த்து, அவனுடைய நிலைமை யில் நிற்கிறான்; எதிராய், ஒருவன் மற்றவன் விஷயத்தில் பிரீதியற்ற வனாயிருக்கிற அளவு மற்றவனிடமிருந்து நீக்கப்படுகிறான். எல்லா வெறுப்பும், ஆசைகளின் விரோதத்திலிருந்தும், சிந்தனைகளின் பிணக்குகளிலிருந்தும், உண்டாகிறபடியினால், அந்த உலகத்தில், ஒத்துப்போகிற வரையில் ஒரு இடத்திலிருக்கும் அநேகர் ஒரு வரை ஒருவர் பார்க்கவும், ஆனால் அவர்கள் ஒருவருக்கொருவர் ஒவ்வாமல் போனஉடனே, மறைந்துபோகவும் சம்பவிக்கிறது.

**195.** தன் சொந்த நகரத்திலாவது, நியாயஸ்தலங்களிலாவது தோட்டங்களிலாவது, தன் சொந்த கூட்டத்திலிருந்து மற்றவை களுக்காவது, எவனாவது ஒருவன் ஒரு இடத்திலிருந்து மற்றதற்கு போகும்போதுகூட, அவன் அதை ஆவலாய் விரும்பும்போது அதிக சீக்கிரமாகவும், அப்படிவிரும்பாவிட்டால் பிந்தியும் வரு கிறான்; அதேவழியாய் இருந்தபோதிலும், விருப்பத்திற்குதக்கபடி, அந்தவழியே நீட்டப்படுகிறது அல்லது குறைக்கப்படுகிறது. நான் இதை அடிக்கடி பார்த்து, ஆச்சரியப்பட்டிருக்கிறேன். அதனால்தான் தூரங்களும், அப்படியிருப்பதினால் வெளிகளும், தங்களுடைய உள் ளானவைகளின் நிலைமைகளுக்குத்தக்கபடி, தேவர்கள் விஷயத்தில் முழுமையும் இருக்கிறதாகவும், இது இப்படியிருப்பதினால் உலகத் தில்போல், அவர்களுக்கு சம்பந்தப்பட்டு வெளிகள் சமமாய் இருந்தபோதிலும், வெளியைப்பற்றி எந்த எண்ணமும் அபிப்பிரா யமும் அவர்களுடைய சிந்தனையில் பிரவேசிக்க முடியாதென்றும் விசதமாகிறது.

**196.** வெளி விஷயத்தில் ஒன்றையும் பொதுவாக உடைத் தாயிராத மனிதனுடைய சிந்தனையினால் இது திருஷ்டாந்தப்படுத் தப்படலாம்; ஏனென்றால், சிந்தனையில் அதி சிந்தையாய் ஒரு மனி தன் பார்க்கிறது, அவனுக்கு பிரசன்னமாகிறது போலாய்விடுகிறது. சிந்திக்கிறவனுக்கு, அதே காலத்தில் தான் பார்க்கிற பூமியின் பேரி லிருக்கும் மத்தியில் உள்ள பொருள்களிலிருந்து தவிர அல்லது அவைகளின் தூரத்தைக்குறித்த முந்திய அறிவிலிருந்து, தன் னுடைய நோக்கமானது வெளிகளைப்பற்றி கவனிக்கிறதில்லை என்று கூட தெரியும். தொடர்ச்சியிருப்பதினால் இது நேரிடுகிறது;

தொடர்ச்சியாயிருப்பதில், தொடாச்சியாயில்லாததிலிருந்து தவிர, எதுவும் தூரமாக தோன்றுகிறதில்லை. தேவர்களுடைய பார்வை அவர்களுடைய சிந்தனையுடனும், அவர்களுடைய சிந்தனை ஆசையுடனும் ஒன்றாக செயல்படுகிறபடியினாலும், பொருள்கள் சமீபமாகவும் தூரமாகவும் தோன்றி மேலே சொல்லியபடி அவர்களுடைய உள்ளானவைகளின் நிலைமைகளுக்கு தக்கபடிகூட வேறுபடுகிறபடியினாலும், இது தேவர்கள் சம்பந்தப்பட்டவரையில் முக்கியமாய் உண்மையாயிருக்கிறது.

**197**. வேதத்தில், இடங்களும் வெளிகளும், இடத்துக்கு எந்த விதத்திலாவது சம்பந்தப்பட்ட எல்லா பொருள்களும், தூரங்கள், சமீபம், தொலை, வழிகள், பிரயாணங்கள், தங்குகைகள், மைல்கள், பர்லாங்குகள், மைதானங்கள், வயல்கள், தோட்டங்கள். நகரங்கள், தெருக்கள், அசைவுகள், பலவித பரிமாணங்கள், நீளம், அகலம், உயரம், ஆழம், இன்னும் இதர பொருள்கள்போன்ற நிலைமைகளுக்கு சம்பந்தப்பட்ட அவ்வித பொருள்களை அருத்தம் கொள்ளுகின்றன என்பது இதிலிருந்து தொடருகிறது; ஏனென்றால், உலகத்திலிருந்துவரும் மனிதனுடைய சிந்தனையிலிருக்கும் அநேக பொருள்கள் வெளியிலிருந்தும் காலத்திலிருந்தும் சிலவற்றை எடுத்துக்கொள்ளுகின்றன.

நீளம், அகலம், உயரம், என்பதினால் வேதத்தில் என்ன கருதப்படுகின்றதென்பதை மாத்திரம் நான் இங்கே சொல்லுகின்றேன். இந்த உலகத்தில், வெளிவிஷயத்தில் நீளமாகவும் அகலமாகவும் இருக்கிறது, நீளமானதென்றும் அகலமானதென்றும் சொல்லப்படுகிறது; உயரம் விஷயத்தில் அதே உண்மையாயிருக்கிறது. ஆனால், வெளி என்கிற எண்ணமே கிடையாத சுவர்க்கத்தில், நீளம் என்பது, நன்மையின் ஒரு நிலைமையும், அகலம் என்பது உண்மையின் ஒரு நிலைமையும், உயரம் என்பது பிரமாணங்கள்படி அவைகளின் வித்தியாசத்தையும் அருத்தம் கொள்ளுகிறது (நெ. 38 ல்). சுவர்க்கத்தில் நீளம் என்பது கிழக்கிலிருந்து மேற்குவரையில் இருப்பதினாலும், அன்பினுடைய நன்மையிலிருக்கிறவர்கள், அங்கேயிருக்கிறபடியினாலும், சுவர்க்கத்தில் அகலம் தெற்கிலிருந்து வடக்குவரையிலிருக்கிறதினாலும், நன்மையிலிருந்து வந்த உண்மையிலிருக்கிறவர்கள் அங்கே இருக்கிறபடியினாலும் (மேலே நெ. 148 பார்க்கவும்), சுவர்க்கத்தில் உயரம், பிரமாணங்கள்படி நன்மை

உண்மை இரண்டையும் காண்பிக்கிறபடியினாலும், இந்த மூன்று அளவுகளால் அவ்விதமான பொருள்கள் கருதப்படுகின்றன. அதனால்தான், இவ்விதமான பொருள்கள் வேதத்தில், புதிய ஆலயமும், புதிய பூமியும், நியாயஸ்தலங்களும், அறைகளும், கதவுகளும், வாசல்களும், ஜன்னல்களும், சுற்றிலுமுள்ளவைகளும், நீளம், அகலம், உயரம் என்கிற அளவுகளால் விவரிக்கப்பட்டிருக்கிற எசேக்கியேலில் (xl முதல் xlviii) போல், நீளம், அகலம், உயரம் என்பதினால் கருதப்படுகின்றன. இவைகள் எல்லாம், ஒரு புதிய திருச்சபையையும், அதிலுள்ள நன்மைகளையும் உண்மைகளையும் கருதுகின்றன; ஏனென்றால், அப்படியில்லாவிட்டால், அந்த அறைகள் எல்லாம் என்ன வேலைக்காக இருக்கும்? புதிய எருசலேம் நகரமானது வெளிப்படுத்தின விசேஷத்தில் பின்வரும் வார்த்தைகளால், அதேமாதிரி விவரிக்கப்பட்டிருக்கின்றன: "அந்த நகரம் சதுரமாயிருந்தது; அதின் அகலமும் நீளமும் சமமாயிருந்தது. அவன் அந்த கோலினால் நகரத்தை அளந்தான்; அது பன்னீராயிரம் ஸ்தாதி அளவாயிருந்தது; அதின் நீளமும், அகலமும், உயரமும், சமமாயிருந்தது" (xxi. 16). புதிய எருசலேம் என்பதினால், ஒரு புதிய சபை என்று அருத்தம் கொள்ளப்படுகிறது; ஆகையினால் இந்த அளவுகள் என்பதினால் திருச்சபையின் பொருள்கள் கருதப்படுகின்றன. நீளம் என்பதினால், அதன் அன்பின் நன்மையும், நீளம் என்பதினால், அந்த நன்மையிலிருந்து வந்த உண்மையையும், உயரம் என்பதினால், பிரமாணங்கள் விஷயத்தில் நன்மையும் உண்மையும், பன்னீராயிரம் ஸ்தாதிகளென்பதினால், முழு நன்மையும் உண்மையும் கருதப்படுகின்றன. நகரத்தின் உயரம் பன்னீராயிரம் ஸ்தாதிகள் இருக்கிறதென்பதினாலும், நீளமும் அகலமும் உயரத்தைப்போலவே ஒரே மாதிரி இருக்கிறதென்பதினாலும், வேறு எந்த அருத்தம் கொள்ளப்படும்? வேதத்தில் அகலம் என்பது உண்மை என்று அருத்தம் கொள்ளுகிறதென்பது தாவீதில் விசதமாகிறது: "கர்த்தாவே! விரோதியின் கைக்குள் நீர் என்னை மூடவில்லை. அகலத்தில் என் பாதங்கள் நிற்க நீர் செய்தீர்" (சங்கீதம் xxxi. 8). மறுபடியும் "நெருக்கத்திலிருந்து கர்த்தரை நோக்கி கூப்பிட்டேன், கர்த்தர் என்னைக் கேட்டருளி விசாலத்திலே வைத்தார்" (சங். cxviii. 5); ஏசாயா (viii. 8) விலும், அபகக் (1-6) விலும் போலும்; இதர வாக்கியங்களிலும், வேறு இடங்களிலும்,

**198.** ஆகவே உலகத்தில்போல், சுவர்க்கத்திலும் வெளிகள் இருந்தாலும், அங்கே எந்த பொருளும் வெளிகளினால் அல்லாமல் நிலைமைகளினால் மதிப்பிடப்படுகிறதென்பதும், அதனால் வெளிகள் உலகத்தில்போல், அங்கே அளவிடப்படாமல் நிலைமையிலிருக்கும் தேவர்களின் உள்ளானவைகளின் நிலைமைகளுக்கு தக்கபடியும், மாத்திரம் பார்க்கப்படுகிறதென்பதும் அறிந்துகொள்ளலாம்.

**199.** ஒவ்வொருவனுடைய அன்பிற்கும் விசுவாசத்திற்கும் தக்கபடி ஒவ்வொருவனுடனும் ஆண்டவர் இருக்கிறாரென்பதும் எல்லா பொருள்களும், அவருடைய சந்நிதிக்கு தக்கபடி சமீபமாவது தூரமாவது தோன்றுகின்றனவென்பதும், இதற்கு முதன்மையானதும் மிகவும் பிரதானமான காரணமாயிருக்கிறது; ஏனென்றால், இதிலிருந்துதான், சுவர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களும் தீர்மானிக்கப்படுகின்றன. மேலும், இதன் மூலமாகத்தான், தேவர்களுக்கு ஞானமிருக்கிறது; ஏனென்றால், இதன் மூலமாகத்தான், அவர்களுக்கு சிந்தனையின் விரிவும், சுவர்க்கங்களிலுள்ள எல்லா பொருள்களின் போக்குவரவும் இருக்கின்றன; சுருங்கச் சொல்லில் இதன் மூலமாகத்தான் மனிதர்களைப்போல் ஸ்தூலமாயல்லாமல், அவர்கள் சூக்குமாய் நினைக்கிறார்கள்.

# XXIII

## அங்கே ஐக்கியக் கூட்டங்களையும் போக்குவரவு சம்பந்தங்களையும் தீர்மானிக்கிற சுவர்க்கத்தின் உருவம்

**200**. சுவர்க்கமானது, அதனுடைய மிகப் பெரியதும் சின்னஞ் சிறியதுமான உருவங்களில் தன்னைப்போன்றே இருக்கிறதென்கிறதும் (நெ. 72), ஆகையினால், ஒவ்வொரு கூட்டமும் குறைந்த உருவில் ஒரு சுவர்க்கமென்கிறதும், ஒவ்வொருதேவனும் சின்னஞ்சிறிய உருவில் சுவர்க்கமென்கிறதும் (நெ. 51 முதல் 58 வரையில்), ஒரு முழுசுவர்க்கமும் ஒரு மனிதனைப்போல் இருக்கிறபடியினால், சுவர்க்கத்திலுள்ள ஒவ்வொரு கூட்டமும் குறைந்த உருவில் ஒரு மனிதனைப்போலவும், சின்னஞ்சிறிய உருவில் ஒரு தேவனைப்போலவும் இருக்கிறதென்பதும் (நெ. 51 முதல் 58 வரையில்), ஞானிகள் மையத்திலும், அவர்களைச்சுற்றி எல்லைகள் வரையில்கூட குறைந்த ஞானமுள்ளவர்களும் இருக்கிறார்களென்கிறதும், ஒவ்வொரு கூட்டத்திலும் இம்மாதிரிதான் என்கிறதும், (நெ. 43), அன்பின் நன்மையிலிருக்கப்பட்டவர்கள் சுவர்க்கத்தில் கிழக்கிலிருந்து மேற்கு வரையிலும், நன்மையிலிருந்து உண்மைகளில் இருக்கிறவர்கள் தெற்கிலிருந்து வடக்கு வரையிலும் வசிக்கிறார்கள் என்கிறதும், ஒவ்வொரு கூட்டத்திலும் அதே ஒழுங்கு இருக்கிறதென்கிறதும் (நெ 148, 149) போன்ற முன் சென்ற அத்தியாயங்களில் காண்பிக்கப்பட்டவைகளிலிருந்து, சுவர்க்கத்தின் உருவம் என்ன என்பது கொஞ்சம் வெளிப்படும். இவைகளெல்லாம் சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி இருக்கின்றன; ஆகையினால், பொதுவாய் அந்த உருவத்தின் சுபாவத்தைப்பற்றி தீர்மானிக்கப்படலாம்.

**201.** அங்கே எல்லா சேர்க்கைகளும் சுவர்க்கத்தின் உருவத்தை அனுசரித்து இருக்கிறது என்பதினால்மட்டுமல்லாமல், அதனுடன் எல்லா அன்னியோன்னியமான சம்பந்தங்களும் அப்படியிருப்பதினாலும், அதனால் சிந்தனைகளினுடையவும் ஆசைகளுடையவும் எல்லா படர்ச்சிகளும், இவ்விதமாக தேவர்களின் எல்லா புத்தியும், ஞானமும், அப்படி இருப்பதினாலும், சுவர்க்கத்தின் உருவம் என்னவென்று தெரிந்துக்கொள்ளுதல் முக்கியமாயிருக்கிறது. அதனால்தான், எவனாவது ஒருவன், சுவர்க்கத்தின் உருவத்

தில் இருக்கிற அளவு, அதாவது, அவன் சுவர்க்கத்தின் உருவமாயிருக்கிற அளவு, அவன் புத்திசாலியாயிருக்கிறான். சுவர்க்கத்தின் உருவத்தில் இருத்தல் அல்லது சுவர்க்கத்தின் ஒழுங்கிலிருத்தல் என்று நீர் எதை பேசினாலும், ஒன்றேயாகிறது; ஏனென்றால், ஒவ்வொன்றின் உருவமும், அதன் ஒழுங்கிலிருந்தும், அதை அனுசரித்தும் இருக்கிறது.

**202.** சுவர்க்கத்தின் உருவத்தில் இருத்தலென்பது, என்னவென்று இங்கே சிலது முதலில் சொல்லப்படவேண்டும். மனிதனானவன் சுவர்க்கத்தின் சாயலிலும் உலகத்தின் சாயலிலும் சிருஷ்டிக்கப்பட்டான்; அவனுடைய உள்ளானவைகள் சுவர்க்கத்தின் சாயலிலும், அவனுடைய புறம்பானவைகள் உலகத்தின் சாயலிலும் சிருட்டிக்கப்பட்டன (மேலே செ. 57 பார்க்கவும்); சாயலில் அல்லது உருவத்திற்கு தக்கபடி என்று நீர் எது சொன்னாலும், ஒன்றேயாகிறது. ஆனால், தன்னுடைய சித்தத்தின் தீமைகளாலும், அதிலிருந்து சிந்தனையின் பொய்களாலும் மனிதனானவன் தனக்குள்ளேயே, சுவர்க்கத்தின் சாயலையும் இவ்விதமாக உருவத்தையும், அழித்துவிட்டு, அதற்கு பதிலாக, நரகத்தின் சாயலையும் உருவத்தையும், ஏற்படுத்தினபடியினால், அவனுடை உள்ளானது அவன் பிறந்தது முதல் மூடப்பட்டிருக்கிறது; எந்த பிராணிகள், விஷயத்திலும் இல்லாதிருக்கிற அறியாமையில் ஏன் மனிதன் பிறந்திருக்கிறான் என்பதற்கு இதுதான் காரணம். ஆகையினால், சுவர்க்கத்தின் சாயல் அல்லது உருவம் மனிதனுக்கு மறுபடியும் கொடுக்கப்பட, ஒழுங்குக்கு சம்பந்தபட்ட விஷயங்களில் அவன் கற்பிக்கப்படவேண்டும்; ஏனென்றால், மேலே சொல்லியபடி உருவமானது ஒழுங்கை அனுசரித்திருக்கிறது. வேதமானது தெய்வீக ஒழுங்கின் எல்லா சட்டங்களையும் கொண்டிருக்கிறது; ஏனென்றால், தெய்வீக ஒழுங்கின் சட்டங்கள் அதனுடைய கட்டளைகளாயிருக்கின்றன. ஆகையினால், மனிதன் அவைகளைத் தெரிந்துகொண்டு, அவைகளுக்கு தக்கபடி வாழ்கிற அளவு அவன் உள்ளானது திறக்கப்பட்டு, அங்கே சுவர்க்கத்தின் ஒழுங்கு அல்லது சாயல் புதிதாய் உருவாக்கப்படுகிறது. ஆகவே, சுவர்க்கத்தின் உருவத்தில் இருத்தல் என்பதினால், வேதத்திலிருக்கிற விஷயங்களுக்கு தக்கபடி வாழ்தல் என்பது, கருதப்படுகிறதென்று விசதமாகிறது.

**203.** எவனாவது ஒருவன் சுவர்க்கத்தின் உருவத்தில் எவ்வளவு இருக்கிறானோ அவ்வளவு அவன் சுவர்க்கத்திலிருக்

கிறான், நிஜமாகவே, சின்னஞ்சிறிய உருவத்தில் அவன் அவ்வளவு சுவர்க்கமாயிருக்கிறான் (கெ. 57); ஆதலால், அதனுல் அவன் அவ்வளவு புத்தியிலும் ஞானத்திலும் மிருக்கிறான்; ஏனென்றால், மேலே கூறியபடி, அவனுடைய புத்தியின் எல்லா எண்ணமும், அவன் சித்தத்தின் எல்லா ஆசையும், அதன் உருவத்திற்கு தக்கபடி எல்லா திக்குகளிலும் சுவர்க்கத்திற்குள் அவைகளே பரவி, அங்கே யிருக்கும் கூட்டங்களுடன் அதிசயம் உண்டாக்கும்படியாய் சேர்ந்திருக்கின்றன; அவைகளும் திரும்பி அவனுடன் அப்படியே செய்கின்றன. சிந்தனைகளும் ஆசைகளும் தங்களைச் சுற்றி நிஜமாக பரவுகின்றனவென்று நம்பாமல், அவைகள் தங்களுக்குள்ளேயே யிருக்கின்றனவென்று நம்புகிற சிலர் இருக்கிறார்கள். ஏனென்றால், அவர்கள் நினைப்பதெல்லாம் தூரமாக அல்லாமல் தங்களுக்குள்ளேயே பார்க்கிறார்கள்; ஆனால், அவ்விதமானவர்கள் அதிகம் ஏமாற்றப்பட்டவர்களா யிருக்கிறார்கள். ஏனென்றால், கண்ணின் பார்வை, தூரத்திலிருக்கும் பொருள்கள்பேரில் தானே பாய்ந்து, அந்த விரிவில் அது பார்க்கிற பொருள்களின் ஒழுங்குக்கு தக்கபடி இயக்கப்படுகிறதுபோல், அதேமாதிரி, புத்தியினுடைய பார்வையா யிருக்கிற அந்தரங்கமான பார்வை, மேலே (கெ. 126) சொல்லப்பட்ட காரணத்திற்காக, மனிதனுக்கு அதைப்பற்றி தெரியாவிட்டாலும், சூக்கும லோகத்தில் தானே பரவுகின்றது. கண்ணின் பார்வை ஸ்தூல உலகத்திலிருக்கும் பொருள்களால் இயக்கப்படுகிறபடியினால், அது ஸ்தூலமாய் இயக்கப்படுகிறதென்பதும், அப்படியிருக்க, புத்தியின் பார்வை, நன்மைக்கும் விசுவாசத்திற்கும் சம்பந்தப்பட்ட சூக்கும உலகத்திலிருக்கும் பொருள்களால் இயக்கப்படுகிறபடியினால், அது சூக்குமமாய் இயக்கப்படுகிறதென்பதும், மாத்திரம் வித்தியாசம். புத்தியை தெளிவிக்கிற வெளிச்சமில்லாமல், மனிதனுக்கு நினைக்கவே முடியாதிருந்தும், புத்தியை தெளிவிக்கிற எந்த வெளிச்சமும் இருக்கிறதென்று அவனுக்கு தெரியாதபடியினால், விஷயம் இப்படி யிருக்கிறதென்று அவனுக்கு தெரியாது. அந்த வெளிச்சத்தைப்பற்றி, மேலே (கெ. 126 முதல் 132 வரையில்) பார்க்கவும். தன்னிடமே இருந்தும் இவ்விதமாக, தனக்கு வெளியே எந்த விரிவும் இல்லாமல், அல்லது, அதனால் தனக்கு வெளியே இருக்கும் கூட்டங்களுடன் சம்பந்தமில்லாமல், தானே நினைத்ததாக நம்பின ஒரு அரூபி இருந்தது. இது உண்மையல்லவென்று அதற்கு தெரியும்பொருட்டு,

அதிக சமீபத்திலுள்ள கூட்டங்களுடன் எல்லா சம்பந்தங்களும் நீக்கப்பட்டன. அதனால், அதனிடமிருந்து சிந்தனை நீக்கப்பட்டது மட்டுமல்லாமல், புதிதாய் பிறந்த குழந்தையைப்போல் அது தன்னுடைய புயங்களை போட்டது என்பது தவிர, உயிர் இல்லாதது போல கீழே விழுந்தது. கொஞ்ச காலம் பொருத்து, சம்பந்தம் அதற்கு திரும்ப கொடுக்கப்பட்டது; அது படிப்படியாய், அப்படி திரும்ப கொடுக்கப்பட்டபோது, தன்னுடைய சொந்த சிந்தனையின் நிலைமைக்குள் திரும்பி வந்தது. ஒரு மனிதனுடைய உயிரின் ஒவ்வொரு பொருளும் நினைக்கும் சக்தியிலும், ஆசையினால் இயக்கப்படுதலிலும், அதே அருத்தம் கொள்ளுகிறபடி, அவன் அறிந்து கொள்ளவும் இச்சிக்கவும் கூடிய சக்தியிலும் அமைந்திருக்கிறபடியினால், மற்ற அரூபிகள் இதைப் பார்த்தபோது, எல்லா சிந்தனையும் ஆசையும், அதனால், உயிரின் ஒவ்வொரு பொருளும் போக்கு வரவுக்கு தக்கபடியாயிருக்கின்றனவென்று, அவைகள் ஒத்துக் கொண்டன.

**204**. ஆயினும், புத்தியும் ஞானமும் தன்னுடைய சம்பந்தத்திற்கு தக்கபடி ஒவ்வொருவனுடனும் வேறுபடுகின்றனவென்று தெரிந்திருக்கப்படவேண்டும். உண்மையான உண்மைகளிலிருந்தும் நன்மைகளிலிருந்தும், தங்கள் புத்தியும் ஞானமும் உருவாக்கப்படுகிறவர்கள், சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி கூட்டங்களுடன் சம்பந்தம் உடைத்தாயிருக்கிறார்கள்; ஆனால், உண்மையான உண்மைகளிலிருந்தும் நன்மைகளிலிருந்தும் தங்களுடைய புத்தியும் ஞானமும் உருவாக்கப்படாமல், தங்களுடன் ஒத்துப்போகிற பொருள்களினால் உருவாக்கப்பட்டவர்கள் விஷயத்தில், அது சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி கூட்டங்கள் விஷயத்தில் ஒரு வரிசையில் சம்பவிக்காதபடியினால், சம்பந்தமானது உடைந்தும் முறைகேடாய் பொருந்தாமலும் இருக்கிறது. ஆனால் தீமையிலிருந்து வரும் பொய்களிலிருப்பதினால் விவேகமாகவும் ஞானமுள்ளவர்களாகவும் இல்லாதவர்கள், நரகத்திலிருக்கும் கூட்டங்களுடன் போக்குவரவு வைத்திருக்கிறார்கள். அந்த சம்பந்தத்தின் விசாலம், திடப்படுதலுக்கு தக்கபடியிருக்கிறது. கூட்டங்களுடன் இந்த சம்பந்தமானது, அவைகளில் இருப்பவர்களுடைய வெளிப்படையான உணர்ச்சிக்கு வருகிற ஒரு சம்பந்தமாயில்லாமல், அவர்கள் இருக்கிறதும் அவர்களிடமிருந்து பாய்கிறதுமான குணத்து

டன் இருக்கும் ஒரு சம்பந்தமாயிருக்கிறதென்று இன்னும் தெரியப்படவேண்டும்.

**205**. சுவர்க்கத்திலிருக்கும் எல்லாரும், ஒழுங்கில் நன்மை உண்மைகளுக்கு சேர்ந்த ஆத்மார்த்தமான சம்பந்தங்களுக்கு தக்கபடி சேர்ந்திருக்கிறார்கள். முழு சுவர்க்கத்திலும் ஒவ்வொரு கூட்டத்திலும், ஒவ்வொரு வீட்டிலும் அது அப்படியேயிருக்கிறது. இதனால்தான், ஒரேவிதமான நன்மையிலும் உண்மையிலும் இருக்கும் தேவர்கள், பந்துக்களும், பூமியின்பேரில் இனமானவர்களும் செய்கிறமாதிரியே, இளம்பிராய முதல் ஒருவருக்கொருவர் தெரிந்திருக்கிறதுபோல, ஒருவரை ஒருவர் தெரிந்திருக்கிறார்கள். ஞானத்தையும் விவேகத்தையும் உண்டுபண்ணுகிற நன்மைகளும் உண்மைகளும், ஒவ்வொரு தேவனிலும் அதே மாதிரி சேர்ந்திருக்கின்றன. அதேமாதிரியாக, அவர்கள் ஒருவரை ஒருவர் தெரிந்திருக்கிறார்கள். ஒருவருக்கொருவர் தெரிந்திருக்கிறபடியினால், அவர்கள் ஒன்றாய் கூட சேர்ந்துக்கொள்ளுகிறார்கள். ஆகையினால் சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி உண்மைகளும் நன்மைகளும் சேர்க்கப்பட்டிருக்கிறவர்கள், பொருள்கள் ஒரு வரிசையில் ஒன்றன்பின் ஒன்றாய் தொடர்வதைப்பார்த்து, எல்லா திக்குகளிலும் அவைகளின் சேர்மானத்தின் விதத்தைப்பற்றி விரிவாய் பார்க்கிறார்கள்; ஆனால், சுவர்க்கத்தின் உருவத்திற்குதக்கபடி நன்மைகளும் உண்மைகளும் சேர்க்கப்படாதவர்கள் விஷயத்தில் அது வேறுமாதிரியிருக்கிறது.

**206**. ஒவ்வொரு சுவர்க்கத்திலும் அவ்விதமான உருவமிருக்கிறது; அதை அனுசரித்து தேவர்களுக்கு போக்குவரவும், சிந்தனையினுடையவும் ஆசையினுடையவும் விரிவும் இருக்கிறது. இவ்விதமாக, அதை அனுசரித்து அவர்கள் விவேகத்தையும் புத்தியையும் உடைத்தாயிருக்கிறார்கள். ஆனால், ஒரு சுவர்க்கம் மற்ற ஒன்றோடு, அதாவது, மூன்றாவது அல்லது மிகவும் அந்தரங்கமானது, இரண்டாவது, அல்லது மத்தியிலுள்ளதுடனும், இந்த இரண்டும் முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்ததுடனும் போக்குவரவு வேறு விதமாயிருக்கிறது. ஒன்றுக்கொன்று சுவர்க்கங்களுக்குள் இருக்கும் போக்குவரவு சம்பந்தம், போக்குவரவு என்று சொல்லப்படாமல், இப்பொழுது சிலது சொல்லப்பட வேண்டிய உட்பெருக்கென்று சொல்லப்பட வேண்டும். மூன்று சுவர்க்கங்கள் இருக்கிறதென்பதும், அவைகள் ஒன்றுக்கொன்று வேறானதென்

பதும், அதன் சொந்த அத்தியாயத்தில் மேலே பார்க்கப்படலாம் (செ. 29 முதல் 40 வரையில்).

**207**. உட்பெருக்கைத்தவிர, ஒரு சுவர்க்கத்திற்கும் மற்ற தற்கும் போக்குவரவு இல்லை என்பது, அவைகள் ஒன்றுக்கு ஒன்று இருக்கும் ஸ்தானத்திலிருந்து வெளிப்படையாகும். மூன்றாவது அல்லது மிகவும் அந்தரங்கமான சுவர்க்கம் மேலேயும், இரண்டாவது அல்லது மத்தியிலுள்ள சுவர்க்கம் கீழேயும், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த சுவர்க்கம் இன்னும் கீழேயும் இருக்கின்றன. ஒவ்வொரு சுவர்க்கத்திலுமிருக்கும் எல்லா கூட்டங்களிலும் அதைப் போன்ற ஏற்பாடு இருக்கிறது: உதாரணமாக, மலைகளைப்போல் தோன்றுகிற உன்னதமான இடங்களில் சிலர் வசிக்கிறார்கள் (செ. 188). இவைகளின் உச்சியில், மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் வசிக்கிறார்கள்; கீழே இரண்டாவது சுவர்க்கத்தின் கூட்டங்கள் இருக்கின்றன, மறுபடியும் இவைகளுக்கு கீழே மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் கூட்டங்களிருக்கின்றன; உன்னதமான இடங்களில் அவர்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும், எங்கேயும் அதே உண்மையாயிருக்கிறது. அதிகம் உயர்ந்த சுவர்க்கத்தின் ஒரு கூட்டம், அன்னுவயங்களால் தவிர அதிகம் தாழ்ந்த சுவர்க்கத்தின் ஒரு கூட்டத்துடன் ஒரு சம்பந்தமும் உடைத்தாயிருக்கிறதில்லை (மேலே செ. 100 பார்க்கவும்); அன்னுவயங்களால் போக்குவரவு வைத்தல் உட்பெருக்கு என்று சொல்லப்படுகிறது.

**208**. ஒரு சுவர்க்கம் மற்றதுடனும், அல்லது ஒரு சுவர்க்கத்தின் ஒரு கூட்டம் மற்றதின் ஒரு கூட்டத்துடனும், ஆண்டவரால் மாத்திரம், தன்னிடமே இருந்து நேராயும், அவைகளின் ஒழுங்கில், உயர்ந்த சுவர்க்கங்கள் மூலமாய் கீழானவைகளுக்குள் நடுப்போக்காயும், இவ்விதமாக நேராயும் நடுப்போக்காகவும் இருவிதத்திலும் உட்பெருக்கினால், சேர்க்கப்பட்டிருக்கிறது. உட்பெருக்கினால் சுவர்க்கங்களின் சேர்க்கை ஆண்டவரிடமிருந்து மாத்திரம் உண்டாகிறபடியினால், உயர்ந்த சுவர்க்கத்தின் எந்த தேவனும், தாழ்ந்த சுவர்க்கத்தின் ஒரு கூட்டத்தை கீழே பார்க்கவும், அங்கிருக்கும் எவருடனும் பேசவும் முடியாதபடி, அதி ஜாக்கிரதையாய் முன்னமே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது; ஏனென்றால், இது செய்யப்பட்டால், தேவனிட

மிருந்து, அவனுடைய விவேகமும் ஞானமும் நீக்கப்படுகிறது. இதற்கு காரணம் விவரிக்கப்படவேண்டும். சுவர்க்கத்தின் மூன்று பிரமாணங்கள் இருக்கிறதுபோல, ஒவ்வொரு தேவனுக்கும் உயிரின் மூன்று பிரமாணங்களிருக்கின்றன. மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தில் இருக்கிறவர்களுக்கு, மூன்றுவது அல்லது மிகவும் அந்தரங்கமான படி திறக்கப்பட்டும், இரண்டாவதும் முதலாவதும் மூடப்பட்டுமிருக்கிறது; மத்திய சுவர்க்கத்தி லிருக்கப்பட்டவர்களுக்கு இரண்டாவது படி திறந்தும், முதலாவதும் மூன்றுவதும் மூடியுமிருக்கிறது; மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தி லிருக்கப்பட்டவர்களுக்கு முதல் படி திறந்தும், இரண்டாவதும் மூன்றுவதும் மூடியுமிருக்கிறது. ஆனபடியினால், மூன்றுவது சுவர்க்கத்தின் ஒரு தேவன், இரண்டாவது சுவர்க்கத்தின் ஒரு கூட்டத்திற்குள் பார்த்து, அங்கிருக்கும் எவனோடாவது பேசின உடனே, அவனுடைய மூன்றுவது படி மூடப்படுகிறது; இது மூடப்படுதலினால், அவனுக்கு ஞானமில்லாமல் போக செய்யப்படுகிறது; ஏனென்றால், அவனுடைய ஞானம் மூன்றுவதுபடியி லிருக்கிறது; இரண்டாவதிலும் முதலாவதிலும் அவனுக்கு அது கொஞ்சம்கூட இல்லை. "வீட்டின் மேல் இருக்கிறவன் தன் வீட்டிலே எதையாகிலும் எடுப்பதற்கு இறங்காதிருக்கக் கடவன், வயலிலிருக்கிறவன் தன் வஸ்திரங்களை எடுப்பதற்குத் திரும்பாதிருக்கக் கடவன்" என்று மத்தேயுவிலும் (xxiv. 17, 18), "அந்த நாளிலே வீட்டின் மேலிருப்பவன் வீட்டிலுள்ள தன் பண்டங்களை எடுத்துக்கொண்டு போக இறங்காமல் இருக்கக்கடவன்; அப்படியே வயலிலிருக்கிறவன் பின்னிட்டுத் திரும்பாமலும் இருக்கக்கடவன். லோத்தின் மனைவியை நினைத்துக் கொள்ளுங்கள்" என்று லூக்காவிலும் (xvii. 31, 32) ஆண்டவர் சொல்லிய வார்த்தைகளால் இதுதான் அருத்தம் கொள்ளப்படுகிறது.

**209**. தாழ்ந்த சுவர்க்கங்களிலிருந்து உயர்ந்தவைகளுக்கு உட்பெருக்கு கிடையாது; ஏனென்றால் அப்படியிருக்கும் பட்சத்தில், அது ஒழுங்குக்கு எதிரிடையா யிருக்கும்; ஆனால், உயர்ந்த சுவர்க்கங்களிலிருந்து தாழ்ந்தவைகளுக்கு உட்பெருக்கு இருக்கிறது. மேலும், மிகவும் உயர்ந்த சுவர்க்கத்தின் தேவர்களின் ஞானம், தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களின் ஞானத்தைவிட பத்தாயிரத்திற்கு ஒன்று விகிதம் மேற்பட்டிருக்கிறது; தாழ்ந்த சுவர்க்

கத்தின் தேவர்கள் உயர்ந்த சுவர்க்கத்தின் தேவர்களுடன் ஏன் பேச முடியாதென்பதற்கு, இது இன்னொரு காரணமாயிருக்கிறது; உண்மையில் உயர்ந்த சுவர்க்கமானது, அவர்கள் தலைக்குமேல் ஒரு மேகத்தைப்போல் தோன்றுவதின் நிமித்தம், அவர்கள் அவர்களை நோக்கும்போதுகூட, அவர்கள் அவர்களைப் பார்க்கிறதில்லை. ஆனால், மேலே கூறியபடி உயர்ந்த சுவர்க்கத்தின் தேவர்கள் தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களோடு பேசவிடப்பட்டால், தங்கள் ஞானத்தை இழந்துவிடுவார்கள் என்றாலும், அவர்கள் அவர்களைப் பார்க்கலாம்.

**210.** மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவர்களுடைய சிந்தனைகளும் அன்புகளும் பேச்சும், மத்தியிலுள்ள சுவர்க்கத்தில் உணரப்படுகிறதில்லை; ஏனென்றால், அவைகள் அங்கேயிருப்பதைவிட அதிகமாய் மேற்பட்டிருக்கிறது. ஆனால், ஆண்டவருக்கு தயவு வந்தபோது, அவர்களிடமிருந்து தாழ்ந்த சுவர்க்கங்களில் சுவாலைபோன்ற ஒன்று தோன்றுகிறது; மத்தியிலுள்ள சுவர்க்கத்தின் தேவர்களின் சிந்தனைகளும், அன்புகளும், பேச்சும் மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தில் வெளிச்சத்தை போன்றும், சில வேளைகளில் பிரகாசமான அல்லது பலவித நிறமுள்ள மேகத்தைப் போலவும் தோன்றுகின்றன. அந்த மேகத்திலிருந்தும், அதன் ஏற்றத்திலிருந்தும், இறக்கத்திலிருந்தும், உருவத்திலிருந்தும், அவர்கள் என்ன சொல்லுகிறார்களென்றுகூட கொஞ்சம் தெரிந்திருக்கிறது.

**211.** இவைகளிலெல்லாமிருந்து, சுவர்க்கத்தின் உருவம் என்னவென்று, அதாவது, மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தில் அது மிகவும் சம்பூரணமா யிருக்கிறதென்றும், மத்தியிலுள்ள சுவர்க்கத்தில்கூட சம்பூரணமாகவும், ஆனால் குறைவாயும், மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தில் இன்னும் குறைந்த அளவாயும் இருக்கிறதென்றும், ஒரு சுவர்க்கத்தின் உருவம் ஆண்டவரிடமிருந்துவரும் உட்பெருக்கினால் மற்றொன்றிலிருந்து நிலைக்கிறதென்றும் அறிந்து கொள்ளலாம். ஆனால், உட்பெருக்கினால் போக்குவரவு என்னவென்பது, அபூர்வபரிணமம் என்னவென்றும், நீளத்தினுடையவும் அகலத்தினுடையவும் மாற்றங்கள் எப்படி வித்தியாசப் படுகின்றனவென்றும் தெரிந்திருக்கப்பட்டாலொழிய அறிந்துகொள்ள முடியாது. இந்த பல பிரமாணங்கள் என்னவென்பது மேலே பார்க்கலாம் (செ. 38).

212. ஆகையால், சுவர்க்கத்தின் உருவத்தைப்பற்றியும், அது [illegible]யையும் விதத்தைப் பற்றியும், தேவர்களுக்குக்கூட கிரகிக்க முடியாததாயிருக்கிறது. திட்டமாயும் விவேகமுள்ளவனுமிருக்கிற ஒருவனால், கூர் விசாரிக்கப்பட்டு, திட்டமாய் சோதிக்கப்பட்டபோது, மானிட சரீரத்தில் உள்ள எல்லா பொருள்களின் உருவத்திலிருந்து அதைக்குறித்து கொஞ்சம் அபிப்பிராயம் கொள்ளலாம்; ஏனென்றால், மேலே (செ. 59 முதல் 72 வரையில்) முழு சுவர்க்கமும் ஒரு மனிதனைப்போலிருக்கிறதென்றும், மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களும் சுவர்க்கங்களுக்கு அனுவயப்படுகிறதென்றும் (செ. 87 முதல் 102 வரையில்) காண்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த உருவமானது எவ்வளவு கிரகிக்க முடியாததாகவும் தெளிவிக்கப்படாததாயுமிருக்கிறதென்பது, சரீரத்தின் எல்லா பாகங்களும் நெய்யப்பட்ட நரம்புக்குறிய நார்களிலிருந்து பொதுவாய் தோன்றும். இந்த நார்கள் என்னவென்பதும் மூளையில் அவைகள் எப்படி அசைந்து பாய்கின்றனவென்பதும், கண்ணினால்கூட பார்க்கப்பட முடியாது; ஏனென்றால் கணக்கற்ற நார்கள், சேர்த்துபார்த்தால், அவைகள் மெதுவான தொடர்ச்சியாயுள்ள பிண்டங்களாக தோன்றும்படியாக, அங்கே அப்படி இழைக்கப்பட்டிருக்கின்றன; என்றாலும், சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும் எல்லா நுண்ணியவைகளும், அவைகளுக்கு தக்கபடி, செயல்களாக தெளிவாய் பாய்கின்றன. மறுபடியும் இந்த நார்கள் தாங்களே சரீரத்தில் எப்படிமாலை தொடுகின்றன என்பது இருதயத்தையும், மணிக்குடலையும் மற்றவைகளையும் போன்ற நரம்பு வலைகளிலிருந்தும், அதனுடன் ஒவ்வொரு பாகத்திலிருந்தும் அநேக நார்கள் பிரவேசித்து, அங்கே கலந்து, பலவிதமாய் சேர்க்கப்பட்டபோது தங்கள் தொழில்களை அடிக்கடி செய்யப்போகிறதுமாகிய நரம்பு கட்டிகளிலிருந்தும், இதுவும்தவிர ஒவ்வொரு ஆந்திரிகத்திலும், அவயத்திலும், அங்கத்திலும், தசை நாரிலும், இருக்கும் பொருள்களிலிருந்தும் தெளிவாகின்றது. இவைகளையும் அவைகளுடைய அநேக ஆச்சரியங்களையும், ஞானக்கண்ணினால், சோதிக்கிறவன், முழுமையும் பிரமித்துப் போவான்; என்றாலும், கண்பார்க்கப்பட்ட பொருள்கள் கொஞ்சமாயிருக்கின்றன; அது பார்க்காதவைகள் இன்னும் அதிக ஆச்சர்யமாயிருக்கின்றன; ஏனென்றால் அவைகள் பிரகுருதியின் உள்பாகங்களில் இருக்கின்றன. இந்த உருவம் சுவர்க்கத்தின் உருவத்துடன் அனுவயப்

படுகிறதென்பது, அதிலும் அதற்கு தக்கபடியும் புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் எல்லா பொருள்களின் தொழிற்பாட்டிலிருந்து தெளிவாய் தோன்றுகிறது; ஏனென்றால், ஒரு மனிதன் இச்சிப்பது ஏதாயினும், அந்த உருவத்திற்கு தக்கபடி செயலாக தானாகவே மாறுகிறது; அவன் நினைப்பதெல்லாம், அவைகளின் முதல் ஆரம்பங்களிலிருந்து, இந்திரிய ஞானம் வருகிற அவைகளின் முடிவுகளுக்கு நார்களில் வியாபிக்கின்றன; அது சிந்தனையினுடையவும் சித்தத்தினுடையவும் உருவமாயிருப்பதின் நிமித்தம், விவேகத்தினுடையவும் ஞானத்தினுடையவும் உருவமாயிருக்கின்றது. இந்த உருவம்தான் சுவர்க்கத்தின் உருவத்துடன் அன்னுவயப்படுகிறது; ஆகவே, தேவர்களின் ஒவ்வொரு அன்பும் ஒவ்வொரு எண்ணமும் அந்த உருவத்திற்கு தக்கபடி தானே விரிகிறதென்றும், அவர்கள் அதில் இருக்கிற அளவு, விவேகத்திலும் ஞானத்திலுமிருக்கிறார்களென்றும் தெரிந்திருக்கப்படலாம். சுவர்க்கத்தின் உருவம் ஆண்டவரின் தெய்வீக மானிடத் தன்மையிலிருந்து வருகிறதென்பது மேலே (நெ. 78 முதல் 86 வரையில்) பார்க்கப்படலாம். சுவர்க்கத்தின் உருவம், அதன் பொதுவான நியமங்கள் விஷயத்தில்கூட எக்காலத்திலும் முழுவதும் பரிசோதிக்கப்படாதபடி இருக்கிறதென்பதையும், இவ்விதமாக, மேலே கூறியபடி தேவர்களுக்குகூட, அது கிரகிக்க முடியாமல் இருக்கிறதென்பதையும் காண்பிக்க, இவைகளெல்லாம் சொல்லப்பட்டன.

# XXIV

## சுவர்க்க ராஜரிகங்கள்

**213**. சுவர்க்கமானது கூட்டங்களாக வகையறுக்கப்படுகிற தினாலும், பெரிய கூட்டங்கள் அநேக நூறாயிரங்கள் தேவர்க ளால் அமைக்கப்பட்டிருப்பதினாலும் (செ. 50), ஒரு கூட்டத்தில் உள்ளவர்கள் எல்லாம் ஓரேவித ஞானத்திலில்லாமல்,ஓரேவிதமான நன்மையிலிருப்பதினாலும் (செ. 43), அரசாட்சிகள் கூட இருக்கிற தாக ஆவசியகமாய் ஏற்படுகிறது; ஏனென்றால், வரிசைக்கிரமம் கவனிக்கப்படவேண்டும், ஒழுங்குக்கு சேர்ந்தவைகளெல்லாம் மீறா மல் வைக்கப்படவேண்டும். ஆனால், சுவர்க்கங்களில் அரசாட்சிகள் பலவிதமாயிருக்கின்றன; ஆண்டவருடைய பரம இராச்சியத்தை அமைக்கிற கூட்டங்களில் ஒருவிதமாகவும்,ஆண்டவருடைய ஞான லோகத்தை அமைக்கிற கூட்டங்களில் வேறு விதமாகவும் இருக் கிறது: அவைகள் பல கூட்டங்களின் ஊழியங்களுக்குத்தக்கபடி கூட வித்தியாசப்படுகின்றன. ஆனால், சுவர்க்கங்களில், அன்னி யோன்னிய அன்பின்அரசாங்கத்தைத்தவிர வேறு இதர அரசாட்சி யில்லை. அன்னியோன்னிய அன்பின் அரசாட்சி சுவர்க்க ராஜ ரிகம்.

**214**. ஆண்டவருடைய பரமஇராச்சியத்தில் ஆளுகையானது, அங்கே இருப்பவர்களெல்லாம், ஆண்டவரிடமிருந்து ஆண்டவரி டம் பாராட்டும் அன்பின் நன்மையிலிருக்கிறபடியினால், நீதி என்று சொல்லப்படுகிறது; அந்த நன்மையிலிருந்து செய்யப்படுகிறது நியாயமென்று சொல்லப்படுகிறது. பரம இராச்சியத்தில் அரசாங் கம், ஆண்டவரை மாத்திரம்சேர்ந்தது; அவரே அவைகளை நடத்தி, வாழ்க்கை விஷயங்களை அவர்களுக்கு கற்பிக்கிறார். நீதி தீர்ப்புகளின் உண்மைகள் என்று சொல்லப்படுகிற உண்மைகள், அவர்களுடைய இருதயங்களில் எழுதப்பட்டிருக்கின்றன; ஒவ்வொருவனும் அவை களை தெரிந்துகொண்டும், உணர்ந்தும், பார்க்கிறான்; ஆகையினால், வாழ்க்கைக்கு சேர்ந்த நீதி விஷயங்கள் தவிர, நீதி தீர்ப்பின் விஷயங் கள், அங்கே எப்பொழுதும் விவகாரத்திற்கு வருகிறதில்லை. இவை களைப்பற்றி, குறைந்த புத்தியுள்ளவர்கள் அதிக புத்தியுள்ளவர் களை, கேட்கிறார்கள்; அவர்கள் ஆண்டவரைக் கேட்டு, உத்திரங்

கள் பெருகிறார்கள். அவர்களுடைய சுவர்க்கம், அலலது அவர்களுடைய மிகவும் அந்தரங்கமான சந்தோஷம், ஆண்டவரிடமிருந்து நியாயமாய் வாழ்தலாயிருக்கிறது.

**215.** ஆண்டவரின் ஞானலோகத்தில் ஆளுகை என்பது, நீதி தீர்ப்பு என்று சொல்லப்படுகிறது; ஏனென்றால் அந்த இராச்சியத்திலிருப்பவர்கள், அயலானிடத்து காண்பிக்கும் தருமத்தின் நன்மையிலிருக்கிற சூக்ஷும நன்மையில், அந்த இராச்சியத்திலிருக்கிறவர்கள் இருக்கிறார்கள்; அந்த நன்மையானது அதன் சத்தில் உண்மையாயிருக்கிறது; மேலும், உண்மையானது தீர்ப்புக்கு சேர்ந்தது; நன்மையானது நீதிக்கு சேர்ந்தது. இவர்கள்கூட ஆண்டவரால் நடத்தப்படுகிறார்கள்; ஆனால் ஒன்றன் மூலமாய் அப்படி நடத்தப்படுகிறார்கள் (செ. 208); ஆகையினால் தாங்கள் இருக்கப்பட்ட கூட்டத்திற்கு வேண்டியபடி, கொஞ்சம் அல்லது அநேகம் அதிபதிகளை உடைத்தாயிருக்கிறார்கள். தாங்கள் ஒருவரோடொருவர் சேர்ந்து வாழ்கிற சட்டங்கள்கூட அவர்களுக்குண்டு. அவர்களுடைய அதிபதிகள், புத்திசாலிகளானபடியினால், தாங்கள் தெரிந்துகொள்ளுகிற சட்டங்களை அனுசரித்து எல்லா விஷயங்களையும் நடத்துகிறார்கள்; சந்தேகமான விஷயங்களில், ஆண்டவரால் தெளிவிக்கப்படுகிறார்கள்.

**216.** ஆண்டவருடைய பரம இராச்சியத்தில் இருப்பது போல் நன்மையிலிருந்து செய்யும் அரசாங்கம், நீதி என்று சொல்லப்படுகிறபடியினாலும், ஆண்டவருடைய ஞான ராச்சியத்தில் இருப்பதுபோல உண்மையிலிருந்து செய்யும் அரசாட்சி, நீதி தீர்ப்பு என்று சொல்லப்படுகிறபடியினாலும், வேதத்தில், சுவர்க்கத்தைப்பற்றியும் திருச்சபையைப்பற்றியும் பேசுங்காலத்தில், நீதியும், நீதி தீர்ப்பும் சொல்லப்படுகின்றன. நீதி என்பதினால், பரத்துக்கடுத்த நன்மை என்றும், நீதி தீர்ப்பு என்பதினால், மேலே கூறியபடி பின்வரும் வாக்கியங்களில்போல, தன் சத்தில் உண்மையாயிருக்கிற ஞான சம்பந்தமான நன்மை என்றும் அருத்தம் கொள்ளப்படுகிறது:—“ தாவீதின் சிங்காசனத்தையும் அவனுடைய ராஜ்யத்தையும் அவர் திடப்படுத்தி, அதை இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் நியாயத்தினாலும் நீதியினாலும் நிலைப்படுத்தும்படிக்கு, அவருடைய கர்த்தத்துவத்தின் பெருக்கத்துக்கும், அதன் சமாதானத்துக்கும் முடிவில்லை” (ஏசா. ix. 7). பின்வரும் வாக்கியத்தால் விசதமாகிறபடி, தாவீது என்பதினால் ஆண்டவரும், அவர் ராஜ்யத்தினால் சுவர்க்கமும் கருதப்படுகின்றன: “தாவீதுக்கு ஒரு நீதியுள்ள

கிளையை எழும்பப்பண்ணுவேன்; அவர் ராஜாவாயிருந்து, ஞானமாய் ராஜரீகம் பண்ணி, பூமியிலே நியாயத்தையும் நீதியையும் நடப்பிப்பார்" (எரேமி. xxiii. 5): "கர்த்தர் உயர்ந்தவர், அவர் உன்னதத்தில் வாசமாயிருக்கிறார், அவர் சீயோனை நியாயத்தினாலும், நீதியினாலும், நிரப்புகிறார்" (ஏசா. xxxiii. 5). சீயோன் என்பதினால் கூட சுவர்க்கமும் திருச்சபையும் கருதப்படுகிறது. "பூமியிலே நியாயத்தையும் நீதியையும் செய்கிற கர்த்தர் நான்; ஏனென்றால் இவைகளின்பேரில் நான் பிரியமாயிருக்கிறேன்" (எரே: ix. 24). "நித்திய விவாகத்துக்கென்று, உன்னை எனக்கு நியமித்துக் கொள்ளுவேன்; நீதியும் நியாயமும் கிருபையும் உனக்கு உருக்க இரக்கமுமாய் உன்னை எனக்கு நியமித்துக்கொள்ளுவேன்" (ஓசியா. ii. 19). "கர்த்தாவே, சுவர்க்கங்களில் உமது நீதி மகத்தான பர்வதங்கள் போலவும், உமது நியாயங்கள் மகா ஆழமாகவும் இருக்கிறது" (சங். xxxvi 5, 6). "நீதி நியாயங்களை என்னிடத்தில் விசாரித்து, தேவனிடத்தில் சேர விரும்புகிறார்கள்" (ஏசா. lviii. 2), இன்னும் இதர வாக்கியங்களிலும்.

**217.** ஆண்டரின் ஞான லோகத்தில், பலவித கூட்டங்களில் பலவிதமாய், பலவித அரசாட்சிகள் இருக்கின்றன; அந்த கூட்டங்கள் செய்யும் தொழில்களுக்கு தக்கபடி அவைகளின் பேதம் இருக்கின்றது. அவைகளின் தொழில்கள், அவைகள் அன்னுவயப்படுகிற மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களின் தொழில்களை ஒத்திருக்கின்றன. இவைகள் பலவிதமாய் இருக்கின்றனவென்று நன்றாய் தெரிந்திருக்கப்படுகிறது; ஏனென்றால், இருதயத்துக்கு ஒரு வேலையும், சுவாசாசயங்களுக்கு வேறு ஒன்றும், பித்தாசயத்திற்கு வேறொன்றும், மண்ணீரலுக்கு வேறொன்றும், ஒவ்வொரு ஞானேந்திரியத்துக்கும்கூட வேறொன்றும் இருக்கின்றது. சரீரத்தில் இதை அங்கங்களுடைய பலவித தொழில்களிருப்பதுபோல, சுவர்க்கமாயிருக்கிற மகாமனிதனிலிருக்கும் கூட்டங்களின் தொழில்களும் அம்மாதிரியே யிருக்கின்றன; ஏனென்றால், அங்கிருக்கும் கூட்டங்கள் இந்த அங்கங்களுக்கு அன்னுவயப்படுகின்றன. மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களோடும் சுவர்க்கத்திலிருக்கும் எல்லா பொருள்களின் ஒரு அன்னுவயம் இருக்கிறதென்பது மேலே (நெ. 8 முதல் 101 வரையில்) அதன் சொந்த அத்தியாயத்தில் பார்க்கப்படலாம். எல்லாவித அரசாட்சிகளும், பொது நன்மையை முடிவான கருத்தாகவும், அந்த நன்மை

யில் ஒவ்வொருவனுடைய நன்மையையும், மதிக்கிறதாக கொள்ளு கிறதென்பதில் ஒத்துப்போகின்றன. முழு சுவர்க்கத்திலுள்ள எல்லாரும், எல்லாரையும் நேசித்து, தெய்வீக அன்பிலிருந்து, பொது நன்மையை நேசிக்கிறதற்கு தக்க அளவு, ஒவ்வொருவனும் தன்னுடைய நன்மையை யடைகிற ஒரு பொதுவான நன்மை யிருக்கவேண்டுமென்று நியமிக்கிற ஆண்டவருடைய வழி காட்டுகை யில் இருக்கிறபடியினால், விஷயம் இம்மாதிரி யிருக்கிறது. ஏனென் றால், எவனாவது ஒருவன் பொது நன்மையை எவ்வளவு நேசிக் கிறானோ, அவ்வளவு அவன் எல்லாரையும், ஒவ்வொருவனையும் நேசிக்கிறான்; அந்த அன்பு ஆண்டவரைச் சேர்ந்தபடியினால், அவன் அவ்வளவு ஆண்டவரால் நேசிக்கப் பட்டு, நன்மை அவ னுடையதா யிருக்கிறது.

**218.** இவைகளிலிருந்து, அவர்கள் என்னவித அதிகாரிகள் என்று, அதாவது அவர்கள் மற்றவர்களைவிட அதிகமாய் நன்மை யிலும் ஞானத்திலும் இருக்கிறார்களென்றும், இவ்விதமாக, அன்பி லிருந்து எல்லாருக்கும் நன்மையை செய்ய இச்சிக்கிறார்களென்றும், புத்தியிலிருந்து, அது செய்யப்பட எப்படி ஏற்பாடு செய்யவேண்டு மென்று தெரிந்திருக்கிறார்களென்றும் வெளிப்படும். அவ்வித அதி காரிகள், ஆட்சி செய்கிறதுமில்லை, கட்டளையிடுகிறதுமில்லை; ஆனால் அவர்கள் ஊழியமும் அடிமைத் தொழிலும் செய்கிறார்கள்; ஏனென்றால், நன்மையினிடத்து கொள்ளும் அன்பிலிருந்து மற்ற வர்களுக்கு நன்மை செய்தல் அடிமைத் தொழில் செய்தலாகும்; அது செய்யப்பட ஏற்பாடு செய்துவைத்தல் ஊழியம் செய்தலா கும். குறைவாய் தவிர, மற்றவர்களைவிட பெரியவர்களாக அவர்கள் செய்துக்கொள்ளுகிறதுமில்லை; ஏனென்றால், அவர்கள் கூட்டத்தி னுடையவும் அவர்களுடைய அயலானுடையவும் நன்மையை முத லாகவும், ஆனால், தங்கள் சொந்த நன்மையைக் கடைசியாகவும் நினைக்கிறார்கள்; முதலிலிருப்பது பெரியது, கடைசியிலிருப்பது அதிலும் குறைந்தது. அப்படியிருந்தாலும் அவர்களுக்கு கீர்த்தியும் மகிமையும் உண்டு; மற்றவர்களைவிட அதிக உன்னதமான இடத் தில், கூட்டத்தின் மத்தியில் அவர்கள் தங்கி, மகத்துவமான அரண்மனைகளில் வசிக்கிறார்கள். இந்த மகிமையையும் கீர்த்தியை யும் தங்களுக்கேயல்லாமல், கீழ்ப்படிதலின்பொருட்டு அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்; ஏனென்றால், அங்கிருக்கும் எல்லாருக்

கும் தங்களுக்கு கீர்த்தியும் மகிமையும் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், இந்த காரணத்துக்காக கீழ்ப்படியவேண்டுமென்றும் தெரியும். தன்னுடைய சீடர்களுக்கு ஆண்டவர் சொல்லிய வார்த்தைகளால் கருதப்படுகிறது, இவைகள்தான்: "உங்களில் எவனாகிலும் பெரியவனாயிருக்க விரும்பினால், அவன் உங்களுக்கு பணிவிடைக்காரனாயிருக்கக் கடவன்; மனுஷகுமாரனும் ஊழியம் கொள்ளும்படிவராமல், ஊழியம் செய்ய வந்ததுபோல" (மத்தே. xx. 26, 28); "உங்களில் பெரியவன் சிறியவனைப்போலவும் தலைவன் பணிவிடைக்காரனைப்போலவும் இருக்கக் கடவன்" (லூக். xxii, 26).

**219.** அவ்விதமான அரசாட்சி ஒவ்வொரு வீட்டிலும் சின்னஞ்சிறிய உருவத்தில்கூட இருக்கிறது. எஜமானனும், வேலைக்காரர்களும் அங்கேயிருக்கிறார்கள்; எஜமானன் வேலைக்காரர்களை நேசிக்கிறான், வேலைக்காரர்கள் எஜமானனை நேசிக்கிறார்கள்; ஆகையினால் அவர்கள் ஒருவருக்கொருவர் அன்பிலிருந்து ஊழியம் செய்கிறார்கள். எஜமானன் வேலைக்காரர்களுக்கு எப்படி வாழ வேண்டுமென்று கற்பித்து, என்ன செய்யப்படவேண்டுமென்று சொல்லுகிறான்; வேலைக்காரர்கள் கீழ்படிந்து தங்கள் வேலைகளை செய்கிறார்கள். உபயோகத்தை அதிகப்படுத்துதல், எல்லாருடைய உயிரின் சந்தோஷமாயிருக்கிறது; ஆகவே ஆண்டவருடைய இராச்சியம் உபயோகங்கள் நிறைந்த இராச்சியமாயிருக்கிறது.

**220.** நரகங்களில்கூட அரசாங்கங்களிருக்கின்றன; ஏனென்றால், அரசாட்சிகளில்லாவிட்டால், அவர்களை அடக்கிவைக்க முடியாது; ஆனால், அங்கிருக்கும் ஆளுகைகள், சுய அன்பிலிருந்து வருகிறபடியினால், சுவர்க்கத்திலிருக்கும் ஆளுகைகளுக்கு எதிரிடையாயிருக்கின்றன. நரகத்திலிருக்கும் ஒவ்வொருவனும் மற்றவர்களை ஆட்சி செய்யும் முதன்மையாயிருக்கவும் விரும்புகிறான். தங்களை உபகரிக்காதவர்களை வெறுப்பில் வைத்து அவர்களை பழிதீர்க்கவும் குரூரமாகவும் நடத்தவும் விரும்புகிறார்கள்; ஏனென்றால், சுய நல அன்பின் சுபாவம் இதுதான். ஆகையினால், அதிக கொடியவர்கள், அவர்கள்மேல் அதிபதிகளாய் வைக்கப்படுகிறார்கள். அவர்களும் பயத்தினால் அவர்களை கீழ்ப்படிகிறார்கள். ஆனால், நரகத்தைப்பற்றி நாம்பேசவரும்போது கீழ்க்கண்ட இடத்தில் இதைப்பற்றி பார்க்கவும்.

## XXV

### சுவர்க்கத்தில் தெய்வீக ஆராதனை.

**221.** சுவர்க்கங்களில் தெய்வீக ஆராதனை, புறம்பானவைகள் சம்பந்தப்பட்டவரையில், பூமியின்பேரில் இருப்பதைவிட வேறுபாடில்லாததாயிருக்கிறது; ஆனால், உள்ளானவைகள் சம்பந்தப் பட்ட வரையில் அது வித்தியாசப்படுகிறது. சுவர்க்கங்களில், பூமியின் பேரில்போல், கொள்கைகளும், பிரசங்கங்களும், ஆலயங்களுமிருக் கின்றன. கொள்கைகள் சாராம்சங்களில் ஒத்துப்போகின்றன; ஆனால் மிக உயர்ந்த சுவர்க்கங்களில், கீழிருப்பவைகளில்விட, அதிக உள்ளான ஞானத்தை உடைத்தாயிருக்கின்றன. பிரசங்கங்கள் கொள்கைகளை அனுசரித்து இருக்கின்றன; அவர்களுக்கு வீடு களும் அரண்மனைகளு மிருப்பதுபோல (செ. 183—190) பிரசங்கங் கள் நடக்கிற ஆலயங்களும்கூட இருக்கின்றன. தேவர்கள் ஞானத் திலும் அன்பிலும் தொடர்ச்சியாய் சம்பூரணமாக்கப்படுகிறபடி யினால், சுவர்க்கத்தில் இப்பேர்ப்பட்டவைகள் இருக்கின்றன. ஏனென்றால், மனிதர்களைப்போல் சமமாய் அவர்களுக்கு புத்தியும் சித்தமுமிருக்கின்றன; புத்தியானது, தொடர்ச்சியாய் சம்பூரண மாக்கப்படக் கூடியதாயிருக்கிறது; அதேமாதிரி சித்தமுமிருக்கிறது; புத்தியானது விவேகத்திற்கு சேர்ந்த உண்மைகளாலும், சித்த மானது அன்பைச் சேர்ந்த நன்மைகளாலும், அப்படி செய்யப்படக் கூடியதாயிருக்கிறது.

**222.** சுவர்க்கங்களில் தெய்வீக ஆராதனையேகூட, ஆலயங் களுக்கு அடிக்கடி போவதிலும், உபதேசங்களை கேட்பதிலுமல்லா மல், கொள்கைகளுக்கு தக்கபடி, அன்பினுடையவும், தருமத்தி னுடையவும், விசுவாசத்தினுடையவும் வாழ்க்கையில் அமைந்திருக் கிறது; ஆலயங்களில் செய்யும் பிரசங்கங்கள் வாழ்க்கை விஷயங் களை போதிக்கும் வழிவகைகளாயிருக்கின்றன. இந்த விஷயத்தைப் பற்றி நான் தேவர்களோடு பேசி, உலகத்தில் தெய்வீக ஆராதனை என்பது, அடிக்கடி கோவில்களுக்கு போவதிலும், பிரசங்கங்களை கேட்பதிலும், ஒரு வருஷத்திற்கு மூன்று அல்லது நான்கு தடவை களில் இராப்போஜனத்தை சேர்தலிலும், திருச்சபையின் முறை மைகள்படி ஆராதனையின் மற்ற செயல்களை செய்தலிலும், அதே

மாதிரி, பிரார்த்தனைக்கு காலங்களை ஏற்படுத்திய பிறகு, பக்தியாய் நடத்தலிலும் மாத்திரம் அமைந்திருக்கிறதென்று நம்பப்படுகிறதென்று, நான் அவர்களுக்கு சொல்லியுமிருக்கிறேன். இவைகளெல்லாம், செய்யப்படவேண்டிய புறம்பான செய்கைகள் என்றும், ஆனால் அவைகள் புறப்படுகிற ஒரு அந்தரங்கமானது இருந்தாலொழிய அவைகள் பிரயோசனமற்றதென்றும், அந்த அந்தரங்கமானது கொள்கை கற்பிக்கிற கட்டளைகள்படி வாழ்தலென்றும் தேவர்கள் சொன்னார்கள்.

**223**. அவர்களுடைய ஆலயங்களில் கூடும் சபைகளின் சுபாவத்தை நான் அறிந்துகொள்ளும்பொருட்டு, அவைகளுக்குள்ளே போய், பிரசங்கத்தைக் கேட்க எனக்கு அருள் செய்யப்பட்டது. போதகன், கிழக்கிலுள்ள பிரசங்க பீடத்தின்மேல் நிற்கிறான்; அவன் முகத்திற்கு எதிரில் மற்றவர்களைவிட அதிகமாக ஞான வெளிச்சத்திலிருக்கிறவர்களும், அவர்களுக்கு வலது பக்கத்திலும் இடது பக்கத்திலும், குறைந்த வெளிச்சத்தில் உள்ளவர்களும் உட்காருகிறார்கள். எல்லாரும் போதகனுடைய பார்வையிலிருக்கும்படியாகவும், அவன் பார்வையில் இல்லாதபடிக்கு, அவனுக்கு இரு பக்கத்திலும் உட்காராதபடி, ஒருவட்ட உருவமாக அவர்கள் எல்லாரும் சுற்றிலும் உட்காருகிறார்கள். புது மாணுக்கர்கள், கதவண்டையும், கோவிலின் கிழக்கிலும், பிரசங்க பீடத்தின் இடது பக்கத்திலும் நிற்கிறார்கள். பிரசங்க பீடத்திற்கு பின் பக்கத்தில் நிற்க யாரும் விடப்படுகிறதில்லை; அங்கே எவனாவது ஒருவன் இருந்தால், அதனால் போதகன் திகைக்கிறான். சபையில் எவனாவது ஒருவன் மறுத்தால் அதேமாதிரியாகிறது; மேலும் இந்த காரணத்துக்காக, அப்படி ஒப்பாதவன் தன்னுடைய முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொள்ள வேண்டியது. அந்த பிரசங்கங்கள், உலகத்தில் எதுவும் ஒப்பிடப்படமுடியாததாய், அவ்வளவு ஞானத்துடன் சுமைகொண்டிருக்கின்றன; ஏனென்றால், சுவர்க்கங்களில், அவைகள் உள்ளான வெளிச்சத்தில் இருக்கின்றன.

ஞானலோகத்தில் ஆலயங்கள் கல்லினாலும், பரம இராச்சியத்தில் அவைகள் மரத்தினாலும், பிரத்தியக்ஷமாய் கட்டப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், கல்லானது, ஞானராச்சியத்திலிருக்கப்பட்டவர்கள் இருக்கிற உண்மைக்கு, அனுவயப்படுகிறது; மரமானது, பரம இராச்சியத்திலிருக்கப்பட்டவர்கள் இருக்கிற நன்மைக்கு

அனுவயப்படுகிறது. பரம இராச்சியத்திலிருக்கும் பரிசுத்தமான மாளிகைகள், ஆலயங்கள் என்று சொல்லப்படாமல், கடவுளின் வீடுகளென்று சொல்லப்படுகின்றன. பரம இராச்சியத்தில் அவைகள் மகத்துவமில்லாமலிருக்கின்றன; ஆனால் அவைகள், ஞான இராச்சியத்தில் ஏறக்குறைய மகத்துவமானதாயிருக்கின்றன.

**224.** ஆலயங்களில், பிரசங்கங்கள் கேட்பவர்கள் இருக்கிற பரிசுத்த நிலைமையைப்பற்றி, போதகர்கள் ஒருவருடன் நான் பேசியிருக்கிறேன். அன்பிற்கும் விசுவாசத்திற்கும் சேர்ந்த தன்னுடைய உள்ளானவைகளுக்கு தக்கபடி ஒவ்வொருவனும், தேவ பக்தி யுள்ளவனாகவும் வணக்கமுள்ளவனாகவும், பரிசுத்தமுள்ளவனாகவும் இருக்கிறதாக அவர் சொன்னார்; ஏனென்றால், பரிசுத்தம் ஆண்டவரின் தேவத்துவமா யிருக்கிறபடியினால், இவைகளில் அதே இருக்கிறது. மேலும் அவர் அன்பையும் விசுவாசத்தையும் நீக்கிவிட்டால், புறம்பான பரிசுத்தம் என்னவென்று தனக்கு தெரியாதென்றும் சொன்னார். அன்பிற்கும் விசுவாசத்திற்கும் வேறாய் புறம்பான பரிசுத்தத்தைப்பற்றி தான் நினைத்த போது, வழக்கமான அல்லது கள்ளத்தனமான, பரிசுத்தத்தின் வெளி உருவத்தைப்போல் பாவிக்கிற, ஏதோ ஒன்றாயிருக்கலாமென்றும், தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலிலிருந்து வருகிற ஒரு பொய்யான நெருப்பு, அவ்வித பரிசுத்தத்தை கிளப்பி காண்பிக்குமென்றும் அவர் சொன்னார்.

**225.** எல்லா போதகர்களும், ஆண்டவருடைய ஞான லோகத்திலிருந்து வருகிறார்கள். பரம இராச்சியத்திலிருந்து யாரும் வருகிறதில்லை. ஞானலோகத்திலிருக்கும் தேவர்கள், நன்மையிலிருந்து வந்த உண்மையிலிருக்கிறபடியினாலும், எல்லா பிரசங்கமும் உண்மையிலிருந்து வருகிறபடியினாலும், அவர்கள் அந்த லோகத்திலிருந்து வருகிறார்கள். பரம இராச்சியத்தில் தேவர்கள் அன்பின் நன்மையில் இருக்கிறபடியினாலும், அந்த நன்மையிலிருந்து உண்மைகளைப்பார்த்து உணருகிறபடியினாலும், ஆனால் அவைகளைப்பற்றி பேசாதபடியினாலும், அந்த இராச்சியத்திலிருந்து போதகர்கள் இல்லை. பரம இராச்சியத்தில் தேவர்கள் உண்மைகளை உணர்ந்துபார்த்தபோதிலும், அவர்களுக்குள் பிரசங்கமிருக்கிறது. ஏனென்றால், அவர்கள் தங்களுக்கு தெரிந்த உண்மைகளில் அதனால் தெளிவிக்கப்பட்டு, முன்னிட்டே தங்களுக்கு தெரியாத அநே

கத்தால் சம்பூரணமாக்கப்படுகிறார்கள். அவைகளை அவர்கள் கேட்டவுடன், அவைகளை அவர்கள் ஒத்துக்கொண்டு, இவ்விதமாக அவைகளை உணருகிறார்கள். தாங்கள் உணருகிற உண்மைகளை, அவர்கள் நேசித்து, அவைகளை அனுசரித்து வாழ்வதினால், தங்கள் வாழ்க்கையில் அவைகளை இணைக்கிறார்கள்; உண்மைகளை அனுசரித்து வாழ்தலென்பது ஆண்டவரை நேசித்தலென்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

**226.** எல்லா போதகர்களும், ஆண்டவரால் நியமிக்கப்படுகிறார்கள். அதனால் பிரசங்கம் செய்யும் வரத்தை பெற்றிருக்கிறார்கள். இதுவுமன்றி, ஆலயத்தில் மற்றவர்கள் யாரும் கற்பிக்க விடப்படுகிறதில்லை. அவர்கள் குருக்களென்றல்லாமல், போதகர்களென்று சொல்லப்படுகிறார்கள். சுவர்க்கத்தின் குருத்துவம், பரம இராச்சியமாயிருப்பதினால், அவர்கள் குருக்கள் என்று சொல்லப்படுகிறதில்லை. ஏனென்றால், குருத்துவமென்பது, அந்த இராச்சியத்திலிருக்கிறவர்கள் இருக்கிற ஆண்டவரிடத்து அன்பின் நன்மையை அருத்தம் கொள்ளுகிறது. சுவர்க்கத்தின் இராஜரீகம் ஞானலோகமாயிருக்கிறது; ஏனென்றால், அந்த இராச்சியத்திலிருக்கிறவர்கள் இருக்கிற, நன்மையிலிருந்துவந்த உண்மையை, இராஜரீகம் என்பது அருத்தம் கொள்ளுகிறது.

**227.** தேவர்கள் பிரசங்கங்கள் திரட்டுகிற எல்லா கொள்கைகளும், வாழ்க்கையை நோக்கமாக கொள்ளுகிறது; அவைகளில் எதுவும் வாழ்க்கைக்கு சேராத விசுவாசத்தை அப்படி கொள்ளுகிறதில்லை. மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் கொள்கை, மத்தியிலுள்ள சுவர்க்கத்திலிருப்பதைவிட, அதிகமாய் ஞானத்தால் நிறைந்திருக்கிறது. மத்தியிலுள்ள சுவர்க்கத்தின் கொள்கை மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் கொள்கையைவிட அதிகமாய் விவேகத்தால் நிறைந்திருக்கிறது; ஏனென்றால், ஒவ்வொரு சுவர்க்கத்திலுமிருக்கும், தேவர்களின் உணர்ச்சிக்கு பொருந்த செய்யப்பட்டிருக்கிறது. எல்லா கொள்கைகளின் சத்தம் ஆண்டவரின் தெய்வீக மானிடத்தன்மையை ஒத்துக்கொள்ளுதலாயிருக்கிறது.

## XXVI

### சுவர்க்கத்தின் தேவர்கள் வல்லமை.

**228.** தேவர்களுக்கு வல்லமை இருக்கிறதென்பது, சூக்கும லோகத்தைப்பற்றியும், ஸ்தூல லோகத்திற்குள் செல்லும் அதன் உட்பெருக்கைப்பற்றியும், ஒன்றும் தெரியாதவர்களுக்கு, அறிந்து கொள்ளப்பட முடியாது. தேவர்கள் சூக்குமமானவர்கள் ஆனபடியினாலும், கண்களால்கூட பார்க்கக் கூடாதபடி, அவ்வளவு சுத்தமாகவும் உறமற்றவர்களாகவு மிருக்கிறபடியினாலும், அவர்களுக்கு வல்லமையிருக்க முடியாதென்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால், பொருள்களின் காரணங்களை அதிகமாய் அந்தரமாய் பார்க்கிறவர்கள், வேறுவிதமாய் நினைக்கிறார்கள். ஒரு மனிதனுக்கு இருக்கும் வல்லமை எல்லாம், அவனுடைய புத்தியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் வருகிறதென்று அவர்களுக்கு தெரியும்; ஏனென்றால், இவைகள் இல்லாமல், அவன் சரீரத்தின் ஒரு அணுவைகூட அசைக்கமுடியாது. புத்தியும் சித்தமும், சரீரத்தையும் அதன் அவயவங்களையும் தன் இஷ்டப்படி அசைக்கிற அவனுடைய சூக்கும மனிதனாயிருக்கின்றன; ஏனென்றால், அது நினைப்பதை, வாயும் நாவும் பேசுகின்றன, அது இச்சிப்பதை சரீரம் செய்கிறது; அது தன்னுடைய வல்லமையை இஷ்டப்படி கொடுக்கிறது. மனிதனுடைய சித்தமும் புத்தியும், தேவர்கள் மூலமாயும் அசரீரிகள் மூலமாயும், ஆண்டவரால் ஆளப்படுகின்றன; ஆகையினால் சரீரத்தின் எல்லா பொருள்களும்கூட ஆளப்படுகின்றன; ஏனென்றால், அவைகள் சித்தத்திலிருந்தும் புத்தியிலிருந்தும் வருகின்றன; நீர் நம்புகிறதாயிருந்தால், மனிதனானவன் சுவர்க்கத்தின் உட்பெருக்கில்லாமல் ஒரு அடிகூட நகரமுடியாது. விஷயம் இப்படி இருக்கிறதென்று, அதிக அனுபவத்தினால் எனக்கு காண்பிக்கப் பட்டது; என்னுடைய அடிகளையும், என்னுடைய செய்கைகளையும், என்னுடைய நாக்கையும், பேச்சையும், தங்கள் இஷ்டப்படி கட்டுப்படுத்தவும், இதுவும் என்னுடைய சித்தத்திற்குள்ளும் சிந்தனைக்குள்ளும் உட்பெருக்கினால் அப்படி செய்யவும், தேவர்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டது; அனுபவத்தில் நானே ஒன்றும் செய்யமுடியாதென்று கண்டேன். ஒவ்வொரு மனிதனும்

அப்படி ஆளப்படுகிறானென்றும், திருச்சபையின் கொள்கையிலிருந்தும் வேதத்திலிருந்தும் அதை அவன் தெரிந்துகொள்ளலாமென்றும், பின்னிட்டு அவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், கடவுளை, தன்னுடைய தேவர்களை அவனுக்கு வழிகாட்ட அனுப்பவும், அவனுடைய அடிகளுக்கு வழிகாட்டவும், அவனுக்கு கற்பிக்கவும், அவன் என்ன நினைக்க வேண்டுமென்றும் பேசவேண்டும் என்றும் தெருட்டவும், அதேவிதமான அநேக காரியங்களை செய்யவும் பிரார்த்திக்கிறான். ஆயினும், கொள்கையில்லாமல், மனிதன் தானே நினைக்கும்போது, வேறு விதமாய் சொல்லி நம்புகிறான். தேவர்களுக்கு மனிதர்கள்பேரில் என்ன வல்லமை இருக்கிறதென்பது தெரியப்பட, இவைகள் எல்லாம் சொல்லப்பட்டது.

**229.** ஞானலோகத்தில் தேவர்களின் வல்லமை, விஷயத்தில் நான் பார்த்ததை எல்லாவற்றையும் எடுத்துச் சொன்னால், அவைகள் நம்பிக்கைக்கு அதிகமாய் போய்விடும்படியாக, அவ்வளவு பெரியதாயிருக்கிறது. அங்கே ஏதாவது அவ்வளவு எதிர்ப்பதாயிருந்து, தெய்வீக ஒழுங்குக்கு விரோதமாயிருப்பதினால், நீக்கப்பட வேண்டியதாயிருந்தால், சித்தத்தின் ஓர் முயற்சியினாலும், ஒரு பார்வையினாலும் மாத்திரம் கீழே போட்டு கவிழ்த்துவிடுகிறார்கள். இவ்விதமாக, துஷ்டர்களால் அனுப்பிக்கப்பட்ட மலைகள், கீழே தள்ளப்பட்டு, அழிக்கப்படுவதையும், ஓர் பூமியின் அதிர்ச்சியினால்போல், ஒரு முடிவிலிருந்து மற்றதிற்கு சில சமயங்களில் அசைய செய்யப்படுவதையும் நான் பார்த்திருக்கிறேன். இவ்விதமாககூட, பாறைகள் அடிவரையில் அற பிளக்கப்பட்டு, அவைகள்பேரில் இருந்தவர்கள் விழுங்கப்படுவதையும் நான் பார்த்திருக்கிறேன். சில லட்சம் லட்சம் கணக்கான துஷ்ட பிசாசுகள், அவர்களால் கலைக்கப்பட்டு நரகத்தில் போடப்படுவதைகூட நான் பார்த்திருக்கிறேன். எண்கள் அவர்களுக்கு விரோதமாக பிரயோசனப்படுகிறதில்லை; சூழ்ச்சிகளும், தந்திரமும், சேர்க்கைகளும்கூட பயன்படுகிறதில்லை; அவர்கள் எல்லாவற்றையும் பார்த்து, ஒரு நொடி நேரத்தில் அவர்களை கலைத்துவிடுகிறார்கள். ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி பாபிலோனை அழித்த சரித்திரத்தில் அதிகம் பார்க்கப்படலாம். ஞானலோகத்தில் தேவர்களுக்கு இவ்வித வல்லமை உண்டு. அனுமதி கொடுக்கப்பட்டபோது ஸ்தூல உலகத்தில்கூட அம்மாதிரி வல்லமை அவர்களுக்கு உண்டென்பது, முழு சேனைகளையும் அழித்துவிட்டார்க

ளென்பது போன்றதினாலும், எழுவதினாயிரம் ஜனங்கள் இறந்து போகும்படி ஒரு பெருவாரி நோயை உண்டாக்கினார்களென்பது போன்றதினாலும், வேதத்திலிருந்து விசதமாகிறது. இந்த தேவ தூதனைப்பற்றி நாம் படிக்கிறதாவது: "தேவதூதன் எருசலேமை அழிக்கத் தன் கையை அதன்மேல் நீட்டினபோது, கர்த்தர் அந்த தீங்குக்கு மனஸ்தாபப்பட்டு, ஜனங்களைச் சங்கரிக்கிற தூதனை நோக்கி: போதும், இப்போது உன் கையை நிறுத்து என்றார். ...........ஜனங்களை வதைத்த தேவதூதனை தாவீது பார்த்தார்." (உ. சாமு. xxiv. 15, 16, 17); இன்னும் இதர வாக்கியங்களும் இருக்கின்றன. அவ்வித வல்லமை தேவர்களுக்கு இருப்பதினால், அவர்கள் வல்லமைகள் என்று சொல்லப்படுகிறார்கள்; தாவீதில் சொல்லப்படுவதாவது: "பலத்த சவுரியவான்களாகிய அவருடைய தூதர்களே, கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்" (சங்கீ. c. iii. 20).

**230**. ஆயினும், தேவர்களுக்கு தங்களிடமேயிருந்து யாதொரு வல்லமையும் இல்லையென்றும், ஆனால் அவர்களுடைய எல்லா வல்லமையும் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், இதை அவர்கள் ஒத்துக்கொள்ளுகிறவரையில்மட்டும் அவர்கள் வல்லமைகளாயிருக்கிறார்களென்றும் தெரிந்திருக்கப்பட வேண்டும். எவனாவது ஒரு தேவன் தன்னிடமே யிருந்து தனக்கு வல்லமையிருக்கிறதாக நினைத்தால், அவன் ஒரு துஷ்ட அசரீரியைக்கூட எதிர்க்கமுடியாதபடி, அவன் உடனே அவ்வளவு பலஈனமுள்ளவனாய்விடுகிறான்; ஆகையினால், தேவர்கள் தங்களுக்கே யாதொரு தகைமையும் ஆரோபிக்காமல், அதை எல்லாம் ஆண்டவருக்கு ஆரோபித்து, தாங்கள் செய்கிற எதற்கும் வரும் எல்லா புகழ்ச்சியையும் மகிமையையும் வெறுப்பில் வைக்கிறார்கள்.

**231**. ஆண்டவரிடமிருந்து புறப்படும் தெய்வீக உண்மை, சுவர்க்கங்களில் எல்லா வல்லமையையும் உடைத்தாயிருக்கிறது; ஏனென்றால், சுவர்க்கத்திலிருக்கும் ஆண்டவர், தெய்வீக நன்மையுடன் சேர்க்கப்பட்ட தெய்வீக உண்மையாயிருக்கிறார் (நெ. 126 முதல் 140 வரையில் பார்க்கவும்); தேவர்கள் அதைப் பெற்றுக் கொள்கிற அளவு வல்லமைகளாயிருக்கிறார்கள். மேலும், ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த உண்மையாகவும், தன்னுடைய சொந்த நன்மையாகவும் கூட யிருக்கிறான்; ஏனென்றால், ஒவ்வொருவனும் அவனுடைய புத்தியும் சித்தமும் இருக்கிறபடி இருக்கிறான்; புத்தி

யானது உண்மையைச் சேர்ந்தது; ஏனென்றால், அதைச் சேர்ந்ததெல்லாம் உண்மைகளிலிருந்து வருகிறது, சித்தமானது நன்மையைச் சேர்ந்தது; ஏனென்றால், அதைச் சேர்ந்ததெல்லாம் நன்மைகளிலிருந்து வருகிறது: ஏனென்றால், ஒரு மனிதன் அறிந்துக்கொள்வதை எதையும் உண்மை என்கிறான்; தான் இச்சிப்பது எதையும் நன்மை என்கிறான். இவ்விதமாகத்தான், ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த உண்மையாகவும் தன்னுடைய சொந்த நன்மையாகவுமிருக்கிறான். ஆகையினால், ஒரு தேவன் தேவத்துவத்திலிருந்து உண்மையாகவும், தேவத்துவத்திலிருந்து நன்மையாகவும் இருக்கிற அளவு, அவன் ஒரு வல்லமையாயிருக்கிறான்; ஏனென்றால், அவ்வளவு தூரம் ஆண்டவர் அவனுடன் இருக்கிறார்; உலகத்தில்போல சுவர்க்கத்திலும் இடைவிடாத விகர்ப்பங்கள் இருக்கிறதின் நிமித்தம், (செ. 20 பார்க்கவும்) எவனும் நன்மையிலும் உண்மையில் மற்றவனைப்போல முழுமையும் ஒருமாதிரி இல்லாதபடியினால், ஒரு தேவனுக்கு மற்றவனைப்போல ஒரே சக்தியில்லை. மகா மனிதனில் அல்லது சுவர்க்கத்தில் புயங்களாக அமைகிறவர்கள் மிகவும் பெரிய வல்லமையில் இருக்கிறார்கள்; ஏனென்றால், அங்கே இருக்கப்பட்டவர்கள் மற்றவர்களைவிட அதிகமாய் உண்மைகளிலிருக்கிறார்கள்; முழு சுவர்க்கத்திலிருந்துவரும் நன்மை அவர்களுடைய உண்மைகளில் பாய்கின்றன. முழு மனிதனுடைய சக்திகூட புயங்களுக்கு தானே மாற்றிக்கொள்ளுகிறது; அவைகளால், முழு சரீரமும் தன்னுடைய சக்திகளை அப்பியாசிக்கிறது; அதனால்தான் புயங்களும் கைகளும் வேதத்தில் வல்லமையைக் காண்பிக்கின்றன. சுவர்க்கத்தில் சில வேளைகளில், பூமியின்பேரில் உள்ள பாறையாக இருந்தபோதிலும், தனக்கு எதிரில் வரும் எதையும் துண்டுகளாக உடைக்க சக்தியுள்ளதாயிருக்கும்படியாக, இந்த மூலத்திலிருந்து ஒரு நிருவாணமாக புயம் தோன்றுகிறது. ஒரு சமயத்தில்கூட அது என் பக்கம் ஏவப்பட்டது; அது என்னுடைய எலும்புகளை தூள் தூளாக நசிக்க சக்தியுடையதாயிருக்குமென்று நான் அறிந்துகொண்டேன்.

**232.** ஆண்டவரிடமிருந்து வரும் தெய்வீக உண்மைக்கு எல்லா சக்தியும் இருக்கிறதென்பதும், ஆண்டவரிடமிருந்து தெய்வீக உண்மையை பெற்றுக்கொள்ளுகிற அளவு, தேவர்களுக்கு

சக்தி உண்டென்பதும், மேலே (நெ. 137-ல்) பார்க்கலாம். ஆனால் உண்மைகளுக்கு, நன்மையிலிருந்து எல்லா சக்தியும் வருகிறபடியினாலும், நன்மையில்லாமல் அது ஒன்றும் அவைகளுக்கு இல்லாதபடியினாலும், தேவர்கள் தாங்கள் தெய்வீக நன்மையை அடைகிற அளவு மட்டும் தெய்வீக உண்மையை யடைகிறார்கள். அதேமாதிரிகூட, நன்மைக்கு உண்மைகள் மூலமாய் எல்லா சக்தியும் உண்டு; உண்மைகள் இல்லாமல் அதை அடைகிறதில்லை. இந்த இரண்டின் சேர்க்கையினால் சக்தி உண்டாகிறது. விசுவாசம் விஷயத்திலும், அன்பு விஷயத்திலும் அதே மாதிரிதான்; ஏனென்றால், நீர் உண்மையைப் பற்றியாவது அல்லது விசுவாசத்தைப் பற்றியாவது, எதைப்பற்றி பேசினாலும் ஒன்றே தான்; ஏனென்றால், விசுவாசத்தைச் சேர்ந்ததெல்லாம் உண்மையாயிருக்கிறது; நீர் நன்மையைப் பற்றியாவது, அன்பைப் பற்றியாவது எதைப்பற்றி பேசினாலும், அன்பைக் குறித்ததெல்லாம் நன்மையாயிருப்பதினால், ஒன்றேயாகிறது. நன்மையிலிருந்து உண்மைகள் மூலமாய் தேவர்களுக்கு வரும் பெருஞ் சக்தியானது, ஒரு துஷ்ட பிசாசு தேவர்களால் பார்க்கப்பட்டால்கூட, அது ஓர் மூர்ச்சியில் விழுந்து, ஒரு மனிதனைப்போல் தோன்றாமலிருந்து, இதுவும் அந்த தேவன் தன்னுடைய கண்களை வேறுபக்கம் திருப்புகிறவரையில், அப்படியே நிலைக்கிறது என்கிற இந்த சங்கதியிலிருந்து வெளிப்படையாகிறது. தேவர்களின் பார்வையானது சுவர்க்கத்தின் ஒளியிலிருந்து உண்டாகிறபடியினாலும், சுவர்க்கத்து ஒளி தெய்வீக உண்மையானபடியினாலும், இந்த பயன் தேவர்களின் பார்வையால் உண்டாக்கப்படுகிறது (மேலே நெ. 126 முதல் 132 வரையில் பார்க்கவும்). கண்கள்கூட, நன்மையிலிருந்து வருகிற உண்மைகளுக்கு அனுவயப்படுகின்றன.

**233.** நன்மையிலிருந்து வரும் உண்மைகளுக்கு எல்லா சக்தியுமிருக்கிறபடியினால், தீமையிலிருந்து வரும் பொய்களுக்கு எந்த சக்தியுமேகிடையாது. நரகத்திலிருப்பவர்களெல்லாம், தீமையிலிருந்து பொய்களில் இருக்கிறார்கள்; ஆகையினால், அவர்களுக்கு உண்மை விஷயத்திலும் நன்மை விஷயத்திலும் எதுவும் விரோதமாய் செய்ய சக்தி கிடையாது. ஆனால், தங்களுக்குள்ளேயே என்ன சக்தி அவர்களுக்கு உண்டென்பதையும், துஷ்ட பிசாசுகளுக்கு நரகத்தில் தள்ளப்படுவதற்குமுன் என்ன சக்தி யிருக்கிறதென்பதையும் பின்வரும் பக்கங்களில் காண்பிக்கப்படும்.

# XXVII

## தேவர்களின் பேச்சு

**234**. தேவர்கள் உலகத்தில் மனிதர்கள் செய்கிறதுபோல ஒருவரோடொருவர், இல் வாழ்விற்குறிய விஷயங்கள்போலவும், தேசாசார விஷயங்கள்போலவும், சன்மார்க்கமானதும் ஞான சம்பந்தமான விஷயங்கள்போலவும், பல விஷயங்களைப்பற்றியும் பேசுகிறார்கள். அவர்களுடைய பேச்சு அதிக அந்தரங்கமான சிந்தனையிலிருந்து வருகிறபடியினால், அது மனிதர்களுடைய பேச்சுகளைவிட அதிக விவேகமுள்ளதாயிருக்கிறது என்பதைவிட, வித்தியாசம் ஒன்றுமில்லை. எனக்கு அவர்கள் கூட்டத்திலிருக்கவும், சிநேகிதன் சிநேகிதனுடன் போலவும், சில வேளைகளில் அன்னியன் அன்னியனுடன் போலவும் அவர்களுடன் பேசவும், எனக்கு அடிக்கடி அருள் செய்யப்பட்டது; அக்காலங்களில், என்னுடைய நிலைமையானது, அவர்களுடையதைப்போ லிருந்தபடியினால், பூமியின்பேரில் இருக்கும் மனிதர்களுடன் பேசுவதைவிட, வேறுவிதமாய் எனக்கு தெரியவில்லை.

**235**. தேவர்கள் பேச்சு, மானிடபேச்சுகளைப்போல், திருத்தமான வார்த்தைகளால் அமைக்கப்பட்டு, சத்தத்தினால் சொல்லப்பட்டு, சத்தத்தினால் கேட்கப்படுகிறது; ஏனென்றால், தேவர்களுக்கு மனிதர்களைப்போல், வாயும், நாக்கும், காதுகளும், அதனுடன் அவர்களுடைய பேச்சின் சத்தமானது தெளிவாய் உச்சரிக்கப்படுகிற ஓர் ஆகாயமும் இருக்கின்றன; ஆனால், சூக்குமமாயிருக்கிற தேவர்களுக்கு பொருந்தச் செய்த, ஒரு சூக்கும ஆகாயமாய் அது இருக்கிறது. தேவர்களும் தங்களுடைய ஆகாயத்தில் மூச்சுவிட்டு மனிதர்கள் தங்களுடையதில் செய்கிறதுபோல, சுவாசத்தின் மூலமாய் தங்களுடைய வார்த்தைகளை பேசுகிறார்கள்.

**236**. முழு சுவர்க்கத்திலும், எல்லாருக்கும் ஓரே பாஷையிருக்கிறது; சமீபத்திலாவது தூரத்திலாவது இருக்கும் எந்த கூட்டத்திலிருந்து அவர்கள் வந்த போதிலும், ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ளுகிறார்கள்; இந்த பாஷை அங்கே கற்றுக்கொள்ளப்படுகிறதில்லை; ஆனால், அது அவர்களுடைய ஆசையிலேயும் சிந்தனையிலேயுமிருந்து வருகிறபடியினால், ஒவ்வொருவருக்கும் சுயமானதா

யிருக்கிறது. அவர்கள் பேச்சின் சத்தம் அவர்களுடைய ஆசைக்கு அன்னுவயப்படுகிறது. வார்த்தைகளாயிருக்கிற சத்தத்தின் உச்சரிப்பு, ஆசையிலிருந்து வருகிற அவர்களுடைய அபிப்பிராயங்களுடன் அன்னுவயப்படுகின்றன; அவர்களுடைய பாஷை இவ்விதமாக அன்னுவயப்படுகிறபடியினால், அதுவேகூட சூக்குமமானதாயிருக்கிறது; ஏனென்றால், அது கேட்கத்தக்க ஆசைபாகவும் பேசுகிற சிந்தனையாயுமிருக்கிறது. கருத்தாய் கவனிக்கிற ஒவ்வொருவனுக்கும் எல்லா சிந்தனையும் ஆசையினுடைய அன்பிலிருந்து வருகிறதென்றும், சிந்தனையின் அபிப்பிராயங்கள், பொதுவான ஆசை பகிர்ந்து கொடுக்கப்பட்ட பலவித உருவங்களாக இருக்கின்றனவென்றும், தெரிந்திருக்கலாம்; ஏனென்றால், எந்த சிந்தனையும் அல்லது அபிப்பிராயமும் ஆசை இல்லாமல் நிலைக்காது. சிந்தனையின் ஆன்மாவும் உயிரும் ஆசையிலிருந்து வருகிறது. இந்த காரணத்துக்காக தேவர்களுக்கு, மற்றவருடைய பேச்சிலிருந்தே மாத்திரம் அவர் யார் என்றும், தொனியிலிருந்து அவருடைய ஆசை என்னவென்றும், சத்தம் அல்லது வார்த்தைகளின் உச்சரிப்புகளிலிருந்து அவருடைய மனது என்னவென்றும் தெரியும். அதிக புத்தியுள்ள தேவர்களுக்கு, வார்த்தைகளின் ஒரு தனித்த வரிசையிலிருந்து, அரசாளும் ஆசை என்னவென்று தெரியும்; ஏனென்றால், இதை அவர்கள் முக்கியமாய் கவனிக்கிறார்கள். சந்தோஷத்திலிருக்கும்போது ஒருவித ஆசையும், விசனத்திலிருக்கும்போது வேறொன்றும், பொறுமையிலும் இரக்கத்திலும் இருக்கும்போது வேறொன்றும், நிஷ்கபடத்திலும் உண்மையிலுமிருக்கும்போது வேறொன்றும், அன்பிலும் தருமத்திலுமிருக்கும்போது வேறொன்றும், உற்சாகநிலைமையிலாவது கோபத்திலாவது இருக்கும்போது வேறொன்றும், கபடத்திலும் வஞ்சகத்திலுமிருக்கும்போது வேறொன்றும், கௌரவத்தையும் மகிமையையும் தேடும்போது வேறொன்றும், இன்னன, ஒவ்வொருவனும் நானாவித ஆசைகளை உடைத்தாயிருக்கிறானென்று தெரிந்திருக்கிறது. ஆனால், அரசாளும் ஆசை அல்லது அன்பு இவைகள் எல்லாவற்றிலுமிருக்கின்றன; இந்த காரணத்துக்காக, அதிக புத்தியுள்ள தேவர்கள், அந்த அன்பை உணருகிறதின் நிமித்தம், பேச்சிலிருந்து மற்றவரின் நிலைமையை அறிந்துகொள்ளுகிறார்கள். இதை எனக்கு அதிக அனுபவத்திலிருந்து தெரிந்துக்கொள்ள அருள் செய்யப்பட்டது.

ஒருவன் பேசுவதை கேட்டமாத்திரத்திலேயே மற்றவனுடைய வாழ்க்கையின் குணத்தை தேவர்கள் வெளிப்படுத்துவதை நான் கேட்டிருக்கிறேன். மற்றவனுடைய சிந்தனையின் எந்த அபிப்பிராயங்களிலிருந்தும், அவன் வாழ்க்கையின் எல்லா சங்கதிகளேயும், தாங்கள் தெரிந்து கொள்ளக் கூடுமென்றுகூட அவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், இந்த அபிப்பிராயங்களிலிருந்து, எல்லா விஷயங்களும் தங்கள் ஒழுங்கிலிருக்கிற அவனுடைய அராசாளும் அன்பு அவர்களுக்கு தெரியும். மனிதனுடைய வாழ்வு புத்தகம் வேறொன்றுமில்லை என்றுகூட அவர்களுக்கு தெரியும்.

**237**. தேவர்கள் பாஷைக்கு ஒரு குறிப்பான பிரியத்தினுடைய சத்தங்களாயிருக்கிற சில வார்த்தைகள் தவிர, மானிட பாஷைகளுடன் பொதுவானது ஒன்றுமில்லை; என்றாலும், இது வார்த்தைகளைப் பற்றியே அல்லாமல், அவைகளின் சத்தங்கள் விஷயத்தில் உண்மையாயிருக்கிறது: இந்த விஷயத்தைப்பற்றி பின் வருவதில் சிலது சொல்லப்படும். தேவர்கள் பாஷைக்கும் மானிட பாஷைகளுக்கும் பொதுவானது ஒன்றுமில்லை என்பது, தேவர்கள் மானிட பாஷையின் ஒரு வார்த்தையையும்கூட உச்சரிக்க சக்தியில்லாதவர்களாயிருக்கிறார்களென்பதிலிருந்து விசதமாகிறது. இது முயற்சி செய்யப்பட்டது. ஆனால், அவர்கள் அப்படிசெய்ய முடியவில்லை; ஏனென்றால், அவர்கள், தங்கள் பிரியங்களுடன் முழுமையும் ஒத்துப்போகிறவைகள் தவிர, வேறு எதையும் உச்சரிக்கமுடியாது. தங்கள் ஆசைகளுடன் ஒத்துப் போகாதது, அவர்கள் உயிருக்கே வெறுப்பானதாயிருக்கிறது; ஏனென்றால், உயிரானது ஆசையிலிருந்து வருகிறது, அவர்கள் பேச்சு அவர்கள் உயிரிலிருந்து வருகிறது. நம்முடைய பூமியின் பேரில் இருக்கும் மனிதர்களுடைய முதல் பாஷையானது, அவர்களுக்கு சுவர்க்கத்திலிருந்து வந்தபடியினால், தேவர்கள் பாஷையுடன் ஒத்துப்போனது என்றும், ஹீப்ரு பாஷையானது அதனுடன் சில விஷயங்களில் ஒத்துப் போகிறதென்றும் எனக்கு சொல்லப்பட்டது.

**238**. தேவர்களின் பேச்சானது, அன்பிலிருந்துவந்த அவர்களுடைய ஆசையுடன் அன்னுவயப்படுகிற படியாலும், சுவர்க்கத்தின் அன்பானது, ஆண்டவரிடத்து அன்பாகவும் அயலானிடத்து அன்பாகவும் இருக்கிறபடியினாலும் (மேலே நெ.

13 முதல் 19 வரையில் பார்க்கவும்), அவர்களுடைய பேச்சானது, காதுகளை மட்டுமல்லாமல், கேழ்க்கிறவர்களின் மனதினுடைய உள்ளானவைகளையும்கூட இயக்குகிறபடியினால், அது எவ்வளவு உசிதமானதாயும் இன்பமானதாயுமிருக்கிறதென்பது விசதமாகிறது. ஒரு தேவன் ஒரு சமயத்தில் ஒரு வன்நெஞ்சுள்ள ஆவியுடன் பேசினான். அது கடைசியில், தான் முன்னிட்டு எப்பொழுதும் அறிந்ததில்லை என்றும், அன்பே பேசிக்கொண்டிருந்தபடியினால், தடுக்கமுடியவில்லை என்றும் சொல்லிக்கொண்டு அது கண்ணீர் விடும்படியாக, அவன் பேச்சினால் அதற்கு பரிதாபமுண்டாயிற்று.

**239**. தேவர்களின் பேச்சானது அவர்களுடைய உள்ளான சிந்தனையிலிருந்து வருகிறபடியினால், அது ஞானத்தினால் முழுமையும்கூட நிறைந்திருக்கிறது; அவர்களுடைய உள்ளான சிந்தனையானது, அவர்களுடைய உள்ளான ஆசை அன்பாயிருப்பதினாலும், அவர்களுடைய பேச்சில் அவர்கள் அன்பும் ஞானமும் சேருகிறபடியினாலும், ஞானமாயிருக்கிறது. ஆகவே, மனிதன் ஓராயிரம் வார்த்தைகளால் விளக்க முடியாததை, அவர்கள் ஒரு வார்த்தையில் சொல்லக் கூடியதாக அவ்வளவு ஞானத்தினால் நிறைந்திருக்கிறது. அவர்களுடைய சிந்தனையின் கருத்துக்கள்கூட, மனிதன் நினைக்கக் கூடாததாயும், அதனால் கொஞ்சம்கூட உச்சரிக்கக் கூடாததாயுமிருக்கிற விஷயங்களை கிரகிக்கின்றன. இதனால்தான், சுவர்க்கத்தில், கேழ்க்கப்பட்டதும் பார்க்கப்பட்டதுமான விஷயங்கள் வாக்குக் கெட்டாததென்றும், காது எப்பொழுதும் கேட்காததும் கண் பார்க்காததுமான விதமாய் இருக்கின்றன வென்றும் சொல்லப்படுகின்றன. அது அப்படியிருக்கிறதென்று, அனுபவத்தினால் தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது. நான் சில வேளைகளில் தேவர்கள் இருக்கப்பட்ட நிலைமையில் விடப்பட்டேன்; அந்த நிலைமையில் நான் அவர்களுடன் பேசியிருக்கின்றேன்; அப்பொழுது நான் எல்லாம் தெரிந்துகொண்டேன்; ஆனால், என்னுடைய முந்திய நிலைமைக்கு, இவ்விதமாக மனிதனுக்கு தகுந்த ஸ்தூல சிந்தனைக்கு நான் கொண்டுவரப்பட்டு, நான் கேட்டவைகளை நினைவுகூர விரும்பியபோது, அப்படி செய்யமுடியவில்லை; ஏனென்றால், ஸ்தூல சிந்தனையின் அபிப்பிராயங்களுக்கு பொருந்தாததும், இவ்விதமாக, மானிட வார்த்தைகளாலே அல்லாமல்,

சுவர்க்கத்துக்கு அடுத்த வெளிச்சத்தின் சித்திர வர்ணங்களால் மாத்திரம் விளக்கக்கூடியதுமாகிய ஆயிரங்கள் கணக்கான விஷயங்கள் இருந்தன.

தங்களுடைய வார்த்தைகள் உண்டாகிற தேவர்களின் சிந்தனையுடைய அபிப்பிராயங்கள், அநேகமாதிரி சுவர்க்கத்து வெளிச்சத்தின் பேதங்களாயிருக்கின்றன; வார்த்தைகளின் சத்தம் புறப்படுகிற ஆசைகள், சுவர்க்கத்தின் சூட்டின் வேறுபாடுகளாயிருக்கின்றன; ஏனென்றால், சுவர்க்கத்தின் ஒளி, தெய்வீக உண்மையாக அல்லது ஞானமாக இருக்கிறது; சுவர்க்கத்து சூடு தெய்வீக நன்மை அல்லது அன்பாக இருக்கின்றது (மேலே ெந. 126 முதல் 140 வரையில் பார்க்கவும்); தேவர்கள் தெய்வீக அன்பிலிருந்து ஆசையையும், தெய்வீக ஞானத்திலிருந்து தங்களுடைய சிந்தனையையும் உடைத்தாயிருக்கிறார்கள்.

**240**. தேவர்களின் பேச்சானது அவர்களுடைய ஆசையிலிருந்து நேராய் புறப்படுகிறபடியினாலும், அவர்கள் சிந்தனையின் அபிப்பிராயங்கள், அவர்களுடைய பொதுவான ஆசை பகிர்ந்து கொடுக்கப்படுகிற பலவித உருவங்களாக இருக்கிறபடியினாலும் (மேலே ெந. 236 பார்க்கவும்), ஒரு மனிதன் அரைமணி நேரத்தில் வெளியாக்கக் கூடாததை தேவர்கள் ஒரு நொடி நேரத்தில் வெளியாக்கக் கூடும்; அதனுடன் எழுத்தில் அநேக பக்கங்களில் விளக்கப்பட்டதை அவர்கள் சில வார்த்தைகளில் சொல்லக்கூடும். அதிக அனுபவத்தினால் இதுகூட எனக்கு நிரூபிக்கப்பட்டது. அவர்களுடைய சிந்தனையின் அபிப்பிராயங்களும், அவர்களுடைய பேச்சின் வார்த்தைகளும், முதல் காரணத்தையும், காரியத்தையும்போல் ஒன்றாகிறது; ஏனென்றால், ஒரு காரணமாக, சிந்தனையின் அபிப்பிராயங்களில் இருக்கிறதை வார்த்தைகள் காரியத்தில் காண்பிக்கிறது; ஆகையினால், ஒவ்வொரு வார்த்தையும் அதற்குள் மிகவும் அநேக விஷயங்களை கொள்கிறது; மேலும், தேவர்களின் சிந்தனையின், இவ்விதமாக அவர்களின் பேச்சின் எல்லா விசேஷங்களும், பார்வைக்கு தெரிய காட்டப்பட்டால், தேவர்கள் ஞானத்திலிருந்து வந்த, தங்கள் ஒழுங்கில் கணக்கற்ற பொருள்கள் இருக்கிற மெல்லிய வெளியேபோகும் அலை அல்லது ஆகாயத்தைப்போல் தோன்றுகின்றன; இவைகள் மற்றவனுடைய சிந்தனையில் பிரவேசித்து, அவனுடைய ஆசைகளை அசைக்கின்றன. தேவனுகிலும் மனிதனுகிலும்

ஒவ்வொருவனுடைய சிந்தனையின் அபிப்பிராயங்களும், ஆண்டவருக்கு அருள் வந்தபோது சுவர்க்கத்தின் வெளிச்சத்தில் தெரிய காட்டப்படுகின்றன.

**241**. ஆண்டவரின் பரம இராச்சியத்தின் தேவர்கள் அவருடைய ஞான இராச்சியத்தின் தேவர்களைப்போல் பேசுகிறார்கள்; ஆனால், அவர்கள் அதிக உள்ளான சிந்தனையிலிருந்து பேசுகிறார்கள். பரம லோகத்து தேவர்கள், ஆண்டவரிடத்து அன்பின் நன்மையிலிருப்பதினால், அவர்கள் ஞானத்திலிருந்து பேசுகிறார்கள்; ஞான லோகத்து தேவர்கள், சத்தில் உண்மையாயிருக்கிற அயலானிடத்து தருமத்தின் நன்மையில் இருக்கிறபடியினால் (கெ. 215), அவர்கள் விவேகத்திலிருந்து பேசுகிறார்கள்; ஏனென்றால், ஞானம் நன்மையிலிருந்து வருகிறது, விவேகம் உண்மையிலிருந்து வருகிறது. இந்த காரணத்துக்காக, பரம லோகத்து தேவர்களின் பேச்சானது, ஒரு அமைதியான நீரோட்டத்தைப்போல் மெதுவாகவும், தொடர்ச்சியானதைப்போலவு மிருக்கிறது; ஆனால், ஞானலோகத்து தேவர்களின் பேச்சானது, கொஞ்சம் அதிர்கிறதாகவும், கூறு செய்யப்பட்டதாயுமிருக்கிறது. பரம லோகத்து தேவர்களின் பேச்சானது "ஊ" "ஓ" என்கிற உயிரெழுத்துகளின் தொனிகள் அதிகமாய் உடைத்தாயிருக்கிறது; ஞானலோகத்து தேவர்களின் பேச்சானது "ஈ" "இ" எழுத்துகளின் தொனிகளை அதிகமாய் உடைத்தாயிருக்கிறது; ஏனென்றால், உயிரெழுத்துகள் தொனிக்கு நிற்கின்றன, தொனியில் ஆசையிருக்கிறது. தேவர்களின் பேச்சினுடைய தொனி, ஆசைக்கு அன்னுவயப்படுகிறதென்றும், வார்த்தைகளாயிருக்கிற தொனியின் உச்சரிப்பு ஆசையிலிருந்து வருகிற சிந்தனையின் அபிப்பிராயங்களுடன் அன்னுவயப் படுகின்றன வென்றும் மேலே காண்பிக்கப் பட்டது (கெ. 236).

உயிரெழுத்துகள் ஒரு பாஷைக்கு பிரதானமானதாயில்லாமல், தொனிகள் மூலமாய் ஒவ்வொருவனுடைய நிலைமைக்கு தக்கபடி, வார்த்தைகளை பல ஆசைகளுக்கு உயர்த்த உதவுகிறதினால், ஹிபுரு பாஷையில் உயிரெழுத்துகள் சொல்லப்படுகிறதில்லை; மேலும் அவைகள் பலவிதமாய்கூட உச்சரிக்கப்படுகின்றன. ஒருவனுடைய தொனியிலிருந்து, ஆசை விஷயத்திலும் அன்பு விஷயத்திலும், தேவர்களுக்கு அவனுடைய குணம் தெரியும். பரம இராச்சியத்தின்

தேவர்கள் பேச்சில் கடினமான மெய்யெழுத்துகள் கிடையாது; அது ஒரு மெய்யெழுத்திலிருந்து, மற்றதற்கு உயிரெழுத்துடன் ஆரம்பிக்கிற ஒரு வார்த்தையை நடுவில் வைக்காவிட்டால் அரிதாய் செல்லுகிறது. இதனுல்தான், உயிரெழுத்தின் சத்தத்துடன் ஆரம்பித்து முடிவாகி, அந்த "மேலும்" என்கிற வார்த்தை மென்மையாயிருக்கிற ஹிபுரு பாஷையில் வேதத்தை வாசிக்கிறவர்களுக்கு விசதமாகிறபடி, வேதத்தில், அந்த வார்த்தையானது அடிக்கடி நடுவில் கொண்டுவரப்படுகிறது. ஹிபுரு பாஷையிலிருக்கும் வேதத்தில், உபயோகப்படுத்தப்பட்ட வார்த்தைகளிலேயே யிருந்து, பரத்துக்கு சேர்ந்ததா அல்லது ஞானத்துக்கு சேர்ந்ததா என்று அதாவது அது நன்மையை உட்படுத்துகிறதா அல்லது உண்மையை உட்படுத்துகிறதா என்பது கொஞ்சம் அளவு அறிந்துகொள்ளலாம். முன் கூறியவைகள், "ஊ", "ஓ" என்கிற சத்தங்கள் பெரிதாயும், "ஆ" சத்தம் கொஞ்சமாயும், பின் கூறியவைகள் "ஈ", "இ" சத்தங்களாலும் அமைக்கப்பட்டிருக்கின்றன. முக்கியமாய் தொனிகளிலேயே ஆசைகள் வெளியாகின்றபடியினுல், மானிட பேச்சில் சுவர்க்கம், கடவுள் போன்ற பெரிய விஷயங்கள் தர்க்கித்தறியப்படும்போது, "ஊ", "ஓ" என்கிற உயிரெழுத்துகளை உடைத்தாயிருக்கிறவார்த்தைகள் நல்லதென்று எடுத்துக்கொள்ளப்படுகின்றன; இராகங்கள் கூட, அவ்வித விஷயங்களில் உபயோகப்படுத்தப்படும்போது, அதே உயிரெழுத்துகளாக பெருக்கின்றன; ஆனுல், குறைவான விஷயங்கள் விஷயத்தில் அப்படி யாகிறதில்லை. இந்த வழிவகைகளால் சங்கீதசாஸ்திரம் பலவிதமான ஆசைகளைவிளக்க சக்தியுடையதாயிருக்கிறது.

**242.** தேவர்களுடைய பேச்சில், விவரிக்கப்பட முடியாத ஒரு இன்னிசையிருக்கிறது. இந்த இன்னிசையானது, பேச்சானது புறப்படுகிற சிந்தனைகளும் ஆசைகளும், சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி தாங்களே பொழிந்து பரவுகின்றன என்பதிலிருந்தும், சுவர்க்கத்தில் எல்லா சேர்க்கையும் போக்குவரவும், அந்த உருவத்திற்கு தக்கபடி இருக்கிற தென்பதிலிருந்தும், உண்டாகிறது. தேவர்கள் சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் என்பதும், அவர்களுடைய சிந்தனைகளும் ஆசைகளும் அதற்கு தக்கபடிபாய்கின்றன வென்பதும், மேலே பார்க்கப்படலாம் (நெ. 200 முதல் 212 வரையில்).

**243.** ஞானலோகத்தில் இருப்பதைப்போன்ற பேச்சு, ஒவ்வொரு மனிதனிலும், தன்னுடைய அந்தரங்கமான புத்திக் கடுத்த பாகத்தில் நடப்பட்டிருக்கிறது; ஆனால், மனிதனில் இது, தேவர்கள் விஷயத்தில்போல் ஆசையைப்போன்ற வார்த்தைகளில், விழாதபடியினால், மனிதனுக்கு தான் அதிலிருப்பதாக தெரியாது; என்றாலும், இந்த உண்மையிலிருந்துதான், மனிதன் இதர வாழ்க்கைக்கு வரும்போது, ஆவிகளுக்கும் தேவர்களுக்கும் உள்ள அதே பேச்சை உடைத்தாயிருக்கிறான்; மேலும், இவ்விதமாக, பயிற்சி இல்லாமலே பேச தெரிந்திருக்கிறான். ஆனால் இந்த விஷயத்தைப் பற்றி நாம் சீக்கிரமாய் சிலது கூறுவோம்.

**244.** சுவர்க்கத்திலிருக்கிறவர்கள் எல்லாருக்கும் மேலே கூறியபடி, ஒரே பேச்சு இருக்கிறது; ஆனால், அறிஞர்களின் பேச்சு மிக உள்ளானதாய், சிந்தனையின் அபிப்பிராயங்களுடையவும், ஆசையினுடையவும் விகற்பத்தினால் அதிகம் நிறைந்திருக்கிறதென்பதிலும், குறைவான அறிஞர்களின் பேச்சு புறம்பானதாயும், குறைவாய் நிறைந்திருக்கிறதென்பதிலும், பேதைமையானவர்களின் பேச்சு இன்னும் புறம்பானதாய், மனிதர்கள் ஒருவரோடொருவர் பேசுகிறதுபோலவே, அருத்தம் கொள்ளவேண்டியதாயிருக்கிற வார்த்தைகளால் அமைந்திருக்கிறதென்பதிலும், அது வேறுபடுகிறது. அபிப்பிராயங்களினால், வேறாக பிரிக்கப்பட்டு, தொனியிடத்தக்க ஏதோ ஒன்றில் முடிகிற முகத்தினால் பேசுகிற பேச்சுகூட இருக்கிறது; மறுபடியும், சுவர்க்கத்தின் பிரதிநிதிகள் அபிப்பிராயங்களுடன் கலக்கப்பட்டு, அபிப்பிராயங்களிலிருந்து பார்வைக்கு போகிற பேச்சுமிருக்கிறது; ஆசைகளுடன் அன்னுவயப்பட்டு, அவைகளின் வார்த்தைகளால் விளக்கப்படுகிறவைகள் போன்றவைகளை காண்பிக்கிற அபிநயங்களால் சொல்லப்படுகிற பேச்சுகூட இருக்கின்றது; ஆசைகளுடையவும் சிந்தனைகளுடையவும், பொதுவான நியமங்களால் காண்பிக்கப்படும் பேச்சும்கூட இருக்கிறது; இடிமுழக்கம்போன்ற பேச்சுமிருக்கிறது; வேறு விதமானவைகளுமிருக்கின்றன.

**245.** பொல்லாததும் நரகத்திற்கு அடுத்ததுமான பேய்களின் பேச்சு, ஆசைகளிலிருந்து வருகிறபடியினால், அது அதேமாதிரி ஸ்தூலமானதாயிருக்கிறது; ஆனால், அது தேவர்களுக்கு முழுமையும் வெறுப்பானதாயிருக்கிற பொல்லாத ஆசைகளிலிருந்தும்

அதனால் அசுத்தமான அபிப்பிராயங்களிலிருந்தும், வருகிறது ஆகையினால், நரகத்தின் பாஷையானது, சுவர்க்கத்தின் பாஷைக்கு எதிரிடையாயிருக்கிறது; துஷ்டர்கள் தேவர்கள் பாஷையை பொருக்கமாட்டார்கள், தேவர்களுக்கும் நரகத்துக்கடுத்த பேச்சை பொருக்கமுடியாது. நரகத்திற்கு அடுத்த பேச்சானது, தேவர்களுக்கு நாசித்துவாரங்களில் வீசும் ஒரு கெட்ட நாற்றத்தைப் போலிருக்கிறது. ஒளியுள்ள தேவர்களுடைய தோற்றத்தை எடுத்துக்கொள்ள சக்தியுள்ள வேஷதாரிகளின் பேச்சானது, வார்த்தைகள் விஷயத்தில் தேவர்களின் பேச்சைப்போலிருக்கிறது; ஆனால், ஆசைகள் விஷயத்திலும், அதிலிருந்துவரும் சிந்தனையின் அபிப்பிராயங்கள் விஷயத்திலும், அது நேராய் எதிரிடையாயிருக்கிறது. ஆதலால், அதனுடைய உள்ளான குணம், ஞானமுள்ள தேவர்களால் உணரப்பட்டபோது, பற்கடித்தல்போல் கேட்கப்பட்டு, அவர்களுக்கு திகில் உண்டாக்குகிறது.

## XXVIII

## மனிதனுடன் தேவர்கள் பேசும் பாஷை

**246**. மனிதனுடன் பேசுகிற தேவர்கள், தங்களுடைய சொந்த பாஷையிலும், மனிதனுக்கு தெரியாத எந்த பாஷையிலும் பேசாமல், அவனுடைய சொந்த பாஷையிலாவது அல்லது அவனுக்கு தெரிந்திருக்கிற வேறு எந்த பாஷையிலாவது பேசுகிறார்கள். தேவர்கள் மனிதனுடன் பேசும்போது, அவன் பக்கம் திரும்பி கொண்டு, அவனுடன் சேர்ந்துக்கொள்ளுகிறதினால், இது இப்படி இருக்கிறது; மனிதனுடன் தேவதூதனுடைய இந்த இணைவு இருவரையும் ஓரே சிந்தனையிலிருக்க செய்கிறது; மேலும், மனிதனுடைய சிந்தனையானது, அவனுடைய ஞாபகத்தை தழுவுகிறபடியினாலும், இது அவனுடைய பேச்சுக்கு மூலமாயிருக்கிறபடியினாலும், இருவருக்கும் ஓரே பாஷையிருக்கிறது. இதுவுமன்றி, ஒரு தேவதூதனாவது ஆவியாவது ஒரு மனிதனிடம்வந்து, அவன் பக்கம் திரும்புவதினால், அவனுடன் சேர்க்கப்பட்டபோது, அவனுடைய பாஷைகளுடன் சேர்த்து, மனிதனுக்கு தெரிந்ததெல்லாம் தன்னிடமே இருந்து தெரிந்துக்கொண்டதாக தவிர, வேறு விதமாய் அவனுக்கு ஒன்றும் தெரியாத அளவு, அவனுடைய எல்லா ஞாபகத்திற்குள்ளும் வருகிறது.

நான் தேவர்களுடன் இதைக் குறித்து பேசி, அந்த பாஷையில் பேசினவர்கள் அவர்களாய் அல்லாமல் நானாகயிருந்தபோதிலும், தோற்றம் அப்படியிருந்தபடியினால், அவர்கள் என்னுடன் என்னுடைய தாய்பாஷையில் பேசியதாக, ஒருவேளை நினைத்திருப்பார்களென்றும், தேவர்கள் மானிட பாஷையின் ஒரு வார்த்தையைக்கூட உச்சரிக்க முடியாதென்கிற உண்மையிலிருந்து, இது விசதமாகுமென்றும் (செ. 237), மானிடபாஷை ஸ்தூலமானதென்றும், அவர்கள் சூக்குமமானவர்களென்றும், சூக்குமமானவர்கள் ஸ்தூலமான எதையும் உச்சரிக்கமுடியாதென்றும் சொன்னேன். இதற்கு அவர்கள், தாங்கள் பேசுகிற மனிதனுடன் அவர்கள் இணைவு, அவனுடைய சூக்கும சிந்தனையுடன் இருப்பதாக தங்களுக்கு தெரியுமென்றும், ஆனால், அவனுடைய சூக்கும சிந்தனை அவனுடைய ஸ்தூல சிநதனைக்குள் பாய்ந்து அவனுடைய ஞாபகத்

தில் ஒட்டிக்கொள்ளுகிறபடியினால், மனிதனுடைய பாஷையும், அவனுடைய எல்லா அறிவும் தங்களுக்கு சொந்தமாக தோன்றுகிறதென்றும், அவ்வித சேர்க்கை, தோற்றப்படி மனிதனுக்குள் சுவர்க்கத்தின் சொரூபமாக இருக்கவேண்டுமென்பது, ஆண்டவருடைய ஏதேச்சையிலிருந்து விளைகின்றதென்றும், ஆனால் தேவர்களுடன் அவ்வித சேர்க்கை இல்லாமல், சுவர்க்கத்திலில்லாத ஆவிகளுடன் இருக்கும்படி, மனிதனுடைய நிலைமையானது இப்பொழுது பேதமாயிருக்கிறதென்றும் சொன்னார்கள். பேசுகிறவன் மனிதனென்று நம்பாமல், மனிதனுக்குள் தாங்களே பேசுகிறதாகவும், அதனுடன் மனிதனுக்கு தெரிந்திருப்பது அவனுக்கே தெரியாமல், தங்களுக்கே தெரியுமென்றும், இவ்விதமாக மனிதனுக்கு தெரிந்ததெல்லாம் தங்களிடமிருந்து வருகிறதாகவும், நம்பின ஆவிகளுடன் அதே விஷயத்தைப்பற்றி நான் பேசிகூட இருக்கிறேன். அது அப்படி இல்லையென்று அநேக நியாயங்களால் அவர்களுக்கு அறிவுறுத்த நான் முயற்சி செய்தேன். ஆனால், அது உபயோகமில்லாமல் போய்விட்டது. ஆவிகள் என்பதினாலும், தேவர்கள் என்பதினாலும் யார் கருதப்படுகின்றனரென்பது, ஆவிகள் உலகத்தைப்பற்றி பேச வரும்போது பின்வரும் பக்கங்களில் விவரிக்கப்படும்.

**247**. மனிதனுக்கு சேர்ந்த ஒவ்வொன்றும் தங்களுக்கு சொந்தமானதென்று, தெரியாமலிருக்கும்படி, தேவர்களும் ஆவிகளும் அவ்வளவு நெருக்கமாய் ஏன் சேருகிறார்களென்பதற்கு வேறு ஒரு காரணமிருக்கிறது, அதாவது, மனிதனுக்குள்ளிருக்கும் சூக்கும உலகத்திற்கும் ஸ்தூல உலகத்திற்கும் உள்ள சேர்க்கை, அந்த இரண்டும் தோற்றத்திற்கு ஒன்றாயிருக்கிறதுபோல இருக்கிறது என்பதேயாகும்; ஆனால் மனிதனானவன் சுவர்க்கத்திலிருந்து தானே பிரிந்துகொண்டபடியினால், ஒவ்வொருவனிடமும் தேவர்களும் ஆவிகளுமிருக்க வேண்டுமென்றும், மனிதன் அவர்கள் மூலமாய் அவரால் ஆளப்படவேண்டுமென்றும், ஆண்டவரால் முன்னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது; அதனால்தான் அவர்களுக்கு அவ்வித நெருங்கிய சேர்க்கை யிருக்கிறது. மனிதன் தானே பிரிந்துகொள்ளாதிருந்தால், விஷயம் வேறு விதமாய் இருந்திருக்கும்; ஏனென்றால் அப்பொழுது அவன் ஆவிகளும் தேவர்களும் அவனுடன் சேர்க்கப்படாமல், ஆண்டவரிடமிருந்து வரும் சுவர்க்கத்தின் பொதுவான உட்பெருக்கிலிருந்து ஆளப்படுவான்.

ஆனால், மனிதனுடன் சுவர்க்கத்தின் சேர்க்கையைப்பற்றி நாம் பேச வரும்போது இந்த விஷயமானது பிரத்தியேகமாய் சொல்லப்படும்.

**248.** மனிதனுடன் பேசும் ஒரு தேவன் அல்லது ஆவியின் பேச்சு, மனிதன் மனிதனுடன்பேசும் பேச்சைப்போல், பெரும் தொனியாய் கேட்கப்பட்டாலும், பக்கத்தில் நிற்பவர்களால் அல்லாமல் அவனால்மட்டும் கேட்கப்படுகிறது. ஒரு தேவன் அல்லது ஆவியின் பேச்சானது மனிதனுடைய சிந்தனையில் முதலில் பாய்ந்து உள்ளான வழியினால் கேட்கும் அங்கத்தில் சென்று, இவ்விதமாக உள்ளிருந்தே, அவனை அசைக்கிறதென்பதும், ஆனால் மனிதனுடன் பேசும் மனிதன் பேச்சு முதலில் காற்றில் பாய்ந்து புறம்பான வழியில் கேட்கும் அங்கத்தில் சென்று, இவ்விதமே வெளியிலிருந்தே அசைக்கிறது என்பதும் காரணமாயிருக்கிறது. ஆதலால், மனிதனுடன் பேசும் ஒரு தேவன் அல்லது ஆவியின் பேச்சு, அவனுக்குள்ளேயே கேட்கப்படுகிறது; கேட்கும் அங்கங்களை அது சமமாய் இயக்குகிறபடியினால், அது சமமாய்கூட கேட்கத்தக்கதாயிருக்கிறது. ஒரு தேவனுடைய அல்லது ஆவியினுடைய பேச்சானது உள்ளிலிருந்து காதுக்குள்கூட பாய்கிறது என்பது, மனிதனை நாக்கின் மூலமாய் பேச்சின் சத்தத்தை வார்த்தைகளாக செய்யும்போது, உண்டாகிற எவ்வித சலனத்துடனு மல்லாமல், அது அதிர்ச்சியை உண்டாக்கி, நாக்கில்கூட பாய்கிறது என்கிற உண்மையிலிருந்து எனக்கு தெளிவாக்கப்பட்டது.

**249.** அபாயத்திற்கு இடமாயிருப்பதினால், இக்காலத்தில் ஆவிகளுடன் பேசுதல் அரிதாய் விடப்படுகிறது; ஏனென்றால், அப்பொழுது, ஆவிகளுக்கு மனிதனுடன் இருப்பதாக தெரியும், அல்லாவிட்டால் அது அவர்களுக்கு தெரியாது; மேலும், துஷ்ட ஆவிகள் பிராணபாயமான வெறுப்பில் மனிதனை வைத்து, அவனை சரீரத்துடன் ஆன்மாவையும் அழிப்பதைவிட அதிகமாய் வேறொன்றும் விரும்பாதபடிக்கு, அவ்விதமாயிருக்கின்றன. ஸ்தூல மனிதனுக்கு தகுந்த சந்தோஷங்களை தங்களிடமிருந்து நீக்கும்படியாக, வீணெண்ணங்களை அதிகமாய் அனுபவித்தவர்கள் விஷயத்தில், இது உண்மையில் செய்யப்படுகிறது. தனித்த வாழ்வை நடத்துகிறவர்களில் சிலர்கூட, ஆவிகள் தங்களுடன் அபாயமில்லாமல் பேசுவதை அப்போதைக்கப்போது கேட்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு, தாங்கள் மனிதனுடன் இருப்பதாக தெரியாதபடிக்கு,

**250.** சுவர்க்கத்து தேவர்களுடன்பேசுதல், நன்மையிலிருந்து வந்த உண்மைகளிலிருக்கப்பட்டவர்களுக்கு மாத்திரமும், முக்கியமாய், ஆண்டவரையும், அவருடைய மானிடத்தன்மையிலிருக்கும் தேவத்துவத்தையும், ஒத்துக்கொள்ளப்பட்டவர்களுக்கும் அருள் செய்யப்படுகிறது; ஏனென்றால், சுவர்க்கங்கள் இருக்கப்பட்ட, உண்மை இதுதான். ஏனென்றால், மேலே காண்பிக்கப்பட்டபடி, ஆண்டவர் தான் சுவர்க்கத்தின் கடவுளாயிருக்கிறார் (செ. 2 முதல் 6 வரையில்): ஆண்டவரின் தேவத்துவம் சுவர்க்கத்தை உண்டாக்குகிறது (செ. 7 முதல் 12 வரையில்): சுவர்க்கத்தில் ஆண்டவரின் தேவத்துவம், அவரிடத்தும் அன்பு பாராட்டலும், அவரிடமிருந்து அயலானிடத்தும் தருமத்தை நீட்டலுமாயிருக்கிறது (செ. 13 முதல் 19 வரையில்). முழு சுவர்க்கமும், அதன் சம்பூரணத்தில் ஒரு மனிதனைப்போலிருக்கிறது; அதேமாதிரிதான் சுவர்க்கத்திலுள்ள ஒவ்வொரு கூட்டமுமிருக்கிறது; ஒவ்வொரு தேவனும் பரிபூரணமான மானிட உருவத்திலிருக்கிறான்; இதுவும் ஆண்டவருடைய தெய்வீக மானிடத்தன்மையிலிருந்து வருகிறது (செ. 59 முதல் 86 வரையில்). ஆகவே, சுவர்க்கத்தின் தேவர்களுடன் பேசுதல், ஆண்டவர்வரையில்கூட, தெய்வீக உண்மைகளால், உள்ளானவைகள் திறக்கப்பட்டவர்கள் தவிர மற்றவர்களுக்கு அருள் செய்யப்படுகிறதில்லை என்பது இதிலிருந்து விசதமாகிறது; ஏனென்றால், மனிதனுடன் இருக்கும் இந்த உண்மைகளில்தான் ஆண்டவர் பாய்கிறார். அப்படி ஆண்டவர் பாய்ந்தபோது, சுவர்க்கமும் உள்ளே பாய்கிறது. தெய்வீக உண்மைகள், மனிதனுடைய உள்ளானவைகளை திறக்கின்றன; ஏனென்றால் மனிதனானவன், உள்ளான மனிதன் சம்பந்தப்பட்ட வரையில், சுவர்க்கத்தின் ஒரு பிரதிரூபமாயிருக்கும்படியாகவும் புறம்பான மனிதன் சம்பந்தப்பட்டவரையில் உலகத்தின் பிரதிரூபமாயிருக்கும்படியாகவும் சிருஷ்டிக்கப்பட்டான் (செ. 57); உள்ளான மனிதன் ஆண்டவரிடமிருந்து புறப்படும், தெய்வீக உண்மையால் தவிர வேறுவிதத்தில் திறக்கப்படுகிறதில்லை; ஏனென்றால், அதுதான் சுவர்க்கத்தின் வெளிச்சமாகவும் சுவர்க்கத்தின் உயிராகவுமிருக்கிறது (செ. 126 முதல் 140 வரையில்).

**251.** மனிதனுடைய நெற்றியானது அன்பிற்கும், அவன் முகம் அவனுடைய எல்லா உள்ளானவைகளுக்கும் அனுவயப்படுகிறபடியினால், மனிதனுக்குள் ஆண்டவருடைய உட்பெருக்கே,

அவனுடைய நெற்றிக்குள்ளும் அதிலிருந்து முழு முகத்திற்குள்ளும் பாய்கிறது. மனிதனுக்குள் ஞான உலகத்தின் சம்பந்தமுள்ள தேவர்களின் உட்பெருக்கு, எல்லா திக்குகளிலுமிருந்து தலைக்குள்ளும், நெற்றியிலிருந்தும் கன்னப்பொறியிலிருந்தும், மூளை இருக்கப்பட்ட ஒவ்வொரு பாகத்திற்கும் செல்லுகிறது; ஏனென்றால், தலையின் அந்த பாகம் விவேகத்திற்கு அனுவயப்படுகிறது; ஆனால், பரம உலகத்து தேவர்களின் உட்பெருக்கு மூளை இருக்கப்பட்டதும், காதுகளை சுற்றி கழுத்துவரையில் உள்ள பிடர் தலை மண்டை என்று சொல்லப்பட்டதுமான தலையின் அந்த பாகத்திற்கும் பாய்கிறது. ஏனென்றால், அந்த பாகம் ஞானத்திற்கு அனுவயப்படுகிறது. மனிதர்களுடன் பேசும் தேவர்களின் எல்லா பேச்சும், இந்த வழிகளினால் அவர்களுடைய சிந்தனைகளில் பாய்கிறது; இந்த வழிவகையினால் என்னுடன் பேசிய தேவர்களின் குணத்தை நான் உணர்ந்தேன்.

**252.** சுவர்க்கத்து தேவர்களுடன் பேசுகிறவர்கள், சுவர்க்கத்திலிருக்கப்பட்ட பொருள்களைக்கூட பார்க்கிறார்கள்; ஏனென்றால், தங்களுடைய உள்ளானவைகள் இருக்கப்பட்ட சுவர்க்கத்தின் வெளிச்சத்தினால் அவர்கள் பார்க்கிறார்கள்; மேலும் தேவர்கள்கூட பூமியின்பேரில் இருக்கப்பட்ட பொருள்களை அவைகள் மூலமாய் பார்க்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் விஷயத்தில், சுவர்க்கம் உலகத்துடனும், உலகம் சுவர்க்கத்துடனும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், மேலே கூறியபடி (நெ. 246), தேவர்கள் மனிதன் பக்கம் திரும்பும்போது, அவனுடைய பேச்சைச் சேர்ந்ததுமட்டு மல்லாமல், அவனுடைய பார்வைக்கும் கேட்கைக்கும் சேர்ந்தவைகளோடு, மனிதனுக்கு சேர்ந்த பொருள்கள் தங்களுடைய சொந்தமென்பதைத் தவிர, வேறொன்றும் அறியாதபடி அவர்கள் அவனுடன் சேர்ந்துகொள்ளுகிறார்கள்; மனிதனோ தான் சம்பந்தப்பட்டவரையில், தேவர்கள் மூலமாய் தனக்குள்ளே பாயப்பட்டவைகள் தன்னுடையதென்பது தவிர, வேறொன்றும் அறிந்துகொள்ளுகிறதில்லை. இந்த பூமியின்பேரில் இருந்த மிகவும் பூர்வீக ஜனங்கள், சுவர்க்கத்தின் தேவர்களுடன் இவ்வித சேர்க்கையிலிருந்தார்கள். ஆகையினால், அவர்களுடைய யுகம் பொன்யுகம் என்று சொல்லப்பட்டது. அவர்கள் தெய்வத்தை மானிட உருவத்தில், இவ்விதமாக ஆண்டவரை ஒத்துக்கொண்டார்கள். ஆகையினால்

அவர்கள் சுவர்க்கத்தின் தேவர்களுடன் தங்கள் சினேகிதர்களுடன் போலவும், சுவர்க்கத்தின் தேவர்கள் அவர்களுடன் தங்கள் சினேகிதர்கள் போலவும் பேசினார்கள்; அவர்கள் விஷயத்தில் சுவர்க்கமும் உலகமும் ஒன்றாயிற்று. ஆனால், 'அந்த காலங்களுக்கு பின் மனிதனானவன், ஆண்டவரைவிட தன்னையேயும், சுவர்க்கத்தைவிட உலகத்தையும் அதிகமாய் நேசித்ததினால், படிப்படியாய் சுவர்க்கத்திலிருந்து தானே நீங்கிகொண்டான்; அதனால், அவன் சுவர்க்கத்தின் இன்பங்களிலிருந்து பிரிக்கப்பட்ட தன்னையே நேசித்தலுடையவும், உலக ஆசையினுடையவும் இன்பங்களை உணர ஆரம்பித்து, கடைசியில் வேறு இதர இன்பம் தெரியாதபடிக்கு அவ்வளவு தூரம் போய்விட்டான். சுவர்க்கத்திற்கு திறக்கப்பட்டிருந்த அவனுடைய உள்ளானவைகள், அப்பொழுது மூடப்பட்டு அவனுடைய புறம்பானவைகள் உலகத்திற்கு திறக்கப்பட்டது. இது இப்படி இருக்கும் காலத்தில், உலகத்திற்கு சம்பந்தப்பட்ட எல்லா பொருள்கள் விஷயத்திலும், மனிதனானவன் வெளிச்சத்திலும், ஆனால் சுவர்க்கத்தின் எல்லா பொருள்கள் விஷயத்திலும் தடித்த இருட்டிலும் இருக்கிறான்.

**253**. அந்த காலங்களுக்குபின், சுவர்க்கத்தின் தேவர்களுடன் எவனாவது பேசுதல் என்பது அறிதாய் போய்விட்டது; ஆனால், சிலர் சுவர்க்கத்திலில்லாத ஆவிகளுடன் பேசியிருக்கிறார்கள். மனிதனுடைய உள்ளானதும், புறம்பானதுமாகிய மனோ சக்திகள் தங்களுடைய பொதுவானமையமாக, ஆண்டவரிடமாவது, (நெ. 124) தன்னிடமேயாவது, இவ்விதமாக ஆண்டவருக்கு பின்புறமாவது திருப்பப்படக்கூடியதாக இருக்கிறபடியினால், இது இப்படியிருக்கிறது. ஆண்டவர் பக்கம் திருப்பப்பட்டவைகள் சுவர்க்கத்தின் பக்கம்கூட திருப்பப்படுகின்றன; ஆனால், தன் பக்கமே திருப்பப்பட்டவைகள் உலகத்தின் பக்கம்கூட திருப்பப்படுகின்றன; இவைகள் கஷ்டத்துடன் உயர்த்தப்படக்கூடும்; என்றாலும், அவைகள் ஆண்டவரால், வேதத்திலிருக்கும் உண்மைகளின் வழி வகைகளால் ஆசையை திருப்புவதினால் கூடியமட்டும் உயர்த்தப்படுகின்றன.

**254**. ஆண்டவர், வேதமானது கொடுக்கப்பட்ட தீர்க்கதரிசிகளுடன் பேசிய விதத்தைப்பற்றி எனக்கு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அவர், பூர்வீகர்களுடன், அவர்களுடைய உள்ளானவைகளுக்குள், உட்பெருக்கினால் பேசியபடி அவர்களுடன் பேசாமல், தன்

னுடைய தோற்றத்தில் அவர்களை அவர் நிரப்பி, இவ்விதமாக தீர்க்கதரிசிகளுக்கு ஆவிகள் கற்பித்த வார்த்தைகளால் ஞான அருட்சி எழுப்பிவிடப்பட்ட, அவர்களிடம் அனுப்பிய ஆவிகள் மூலமாக பேசினார்; இது உட்பெருக்கல்லாமல், கற்பித்தலாயிருந்தது. அந்த வார்த்தைகள் ஆண்டவரிடமிருந்து நேராய்வந்தபடியினால்,அவைகள் ஒவ்வொன்றும் தெய்வத்தினால் நிரப்பப்பட்டு, சுவர்க்கத்தின் தேவர்கள் சுவர்க்கத்துக்கு அடுத்ததும், ஞான சம்பந்தமானது மாகிய அருத்தத்திலும்,மனிதர்கள் ஸ்தூலஅருத்தத்தில் பார்க்கும் படியானதாக இருந்த ஒரு உள்ளான அருத்தத்தை கொண்டிருக் கிறது: இவ்விதமாக ஆண்டவர் வேதத்தின் மூலமாக சுவர்க்கத்தை யும் உலகத்தையும் சேர்த்திருக்கிறார். ஆவிகள்,காட்சியினால் ஆண்ட வரிடமிருந்து வந்த தெய்வத்தன்மையால், எப்படி நிரப்பப்படுகிற தென்பதுகூட காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆண்டவரிடமிருந்து வந்த தெய்வீக தன்மையால் நிறப்பப்பட்ட ஆவியானது, தான் ஆண்டவர் என்பதையும், பேசுகிறது தெய்வமென்பதையும் தவிர வேறொன்றையும் அறிந்து கொள்ளுகிறதில்லை; தான் பேசி முடிகிற வரையில் அது இப்படியே நினைக்கிறது; ஆனால் பின்னிட்டு, தான் ஒரு ஆவி என்றும், தன்னிடமே யிருந்தல்லாமல், ஆண்டவரிட மிருந்து தான் பேசியதாகவும், அந்த ஆவி உணர்ந்து ஒத்துக்கொள்ளு கிறது. தீர்க்கதரிசிகளுடன் பேசிய ஆவிகளின் நிலைமை இவ்விதமாக இருந்தபடியினால், ஏகோவா பேசினாரென்றுகூட அவர்களால் சொல்லப்படுகிறது. வேதத்தினுடைய தீர்க்கதரிசனத்துக்கு அடுத்த பாகங்களிலிருந்துமட்டு மல்லாமல், சரித்திர சம்பந்தமான பாகங் களிலிருந்துகூட விசதமாகிறபடி, ஆவிகள்கூட தாங்களே ஏகோவா என்று சொல்லிக்கொண்டன.

**255.** தேவர்களுடையவும் ஆவிகளுடையவும் சேர்க்கையின் சுபாவம் தெரிந்திருக்கும்படி, இது தெளிவிக்கப்பட்டுஅனுமானிக்கப் பட, குறிக்கப்படத்தக்க விஷயங்கள் சொல்லப்படலாம். தேவர் களும் ஆவிகளும் தாங்களே மனிதன் பக்கம் திரும்புகிறபோது, மனிதனுடைய பாஷை தங்களுடைய தென்பதையும், தங்களுக்கு இதர ஒன்றுமில்லை என்பதையும் தவிர, அவர்களுக்கு வேறு ஒன் றும் தெரியாது. தங்கள் ஞாபகத்திற்குக்கூட வராத தங்களுடைய சொந்த பாஷையில் அல்லாமல், அவர்கள் மனிதனுடைய பாஷை யில், அப்பொழுது இருக்கிறார்களென்பது காரணமாயிருக்கிறது;

ஆனால், அவர்கள் மனிதனைவிட்டு திரும்பின உடனே, அவர்கள் மறுபடியும் தங்கள் சொந்த தேவபாஷையிலும், ஞானசம்பந்தமான பாஷையிலும் திரும்பி, மனிதனுடைய பாஷை ஒன்றும் தெரியாமல் போய்விடுகிறார்கள். நான் தேவர்கள் கூட்டத்திலும், அவர்களுடன் ஒரே நிலைமையிலுமிருந்தபோது, நான் சம்பந்தப்பட்டவரையில் விஷயம் அம்மாதிரியே இருந்தது. அப்பொழுது, நான் அவர்களுடன் அவர்களுடைய பாஷையில் பேசினேன்; என் சொந்த பாஷையைப் பற்றி ஒன்றும் ஞாபகமில்லாமலும் தெரியாமலுமிருந்தேன்; ஆனால், அவர்களுடன் சேர்ந்திராமலிருந்த உடனே, நான் என்னுடைய சொந்த பாஷைக்கு வந்தேன். தேவர்களும் ஆவிகளும் தாங்களே மனிதன் பக்கம் திரும்புகிறபோது, அவைகள் மனிதனுடன் எவ்வளவு தூரத்திலிருந்தாலும், பேசக்கூடு மென்பதுகூட சொல்லத் தகும். அவர்கள் தூரத்திலிருந்தபோது சமீபத்திலிலிருந்ததுபோல பலத்த சத்தமாய்கூட, என்னுடன் பேசியிருக்கிறார்கள்; ஆனால், அவர்கள் மனிதனைவிட்டு திரும்பி ஒருவரோடொருவர் பேசுங் காலத்தில், தன் காதுக்கு சமீபத்திலிருந்தபோதிலுங்கூட, மனிதனுக்கு அவர்கள் சொல்வது ஒன்றுகூட கேட்கிறதில்லை. ஆகவே, சூக்ஷும லோகத்தில் எல்லா இணைவும் அவைகளே திரும்புகிறதற்கு தக்கபடி இருக்கிறதென்பது விசதமாகிறது. அநேகர் சேர்ந்து ஒரு மனிதனுடனும், மனிதன் அவர்களோடும் பேசக்கூடு மென்பதுகூட சொல்லப்படதகும்; ஏனென்றால், அவைகள், தாங்கள் பேச விரும்புகிற மனிதனிடம் ஏதோ ஒரு ஆவியை தங்களிடமிருந்தே அனுப்புகின்றன; அனுப்பப்பட்ட ஆவி, அவன் பக்கம்தானே திரும்பிக்கொள்ளுகிறது. அவைகளில், மற்றவைகள் தங்களுடைய ஆவியின் பக்கம் திரும்பி, இவ்விதமாக, தங்களுடைய சிந்தனைகளை ஒன்றாய் திரட்டுகின்றன, ஆவியானது அவைகளை உச்சரிக்கிறது அப்பொழுது, ஆவிக்கு, தான் தன்னிடமேயிருந்து பேசுகிறேன் என்பதல்லாமல் வேறு ஒன்றும் தெரிகிறதில்லை; அவைகளுக்கு தாங்கள் பேசிக்கொண்டிருக்கிறோ மென்பதைத்தவிர வேறொன்றும் தெரிகிறதில்லை. இவ்விதமாக ஒன்றுடன் அநேகத்தின் சேர்க்கை, தன்பக்கம் அவைகள் திரும்புவதினால் உண்டாக்கப்படுகிறது. ஆனால், பிரஜைகள் என்றுகூட சொல்லப்படுகிற இந்த உளவுபார்க்கிற ஆவிகளைப் பற்றியும், அவைகளில் மூலமாய் போக்குவரவைப் பற்றியும், பின் வரும் பக்கங்களில் அதிகம் சொல்லப்படும்.

**256**. ஒரு தேவன் அல்லது ஆவி, தன்னுடைய சொந்த ஞாபகத்திலிருந்தல்லாமல், மனிதனுடைய ஞாபகத்திலிருந்து மாத்திரம் பேசவிடப்படுகிறான்: ஏனென்றால், தேவர்களுக்கும் ஆவிகளுக்கும் மனிதர்களைப்போல ஞாபகசக்தியுண்டு. ஒரு ஆவியானது, ஒரு மனிதனிடம் தன் சொந்த ஞாபகத்திலிருந்து பேசினால், அப்பொழுது, தான் அப்பொழுது நினைத்த விஷயங்கள், ஆவிகளுடையதாயிருந்த போதிலும், தன்னுடைய சொந்தமானதாக தவிர மனிதனுக்கு வேறொன்றும் தெரியாது: அது, மனிதனானவன் எப்பொழுதும் கேட்காததும் பார்க்காததுமான ஒரு விஷயத்தை ஞாபகத்திற்கு கொண்டுவருவதுபோல இருக்கிறது. அது அப்படியிருக்கிறதென்று, அனுபவத்தில் தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டிருக்கிறது. இதிலிருந்து, பூர்வீகர்களில் சிலர், சில ஆயிரங்கள் கணக்கான வருஷங்களுக்குப்பின், தங்களுடைய முந்திய வாழ்க்கைக்கும், அதன் எல்லா செயல்களுக்கும் தாங்கள் திரும்பிவருவோமென்றும், அதனுடன் அவர்கள் அப்படி திரும்பினதாகவும் அபிப்பிராயம் கொண்டார்கள். சில சமயங்களில், தாங்கள் எப்பொழுதும் பார்க்காத அல்லது கேட்காத விஷயங்களைப்பற்றி, ஓர்வித ஞாபகம் அவர்களுக்கு வந்தபடியினால், இம்மாதிரி தீர்மானத்துக்கு வந்தார்கள். ஆவிகள் தங்களுடைய சொந்த ஞாபகத்திலிருந்து அவர்களுடைய சிந்தனையின் அபிப்பிராயங்களுக்குள் சென்றபடியினால், இது சேர்ந்தது.

**257**. இயற்கையான ஆவிகளென்றும் ஜடமான ஆவிகளென்றும் கூட ஆவிகள் இருக்கின்றன. இவைகள் ஒரு மனிதனிடம் வந்தபோது, மற்ற ஆவிகளைப்போல, அவனுடைய சிந்தனையுடன் தாங்களை சேர்த்துகொள்ளாமல், மனிதனுடைய எல்லாம் தங்களுடையதென்று நம்பி, அவனுடைய சரீரத்தில் பிரவேசித்து, அவனுடைய பஞ்சேந்திரியங்களை குடிகொண்டு, அவன் வாய்மூலமாய்பேசி, அவன் அவயவங்கள் மூலமாய் செயல்படுகின்றன. மனிதர்களைப் பிடித்துக்கொள்ளுகிற ஆவிகள் இவைகள்தான்; ஆனால், அவ்வித ஆவிகள், ஆண்டவரால் நரகத்திற்குள் போடப்பட்டு, இவ்விதமாக முழுமையும் நீக்கப்பட்டன; அதனால் அம்மாதிரி பேய் பிடித்துக்கொள்ளுதல் தற்காலத்தில் முடியாது.

# XXIX

## சுவர்க்கத்தில் பிரபந்தங்கள்.

**258.** தேவர்களுக்கு பாஷையிருக்கிறபடியினாலும், அவர்கள் பாஷை வார்த்தைகளின் பாஷையாயிருப்பதினாலும், அவர்களுக்கு பிரபந்தங்களும் உண்டு; அவர்கள் மனதில் இருக்கும் அபிப்பிராயங்களை பிரபந்தங்களாலும் பேச்சினாலும் வெளிப்படுத்துகிறார்கள். சில சமயங்களில், உலகத்திலிருக்கும் கையெழுத்து பிரதிகளைப்போல் எழுதப்பட்ட வார்த்தைகளில் குறிப்பெழுதப்பட்டும், மற்றவைகள் அச்சடிக்கப்பட்டும் உள்ள கடிதாசிகள் எனக்கு அனுப்பப்பட்டன. நான் அதேமாதிரி அவைகளை படிக்கச் சக்தியுள்ளவனாயிருந்தேன்; ஆனால், அவைகளிலிருந்து ஒன்று அல்லது இரண்டு எண்ணங்கள் தவிர, அதிகமாய் அடையவிடப்படவில்லை; மனிதனானவன், சுவர்க்கத்திலிருக்கும் பிரபந்தங்கள் மூலமாய் கற்பிக்கப்படுவது, தெய்வீக ஒழுங்குக்கு ஒத்திருக்காமல், வேதத்தின் மூலமாய் மாத்திரம், அவன் கற்பிக்கப்பட வேண்டுமென்பது, காரணமாயிருக்கிறது; ஏனென்றால், வேதத்தின் மூலமாய்மட்டும், உலகத்துடன் சுவர்க்கத்தினுடையவும், இவ்விதமாக மனிதனுடன் ஆண்டவருடையவும் போக்குவரவும் சேர்க்கையுமிருக்கிறது. சுவர்க்கத்தில் எழுதப்பட்ட கடிதாசிகள் தீர்க்கதரிசிகளால்கூட பார்க்கப்பட்டனவென்பது எசேக்கியலில் விசதமாகிறது:—"அப்பொழுது இதோ, என்னிடத்திற்கு நீட்டப்பட்ட ஒரு கையைக் கண்டேன்; அந்த கையிலே ஒரு புஸ்தகசுருள் இருந்தது. அதில் உள்ளும் புறமும் எழுதப்பட்டிருந்தது" (ii. 9, 10); அதேமாதிரி யோவானிலும் விசதமாகிறது:— "உள்ளும் புறம்பும் எழுதப்பட்டு, ஏழு முத்திரைகளால் முத்திரிக்கப்பட்டிருந்த ஒரு புஸ்தகத்தை சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிறவருடைய வலதுகரத்திலே கண்டேன்" (வெளி. v. 1).

**259.** சுவர்க்கத்தில் பிரபந்தங்கள் இருக்கிறது என்பது வேதத்தின்பொருட்டு ஆண்டவர் செய்த பூர்வோபாயம்; ஏனென்றால், ஆண்டவரால் கற்பிக்கப்பட்டபடியினால், மனிதர்களும் தேவர்களுமாகிய இருவகையாரும் பரலோக ஞானத்தை யடைகிற தெய்வீக உண்மையாக சத்தில் இது இருக்கிறது; ஆண்டவரால் கற்பிக்கப்பட்டது, எல்லா சுவர்க்கங்கள் மூலமாய் ஒழுங்கில் சென்று மனித

னுடன் முடிகிறது. இவ்விதமாக, அது தேவர்களின் ஞானத்திற்கும், மனிதர்களின் விவேகத்திற்கும், தக்கதாயிருக்கிறது; ஆகையினுல், தேவர்கள் வேதத்தை உடைத்தாயிருக்கிறுர்கள்; அதை அவர்கள் பூமியின்பேரில் மனிதர்கள் படிக்கிறதுபோல் படிக்கிறுர்கள். அவர்களுடைய கோட்பாடுகள்கூட அதிலிருந்து வருகிறது, மேலும் அதிலிருந்து அவர்கள் பிரசங்கம் செய்கிறுர்கள் (கெ. 221). அது அதே வேதந்தான், ஆனுல் நமக்கு சொல்லார்த்தமாக யிருக்கிற அதன் ஸ்தூலார்த்தம், சுவர்க்கத்தில் இல்லை; ஆனுல் அதன் உள்ளார்த்தமான ஞானர்த்தம் அங்கேயிருக்கிறது. இந்த அர்த்தம் என்னவென்பது வெளிப்படுத்தின விசேஷத்தில் கூறப்பட்டிருக்கும் வெள்ளை குதிரை எனும் சிறிய நூலில் காணலாம்.

**260**. ஹிருபு எழுத்துக்களில் சில எழுத்துகள் மாத்திரம் எழுதப்பட்ட ஒரு சிறு கடிதாசி சுவர்க்கத்திலிருந்து ஒரு காலத்தில் எனக்கு அனுப்பப்பட்டது; ஒவ்வொரு எழுத்தும் ஞான இரகசியங்களை உட்படுத்தினதாகவும், அந்த இரகசியங்கள் எழுத்துக்களின் வேற்றுமைகளிலும் வளைவுகளிலும், இவ்விதமாக சத்தத்திலும் அமைக்கப்பட்டிருந்ததாகவும் சொல்லப்பட்டது. இதிலிருந்து, ஆண்டவரின்பின் பின்வரும் வார்த்தைகளின் அருத்தம் எனக்கு தெளிவாயிருந்தது: "வானமும் பூமியும் ஒழிந்துபோனுலும், நியாய பிரமாணத்திலுள்ளதெல்லாம் நிறைவேறுமளவும், அதில் ஒரு சிறு எழுத்தாகிலும், ஒரு எழுத்தின் உறுப்பாகிலும், ஒழிந்துபோகாது என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்" (மத்தே. v. 18). ஒவ்வொரு உறுப்பு விஷயத்திலும் வேதமானது தெய்வீகமாயிருக்கிறதென்று, திருச்சபையில் தெரிந்திருக்கிறது; ஆனுல், ஒவ்வொரு உறுப்பிலும் தேவத்துவம் எங்கேயிருக்கிறதென்று, இன்னும் தெரிந்திருக்கப்படவில்லை. ஆகையினுல் இப்பொழுது சொல்லப்படவேண்டும்.

மிகவும் உள்ளான சுவர்க்கத்தில் எழுத்து, பலவித வேருக்கியதும், சுற்றி வளைக்கப்பட்டதுமான உருவங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது; அந்த வேற்றுமைகளும் வளைவுகளும், சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடியிருக்கின்றன. இவைகளினுல், தேவர்கள், தங்கள் ஞானத்தின் இரகசியங்களையும், அதனுடன், வார்த்தைகளினுல் தாங்கள் உச்சரிக்கமுடியாத அநேக இரகசியங்களையும் வெளிபடுத்துகிறுர்கள்; ஆச்சரியம் என்னவென்றுல், தேவர்களுக்கு

அந்த எழுத்து, பயிற்றப்படாமலும் ஒரு உபாத்தியாயன் இல்லாமலேயே தெரியும்; ஏனென்றால், அவர்கள் பேச்சைப்போல் அது அவைகளில் இயல்பாயிருக்கிறது (நெ. 236 பார்க்கவும்). இவ்விதமாக இந்த எழுத்தானது சுவர்க்கத்திற்கு அடுத்த எழுத்தாயிருக்கிறது. சிந்தனைகளுடையவும் ஆசைகளுடையவும் விரிவுகளெல்லாம், இவ்விதமாக தேவர்களின் விவேகத்தினுடையவும் ஞானத்தினுடையவும் எல்லா போக்குவரவும், சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடி புறப்படுகிறபடியினால் (நெ. 201), அது இயல்பாயிருக்கிறது; ஆகவே, அவர்களுடைய எழுத்து அந்த உருவத்தில் பாய்கிறது. இந்த பூமியின்பேரில் இருந்த மிகவும் பூர்வீக ஜனங்கள், எழுத்துகள் கண்டுபிடிக்கப்படுவதற்குமுன் அவ்வித எழுத்துகளை உடைத்தாயிருந்தார்களென்றும், அந்த எழுத்துக்கள் பூர்வீகக் காலத்தில் எல்லாம் வேறுபட்டும், அவைகளில் ஒன்றுகூட இக் காலத்தில்போல், வரிகளில் முடியாதிருந்த ஹிபுரு பாஷையின் எழுத்துகளுக்குள், அது மாற்றப்பட்டதென்றும் எனக்கு சொல்லப்பட்டது. இவ்விதமாகத்தான் வேதத்தில், ஒவ்வொரு குத்தினும், புள்ளியிலும் உறுப்புகளிலும்கூட, தெய்வீக விஷயங்களும் சுவர்க்கத்தின் இரகசியங்களுமிருக்கின்றன.

**261**. சுவர்க்கத்துக்கு அடுத்த உருவத்தினுடைய எழுத்துகளால் உண்டாக்கப்பட்ட இந்த பிரபந்தம், ஞானத்தில் தன் குடிகள் மற்றவர்களைவிட மேற்படுகிற மிகவும் உள்ளான சுவர்க்கத்தில் உபயோகத்திலிருக்கிறது. இந்த எழுத்துகளால், எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு தக்கபடி, சிந்தனைகள் ஒழுங்கில் பாய்ந்து தொடருகிற தங்களுடைய ஆசைகளை அவர்கள் வெளிபடுத்துகிறார்கள். ஆதலால், இந்த பிரபந்தங்கள், எந்த சிந்தனையும் இளைப்பிக்காத இரகசியங்களை அகப்படுத்துகின்றன. இந்த பிரபந்தங்களைப் பார்க்க எனக்கு உத்திரவு கொடுக்கப்பட்டது. ஆனால், இந்த பிரபந்தங்கள் தாழ்ந்த சுவர்க்கங்களில் இருக்கிறதில்லை. அங்கே எழுத்துகள், ஓரேவித எழுத்துகளை உடையதாய், உலகத்தில் உள்ள எழுத்துகளைப் போலிருக்கின்றன; என்றாலும், அவைகள் தேவர்கள் பாஷையில் எழுதப்பட்டிருப்பதினாலும், தேவர்கள் பாஷைக்கும் மானிட பாஷைக்கும் பொதுவானது ஒன்றுமில்லாதபடியினாலும், மனிதனால், அது அறிந்துகொள்ளப்படுகிறதில்லை (நெ. 237). ஏனென்றால், அவர்கள் உயிரெழுத்துகளால் ஆசைகளையும், மெய்

யெழுத்துகளால் ஆசைகளிலிருந்துவரும் சிந்தனையின் அபிப்பிராயங்களையும், இவைகளிலிருந்து உண்டாகும் வார்த்தைகளால், விஷயத்தின் அர்த்தத்தையும் வெளிப்படுத்துகிறார்கள் (செ. 236, 241): நான் பார்த்தும்கூட இருக்கும் இந்த பிரபந்தம், மனிதன் அநேக பக்கங்களில் விவரிக்கக் கூடியதைவிட அதிகமாய், சில வார்த்தைகளில் அகப்படுத்துகிறது. தாழ்ந்த சுவர்க்கங்களில் இவ்விதத்திலும், மிகவும் உள்ளான சுவர்க்கத்தில் சுவர்க்கத்துக்கு அடுத்த உருவங்களினாலும், வேதம் அவர்களுக்கு எழுதி வைக்கப்பட்டிருக்கிறது.

**262.** சுவர்க்கங்களில், பிரபந்தங்கள் அவர்களுடைய சிந்தனைகளிலேயேயிருந்து இயற்கையாய், பாய்கிறதென்பதும், இதுவும் சிந்தனையே தானே வெளிவந்ததுபோல, அவ்வளவு இலகுவாய் செல்லுகிறதென்பதும், அவர்கள் பேசும் வார்த்தைகளும் அவர்கள் எழுதும் வார்த்தைகளும், அவர்கள் சிந்தனையின் அபிப்பிராயங்களுடன் அன்னுவயப்படுகிறபடியினாலும், எல்லா அன்னுவயமும் இயற்கையானதாயும், தானாய் உண்டானதாயும் இருக்கிறபடியினாலும், கையானது எப்பொழுதும் சந்தேகப்படுகிறதில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. கையின் உதவியில்லாமல், சிந்தனைகளுடன் அன்னுவயங்களிலிருந்து மாத்திரம் இருக்கப்பட்ட எழுத்துகள் கூட சுவர்க்கங்களில் இருக்கின்றன; ஆனால் இவைகள் ஸ்திரமானதல்ல.

**263.** எழுத்துகளாலும் வார்த்தைகளாலும் உண்டாக்கப்பட்ட பிரபந்தங்களில்போல, ஒழுங்கிலும் வரிசையிலும் வைக்கப்பட்ட, எண்களால்மாத்திரம் உண்டாக்கப்பட்ட, சுவர்க்கத்திலிருந்து வந்த, பிரபந்தங்களைகூட நான் பார்த்திருக்கிறேன்; மேலும் இந்த எழுத்தானது மிகவும் உள்ளான சுவர்க்கத்திலிருந்து வருகிறதாகவும், அவர்களுடைய சுவர்க்கத்துக்கு அடுத்த எழுத்து (மேலே செ. 260, 261 சொல்லப்பட்ட), அதிலிருந்து சிந்தனையானது கீழே பாயும்போது, தாழ்ந்த சுவர்க்கத்து தேவர்களுக்கு எண்கள் மூலமாய் தெரிய காட்டப்படுகிறதாகவும், இந்த எண்ணிற்கடுத்த எழுத்து, அவைகளில் சிலது சிந்தனையால் கிரகிக்க முடியாததாயும், வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியாததாயு மிருக்கிற இரகசியங்களை, அம்மாதிரியே அகப்படுத்துகிறதாகவும், நான் கற்பிக்கப்பட்டிருக்கிறேன். எல்லா எண்களும், வார்த்தைகளைப்போல,

தங்கள் அன்னுவயத்திற்கு தக்கபடி ஒரு அன்னுவயத்தையும் அர்த்தத்தையும், எண்கள் பொதுவானவைகளையும், வார்த்தைகள் விசேஷங்களையும், அகப்படுத்துகின்றன என்கிறவித்தியாசத்துடன், உடைத்தாயிருக்கின்றன; ஒரு பொதுவானது கணக்கற்ற விசேஷங்களை அகப்படுத்துகிறபடியினால், எண்ணிற்கடுத்த அடுத்த பிரபந்தம், எழுத்துகளால் உண்டாக்கப்பட்ட பிரபந்தங்களைவிட அதிகமாக இரகசியங்களை அகப்படுத்துகின்றன. இவைகளிலிருந்து, வேதத்தில் எண்களும் வார்த்தைகளும் பொருள்களை கருதுகின்றன வென்று எனக்கு விசதமாயிற்று. 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 12 போன்ற தனித்த எண்கள் என்ன அருத்தம் கொள்ளுகிறதென்பதும், 20, 30, 50, 70, 100, 144, 1000, 10000, 12000, இவையும் மற்றவைகளையும்போன்ற கலப்புற்ற எண்கள் என்ன அருத்தம் கொள்ளுகிறதென்பதும், அவைகளைப்பற்றி சொல்லப்படும் தெய்வ லோக இரகசியங்கள் எனும் நூலில் பார்க்கப்படலாம். சுவர்க்கத்திலிருக்கும் அந்த எழுத்தில், எண்ணானது, அவைகளின் விசேடியங்கள்பேரில்போல், ஒரு வரிசையில் பின்தொடருகிறவைகள் சார்கிறதின்பேரில், அந்த எண் எப்பொழுதும் முதலில் வைக்கப்படுகிறது; அந்த எண்ணானது, சொல்லப்பட்ட விஷயத்திற்கு ஒரு அட்டவணைபோலிருக்கிறது; அந்த எண்ணிலிருந்து, குறிப்பிட்ட விஷயத்தை அநுசரிக்கிற எண்களின் தீர்மானம் ஏற்படுகிறது.

**264**. சுவர்க்கத்தைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்களும், புத்தி சம்பந்தமுள்ள மனதுகள்போல, தேவர்கள் பறக்கிற சுத்தமான வாயுசம்பந்தமான எதோ ஒன்றுபோல் தவிர, வேறு இதர அபிப்பிராயத்தை அதைப்பற்றி உடைத்தாயிருக்க இஷ்டமில்லாதவர்களும், கேட்கும் சக்தியும் பார்க்கும் சக்தியும் இல்லாதபடியினால், தேவர்களுக்கு பேச்சும் எழுத்தும் இருக்கிறதென்று, நினைக்க முடியாதவர்களாயிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் உள்ள ஒவ்வொன்றின் இருப்பையும் ஸ்தூலமானதில் வைக்கிறார்கள்; என்றாலும், சுவர்க்கத்திலுள்ள எழுத்துகள் உலகத்திலுள்ளவைகள்போல உண்மையான இருப்பை உடைத்தாயிருக்கின்றன; அங்கிருக்கும் தேவர்கள், உயிருக்கும் ஞானத்திற்கும் உபயோகமான ஒவ்வொன்றையும் உடைத்தாயிருக்கிறார்கள்.

# XXX

## சுவர்க்கத்தின் தேவர்களின் ஞானம்

**265.** தேவர்களின் ஞானத்தின் சுபாவம், ஒப்பிடக்கூடாதபடி, மானிட ஞானத்தைவிட அவ்வளவு மேற்பட்டிருப்பதினுலும், அப்படி மேற்பட்டிருப்பது யாதொன்றுமாக இல்லாதது போல தோன்றுகிறபடியினுலும், அது அரிதாய் கிரகிக்கப்படக் கூடும். மேலும், அதை விவரிப்பதில் தோன்றவேண்டிய சில உண்மைகள் இன்னும் தெரியாமலிருக்கிறது; அவைகள் தெரிந்துகொள்ளப்படுகிற வரையில், மனதில் சாயைகளாகயிருந்து, அது தானுக யிருப்பதை மறைக்கிறது. அப்படி இருந்தாலும், அவைகள் தெரிந்துக்கொள்ளக் கூடியவைகளாகவும், தெரிந்துக் கொள்ளப்பட்ட பிறகு, மனது அவைகள் விஷயத்தில் சந்தோஷப் படும் பட்சத்தில் கிரகிக்கப்படக் கூடியதாகவும் இருக்கின்றன; ஏனென்றுல், விருப்பமான அன்பிலிருந்து வருகிறபடியினுல், அது தன்னுடன் வெளிச்சத்தை கொண்டுபோகிறது; தெய்வத்திற்கும், பரலோக ஞானத்திற்கும் சேர்ந்தவைகளை நேசிக்கிறவர்கள்பேரில், சுவர்க்கத்திலிருந்து வெளிச்சம் பிரகாசித்து, அறிவை கொளுத்து கிறது.

**266.** தேவர்களின் ஞானத்தின் சுபாவம், அவர்கள் சுவர்க் கத்தின் வெளிச்சத்திலிருக்கிறுர்களென்பதிலிருந்து தீர்மானிக்கப் படலாம்; சுவர்க்கத்தின் வெளிச்சம், தன் சத்தில் தெய்வீக உண்மையாகவும், அல்லது தெய்வீக ஞானமாகவுமிருக்கிறது; இந்த வெளிச்சமானது மனதைச் சேர்ந்த அவர்களுடைய உட்பார்வை யையும் கண்களைச் சேர்ந்த புறப்பார்வையையும் ஓரேகாலத்தில் தெளிவிக்கிறது. சுவர்க்கத்தின் வெளிச்சம் தெய்வீக உண்மை அல்லது தெய்வீக ஞானமென்பது மேலே (நெ. 126 முதல் 133 வரையில்) பார்க்கப்படலாம்.

தேவர்கள் தன் சத்தில் தெய்வீக நன்மையாக அல்லது தெய் வீக அன்பாக இருக்கிற சுவர்க்கத்தின் சூட்டில்கூட இருக்கிறுர் கள்; அதிலிருந்து ஞானிகளாக அவர்களுக்கு ஒரு ஆசையும் விருப்பமுமிருக்கிறது. சுவர்க்கத்தின் சூடு தெய்வீக நன்மை அல்லது தெய்வீக அன்பு என்பது மேலே (நெ. 133 முதல் 140 வரையில்)

பார்க்கப்படலாம். தேவர்கள், ஞானங்களென்று சொல்லப்படும்படியாக, அவர்கள் ஞானத்திலிருக்கிறார்களென்பது, அவர்களுடைய எல்லா சிந்தனைகளும் ஆசைகளும், தெய்வீக ஞானத்தின் உருவமாயிருக்கிற சுவர்க்கத்திற்கு அடுத்த உருவத்திற்கு தக்கபடியாய் நின்றனவென்பதிலிருந்தும், ஞானத்தை அடைகிற அவர்களுடைய உள்ளானவைகள், அந்த உருவத்திற்கு தக்கபடி ஒழுங்குபடுத்தப் பட்டிருக்கின்றன என்பதிலிருந்தும், முடிவு செய்யப்படலாம். தேவர்களின் சிந்தனைகளும் ஆசைகளும், அதனால், அவர்கள் விவேகமும் ஞானமும்கூட, சுவர்க்கத்தின் உருவத்திற்கு தக்கபடியாய் நின்றனவென்பது, மேலே (செ. 201 முதல் 212 வரையில்) பார்க்கப்படலாம். தேவர்களுக்கு மிகவும் உயர்ந்த ஞானம் உண்டென்பது, அவர்களுடைய பேச்சானது ஞானபேச்சாயிருக்கிறதென்பதிலிருந்துகூட விசதமாகும்; ஏனென்றால், அது சிந்தனையிலிருந்து, இவ்விதமாக ஆசையிலிருந்து, தாமதமின்றியும் வலியவும் பாய்கின்றது; அதனால், அவர்களுடைய பேச்சானது, வெளி உருவத்தில் ஆசையிலிருந்துவந்த சிந்தனையாயிருக்கிறது; அதனால்தான், தெய்வீக உட்பெருக்கிலிருந்து, அவர்களை எதுவும் பிரிக்கிறதில்லை; பேசிக்கொண்டிருக்கும்போது மனிதன் விஷயத்தில்போல், வெளி விஷயங்கள் எதுவும், இதர சிந்தனைகளிலிருந்து அவர்களுடைய பேச்சில் கொண்டுவரப்படுகிறதில்லை. தேவர்களின் பேச்சானது அவர்களுடைய சிந்தனையினுடையவும் ஆசையினுடையவும் பேச்சாயிருக்கிறதென்பது (மேலே செ. 234 முதல் 245 வரையில்) பார்க்கப்படலாம்.

தேவர்களுக்கு அவ்வித ஞானமிருக்கிறதென்பது, அவர்கள் தங்கள் கண்கள் மூலமாக பார்க்கிறதும், ஐம்புலன்கள் மூலமாய் உணருகிறதுமாகிய, எல்லாம் அவர்களுடைய ஞானத்துடன் ஒத்துப்போகிறது என்கிற விஷயத்துடன் இசைந்துபோகிறது; ஏனென்றால், அவைகள் அதனுடைய அன்னுவயங்களாகவும், இவ்விதமாக உணரப்பட்ட பொருள்கள், தங்கள் ஞானத்தை உண்டாக்குகிற பொருள்களின் அறிகுறியான உருவங்களாயிருக்கின்றன. சுவர்க்கங்களில் பார்க்கப்படுகிற எல்லா பொருள்களும், தேவர்களின் உள்ளானவைகளுடன் அன்னுவயங்களாகவும், அவர்கள் ஞானத்தின் அறிகுறிகளாகவும், இருக்கின்றன என்பது, மேலே (செ. 170 முதல் 182) வரையில் பார்க்கப்படலாம்.

இதுவுமன்றி, தேவர்களின் சிந்தனைகள், மானிட சிந்தனைகள் போல, கால இடவரையிலிருந்து வரும் அபிப்பிராயங்களால் வரையறுக்கப்பட்டு, சுருக்கப்படுகிறதில்லை; ஏனென்றால், காலமும் இடமும் பிரகுருதிக்கு சேர்ந்தது; பிரகுருதிக்குசம்பந்தப்பட்டவைகள், சூக்கும பொருள்களிலிருந்து மனதை இழுத்து, ஞானப் பார்வையின் விரிவை நீக்கிவிடுகிறது. தேவர்களின் அபிப்பிராயங்கள், கால இடவரைக்குட்படாமல், இவ்விதமாக மானிட அபிப்பிராயங்களுடன் ஒப்பிடும்போது, எல்லையற்றதாய் இருக்கின்றன வென்பது மேலே (நெ. 162 முதல் 169 வரையிலும், 191 முதல் 199 வரையிலும்) பார்க்கப்படலாம்.

மறுபடியும், தேவர்களின் சிந்தனைகள் உலகப் பொருள்களுக்கும், ஸ்தூல பொருள்களுக்கும் கொண்டுவரப் படுகிறதுமில்லை; வாழ்க்கையின் குறைபாடுகளைக் குறித்த கவலைகளால் பின்னப்படுத்தப்படுகிறதுமில்லை; ஆகவே, அவர்கள், மனிதர்களின் சிந்தனைகள் உலகத்திலிருப்பதுபோல், ஞானனந்தத்திலிருந்து இவ்விதமானவைகளால், பிரிக்கப்படுகிறதில்லை; ஏனென்றால், எல்லா பொருள்களும் ஆண்டவரிடமிருந்து, அவர்களுக்கு இலவசமாக வருகின்றன. அவர்கள் இலவசமாய் உடுக்கப்படுகிறார்கள், அவர்கள் இலவசமாக ஊட்டப்படுகிறார்கள், இலவசமாய் வீடுகளையும் உடைத்தாயிருக்கிறார்கள் (நெ. 181, 190); மேலும், ஆண்டவரிடமிருந்து வரும் ஞானத்தை ஏற்றுக்கொள்ளுதற்கு தக்கபடி மகிழ்ச்சிகளையும் இன்பங்களையும் வரமாக அடைகிறார்கள். தேவர்களுக்கு இவ்வித உன்னதமான ஞானம் எங்கிருந்து வந்தது என்பது தெரியப்பட வேண்டுமென்று இவைகள் எல்லாம் சொல்லப்பட்டன.

**267.** தேவர்களின் உள்ளானவைகள் திறக்கப்பட்டிருப்பதினாலும், ஞானமானது, எல்லா குணசம்பத்துபோல உள் பக்கமாய், இவ்விதமாக உள்ளானவைகள் திறக்கப்படுகிற அளவு அதிகரிக்கிறபடியினாலும், அவர்கள் அவ்வித உயர்ந்த ஞானத்தை பெற்றுக்கொள்ள தகுந்தவர்களாயிருக்கிறார்கள். ஒவ்வொரு தேவனுக்கும், மூன்று சுவர்க்கங்களுக்கு அனுவயப்படுகிற உயிரின் மூன்று படிகள் உண்டு (நெ. 29 முதல் 40 வரையில் பார்க்கவும்). முதல் படி திறக்கப்பட்டிருக்கிறவர்கள், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; இரண்டாவது படி திறக்கப்பட்டவர்கள், இரண்டாவது அல்லது நடு சுவர்க்

கத்திலிருக்கிறார்கள்; மூன்றாவது படி திறக்கப்பட்டவர்கள், மூன்றாவது அல்லது மிகவும் உள்ளான சுவர்க்கத்திலிருக்கிறார்கள். சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்களின் ஞானம், இந்த படிகளுக்குத் தக்கபடி யிருக்கிறது; இதனால்தான் மிகவும் உள்ளான சுவர்க்கத்தின் தேவர்களின் ஞானம் நடு சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் ஞானத்தைவிட எல்லையின்றி மேற்பட்டும், அவர்கள் ஞானம் மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் ஞானத்தைவிட எல்லையின்றி மேற்பட்டுமிருக்கிறது (மேலே 209, 210-யும், படிகளின் சுபாவத்தைப்பற்றி நெ. 38-யும் பார்க்கவும்). அதிக உயர்ந்த படியிலிருக்கும் பொருள்கள் விசேஷமானவைகளானபடியினாலும், அதிக தாழ்ந்த படியிலிருப்பவைகள் பொதுவானவைகளானபடியினாலும், பொதுவானவைகள் விசேஷமானவைகளுக்கு கொள்களமாயிருப்பதினாலும், அவ்வித வித்தியாசங்களிருக்கின்றன. விசேஷமானவைகள் பொதுவானவைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஒன்றுக்கு ஆயிரங்கள் அல்லது பத்தாயிரங்கள்போல இருக்கின்றன; அதிக உயர்ந்த சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் ஞானமானது, அதிக தாழ்ந்ததை தேவர்களின் ஞானத்துடன் ஒப்பிடும்போது, அவ்விதமாகவே இருக்கிறது. அப்படி யிருந்தாலும், தாழ்ந்த தேவர்களின் ஞானம் அம்மாதிரியே மனிதனுடைய ஞானத்திற்கு மேற்பட்டிருக்கிறது; ஏனென்றால், மனிதன் சரீர முள்ளதிலும், அதைச் சேர்ந்த புலனுக்கடுத்த பொருள்களிலும் இருக்கிறான்; மனிதனுடைய சரீர சம்பந்தமான அறிவுக்கு சேர்ந்தவைகள் மிகவும் தாழ்ந்தபடியிலிருக்கின்றன. ஆதலால் ஐம்புலனுக்கடுத்த பொருள்களிலிருந்து நினைப்பவர்கள் அதாவது சிற்றின்ப சம்பந்தமான மனிதர்கள், என்ன ஞானத்தை உடைத்தாயிருக்கிறார்களென்பது, அதாவது அவர்கள் எந்த ஞானமுமல்லாமல், அறிவை மாத்திரம் உடைத்தாயிருக்கிறார்களென்பது, விசதமாகிறது. ஐம்புல அறிவுக்கு சேர்ந்த பொருள்களுக்குமேல், தங்கள் சிந்தனைகள் உயர்த்தப்பட்ட மனிதர்கள் விஷயத்தில், முக்கியமாய் தங்கள் உள்ளானவைகள் சுவர்க்கத்தின் வெளிச்சத்திற்குள்கூட திறக்கப்பட்டவர்கள் விஷயத்தில் அது வேறுவிதமா யிருக்கிறது.

**268**. தேவர்களின் ஞானம் எவ்வளவு பெரியது என்பது, சுவர்க்கங்களில் எல்லா பொருள்களின் ஒரு போக்குவரவு இருக்

கிறது என்பதிலிருந்து விசிதமாகிறது; அறிவும் ஞானமும் ஒருவனிடமிருந்து மற்றவனுக்கு அறிவிக்கப்படுகிறது; சுவர்க்கமென்பது எல்லா நன்மைகளையும் பொதுவில் பகிர்ந்துகொள்ளுதலாயிருக்கிறது; இதுவும், சுவர்க்கத்தின் அன்பு தனது சொந்தமாயிருப்பதை, மற்றவனுடையதாயிருக்க விரும்புகிறது என்கிற காரணத்துக்காக ஏற்படுகிறது; ஆகவே, சுவர்க்கத்திலிருக்கும் எவனும், மற்றவனிடத்திலும் இருந்தாலொழிய, தன்னிடமேயிருக்கும் தன்னுடைய சொந்த நன்மையை நன்மையாயிருக்கிறதாக உணருகிறதில்லை; சுவர்க்கத்தின் சுகத்திற்கு இதுதான் மூலம். தன்னுடைய தெய்வீக அன்பு இந்த சுபாவமுடையதாயிருக்கிற ஆண்டவரிடமிருந்து இதை தேவர்கள் அடைகிறார்கள். சுவர்க்கங்களில் எல்லா பொருள்களின் அவ்வித ஒரு போக்குவரவு இருக்கிறதென்பது, எனக்கு அநுபவத்தில் தெரிந்துகொள்ள அனுமதி கொடுக்கப்பட்டது. சில பேதைமையான ஆவிகள் சுவர்க்கத்திற்குள் கொண்டு போகப்பட்டது; அங்கேயிருக்கும்போது, தேவதாஞானத்தில் அவைகள் பிரவேசித்து, பிறகு தாங்கள் முன்னிட்டு எப்பொழுதும் கிரகிக்க முடியாமல்போன விஷயங்களை தெரிந்துகொண்டு, தங்களுடைய முந்திய நிலைமையில் உச்சரிக்க சக்தியற்றவர்களாயிருந்த விஷயங்களை பேசின.

**269.** தேவர்களின் ஞானத்தின் சுபாவம் வார்த்தைகளால் விவரிக்கப்படமுடியாது; ஆனால் சில பொதுவான நிரீட்சணங்களால், அது திருஷ்டாந்தப்படுத்தப்படலாம். தேவர்கள், மனிதனானவன் ஓராயிரம் வார்த்தைகளால் வெளிப்படுத்தக்கூடாததை, ஒரு வார்த்தையில் சொல்லுவார்கள்; இதுவுமன்றி, மானிட பாஷையின் வார்த்தைகளால் சொல்ல முடியாத கணக்கற்ற விஷயங்களை தேவர்களின் ஒரு பேச்சிலிருக்கின்றன; ஏனென்றால், தேவர்களால் பேசப்பட்ட ஒவ்வொரு தனித்த வார்த்தையிலும், மானிட அறிவுகள் எப்பொழுதும் எட்ட முடியாத ஞான இரகசியங்கள், தொடர்ச்சியான சம்பந்தத்திலிருக்கின்றன. தேவர்கள், தங்கள் பேச்சின் வார்த்தைகளால் முழுமையும் வெளியிடக் கூடாததை தொனியினால்கூட சரிபடுத்துகிறார்கள்; அந்த தொனியில், தங்கள் ஒழுங்கில், பொருள்களின் ஓராசையிருக்கிறது; ஏனென்றால், மேலே கூறியபடி (செ. 236, 241), அவர்கள் ஆசைகளை தொனிகளாலும், சிந்தனையின் அபிப்பிராயங்களை ஆசையிலிருந்து வார்த்

தைகளாலும் வெளியிடுகிறார்கள். அதனால்தான் சுவர்க்கத்தில் கேட்கப்பட்டவைகள் சொல்லமுடியாததென்று சொல்லப்படு கின்றன.

அம்மாதிரியாககூட, தேவர்கள், எந்த முழு புஸ்தகத்திலும் எழுதப்பட்ட எதையும் சில வார்த்தைகளில்கூட சொல்லவும், ஒவ்வொரு வார்த்தைக்கும் உள்ளான ஞானத்துக்கு மனதை உயர்த்துகிற அருத்தங்களை கொடுக்கவும், சக்தியுள்ளவர்களாயிருக் கிறார்கள்; ஏனென்றால், அவர்களுடைய பேச்சானது, அவர்களு டைய ஆசைகளுடனும், ஒவ்வொரு வார்த்தையும் அவர்களுடைய அபிப்பிராயங்களுடனும் ஒத்துப்போகிறதாயிருக்கிறது. அவர்களு டைய வார்த்தைகள்கூட, சிந்தனையில் தழுவப்பட்ட விஷயங்களின் வரிசைகளுக்கு தக்கபடி முடிவற்ற வழிகளில் வேற்றுமையையடை கின்றன. உள்ளான தேவர்கள், பேசுகிறவனுடைய முழு வாழ்வை யும், சத்தத்திலிருந்தும், சில வார்த்தைகளிலிருந்தும்கூட தெரிந்து கொள்ளக்கூடும்; ஏனென்றால், வார்த்தைகளிலிருக்கும் அபிப்பிரா யங்களால் மாற்றப்பட்ட தொனியிலிருந்து, அவனுடைய வாழ்க்கை யின் ஒவ்வொரு நுண்ணியதும் எழுதப்பட்டிருக்கிற அவனுடைய அரசாளும் அன்பை அவர்கள் உணருகிறார்கள்.

இவைகளிலிருந்து தேவர்களின் ஞானத்தின் சுபாவம் வெளி படுத்தப்படுகிறது. மானிட ஞானத்துடன் ஒப்பிட்டால் அது, ஒன்றுக்கு பத்தாயிரம்போலும், அல்லது கணக்கற்ற முழு சரீரத் தின் அசைக்கும் சக்திகளுக்கும், மானிட அறிவுக்கு ஒரு தனித்த பொருள்போல் தோன்றுகிற, அவைகளிலிருந்துவரும் முயற்சிகளுக் கும், இருக்கும் சம்பந்தம்போலவும், அல்லது குறைவற்ற ஒரு பூதக்கண்ணாடி மூலமாய் பார்க்கப்பட்ட ஒரு பொருளின் ஆயிரம் மூலப்பகுதிகளுக்கும், வெறும் கண்ணால் பார்க்கப்பட்ட ஒரு தெளி வற்ற பொருளுக்கும், உள்ள சம்பந்தம்போலவும் இருக்கிறது.

இந்த விஷயத்தை ஒரு உதாரணத்தினால் நான் திருஷ்டாந்தப் படுத்துகிறேன். தன்னுடைய ஞானத்திலிருந்து ஒரு தேவன் மறு பிறப்பைக் குறித்து விவரித்து, ஒவ்வொரு இரகசியத்தையும், முதலி லிருந்து கடைசிவரையிலும், உள்ளான இரகசியங்கள் இருந்த அபிப்பிராயங்களால் நிறப்பி, அதைக்குறித்து அநேக நூறு கணக் காக, அதன் ஒழுங்கில் அநேக இரகசியங்களை தெரியக்காட்டியது; ஏனென்றால், ஞான சம்பந்தமுள்ள ஒரு மனிதன் எப்படி புதிதாய்

கருத்தரிக்கப்பட்டு, கருப்பையில்போல் தாங்கப்பட்டு, பிறந்து, வளர்ந்து, படிப்படியாய் சம்பூரணமாக்கப்படுகிறுனென்று, அது விவரித்து சொல்லியது. இரகசியங்களின் தொகையை அநேக ஆயிரங்கள் வரையில்தான் அதிகரிக்கக் கூடுமென்றும், தான் முன்னமே சொல்லியது, புறம்பான மனிதனுடைய மறு பிறப்பைப்பற்றி மாத்திரம் என்றும், உள்ளான மனிதனுடைய மறுபிறப்பிற்கு சம்பந்தப்பட்ட கணக்கற்ற இதர விஷயங்கள் இருந்ததாகவும் அது சொன்னது. தேவர்களிடமிருந்து கேட்ட இவைகளிலிருந்தும், இவை போன்றவைகளிலிருந்தும், அவைகளுடைய ஞானமானது எவ்வளவு பெரியதென்றும், மனிதனுடைய பேதமை அதற்கேற்க, எவ்வளவு பெரிய தென்றும், எனக்கு விசதமாக்கப்பட்டது; ஏனென்றால் மனிதனுக்கு மறு பிறப்பு என்ன என்பது அரிதாய் தெரியும்; மேலும் தான் மறு பிறப்பு அடையும் காலத்தில் அது செய்யப் படும் வழியைக் குறித்து அவனுக்கு ஒன்றும் தெரியாது.

**270**. மூன்றுவது அல்லது அதிக உள்ளான சுவர்க்கத்தின் தேவர்களுடைய ஞானத்தைப்பற்றியும், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களின் ஞானத்தைவிட அது எவ்வளவு அதிகமாய் இருக்கிறது என்பதைப்பற்றியும், சிலது இப்பொழுது சொல்லப்பட வேண்டும்.

மூன்றுவது அல்லது மிகவும் உள்ளான சுவர்க்கத்தின் தேவர்களுடைய ஞானம், மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருப்பவர்களுக்கு கூட கிரகிக்கப்பட முடியாது; ஏனென்றால், மூன்றுவது சுவர்க்கத்தின் தேவர்களுடைய உள்ளானவைகள், மூன்றுவதுபடிக்கு திறக்கப்பட்டிருக்கிறது; ஆனுல், முதல் சுவர்க்கத்தின் தேவர்களுடைய உள்ளானவைகள், முதல்படிக்குமாத்திரம் திறக்கப்பட்டிருக்கிறது; எல்லா ஞானமும் உள்பக்கங்களுக்கு அதிகரிக்கிறது, அது திறக்கப்படுகிறபடிக்கு தக்கபடி பூரணமாக்கப்படுகிறது (செ. 208, 267). மூன்றுவது அல்லது மிகவும் உள்ளான சுவர்க்கத்தின் தேவர்களுடைய உள்ளானவைகள் மூன்றுவதுபடிக்கு திறக்கப்படுகிறபடியினுல், தெய்வீக உண்மைகள், அவைகள்மேபரில் எழுதப்பட்டது போலிருக்கின்றன; ஏனென்றால், மூன்றுவதுபடியின் உள்ளானவைகள், இரண்டாவது முதலாவதுபடிகளின் உள்ளானவைகளைவிட அதிகமாய் சுவர்க்கத்தின் உருவத்தில் இருக்கின்றன; சுவர்க்கத்தின் உருவம் தெய்வீக உண்மையிலிருந்து வருகிறது; ஆகையினுல்

தெய்வீக ஞானத்துக்குதக்கபடி யிருக்கிறது. ஆகையினுல்தான், தெய்வீக உண்மைகள், அந்த தேவர்களின்பேரில் எழுதப்பட்டது போலவும், அல்லது அவைகள் நடப்பட்டதுபோலவும், இயல்பானதுபோலவும் தோன்றுகின்றன; ஆகையினுல், உண்மையான தெய்வீக உண்மைகளை அவர்கள் கேட்ட உடனே, அவைகளை ஒத்துக்கொண்டு உணர்ந்து, பின்னிட்டு தங்களுக்குள்ளேயே உள்ளுக்குள்ளாய்போல் பார்க்கிருர்கள். மூன்ருவது சுவர்க்கத்தின் தேவர்கள் அவ்விதமாயிருப்பதினுல், தெய்வீக உண்மைகளைப்பற்றி அவர்கள் எப்பொழுதும் விசாரிக்கிறதில்லை; மேலும், எந்த உண்மையைப் பற்றியாவது அது அப்படியிருக்கிறதா இல்லையா என்று இன்னும் குறைவாய்தான் வாதாடுகிருர்கள்; அன்றியும், நம்புகிறது என்னவென்றும், பக்தி உடைத்தாயிருத்தல் என்னவென்றும், அவர்களுக்கு தெரியாது; அது அப்படியிருக்கிறதென்று நான் உணர்ந்து பார்க்கிறபடியினுல், பக்தி என்னவென்று அவர்கள் சொல்லுகிருர்கள். அவர்கள் இதை உவமிக்கைகளினுல் திருஷ்டாந்தப்படுத்துகிருர்கள். உதாரணமாக, எவனுவது ஒருவன் தன் தோழனேடு ஒரு வீட்டையும், அதற்குள்ளேயும் சுற்றிலுமிருக்கும் பல பொருள்களையும் பார்த்து, தன் தோழனுக்கு இந்தப்பொருள்கள் இருக்கின்றனவென்றும், அவன் பார்க்கிறதுபோல் அவைகள் இருக்கின்றனவென்றும், அவன் நம்பவேண்டுமென்று சொல்லுவதுபோல் அது இருக்கிறது; அல்லது எவனுவது ஒருவன் ஒரு தோட்டத்தையும் அதன் செடிகளையும் பழங்களையும் பார்த்து தன் தோழன் அவைகளை தன் கண்களினுல் பார்க்கும்போதே, ஒரு தோட்டமிருக்கிறதாகவும் மரங்களும் பழங்களுமிருக்கிறதாகவும், அவன் நம்பவேண்டுமென்று சொல்லுகிறதுபோல அது இருக்கிறது. அதனுல்தான் அந்த தேவர்கள் பக்தி என்பதை சொல்லுகிறதேயில்லை, அன்றியும் அதைக் குறித்து எந்த அபிப்பிராயமும் கொள்ளுகிறதில்லை; மேலும் தெய்வீக உண்மைகளைப்பற்றி அவர்கள் விசாரிக்கிறதுமில்லை, அது அப்படி யிருக்கிறதா இல்லையாவென்று எந்த உண்மையைப்பற்றியும் அவர்கள் வாதாடுகிறதேயில்லை. ஆனுல், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களுக்கு உயிரின் முதல் படி மாத்திரம் திறக்கப்பட்டிருப்பதினுல், அவர்களுடைய உள்ளானவைகளின் பேரில் தெய்வீக உண்மைகள் எழுதப்பட்டிருக்கவில்லை; ஆகையினுல், அவர்கள் உண்மைகளைக் குறித்து விசாரிக்கிருர்கள்; அப்படி விசாரிக்

கிறவர்கள், தாங்கள் விசாரிக்கும் உடனுன உட்கருத்துக்கு மேலே அரிதாய் எதையும் பார்க்கிறார்கள், அல்லது சில விஷயங்களால் அதை உருதிப்படுத்துவது தவிர, விஷயத்துக்கு மேலே ஒன்றும் தெரிந்துக்கொள்ளுகிறதில்லை; அவர்கள் அதை உருதிப்படுத்தின பிறகு, அது பக்தி விஷயமென்றும் அது நம்பப்பட வேண்டுமென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். இந்த விஷயங்களைப்பற்றி, நான் தேவர்களுடன் பேசியிருக்கிறேன்; மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்களுடைய ஞானத்திற்கும், முதலாவது சுவர்க்கத்தின் தேவர்களுடைய ஞானத்திற்கும் உள்ள வித்தியாசம், தெளிவாயிருப்பதற்கும் மங்கலாயிருப்பதற்கும், உள்ள வித்தியாசம்போல இருக்கிறதாக அவர்கள் எனக்கு சொன்னார்கள். மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்களுடைய ஞானத்தை, சுற்றிலும், எல்லா பக்கங்களிலும் தோட்டங்களும், இவைகளைச்சுற்றி பலவித மகத்துவமான பொருள்களும் உள்ள, உபயோகப்படுத்த எல்லா பொருள்களாலும் நிறைந்த, மகத்துவமான அரண்மனைக்குகூட அவர்கள் ஒப்பிட்டார்கள். அந்த தேவர்கள், ஞானத்தின் உண்மைகளிலிருக்கிறபடியினால், அவர்கள் அரண்மனைக்குள் பிரவேசித்து, எல்லா பொருள்களையும் பார்த்து, அந்த தோட்டங்களில் எல்லா திக்குகளிலும்கூட நடந்து, ஒவ்வொன்றிலும் இன்பம் அடையக்கூடும். ஆனால், அது உண்மைகளைக் குறித்து விசாரிக்கிறவர்கள் விஷயத்திலும், முக்கியமாய் அவைகளைக் குறித்து வாதாடுகிறவர்கள் விஷயத்திலும், வேறு மாதிரியிருக்கிறது. ஏனென்றால், அவர்கள் உண்மையின் வெளிச்சத்திலிருந்து உண்மைகளைப் பார்க்காமல், அவைகளை மற்றவர்களிடமிருந்தாவது அல்லது அந்தரங்கமாய் அவர்கள் அறிந்துக் கொள்ளாத வேதத்தின் சொல்லார்த்தத்திலிருந்தாவது, அவைகளை எடுத்துக் கொள்ளுகிறார்கள்; ஆகையினால், அவர்கள் அவைகள் நம்பப்படவேண்டுமென்றும் அல்லதுஉட்பார்வையின்னிட்டுவரவேண்டுமென்று கோராமல், அவைகள்பேரில் பக்தி செலுத்தப்படவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். ஞான அரண்மனையின் முதல் வாயிற்படியை தாங்கள் அணுக முடியாதென்றும், தாங்கள் முதல் படியண்டை நிற்கிறபடியினால் அதற்குள் பிரவேசிக்கவும், தோட்டங்களில் நடக்கவும் முடியவே முடியாதென்றும், தேவர்கள் சொன்னார்கள். தாங்களே உண்மைகளில் இருக்கிறவர்கள் விஷயத்தில் அது வேறு மாதிரி; ஒவ்வொரு உண்மையும் முடிவற்ற விசால

முடையதாகவும், மற்ற உண்மைகளின் கூட்டத்துடன் சேர்ந்து மிருப்பதின் நிமித்தம், பார்க்கப்பட்ட உண்மைகள் அவர்கள் போகும் எந்த இடத்திற்கும் அகன்ற வயல்களுக்கும் அவர்களை நடத்துகிறபடியினால், அவர்களுடைய எல்லையற்ற போக்கை எதுவும் தடுக்கிறதில்லை. இன்னமும், மிகவும் உள்ளான சுவர்க்கத்தின் தேவர்களின் ஞானமானது, ஒவ்வொரு பொருளிலும் தெய்வீகமானதும், சுவர்க்கத்துக்கு அடுத்ததுமான விஷயங்களையும், பல பொருள்களின் வரிசைகளில் ஆச்சரியமானவைகளையும் அவர்கள் பார்க்கிறார்களென்பதில், முக்கியமாய் அடங்கியிருக்கிறதென்று அவர்கள் சொன்னார்கள். ஏனென்றால், அவர்கள் கண்களால் பார்க்கப்பட்டதெல்லாம் அன்னுவயப்படுகின்றன; உதாரணமாக, அவர்கள் அரண்மனைகளையும் தோட்டங்களையும் பார்க்கும்போது, அவர்கள் பார்வை தங்கள் கண்கள் முன்பாக இருக்கும் பொருள்கள்மட்டு நிற்கிறதில்லை; ஆனால், அவைகள் வரப்பட்டதும், இவ்விதமாக அவைகள் அன்னுவபப்படுகிறதுமான உள்ளான விஷயங்களையும், இதுவும் பொருள்களின் தோற்றத்திற்குத் தக்கபடி எல்லா விகர்ப்பங்களுடன் அவர்கள் பார்க்கிறார்கள்; இவ்விதமாக, அதேகாலத்தில் தங்கள் ஒழுங்கிலும் சம்பந்தத்திலும் இருக்கிற கணக்கற்ற பொருள்களை அவர்கள் பார்க்கிறார்கள்; மேலும், பிரஞையற்றுப்போனவர்கள்போல தோன்றும்படியாக, இது அவர்களுடைய மனதுகளை இன்பத்தினால் நிறப்புகிறது. சுவர்க்கங்களில் பார்க்கப்பட்ட பொருள்கள் எல்லாம், ஆண்டவரிடமிருந்து தேவர்களிடத்திலிருக்கும் தெய்வீகப் பொருள்களோடு அன்னுவயப்படுகின்றனவென்பது மேலே (செ. 170-176) பார்க்கப்படலாம்.

**271**. மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்கள், ஆண்டவரிடத்து அன்பிலிருப்பதினாலும், அந்த அன்பானது மனதின் உள்ளானவைகளை மூன்றாவது படிக்கு திறக்கிறபடியினாலும், ஞானத்தினுடைய எல்லா பொருள்களின் கொள்கலமாயிருக்கிறபடியினாலும், அவர்கள் அவ்வித குணமுடையவர்களாயிருக்கிறார்கள். மிகவும் உள்ளான சுவர்க்கத்தின் தேவர்கள் ஞானத்தில் இன்னும் தொடர்ச்சியாய் சம்பூர்ணமாக்கப்படுகிறார்களென்றும், இதுவும் மிகவும் புறம்பான சுவர்க்கத்திலிருக்கும் தேவர்கள் விஷயத்தில் போல் அல்லாமல் செய்யப்படுகிறதென்றும்கூட, அறிந்துகொள்ளப்படவேண்டியது. மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவர்கள்,

ஞாபகத்தில் தெய்வீக உண்மைகளை சேகரித்து வைக்கிறதில்லை; இவ்விதமாக, அவர்கள் அவைகளை அறிவாக கணக்கிடுகிறதில்லை; ஆனால் அவர்கள் அவைகளை கேட்ட உடன், அவைகளை உணர்ந்து, வாழ்விற்கு கொண்டுவருகிறார்கள். ஆகையினால், தெய்வீக உண்மைகள், தங்கள்பேரில் எழுதப்பட்டிருப்பதுபோல் அவர்களுடன் இருக்கின்றன; ஏனென்றால், வாழ்விற்கு ஒப்புவிக்கப்பட்டது, இவ்விதமாக விடாதபடி தங்குகிறது. ஆனால், மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்கள் விஷயத்தில், அது வேறுமாதிரி யிருக்கிறது; ஏனென்றால், அவர்கள் தெய்வீக உண்மைகளை ஞாபகத்தில் சேகரித்து,அறிவாக அவைகளை அடக்கி, பின்னிட்டு அவைகளை அதிலிருந்து எடுத்து,அவைகளினால் தங்கள் புத்தியை சம்பூரணமாக்குகிறார்கள்; அவைகள் உண்மைகளா என்பதை அந்தரங்கமாய் உணராமல், அவைகளை இச்சித்து, வாழ்விற்கு கொண்டுவருகிறார்கள்; ஆகவே, அவர்கள் ஒப்பீடாய் பிரசித்தமில்லாதவர்களாயிருக்கிறார்கள். மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்கள் பார்ப்பதினாலல்லாமல், கேட்பதினால் சம்பூரணமாக்கப் படுகிறார்களென்பது குறிப்பிடத்தக்கது. பிரசங்கத்திலிருந்து அவர்கள் கேட்பது, அவர்களுடைய ஞாபகத்தில் அல்லாமல், ஆனால் அவர்களுடைய உணர்விலும் சித்தத்திலும் உடனே பிரவேசித்து அவர்களுடைய வாழ்க்கையில் இணைக்கப்படுகிறது; ஆனால், அவர்கள் தங்கள் கண்களால் பார்க்கிறவைகள், அவர்கள் ஞாபகத்தில் பிரவேசிக்கிறது; அவர்கள் அவைகளைக் குறித்து நியாயம் உத்தரித்து பேசுகிறார்கள். இவ்விதமாக, கேட்டலே, அவர்களுக்கு ஞானம் அடையும் வழியாக யிருக்கிறதென்பது விசதமாகிறது. இதுகூட அனுவயத்திலிருந்து வருகிறது; ஏனென்றால், காது கீழ்ப்படிதலுக்கு அனுவயப்படுகிறது, மேலும் கீழ்ப்படிதல் வாழ்க்கையைச் சேர்ந்தது; ஆனால், கண்ணானது விவேகத்திற்கு அனுவயப்படுகிறது, விவேகமானது கொள்கைக்கு சேர்ந்தது. இந்த தேவர்களின் நிலைமை வேதத்தில் அநேக பாகங்களில் கூட விவரிக்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக:—

எரேமியாவில்

"நான் என் நியாயப்பிரமாணத்தை அவர்கள் உள்ளத்திலே வைத்து, அதை அவர்கள் இருதயத்திலே எழுதுவேன்.......இனி ஒருவன் தன் அயலானையும், ஒருவன் தன் சகோதரனையும் நோக்கி, கர்த்தரை அறிந்துக்கொள் என்று போதிப்பதில்லை; அவர்களில்

சிறியவன் முதல் பெரியவன் மட்டும் எல்லாரும் என்னைத் தெரிந்துக் கொள்ளுவார்கள்" (xxxi. 33, 34).

மத்தேயுவில்

"உள்ளதை உள்ளதென்றும், இல்லதை இல்லதென்றும், சொல்லுங்கள்; இதற்கு மிஞ்சினது தீமையினால் உண்டாயிருக்கும்" (v. 37").

அது ஆண்டவரிடமிருந்து வராதபடியினால், "இதற்கு மேற்பட்டது தீமையினால் உண்டாகிறது." மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்கள் ஆண்டவரிடத்து அன்பிலிருப்பதினால், அவர்களிடமிருக்கும் உண்மைகள் ஆண்டவரிடமிருந்து வருகிறது. தெய்வீக உண்மையானது சுவர்க்கத்தில் ஆண்டவராயிருப்பதினால், அந்த சுவர்க்கத்தில் ஆண்டவரிடத்து அன்பு என்பது தெய்வீக உண்மைகளை இச்சித்து செய்தலாயிருக்கிறது.

**272**. தேவர்கள் அவ்வளவு உயர்ந்த ஞானத்தை பெற்றுக் கொள்ள ஏன் தகுந்தவர்களாயிருக்கிறார்களென்பதற்கு காரணம், நிஜமாகவே, சுவர்க்கத்தில் முக்கிய காரணமாயிருப்பது, அவர்கள் சுயநலத்தைக் கோராதவர்களாயிருக்கிறார்கள் என்பதேயாம்; ஏனென்றால், எவனாவது ஒருவன் எவ்வளவு சுயநலத்தை கோராதிருக்கிறானோ, அவ்வளவு அவன் தெய்வீக விஷயங்களில் வளரக் கூடும். கடவுளுக்கும் சுவர்க்கத்திற்கும் விரோதமாய் உள்ளானவைகளை மூடி புறம்பானவைகளை திறந்து அவைகளை தன் பிரயோஜனத்துக்கு திருப்புகிறது அந்த அன்புதான்; ஆகையினால், ஆத்ம சன்மானம் அரசாளுகிறவர்கள் எல்லாரும், உலகப் பொருள்கள் விஷயத்தில் அவர்கள் எவ்வளவு விவேகிகளாயிருந்தாலும், சுவர்க்கத்தின் பொருள்கள் விஷயத்தில் நள்ளிருளில் இருக்கிறார்கள். இதற்கு மாறாக, தேவர்கள் சுயநலத்தை கோராதவர்களானபடியினால், அவர்கள் ஞான வெளிச்சத்திலிருக்கிறார்கள். ஏனென்றால் ஆண்டவரிடத்து அன்பும், அயலானிடத்து அன்புமாயிருக்கிற அவர்கள் இருக்கும் சுவர்க்கத்துக்கு அடுத்த அன்புகள், ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், ஆண்டவரே அவைகளில் இருப்பதினாலும், உள்ளானவைகளை திறக்கின்றன. அந்த அன்புகள், பொதுவாக சுவர்க்கத்தை உண்டாக்குகிறதென்பதும், ஒவ்வொருவன் விஷயத்திலும் குறிப்பாக உருவாக்குகிறதென்பதும், மேலே பார்க்கலாம் (நெ. 13 முதல் 19 வரையில்). சுவர்க்கத்தின் அன்பு

கள் உள்ளானவைகளை, ஆண்டவர் பக்கம் திறக்கிறபடியினால், எல்லா தேவர்களும்கூட தங்கள் முகங்களை ஆண்டவர் பக்கம் திருப்புகிறார்கள் (செ. 142); ஏனென்றால், உள்ளானவைகளுக்கு வெளி உருவமாயிருக்கிற முகமானது அங்கே அந்த உள்ளானவைகளுடன் ஒன்றாகிறபடியினால், சூக்கும உலகத்தில் அன்புதான் ஒவ்வொருவனுடைய உள்ளானவைகளை தன்னிடமே திருப்புகிறது; மேலும், அது உள்ளானவைகளை எந்த வழியில் திருப்புகிறதோ, அந்த வழியில் முகத்தையும்கூட திருப்புகிறது. அன்பானது உள்ளானவைகளையும் முகத்தையும் தன்னிடமே திருப்புகிறபடியினால், அது அவைகளுடன்தானே சேர்ந்துகொள்ளுகிறது; ஏனென்றால், அன்பு சூக்கும புணரிடையாயிருக்கிறது; ஆகையினால் அது தான் உடைத்தாயிருப்பதை எல்லாம் அவைகளுக்கு வெளியிடுகிறது. அந்த திரும்புதலிலிருந்தும், புணரிடையிலிருந்தும் அதிலிருந்துவரும் போக்கு வரவினாலும், தேவர்களுக்கு ஞானமிருக்கிறது. சூக்கும உலகத்தில் எல்லா புணரிடையும், அந்த திரும்புதலுக்கு தக்கபடி இருக்கிறதென்பது மேலே பார்க்கப்படலாம் (செ. 255).

**273**. தேவர்கள் ஞானத்தில் தொடர்ச்சியாய் சம்பூரணமாக்கப்படுகிறார்கள்; அப்படியிருந்தாலும், அவர்கள் ஊழியகாலம் வரையிலும்கூட தங்கள் ஞானத்துக்கும் ஆண்டவரின் தெய்வீக ஞானத்திற்கும் எந்தவித ஓரளவு இருக்கும்படியாக அவ்வளவு சம்பூரணமாக்கப்படமாட்டார்கள்; ஏனென்றால், ஆண்டவருடைய தெய்வீக ஞானமானது முடிவற்றதாயிருக்கிறது; தேவர்கள் ஞானம் முடிவுள்ளது; மேலும் முடிவற்றதற்கும் முடிவுள்ளதற்கும் ஓர் அளவுகிடையாது.

**274**. ஞானமானது தேவர்களை சம்பூரணமாக்கி, அவர்களுடைய உயிரை ஏற்படுத்துகிறபடியினாலும், சுவர்க்கமானது அதன் நன்மைகளோடு ஒவ்வொருவனுக்குள்ளும் அவனுடைய ஞானத்திற்குத் தக்கபடிபாய்கிறபடியினாலும், அங்கே இருப்பவர்கள் எல்லாம், பசியுள்ளவன் ஆகாரத்தை தேடுகிறதுபோல், அதை விரும்பி தேடுகிறார்கள்; ஏனென்றால், அறிவும், சேதனமும், ஞானமும், ஆகாரமானது ஸ்தூல போஷணமாயிருப்பதுபோல, சூக்கும போஷணமாயிருக்கின்றன; அவைகள் ஒன்றோடொன்று அன்னியோன்னியமாய் அன்னுவயப்படுகின்றன.

**275**. ஒரு சுவர்க்கத்திலிருக்கிற தேவர்களும், அதனுடன் ஒரு கூட்டத்தில் இருக்கிறவர்களும், ஞானத்தின் ஒரு திட்டத்தி லில்லாமல், பல திட்டங்களிலிருக்கிறார்கள். மத்தியிலிருப்பவர்கள், மிகவும் பெரிய ஞானத்திலிருக்கிறார்கள்; எல்லைகள் வரையில்கூட சுற்றிலுமிருக்கப்பட்டவர்கள், குறைந்த ஞானத்திலிருக்கிறார்கள். மையத்திலிருந்து தூரத்திற்கு தக்கபடி ஞானத்தின் தேய்வு, நிழலுக்கு சாயும் வெளிச்சத்தின் தேய்வுபோலிருக்கிறது (மேலே நெ. 43, 128 பார்க்கவும்). அவர்களுடைய ஒளியானது, அவர்கள் ஞானத்தைப்போல் ஒரே அளவில்கூட இருக்கிறது; ஏனென்றால் சுவர்க்கத்தின் ஒளியானது தெய்வீக ஞானமாயிருக்கிறது; ஒவ்வொருவனும் அந்த ஞானத்தை ஏற்றுக்கொள்ளுதலுக்கு தக்கபடி வெளிச்சத்திலிருக்கிறான். சுவர்க்கத்தின் வெளிச்சத்தைப்பற்றியும், அது ஏற்றுக்கொள்ளப்படுதலின் விகற்பத்தைப்பற்றியும் மேலே (நெ. 126 முதல் 132 வரையில்) பார்க்கவும்.

## XXXI

### சுவர்க்கத்தின் தேவர்களின் மனப்புனித நிலைமை.

**276**. மனப்புனிதம் என்னவென்பதும், அதன் குணம் என்னவென்பதும், உலகத்தில் சிலருக்குதான் தெரியும்; தீமையி லிருக்கப்பட்டவர்களுக்கு அவை தெரியவே தெரியாது. நிஜமாகவே, அது முக்கியமாய் சிறு பிள்ளைகளுடைய முகத்திலும், பேச்சிலும், அபிநயங்களிலும் தானே காட்டிக்கொண்டு, மனிதர்களுடைய கண் கள் முன்பாக தோன்றுகிறது; என்றாலும், அது என்னவென்றும், முக்கியமாய் சுவர்க்கம் உள்ளுக்குள்ளாய் மனிதனுடன் இருக்கிறது அதுவென்றும், இதுவரையிலும் தெரிந்திருக்கப்படவில்லை. அப்படி அது தெரிந்திருக்கப்படும்படி, நான் ஒழுங்கில் சென்று, முதலில் இளம்பிராயத்தின் மனப்புனிதத்தைக் குறித்து பேசுகிறேன்; அடுத் தாப்போல், ஞானத்தின் மாசின்மையையும், கடைசியில், மனப் புனிதம் விஷயத்தில் சுவர்க்கத்தின் நிலைமையைப்பற்றியும் பேசு கிறேன்.

**277**. இளம்பிராயத்தின் அல்லது சிறு குழந்தைகளின் மாசின்மை உண்மையான மாசின்மையல்ல; ஏனென்றால், அது மனப்புனிதத்தின் உள்ளான உருவமாயல்லாமல், அதின் புறம் பான உருவமாக மாத்திரம் இருக்கிறது; அப்படியிருந்தாலும், அதிலிருந்து மனப்புனிதம் என்பது என்னவென்று அறிந்துகொள் ளப்படலாம்; ஏனென்றால், குழந்தைகளின் முகங்களிலிருந்தும், அவர்களுடைய சில அபிநயனங்களிலிருந்தும், அவர்களுடைய மிகவும் ஆரம்ப பேச்சுகளிலிருந்தும் அது பிரகாசித்து, நம்முடைய மனதில் பதிகிறது; இதுவும் அவர்களுக்கு உள்ளான சிந்தனையில் லாதபடியினால் நேரிடுகிறது; ஏனென்றால், நன்மை என்பதும் தீமை என்பதும், அதுவுமன்றி உண்மை என்பதும் பொய் என்பதும், என்னவென்று, இன்னும் அவர்களுக்குத் தெரியாது; இவைகள் தான் சிந்தனைக்கு மூலம். ஆகவே, தங்களுடைய சொந்த தன்மையி லிருந்து, எந்த சூழ்ச்சியும், கருத்தும், ஆராய்வான உட்குறிப்பும், அதனால், தீமை சுபாவமுள்ள எந்த உத்தேசமும் அவர்களுக்குக் கிடையாது. தன்னையே நேசித்தலிலிருந்தும், உலகத்தை நேசித்தலி லிருந்தும் அடைந்த, ஒரு சொந்த தன்மை அவர்களுக்கு கிடை

யாது; அவர்கள் எதையும் தங்களுக்கே ஆரோபிக்கிறதில்லை; ஆனால், தாங்கள் அடைந்ததெல்லாம் தங்கள் பெற்றோர்களுக்கு ஆரோபிக்கிறார்கள்; தங்களுக்கு கொடுக்கப்பட்ட சில அற்ப பொருள்களால் அவர்கள் திருப்தியடைகிறார்கள்; அவைகளில் சந்தோஷமடைகிறார்கள்; ஆகாரத்தைப்பற்றியும் உடுப்பைப்பற்றியும் அவர்களுக்கு கவலை கிடையாது; முன் வருவதைப்பற்றி ஒன்றுமே கிடையாது; அவர்கள் உலகத்தை எதிர்பார்த்து, அதன் பொருள்களின் திரட்சியை அடைய விரும்புகிறதுமில்லை; ஆனால், அவர்கள் தங்கள் பெற்றோர்களையும் செவிலித் தாய்மார்களையும், மாசின்மையில் விளையாடின தங்கள் சிறு பிராயமுள்ள தோழர்களையும் நேசிக்கிறார்கள்; நடத்தப்பட ஒத்துக்கொள்ளுகிறார்கள். அவர்கள் சொன்னதைக் கேட்டு கீழ்ப்படிகிறார்கள். அவர்கள் இந்த நிலைமையிலிருப்பதினால், தங்கள் வாழ்வில் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு, அது தெரியாமலே, அதிலிருந்து தகுந்த நல்லொழுக்கங்களையும், பேச்சையையும், ஞாபகத்தினுடையவும், சிந்தனையினுடையவும் மூலாதாரங்களையும் அவர்கள் அடைகிறார்கள்; ஏனென்றால், அவைகள் பெற்றுக்கொள்ளப்பட்டு நடப்பட, அவர்களின் குற்றமற்ற நிலைமை ஒரு உபகரணமாகிறது. ஆனால் இந்த மனப் புனிதம், மேலே கூறியபடி, மனதைச் சேர்ந்ததாயல்லாமல், சரீரத்தை மாத்திரம் சேர்ந்ததாயிருக்கிறதினால், புறம்பானதாயிருக்கிறது. ஏனென்றால், மனதானது புத்தியும் சித்தமாயுமிருக்கிறபடியினாலும், அதிலிருந்து வரும் சிந்தனையும் ஆசையுமாயிருக்கிறபடியினாலும், அவர்களுடைய மனது இன்னமும் உருவாக்கப்படவில்லை. சிறு குழந்தைகள், ஆண்டவரின் விசேஷித்த பொறுப்பில் இருக்கிறார்களென்றும், மனப் புனிதத்தின் ஓர் நிலைமையிருக்கிற உள்ளுக்குள்ளான சுவர்க்கத்திலிருந்து அவர்களுக்கு ஓர் உட்பெருக்கு உண்டென்றும், அந்த உட்பெருக்கானது அவர்களுடைய அந்தரங்க பாகங்களில் செல்லுகிறதென்றும், அப்படி செல்லுவதில் மாசின்மையைத் தவிர, வேறு ஒன்றும் அவர்கள் மனதில் பதிகிறதில்லை என்றும், ஆகவே குற்றமின்மையானது முகத்திலும், சைகைகளிலும் காண்பிக்கப்பட்டு, பிரத்தியட்சமாகிறதென்றும், பெற்றோர்கள் உள்ளுக்குள்ளாய் மனமுறுக்கப்பட்டு, பெற்றோரின் அன்பை உண்டாக்குகிறது. இந்த மனத்தூய்மைதான் என்றும், சுவர்க்கத்திலிருந்து எனக்கு சொல்லப்பட்டது.

**278.** ஞானத்தின் மாசின்மை, மனதிற்கேயும், இவ்விதமாக சித்தத்திற்கேயும், அதிலிருந்து புத்திக்கேயும், சேர்ந்தபடியினால், அது அந்தரங்கமான தென்பதின் நிமித்தம், உண்மையான மாசின்மையாயிருக்கிறது. மேலும், இவைகளில் மாசின்மையிருக்கிறபொழுது, ஞானமும் கூட இருக்கிறது; ஏனென்றால், ஞானமென்பது சித்தத்திற்கும் புத்திக்கும் சேர்ந்தது. ஆகவே, மாசின்மை ஞானத்தில் குடிகொண்டிருப்பதாகவும், ஒரு தேவனுக்கு எவ்வளவு மாசின்மையிருக்கிறதோ, அவ்வளவு ஞானமிருப்பதாகவும், சுவர்க்கத்தில் சொல்லப்படுகிறது. மனப் புனித நிலைமையிலிருக்கப்பட்டவர்கள், தங்களுக்கே யாதொரு நன்மையையும் ஆரோசிக்காமல், எல்லா பொருள்களும் தானமாக ஏற்றுக் கொள்ளப்பட்டவைகளென்று மதித்து, ஆண்டவருக்கே ஆரோபிக்கிறார்களென்பதினாலும், தங்களாலேயே அல்லாமல் அவரால் நடத்தப்பட விரும்புகிறார்களென்பதினாலும், நன்மையானதை நேசித்தலென்பது, அதாவது அதை இச்சித்து செய்தல் ஆண்டவரை நேசித்தலாயும், உண்மையை நேசித்தலென்பது அயலானை நேசித்தலாயும், அவர்கள் தெரிந்து கொண்டு உணருகிறபடியினால், அவர்கள் நன்மையான ஒவ்வொன்றையும் நேசித்து, உண்மையாயிருக்கப்பட்ட ஒவ்வொன்றிலும் சந்தோஷத்தை அடைகிறார்களென்பதினாலும், அற்பமானது உபயோகமா யிருக்கப்பட்டவர்களுக்கு அற்பமாகவும், மிகுதி உபயோகமாயிருக்கப்பட்டவர்களுக்கு அதிகமாயும், தங்களுக்கு எவ்வளவு உபயோகமானதோ, அவ்வளவு தாங்கள் பெற்றுக்கொள்ளுகிறதாக, அவர்களுக்கு தெரிந்திருக்கிறபடியினால், அற்பமாயினும் அதிகமாயினும், தங்களுக்கு சொந்தமானதை வைத்துக்கொண்டு அவர்கள திர்ப்தியாய் வாழ்கிறார்களென்பதினாலும், தங்களுக்கு நன்மையானது, தான் முன்னறிந்து ஏற்படுத்துகிற எல்லா பொருள்களிலும், சாசுவத முடிவுகளை நினைக்கிற ஆண்டவருக்கு மாத்திரம் தெரிந்திருக்கிறபடியினால், அது தங்களுக்கே தெரியாதிருக்கிறபடியினாலும், இது ஸ்திரபடுத்தப்படுகிறது. ஆகவே, அவர்கள் வருங்காலத்தைப்பற்றி கவலைப்படுகிறதில்லை; ஆனால் வருங்காலத்தைக் குறித்த கவலையை, வாழ்க்கையின் உபயோகங்களுக்கு ஆவசியகமில்லாத பொருள்களை இழந்துவிடுதலின்பொருட்டு அல்லது பெற்றுக் கொள்ளாததின் பொருட்டு ஆகுலம் என்று அவர்கள் சொல்லு

கிற மறுநாளைக் குறித்த விசாரம் என்று அவர்கள் சொல்லு கிறார்கள். தோழர்கள் விஷயத்தில் எப்பொழுதும் பொல்லாத நோக்கத்துடன் அல்லாமல், நன்மையானதும், நியாயமானதும், நேர்மையானதுமான நோக்கத்துடன் அவர்கள் செயல்படுகிறார் கள். பொல்லாத நோக்கத்துடன் செயல்படுதலை, அவர்கள் தந்திரம் என்று சொல்லி, அது மனப்புனிதத்திற்கு முழுமையும் எதிரிடை யாய் இருப்பதினால், ஒரு பாம்பின் விஷத்தைப்போல அதை தள்ளு கிறார்கள். தாங்கள் பெற்றுக்கொள்வ தெல்லாவற்றையும் ஆண்டவ ருக்கு ஆரோபித்து, அவரால் நடத்தப்படுவதைவிட வேறு எதையும் அவ்வளவு நேசிக்காதபடியினால், தங்களுக்கு சொந்தமானதிலிருந்து நீக்கப்படுகிறார்கள். தங்களுக்கு சொந்தமானதிலிருந்து அவர்கள் நீக்கப்படுகிற அளவு ஆண்டவர் அவர்களுக்குள் பிரவேசிக்கிறார்; அதனால்தான், வேதத்தின் மூலமாயாவது பிரசங்கத்தின் மூலமா யாவது, அவரிடமிருந்து அவர்கள் கேட்கிறதெல்லாம், ஞாபகத்தில் வைக்காமல், உடனே கீழ்ப்படிகிறார்கள்; அதாவது, சித்தமே ஞாபக மாயிருப்பதின் நிமித்தம், அவர்கள் அவைகளை இச்சித்துசெய்கிறார் கள். இவர்கள், அநேகமாய் தங்களுடைய புறம்பான உருவத்தில், பேதைமையானவர்களாய் தோன்றுகிறார்கள்; ஆனால் உள்ளுக்குள் ளாய், ஞானமுள்ளவர்களாகவும் யோசனையுள்ளவர்களாகவும் இருக் கிறார்கள்; ஆண்டவர் "சர்ப்பங்களைப்போல் வின உள்ளவர்களாயும் புறாக்களைப்போல கபடமற்றவர்களாயிருங்கள்." (மத்தே. x 16.) என்று கூறியபோது அவரால் கருதப்பட்டவர்கள் இவர்கள்தான். ஞானத்தின் மனப்புனிதம் என்று சொல்லப்பட்டது, இவ்வித மாசின்மையாயிருக்கிறது. மாசின்மை என்பது, நன்மை என்கிற எதையும் தனக்கே ஆரோபிக்காமல், எல்லா நன்மையையும் ஆண்ட வருக்கு ஆரோபித்து, இவ்விதமாக ஆண்டவரால் நடத்தப்பட விரும் புகிறதின் நிமித்தம், அது ஞானம் உண்டாக்கப்பட்ட எல்லா நன்மை யையும் உண்மையையும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாய் இருப்பதினால், புறம்பான மாசின்மையிலிருந்து உள்ளானதிற்கும், உள்ளானதி லிருந்து மறுபடி புறம்பான மாசின்மைக்கு வரும்பொருட்டு, மனித னானவன், சிறு குழந்தையாயிருக்கும்போது, அவன் புறம்பான மாசின்மையிலிருக்கவும், கிழவனானபோது, உள்ளான மாசின்மையி லிருக்கவும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறான்; அம்மாதிரியே கூட, ஒரு மனிதனானவன், கிழவனாகும்போது, சரீரத்தில் குறைந்து, ஒரு

குழந்தையைப்போல் திரும்புகிறான்; ஆனால், அவன் ஒரு ஞானமுள்ள குழந்தையையும், இவ்விதமாக ஒரு தேவனாகவும் ஆகிறான்; ஏனென்றால், தேவன் என்பவன் உயர்ந்த கருத்தில் ஞானமுள்ள குழந்தையாயிருக்கிறான்; இவ்விதமாகத்தான், வேதத்தில் ஒரு சிறு குழந்தை என்பது, மாசில்லாதவன் என்பதையும், கிழவன் என்பது, மாசின்மையிலிருக்கப்பட்ட ஒரு ஞானமுள்ள மனிதன் என்பதையும் அர்த்தம் கொள்ளுகிறது.

**279.** நயகுணம் பெறுதல் ஞானிகள் விஷயத்தில் மறுபிறப்பாய் இருப்பதினால், குணப்படுத்தப்படுகிறவர்கள் ஒவ்வொருவர் விஷயத்திலும் அதேமாதிரிதான். குணப்படுகிற மனிதன் தன்னிடமேயிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து, உண்மையானதை தெரிந்துக் கொள்ளுதலிலும், நன்மையானதை செய்தலிலும், உண்மையை, அது உண்மையாயிருக்கிறது என்பதற்காக மாத்திரமும், நன்மையை அது நன்மையாயிருக்கிறது என்பதற்காக மாத்திரமும் விரும்புதலிலும், தேடுதலிலும், அமைந்திருக்கிற இளம்பிராயத்தின் மாசின்மையில் முதலில் செலுத்தப்படுகிறான். வயது ஏற ஏற, ஆண்டவரால் அவனுக்கு நன்மையும் உண்மையும் கொடுக்கப்படுகிறது. மேலே கூறியபடி, தன்னிடமேயிருந்து, எந்த உண்மையையும் தெரிந்துகொள்ளாமலும், எந்த நன்மையையும் செய்யாமலும், ஆண்டவரிடமிருந்து மாத்திரம் அப்படி தெரிந்துகொள்ளுதலிலும், செய்தலிலும் அமைந்திருக்கிற மாசின்மை எப்பொழுதும் துணையாய், அவன் முதலில் அவைகளைக் குறித்த அறிவிலும், பிறகு அறிவிலிருந்து பகுத்தறிவதிலும், கடைசியாய் பகுத்தறிவதிலிருந்து ஞானத்திலும் நடத்தப்படுகிறான். அதைக் குறித்து அவ்வித நம்பிக்கையும் அவ்வித உணர்ச்சியும் இல்லாமல், எவனும் சுவர்க்கத்தின் எதையும் பெற்றுக்கொள்ள முடியாது. அதில்தான் ஞானத்தின் மாசின்மை முக்கியமாய் அமைந்திருக்கிறது.

**280.** மாசின்மை என்பது தன்னால் அல்லாமல், ஆண்டவரால் நடத்தப்படுதலாயிருக்கிறபடியினால், சுவர்க்கத்திலிருப்பவர்கள் எல்லாம் மாசின்மையிலிருக்கிறார்கள்; ஏனென்றால், அங்கிருப்பவர்கள் எல்லாம் ஆண்டவரால் நடத்தப்பட விரும்புகிறார்கள். தாங்களே வழிகாட்டிக்கொள்ளுதல் தங்கள் சொந்தமானதினால் வழிகாட்டப்படுதலென்றும், தங்களுடைய சொந்தமானது என்பது தன்னையே நேசித்தலில் அமைந்திருக்கிறதென்றும், அவர்களுக்

குத் தெரியும்; தன்னையே நேசித்துக்கொள்ளுகிறவன், மற்றவனால் வழிகாட்டப்பட தானே இடங்கொடுக்கிறதில்லை. ஆகவே, ஒரு தேவனானவன் மாசின்மையில் எவ்வளவு தூரம் இருக்கிறானோ, அவ்வளவு தூரம் சுவர்க்கத்தில், அதாவது தெய்வீக நன்மையிலும், தெய்வீக உண்மையிலும் இருக்கிறான்; ஏனென்றால், இவைகளிலிருத்தல் என்பது சுவர்க்கத்திலிருப்பதாயிருக்கிறது. ஆகையினால், மாசின்மைக்குத்தக்கபடி சுவர்க்கங்கள் வகையறுக்கப் படுகின்றன. மிகவும் தாழ்ந்த அல்லது முதல் சுவர்க்கத்திலிருக்கப் பட்டவர்கள், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்தபடியின் மாசின்மையிலிருக்கிறார்கள்; நடு அல்லது இரண்டாவது சுவர்க்கத்திலிருக்கப்பட்டவர்கள், இரண்டாவது அல்லது மத்தியபடியின்மாசின்மையிலிருக்கிறார்கள்; ஆனால், மிகவும் உள்ளான அல்லது மூன்றாவது சுவர்க்கத்தில் இருக்கப்பட்டவர்கள் மூன்றாவது அல்லது மிகவும் உள்ளானபடியின் மாசின்மையிலிருக்கிறார்கள். ஆகையினால், கடைசியில் கூறியவர்கள், சுவர்க்கத்தின் மனப் புனிதங்களாகவே இருக்கிறார்கள்; ஏனென்றால், சிறு பிள்ளைகள் தங்கள் தகப்பனால் வழிகாட்டப்பட விரும்புகிறதுபோல், அவர்கள் மற்றவர்கள் எல்லாரையும்விட, ஆண்டவரால் வழிகாட்டப்பட விரும்புகிறார்கள்; அதேகாரணத்துக்காக, ஆண்டவரிடமிருந்து தாங்கள் நேராயும், அல்லது வேதத்தின் மூலமாயும், பிரசங்கத்தின் மூலமாயும் நடுப்போக்காயும், கேட்கிறதுமான தெய்வீக உண்மையை, அவர்கள் தங்கள் சித்தத்தில் நேராய் எடுத்துகொண்டு செய்து, இவ்விதமாக அதை வாழ்க்கைக்கு கொண்டுவருகிறார்கள். அவர்களுடைய ஞானம்,தாழ்ந்த சுவர்க்கங்களின் தேவர்களுடையதைவிட அவ்வளவு மேன்மையாயிருப்பதற்கு காரணம் இதுதான்.(செ.270, 271ஐப் பார்க்கவும்). அந்த தேவர்கள் அவ்வித குணமுடையவர்களாயிருப்பதினால், தங்களுடைய மனப்புனிதத்தை அடைகிற ஆண்டவருக்கு வெகுசமீபத்தில் இருக்கிறார்கள்; மேலும், ஆண்டவரில் வசிக்கிறதுபோல, தங்களுக்கு சொந்தமானதிலிருந்து அப்படி பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். வெளிபார்வையில், அவர்கள் பேதைமையானவர்களாய் தோன்றுகிறார்கள்; சுவர்க்கத்தின் தேவர்களில் மிகவும் ஞானமுள்ளவர்களாக அவர்கள் இருந்தபோதிலும், தாழ்ந்த சுவர்க்கங்களின் தேவர்கள் கண்கள் முன்பாக, குழந்தைகளைப்போலவும், இவ்விதமாக, மிகவும் சிறியவர்களாகவும், அதிக

புத்தியில்லாதவர்களாகவும்கூட தோன்றுகிறார்கள்; ஏனென்றால், தங்களிடமேயிருந்து தங்களுக்கு எந்த ஞானமும் இல்லையென்றும், உண்மையாய் ஞானமுள்ளவனு யிருத்தலென்பது, இதை ஒத்துக் கொள்ளுதலென்றும், அதனுடன் தங்களுக்கு தெரிந்தது, தங் களுக்கு தெரியாததுடன் ஒப்பிடும்போது, ஒன்றுமில்லாமல் போகிற தென்றும், அவர்களுக்குதெரியும். இதை தெரிந்துகொண்டும், ஒத்துக் கொண்டும் உணர்தல், ஞானத்திற்கு முதல்படி என்று அவர்கள் சொல்லுகிறார்கள். இந்த தேவர்கள் உடுத்துக்கொள்ளுகிறதுகூட இல்லை; ஏனென்றால், நிர்வாணம் மாசின்மைக்கு அன்னுவயப்படுகிறது.

**281**. நான் தேவர்களுடன் மனப்புனிதத்தைப்பற்றி அதி கம் பேசியிருக்கிறேன்; மனப்புனிதமானது எல்லா நன்மையி னுடையவும் சொரூபமென்றும், ஆகையினல் நன்மையானது, அதற்குள் மனப்புனிதம் இருக்கிற அளவு மாத்திரம், உண்மை யாய் நன்மையானதாயிருக்கிறதென்றும், ஆதலால், ஞானமானது, மனப்புனிதத்தை பகிர்ந்து வாங்குகிற அளவு மாத்திரம் உண்மை யாய் ஞானமென்றும், அன்பு விஷயத்திலும், தருமம் விஷயத்தி லும், பக்தி விஷயத்திலும் அதேமாதிரியென்றும், ஆண்டவர், "சிறு பிள்ளைகள் என்னிடம் வருவதற்கு இடங்கொடுங்கள், அவர்களை தடைபண்ணுதிருங்கள்; தேவர்களுடைய இராச்சியம் அப்படிப் பட்டவர்களுடையது. எவனுகிலும் சிறுபிள்ளையைப்போல் தேவ னுடைய இராச்சியத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அவன் அதில் பிரவேசிப்பதில்லையென்று, மெய்யாகவே உங்களுக்கு சொல்லுகிறேன்" (மார்க். x. 14, 15; லூக். xviii: 16, 17.) என்று சொல்லியபோது, அவரால் கருதப்படுகிற மனப்புனிதத்தை உடைத் தாயிருந்தாலொழிய, எவனும் இந்த காரணத்திற்காக சுவர்க்கத்திற் குள் போகமாட்டானென்றும், எனக்கு தெரியப்படுத்தப்பட்டிருக் கிறது. வேதத்தில் வேறு இடங்களில்போல, இவ்விடத்தில் சிறு பிள்ளைகள் என்பதால் குற்றமற்றவர்கள் என்று அருத்தம் கொள் ளப்படுகிறது. (மத்தேயுவில் vi. 25 முதல் 34 வரையில்) மனப் புனிதத்தின் ஓர் நிலைமைகூட விவரிக்கப்பட்டிருக்கிறது; ஆனல், அது அன்னுவயங்களால் மாத்திரம் அப்படி செய்யப்பட்டிருக்கிறது. நன்மையானது, மனப்புனிதம் அதில் இருக்கிற அளவு நன்மையா யிருக்கிறது; ஏனென்றால், எல்லா நன்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறது; மேலும் மனப்புனிதம் என்பது ஆண்டவரால் வழிகாட்

டப்பட இச்சித்தலாயிருக்கிறது. மனப்புனிதத்தினால் தவிர, உண்மையானது நன்மையுடனும், நன்மை உண்மையுடனும், சேர்க்கப்படாது என்றுகூட எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. அதனால் கூட, ஒரு தேவனானவன், தன்னிடம் மனப்புனிதம் இருந்தாலொழிய, சுவர்க்கத்தின் தேவனாகமாட்டான்; ஏனென்றால், சுவர்க்கமானது, உண்மையானது நன்மையுடன் ஒருவனிடத்தில் சேர்க்கப்பட்டாலொழிய, அது எவனிடத்திலுமிருக்காது. ஆகவே, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கை, சுவர்க்கத்திற்கு அடுத்த விவாகம் என்று சொல்லப்படுகிறது; சுவர்க்கத்தின் விவாகம் சுவர்க்கமாயிருக்கிறது. இன்னமும் உண்மையான விவாக அன்பு, மனப்புனிதத்திலிருந்து வருகிறதென்று எனக்கு தெரியப்படுத்தப்பட்டது; ஏனென்றால், அது நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையிலிருந்துஉண்டாகிறது;கணவனுடையவும் மனைவியினுடையவும் இரண்டு மனங்களும் அந்த சேர்க்கையிலிருக்கின்றன; அந்த சேர்க்கை இறங்கும்போது, அது விவாக அன்பின் தோற்றத்தை காண்பிக்கிறது; ஏனென்றால் விவாகம் செய்து கொண்டவர்கள், தங்கள் மனங்களைப்போல், ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்கள். ஆகவே, இளம்பிராயத்தினுடையவும் மனப்புனிதத்தினுடையவும் விளையாட்டு குணத்தைப்போன்ற ஒரு விளையாட்டு குணம் விவாக அன்பிலிருக்கிறது.

**282.** சுவர்க்கத்து தேவர்களுக்கு மனப்புனிதமென்பது நன்மையின் சொரூபமாகவே யிருக்கிறபடியினால், ஆண்டவரிடமிருந்து புறப்படும் தெய்வீக நன்மையானது மனப்புனிதமாகவே யிருக்கிறதென்று விசதமாகிறது; ஏனென்றால், தேவர்களுக்குள் பாய்ந்து, அவர்களுடைய மிகவும் அந்தரங்கமான சுபாவத்தை தாக்கி சுவர்க்கத்தின் எல்லா நன்மைகளையும் பெற்றுக்கொள்ள, அவர்களை ஒழுங்குபடுத்தி, பக்குவப்படுத்துகிறது அந்த நன்மைதான். ஆண்டவரிடமிருந்து மாசின்மை பாய்வதினால், தங்களுடைய உள்ளானவைகள் உருவாக்கப்படுகிறது மாத்திரமல்லாமல் பரத்துக்கடுத்த அன்பை பெற்றுக்கொள்ளக்கூட தொடர்ச்சியாய் பக்குவப்படுத்தி ஒழுங்குபடுத்துகிற சிறு குழந்தைகள் விஷயத்திலும் அதே மாதிரியிருக்கிறது; ஏனென்றால், மாசின்மையின் நன்மையானது, மேல் கூறியபடி, அது எல்லா நன்மையின் சொரூபமா யிருப்பதினால் மிகவும் அந்தரங்கமானதிலிருந்து செயல்படுகிறது. ஆகவே, எல்லா

மனப்புனிதமும ஆண்டவரிடமிருந்து வருகிறதென்பதும், ஆகையி ஞல்தான், ஒரு ஆட்டுக்குட்டி என்பது மாசின்மையைக் கருதுகிற தின் நிமித்தம், ஆண்டவர் வேதத்தில் ஆட்டுக்குட்டி என்று சொல் லப்படுகிரு ரென்பதும் வெளிப்பொருளா யிருக்கிறது. சுவர்க்கத் தின் எல்லா நன்மையிலும் மாசின்மை மிகவும் அந்தரங்கமானதா யிருப்பதினுல், மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவன் சமீ பித்தபோது, உணருகிறதுபோல உணருகிற ஒருவனுடைய மனதை, தனக்கேதான் தன்னுடையதாக இல்லாதபடிக்கும், அதை ஒப்பிட்டு உலகத்தின் எந்த சந்தோஷமும் ஒன்றுமில்லாதபடி அவ்வித சந் தோஷத்தினுல் அசைக்கப்பட்டு அபகரிக்கப்படும்படிக்கும், அது தாக்குகிறது. அதை உணர்ந்தபடியினுல், நான் இதைச் சொல்லு கிறேன்.

**283**. மாசின்மையின் நன்மையிலிருக்கப்பட்டவர்கள், எல் லாரும் மாசின்மையினுல் அசைக்கப்படுகிருர்கள்; ஒருவன் அந்த நன்மையில் எவ்வளவு இருக்கிருஞே அவ்வளவு அசைக்கப்படு கிருன்; ஆனுல், மாசின்மையின் நன்மையில் இல்லாதவர்கள், அத ஞல் அசைக்கப்படுகிறதில்லை. இந்த காரணத்துக்காக, நரகத்திலிருப் பவர்கள் எல்லாம் மனப்புனிதத்திற்கு விரோதமா யிருக்கிருர்கள்; மனப்புனிதம் என்பது என்னவென்றுகூட அவர்களுக்குதெரியாது; எவனுவது ஒருவன் குற்றமற்றவனுயிருந்தால், அவனுக்கு தீங்கு செய்ய எரிந்து விழும்படியாக அவ்வளவு எதிரிடையா யிருக்கிருர் கள்; ஆகவே, அவர்களுக்கு சிறு குழந்தைகளை பார்க்க பொருக்க முடியாது; அவர்களை அப்படி பார்த்த உடனே அவர்களுக்கு தீங்கு செய்ய ஒரு குரூரமான ஆவலினுல் நெருப்பு மூட்டப்படுகிருர்கள். மனிதனுக்கு சொந்தமானது, ஆதலால் தன்னையே நேசித்தலென் பது மனப்புனிதத்திற்கு விரோதமா யிருக்கிறதென்று இதிலிருந்து விசிதமாகிறது; ஏனென்ருல், நரகத்திலிருப்பவர்கள் எல்லாம் தங்க ளுடைய சொந்த தன்மையிலிருக்கிருர்கள், அதிலிருந்து தன்னையே நேசித்தலில் இருக்கிருர்கள்.

## XXXII

### சுவர்க்கத்தில் சமாதான நிலைமை

**284**. சுவர்க்கத்தின் அமரிக்கையை அனுபவிக்காதவன், தேவர்கள் அனுபவிக்கும் அமரிக்கை என்னவென்று அறிந்து கொள்ள முடியாது. மனிதன்கூட, சரீரத்திலிருக்கிற வரையில், சுவர்க்கத்தின் சமாதானத்தை ஏற்றுக்கொள்ள முடியாது. ஆகையினால் மனிதனுடைய உணர்ச்சி, ஸ்தூலமானதிலிருப்பதினால், அதை அவன் உணரமாட்டான். அதை அறிந்துகொள்ள, சிந்தனை விஷயத்தில், சரீரத்திலிருந்து நீக்கப்பட்டும், உயர்த்தப்பட்டும், அசரீர ஆன்மாவில் வைக்கப்பட்டும், பிறகு தேவர்களோடு இருக்கவும் அவன் சக்தியுள்ளவனாக இருக்கவேண்டும். இவ்விதத்தில் சுவர்க்கத்தின் சமாதானம் என்னால் பார்க்கப்பட்டிருக்கிறபடியினால், அதை விவரிக்க நான் சக்தி உள்ளவனாக்கப்பட்டிருக்கிறேன்; என்றாலும், மானிட வார்த்தைகள் போதாதபடியினால், அந்த சமாதானம் தன்னில்தானே இருப்பதுபோல வார்த்தைகளினால் அல்லாமல், கடவுளில் பூரிப்பானவர்கள் அனுபவிக்கிற மனதின் சமாதானத்துடன் ஒப்பிட்டு, அது இருக்கிறதுபோல் நான் விவரிக்கக்கூடும்.

**285**. சுவர்க்கத்தின் இரண்டு மிகவும் அந்தரங்கமான பொருள்கள் இருக்கின்றன; அவையாவன, மனப் புனிதமும் சமாதானமும்; அவைகள் ஆண்டவரிடமிருந்து நேராய் புறப்படுகிறபடியினால், அவைகள் மிகவும் அந்தரங்கமான பொருள்கள் என்று சொல்லப்படுகின்றன. மனப் புனிதத்திலிருந்து, சுவர்க்கத்தின் ஒவ்வொரு நன்மையும் வருகிறது; சமாதானத்திலிருந்து, நன்மையின் ஒவ்வொரு இன்பமும் வருகிறது; ஒவ்வொரு நன்மையும், தன் இன்பத்தை உடைத்தாயிருக்கிறது; நன்மையும் இன்பமும், அன்பிலிருந்து உற்பத்தியாகிறது; ஏனென்றால் அன்பு பாராட்டப்படுவது எதுவும் நன்மை என்று சொல்லப்பட்டு, இன்பமுள்ளதாககூட உணரப்படுகிறது; ஆகவே மனப் புனிதமும் சமாதானமுமாகிய இந்த இரண்டு மிகவும் அந்தரங்கமான பொருள்கள், ஆண்டவருடைய தெய்வீக அன்பிலிருந்து புறப்பட்டு, மிகவும் உள்ளானதிலிருந்து தேவர்களை இயக்குகின்றனவென்று ஏற்படு

றது. மனப்புனிதம், நன்மையின் மிகவும் அந்தரங்கமான பாகமென் பது சுவர்க்கத்தின் தேவர்களின் மனப்புனிதநிலைமையைக் குறித்து பேசுகிற முன் வந்த அத்தியாயத்தில் அறிந்துக் கொள்ளப்படலாம்; ஆனால், அந்த சமாதானமானது, மனப்புனிதத்தின் நன்மையி லிருந்து வருகிற இன்பத்தின் மிகவும் அந்தரங்க பாகமென்பது இப்பொழுது விவரிக்கப்படவேண்டும்.

**286**. நாம் முதலில் சமாதானத்தின் மூலத்தைப்பற்றி பேசு வோம். தெய்வீக சமாதானம் ஆண்டவரிடத்திலிருக்கிறது; அந்த தேவத்துவமே, அவருடைய தெய்வீக மானிடத்தன்மையுடன் ஐக்கியப்படுவதினால் அது உண்டாகிறது. சுவர்க்கத்தில் சமாதானத் தின் தேவத்துவம் ஆண்டவரிடமிருந்து வருகிறது; அது, சுவர்க்கத் தின் தேவர்களுடன் அவர் சேருவதினாலும், நட்பமாய், ஒவ் வொரு தேவனிலும், நன்மையும் உண்மையும் சேருவதினாலும், உண்டாகிறது. இவைகள்தான் சமாதானத்தின் மூலங்கள். சுவர்க் கங்களில் சமாதானமென்பது, அங்கேயிருக்கும் ஒவ்வொரு நன் மையையும் தேவத்துவமானது தன்னருளுடன், இயக்குதலென் றும், இதிலிருந்துதான் சுவர்க்கத்தின் எல்லா சந்தோஷமும் வரு கிறதென்றும், அதனுடன் அது, தன் சத்தில், சுவர்க்கத்துடனும், அங்கிருக்கும் ஒவ்வொருவனுடனும், அவருடைய சேர்க்கையினால் உண்டாகிற ஆண்டவருடைய தெய்வீக அன்பின் தெய்வீக ஆனந் தமாயிருக்கிறதென்றும், இதிலிருந்து அறிந்து கொள்ளப்படலாம். தேவர்களிலிருக்கும் ஆண்டவராலும், ஆண்டவரிடமிருந்து தேவர் களாலும், உணரப்படுகிற இந்த ஆனந்தமானது சமாதானமா யிருக்கிறது; இதிலிருந்து, தேவர்கள் தேவ அருள் பெற்றதும், இன்பமானதும் சுகானுபவமானதுமாகிய எல்லாம், அல்லது சுவர்க் கத்தின் ஆனந்தம் என்று சொல்லப்பட்டதை அடைகிறார்கள்.

**287**. இவைகளெல்லாம் சமாதானத்தின் மூலங்களானபடி யினால், ஆண்டவர் சமாதானப்பிரபு என்று சொல்லப்படுகிறார். அவர், சமாதானம் தன்னிடமிருந்து வருவதாகவும், தன்னிடத்தில் சமா தானம் இருப்பதாகவும் சொல்லுகிறார். பின் வரும் வாக்கியங்களில் போல, தேவர்கள், சமாதானத் தேவர்கள் என்றும், சுவர்க்கம் சமாதானத்திற்கு இருப்பிடமென்றும்கூட சொல்லப்படுகின்றன: "நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்; நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப் பட்டார்; கர்த்தத்துவம் அவர் தோளின்மேலிருக்கும்; அவர்

நாமம் அதிசயமானவர், ஆலோசனைக் கர்த்தா, வல்லமையுள்ள தேவன், நித்தியபிதா, சமாதானப் பிரபு என்னப்படும்;.........அவருடைய கர்த்தத்துவத்தின் பெருக்கத்துக்கும், அதின் சமாதானத்துக்கும், முடிவில்லை" (ஏசா. ix. 6, 7). இயேசு சொன்னதாவது: "சமாதானத்தை உங்களுக்கு வைத்துப்போகிறேன், என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன்; உலகம் கொடுக்கிற பிரகாரம் நான் உங்களுக்கு கொடுக்கிறதில்லை" (யோவா. xiv. 27). "என்னிடத்தில் உங்களுக்குச் சமாதானம் உண்டாயிருக்கும்பொருட்டு, இவைகளை உங்களுக்குச் சொன்னேன்" (யோவா. xvi. 33). "கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் பிரசன்னமாக்கி, உனக்குச் சமாதானம் கட்டளையிடக் கடவர் என்பதே" (எண். vi. 26). "சமாதானத்து ஸ்தானாபதிகள் மனம் கசந்து அழுகிறார்கள். பாதைகள் பாழாயின" (ஏசா. xxxiii. 7, 8). "நீதியின் கிரியை சமாதானமாகும்......என் ஜனம் சமாதான தாபரங்களில்......குடியிருக்கும்" (ஏசா. xxxii. 17, 18). தெய்வீகத் தன்மையானதும், பரலோகத்திற்கு அடுத்ததுமான சமாதானம், வேதத்தில் கருதப்படும் சமாதானம் என்பது, அது சொல்லப்பட்ட இதர வாக்கியங்களிலிருந்துகூட விசதமாகிறது (உதாரணமாக, ஏசாயா. lii. 7; liv. 10; lix. 8; எரேமி. xvi. 5; xxv. 37; xxix. 11; ஆகாய். ii. 9; சகரி. viii. 12; சங்கீ. xxxvii. 37; வேறு இடங்களிலும்). சமாதானமென்பது ஆண்டவரையும் சுவர்க்கத்தையும் அதனுடன் பரலோகத்து ஆனந்தத்தையும், நன்மையின் இன்பத்தையும் கருதுகிறபடியினால், பூர்வகாலங்களின் வாழ்த்து, தற்காலத்திலும்கூட இருப்பதுபோல, "உங்களுக்கு சமாதானம்" என்றிருந்தது; மேலும், தான் அனுப்பிய சீடர்களுக்கு பின் கூறியபடி ஆண்டவர் கூறியபோது, அவரால் இது ஒப்புக்கொள்ளப்பட்டது: "ஒரு வீட்டில் பிரவேசித்தபோது இந்த வீட்டிற்குச் சமாதானம் உண்டாவதாகவென்று முதலாவது சொல்லுங்கள். சமாதான பாத்திரன் அங்கேயிருந்தால், நீங்கள் கூறின சமாதானம் அவனிடத்தில் தங்கும்" (லூக். x. 5, 6). மேலும், ஆண்டவரே சீஷர்கள் முன்பாக வந்தபோது, 'உங்களுக்கு சமாதானம்' என்று கூறினர் (யோவா. xx: 19, 21, 26). வேதத்தில், எகோவா ஒய்வு வாசனையை முகர்ந்தார் என்று சொல்லப்பட்டபோது, ஓர் சமாதான நிலைமைகூட கருதப்படுகிறது (உதாரணமாக,

யாத்திரா-xxix. 18, 25, 41; லேவி. i. 9, 13, 17; ii. 2-9; vi. 8, 14; xxiii. 12, 13, 18; எண். xv. 3, 7, 13; xxviii. 6, 8, 13; xxix. 2, 6, 8, 13, 36). பாத்துக்கு அடுத்த அர்த்தத்தில் ஓய்வின் வாசனை என்பது, சமாதானத்தை உணர்தல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. சமாதானமென்பது, தெய்வமே ஆண்டவரில் இருக்கும் மானிட தெய்வத்துடன் ஐக்கியப்படுதலையும், சுவர்க்கத்துடனும் திருச்சபையுடனும், அவரை ஏற்றுக்கொள்ளுகிற சுவர்க்கத்திலிருக்கும் எல்லாருடனும் திருச்சபையுடனும், ஆண்டவரின் இணைவையும் கருதுகிறபடியினால், ஓய்வு நாளென்பது, இவைகளை ஞாபகப்படுத்தும்படி ஏற்படுத்தப்பட்டு, ஓய்வு அல்லது சமாதானத்திலிருந்து பெயரிடப்பட்டு, திருச்சபையின் பரிசுத்தமான அறிகுறியாயிருந்தது. இந்த காரணத்துக்காக, ஆண்டவர் ஓய்வு நாளுக்கு ஆண்டவர் என்று தாமே சொன்னார். (மத்தே. xii. 8; மார்க். ii. 27, 28; லூக். vi. 5.)

**288**. சுவர்க்கத்தின் சமாதானமென்பது, தெய்வமே தேவர்களிருக்கும் நன்மையையே உள்ளுக்குள்ளாய் தேவ ஆசீர்வாதத்துடன் இயக்குதலாயிருக்கிறபடியினால், அவர்கள் தங்கள் வாழ்வின் நன்மையிலிருக்கும்போது, தங்கள் இருதயங்களின் இன்பத்திலும், தங்கள் நன்மையுடன் ஒத்துப்போகிற உண்மையை, தாங்கள் கேட்கிற சந்தோஷத்திலும், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் இணைவை உணரும்போது உண்டாகிற மனதின் சந்தோஷத்திலும் மாத்திரம், அது அவர்களால் தெளிவாய் பார்க்கப்படக்கூடும். இதிலிருந்து, அது அவர்கள் வாழ்வின் செய்கைகளிலும் சிந்தனைகளிலும் பாய்ந்து, அங்கே, புறம்பான உருவத்திலும் கூட சந்தோஷமாக தானே தெரியக்காட்டுகிறது.

மனப்புனிதமும் சமாதானமும் கைகோத்து நடக்கிறபடியினால், சமாதானத்தின் சுபாவமும் பரிமாணமும், சுவர்க்கங்களிலிருப்பவர்களின் மனப்புனிதத்திற்கு தக்கபடி அங்கே வித்தியாசப்படுகின்றன; ஏனென்றால், மேலே கூறியபடி, மனப்புனிதத்திலிருந்து சுவர்க்கத்தின் எல்லா நன்மைகளும், சமாதானத்திலிருந்து அந்த நன்மையின் எல்லா இன்பங்களும் வருகின்றன. ஆகவே, மனப்புனிதமும் சமாதானமும், நன்மையும் அதன் இன்பத்தையும்போல சேர்க்கப்பட்டிருக்கிறபடியினால், சுவர்க்கங்களில் மனப்புனிதத்தின் ஓர் நிலைமையைப்பற்றி முன் பிரிவில் சொல்லப்பட்டபடி, சமா

தானத்தின் ஓர் நிலைமையைப்பற்றி இங்கே அம்மாதிரி விஷயங்கள் சொல்லப்படலாமென்பது வெளிப்படையாயிருக்கிறது; ஏனென்றால், நன்மையானது அதன் சந்தோஷத்தால் உணரப்படுகிறது. இன்பமானது அதன் நன்மையிலிருந்து தெரிந்துகொள்ளப்படுகிறது: ஆகையினால், மிகவும் உள்ளான அல்லது மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்கள் மனப்புனிதத்தின் மூன்றாவது மிகவும் உள்ளானபடியிலிருக்கிறபடியினால், அவர்கள் சமாதானத்தின் மூன்றாவது அல்லது மிகவும் உள்ளானபடியிருக்கிறார்களென்றும், மனப்புனிதத்தின் குறைந்த அளவில் இருப்பதினால், தாழ்ந்த சுவர்க்கங்களின் தேவர்கள், சமாதானத்தின் குறைந்த அளவில் இருக்கிறார்களென்றும் விசதமாகிறது (மேலே செ. 280 பார்க்கவும்). மனப்புனிதமும் சமாதானமும் சேர்ந்து, நன்மையும் அதன் இன்பத்தையும்போல இருக்கின்றனவென்பது, மனப் புனிதத்திலிருப்பதினால் சமாதானத்திலும்கூட இருக்கிற குழந்தைகளிடத்தில் பார்க்கப்படலாம்; அவர்கள் சமாதானத்திலிருப்பதினால், அவர்களுடன் இருக்கும் எல்லாபொருள்களும் விளையாட்டில்நிறைந்திருக்கின்றன. என்றாலும், சிறு குழந்தைகளின் சமாதானம் புறம்பான சமாதானமாயிருக்கிறது; ஏனென்றால், உள்ளான சமாதானம், உள்ளான மனப்புனிதத்தைப்போல ஞானத்தில்மாத்திரம் இருக்கிறது; ஆகையினால், ஞானத்தின் மூலமாயிருக்கிற நன்மையினுடையவும் உண்மையினுடையவும் இணைவில் இருக்கிறது. நன்மையினுடையவும் உண்மையினுடையவும் ஐக்கியத்திலிருந்து ஞானத்திலிருக்கிறவர்களும், அதனால், கடவுளிடத்து பூரிப்பின் ஓர் அறிவுள்ளவர்களுமாகிய மனிதர்களிடத்தில், சுவர்க்கத்துக்கு அடுத்த அல்லது தேவர்களுக்குறிய சமாதானம்கூட இருக்கக்கூடும்; அப்படியிருந்தாலும் அவர்கள் உலகத்திலிருக்கும்போது, இந்த சமாதானமானது அவர்களுடைய உள்ளான பாகங்களில் மறைந்து கிடக்கிறது; ஆனால், அவர்கள் சரீரத்தைவிட்டுவிட்டு சுவர்க்கத்தில் பிரவேசிக்கும்போது அது வெளிப்படுத்தப்படுகிறது; ஏனென்றால், அப்பொழுது தான் அவர்களுடைய உள்ளானவைகள் திறக்கப்படுகின்றன.

**289.** சிறப்பாய் ஒவ்வொரு தெய்வீக சமாதானம் சுவர்க்கத்துடன் ஆண்டவரின் இணைவினாலும், சிறப்பாய் ஒவ்வொரு தேவனிடத்திலும், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையினால் உண்டாகிறபடியினால், தேவர்கள் அன்பின் ஓர்

நிலைமையில் இருக்கும் காலத்தில், அவர்கள் சமாதான ஓர் நிலைமையி லிருக்கிறார்கள்; ஏனென்றால், அப்பொழுது நன்மையும் உண்மையும், அவர்களிடத்தில் சேர்க்கப்படுகின்றன. தேவர்களின் நிலைமைகள், படிப்படியாய் மாற்றப்படுகின்றன வென்பது, மேலே பார்க்கப் படலாம் (நெ. 154 முதல் 160 வரையில்.). விஷயமானது, குணப்படுத்தப்படுகிற மனிதன் விஷயத்தில் அம்மாதிரியே இருக்கிறது. சோதனைகளுக்கு பின்னிட்டு முக்கியமாய் நேரிடுகிறபடி, அவனிடத்தில் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கை காரியப்படுத்தபட்டபோது, சுவர்க்கத்தின் சமாதானத்திலிருந்து இன்பத்தின் ஓர் நிலைமைக்கு அவன் வருகிறான். இந்த சமாதானம் இரவு சென்ற பிறகு, சூரியன் உதயமாகும் காலத்தில், பூமியின் உற்பவங்கள் புதியதாய் வாழ ஆரம்பிக்கிறதும், சுவர்க்கத்திலிருந்து இறங்குகிற பனியிலிருந்து பயிர் செழிப்பின் ஓர் மணம் பரவப்படுகிறதும், மிருதுவான வசந்த காலத்திற்குறிய சீதோஷ்ண நிலைமை, பூமிக்கு வளத்தை கொடுத்து, அதனுடன் மானிட மனதுகளில் சாந்தமான சந்தோஷத்தை உட்செலுத்துகிறதுமாகிய வசந்த காலத்தின் காலைக்கு அல்லது விடியற் காலத்திற்கும் ஒப்பிடப்படலாம்; காலை அல்லது விடியற்காலம் வசந்த காலத்தில் சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் சமாதானத்தினுடைய நிலைமைக்கு அன்னுவயப்படுகிறபடியினால், இது சம்பவிக்கிறது. (மேலே நெ. 155 பார்க்கவும்.)

**290.** நான் தேவர்களுடன் சமாதானத்தைப் பற்றியுங்கூட பேசி, இராச்சியங்களுக்குள் போர்களும் விரோதங்களும் நின்ற போதும், மனிதர்களுக்குள் பகையும் பிணக்குகளும் நின்றபோதும், உலகத்தில் அவைகளுக்கு சமாதானமென்று சொல்லப்படுகிறதென்றும், அந்தரங்க சமாதானமென்பது, கவலைகள் நீக்கப்பட்டபோது உண்டாகிற மனதின் ஒய்வு என்றும், முக்கியமாய் செய்யும் தொழிலில் ஏற்படும் வெற்றியிலிருந்து உண்டாகிற சஞ்சலமின்மையும், இன்பமுமென்றும் நம்பப்படுகிறதென்றும் சொல்லியுமிருக்கிறேன். ஆனால், மனதின் ஒய்வும், கவலைகளை நீக்குவதினாலும், செய்யும் தொழிலில் உண்டாகும் வெற்றியினாலும் உண்டாகும் சலனமின்மையும் இன்பமும், சமாதானத்தின் கூறுகளாக தோன்றுகிறதென்றும், ஆனால் சுவர்க்கத்தின் நன்மையில் மாத்திரம் சமாதானம் உண்டாகுமாகையால், அந்த நன்மையில் இருப்பவர்களிடத்தில் மாத்திரம் அப்படியிருக்கிறதென்றும், தேவர்கள்

சொன்னார்கள். ஏனென்றால், சமாதானமென்பது, ஆண்டவரிடமிருந்து, அவர்களுடைய மிகவும் உள்ளானவைகளில் பாய்ந்து, அந்த உள்ளானவைகளிலிருந்து, அவர்கள் மனதின் அதிக தாழ்ந்த இடங்களில் இறங்கி, பாய்ந்து, உள்ளான மனதின் ஒய்வையும், புறம்பான மனதின் சலனமின்மையையும், அதிலிருந்து வரும் சந்தோஷத்தையும் உண்டாக்குகிறது. ஆனால், தீமையிலிருக்கப்பட்டவர்களுக்கு சமாதானமென்பது கிடையாது. அவர்களுடைய கோரிக்கைகளுக்கு தக்கபடி காரியங்கள் ஜெயமடையும்போது, அவர்களுக்கு ஒய்வும், சலனமின்மையும், இன்பமும் இருந்ததுபோல், நிஜமாகவே தோன்றுகிறது. ஆனால், இவைகள் எல்லாம் உள்ளானவைகள் அல்ல, புறம்பானவைகள்; ஏனென்றால், தங்களுக்கு அனுகூலம் செய்யாத ஒருவனை பார்த்தவுடனே, தங்கள் மனங்கள் பிரவாகிக்கிற விரோதத்துடனும், குரோதத்துடனும், பழிவாங்கலுடனும், குரூரத்துடனும், இன்னும் அநேக தீங்குள்ள மோகங்களுடனும் உள்ளுக்குள்ளாய் எரிந்து, பயமில்லாதபோது வெடிக்கிறார்கள்; ஆகவே, அவர்களுடைய இன்பம் உன் உன்மதத்தில் வசிக்கிறது. ஆனால், நன்மையிலிருக்கப்பட்டவர்கள் இன்பம், ஞானத்தில் வசிக்கிறது. வித்தியாசமானது, சுவர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இருக்கும் வித்தியாசத்தைப்போலிருக்கிறது.

## XXXIII.

## மானிடவமிசத்துடன் சுவர்க்கத்தின் ஐக்கியம்

**291.** எல்லா நன்மையும் கடவுளிடமிருந்து வருகிறதென்றும், எதுவும் மனிதனிடமிருந் தல்லவென்றும், ஆகையினால் எவனும் எந்த நன்மையையும் தன்னுடைய சொந்தமாக தனக்கே ஆரோபிக்கக் கூடாதென்றும் திருச்சபையில் தெரிந்திருக்கிறது; தீமையானது பிசாசத்தினிடமிருந்து வருகிறதென்றும்கூட தெரிந்திருக்கிறது. ஆகையினால், திருச்சபையின் கொள்கையிலிருந்து பேசுகிறவர்கள், நன்றாய் நடக்கிறவர்களைப்பற்றியும், அதனுடன்கூட தேவபக்தியுடன் பேசி பிரசங்கம் செய்கிறவர்களைப்பற்றியும், அவர்கள் கடவுளால் நடத்தப்படுகிறார்களென்று சொல்லுகிறார்கள்; ஆனால், தீங்கைச்செய்து, தேவ நிந்தையாகப் பேசுகிறவர்களைப் பற்றி, அதற்கு எதிரிடையாய்ப்பேசுகிறார்கள். இது உண்மையாயிருக்க, மனிதனுடன் சுவர்க்கத்தினுடையவும் நரகத்தினுடையவும் சேர்க்கை இருக்கவேண்டும்; இந்த சேர்க்கையும் மனிதனுடைய சித்தத்தினுடனும், அவனுடைய புத்தியினுடனும் இருக்கவேண்டும்; ஏனென்றால், இவைகளிலிருந்துதான் அவனுடைய சரீரம் செயல் படுகிறது, அவனுடைய வாய் பேசுகிறது. இந்த சேர்க்கை என்னவென்பது இப்பொழுது சொல்லப்படவேண்டும்.

**292.** ஒவ்வொரு மனிதனுடனும், நல்ல ஆவிகளும் கெட்ட ஆவிகளுமிருக்கின்றன: நல்ல ஆவிகள் மூலமாய் சுவர்க்கத்துடனும், கெட்ட ஆவிகள் மூலமாய் நரகத்துடனும் மனிதனுக்கு சேர்க்கை யிருக்கிறது. இந்த ஆவிகள், நரகத்திற்கும் சுவர்க்கத்திற்கும் மத்தியிலிருக்கிற ஆவிகள் உலகத்தில் இருக்கின்றன; அந்த உலகத்தைப்பற்றி பின்வரும் பக்கங்களில் குறிப்பாய் பேசுவோம், இந்த ஆவிகள் மனிதனிடம் வரும்போது, அவைகள் அவனுடைய எல்லா ஞாபகத்திலும், அதிலிருந்து அவனுடைய எல்லா சிந்தனையிலும் பிரவேசிக்கின்றன; கெட்ட ஆவிகள், தீமையாயிருக்கிற ஞாபகத்தினுடையவும் சிந்தனையினுடையவும் பொருள்களிலும், ஆனால், நல்ல ஆவிகள், நன்மையாயிருக்கிற ஞாபகத்தினுடையவும் சிந்தனையினுடையவும் பொருள்களிலும் பிரவேசிக்கின்றன. ஆவிகளுக்கு, தாங்கள் மனிதனுடன் இருக்கிறதாக தெரியவேதெரியாது;

ஆனால், அவைகள் அவனுடன் இருக்கும்போது, அவனுடைய ஞாபகத்தினுடையவும் சிந்தனையினுடையவும் எல்லா பொருள்களும் தங்களுடைய சொந்தமாக அவைகள் நம்புகின்றன; அன்றியும் நம்முடைய ஆதித்திய மண்டலத்திலிருக்கும் பொருள்கள் அவைகளின் பார்வைக்கு உட்படாதவைகளானபடியினால், அவைகள் மனிதனையும் பார்க்கிறதில்லை. ஆவிகள் அவனுடன் இருக்கிறதாக அவைகளுக்கு தெரியாதபடி இருக்க, ஆண்டவரால் மிகவும் பெரிய பொறுப்புவைக்கப்படுகிறது; ஏனென்றால், அவைகளுக்கு அது தெரிந்திருந்தால், அவைகள் மனிதனுடன் பேசும்; அப்பொழுது கெட்ட ஆவிகள் அவனை அழித்துவிடும்; ஏனென்றால், கெட்ட ஆவிகள், நரகத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறபடியினால், ஆன்மா விஷயத்தில் அதாவது பக்தி விஷயத்திலும் அன்பு விஷயத்திலும் மாத்திரமல்லாமல், சரீரம் விஷயத்திலும்கூட மனிதனை அழிக்கிறதைவிட, எதையும் அதிக முயற்சியாய் விரும்புகிறதில்லை. அவைகள் மனிதனுடன் பேசாதபோது விஷயம் வேறுவிதமாயிருக்கிறது; அப்பொழுது, தாங்கள் நினைப்பதும், அதனுடன் தங்களுக்குள்ளேயே தாங்கள் பேசிக்கொள்வதும், அவனிடமிருந்துவருகிறதாக அவைகளுக்கு தெரியாது. ஏனென்றால், தங்களுக்குள்ளேயேகூட அவைகள் மனிதனிடமிருந்துபேசுகின்றன, ஆனால், தாங்கள் பேசுகிறது தங்களுடைய சொந்தமானதென்று அவைகள் நம்புகின்றன; மேலும், ஒவ்வொருவனும், தனக்கு சொந்தமானதை மதித்து அதை நேசிக்கிறான். இவ்விதமாக, ஆவிகளுக்கு தெரியாவிட்டாலும், ஆவிகள் மனிதனை நேசித்து மதிக்க பலாத்காரம் பண்ணப்படுகின்றன. இதைவிட நான் அதிக நிஜமாகயிருக்கிறது வேறொன்றும் இல்லாதபடி, மனிதனுடன் ஆவிகளின் அவ்வித சேர்க்கை இருக்கிறதென்று, அநேக வருஷகாலங்களின் தொடர்ச்சியான அனுபவத்தினால் எனக்கு அவ்வளவு தீர்க்கமாய் தெரிவிக்கப்பட்டது.

**293**. நரகத்துடன் போக்குவரவு வைத்திருக்கிற ஆவிகள் மனிதனுடன்கூட சேர்க்கப்படுகின்றன; ஏனென்றால், மனிதனானவன் எல்லாவித தீமைகளிலும் பிறந்திருக்கிறான், ஆகவே, அவனுடைய முதல் உயிர்முழுமையும் அவைகளிலிருந்து வருகிறது; ஆகையினால், தன்னைப்போலவே ஆவிகள் அவனுடன் சேர்க்கப்படாவிட்டால், அவன் உயிரோடிருக்க முடியாது; அதுவுமன்றி,

அவனுடைய தீமைகளிலிருந்து உண்மையாகவே நீக்கப்பட்டு சீர்திருத்தம் செய்யப்பட முடியாது. இந்த காரணத்திற்காக, அவனுடைய சொந்தவாழ்வில், கெட்ட ஆவிகளால் அவன் வைக்கப்பட்டு, நல்ல ஆவிகளால் அதிலிருந்து நீக்கப்படுகிறான். இந்த இருவகை ஆவிகளின் சக்தியினால் அவன் சமநிலையில்கூட இருக்கிறான்; அவன் சமநிலையிலிருப்பதினால் அவன் தன்னுடைய சுயேச்சியிலிருக்கிறான்; தீமையிலிருந்து நீக்கப்பட்டு, நன்மை பக்கம் அவன் திருப்பப்படக்கூடும்; நன்மைகூட அவனிடத்தில் நடப்படக்கூடும்; அவன் சுயர்ச்சியிலில்லாவிட்டால், இது எந்தவிதத்திலும் செய்யப்படமுடியாது; ஆனால், நரகத்தின் ஆவிகள் ஒரு பக்கத்திலும், சுவர்க்கத்தின் ஆவிகள் மற்றபக்கத்திலும், செயல்பட்டு மனிதன் மத்தியிலும் யிருந்தாலொழிய மனிதனுக்கு சுவேச்சை கொடுக்கப்பட முடியாது. மறுபடியும், மனிதனுடைய உயிரானதுதான் உரிமை வழியாய் அனுபவிக்கிறதிலிருந்து, இவ்விதமாக தன்னிடமேயிருந்து இருக்கிறவரையில், தீமையிலிருக்க விடப்படாவிட்டால், அவனுக்கு எந்த உயிரும் இருக்காதென்றும், மேலும், சுவேச்சையிலில்லாவிட்டால், அவனுக்கு எந்த உயிரும் இல்லை என்றும், நன்மையானதை செய்யக் கட்டாயப்படுத்த முடியாதென்றும், கட்டாயம் செய்யப்பட்டது நிலைக்கிறதில்லை என்றும், மேலும், சுயர்ச்சியில் மனிதன் பெருகிற நன்மையானது அவனுடைய சித்தத்தில் நடப்பட்டு, அவனுடைய சொந்தம்போலாகிறதென்றும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. நரகத்துடனும் சுவர்க்கத்துடனும் ஏன் மனிதன் போக்குவரவு வைத்திருக்கிறான் என்பதற்கு இவைகள் காரணம்.

**294**. நல்ல ஆவிகளுடன் சுவர்க்கத்தின் சம்பந்தத்தினுடையவும், கெட்ட ஆவிகளுடன் நரகத்தின் சம்பந்தத்தினுடையவும் சுபாவத்தையும் குணத்தையும், அதினின்று மனிதனுடன் சுவர்க்கத்தினுடையவும் நரகத்தினுடையவும் சேர்க்கையின் சுபாவத்தையும், குணத்தையும்கூட சொல்லப்படவேண்டும். ஆவிகள் உலகத்திலிருக்கும் எல்லா ஆவிகளும், சுவர்க்கத்துடனாவது நரகத்தினுடனாவது சம்பந்தம் வைத்திருக்கின்றன; கெட்டவைகள் நரகத்துடனும், நல்லவைகள் சுவர்க்கத்துடனும் சம்பந்தம் வைத்திருக்கின்றன. சுவர்க்கமானது இரண்டு கூட்டங்களாகவும், அதேமாதிரி நரகம் இரண்டு கூட்டங்களாக வகையறுக்கப்பட்டிருக்கின்றது;

ஒவ்வொரு ஆவியும் ஏதோ ஒரு கூட்டத்திற்கு சம்பந்தப்பட்டு, அதிலிருந்துவரும் உட்பெருக்கினால் பிழைத்து, இவ்விதமாக, அதனுடன் ஒன்றாக செயல்படுகிறது; ஆகையினால், மனிதன் ஆவிகளுடன் சேர்க்கப்பட்டிருப்பதினால், அவன் சுவர்க்கத்துடன் அல்லது நரகத்துடன்கூட சேர்க்கப்படுகிறான்; நிஜமாகவே, அவனுடைய சொந்த பிரியம் அல்லது அன்பு விஷயத்தில் அங்கே அவனிருக்கும் கூட்டத்தில் சேர்க்கப்படுகிறான்; ஏனென்றால், சுவர்க்கத்தின் எல்லா கூட்டங்களும் நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் காண்பிக்கும் பிரியத்துக்கு தக்கபடி வேறு வேறானதாயிருக்கின்றன; அதேமாதிரி, நரகத்தின் எல்லா கூட்டங்களும், தீமையானதற்கும் பொய்யானதற்கும் கொள்ளும் பிரியங்களுக்கு தக்கபடி வேறுவேறாயிருக்கின்றன. சுவர்க்கத்தின் கூட்டங்களைக் குறித்து, மேலே பார்க்கவும் (நெ. 41 முதல் 45 வரையிலும், அதனுடன் நெ. 148 முதல் 151 வரையிலும்).

**295**. ஆவிகள், பிரியம் அல்லது அன்பு விஷயத்தில், தானிருப்பதுபோலவே, அதே குணமுடைய மனிதனுடன் சேர்க்கப்படுகின்றன. நல்ல ஆவிகள் ஆண்டவரால் அவனுடன் சேர்க்கப்படுகின்றன; ஆனால் கெட்ட ஆவிகள் மனிதனாலேயே அழைக்கப்படுகின்றன. ஆயினும், அவனுடனிருக்கும் ஆவிகள், தன்னுடைய ஆசைகளின் மாறுதல்களுக்கு தக்கபடி மாற்றப்படுகின்றன; சில ஆவிகள் இளமையிலும், மற்றவைகள் பாலப்பிராயத்திலும், மற்றவைகள் பாலியத்திலும் புருடத்துவத்திலும், மற்றவைகள் விருத்தாப்பியத்திலும் அவனுடன் இருக்கின்றன. இளமையில், மனப்புனிதத்திலிருக்கப்பட்டவைகள் இருக்கின்றன; ஆகையினால், மிகவும் உள்ளானது அல்லது மூன்றாவது சுவர்க்கமாயிருக்கிற மனப்புனித சுவர்க்கத்துடன் சம்பந்தப்படுகின்றன; பாலப்பிராயத்தில், தெரிந்துகொள்ளும் ஆசையிலிருக்கிற ஆவிகள் தெரியக்காட்டி, மிகவும் தாழ்ந்த அல்லது முதல் சுவர்க்கத்துடன் போக்குவரவு வைத்திருக்கின்றன; பாலியத்திலும் புருடத்துவத்திலும், உண்மையானதும் நன்மையானதுமாகியவைகளின் பேரில் கொள்ளும் ஆசையிலுமிருந்து, பிறகு விவேகத்திலிருக்கும் ஆவிகள் தோன்றி, இரண்டாவது அல்லது நடு சுவர்க்கத்தில் இருக்கும் ஆவிகளுடன் சம்பந்தம் வைக்கின்றன. ஆனால், விருத்தாப்பியத்தில், ஞானத்திலும் மனப்புனிதத்திலும் இருக்கிற ஆவிகள் தெரியக்காட்டி, மூன்

றுவது அல்லது மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்துடன் போக்கு வரவுவைக்கின்றன. ஆனால் இந்த சேர்க்கையானது சீர்திருத்தப்பட்டு குணப்படுத்தப்படுகிறவர்கள் விஷயத்தில் மாத்திரம் ஆண்டவரால் நடப்பிக்கப்படுகின்றன. அவ்விதமாய் சீர்திருத்தப்பட்டு குணப்படுத்தப்படாதவர்கள் விஷயத்தில் சங்கிதி வேறுவிதமாயிருக்கிறது. நல்ல ஆவிகளால் தீமையிலிருந்து கூடியவரையில் அவர்கள் தடுக்கப்பட, அவைகள் இவர்களுடன்கூட சேர்க்கப்படுகின்றன; ஆனால், அவர்களுடைய நேரான சேர்க்கை, நரகத்துடன் சம்பந்தம் வைத்திருக்கிற கெட்ட ஆவிகளுடன் இருக்கிறது; இவ்விதமாக தாங்கள் எவ்வித ஆவிகளாக இருக்கிறார்களோ, அவ்வித ஆவிகளே அவர்கள் உடைத்தாயிருக்கிறார்கள். அவர்கள் தன்னையே நேசிக்கிறவர்களாகவும் லாபத்தை நேசிக்கிறவர்களாகவும், பழிவாங்குதலை நேசிக்கிறவர்களாகவும், அல்லது விபசாரத்தை நேசிக்கிறவர்களாகவும் இருந்தால், அவ்வித ஆவிகளே தோன்றி, அவர்களுடைய தீங்குள்ள ஆசைகளில் வசிக்கின்றன; மனிதனானவன் நல்ல ஆவிகளால் தீமையிலிருந்து எவ்வளவு தடுக்கமுடியாமல் போய்விடுகிறானோ, அவ்வளவு தூரம் இந்த கெட்ட ஆவிகள் அவனுக்கு ஆசை மூட்டி, ஆசை அரசாளுகிற அளவு, அவனை ஓட்டிக்கொண்டு பின்னடைகிறதில்லை. இவ்விதமாக, ஒரு துஷ்ட மனிதன் நரகத்துடன் சேர்க்கப்படுகிறான், நல்ல மனிதன் சுவர்க்கத்துடன் சேர்க்கப்படுகிறான்.

**296.** மனிதனானவன் சுவர்க்கத்தின் ஒழுங்கில் இல்லாதபடியினால், அவன் ஆண்டவரால் ஆவிகள் மூலமாக ஆளப்படுகிறான்; ஏனென்றால், அவன் நரகத்தைச்சேர்ந்த தீமைகளிலும் இவ்விதமாக தெய்வீக ஒழுங்குக்கு முழுமையும் விரோதமாக ஓர் நிலைமையிலும் பிறந்திருக்கிறான். ஆகையினால், அவன் ஒழுங்கிற்கு கொண்டுவரப்படவேண்டும்; ஆவிகள் மூலமாய் நடுத்தரமாய் மாத்திரம் அப்படி செய்யப்படக்கூடும். சுவர்க்கத்தின் ஒழுங்குக்கு தக்கபடி இருக்கிற நன்மையில் மனிதன் பிறந்திருந்தால், விஷயம் வேறு மாதிரியிருக்கும்; ஏனென்றால், அப்பொழுது, அவன் ஆண்டவரால் ஆவிகள் மூலமாய் ஆளப்படாமல், ஆனால் ஒழுங்கின் மூலமாகவே, இவ்விதமாக பொதுவான உட்பெருக்கினால் ஆளப்படுவான். தன்னுடைய சிந்தனையிலிருந்தும் சித்தத்திலிருந்தும் செய்கைக்கு செல்லுகிறபொருள்கள் விஷயத்தில் இவ்விதமாக அவன் பேச்சு விஷயத்

திலும் செய்கைகள் விஷயத்திலும், மனிதனானவன் இந்த உட்பெருக்கினால் ஆளப்படுகிறான்; ஏனென்றால், இந்த இரண்டு மனிதனுடன் சேர்க்கப்பட்டிருக்கிற ஆவிகள் பொதுவில் ஒன்றையும் உடைத்தாயிருக்காத இயல்பான ஒழுங்கின்படி பாய்கின்றன. பிராணிகள்கூட சூக்கும உலகத்திலிருந்து வருகிற பொதுவான உட்பெருக்கினால் ஆளப்படுகின்றன; ஏனென்றால், அவைகள் தங்கள் உயிரின் ஒழுங்கில் இருக்கின்றன. அவைகளுக்கு பகுத்தறியும் சக்தியில்லாதபடியினால், அந்த ஒழுங்கை புரட்டி அழிக்க சக்தியுள்ளவைகளாக இருக்கவில்லை. மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் வித்தியாசம் என்னவென்பது மேலே பார்க்கப்படலாம் (செ. 39).

**297.** சுவர்க்கமானது மானிடவமிசத்துடன் ஐக்கியப்படுதலைப்பற்றி, ஆண்டவரே ஒவ்வொரு மனிதனுடனும் சுவர்க்கத்தின் ஒழுங்கின்படி, அவனுடைய மிகவும் அந்தரங்கமான பொருள்களிலும், இறுதியான பொருள்களிலும் இரண்டிலும் பாய்கிறார் என்பது, இன்னும் தெரிந்திருக்கப்படவேண்டும். அவர் அவனை சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ள தயார்செய்து, அவனுடைய மிகவும் அந்தரங்கமானதிலிருந்து, அவனுடைய இறுதியான பொருள்களையும், அதே காலத்தில் இறுதியானதிலிருந்து மிகவும் உள்ளானதையும் ஆண்டு, இவ்விதமாக ஒவ்வொன்றையும் அவனுடன் இணையில் வைக்கிறார். ஆண்டவரின் இந்த உட்பெருக்கு, நேரான உட்பெருக்கு என்று சொல்லப்படுகிறது; ஆனால், ஆவிகள் மூலமாக சம்பவிக்கிற இதர உட்பெருக்கு, நடுத்தரமான உட்பெருக்கு என்று சொல்லப்படுகிறது; பின் கூறியது முன் கூறியதினால் பிழைக்கிறது. ஆண்டவரிடமிருந்தே வருகிற நேரான உட்பெருக்கு அவருடைய தெய்வீக மானிடத்தன்மையிலிருந்துவந்து, மனிதனுடைய சித்தத்திலும், அவனுடைய சித்தத்திலிருந்து அவனுடைய புத்தியிலும், இவ்விதமாக, மனிதனுடைய நன்மையிலும், நன்மையின் மூலமாக அவனுடைய உண்மையிலும், அதேவாகிறபடி, அவனுடைய அன்பிலும், அன்பின் மூலமாய் அவனுடைய பக்தியிலும், இருக்கிறது; எதிரிடையாய் அப்படியில்லை; அன்பில்லாமல் பக்தியிலும் நன்மையில்லாமல் உண்மையிலும், அல்லது சித்தத்திலிருந்து வராத புத்தியிலும் இன்னும் குறைவாய் பாய்கிறது. இந்த தெய்வீக உட்பெருக்கு சாசுவதமாயிருக்கிறது; நல்லவர்களால் நன்மையில்

ஏற்றுக்கொள்ளப்படுகிறது; ஆனால் கெட்டவர்களால் அப்படி ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை; ஏனென்றால், அவர்கள் அதை தள்ளுகிறார்கள், திகைக்கச் செய்கிறார்கள் அல்லது புறட்டுகிறார்கள் ஆகவே, அவர்களுக்கு ஞானார்த்தத்தில் மரணமாயிருக்கிற ஒரு கெட்ட உயிர் இருக்கிறது.

**298**. சுவர்க்கத்திற்கு சேர்க்கப்பட்டிருக்கிறவைகளும், நரகத்திற்கு சேர்க்கப்பட்டிருப்பவைகளுமாகிய, மனிதனுடன் இருக்கும் ஆவிகள், மனிதனுக்குள் தங்கள் சொந்த ஞாபகத்திலிருந்தாம் அதன் சிந்தனையிலிருந்தும் எப்பொழுதும் பாய்கிறதில்லை; ஏனென்றால், தங்கள் சொந்த சிந்தனையிலிருந்து உள்ளே பாய்ந்தால், அவைகளுக்குச் சேர்ந்த எதுவும் மனிதனுக்கு தன்னுடையதுபோல் தோன்றும் (மேலே செ. 256 பார்க்கவும்) அப்படியிருந்தாலும், நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் அன்புக்கு சேர்ந்த ஒரு பிரியமானது சுவர்க்கத்திலிருந்து, அவைகள் மூலமாய் மனிதனுக்குள் பாய்கிறது. மேலும், தீமையினிடத்தும் பொய்யினிடத்தும் கொள்ளும் அன்பிற்குச் சேர்ந்த ஒரு பிரியமானது நரகத்திலிருந்து அவைகள் மூலமாய் உள்ளே பாய்கிறது. ஆகையினால், மனிதனுடைய ஆசையானது உள்ளே பாய்கிறதுடன் ஒத்துப்போகிறஅளவு, அவன் அதை தன்னுடைய சொந்த சிந்தனையில் பெற்றுக்கொள்ளுகிறான்; ஏனென்றால், மனிதனுடைய அந்தரங்கமான சிந்தனை அவனுடைய ஆசை அல்லது அன்புக்கு தக்கபடி முற்றுமிருக்கிறது; ஆனால், அது ஒத்துக்கொள்ளாத அளவு அவன் அதை பெற்றுக் கொள்ளுகிறதில்லை. ஆகையினால் சிந்தனையானது, மனிதனுக்குள் ஆவிகள் மூலமாய்பாயாமல்,நன்மையினிடத்துகொள்ளும்ஆசையும், தீமையினிடத்துக் கொள்ளும் ஆசையும் அப்படி பாய்கிறபடியினால், மனிதனுக்கு சுவேச்சையிருக்கிறபடியினால், தனக்கு பிரியமானதை எடுத்துக்கொள்ளும் சக்தியிருக்கிறதென்றும், இவ்விதமாக அவன் சிந்தனையில் நன்மையைப் பெற்றுக்கொண்டு தீமையை நீக்கக்கூடுமென்றும் விசதமாகிறது; ஏனென்றால், அவனுக்கு வேதத்திலிருந்து எது நல்லது என்றும், எது கெட்டதென்றும் தெரியும். ஆசையிலிருந்து, சிந்தனையில் அவன் பெற்றுக்கொள்வது அவனுக்கு உரித்தாக்கப்படுகிறது. ஆனால், ஆசையிலிருந்து சிந்தனையில் அவன் பெற்றுக்கொள்ளாதது, அவனுக்கு உரித்தாக்கப்படுகிறதில்லை. இந்த யோசனைகளால், மனிதனுக்குள் சுவர்க்கத்திலிருந்து

வரும்நன்மையினுடையவும் நரகத்திலிருந்துவரும் தீமையினுடைய வும், குணமானது அறிந்து கொள்ளப்படலாம்.

**299**. மனிதனுடைய சஞ்சலத்தினுடையவும், விசனத்தி னுடையவும், மனக்கோட்டரவு என்று சொல்லப்படுகிற உள்ளான துயரத்தினுடையவும் மூலத்தை தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது. இன்னும் நரகத்தின் சேர்க்கையிலில்லாத ஆவிகள் இருக்கின்றன; ஏனென்றால், அவைகள் இன்னும் முதல் நிலைமையி லிருக்கின்றன; அவைகளைப்பற்றி, நாம் ஆவிகளின் உலகத்தைக் குறித்து பேச வரும்போது இனிமேல் பேசலாம். இந்த ஆவிகள், இரைப்பையில் அழுகிப்போகிறவைகளைப் போன்ற ஜீரணமாகாத தும், கெட்டுப்போனதுமான பொருள்களை விரும்புகின்றன. ஆகையி ஞல், மனிதனுக்குள் அவ்வித பொருள்கள் இருக்கிற இடத்தில் அவைகள் பிரத்தியக்ஷமாகின்றன; ஏனென்றால், இவைகள் அவை களுக்கு இன்பமானவைகளாயிருக்கின்றன; மேலும், அங்கே அவைகள் ஒன்றோடொன்று தங்களுடைய சொந்த தீமையான ஆசையிலிருந்து பேசுகின்றன. அவர்கள் பேச்சின் ஆசையானது, இந்த மூலத்திலிருந்து மனிதனுக்குள் பாய்கிறது; அது மனித னுடைய சொந்தமானதற்கு எதிரிடையானதாயிருந்தால், அவ னுக்குள், அது துக்கமாகவும், மனக்கோட்டரவாகவும், கவலையாக வும் ஆய்விடுகிறது; ஆனால், அது இதமானதாயிருந்தால், அது அவனுக்குள் சந்தோஷமாகவும், மகிழ்ச்சியாகவும் ஆய்விடுகிறது. இந்த ஆவிகள், இரைப்பை பக்கத்தில், சிலது இடது பக்கமும், சிலது வலது பக்கமும், சிலது கீழேயும், சிலது மேலேயும் தோன்றுகின்றன. அதனுடன்கூட, அவைகள் சமீபத்திலும் அல்லது தூரத்திலும் இருக்கிறதுபோல தோன்றுகின்றன; தாங்கள் இருக்கப்பட்ட ஆசைகளுக்குத் தக்கபடி இவ்விதமாக பலவிதமாய் பிரத்தியட்ச மாகின்றன. மனதின் சஞ்சலத்தின் மூலம் இதுதானென்று, அதிக அனுபவத்திலிருந்து தெரிந்துகொண்டு, நிசமென்று நம்பப் பட எனக்கு இடம்கொடுக்கப்பட்டது; ஏனென்றால், நான் அவை களைப் பார்த்திருக்கிறேன், கேட்டிருக்கிறேன், அவைகளினால் உண் டான கவலைகளை உணர்ந்திருக்கிறேன், அவைகளுடன் பேசியு மிருக்கிறேன்; அவைகள் துரத்தப்பட்டபோது கவலை நின்றுபோய் விட்டது; அவைகள் திரும்பிவந்தபோது கவலையும் திரும்பிவந்தது; அவைகள் அணுகுதலுக்கும் விலகுதலுக்கும் தக்கபடி அதன்

விர்த்தியையும் குறைவையும் நான் கவனித்திருக்கிறேன். மனசாட்சியில்லாதபடியினுல், மனசாட்சி என்பது என்னவென்று தெரியாத சிலர் ஏன் அதனுடைய உபாதிகளை இரைப்பையிக்கு ஆரோபிக்கிருர்களென்பது, இதிலிருந்து எனக்கு தெளிவாக்கப்பட்டது.

**300.** மனிதனுடன் சுவர்க்கத்தின் இணைவு, மனிதன் மனிதனுடன் சேர்வதினுல் உண்டாகும் இணைவுபோலில்லாமல், அவனுடைய மனதின் உள்ளானவைகளுடன், இவ்விதமாக அவனுடைய சூக்குமம் அல்லது உள்ளான மனிதனுடன் இணைவாயிருக்கிறது. ஆனுல், அவனுடைய ஸ்தூலமான அல்லது புறம்பான மனிதனுடன் அன்னுவயங்களால்கூட, ஒரு இணைவு இருக்கிறது. அந்த இணைவைப்பற்றி, வேதத்தினுல் மனிதனுடன் சுவர்க்கத்தின் இணைவைப்பற்றி நாம் பேசவரும்போது அடுத்த அத்தியாயத்தில் அதிகம் சொல்லுவோம்.

**301.** மானிட வமிசத்துடன் சுவர்க்கத்தினுடையவும், சுவர்க்கத்துடன் மானிடவர்க்கத்தினுடையவும் இணைவானது, ஒன்று மற்றதிலிருந்து பிழைக்கிறதென்கிற சுபாவமுடையதென்பதும்கூட, அடுத்த அத்தியாயத்தில் காண்பிக்கப்படும்.

**302.** மானிட வமிசத்துடன் சுவர்க்கத்தினுடைய சேர்க்கையைப்பற்றி, நான் தேவர்களுடன் பேசி, திருச்சபையின் மனிதன், எல்லா நன்மையும் நிஜமாகவே ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், தேவர்கள் மனிதனுடன் இருக்கிருர்களென்றும், ஆனுல், சிலர்மாத்திரம் தேவர்கள் மனிதனுடன் சேர்க்கப்படுகிருர்களென்று நிஜமாக நம்புகிருர்களென்றும், இன்னும் குறைவாய், அவர்கள் அவனுடைய சிந்தனையிலும் ஆசையிலும் இருக்கிருர்களென்றும், சொல்லுகிறதாக நான் சொன்னேன். இதற்கு தேவர்கள், உலகத்தில் அவ்வித நம்பிக்கை இருக்கிறதாகவும், இன்னும் அவ்விதமாக பேசுதல் இருக்கிறதாகவும், சுவர்க்கத்தைப்பற்றியும், மனிதனுடன் அதன் சேர்க்கையைப்பற்றியும், அவர்களுக்கு கற்பிக்கிற வேதம் இருக்கப்பட்ட திருச்சபையிலேயே, ஆச்சரியம் உண்டாக்கும்படியாக முக்கியமாய் இருக்கிறதென்றும், தங்களுக்கு தெரியுமென்று சொன்னுர்கள்; அப்படியிருந்தாலும், இந்த சேர்க்கையின் சுபாவமானது, ஆவிகள் அவனுடன் சேர்க்கப்பட்டாலொழிய, மனிதனுனவன் சின்னஞ் சிறியதைகூட நினைக்கமுடியாதபடிக்கும், அவனுடைய

ருக்கும உயிர், இதின்பேரில் சார்ந்திருக்கும்படிக்கும் இருக்கிறது. இந்த விஷயத்தைப்பற்றி இருக்கும் அஞ்ஞானத்தின்காரணம்,மனித னைவன், உயிரின் முதல்சொரூபத்துடன் சம்பந்தமில்லாமல், தன் னிடமே இருந்து உயிரோடிருப்பதாக நம்புகிறான் என்பதும், அந்த சம்பந்தம் உடைக்கப்பட்டால், அவன் உடனே இறந்து விழுந்து விடுபவனாயிருக்கையில், அது சுவர்க்கங்களின் மூலமாய் இருக்கிறதென்று, அவன் தெரியாமல் இருக்கிறான் என்பதுமா யிருக்கிறது. உண்மையாயிருக்கிறபடி, எல்லா நன்மையும் ஆண்டவ ரிடமிருந்து வருகிறதென்றும், எல்லா தீமையும் நரகத்திலிருந்து வருகிறதென்றும், மனிதன் நம்பினால், அவன் தன்னிடமே யிருக் கும் நன்மையை, தகைமைக்கு உரித்தான விஷயமாக செய்யவும் மாட்டான்; தீமையும் அவன்பேரில் சாட்டப்படவும் மாட்டாது; ஏனென்றால், இவ்விதமாக, அவன் நினைத்து செய்யும் எல்லா நன் மையிலும், அவன் ஆண்டவரை எதிர்பார்ப்பான்; மேலும், உள்ளே பாயும் எல்லா தீமையும் அது புறப்படுகிற இடமாகிய நரகத்திற்கு தள்ளப்படும். ஆனால், மனிதனானவன் சுவர்க்கத்திலிருந்தாவது நரகத்திலிருந்தாவது தனக்குள் எதுவும் பாய்கிறதென்று நம்பாமல், தான் நினைக்கிறதும் இச்சிக்கிறதுமாகிய எல்லா பொருள்களும் தன் னிடமே இருக்கிறதென்றும், தன்னிடமிருந்து வருகிறதென்றும் நினைக்கிறபடியினால், தீமையை தனக்கே உரித்தாக்கி, உள்ளே பாய் கிற நன்மையை தகைமையினால் அசுத்தப்படுத்துகிறான்.

# XXXIV

## வேதத்தின் மூலமாய் மனிதனுடன் சுவர்க்கத்தின் சேர்க்கை.

**303.** உள்ளான அறிவிலிருந்து நினைக்கிறவர்கள், முதற் பொருளுடன் மத்தியிலுள்ளவைகள் மூலமாய் எல்லா பொருள்களின் ஒரு சம்பந்தமிருக்கிறதென்றும், அந்த சம்பந்தத்திலில்லாத எதுவும் சிதறடிக்கப்படுகிற தென்றும், அறிந்துகொள்ளலாம். ஏனென்றால், தனக்கு முந்திய பொருளிலிருந்து, இவ்விதமாக, முதற் பொருளிலிருந்து அல்லாமல் தன்னிடமே இருந்து, எதுவும் பிழைக்காதென்றும், மூலகாரணமானது அதன் காரியத்திலிருந்து நீக்கப்பட்டபோது, காரியமானது கரைக்கப்பட்டு, ஒன்றுமில்லாமல் போகிறபடியினால், முந்திய பொருளின் சம்பந்தம் தன்னுடைய மூல காரணத்துடன் இருக்கும் ஒரு காரியத்தின் சம்பந்தம்போல இருக்கிறதென்றும், அவர்களுக்கு யோசித்துப் பார்த்தால் தெரிய வரும். அறிஞர் இவ்விதமாக நினைத்தபடியினால், நித்தியமாயிருத்த லென்பது, நித்தியமாக தோன்றுதலென்றும், இவ்விதமாக எல்லா பொருள்களும், ஒரு முதற்பொருளிலிருந்து நித்தியமாக நிலைத்திருத் தலை உடைத்தாயிருக்கிறதென்றும், அந்த முதற்பொருளிலிருந்து தோன்றியபடியினால், அவைகள் சாசுவதமாய் தோன்றுகின்றன வென்றும், அதாவது அதிலிருந்து நித்தியமாக இருத்தலை அடை கிறதென்றும், அவர்கள் அறிந்துகொண்டு சொன்னார்கள். ஆனால் தனக்கு முந்தியதாயிருக்கிற பொருளுடன், இவ்விதமாக எல்லா பொருள்களுக்கும் மூலமாயிருக்கிற முதல் பொருளுடன் இருக்கும், ஒவ்வொரு பொருளின் சம்பந்தத்தினுடைய சுபாவமானது, பல விதமாயும் வித்தியாசமாயுமிருப்பதினால், அது கொஞ்சம் வார்த்தை களினால், சொல்லி முடியாது. சூக்கும உலகத்துடன் ஸ்தூல உலகத்தினுடைய ஒரு சம்பந்தமிருக்கிறதென்றும், ஆகவே, சூக்கும உலகத்திலுள்ள எல்லா பொருள்களுடனும், ஸ்தூல உலகத்தி லுள்ள எல்லா பொருள்களின் ஒரு அன்னுவயமிருக்கிற தென்றும், (கெ. 103 முதல் 115 வரையில் பார்க்கவும்), அதனுடன், சுவர்க் கத்தின் எல்லா பொருள்களுடன் மனிதனுடைய எல்லா பொருள் களின் ஒரு சம்பந்தமும், அதிலிருந்து ஒரு அன்னுவயமும், இருக் கிறதென்றும், பொதுவான வார்த்தைகளில் மாத்திரம் நாம் சொல்

லக்கூடும். இதைப்பற்றி மேலே செ. 87 முதல் 102 வரையில்கூட பார்க்கவும்.

**304.** மனிதனானவன் ஆண்டவருடன் ஒரு சேர்க்கையும் சம்பந்தமும், ஆனால் சுவர்க்கத்தின் தேவர்களுடன் ஒரு கூட்டுறவு மாத்திரம் உடைத்தாயிருக்கும்படியாக, சிருட்டிக்கப்பட்டிருக்கிறான். மனிதனானவன் சிருட்டிக்கப்படும்போதே, மனதுக்குசேர்ந்த அவன் அந்தரங்கமானவைகள் விஷயத்தில், ஒரு தேவனைப்போலிருப்பதினால், தேவர்களுடன் ஐக்கியமில்லாமல், கூட்டுறவு மாத்திரம் உடைத்தாயிருக்கிறான்; ஏனென்றால், மனிதன் ஒரு தேவனைப்போல ஒரு சித்தத்தையும், அவனுடையதைப்போல ஒரு புத்தியையும் உடைத்தாயிருக்கிறான்; ஆகையினால், இறந்த பிறகு மனிதனானவன், தெய்வீக ஒழுங்கை அனுசரித்து வாழ்ந்திருந்தால், அவன் ஒரு தேவனாகி, தேவர்களுக்குறிய ஞானத்தை உடைத்தாயிருக்கிறான். ஆகையினால், சுவர்க்கத்துடன் மனிதனுடைய சேர்க்கையைப்பற்றி நாம் பேசும்போது, ஆண்டவருடன் அவருடைய சேர்மானத்தையும், அதனுடன் தேவர்களுடன் அவனுடைய கூட்டுறவையும் நாம் கருதுகிறோம்; ஏனென்றால், சுவர்க்கம் சுவர்க்கமாகிறது, தேவர்களுக்கு தகைமையானதினால் அல்லாமல், ஆண்டவரின் தெய்வத்தன்மையிலிருந்து அப்படியாகிறது. ஆண்டவரின் தெய்வீகம் சுவர்க்கத்தை ஏற்படுத்துகிறது என்பது மேலே (செ. 7 முதல் 12 வரையில்) பார்க்கப்படலாம். ஆயினும், தன்னுடைய உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில், சூக்கும உலகத்தில் மாத்திரமல்லாமல், அதனுடன்கூட அதேகாலத்தில் புறம்பானவைகள் சம்பந்தப்பட்டவரையில், ஸ்தூல உலகத்திலும் மனிதன் இருக்கிறான் என்பதினால், தேவர்களுக்கு இல்லாததற்குமேல், மனிதனுக்கு இருக்கிறது என்று ஏற்படுகிறது. ஸ்தூல உலகத்திலிருக்கும் அவனுடைய புறம்பானவைகள், அதாவது பொதுவாக, அறிவுகளும், விஞ்ஞானங்களும், உலகவாசனை அடிக்கிறவரையில், அவைகளின் இன்பங்களும், சந்தோஷங்களும், அதனுடன் சரீரத்தின் இந்திரியங்களுக்கு சேர்ந்த அநேக சந்தோஷங்களும், அதனுடன் அவனுடைய இந்திரியங்களும், பேச்சும், செய்கைகளும், அவனுடைய ஸ்தூலமான அல்லது புறம்பான ஞாபகத்திற்கும், அதிலிருந்து வரும் சிந்தனைக்கும் மனோபாவத்துக்கும் சேர்ந்த அநேக பொருள்களுமாயிருக்கின்றன. இவை

கள் எல்லாம், ஆண்டவரின் தெய்வீக உட்பெருக்கு முடிவா கிற இறுதிப் பொருள்களாயிருக்கின்றன; ஏனென்றால், இது மத்தியில் நிற்காமல், அதன் இறுதியானவைகளுக்கு போகின்றன. இவைகளிலிருந்து, தெய்வீக ஒழுங்கின் இறுதியானது, மனிதனி லிருக்கிறதென்றும், அவன் அதன் இறுதியானதாயிருக்கிறதினால், அதன் மூலமாகவும், கடைகாலாகவுமிருக்கிறானென்றும், விசதமா கிறது. ஆண்டவரின் தெய்வீக உட்பெருக்கு மத்தியில் நிற்காமல், முன் சொல்லியபடி, அதன் இறுதியானவைகளுக்கு செல்லுகிற படியினாலும், அது செல்லுகிற இந்த மத்தியமானது, தேவர்களின் சுவர்க்கமாயிருக்கிறபடியினாலும், இறுதியானது மனிதனுடன் இருக்கிறபடியினாலும், சேர்க்கப்படாத எதுவும் நிலைத்திருக்க முடியாதபடியினாலும், மானிட வமிசத்துடன் சுவர்க்கத்தினுடைய சம்பந்தமும் சேர்க்கையும், ஒன்று மற்றதிலிருந்து மாறாத நிலை மையை அடையும்படிக்கும், சுவர்க்கத்தை நீக்கி மானிட வமிச மானது, கொளுக்கியில்லாத ஒரு சங்கிலியைப் போலும், மானிட வமிசமில்லாமல், சுவர்க்கமானது, அஸ்திவாரமில்லாத ஒரு வீட்டைப்போலுமிருக்கும்படிக்கும் இருக்கிறதென்று ஏற்படு கிறது.

**305**. ஆனால், மனிதனானவன், தன்னையே நேசித்தலினாலும், உலகத்தை நேசித்தலினாலும், தன்னுடைய உள்ளானவைகளை சுவர்க்கத்திற்கு தூரமாக திருப்பிவிட்டு, அவைகளை உலகத்தி னிடத்தும் தன்னிடத்தும் திருப்பிவிட்டதின்பொருட்டு, சுவர்க்கத் துடன் தன்னுடைய சம்பந்தத்தை உடைத்துவிட்டபடியினாலும், இவ்விதமாக, சுவர்க்கத்திற்கு ஒரு மூலமாகவும் ஒரு கடைக்காலாக வும், இனிமேல் உபயோகமாகாதபடி, தானே அவன் பிரிந்து கொண்ட படியினாலும், சுவர்க்கத்திற்கு இருக்கவேண்டிய ஒரு மூலத்திற்கும் அஸ்திவாரத்திற்கும் பதிலுக்காகவும், அதனுடன் மனிதனுடன் சுவர்க்கத்தின் சேர்க்கைக்காகவும், ஆண்டவரால் ஒரு நடுத்தரமானது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த நடுத்தர மானது வேதமாயிருக்கிறது. ஆனால், வேதமானது அவ்வித நடுத் தரமானதாக எப்படி உபயோகப்படுகிறதென்பது, பரலோக இரகசி யங்கள் எனும் நூலில் அநேக இடங்களில் காண்பிக்கப்பட்டிருக் கிறது; அவைகள் எல்லாம், வெளிப்படுத்தின சுவிசேஷம் எனும் நூலில் சொல்லப்பட்ட வெள்ளை குதிரையைப்பற்றி எழுதிய சிறு

நூலிலும், அதனுடன் புதிய எருசலேம் நகரமும், அதன் சுவர்க்க கோள்கையும் எனும் நூலுக்கு அனுபந்தத்திலும் சேர்க்கப்பட்டிருப்பது பார்க்கப்படலாம்.

**306.** மிகவும் பூர்வீக ஜனங்களின் உள்ளானவைகள் சுவர்க்கத்தின் பக்கம் திருப்பப்பட்டிருந்ததினால், அவர்களுக்கு நேரான வெளிப்பாடு இருந்ததென்றும், ஆகையினால், ஆண்டவர் அந்த காலத்தில் மானிட வமிசத்துடன் சேர்க்கை உடைத்தாயிருந்ததாகவும், சுவர்க்கத்திலிருந்து நான் தெரியப்படுத்தப்பட்டிருக்கிறேன். அவர்கள் காலத்திற்கு பின்பு, அவ்வித நேரான வெளிப்பாடு இல்லாமல் அன்னுவயங்களால் மத்தியஸ்தமானதாயிருந்தது; ஏனென்றால், எல்லா தெய்வீக ஆராதனையும் அக்காலத்தில் அன்னுவயங்களால் அமைந்திருந்தது; இந்த காரணத்திற்காக, அக்காலத்து திருச்சபைகள் பிரதிநிதிச் சபைகளென்று சொல்லப்பட்டன. அன்னுவயத்தினுடையவும், அறிகுறியினுடையவும் சுபாவம், அக்காலத்தில் ஊடாட்டமாக தெரிந்திருந்தது; மேலும், பூமியிலிருக்கும் எல்லா பொருள்களும், சுவர்க்கத்திலும், திருச்சபையிலுமிருக்கும் சூக்குமப் பொருள்களுடன் அன்னுவயப்படுகின்றனவென்றும், அதாவது அதேவாகிறபடி அவைகளை சாயல்காட்டினவென்றும் அவர்களுக்குத்தெரியும்; ஆகையினால், அவர்களின் ஆராதனையின் புறம்பானவைகளாயிருந்த ஸ்தூலப்பொருள்கள் சூக்குமமாய் நினைக்க, இவ்விதமாக தேவர்களுடன் சேர்ந்து நினைக்க வழிவகைகளாக உபயோகப்பட்டன. அன்னுவயங்களுடையவும், அறிகுறியினுடையவும் அறிவு மறந்துபோய்விட்டபிறகு, எல்லா வார்த்தைகளும் அவைகளின் அருத்தங்களும் அன்னுவயங்களாயிருக்கிறதும், இவ்விதமாக, தேவர்கள் இருக்கப்பட்ட சூக்கும அல்லது உள்ளான அருத்தத்தை அடக்கி யிருக்கிறதுமாகிய வேதம் எழுதப்பட்டது. இந்த காரணத்திற்காக, ஒரு மனிதன் வேதத்தை வாசித்து, சொல்லார்த்தம் அல்லது புறம்பான அருத்தத்திற்கு தக்கபடி அதை உணருங்கால், தேவர்கள் அதை உள்ளான அல்லது சூக்குமமான அருத்தத்தில் அறிந்து கொள்ளுகிறார்கள்; ஏனென்றால், தேவர்களின் எல்லா சிந்தனையும் சூக்குமமாயிருக்கிறது; ஆனால், மனிதனுடைய சிந்தனை ஸ்தூலமாயிருக்கிறது. இந்த சிந்தனைகள், நிஜமாகவே, மிகவும் பலவிதமாக தோன்றுகின்றன; ஆயினும், அவைகள் அன்னுவயப்படுகிறபடியினால் எல்லாம் ஒன்றாயிருக்கின்றன. அதனால்தான், மனி

தன் சுவர்க்கத்திலிருந்துதானே நீங்கிகொண்டு, உடன்பாட்டை உடைத்துவிட்ட பிறகு, ஆண்டவரால் மனிதனுடன் சுவர்க்கத்தினுடைய சேர்க்கையின் பொருட்டு, வேதத்தின் மூலமாய் ஒரு உபகரணம் ஏற்படுத்தப்பட்டது.

**307**. சுவர்க்கமானது மனிதனுடன் ஆண்டவரால் சேர்க்கப்படும் விதத்தை, அதிலிருந்து எடுத்த சில வாக்கியங்களால், நான் உதகரிக்கிறேன். புதிய எருசலேம் நகரம், வெளிப்படுத்தின விசேஷத்தில் அடியில் கண்டபடி விவரிக்கப்பட்டிருக்கிறது:—"நான் புதிய வானத்தையும் புதிய பூமியையும் கண்டேன்; முந்தின வானமும் முந்தின பூமியும் ஒழிந்துபோயின. நான் புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரத்தை தேவனிடத்தினின்று, பரலோகத்தை விட்டு இறங்கிவரக் கண்டேன். அந்த நகரம் சதுரமாயிருந்தது, அதன் அகலமும் நீளமும் சமமாயிருந்தது. அவன் அந்தக் கோலினால் நகரத்தை அளந்தான்; அது பன்னீராயிரம் ஸ்தாதி அளவாயிருந்தது. அதன் நீளமும் அகலமும் உயரமும் சமமாயிருந்தது. அவன் அதின் மதிலை அளந்தபோது, அது தூதனுடைய அளவாகிய மனுஷ அளவின்படியே, நூற்று நாற்பத்து நான்கு முழமாயிருந்தது. அதின் மதில் வச்சிரக் கல்லால் கட்டப்பட்டிருந்தது; நகரம் தெளிந்த பளிங்குக்கு ஒப்பான சுத்தப் பொன்னுயிருந்தது; நகரத்து மதில்களின் அஸ்திபாரங்கள் சகலவித இரத்தினங்களினுலும், அலங்கரிக்கப்பட்டிருந்தன. பன்னிரண்டு வாசல்களும் பன்னிரண்டு முத்துக்களாயிருந்தன; நகரத்தின் வீதி தெளிவுள்ள பளிங்குபோலச் சுத்தப் பொன்னுயிருந்தது" (xxi. 1, 2, 16—19, 21). இந்த வார்த்தைகளை படிக்கிற மனிதன் சொல்லார்த்தத்தின்படி மாத்திரம், அதாவது, பார்க்கப்படும் சுவர்க்கம் பூமியுடன் அழிந்துபோகப்பட்டவைகளென்றும், புதிய சுவர்க்கம் உண்டாகுமென்றும், பரிசுத்தமுள்ள நகரமாகிய எருசலேம் புதிய பூமியின்பேரில் இறங்குமென்றும், அது விவரிக்கப்பட்டத்தின்படி, அதன் அளவுகள் விஷயத்தில் இருக்கப் போகிறதென்றும், அவைகளை அறிந்துகொள்ளுகிறுன்: ஆனுல் மனிதனுடன் இருக்கும் தூதர்கள், இவைகளை முழுமையும் வேறு விதமாய் அறிந்துகொள்ளுகிறுர்கள்; ஏனென்றுல், அவர்கள் மனிதன் ஸ்தூலமாய் அறிந்துகொள்வதை சூக்குமமாய் அறிந்துகொள்ளுகிறுர்கள். புதிய வானம் புதிய பூமி என்பதினுல், ஒரு

புதிய சபை என்று அவர்கள் அறிந்துகொள்ளுகிறார்கள். எருச லேம் நகரம், கடவுளிடமிருந்து சுவர்க்கத்தின் மூலமாய் இறங்குதல் என்பதினால், அவர்கள் ஆண்டவரால் வெளிப்படுத்தப்பட்ட அதன் பரலோகத்து கொள்கையை அறிந்துகொள்ளுகிறார்கள். சமமாயிருக்கிற அதன் நீளம், அகலம், உயரம் என்பதினாலும், ஒவ்வொன்றும் பன்னீராயிரம் ஸ்தாதி என்பதினாலும், அவர்கள் அந்தக் கொள்கையின் எல்லாம் நன்மைகளையும் உண்மைகளையும் சேர்த்து அறிந்துகொள்ளுகிறார்கள். நகரத்தின் மதில் என்பதி னால், அதை தாங்குகிற உண்மைகளை அறிந்து கொள்ளு கிறார்கள். தூதனுடைய அளவாகிய மனுஷ அளவின்படியே நூற்று நாற்பத்து நான்கு முழமாயிருந்த மதிலின் அளவு என்பதினால், அவர்கள் ஒன்று சேர்ந்து உண்மைகளையும் அவைகளின் குணத்தையும் ஆதரிக்கிற எல்லாரையும் அறிந்து கொள்ளுகிறார்கள். முற்றுக்களாயிருந்த பன்னிரண்டு வாசல் கள் என்பதினால், ஆரம்பமான உண்மைகளென்று அறிந்துகொள்ளு கிறார்கள்; முற்றுக்கள்கூட அவ்வித உண்மைகளை கருதுகின்றன. விலை உயர்ந்த இரத்தினங்களினால் கட்டப்பட்டிருந்த மதிலின் அஸ்திபாரங்கள் என்பதினால், அந்த கொள்கையானது ஏற்படுத்தப் பட்டிருக்கிற அறிவுகள் என்று அறிந்துகொள்ளுகிறார்கள். நகரமும் அதின் வீதியும் அமைக்கப்பட்டிருந்த பளிங்குக்கு ஒப்பான பொன் என்பதினால், கொள்கையானது அதன் உண்மைகளுடன் தெளி வாகிற அன்பின் நன்மையை அறிந்து கொள்ளுகிறார்கள். தேவ தூதர்கள், மனிதர்கள் அவைகளைப் பார்க்கிறதுபோலல்லாமல், இவைகளை எல்லாம் இந்த வழியில் உணருகிறார்கள். மனித னுடைய ஸ்தூலமான அபிப்பிராயங்கள், இவ்விதமாக, வேதத்தின் சொல்லார்த்தத்தின் எதைப்பற்றியும் அதாவது புதிய வானத்தை யும் புதிய பூமியையும், குறித்தும் எருசலேம் என்கிற புதிய நகரத் தைப்பற்றியும், அதன் மதில், அதன் அஸ்திபாரங்கள், அதன் அளவு இவைகளைப்பற்றியும், அவர்களுக்கு ஒன்றும் தெரியாமலே தேவர்களின் சூக்கும அபிப்பிராயங்களில் செல்லுகின்றன. அப் படியிருந்தாலும், அனுவயப்படுகிறபடியினால், தேவதூதர்களின் சிந்தனைகள் மனிதனுடைய சிந்தனைகளோடு ஒன்றுகின்றன. ஒரு பேசுகிறவனுடைய வார்த்தைகளையும், வார்த்தைகளை கவனிக்காமல், அருத்தத்தை மாத்திரம் கவனிக்கிற ஒரு கேட்பவன், அவைகளை

அறிந்து கொள்ளுதலையும்போல, ஏறக்குறைய அவைகள் ஒன்று கின்றன. ஆகவே, சுவர்க்கமானது மனிதனுடன் வேதத்தின் மூலமாய் சேர்க்கப்பட்டிருக்கிறது என்பது விசதமாகிறது. வேதத்தி லிருந்து இன்னம் ஒரு வாக்கியத்தை எடுத்துக்கொள்வோம்: "அக் காலத்திலே, எகிப்திலிருந்து அசிரியாவுக்குப் போகிறபெரும்பாதை உண்டாயிருக்கும்; அசீரியர் எகிப்துக்கும், எகிப்தியர் அசீரியாவுக் கும் வந்து, எகிப்தியர் அசீரியரோடுங்கூட ஆராதனை செய்வார்கள். அக்காலத்திலே இஸ்ரவேல், எகிப்தோடும் அசீரியரோடும் மூன்றாவ தாக பூமியின் நடுவில், ஆசீர்வாதமா யிருக்கும். அவர்களைக் குறித்து, சேனைகளின் கர்த்தர், எகிப்தராகிய என் ஜனமும், அசீரி யாகிய என் கரத்தின் கிரியையும், இஸ்ரவேலாகிய என் சுதந்தரமும், ஆசீர்வதிக்கப்பட்டது என்று சொல்லி, அவர்களை ஆசீர்வதிப் பார்" (எசா. xix, 23-25). இந்த வார்த்தைகள் படிக்கப்பட்ட போது, மனிதன் எப்படி நினைக்கிறானென்பதும், தேவர்கள் எப்படி நினைக்கிறார்களென்பதும், வேதத்தின் சொல்லார்த்தத்திலிருந்தும், அதன் உள்ளான அருத்தத்திலிருந்தும் விசதமாகலாம். மனித னுனவன், சொல்லார்த்தத்திலிருந்து, எகிப்பதியரும் அசீரியரும் கடவுள் பக்கம் திருப்பப்பட்டு, ஒத்துக் கொள்ளப்படவேண்டு மென்றும், இரஸ்ரவேல் ஜாதியாருடன் ஒன்றாக வேண்டுமென்றும் நினைக்கிறான்; ஆனால், தேவர்களோ, சூக்குமமானது "இஸ்ரவேலா" யிருக்கிறதும், ஸ்தூலமானது, "எகிப்து சேர்ந்ததாயிருக்கிறதும்" மையமாயிருக்கிற பகுத்தறிவுக்கு சேர்ந்தது "அசீரியா" வாயுமிருக் கிறதுமாகிய அந்த அருத்தத்தில் இங்கே விவரிக்கப்பட்டிருக்கிற சூக்கும திருச்சபையின் மனிதனைப்பற்றி உள்ளான அருத்தத்திற்கு தக்கபடி நினைக்கிறார்கள். அன்னுவயப்படுகிறபடியினால், சொல் லார்த்தமும் ஞானார்த்தமும் ஒன்றாகின்றன. ஆகையினால், தேவர் கள் இம்மாதிரியாக சூக்குமமாயும், மனிதன் ஸ்தூலமாயும் நினைக் கும்போது, அவைகள் ஏறக்குறைய ஆன்மாவையும் சரீரத்தையும் போல் சேர்க்கப்பட்டிருக்கின்றன; வேதத்தின் உள்ளானஅருத்தம் அதன் ஆன்மாவாகவும், சொல்லார்த்தம் அதன் சரீரமாகவும் கூட இருக்கின்றன. முழுமையும் வேதம் இம்மாதிரியிருக்கிறது; ஆகவே, மனிதனுடன் சுவர்க்கத்தினுடைய சேர்க்கையின் உபகரணமாக, அது இருக்கிறதென்றும், சொல்லார்த்தமானது ஒரு மூலமாகவும் கடைக்காலாகவும் உபயோகப்படுகிறதென்பதும், விசதமாகிறது.

**308.** வேதமில்லாத திருச்சபைக்கு வெளியே யிருப்பவர்களுடன், வேதத்தின் மூலமாக சுவர்க்கத்தினுடைய ஒரு சேர்க்கை கூட இருக்கிறது; ஏனென்றால், ஆண்டவருடைய திருச்சபை சர்வ வியாபகமாகவும், தெய்வத்தை ஒத்துக்கொண்டு, தருமத்தில் வாழ்பவர் எல்லாருடனும் இருக்கிறது. மேலும் இவர்கள் இறந்தபிறகு தேவர்கள் கூட கற்பிக்கப்பட்டு, தெய்வீக உண்மைகளை பெற்றுக்கொள்ளுகிறார்கள். இந்த விஷயத்தைப்பற்றி புறச்சமயத்தாரைக் குறித்து எழுதப்பட்ட குறிப்பான அத்தியாயத்தில், கீழே அதிகமாய் பார்க்கப்படலாம். பூமின்பேரில் முழு திருச்சபையும் ஆண்டவர் பார்வைக்கு, சுவர்க்கம் இருக்கிறது போல ஒரு மனிதனைப்போலிக்கிறது (செ. 59 முதல் 72 வரையில் பார்க்கவும்); ஆனால் வேதம் இருக்கப்பட்டதும், அதனால் ஆண்டவர் தெரிந்திருக்கப்படுவதுமான திருச்சபையானது, அந்த மனிதனில் இருக்கும் இருதயத்தையும் சுவாசாசயங்களையும் போல இருக்கிறது. முழு சரீரத்தின் எல்லா ஆந்திரிகங்களும் அவயவங்களும், உயிரை இருதயத்திலிருந்தும் சுவாசாசயங்களிலிருந்தும், பலவித உற்பவங்களால் இருக்கின்றனவென்பது தெரிந்திருக்கிறது; வேதம் இருக்கப்பட்ட திருச்சபைக்கு வெளியே இருந்து, அந்த மனிதனுடைய அவயங்களை உண்டாக்குகிற மானிட பரம்பரையை சேர்ந்தவர்கள் இம்மாதிரியாக வசிக்கிறார்கள். தூரமாயிருக்கிறவர்களுடன் வேதத்தினால் சுவர்க்கத்தின் சேர்க்கையானது, ஒரு மையத்திலிருந்து எல்லா திக்குகளிலும்பரப்பப்படுகிற ஒரு ஒளிக்கு ஒப்பிடப்படலாம்; ஏனென்றால், வேதத்தில் தெய்வீக ஒளியிருக்கிறது, அங்கே சுவர்க்கத்து ஆண்டவர் இருக்கிறார். அந்த சந்நிதியிலிருந்துகூட தூரத்திலிருக்கப்பட்டவர்கள் வெளிச்சத்திலிருக்கிறார்கள். வேதமில்லாவிட்டரல், விஷயம் வேறுமாதிரியிருக்கும். எல்லா ஐக்கியமும் சம்பந்தமும், அதன்படி யிருக்கப்பட்ட சுவர்க்கத்தின் உருவத்தைப்பற்றி மேலே சொன்னதிலிருந்து, இந்த உண்மைகள் இன்னும் அதிகமாய் தெரிவிக்கப்படலாம். சூக்கும வெளிச்சத்திலிருக்கப்பட்டவர்கள், இந்த இரகசியத்தை, கிரகிக்கிறார்கள், ஆனால், ஸ்தூல வெளிச்சத்திலிருக்கப்பட்டவர்கள், அதை கிரகிக்கமாட்டார்கள்; ஏனென்றால், ஸ்தூல வெளிச்சத்தில் மாத்திரம் இருக்கப்பட்டவர்கள் பார்க்காததும், அல்லது ஒரு தெளிவற்ற பொருளைப்போல் மாத்திரம் பார்க்கிற கணக்கற்ற.

பொருள்களை சூக்கும வெளிச்சத்திலிருக்கப்பட்டவர்கள் தெளிவாய் பார்க்கிறார்கள்.

**309**. அவ்விதமான வேதமானது, இந்த பூமியின்பேரில் கொடுக்கப்படாதிருந்ததால், இந்த பூமியின்பேரில் இருக்கப்பட்ட மனிதன் சுவர்க்கத்திலிருந்து பிரிக்கப்பட்டிருப்பான்; சுவர்க்கத்திலிருந்து பிரிக்கப்பட்டால், அவன் அதற்குமேல் பகுத்தறிவுள்ளவனு யிருக்கமாட்டான்; ஏனென்றால், மானிட பகுத்தறிவானது, சுவர்க்கத்தினுடைய வெளிச்சத்தின் உட்பெருக்கிலிருந்து, தன் இருப்பை அடைகிறது. இந்த பூமியின்பேரில் இருக்கப்பட்ட மனிதன்கூட நேரான வெளிப்பாட்டை பெற்றுக்கொள்ளவும், கேட்கப்பட்டதிலிருந்தும் பார்க்கப்பட்டதிலிருந்தும், நமது சூரிய மண்டலத்தின் குடிகளுடைய விவரத்துடன் அந்த மண்டலத்திலிருக்கும் பூமிகளைக் குறித்தது என்று பெயரிடப்பட்ட இன்னம் ஒரு சிறிய நூலில் நான் விவரித்த இதர பூமிகளின் பிரஜைகளைப் போல், தெய்வீக உண்மைகளில், அதினால் கற்பிக்கப்படவும் தகாதவனு யிருக்கிறான். ஏனென்றால், இந்த பூமியின்பேரில் இருக்கப்பட்ட மனிதன், மற்ற பூமிகளின்பேரில் இருக்கப்பட்ட மனிதர்களைவிட உலகப் பொருள்களில் அதாவது புறம்பானவைகளில் அதிகமாயிருக்கிறான்; மேலும் உள்ளானவைகள் தான் வெளிப்பாட்டை பெற்றுக்கொள்ளுகின்றன; புறம்பானவைகள் அதை அடைந்தால், உண்மை அறிந்துக்கொள்ளப்படமாட்டாது. இந்த பூமியின்பேரி லிருக்கிற மனிதனுடைய நடத்தை அவ்விதமா யிருக்கிறதென்பது, வேதத்திலிருந்து சுவர்க்கத்தையும் நரகத்தையும் குறித்தும், இறந்த பிறகு வாழ்வைப்பற்றியும் தங்களுக்கு தெரிந்தும், தங்களுடைய இருதயங்களில் மறுக்கிறவர்களாகிய, திருச்சபைக்குள்ளிருக்கிறவர்களிட மிருந்து தெளிவாய் தெரிகிறது; இந்த வகுப்பில், தங்கள் கல்வியினால், பெயர்பெற்றவர்களும், அதனால் மற்றவர்களைவிட அதிக புத்திசாலிகளாக யிருக்க எதிர்பார்க்கக் கூடியவர்களுமாகிய அநேகர் இருக்கிறார்கள்.

**310**. நான் சில சமயங்களில் வேதத்தைக் குறித்து தேவர்களுடன் பேசி, அதன் இலேசான நடையினால், அது சிலரால் அலட்சியம் செய்யப்படுகிறதென்றும், அதன் அந்தரங்க அருத்தத்தைக் குறித்து ஒன்றும் தெரிந்திருக்கப்படவில்லை என்றும், இந்த காரணத்துக்காக, அவ்வித உயர்ந்த ஞானமானது அதற்

குள் மறைந்து கிடக்கிறதென்று யாரும் நம்புகிறதில்லை என்றும், சொல்லியிருக்கிறேன். தெய்வீக ஞானமானது, மொத்த அருத்தத்தில் மாத்திரமல்லாமல், ஒவ்வொரு வார்த்தையிலும் கூட மறைந்து கிடக்கிறபடியினால், சொல்லார்த்தத்தில் இலேசாயிருப்பதாக தோன்றினபோதிலும், வேதத்தின் நடையானது மேன்மையில் எதுவும் ஒப்பிடப்படாதபடி அவ்வித குணமுடையதாயிருக்கிறதென்றும், இந்த ஞானமானது சுவர்க்கத்தில் பிரகாசிக்கிறதென்றும், தேவதூதர்கள் சொன்னார்கள். தெய்வீக உண்மையாயிருப்பதினால், இந்த ஞானமானது சுவர்க்கத்தின் வெளிச்சமே என்று சொல்ல அவர்கள் விரும்பினார்கள்; ஏனென்றால், சுவர்க்கத்தில் பிரகாசிப்பது தெய்வீக உண்மையாயிருக்கிறது (செ. 132 பார்க்கவும்). அவ்வித ஒரு வேதமில்லாமல், நம் பூமியின் பேரில் இருக்கும் மனிதர்களுக்கு சுவர்க்கத்திலிருந்து வெளிச்சம் கிடையாது என்றும், அதுவுமன்றி, சுவர்க்கமானது அவர்களுடன் சேர்க்கப்படாது என்றும், அவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், சுவர்க்கத்தின் வெளிச்சம் மனிதனுடன் இருக்கிறவரையில் மாத்திரம் அந்த சேர்க்கையிருக்கிறது; மேலும் அந்த வெளிச்சமானது, தெய்வீகஉண்மை யானது வேதத்தின் மூலமாய் மனிதனுக்கு வெளிபடுத்தப்படுகிறவரையில் மாத்திரம் இருக்கிறது. சேர்க்கையானது, ஸ்தூல அருத்தத்திற்கு ஒத்த வேதத்தின் ஞானார்த்தத்தினால் சித்தியாகிறதென்று மனிதனுக்கு தெரியாது;ஏனென்றால்,இந்த பூமியின் பேரில் இருக்கிற மனிதனுக்கு தேவர்களின் சூக்கும சிந்தனையைப் பற்றியும்,பேச்சைப் பற்றியும், அது மனிதர்களின் ஸ்தூல சிந்தனையிலிருந்தும் பேச்சிலிருந்தும் எப்படி வித்தியாசப்படுகிறதென்பதைப்பற்றியும் ஒன்றும் தெரியாது; ஆனால்,இதை அவன் தெரிந்துகொண்டாலொழிய, உள்ளான அருத்தத்தின் சுபாவத்தைப் பற்றியாவது, அதனால் சேர்க்கை சித்தியாக்கப்படுமென்றாவது அவன் தெரிந்துகொள்ள முடியாது. அவ்வித அருத்தம் இருக்கிறதென்று மனிதனுக்கு தெரிந்து,வேதத்தைப் படிக்குங்காலத்தில், அதிலிருந்து வரும் ஒரு அறிவிலிருந்து நினைக்கும் பட்சத்தில், அவன் உள்ளான ஞானத்திற்குள்ளும், சுவர்க்கத்துடன் இன்னும் அதிக நெருக்கமான சேர்க்கைக்குள்ளும் வருவானென்றுங்கூட அவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், இவ்விதத்தினால், தேவர்களின் அபிப்பிராயங்களைப் போல அபிப்பிராயங்களில் அவன் பிரவேசிப்பான்.

## XXXV

## சுவர்க்கமும் நரகமும் மானிட வமிசத்திலிருந்து ஏற்படுகிறது

**311.** ஆரம்பத்தில் தேவர்கள் சிருஷ்டிக்கப்பட்டு, இவ்விதமாக சுவர்க்கமானது உருவாக்கப்பட்டதென்றும், அதனுடன் பிசாசம் அல்லது சாத்தான் ஒளி தேவனாயிருந்தானென்றும், ஆனால், கலகம் செய்தபடியினால் தன்னுடைய கும்புடன் கீழே தள்ளப்பட்டு, இவ்விதமாக நரகம் உண்டாக்கப்பட்டதென்றும் நம்பப்படுகிறபடியினால், கிருஸ்துவ உலகத்தில் சுவர்க்கமும் நரகமும் மானிட வமிசத்திலிருந்து வந்ததென்று முழுமையும் தெரியாமலிருக்கிறது. கிருஸ்துவ உலகத்தில் அவ்வித நம்பிக்கை இருக்கிறதென்றும், முக்கியமாய் திருச்சபையில் கொள்கையினுடைய முதன்மையான விஷயமாக இருந்தபோதிலும், சுவர்க்கத்தைப்பற்றி ஒன்றும் தெரியாமலிருக்கிறதென்றும் தேவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள்; ஆனால், அவ்வித அறியாமை பிரபலமாயிருக்கிறபடியினால் சுவர்க்கத்தைப்பற்றியும் நரகத்தைப்பற்றியும்கூட, இக்காலத்தில் அநேக விஷயங்களை மனித ஜாதிக்கு வெளிப்படுத்தவும், அதனால், திருச்சபை அதன் முடிவுக்கு வந்துவிட்டபடியினால், நாளுக்கு நாள் அதிகரித்து வருகிற இருளை கூடியவரையில் நீக்கி, ஆண்டவருக்கு தயவு வந்ததென்று, அவர்கள் இருதயத்தில் சந்தோஷப்படுகிறார்கள். முழு சுவர்க்கத்திலும், ஆரம்பத்திலிருந்து சிருஷ்டிக்கப்பட்ட ஒரு தேவனாவது, ஒளி தேவனாக சிருஷ்டிக்கப்பட்டு, அங்கிருந்து கீழே தள்ளப்பட்ட எந்த பேயாவது நரகத்திலும் இல்லையென்றும், ஆனால் சுவர்க்கத்துக்கு அடுத்த அன்பிலும் பக்தியிலும் உலகத்திலிருக்கும்போது வாழ்ந்தவர்கள் சுவர்க்கத்திலும், நரகத்திற்கு அடுத்த அன்பிலும் பக்தியிலும் வாழ்ந்தவர்கள் நரகத்திலும், இவ்விதமாக சுவர்க்கத்திலும், நரகத்திலுமிருக்கிறவர்கள் எல்லாரும் மானிட வமிசத்திலிருந்து உண்டானார்களென்றும், முழுமையாக பார்க்கையில், நரகமானது பிசாசம் என்றும் சாத்தான் என்றும் சொல்லப்பட்டதாயிருக்கிறதென்றும், நான் அறிவிக்க வேண்டுமென்று, இந்த காரணத்துக்காக அவர்கள் விரும்புகிறார்கள். கெட்ட மஹாமேதாவிகளென்று சொல்லப்பட்டவர்கள் இருக்கப்பட்ட பின்புறத்திலிருக்கும் நரகமானது, பிசாசம் என்று

சொல்லப்படுகிறது; கெட்ட ஆவிகள் என்று சொல்லப்பட்டவா கள் இருக்கப்பட்ட முன்னிருக்கும் நரகமானது, சாத்தான் என்று சொல்லப்படுகிறது. பின்வரும் பக்கங்களில், இந்த நரகங்களின் ஒவ்வொன்றினுடைய அதததற்கேற்ற குணமானது சொல்லப்படும். வேதத்திலிருக்கும் உண்மையான கொள்கையினால், திருஷ்டாந்தப் படுத்தப்பட்டு விவரிக்கப்படாமல், சொல்லார்த்தத்தின் பிரகாரம் மாத்திரம் தெரிந்துகொள்ளப்பட்ட வேதத்தின் சில வாக்கியங் களிலிருந்து, சுவர்க்கத்தினுடையவும் நரகத்தினுடையவும் பிரஜை களைக் குறித்து கிருஸ்துவ உலகமானது, அவ்வித நம்பிக்கையை கொண்டார்களென்று, தேவர்கள் சொன்னார்கள்; அப்படியிருந்தா லும், வேதத்தின் சொல்லார்த்தமானது, நிஜமான கொள்கை அதன்பேரில் ஒளியை வீசினால் ஒழிய, அஞ்ஞானத்தையும், வேதப் புரட்டையும், பிழைகளையும் உற்பத்திசெய்து மனதை பல வழி களில் இழுக்கிறது.

**312**. திருச்சபையின் மனிதன், எவனும் சுவர்க்கத்திற்கா வது, நரகத்திற்காவது கடைசி தீர்ப்புகாலம் வரையில் வருகிற தில்லை என்று நம்புகிறானென்பது, அவனிடம் இந்த நம்பிக்கை இருக்கிறதென்பதற்கு, வேறொரு காரணமாயிருக்கிறது; அதைப் பற்றி, பார்க்கப்படும் எல்லா பொருள்களும், அக்காலத்தில் அழிந்து போகப்பட்டவைகளாயிருக்கின்றனவென்றும், புதிய பொருள்கள் உற்பத்தியாகுமென்றும், ஆன்மாவானது அக்காலத்தில் அதன் சரீரத்திற்குள் திரும்பிப்போக இருக்கிறதென்றும், இந்த திரும்ப ஐக்கியப்படுதலிலிருந்து, மனிதன் மனிதனாக வாழ்வானென்றும், ஓர் அபிப்பிராயத்தை அவன் கொண்டிருந்தான். இந்த நம்பிக்கை யானது, தேவர்கள் அவ்விதமாக ஆரம்பத்திலிருந்து சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறார்களென்கிற மற்றொரு நம்பிக்கையை உட்படுத்து கிறது; ஏனென்றால், எந்த மனிதனும் சுவர்க்கத்துக்கும் நரகத்துக் கும், உலகத்தின் முடிவுகாலம் வரையில் வருகிறதில்லை என்று நம்பப்படுகிறபோது, அவைகள் மானிட வமிசத்திலிருந்து உண்டா கின்றனவென்று நம்பப்பட முடியாது. ஆனால், அது அப்படி இல்லையென்று மனிதன் உள்ளத்தில் உணரும்படி, அநேக வருட காலமாக தேவர்கள் கூட்டத்திலிருக்கவும், அதனுடன் நரகத்தி லிருக்கப்பட்டவர்களுடன் பேசவும், சில சமயங்களில் காலையி லிருந்து மாலை வரையில் தொடர்ச்சியாய் பேசவும், இவ்விதமாக சுவர்க்கத்தைக் குறித்தும் நரகத்தைக் குறித்தும் அறிவிக்கப்பட்

டிருக்கவும், எனக்கு அருள் செய்யப்பட்டது. திருச்சபையைச் சேர்ந்த மனிதன், தீர்ப்பு நாளில் உயிர்த்தெழுகையைப்பற்றியும், அதுவரையில் ஆன்மாவின் நிலைமையைப்பற்றியும், அதனுடன் தேவர்களைப்பற்றியும் பிசாசத்தைப்பற்றியும் தன்னுடைய பிழைப்பான நம்பிக்கையில் இனி நீடிக்காதபடி, இந்த அனுபவம் எனக்கு கொடுக்கப்பட்டது. இந்த நம்பிக்கையானது பொய்யானதை நம்புதலாயிருக்கிறபடியினால், இருட்டை உட்படுத்துகிறது; தங்களுடைய சொந்தபுத்தியிலிருந்து, இந்த விஷயங்களை நினைக்கிறவர்கள் விஷயத்தில், அது சந்தேகத்தையும், கடைசியில் மறுப்பையும் செய்விக்கிறது. ஏனென்றால், அவ்வளவு அநேக இராசிகளுடனும், சூரியனுடனும் சந்திரனுடனும் இருக்கும் அவ்வளவு விஸ்தாரமான சுவர்க்கம், எப்படி அழிக்கப்பட்டு, நீக்கப்படக்கூடுமென்றும், நட்சத்திரங்கள் பூமியைவிட பெரியதாயிருக்கையில், அவைகள் எப்படி சுவர்க்கத்திலிருந்து பூமியின்பேரில் விழக்கூடுமென்றும், புழுக்களால் புசிக்கப்பட்டு, பதம்கெட்டு, அழிக்கப்பட்டு, எல்லா காற்றுகளிலும் தூவப்பட்டிருக்கிற சரீரங்கள், தங்களுடைய ஆன்மாவுடன் எப்படி சேர்க்கப்படக் கூடுமென்றும், இடை நேரத்தில் ஆன்மா எங்கே யிருக்கிறதென்றும், சரீரத்தில் அதற்கு இருந்த அறிவில்லாமல் அது என்ன வென்றும், நினைத்துக்கொள்ளுகிறார்கள். இதுவுமன்றி, கிரகிக்க முடியாதபடியினால், நம்பப்படக்கூடாததா யிருக்கிறதும், இறந்த பிறகு ஆன்மாவினுடைய உயிரைப்பற்றிய அநேகருடைய நம்பிக்கையையும், சுவர்க்கத்தையும், நரகத்தையும் குறித்து, அவர்களுடைய நம்பிக்கையையும் அழிக்கிற இதைப் போன்ற அநேக விஷயங்களையும், திருச்சபைச் சேர்ந்த நம்பிக்கைக்கு சம்பந்தப்பட்ட இந்த இதர விஷயங்களையும்கூட நினைத்துக்கொள்ளுகிறார்கள். சுவர்க்கத்திலிருந்து யார் நம்மிடம் வந்து, ஒரு சுவர்க்கம் இருக்கிறதாக சொன்னார்களென்றும், நரகம் என்பது என்ன, அவ்விதமான தொன்று இருக்கிறதா, சதாகாலம் நெருப்பினால் மனிதன் வதைக்கப்படுவதைப்பற்றி என்ன சங்கதி, தீர்ப்புநாள் என்பது என்ன, அது அநேக யுகங்களாக எதிர்பார்க்கப்படவில்லையா, என்றும் எல்லாவற்றையும் மறுத்தலை உட்படுத்துகிற இன்னும் இதர விஷயங்களும் சொல்லப்படுவதினால், இந்த நம்பிக்கையானது அழிக்கப்பட்டதென்பது விசதமாகிறது. பூலோக ஞானமிருப்பதினால், வித்துவான்களென்றும் கல்விமான்களென்றும் நினைக்கப்படுகிறவர்கள்

அநேகர் செய்கிறபடி, இம்மாதிரி நினைக்கிறவர்கள், நம்பிக்கையிலும் இருதயத்திலும் சுத்தமானவர்களை திகைப்பித்து, அவர்களுக்கு துர்நெறி காட்டி, கடவுளைக் குறித்தும், சுவர்க்கத்தைக் குறித்தும், சதாகால வாழ்வைக் குறித்தும், இவைகளின்மேரில் சார்ந்திருக்கிற எல்லாவற்றையும் குறித்தும், நரகத்துக்கடுத்த இருளை இனிமேல் ஏவாதபடி என்னுடைய ஆன்மாவின் உள்ளானவைகள் ஆண்டவரால் திறக்கப்பட்டது; மேலும், சரீர வாழ்வில் நான் எப்பொழுதாவது பழகினவர்கள் இறந்த பிறகு அவர்கள் எல்லாருடனும், இவ்விதமாக பேசவிடப்பட்டேன்; சிலருடன் அநேக நாட்களும் சிலருடன் சில மாசங்களும், சிலருடன் ஒரு வருஷ காலமும், அதனுடன் ஒரு லட்சமென்று சொன்னால் மிகவும் கொஞ்சமாயிருக்கிற, சுவர்க்கத்திலும் நரகத்திலும் இருந்தவர்களைச் சேர்த்து, இன்னும் அநேகருடனும் பேசவிடப்பட்டிருக்கிறேன். நான் சிலருடன் அவர்கள் இறந்த பிறகு இரண்டு நாள் பொருத்துகூட பேசி, அவர்களுடைய உத்திர கிரிகைகள் அப்பொழுது நடப்பதாகவும், அவர்களை அடக்கம் செய்ய ஆயத்தம் செய்யப்படுகிறதென்றும் சொல்லியுமிருக்கிறேன்; அதற்கு அவர்கள், ஒரு சரீரமாகவும், உலகத்தில் சரீர விர்த்திக்காகவும், தொண்டு செய்தவைகளை நீக்கிவிடுதல் சரியான காரியமென்று சொன்னார்கள்; தாங்கள் இறக்கவில்லையென்றும், முன்போலவே தாங்கள் உயிரோடிருந்து அப்பொழுதும் மனிதர்களாயிருக்கிறார்களென்றும், ஒரு உலகத்திலிருந்து மற்றொரு உலகத்திற்கு குடி ஏறி மாத்திரம் இருக்கிறார்ளென்றும், முன்போலவே ஒரு சரீரத்தில் அதன்ஐம்புலன்களுடன் இருப்பதினால், முன்போலவே புத்தியிலும் சித்தத்திலும்கூட இருப்பதினாலும், அவர்கள் எதையும் இழந்துவிட்டதாக தங்களுக்கு தெரியவில்லையென்றும், தாங்கள் உலகத்திலிருந்தபோது உடைத்தாயிருந்தவைகளைப்போன்ற சிந்தனைகளையும் ஆசைகளையும், உணர்ச்சிகளையும், வாஞ்சைகளையும் உடைத்தாயிருக்கிறதாகவும், நான் சொல்லும்படி விரும்பினார்கள். இறந்த பிறகு உயிரின் முதல் நிலைமை உலகத்திலிருந்ததுபோல் இருந்து, பின்னிட்டு சுவர்க்கமாகவாவது நரகமாகவாவது தொடர்பாய் மாற்றப்படுகிறபடியினால் கொஞ்சகாலத்திற்கு முன் இறந்தவர்களில் அநேகர், முன்போலவே உயிருடைய மனிதர்களாகவும், அதே நிலைமையிலுமிருப்பதாகவும் கண்டுகொண்டபோது, உயிரோடிருப்பதைப் பற்றி புதிய சந்தோஷத்தினால் இயக்கப்பட்டு,

அது அப்படியிருக்குமென்று தாங்கள் நம்பவில்லை என்று சொன்னார்கள். இறந்த பிறகு தங்கள் உயிரின் நிலையைப்பற்றி இவ்வித அறியாமையிலும் குருட்டுத்தனத்திலும் வாழ்ந்ததைப்பற்றியும், முக்கியமாய் முழு உலகத்திலும் மற்றவர்கள் எல்லாரையும்விட, திருச்சபையைச் சேர்ந்த மனிதன், இந்த விஷயங்களைக் குறித்து வெளிச்சத்தில் இருக்கக் கூடுமாகையால், அவன் இவ்வித அஞ்ஞானத்திலும் குருட்டுத்தனத்திலும் இருப்பதைப்பற்றியும் அவர்கள் அதிக ஆச்சரியப்பட்டார்கள். உலகத்திற்கும் சரீரத்திற்கும் சம்மந்தப்பட்ட புறம்பான விஷயங்கள், சுவர்க்கத்தின் வெளிச்சத்திற்கு உயர்த்தப்படாதபடிக்கும், திருச்சபையின் விஷயங்களை அதன் கோட்பாடுகளுக்கு மேலே பார்க்காதபடிக்கும், அவ்வளவு தூரம் அவர்களுடைய மனங்களை குடிகொண்டு, நிரம்பியதாயிருக்கிற அவர்களுடைய குருட்டுத்தனத்தினுடையவும் அஞ்ஞானத்தினுடையவும் காரணத்தை, அவர்கள் அப்பொழுது பார்த்தார்கள்; ஏனென்றால், சரீரத்திற்கும் உலகத்திற்கும் சம்பந்தப்பட்ட விஷயங்கள், தற்காலத்தில் விரும்பப்படுகிறதுபோல், அன்பு பாராட்டப்பட்டால், அந்த கோட்பாடுகளுக்கு மேலே மனிதர்கள் செல்லும் காலத்தில், மனதுக்குள் இருளைத்தவிர வேறு ஒன்றும் பாய்கிறதில்லை.

**313.** கிருஸ்துவ உலகத்திலிருந்து வந்த கல்விமான்களில் அநேகர், தாங்கள் இறந்த பிறகு உலகத்தில்போய் ஒரு சரீரத்திலும், உடுப்புகளிலும், வீடுகளிலும், தாங்கள் இருப்பதைப் பார்க்கும்போது, பிரமித்துப்போகிறார்கள்; இறந்த பிறகு வாழ்வைப் பற்றியும், ஆன்மா, ஆவிகள், சுவர்க்கம், நரகம் இவைகளைப்பற்றியும், தாங்கள் கொண்ட கருத்தை அவர்கள் ஞாபகப்படுத்திக்கொண்டபோது, அவர்கள் வெட்கத்தினால் மூடப்பட்டு, தாங்கள் மூடத்தனமாய் நினைத்ததாகவும், பக்திவிஷயத்தில் பேதைமையானவர்கள் தங்களைவிட அதிக அறிவுடன் நினைத்ததாகவும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். இவ்வித அபிப்பிராயங்களில் தாங்களே ஸ்திரப்பட்டு, இயற்கைக்கு எல்லாவற்றையும் ஆரோபித்த கல்விமான்கள் பரிசோதிக்கப்பட்டபோது, அவர்களுடைய உள்ளானவைகள் முழுமையும் மூடப்பட்டு, புறம்பானவைகள் திறக்கப்பட்டிருப்பதும், அவர்கள் உலகத்துபக்கம், இவ்விதமாக சுவர்க்கம் பக்கமல்லாமல் நரகத்தின் பக்கம் பார்ப்பதும் கண்டுபிடிக்கப்பட்டது.

ஏனென்றால், உள்ளானவைகள் திறக்கப்படுகிற அளவு, மனிதன் சுவர்க்கத்தைப் பார்க்கிறான்; ஆனால் உள்ளானவைகள் மூடப்பட்டு, அவனுடைய புறம்பானவைகள் திறக்கப்படுகிற அளவு மனிதன் நரகத்தைப் பார்க்கிறான்; ஏனென்றால், மனிதனுடைய உள்ளானவைகள், சுவர்க்கத்தின் எல்லா பொருள்களையும், ஆனால், புறம்பானவைகள் உலகத்தின் எல்லா பொருள்களையும் ஏற்றுக்கொள்ள உண்டாக்கப்பட்டிருக்கிறது; உலகத்தை ஏற்றுகொண்டு அதே காலத்தில் சுவர்க்கத்தை ஏற்றுகொள்ளாதவர்கள், நரகத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்கள்.

**314**. இன்னமும், தேவர்கள் மனங்களும் மானிட மனங்களும் ஓரே மாதிரி யிருக்கிறபடியினால், சுவர்க்கமானது மானிடவமிசத்திலிருந்து உண்டாகிறதென்று விசதமாகும். அறிந்துகொண்டு, உணர்ந்து இச்சிக்கிற சக்தியை இருவகையாரும் அனுபவிக்கிறார்கள்; மேலும் இருவகையாரும் சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ள உண்டாக்கப்பட்டிருக்கிறார்கள்; ஏனென்றால், மானிட மனதானது தேவர்கள் மனதைப்போல் ஞானத்தை ஏற்றுக்கொள்ள தகுந்ததாயிருக்கிறது; ஆனால், அது ஒரு மண் சரீரத்தில் இருப்பதினாலும், அந்த சரீரத்தில் அதனுடைய சூக்கும மனது ஸ்தூலமாய் நினைப்பதினாலும், உலகத்தில் அவ்வளவு அறிவுள்ளதாகிறதில்லை. மானிட மனது சரீரத்துடன் இருக்கும் சம்பந்தத்திலிருந்து விடுவிக்கப்பட்டபோது விஷயம் வேறு மாதிரியிருக்கிறது; ஏனென்றால், அக்காலத்தில் அது அப்புறம் ஸ்தூலமாய் அல்லாமல் சூக்குமமாய் நினைக்கிறது; அது சூக்குமமாய் நினைக்கிறபோது ஸ்தூல மனிதனால் கிரகிக்கமுடியாததும், வாக்குக் கெட்டாததுமான விஷயங்களை நினைத்து, இவ்விதமாக, ஒரு தேவனைப்போல் ஞானமுள்ளதாகிறது. ஆவி யென்று சொல்லப்படுகிற மனிதனுடைய உள்ளானது, தன் சத்தில் ஒரு தேவனென்றும் (மேலே நெ. 57 பார்க்கவும்), மண் சரீரத்திலிருந்து விடுவிக்கப்பட்டபோது ஒரு தேவனைப்போல் ஒரு மானிட உருவத்தில் இருக்கிறதென்றும், (ஒருதேவன் சம்பூரண மானிட உருவத்திலிருக்கிறானென்பதற்கு மேலே நெ.73 முதல் 77 வரையும் பார்க்கவும்), இதிலிருந்து அறிந்துகொள்ளலாம். ஆனால், மனிதனுடைய உள்ளானது மேலேயல்லாமல் கீழே மாத்திரம் திறக்கப்பட்டபோது அக்காலத்தில், மண்சரீரத்திலிருந்து அது பிரிக்கப்பட்ட பிறகு, அது அப்பொழுதும் மானிட உருவத்திலேயே யிருக்கிறது, ஆனால், அது, பயங்கரமானதும்

போராட்டமானதாயுமிருக்கிறது; ஏனென்றால் அது மேலேசுவர்க்கத்தை பார்க்கமுடியாமல், கீழே நரகத்தை மாத்திரம் பார்க்கும்.

**315.** மேலும், தெய்வீக ஒழுங்கைப்பற்றி கற்பிக்கப்பட்டவனும், மனிதனானவன் ஒரு தேவனாகும்பொருட்டு சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறானென்று அறிந்துகொள்ளலாம்; ஏனென்றால் சுவர்க்கத்துக்கு அடுத்ததும் தேவர்களுக்கு அடுத்ததுமான ஞானத்துக்கு சேர்ந்தது உருவத்துக்கு கொண்டுவரப்பட்டு, புதியதாக்கப்பட்டு, விர்த்தியாக்கப் படக்கூடிய ஒழுங்கின் இறுதிப்பொருள் அவனிடத்தில் இருக்கிறது (செ. 304). தெய்வீக ஒழுங்கானது இறுதிப் பொருளுக்கு வேறாய், மத்தியில் நின்று எதோ ஒன்றை உருவாக்க அங்கே நிற்கிறதில்லை; ஏனென்றால். அது அப்பொழுது அதன் சம்பூரணத்திலும்முடிவிலும் இல்லை; ஆனால் அது இறுதிக்கு செல்லுகிறது; அது அதன் இறுதிப் பொருளில் இருக்கும் காலத்தில், தன்னுடைய உருவத்தை எடுத்துகொண்டு, அங்கே சேர்க்கப்பட்ட வழி வகைகளால், தானே புதிதாக்கிக் கொண்டு, இன்னமும் தானே விளைவித்துக் கொள்ளுகிறது. இது பிறப்பிக்கையினால் செய்யப்படுகிறது. ஆகையினால், இறுதியானது சுவர்க்கத்தின் விதை நிலமாயிருக்கிறது.

**316.** ஆண்டவர் உலகத்திலிருந்தபோது, தன்னுடைய முழு மானிடத் தன்மையும், மாட்சிமையடைய செய்தபடியினால், அதாவது அதை தெய்வமாக செய்தபடியினால், அவர் ஆவி விஷயத்தில் மாத்திரமல்லாமல் சரீரம் விஷயத்தில்கூட மறுபடியும் உயிரோடெழுந்தார்; ஏனென்றால், பிதாவிடமிருந்து அவர் அடைந்த ஆன்மாவானது, தானே தெய்வமாகவே யிருந்தது, சரீரமானது ஆன்மாவின் அதாவது பிதாவின், சாயலாக செய்யப்பட்டது. இவ்விதமாக தெய்வமாககூட செய்யப்பட்டது. அதனால் தான், அவர் எந்த மனிதனுக்கும் இல்லாத வேறு விதமாய், ஆன்மா விஷயத்திலும் சரீர விஷயத்திலும் இரண்டு விஷயத்திலும் மறுபடியும் எழுந்தார். அவரைப் பார்த்தபோது, "என் கைகளையும் என் கால்களையும் பாருங்கள், என்னை தொட்டு பாருங்கள்; நீங்கள் காண்கிறபடி, எனக்கு மாம்சமும் எலும்புகளும் உண்டாயிருக்கிறதுபோல் ஒரு ஆவிக்கு இராதே" (லூக். xxiv: 37-39) என்று கூறிய ஒரு ஆவியைப்பார்த்ததாக, நினைத்த சீடர்களுக்கு இதைக்கூட தெளிவாக்கினார்; அந்த வார்த்தைகளால், அவர் ஆவி

விஷயத்தில் மாத்திரமல்லாமல் சரீரம் விஷயத்திலும்கூட தான் ஒரு மனிதனென்று அறிவித்தார்.

**317** இறந்த பிறகு மனிதன் உயிரோடிருக்கிறனென்றும், அவன் உலகத்தில் நடத்திய வாழ்க்கைக்கு தக்கபடி சுவர்க்கத்துக் காவது நரகத்திற்காவது வருகிறனென்றும் தெரிந்திருக்கும் பொருட்டு, ஆவிகள் உலகத்தைப்பற்றி நாம் பேசவரும்போது, பின்வரும் பக்கங்களில் அவைகளின் ஒழுங்கில் சொல்லப்படுகிற அநேக விஷயங்கள், இறந்த பிறகு மனிதனுடைய நிலைமையைப் பற்றி எனக்கு தெரியப்படுத்தப்பட்டது.

# XXXVI

## சுவர்க்கத்தில் புறச்சமயத்தார் அல்லது திருச்சபைக்கு வெளியே யிருக்கும் ஜனங்கள்.

**318**. திருச்சபைக்கு வெளியே பிறந்து, புறச்சமயத்தார் அல்லது கிருஸ்துவரல்லாதார் என்று சொல்லப்படுகிறவர்களுக்கு வேதமில்லாதபடியினாலும், இவ்விதமாக தான் அன்றி மோட்சம் கிடைக்கப்பெறாத ஆண்டவர் அவர்களுக்கு தெரியாதபடியினாலும், அவர்கள் இரட்சிக்கப்பட மாட்டார்களென்பது சாதாரண அபிப்பிராயமா யிருக்கிறது. என்றாலும், ஆண்டவருடைய இரக்கம் சர்வ வியாபகமானது அதாவது ஒவ்வொருவரிடத்திலும், செல்லக் கூடிய தென்பதிலிருந்தும், ஒப்பிட்டுப் பார்த்தால், கொஞ்சமாக மாத்திரம் இருக்கிற திருச்சபைக்குள் இருக்கிறவர்களைப்போல், நிஜமாகவே அவர்களும் மனிதர்களாய் பிறந்திருக்கிறார்களென்பதி லிருந்தும், அவர்களுக்கு ஆண்டவர் தெரியாதென்பது அவர்களுடைய குற்றமல்ல என்பதிலிருந்தும் மாத்திரம், அவர்கள் கூட இரட்சிக்கப்படுகிறார்களென்று தெரிந்திருக்கலாம். தெளிவிக்கப்பட்ட எந்த அறிவிலிருந்து நினைக்கிற ஒவ்வொருவனும், எந்த மனிதனும் நரகத்துக்கே பிறந்திருக்கவில்லை என்று தெரிந்துகொள்ளலாம்; ஏனென்றால், ஆண்டவர் அன்பாகவே யிருக்கிறார்; அவருடைய அன்பானது எல்லாரையும் இரட்சிக்க இச்சிப்பதில் அமைந்திருக்கிறது. ஆகையினால், எல்லா மனிதர்களுக்கும் ஏதோ ஓர்வித சமயமிருக்கவும், அதனால் தெய்வத்தையும், உள்ளான வாழ்க்கையையும் ஒத்துக்கொள்ளுதலு மிருக்கவும், அவர் முன்னறிந்து ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்; ஏனென்றால், ஒவ்வொருவனுடைய சமய நம்பிக்கைக்கு தக்கபடி வாழ்தல் என்பது, உள்ளுக்குள்ளாய் வாழ்தலா யிருக்கிறது; ஏனென்றால், மனிதன் அப்பொழுது தெய்வத்தை எதிர்பார்க்கிறான்; மேலும், இதை எதிர்பார்க்கிற அளவு, அவன் உலகத்தை கவனிக்காமல், உலகத்திலிருந்து, ஆதலால், புறம்பான வாழ்வாயிருக்கிற உலக வாழ்க்கையிலிருந்து தானே நீங்கிக்கொள்ளுகிறான்.

**319**. கிருஸ்துவர்களைப்போல் புறசமயத்தாரும் இரட்சிக்கப்படுகிறார்களென்பது, மனிதனில் சுவர்க்கத்தை உண்டாக்குகிறது

எது என்று அறிந்துகொள்ளுகிறவர்களால் அறிந்து கொள்ளப் படும்; ஏனென்றால், சுவர்க்கமானது மனிதனில் இருக்கிறது; தங் களுக்குள்ளேயே சுவர்க்கத்தை உடைத்தாயிருக்கிறவர்கள், சுவர்க் கத்திற்கு வருகிறார்கள். மனிதனில் சுவர்க்கமென்பது தெய்வத்தை ஒத்துக்கொள்ளுதலும், அந்த தெய்வத்தால் நடத்தப்படுதலுமாம்; ஏனென்றால், ஒவ்வொரு சமயத்திலும் முதலாவதும் முக்கியமா னதுமாகியது தெய்வத்தை ஒத்துக்கொள்ளுதலாயிருக்கிறது. தெய் வத்தை ஒத்துக்கொள்ளாத சமயம் ஒரு சமயமல்ல; ஒவ்வொரு சமயத்தின் கட்டளைகளும், ஆராதனையை நன்குமதிப்பிக்கிறது; ஏனென்றால், ஆராதனை அவருக்கு அங்கீகரிக்கத்தக்கதாயிருக்க தெய்வமானது எவ்விதமாய் ஆராதிக்கப்பட வேண்டுமென்பதை அவைகள் கற்பிக்கின்றன. இது மனதில் நிலைபடுத்தப்பட்ட போது, இவ்விதமாக மனிதன் அதை இச்சிக்கிற அளவு, அல்லது அவன் அதை நேசிக்கிற அளவு, அவன் ஆண்டவ ரால் நடத்தப்படுகிறான். கிருஸ்துவ ரல்லாத மற்றவர்களும் கிருஸ் துவர்களைப்போல், சன்மார்க்கவாழ்வை நடத்துகிறார்களென்றும், அவர்களில் அநேகர் கிருஸ்துவர்களைவிட மேலான வாழ்க்கையை வாழ்கிறார்களென்றும் தெரிந்திருக்கிறது. மனிதர்கள் சன்மார்க்க வாழ்வை, தெய்வத்தின் பொருட்டாகவாவது அல்லது உலகத்தி லிருக்கும் மனிதர்களின் பொருட்டாகவாவது நடத்துகிறார்கள்; தெய்வத்தின் பொருட்டு வாழும் சன்மார்க்க வாழ்வு பரமார்த்த வாழ்வாயிருக்கிறது. இரண்டும் தங்களுடைய புறம்பான உருவத் தில் ஒரே மாதிரி தோன்றுகின்றன; ஆனால் உள் உருவத்தில், அவை கள் முழுமையும் வித்தியாசமாயிருக்கின்றன; ஒன்று மனிதனை இரட்சிக்கிறது, மற்றது அவனை இரட்சிக்கிறதில்லை. ஏனென்றால் தெய்வத்தின் பொருட்டு சன்மார்க்கவாழ்க்கையை வாழ்கிறவன் தெய்வத்தால் நடத்தப்படுகிறான், ஆனால், உலகத்திலிருக்கும் மனி தர்களின்பொருட்டு சன்மார்க்க வாழ்வை நடத்துகிறவன் தன்னாலேயே நடத்தப்படுகிறான். இது ஒரு உதாரணத்தினால் திருஷ்டாந்தப்படுத்தப்படலாம். சமயத்துக்கு விரோதமானபடி யினால், இவ்விதமாக தெய்வத்துக்கு விரோதமானபடியினால், தன்னுடைய அயலானுக்கு எந்த தீங்கையும் செய்யாதவன், பர மார்த்த நோக்கத்திலிருந்து தீங்கு செய்யாமல் விட்டுவிடுகிறான்; ஆனால், சட்டத்திற்கு பயந்தும், பெயரும், கீர்த்தியும், லாபமும் போய்விடுமென்றும், இவ்விதமாக தனக்கேயாகவும் உலகத்திற்கே

யாகவும் மாத்திரம் மற்றவனுக்கு தீங்குசெய்யாதவன், ஸ்தூலமான கருத்துடன் தீங்கு செய்யாமல் நின்று, தன்னாலேயே நடத்தப்படுகிறான். பின் கூறியவன் வாழ்வு ஸ்தூலமானது, ஆனால் முன் கூறியவனது பரமார்த்தமானது. சன்மார்க்க வாழ்வு பரமார்த்தமானதாயிருக்கப்பட்ட மனிதன், தனக்குள்ளேயே சுவர்க்கத்தை உடைத்தாயிருக்கிறான்; ஆனால், சன்மார்க்க வாழ்வு ஸ்தூலமானதாய்மாத்திரம் இருக்கிற மனிதன் தனக்குள்ளேயே சுவர்க்கத்தை உடைத்தாயிருக்கிறதில்லை. சுவர்க்கமானது மேலேயிருந்து உள்ளே பாய்ந்து, மனிதனுடைய உள்ளானவைகளை திறந்து, உள்ளானவைகள் மூலமாய், அவனுடைய புறம்பானவைகளில் பாய்கிறதென்பதும், அப்படியிருக்க, உலகமானது கீழேயிருந்து உள்ளே பாய்ந்து உள்ளானவைகளையல்லாமல் புறம்பானவைகளை திறக்கிறதென்பதும் காரணமாயிருக்கிறது; ஏனென்றால், ஸ்தூல உலகத்திலிருந்து சூக்கும உலகத்திற்கு உட்பெருக்கு இல்லை; ஆனால், சூக்கும உலகத்திலிருந்து ஸ்தூல உலகத்திற்கு அது இருக்கிறது; ஆகையினால், அதே காலத்தில் சுவர்க்கம் பெற்றுக் கொள்ளப் படாவிட்டால், உள்ளானவைகள் மூடப்படுகின்றன. இவைகளிலெல்லாமிருந்து தங்களுக்குள்ளேயே, யார் சுவர்க்கத்தை அடைகிறார்கள், யார் அடைகிறதில்லை என்பது அறிந்து கொள்ளப்படலாம். ஆனால், ஒருவனிடத்தில் சுவர்க்கமானது, மற்றவனிடத்தில் இருப்பதுபோல் ஒரே மாதிரி யிருக்கிறதில்லை; ஏனென்றால் நன்மையினிடத்தும், அதிலிருந்து உண்மையினிடத்தும் கொள்ளும் ஆசைக்கு தக்கபடி, ஒவ்வொருவனிடத்தில் அது வித்தியாசப்படுகிறது. தெய்வத்தின் பொருட்டு நன்மையினிடத்து கொள்ளும் ஆசையிலிருக்கப்பட்டவர்கள், தெய்வீக உண்மையின்பேரில் அன்பு பாராட்டுகிறார்கள். ஏனென்றால், நன்மையும் உண்மையும், ஒன்றோடொன்று, அன்னியோன்யமாய் அன்பு பாராட்டி சேர்க்கப்பட விரும்புகின்றன. இந்த காரணத்துக்காக, கிறிஸ்தவரல்லாத இதர சமயத்தார், உலகத்தில் வாழும் காலத்தில் சுத்தமான உண்மையில் இல்லாவிட்டாலும், அன்பிலிருந்து இதர வாழ்வில் அவைகளைப் பெற்றுக் கொள்ளுகிறார்கள்.

**320.** உலகத்தில் தன்னுடைய சமயத்தை அனுசரித்து, தருமத்தின் நன்மையில் வாழ்ந்த கிருஸ்துவரல்லாதவர்களில் ஒரு ஆவியானது, எது நம்பப்படவேண்டுமென்பதைப்பற்றி, கிருஸ்துவ ஆவிகள் வாதாடிக்கொண்டிருப்பதைக்கேட்டு, (ஏனென்றால், ஆவிகள்

ஒன்றோடொன்று மனிதர்களைவிட அதிக தீர்க்கமாயும் தீவிரமாயும், முக்கியமாய், நல்லது எது உண்மையானது எது என்பதைப் பற்றி தர்க்கம் செய்கின்றன), இவ்விதமாக அவைகள் வாதாடுவதைப்பற்றி ஆச்சரியப்பட்டு, அவைகள் தோற்றங்களிலிருந்தும் ஆபாசங்களிலிருந்தும் தர்க்கம் செய்தபடியினால்தான், அவைகளைக் கேட்க விரும்பவில்லை என்று சொல்லி, "நான் நல்லவனாயிருந்தால், நன்மையிலிருந்தே உண்மையானது எது வென்று தெரிந்து கொள்ளக்கூடும்; எனக்கு தெரியாததை நான் கற்று கொள்ளக் கூடும்" என்கிற போதனையை கற்பித்தது.

**321.** சன்மார்க்க வாழ்வை நடத்தி, கீழ்படிதலிலும் அடக்கத்திலும், தங்களுடைய சமய நம்பிக்கையின்படி அன்னியோன்னிய தருமத்திலும் வாழ்ந்து, இவ்விதமாக மனசாட்சி என்பதில் கொஞ்சம் அடைந்த கிறிஸ்துவரல்லாத இதர சமயத்தார், மற்றைய வாழ்வில் ஒத்துக் கொள்ளப்பட்டு, அங்கே தேவர்களால் விசுவாசத்தின் நன்மைகளிலும் உண்மைகளினும், வேண்டுதலான பொருப்புடன் கற்பிக்கப்படுகிறார்களென்றும், அப்படி அவர்கள் கற்பிக்கப்படும் காலத்தில், நாணமாயும், விவேகமாயும், அறிவுடனும் தாங்களே நடந்துகொண்டு, உண்மைகளை சுலபத்தில் பெற்று, அவைகளை தங்களுக்கு உரித்தாக்குகிறார்களென்றும், அநேக வழிகளில் நான் கற்றுக்கொண்டிருக்கிறேன். நீக்கிவிடவேண்டிய அவசியமுள்ள, விசுவாசத்தின் உண்மைகளுக்கு விரோதமான பொய்யின் எந்த நியமங்களையும், இன்னும் குறைவாய்,சாதாரண மனிதனைத்தவிர, அவரைப் பற்றி வேறு எந்த அபிப்பிராயமும் கொள்ளாத அநேக கிறிஸ்துவர்களைப்போல், ஆண்டவருக்கு விரோதமான தூறுகளை தாங்களே உண்டாக்கிக் கொள்ளவில்லை. கிறிஸ்துவர் அல்லாதவர்கள் இதற்கு விரோதமாக, கடவுள் மனிதனுக்கப்பட்டு, இவ்விதமாக உலகத்தில் தானேவெளிப்படுத்திக்கொண்டாரென்றுகேழ்விப்படுகிறபோது, கடவுளானவர் சுவர்க்கத்துக்கும் பூமிக்கும்கடவுளானபடியினாலும், மானிட வம்சம் தன்னுடையதானபடியினாலும், அவர் முழுமையும் தானே வெளிப்படுத்திக்கொண்டார் என்று சொல்லி, அதை உடனே ஒத்துகொண்டு, ஆண்டவரைத் தொழுகிறார்கள். ஆண்டவரை விட்டுவிட்டு எந்த மோட்சமும் இல்லை என்பது, ஒரு தெய்வீக உண்மை; ஆனால், இது ஆண்டவரிடமிருந்தல்லாமல் எந்த மோட்சமும் கிடையாதென்று அறிந்துகொள்ளப்பட வேண்டியது. பிரபஞ்சத்தில் அநேக பூமிகள் இருக்கின்றன; அவைகள் எல்லாம் பிரஜை

களால் நிறைந்திருக்கின்றன; என்றாலும், அவர்களில் யாருக்கும் ஆண்டவர் நம்ம பூமியில் மானிடத்தன்மையை எடுத்துக்கொண்டாரென்று தெரியாது. அப்படியிருந்தாலும், தெய்வத்தை மானிட உருவத்தில் அவர்கள் தொழுகிறபடியினால், அவர்கள் ஆண்டவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, நடத்தப்படுகிறார்கள். இந்த விஷயத்தைப்பற்றி பிரபஞ்சத்தின் பூமிகளைக்குறித்த சிறிய நூலைப்பார்க்கவும்.

**322.** கிறிஸ்தவர்களைப் போல் புறச்சமயத்தார்களுக்குள்ளும், புத்திசாலிகளும், பேதைமை யானவர்களுமிருக்கிறார்கள். அவர்கள் குணத்தைப்பற்றி நான் கற்பிக்கப்படும்படி இருவகையாருடனும், சில சமயங்களில் அநேக மணி நேரங்களும், நாட்களும்பேச எனக்கு அருள் செய்யப்பட்டது. ஆனால், பூர்வகாலத்தின் போல் முக்கியமாய் ஆசியாகண்டத்தின் மிக பெரிய பாகத்தில் பரவியிருந்ததும், அதிலிருந்து அநேக தேசங்களின் ஜனங்களுக்குள் சமயமானது, பரவியதுமாகிய பூர்வீக திருச்சபையில் இருந்ததுபோல், அவ்வித ஞானிகள் இப்பொழுது இல்லை. அவர்கள் குணத்தை நான் தெரிந்திருக்கும்படி, அவர்களில் சிலருடன் பழகிய சம்பாஷணை உடைத்தாயிருக்க நான் விடப்பட்டேன். தன்னுடைய காலத்தில் ஞானமுள்ளவர்களில் ஒருவராயிருந்து, அதனால், கற்றவர்கள் உலகத்தில் பிரசித்த மானவராயிருந்தவரும், நான் அவருடன் பல விஷயங்களைக் குறித்து பேசியவருமாகிய ஒருவர் என்னுடன் இருந்தார். அவர் சிசிரோ என்பவர் என்று நம்ப அருள்செய்யப்பட்டது. அவர் அறிவுள்ளவர் என்று எனக்கு தெரியும்; ஆகையினால், நான் அவருடன் ஞானத்தைப் பற்றியும், விவேகத்தைப்பற்றியும், ஒழுங்கைப்பற்றியும், வேதத்தைப்பற்றியும், கடைசியாய் ஆண்டவரைப்பற்றியும் பேசினேன். வாழ்க்கையைச் சேர்ந்ததன்றி எந்த ஞானமுமில்லை யென்றும், வேறு எதற்கும் ஞானமானது குறிப்பிடக்கூடாதென்றும், ஞானத்தைப்பற்றி அவர் சொன்னார்; விவேகத்தைக் குறித்து, அது ஞானத்திலிருந்து வருகிறதென்று அவர் சொன்னார்; ஒழுங்கைக் குறித்து, அது எல்லாவற்றையும் கடந்து கடவுளிடமிருந்து வருகிறதாகவும், அந்த ஒழுங்கில் வசித்தலென்பது ஞானமுள்ளவனாகவும் விவேகமுள்ளவனாகவும் இருத்தலென்றும் அவர் சொன்னார். வேதத்தைப் பற்றி, தீர்க்கதரிசிகளிலிருந்து அவருக்கு சிலதை வாசித்துக் காண்பித்தபோது, அவர் மிகவும் இன்பமடைந்தார்; முக்கியமாய் ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு வார்த்தையும் உள்ளான கருத்து

களைக் கொண்டிருப்பதற்கு மிகவும் சந்தோஷமடைந்தார். தற்காலத்தின் கற்றவர்கள் அவ்வித படிப்பில் ஆனந்தமடைகிறதில்லை என்று அவர் ஆச்சரியப்பட்டார். அவருடைய சிந்தனையின் அல்லது மனதின் உள்ளானவைகள் திறக்கப்பட்டிருப்பதை நான் தெளிவாய் பார்த்தேன். உள்ளுக்குள்ளாய் அவ்வளவு பட்டபடியினால், தான் பொருக்கக்கூடியதைவிட அதிக பரிசுத்தமான ஒன்றை உணர்ந்ததின் நிமித்தம் தான் சமீபிக்க முடியாதென்று அவர் சொன்னார். கடைசியில் அவருடன் ஆண்டவரைக் குறித்து, அவர் மனிதனாக பிறந்தார் என்றும், ஆனால் கடவுளால் கருத்தரிக்கப்பட்டார் என்றும், தாயாரிடமிருந்து அடைந்த மானிடத் தன்மையை போட்டுவிட்டு, தெய்வீகமானிடத் தன்மையை தரித்துகொண்டாரென்றும், அவர்தான் பிரபஞ்சத்தை ஆளுகிறாரென்றும், சொல்லி பேசினேன். இதற்கு அவர் ஆண்டவரைக் குறித்து தனக்கு அநேக விஷயங்கள் தெரியுமென்றும் மானிட வர்க்கம் இரட்சிக்கப்படவேண்டுமானால், அது வேறு எந்த விதத்திலும் செய்யப்பட முடியாமல் போய்விட்டிருக்குமென்று, தன் சொந்த வழியில் தான் உணர்ந்ததாகவும் பதில் கூறினார். இடையில் சில கெட்ட கிறிஸ்தவர்கள் பற்பல அவதூறுகளைப் புகட்டினார்கள்; ஆனால் சரீர வாழ்விலிருக்கும்போது, அந்த விஷயத்தைப்பற்றி தகாத அபிப்பிராயங்களை அவர்கள் உட்கொண்ட படியினாலும், அவைகளை அவர்கள் நீக்குகிறவரையில், அறிவில்லாதவர்களை செய்யக்கூடியதுபோல், உண்மையை ஸ்திரப்படுத்திய அபிப்பிராயங்களை ஏற்றுக்கொள்ள முடியாதபடியினாலும், இது ஆச்சரியமல்லவென்று சொல்லி இவைகளை அவர் கவனிக்கவில்லை.

**323**. பூர்வகாலங்களில் உயிரோடிருந்து, மிகவும் ஞானிகளாய், அப்பொழுது இருந்த மற்றவர்களுடன் பேசக்கூட, எனக்கு அருள் செய்யப்பட்டது. அவர்கள் முதலில் எதிரில் தூரத்தில் பார்க்கப்பட்டார்கள்; அப்பொழுது என்னுடைய சிந்தனையின் உள்ளானவைகளையும், இவ்விதமாக அநேக விஷயங்களை முழுமையும் பார்க்க, அவர்கள் சக்தியுள்ளவர்களாயிருந்தார்கள். சிந்தனையின் ஒரு அபிப்பிராயத்திலிருந்து, முழு கூட்டத்தையும் அறிந்துகொண்டு, அழகுள்ள அறிகுறிகளுடன் சேர்க்கப்பட்ட, ஞானத்தின் இன்பமானவைகளால் நிரப்ப, அவர்கள் சக்தியுள்ளவர்களாயிருந்தார்கள். இதிலிருந்து, அவர்கள் அதிக ஞானமுள்ளவர்களுக்கு சேர்ந்தவர்களென்று நான் அறிந்துகொண்டேன்; மேலும் பூர்வீகர்

களில், அவர்கள் சிலரென்று எனக்கு சொல்லப்பட்டது. ஆகையி னல், அவர்கள் அதிக சமீபமாய் வந்தார்கள், அப்பொழுது நான் வேதத்திலிருந்து சிலவற்றை படித்துக் காண்பித்தேன்; அப்பொ ழுது அவர்கள் அளவிற்கு மிஞ்சி சந்தோஷப்பட்டார்கள். அவர் கள் வேதத்திலிருந்து கேள்விப்பட்ட எல்லா விஷயங்களும், ஒவ் வொன்றும் சுவர்க்கத்துக் கடுத்ததும் பரமார்த்தமானதுமாகிய விஷயங்களுக்கு, அறிகுறியாகவும் அவைகளை கருதுவதாகவும், இருந்த தென்பதிலிருந்து முக்கியமாய் உண்டான, அவர்களுடைய இன்பத்தினுடையவும் மனப்பூர்த்தியி னுடையவும் சாரத்தை நான் உணர்ந்தேன். உலகத்தில் தாங்கள் இருந்தபோது தங்கள் காலத் தில், தங்களுடைய நினைத்தலினுடையவும், பேசுதலினுடையவும், எழுதுதலினுடையவும் முறை, இந்த சுபாவமுடையதாயிருந்த தென்றும், இது அவர்கள் ஞான வேட்டையாயிருந்த தென்றும் அவர்கள் சொன்னார்கள்.

**324**. இக்காலத்து புறச்சமயத்தார் விஷயத்தில், அவர்கள் அவ்வளவு விவேகிகளாயில்லை, ஆனால் அவர்களில் அநேகர் இரு தயத்தில் பேதைமையானவர்களாயிருந்தார்கள். அவர்களில்அன்னி யோன்னிய தருமத்தில் வாழ்ந்தவர்கள், ஞானத்தை இதர வாழ் வில் ஏற்றுக் கொள்ளுகிறார்கள்; இவர்களில் ஒன்று அல்லது இரண்டு உதாரணங்கள் சொல்லப்படலாம். நியாயாதிபதிகள் என் பதின் பதினேழு பதினெட்டாவது அத்தியாயங்களை, தன்னுடைய வெட்டப்பட்ட விக்கிரகமும், சுரூபமும் லேவியனும் டான் புத் திரர்களால் தன்னிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட மீகா என் பவனைப்பற்றி நான் வாசித்தபோது, சரீரவாழ்வில் இருக்கும்போது ஒரு வெட்டப்பட்ட விக்கிரகத்தை ஆராதித்த புறச்சமய ஆவி ஒன்று இருந்தது. மீகா என்பவனுக்கு செய்யப்பட்டதையும், தாணி யர்கள் எடுத்துக்கொண்டுபோன, வெட்டப்பட்ட விக்கிரகத்தின் பொருட்டுதான் சகித்த விசாரத்தைப்பற்றியும்,கவனமாய் அது உற் றுக்கேட்டபோது, உள்ளான ஆகுலத்தினால், என்ன நினைப்பது என்று அதற்கு தெரியாதபடிக்கு, அவ்விதமான விசனம் அதற்கு உண்டாயிற்று. நான் அதனுடைய விசனத்தையும், அதேகாலத்தில் அதன் ஆசைகளிலெல்லாம் இருக்கும் மாசின்மையையும் பார்த் தேன். அப்பொழுது பிரத்தியக்ஷமாயிருந்த கிறிஸ்துவ ஆவிகள், அதை கவனித்து வெட்டப்பட்ட விக்கிரகத்தை ஆரா திக்கிற ஒருவன், தனக்குள்ளே இரக்கத்தினுடையவும் மாசின்

மையினுடையவும், அவ்வளவு பெரிய உணர்ச்சியை உடைத்தாயிருக்கிறதே, என்பதைப்பற்றி ஆச்சரியப்பட்டன. பின்னிட்டு சில நல்ல ஆவிகள், வெட்டப்பட்ட விக்கிரகம் ஆராதிக்கப்படக்கூடாதென்றும், தான் மனிதனுயிருந்தபடியினுல், தனக்கு இது தெரியுமென்றும், ஆனுல், வெட்டப்பட்ட விக்கிரகத்திற்கு மேலாக, முழு சுவர்க்கத்திற்கும், முழு பூமிக்கும் சிருஷ்டி கர்த்தாவாயும் அரசராயுமிருக்கப்பட்ட கடவுளை நினைக்கவேண்டுமென்றும், அந்தக் கடவுள்தான் ஆண்டவரென்றும் சொல்லிக்கொண்டு, அதனுடன் பேசின. இது சொல்லப்பட்டபோது, எனக்கு அறிவிக்கப்பட்ட அதன் ஆராதனையின் உள்ளான சுபாவத்தைப்பார்க்க எனக்கு உத்திரவு கொடுக்கப்பட்டது; அது கிறிஸ்துவர்களிடத்தில் இருப்பதையிட அதிக பரிசுத்தமானதாயிருந்தது. இக்காலத்தில் புறச்சமயத்தார், கிறிஸ்துவர்களைவிட அதிக இலகுவாய், லூக்காவில் சொல்லப்படும் ஆண்டவரின் வார்த்தைகளின்படி சுவர்க்கத்திற்கு வருகிறூர்களென்பது, இதிலிருந்து விசதமாகிறது:—"கிழக்கிலும் மேற்கிலும்,வடக்கிலும் தெற்கிலும் இருந்து ஜனங்கள் வந்து, தேவனுடைய இராச்சியத்தில் பந்தியிருப்பார்கள். அப்பொழுது முந்தினோர் பிந்தினோராவார்கள், பிந்தினோர் முந்தினோராவார்கள் என்றூர்" (லூக்கா xiii. 29, 30). ஏனென்றூல், அந்த ஆவி இருந்த நிலைமையில், விசுவாசத்தின் எல்லா விஷயங்களையும் உறிஞ்சிக்கொள்ளவும், உள்ளான ஆசையுடன் அவைகளைப் பெற்றுக்கொள்ளவும், அது சக்தியுள்ளதாயிருந்தது; அன்பின் இரக்கத்தை அது உடைத்தாயிருந்தது; அதனுடைய அறிவின்மையில், மனப்புனிதம் இருந்தது; இவைகள் இருக்கும் காலத்தில் விசுவாசத்தின் எல்லா விஷயங்களும், தானுகவேபோலவும், சந்தோஷத்துடனும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அது பின்னிட்டு தேவர்களுக்குள் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**325**. தூரத்தில் ஒரு நாள் காலையில் ஒரு பாடகர் சப்தம் கேட்டது; அந்த பாடகரின் பாவனைகளால், அவர்கள் சீனர்கள் என்று தெரிந்துகொள்ள எனக்கு அனுமதிகொடுக்கப்பட்டது; ஏனென்றூல், அவர்கள் ரோமத்தினுல் உடுத்தப்பட்ட ஒரு வெள்ளாட்டின் உருவத்தையும், பிறகு சாமையின் பணிகாரத்தையும், ஒரு கருங்காலி கரண்டியையும், அதனுடன் ஒரு மிதக்கிற நகரத்தின் அபிப்பிராயத்தையும் காண்பித்தார்கள். அவர்கள் என் சமீபத்தில் வர விரும்பினூர்கள். அப்படி சமீபத்தில்

றபோது, தங்களுடைய எண்ணங்களை திறக்க, என்னுடன் தனியாயிருக்க, தாங்கள் விரும்பினதாக அவர்கள் சொன்னார்கள் ஆனால், அவர்கள் தனியாய் இருக்கவில்லை என்றும், தாங்கள் அதிதிகளாயிருந்தும், தனியாய் இருக்க விரும்பினதைப்பற்றி சிலருக்கு வெறுப்புண்டாக்கியதாகவும், அவர்களுக்கு சொல்லப்பட்டது. இந்த பிரியயீனத்தை அவர்கள் அறிந்துகொண்டபோது, தங்களுடைய அயலானுக்கு விரோதமாக தாங்கள் மீறிநடந்தோமா வென்றும், மற்றவர்களுக்கு சேர்ந்ததை எதையாவது, தங்களுக்கே உரியதென்று பாத்தியம் பாராட்டினோமே வென்றும், யோசிக்க ஆரம்பித்தார்கள் இதர வாழ்வில் இருக்கும் எல்லா சிந்தனைகளும் அறிவிக்கப்படுகிறபடியினால், அவர்களுடைய மனதின் கலாதியைப் பார்க்க நான் விடப்பட்டேன். வெறுப்பு உண்டாக்கப்பட்டவர்களுக்கு ஒருவேளை தாங்கள் கெடுதி செய்திருப்போமோ என்கிற அச்சத்தினாலும், அதற்காக வெட்கத்தினாலும், அதே காலத்தின் இதர பாத்திரமான ஆசைகளினாலும் அது அடங்கியிருந்தது: ஆகவே, அவர்களுக்கு தருமம் கொடுக்கப்பட்டிருந்ததாக விசதமானது. அப்புறம் உடனே நான் அவர்களுடனும், கடைசியில ஆண்டவரைக் குறித்தும் பேசினேன். நான் அவரை "கிறிஸ்து" என்று சொன்னபோது, கிறிஸ்துவர்கள் தங்களைவிட மிகவும் கெட்ட வாழ்க்கைகளை நடத்தினார்களென்றும், அவர்கள் தருமம் எனபது இல்லாமலிருந்தார்களென்றும் தெரிந்துகொண்டதினால், தாங்கள் உலகத்தில் அடைந்த அபிப்பிராயங்களில் ஆரம்பிப்பதை, கண்டுபிடிக்கப்பட்ட ஓரளவு வெறுப்பை நான் அவர்களிடத்தில் பார்த்தேன். ஆயினும், நான் அவரை "ஆண்டவர்" என்று சொன்னபோது, அவர்கள் அந்தரங்கமாய் அசைக்கப்பட்டார்கள். கிறிஸ்தவ கொள்கையானது, முழு உலகத்திலும் வேறு எதையும் விட, அதிகமாய் அன்பைப்பற்றியும் தருமத்தைப்பற்றியும் வற்புறுத்துகிறதென்றும், ஆனால், அதன்படி வாழ்கிறவர்கள், சிலர் தான் இருக்கிறார்களென்றும், அப்பொழுது, தேவர்களால் அவர்களுக்கு சொல்லப்பட்டது. தங்களுடைய சமய கொள்கைகளுக்கு விரோதமாயிருப்பதினால், தாங்களே வெறுத்த விபசாரத்தையும், குரோதத்தையும், கலகம் செய்தலையும், குடிவெறியையும் இதைப் போன்ற குற்றங்களையும் அப்பியாசம் செய்து, கிறிஸ்துவர்கள் கெட்ட வாழ்வை நடத்துகிறார்களென்று, சம்பாஷணையினாலும் வதந்தியினாலும், தாங்கள் உலகத்தில் வாழ்ந்தபோது தெரிந்துகொண்ட

கிறிஸ்துவரல்லாத புறச்சமயத்தை சேர்ந்தவர்களுமிருக்கிறார்கள். அவர்கள், இதரவாழ்வில், விசுவாசத்தின் உண்மைகளை ஏற்றுக் கொள்வதில் மற்றவர்களைவிட அதிக அச்சப்படுகிறார்கள்; ஆனால், கிறிஸ்து கொள்கையும் கிறிஸ்து சமயமும்கூட முழுமையும் வேறு விதமாய் கற்பிக்கின்றனவென்றும், புறச்சமயத்தாரைவிட, கிறிஸ்துவர்கள் தங்கள் கொள்கைக்கு குறைவாய் வாழ்கிறார்களென்றும், அவர்கள் தேவர்களால் தெரிவிக்கப்படுகிறார்கள். இவைகளை அவர்கள் அறிந்துகொள்ளுகிறபோது, விசுவாசத்தின் உண்மைகளை பெற்றுக்கொண்டு, ஆண்டவரை ஆராதிக்கிறார்கள்; ஆனால் அவர்கள் மற்றவர்களைப்போல் அவ்வளவு ஆயத்தமாய் அப்படி செய்கிறதில்லை.

**326** ஒரு பிரதிமையின், அல்லது கற்பாவையின், அல்லது எந்த செதுக்கப்பட்ட விக்கிரகத்தின் உருவத்தில் எந்த கடவுளையாவது ஆராதித்த புறசமயத்தார், இதர வாழ்வில் பிரவேசித்தபோது, தங்களுடைய வீணெண்ணங்களை நீக்கிவிடும்படி, தங்களுடைய கடவுளர் அல்லது விக்கிரகங்களுக்கு பதிலாக சில ஆவிகளுக்கு அறிமுகமாக்கப்படுவது, சாதாரணமாயிருக்கிறது; இவர்களுடன் அவர்கள் கொஞ்சகாலம் இருந்த பிறகு வீணெண்ணங்கள் போட்டுவிடப்படுகின்றன. மேலும், மனிதர்களை ஆராதித்தவர்கள், யூதர்களில் அநேகர் ஆபிரகாமுக்கும், ஜேகோபுக்கும், மோசேவுக்கும், தாவீதுக்கும் அறிமுகமாக்கப்படுவதுபோல், தாங்களே ஆராதித்த மனிதர்களுக்காவது, அவர்களுக்கு பதிலாக மற்றவர்களுக்காவது, சிலவேளைகளில் அறிமுகமாக்கப்படுகிறார்கள்; ஆனால், அவர்கள் தங்களைப்போல் மனிதர்களென்றும், அவர்கள் தங்களுக்கு யாதொரு உதவியையும் செய்ய முடியாதென்றும் தெரிந்துகொள்ளும்போது, அவர்கள் வெட்கமடைந்து, தங்கள் வாழ்க்கைகளுக்கு தக்கபடி, தங்கள் சொந்த இடங்களுக்கு நடத்தப்படுகிறார்கள். சுவர்க்கத்திலிருக்கும் புறச் சமயத்தாருக்குள் ஆபிரிகா கண்டத்தார் மிகவும் பிரீதியானவர்கள்; ஏனென்றால், அவர்கள் சுவர்க்கத்து உண்மைகளையும் நன்மைகளையும் மற்றவர்களைவிட அதிக இலகுவாய் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அவர்கள், விசுவாசமுள்ளவர்கள் என்று சொல்லப்படுவதைவிட, சொற்கேட்கிறவர்கள் என்று சொல்லப்பட முக்கியமாய் விரும்புகிறார்கள். கிறிஸ்துவர்கள் விசுவாசக்கொள்கையை உடைத்தாயிருக்கிறபடியினால், அவர்களை விசுவாசமுள்ளவர்களென்று சொல்லப்படலாமென்றும்,

ஆனால், தாங்களே அந்தக் கொள்கையை பெற்றுக்கொண்டா லொழிய, அல்லது அவர்களே சொல்லுகிறபடி, அதை ஏற்றுக் கொள்ள சக்தியுள்ளவர்களாய் இருந்தாலொழிய, அப்படி இல்லை என்றும், அவர்கள் சொல்லுகிறார்கள்.

**327.** பூர்வீக திருச்சபையிலிருந்த சிலருடன் நான் பேசி யிருக்கிறேன். பூர்வீக சபை என்பதினால், ஜலப்பிரளயத்திற்கு அப்புறம் இருந்து, அசிரியா, மெசோபொடோமியா, சிரியா எதி யோபியா, அரேபியா, லிபியா, எகிப்து, டைரையும் ஸைடனையும் சேர்த்து பிலிஸ்தியா, ஜார்டான் நதிக்கு இருபக்கங்களிலுமிருக்கும் கானான் தேசம்போன்ற அநேக இராச்சியங்களில் பரவியிருந்தது கருதப்படுகிறது. இந்த திருச்சபையைச் சேர்ந்த மனிதர்களுக்கு ஆண்டவர் வரப்போகிறது அப்பொழுது தெரியும்; மேலும் அவர் கள் விசுவாசத்தின் நன்மைகளால் பதிக்கப்பட்டிருந்தார்கள்; ஆனால், அப்படியிருந்தும், அவர்கள் அவைகளை விட்டுவிட்டு விக்கிரக ஆராதனை செய்பவர்களானார்கள். எதிரில் இடது பக்கத்தில் ஒரு இருட்டான இடத்திலும், நிர்பந்தமான நிலைமையிலும் அவர் கள் இருந்தார்கள். அவர்களுடைய பேச்சானது, ஒரு இசைக் குழலின் சத்தத்தைப்போல், ஒரு தொனியாகவும், விவேகத் துடன் இசைந்த சிந்தனை ஏறக்குறைய இல்லாமலும் இருந்தது. தாங்கள் அந்த இடத்தில் நெடுங்காலமாக இருந்ததாகவும், மற்றவர்களுக்கு இழிவான உபயோகங்களை செய்ய அப்போதைக் கப்போது அதற்கு வெளியே கொண்டுபோகப்பட்டதாகவும் அவர் கள் சொன்னார்கள். தங்களேயேயும் உலகத்தையும் ஆராதித்து, ஆண்டவரை இருதயத்தில் மறுதளித்து, புறம்பாய் விக்கிரக பூசக ருயல்லாமல், ஆனால் அம்மாதிரி உள்ளுக்குள்ளாயிருக்கிற அநேக கிறிஸ்துவர்களைப்பற்றி நினைக்கவும், இதர வாழ்வில் எவ்வித கதி அவர்களுக்கு காத்துக்கொண்டிருக்கிறதென்று யோசிக்கவும்எனக்கு நேரிட்டது.

**328.** ஆண்டவரின் திருச்சபை முழு பூகோளத்தில் பரவப் பட்டு, இவ்விதமாக சர்வ வியாபகமா யிருக்கிறதென்பதும், தங்க ளுடைய சமய நம்பிக்கைக்கு தக்கபடி, தருமத்தின் நன்மையில் வாழ்ந்தவர்கள் எல்லாரும் அதில் இருக்கிறார்களென்பதும், வேதம் இருக்கப்பட்டதும், அதனால் ஆண்டவர் தெரியப்படுகிறதுமான திருச்சபையானது, அவைகளின் உருவத்திற்கும், நிலைக்கும், இணை

வுக்கும் தக்கபடி பலவிதமாய், சரீரத்தின் எல்லா ஆந்திரிகமும் அவயவங்களும் உயிரை உடைத்தாய் இருக்கிற, மனிதனிலிருக்கும் இருதயத்தையும் சுவாசாசயங்களையும் போல, திருச்சபைக்கு வெளியே இருப்பவர்களுடன் சம்பந்தப்பட்டிருக்கிறதென்பதும், மேலே (செ. 308) பார்க்கப்படலாம்.

## XXXVII

## சுவர்க்கத்திலிருக்கும் சிறு குழந்தைகள்

**329.** திருச்சபைக்குள்ளிருக்கும் குழந்தைகள் ஞானஸ்நானம் கொடுக்கப்படுகிறபடியினாலும், ஞானஸ்நானத்தினால் அந்த சமயத்தின்கோட்பாட்டிற்குள் தொடக்கப்படுகிறபடியினாலும், வெளியே பிறந்தவர்கள் அல்லாமல், அதற்குள் பிறந்தவர்கள் மாத்திரம் சுவர்க்கத்திற்குள் வருகிறார்களென்று சிலர் நம்புகிறார்கள். ஞானஸ்நானத்தினால், எவனும் சுவர்க்கத்தையாவது பக்தியையாவது அடைகிறதில்லை என்று அவர்களுக்கு தெரியாது; ஏனென்றால், மனிதன் மறுபடியும் பிறக்கச் செய்யவேண்டுமென்பதற்கும், திருச்சபைக்குள் பிறந்தவர்கள், மறுபடியும் பிறக்க செய்யப்படக்கூடுமென்பதற்கும், ஒரு அடையாளமாகவும் ஞாபகக்குறியாகவு மாத்திரமிருக்கிறது; ஏனென்றால், வேதம் அங்கேயிருக்கிறது; அந்த வேதத்தின் மறுபிறப்படைதல் உண்டாக்கப்படுகிற தெய்வீக உண்மைகள் இருக்கின்றன; மேலும் அங்கே மறுபிறப்படையச்செய்கிற ஆண்டவர் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையினால், ஒவ்வொரு குழந்தையும், திருச்சபைக்குள்ளாவது அதற்கு வெளியாவது, தேவபக்தியுள்ள பெற்றோர்களுக்காவது அல்லது துஷ்ட பெற்றோர்களுக்காவது எங்கே பிறந்திருந்தபோதிலும், அது இறந்தபோது ஆண்டவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு சுவர்க்கத்தில் கற்பிக்கப்படுகிறதென்று அவர்களுக்கு தெரிந்திருக்கட்டும். அது அங்கே தெய்வீக ஒழுங்கை அனுசரித்து கற்பிக்கப்பட்டு, நன்மையினிடத்து கொள்ளும் ஆசையினாலும், அவைகளால் உண்மையினிடத்து கொள்ளும் அறிவுகளினாலும் புகட்டப்பட்டிருக்கிறது; பின்னிட்டு, விவேகத்திலும் ஞானத்திலும் சம்பூரணமாக்கப்படுகிறபோது, அது சுவர்க்கத்திற்குள் நடத்தப்பட்டு, ஒரு தேவதூதனாகிறது. பகுத்தறிவுடன் நினைக்கிற ஒவ்வொருவனுக்கும், எவனும் நரகத்திற்கு பிறக்கவில்லை என்றும், எல்லாரும் சுவர்க்கத்திற்கே பிறந்திருக்கிறார்களென்றும், நரகத்திற்கு வந்தால் மனிதனுடைய தப்பிதமே என்றும், ஆனால் சிறு பிள்ளைகள் அதற்குள் குற்றம் செய்யமாட்டார்களென்றும் தெரிந்திருக்கலாம்.

**330.** இறந்துபோகிற குழந்தைகள் மற்றவாழ்விலும்கூட குழந்தைகளாயிருக்கிறார்கள். அவர்களுக்கு அதே பாலியமான மன

தும், அறிவின்மையில் அசேதமாசின்மையும், எல்லா விஷயத்திலும் அதே மிருதுவுமிருக்கிறது அவர்கள், தேவதூதர்களாகும்ஒரு வல்லமையின்ஆரம்பத்தில் மாத்திரம் இருக்கிறார்கள்; ஏனென்றால், குழந்தைகள் தேவர்கள் அல்ல, ஆனால் தேவர்களாகிறார்கள். இந்த உலகத்தைவிட்டபிறகு ஒருசிறு குழந்தை ஒருசிறு குழந்தையின் நிலைமையிலும், ஒருபையன் பிள்ளை பிராய நிலைமையிலும், ஒருவாலிபன் ஒரு மனிதன் அல்லது ஒருகிழவன் யௌவனத்தின் நிலைமையிலும், புருடத்துவ நிலைமையிலும் விருத்தாப்பிய நிலைமையிலும் உயிரின் ஓரே நிலைமையில் இதர வாழ்வில்பிரவேசிக்கிறான்; ஆனால் ஒவ்வொருவனுடைய நிலைமை பின்னிட்டு மாற்றப்படுகிறது. குழந்தைகளின் நிலைமை மற்றவர்கள் எல்லாருடையதையும்விட, அவர்கள் மாசின்மையிருக்கிறார்களென்பதிலும், தீமையானது நிஜமான வாழ்வினால் அவர்களுக்குள் வேர் இன்னும் நாட்டப்படவில்லை என்பதிலும் மேற்படுகிறது. மாசின்மை என்பதுகூட சுவர்க்கத்தின் எல்லா பொருள்களும் அதில் நடப்படக்கூடியதாயிருக்கிறது; ஏனென்றால், மாசின்மை என்பது விசுவாசத்தின் உண்மையினுடையவும், அன்பின் நன்மையினுடையவும் கொள்கலமாயிருக்கிறது.

**331**. இதர வாழ்வில் சிறுகுழந்தைகளின் நிலைமை, உலகத்திலிருக்கும் குழந்தைகளின் நிலைமையைவிட அதிக கடந்திருக்கிறது; ஏனென்றால், அவர்கள் மண் சரீரத்தினால் அல்லாமல, தேவர்கள் சரீரம்போன்ற சரீரத்தினால் உடுத்தப்பட்டிருக்கிறார்கள். மண் சரீரமானது தானே மந்தகுணமுள்ளதாயிருக்கிறது; அது தன்னுடைய முதல் இந்திரிய ஞானத்தையும், முதல் மனோசலனத்தையும், அந்தரங்கமான அல்லது சூக்கும உலகத்திலிருந்து அடையாமல், புறம்பான அல்லது ஸ்தூலமான உலகத்திலிருந்து அடைகிறது. ஆகையினால், சிறு குழந்தைகள் உலகத்தில் நடக்கவும், தங்கள் அசைவுகளை செலுத்தவும், பேசவும் கற்றுக்கொள்ளவேண்டும்; பார்க்கிறதும், கேட்கிறதுமான இந்திரியங்கள்போன்ற அவர்கள் இந்திரியங்களால்கூட, உபயோகம் செய்யப்படுவதினால் திறக்கப்படவேண்டும். இதர வாழ்வில் குழந்தைகள் விஷயத்தில் அது வேறு மாதிரி யிருக்கிறது; ஏனென்றால் அவைகள் ஆவிகளாயிருக்கின்றன; மேலும் அவைகள் தங்களுடைய உள்ளானவைகளுக்குத் தக்கபடி உடனே செயல்படுகின்றன. சாதனையில்லாமல் அவைகள் நடந்து பேசுகின்றன. ஆனால், முதலில் சிந்தனைகளின் அபிப்பிராயங்களாக தெளிவாய் வகையறுக்கப்படாத பொதுவான ஆசைகளிலிருந்து அவை

கள் பேசுகின்றன. ஆயினும், கொஞ்சகாலத்திற்குள், இவைகள் படிப்பிக்கப்படுகிறார்கள்; அவைகளுடைய புறம்பானவைகள் அவைகளின் உள்ளானவைகளுடன் ஒரே இயல்புள்ளதாயிருக்கிறதென்பது, அதற்கு காரணமாயிருக்கிறது. தேவர்களின் பேச்சானது, ஆசையிலிருந்து, அவர்கள் சிந்தனைகளுடன் பூரணமாய் உறுதிப்படத்தக்கதாயிருக்க, அது சிந்தனையின் அபிப்பிராயங்களால் மாற்றப்பட்ட ஆசைகளிலிருந்து பாய்கிறது என்பது மேலே பார்க்கப்படலாம் (செ. 234 முதல் 245).

**332**. இறந்த பிறகு உடனே சம்பவிக்கிறபடி, சிறு குழந்தைகள் உயிர்ப்பிக்கப்பட்டபோது, அவர்கள் சுவர்க்கத்துக்கு கொண்டு போகப்பட்டு, சரீர வாழ்வில் குழந்தைகளை உருக்கமாய் நேசித்து, அதேகாலத்தில் கடவுளையும் நேசித்த ஸ்திரி ஜாதிக்கு சேர்ந்த தேவர்களின் விசாரத்தில் ஒப்புவிக்கப்படுகிறார்கள். உலகத்திலிருந்த போது, எல்லா குழந்தைகளையும், இந்த தேவர்கள் தாயிக்கடுத்த உருக்கத்துடன் நேசித்தபடியினால், அவர்கள் அக்குழந்தைகளை தாங்கள் சொந்தமானதாக ஏற்றுக்கொள்ளுகிறார்கள்; சிறு குழந்தைகளும்கூட, தங்களுடைய சொந்த தாய்மார்களைப்போல அவர்களை இயல்பாய் நேசிக்கிறார்கள். தாங்கள் பரமார்த்த பெற்றோருக்குறிய ஆசையுடன் விரும்புகிற அளவு, ஒவ்வொருவருடனும் அநேக சிறு குழந்தைகள் இருக்கின்றன. இந்த சுவர்க்கமானது, நெற்றிக்குமுன் எதிரில் தேவர்கள் ஆண்டவரைப் பார்க்கிற வழியில் அல்லது அரைவிட்டத்தில் நேராய் தோன்றுகிறது. எல்லா சிறு குழந்தைகளும் ஆண்டவரின் நேர் பரிபாலனத்தில் இருக்கிறதினாலும், மூன்றாவது சுவர்க்கமாயிருக்கிற மாசின்மையான சுவர்க்கம் அவைகளுக்குள் பாய்கிறபடியினாலும், அது அங்கே நிலைகொண்டிருக்கிறது.

**333**. குழந்தைகள் பல குணமடையவைகளாயிருக்கின்றன; சில குழந்தைகள் ஞான தேவர்களைப்போல அதே குணமுடையதாயும், சில குழந்தைகள் பரமார்த்த தேவர்களைப்போல அதே குணமுடையதாகயிருக்கின்றன. பரமார்த்த குணமுடைய குழந்தைகள் அந்த சுவர்க்கத்தில் வலது பக்கத்திலும், ஞான சம்பந்தமானவைகள் இடது பக்கத்திலும் காணப்படுகின்றன. சுவர்க்கமாயிருக்கிற மஹாமனிதனிலிருக்கும் எல்லா குழந்தைகளும், கண்களின் மாகாணத்திலிருக்கின்றன; இடது கண்ணின் மாகாணத்தில், ஞானசம்பந்த குண

முடையவைகள் இருக்கின்றன; வலது கண்ணின் மாகாணத்தில், பரமார்த்த குணமுடையவைகள் இருக்கின்றன; ஏனென்றால், ஆண்டவர், ஞானலோகத்திலிருக்கும் தேவர்களால் இடது கண் முன்பாகவும், பரமார்த்த உலகத்தில் இருப்பவர்களால் வலதுகண் முன்பாகமும் பார்க்கப்படுகிறார் (மேலே செ. 118 பார்க்கவும்). சிறு குழந்தைகள் மஹாமனிதனில் அல்லது சுவர்க்கத்தில் கண்கள் மாகாணத்திலிருப்பதினால், அவைகள் ஆண்டவரின் நேரான பார்வையிலும் ஆதரவிலும் இருக்கின்றனவென்பது விசதமாகிறது.

**334**. சிறு குழந்தைகள் சுவர்க்கத்தில் எப்படி கற்பிக்கப்படுகிறார்களென்பதுகூட சுருக்கமாய் விவரிக்கப்படலாம். தங்களுடைய செவிலித்தாயிடமிருந்து பேசக்கற்றுக் கொள்ளுகிறார்கள். அவர்களுடைய முதல் பேச்சானது ஆசையின் சத்தமாக மாத்திரமிருக்கிறது; இது சிந்தனையின் அபிப்பிராயங்கள் பிரவேசிக்குங்கால் படிப்படியாய் அதிக வேற்றுமையானதாகிறது; ஏனென்றால், ஆசைகளிலிருந்துவரும் சிந்தனையின் அபிப்பிராயங்கள், எல்லா தேவர்களுக்குறிய பாஷையை உண்டாக்குகிறது. (இந்த விஷயத்தைப் பற்றிய அத்தியாயத்தில் செ. 234 முதல் 245 வரையில் காண்கிறபடி) மாசின்மையிலிருந்து புறப்படுகிற அவைகளின் ஆசைகளுக்குள், அவைகளின் கண்களுக்கு முன்பாக தோன்றி சந்தோஷத்தை உண்டாக்கப்பட்ட விஷயங்கள் முதலில் பதிக்கப்படுகின்றன; மேலும், இவைகளெல்லாம் சூக்குமமூலத்திலிருந்து உண்டாகிறபடியினால், சுவர்க்கத்து பொருள்கள் உடனே அவைகளுக்குள் பாய்ந்து, இந்த சுவர்க்கத்துக்கு அடுத்தவைகளால், அவைகளின் உள்ளான பாகங்கள் திறக்கப்பட்டு, அதனால் அக்குழந்தைகள் பிரதிதினமும் சம்பூரணமாக்கப்படுகின்றன. இந்த முதல் பருவம் சென்ற பிறகு, அவைகள் உபாத்தியாயர்களால் கற்பிக்கப்படுகிற வேறு சுவர்க்கத்துக்கு மாற்றப்படுகிறார்கள். இம்மாதிரியே, பின்னிட்டும் நடக்கிறது.

**335**. சிறு குழந்தைகள் முக்கியமாய் தங்கள் சக்திகளுக்குத் தகுந்த அறிகுறிகளால் கற்பிக்கப்படுகிறார்கள். யாரும் நம்ப முடியாதபடி, அக்குழந்தைகள் அதிக அழகாயும், உள்ளிருந்தே ஞானத்தினால் நிறைந்துமிருக்கின்றன. இந்தவிதமாக, நன்மையிலிருந்து தன் ஆன்மாவையடைகிற விவேகமானது, படிப்படியாய் அவர்களுக்குள் புகட்டப்படுகிறது. நான் பார்க்கும்படி விடப்பட்ட இரண்டு அறிகுறிகளை இங்கு விவரிக்கிறேன்; அதிலிருந்து மற்றவர்களின் சுபாவத்தை அனுமானிக்கலாம். முதலில் பிரதேக் குழியி

விருந்து ஆண்டவர் எழுந்திருத்தலையும், அதே காலத்தில் தெய்வத்துடன் தன்னுடைய மானிடத் தன்மையை அவர் ஐக்கியப்படுத்தலையும் காட்டும், பாவனைகள் காட்டப்பட்டன. எல்லா மானிட ஞானத்துக்கும் மேற்படும்படியாகவும், அதே காலத்தில் குற்றமற்ற குழந்தைகள் செய்யப்பட்ட விதமாயும் அவ்வளவு அறிவுடன் இது செய்யப்பட்டது. ஒரு பிரேதக்குழிபாவனையைக் காண்பித்தார்கள்; ஆனால் ஆண்டவர் என்று அறிந்துகொள்ள முடியாதபடி. அவ்வளவு தள்ளித்தவிர அதே காலத்தில் ஆண்டவர் பாவனையை காட்டவில்லை; ஏனென்றால், பிரேதக்குழி பாவனையில் சவக்ஷேமத்திற்கு அடுத்த ஏதோ ஒன்று இருக்கிறது; அதை அவர்கள் இவ்விதமாக நீக்கினார்கள். பின்னிட்டு, அதனால் ஞானஸ்நானத்தில் பரமார்த்த வாழ்வை தகுந்த தூரத்திலிருந்து அவர்கள் தெரிவித்த, மிகவும் தெளிந்த ஜலம்போல் தோன்றிய காற்று சம்பந்தமான ஒன்றை, அவர்கள் ஆராய்வுடன் பிரேதக்குழியில் சேர்த்துக்கொண்டார்கள். பின்னிட்டு, கட்டுப்பட்டவர்களிடம் ஆண்டவர் இறக்கத்தையும், அவர்களுடன் சுவர்க்கத்திற்கு அவரிட ஏற்றத்தையும், அவர்கள் காண்பிப்பதை பார்த்தேன். அது ஒப்பனையில்லாத விவேகத்துடனும் பக்தியுடனும் காண்பிக்கப்பட்டது. ஒரு விஷயமானது, பிரதானமாய் குழந்தை யடைவானதாயிருந்தது. ஏற்றத்தில் ஆண்டவரை தூக்கிய மிகவும் மிருதுவானதும் மேன்மையானதும், ஏறக்குறைய கண்களுக்கு புலப்படாததுமான சிறிய கயிறுகளை, பரமார்த்தமானதும், சுவர்க்கத்துக்கு அடுத்ததுமாகியதை, இல்லாத எதையும் அறிகுறியின் எந்த பாகமும் சமீபிக்குமோ, என்கிற பரிசுத்தமான பயத்துடன், எப்பொழுதும் அவர்கள் கீழே விட்டார்கள். இவைகளுடன், அவர்களுக்குள் உபயோகத்திலிருக்கிற இதர அறிகுறிகள் சேர்க்கப்பட்டன; அவைகளால், சிறு குழந்தைகளுக்கு தகுந்த விளையாட்டுகளால்போல, உண்மையைச் சேர்ந்த அறிவுகளுக்குள்ளும், நன்மையினிடத்து கொள்ளும் அன்புகளுக்குள்ளும், அவர்கள் கொண்டுவரப்படுகிறார்கள்.

**336.** அவர்களுடைய புத்தியானது எவ்வளவு மிருதுவாயிருக்கிறது என்பதுகூட காண்பிக்கப்பட்டது. நான் ஆண்டவரின் ஜெபத்தை ஜெபித்து, அவர்களுடைய புத்தியிலிருந்து என்னுடைய சிந்தனையின் அபிப்பிராயங்களுக்குள் உட்பெருக்கு இருந்தபோது, அவர்களுடைய உட்பெருக்கானது ஆசையினுடையதாக மாத்திரம் கிட்டத்தட்ட இருக்கும்படியாக, அவர்களுடைய உட்பெருக்கா

னது, அவ்வளவு மெதுவாகவும் மிருதுவாகவும் இருப்பது அறிந்து கொள்ளப்பட்டது; அதே காலத்தில், அவர்களுடைய புத்தியானது ஆண்டவரிடமிருந்துகூட திறக்கப்பட்டிருந்தது என்று அப்பொழுது கவனிக்கப்பட்டது; ஏனென்றால், அவர்களிடமிருந்து வந்தது, அவர்கள் மூலமாய் அது பாய்ந்ததுபோல இருந்தது. ஆண்டவர் கூட, சிறு பிள்ளைகளின் அபிப்பிராயங்களுக்குள் முக்கியமாய் மிகவும் அந்தரங்கமானதிலிருந்து பாய்கிறார்; ஏனென்றால், பருவமானவர்கள் விஷயத்தில்போல, எதுவும் அவர்களுடைய அபிப்பிராயங்களை மூடுகிறதில்லை. உண்மை அறிந்து கொள்ளுவதற்கு இருக்கும் வழியை மூட எவ்வித பொய்யான கொள்கைகளுமில்லை; அதுவுமன்றி நன்மையை ஏற்றுக்கொள்ளுவதற்கும், அதனால் ஞானத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கும் இருக்கும் வழியை மூட, எந்த தீமையான வாழ்வுமில்லை. ஆகவே, சிறு குழந்தைகள் இறந்த உடனே தேவதாநிலைமைக்கு வருகிறதில்லை என்பது விசதமாகிறது; ஆனால், நன்மையினுடையவும் உண்மைகளுடையவும் அறிவுகளினால், படிப்படியாய் உட்செலுத்தப்படுகிறார்கள்; இது சுவர்க்கத்துக்கு அடுத்த எல்லா ஒழுங்குக்கும் ஒத்திருக்கிறது. ஏனென்றால் அவைகளுடைய குணத்தின் நுண்ணிய விஷயங்களும், ஆண்டவருக்கு தெரிந்திருக்கிறது; ஆகையினால், அவைகளின் மனவாஞ்சையினுடைய எல்லா ஊக்கங்களுக்கு தக்கபடி, நன்மையின் உண்மைகளையும் உண்மையின் நன்மைகளையும் ஏற்றுக்கொள்ள அவைகள் நடத்தப்படுகின்றன.

**337.** அவர்களுக்குள் எல்லா பொருள்களும், அவர்களுடைய மனோசக்திக்கு தகுந்தபடி வசிகரிக்கிறதும், இன்பத்தை தருகின்றதுமான அனுபூதிகளால் எந்தவிதமாய் செலுத்தப்படுகிறதென்பது கூட எனக்கு காண்பிக்கப்பட்டது. மிருதுவான புயங்களை கூடவும் சுற்றிக்கொண்டிருந்த மிகவும் இனிமையானதும் சுவர்க்கத்துக்கு அடுத்ததுமான நிறங்களால் சிறந்திருந்த புஷ்பமாலைகளால், தங்களுடைய மார்புகள் அலங்கரிக்கப்பட்டு, சிறு குழந்தைகள் மிகவும் அழகாய் உடுக்கப்பட்டிருப்பதைப் பார்க்க, எனக்கு அருள் செய்யப்பட்டது. ஒருசமயத்தில்கூட, கொடிபந்தர்களாலும், வாகைமரத்தின் மூடப்பட்ட சுவர்களாலும், உள்ளே போகும் வழிகளாலும்போல், அவ்வளவுமரங்களால் அல்லாமல்மிகவும் அழகாய் அலங்கரிக்கப்பட்ட ஆனந்த பதத்திற்கேற்ற தோட்டத்தில், சில குழந்தைகளை, கன்னிப் பெண்களோடு சேர்ந்து வந்த அவைகளை ஆதரிப்பவர்

களுடன் நான் பார்த்தேன். குழந்தைகளை கொஞ்சம் முன் கூறிய மாதிரியாய் உடுக்கப்பட்டிருந்தார்கள்; அவர்கள் தோட்டத்திற்குள் பிரவேசித்தபோது, வாயிலுக்கு மேலே இருந்த குலைக்கட்டின புஷ்பங்கள் மிகவும் உல்லாசமாய் பிரகாசித்தன. இது அவர்களின் சந்தோஷங்களின் சுபாவத்தையும், அதனுடன் கூட அவைகள், இந்த ரம்மியமானதும், இன்பமானதுமாகிய பொருள்கள் மூலமாய், ஆண்டவரால் அவைகளுக்குள் அதனால் தொடர்ச்சியாய் உட்செலுத்தப்படுகிற மாசின்மையினுடையவும், தருமத்தினுடையவும் நன்மைகளுக்குள், எப்படி நடத்தப்படுகின்றன வென்பதையும் காண்பிக்கிறது.

**338**. சிறு குழந்தைகளின் அபிப்பிராயங்கள், எந்த பொருள்களையாவது பார்த்தபோது எதாயிருக்கிறதென்பது, இதர வாழ்வில் சாதாரணமாயிருக்கும் போக்குவரவு முறையில் எனக்கு காண்பிக்கப்பட்டது. ஒவ்வொரு பொருளும், உயிரோடிருப்பதாக அவைகளுக்கு தோன்றின; இவ்விதமாக அவர்கள் சிந்தனையின் ஒவ்வொரு அபிப்பிராயத்திலும் உயிரிருக்கிறது. பூமியின்பேரிலிருக்கும் குழந்தைகளின் அபிப்பிராயங்கள், தங்களுடைய சிறிய பொழுதுபோக்குகளில், அவைகள் இருக்கும்போது ஓரேமாதிரி இருப்பதாககூட நான் கண்டுகொண்டேன்; ஏனென்றால், அவைகளுக்கு உயிரில்லாதது எதுவென்பதைப்பற்றி, குமாரர்களுக்கு இருப்பதுபோல், அவ்வித ஆலோசனை கிடையாது.

**339**. சிறு குழந்தைகள் பரத்துக்கு அடுத்த அல்லது ஞானத்துக்கடுத்த மனோசக்தி உள்ளவர்களென்று மேலே சொல்லப்பட்டது. பரம மனோசக்தி உடையவர்கள் ஞான மனோசக்தியுள்ளவர்களிடமிருந்து இலகுவாய் வகையறுக்கப் படுகிறார்கள். ஆண்டவரிடத்து செலுத்தும் அன்பின் நன்மையிலிருந்தும், மற்ற குழந்தைகளிடத்து காட்டும் அன்பிலிருந்தும், புறப்படுவதைவிட வேறொன்றும் தோன்றாதபடி, அக்குழந்தைகள் மிக மிருதுவாய் நினைத்து, பேசி செயல் படுகிறார்கள்; ஆனால் ஞானசக்தியுடையவர்கள், அவ்வளவு மிருதுவாய் பேசுகிறதில்லை; அவர்களுக்கு சேர்ந்த ஒவ்வொன்றிலும் சிறகுகளுக்கு இருக்கிறதுபோல், ஒருவித அசைவு இருக்கிறது. அவர்களுடைய கோபத்திலிருந்தும், இதர விஷயங்களிலிருந்தும்கூட இது விசதமாகிறது.

**340**. அநேகர், சிறு குழந்தைகள் சுவர்க்கத்தில் குழந்தைகளாக இருக்கிறார்களென்றும், தேவர்களுக்குள் அவர்கள் குழந்தை

களாகவே இருக்கிறார்களென்றும், நினைக்கக் கூடும். தேவதூதன் என்னவென்று தெரியாதவர்கள், தேவ தூதர்கள் சிறு குழந்தைகளாக காண்பிக்கப்படுகிற திருச்சபைகளிலிருக்கும், சித்திர வித்தைகளிலிருந்தும் பிரதிமைகளிலிருந்தும், அந்த அபிப்பிராயத்தில் ஸ்திரபடுத்தப்பட்டிருக்கலாம். ஆனால், விஷயம் அம்மாதிரி கொஞ்சங்கூட இல்லை. விவேகமும் ஞானமும் ஒரு தேவனை ஏற்படுத்துகிறது; சிறு குழந்தைகளுக்கு விவேகமும் ஞானமும் இல்லாதவரையில், அவைகள் நிஜமாகவே தேவர்களிடத்திலிருக்கிறார்கள்; அப்படி இருந்தாலும் அவைகள தேவர்கள் அல்ல. ஆனால், அவைகள் விவேகமுள்ளவைகளாகவும் புத்தியுள்ளவைகளாகவும் இருக்கும்போது, அப்பொழுது அவர்கள் முதலில் தேவர்களாகிறார்கள். அவைகள் அப்பொழுது சிறு குழைந்தகள் போல் அல்லாமல், பருவமானவர்கள்போல் தோன்றுகிறார்களென்பதைப் பார்க்க, நான் நிஜமாகவே ஆச்சரியப்பட்டிருக்கிறேன்; ஏனென்றால், அதற்குமேல் அவைகள் சிறு குழந்தை போன்ற மனோசக்தியோடல்லாமல், முதிய தேவதா மனோ சக்தியோடிருக்கிறார்கள். விவேகமும் ஞானமும், இந்த பயனை உண்டாக்குகிறது. விவேகமும் ஞானமும் விருத்தியாகும் காலத்தில், சிறு குழந்தைகள், அதிக முதியவர்களாகவும், இவ்விதமாக பாலியர்களாகவும், சிறு மனிதர்களாகவும், ஏன் தோன்றுகிறார்களென்பதற்கு காரணம், விவேகமும் ஞானமும் உண்மையான ஞானசம்பந்தமான ஜீவன் சாதனமாயிருக்கிறது. அவர்களுடைய மானங்களை போஷிக்கிறது, அவர்களுடைய சரீரத்தைகூட போஷிக்கிறது; இது அன்னுவயத்தின் பயனாயிருக்கிறது; ஏனென்றால், சரீரத்தின் வடிவம், உள்ளானவைகளின் புறம்பான வடிவமாயிருக்கிறது. சுவர்க்கத்திலிருக்கும் குழந்தைகள், ஆரம்ப புருடத்துவத்துக்கு மேலே செல்லாமல், அதே நிலைமையில் சதாகாலமிருக்கிறார்களென்று, தெரிந்திருக்கப்பட வேண்டும். அது அப்படியிருக்கிறதென்று நான் நிஜமாய் தெரிந்துகொள்ளும் பொருட்டு, சுவர்க்கத்தில் குழந்தைகளாக கற்பிக்கப்பட்டு, அங்கே வளர்ந்த சிலருடனும், தாங்கள் குழந்தைகளா யிருந்தபோது சிலருடனும, அவைகளே சிறுவர்களானபோது சிலருடனும், நான் பேசவிடப்பட்டது; ஒரு வயதிலிருந்து மற்றொரு வயதுக்கு, அவர்கள் வாழ்வின் விர்த்தியைப்பற்றி நான் அவர்களிடமிருந்து கேழ்விப்பட்டிருக்கிறேன்.

**341.** மாசின்மையானது, சுவர்க்கத்தின் எல்லா பொருள்களின் கொள்கலமாயிருக்கிறதென்பதும், இவ்விதமாக சிறு குழந்தைகளின் மாசின்மையானது, உண்மையினுடையவும் நன்மையினுடையவும் எல்லா ஆசைகளின் ஒரு சமதளமாயிருக்கிறதென்பதும், சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் குற்றமின்மையைப்பற்றி மேலே காண்பித்ததிலிருந்து (கெ. 276—283), அதாவது, குற்றமின்மை என்பது, தன்னால் அல்லாமல், ஆண்டவரால் நடத்தப்பட மனமுள்ளவனாயிருத்தலென்றும், ஆதலால், மனிதனானவன் தன்னுடைய சொந்த தன்மையிலிருந்து எவ்வளவு நீக்கப்பட்டிருக்கிறானோ, அவ்வளவு மாசின்மையிலிருக்கிறான் என்றும், தன்னுடைய சொந்த தன்மையிலிருந்துளவனொருவன் எவ்வளவு நீக்கப்பட்டிருக்கிறானோ, அவ்வளவு ஆண்டவருடைய சொந்த தன்மையிலிருக்கிறானென்றும், மேலே காண்பித்ததிலிருந்து விசதமாகிறது. ஆண்டவருடைய சொந்த தன்மை, அவருடைய நடுவுநிலைமை என்றும் தகைமை என்றும், சொல்லப்படுகிறது. ஆனால், சிறு குழந்தைகளின் குற்றமின்மை, அதுவரையில் ஞானமில்லாதிருக்கிறபடியினால், உண்மையான மாசின்மையாயில்லை. உண்மையான குற்றமற்ற தன்மையானது ஞானமாயிருக்கிறது; ஏனென்றால், ஒருவன் எவ்வளவு தூரம் அறிவுள்ளவனாயிருக்கிறானோ, அவ்வளவு, அவன் ஆண்டவரால் நடத்தப்பட விரும்புகிறான்; அல்லது, அதேதவாகிறபடி, ஒருவன் எவ்வளவு தூரம் ஆண்டவரால் நடத்தப்படுகிறானோ அவ்வளவு அறிவுள்ளவனாயிருக்கிறான். ஆகையினால், சிறு குழந்தைகள் இளமையின் மாசின்மை என்று சொல்லப்படுகிற தாங்கள் முதலிலிருக்கும் புறம்பான மாசின்மையிலிருந்து, ஞானத்தின் மாசின்மையாயிருக்கிற அந்தரங்கமான மாசின்மைக்கு நடத்தப்படுகிறார்கள். இந்த மாசின்மையானது, அவர்களுடைய எல்லா பயிற்சியினுடையவும் வளர்ச்சியினுடையவும் நோக்கமாயிருக்கிறது; ஆகையால், அக்குழந்தைகள் ஞானத்தின் மாசின்மைக்கு வரும்போது, மத்திய காலத்தில் ஒரு சமதளமாக அவைகளுக்கு உபயோகப்பட்ட இளமையின் மாசின்மையானது, அவைகளோடு சேர்க்கப்படுகிறது. சிறு குழந்தைகளின் மாசின்மையின் குணமானது, உண்மையின் அறிவுகளாலும், நன்மையினிடத்து கொள்ளும் ஆசைகளாலும் சம்பூரணமாக்கப்பட்டபோது, உயிர்ப்பிக்கப்படுகிற ஏறக்குறைய உயிரில்லாத மரத்தினால் செய்யப்பட்ட, ஒரு அறிகுறியாக எனக்கு காண்பிக்கப்பட்டது. பின்னிட்டு, உண்மையான மாசின்மையின்

சுபாவம், முழு உயிருடனும், நிருவாணமாயுமிருக்கிற மிகவும் அழகான குழந்தையால், எனக்கு சாயல் காட்டப்பட்டது; ஏனென்றால், மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தில், இவ்விதமாக ஆண்டவருக்கு வெகு சமீபத்திலிருக்கிற உண்மையான குற்ற மற்றவர்கள், மற்ற தேவர்களின் கண்கள் முன்பாக குழந்தைகளைப் போலவும், அவர்களில் சிலர் நிருவாணமாக வும், தோன்றுகிறார்கள்; ஏனென்றால், மாசின்மையானது, தோட்டத்தில் முதல் மனிதனையும், அவன் மனைவியைப்பற்றியும் நாம் வாசிக்கிறபடி (ஆதி. அத்தி. ii. 25), வெட்கமில்லாத நிருவா ணத்தினால் தெரிய காட்டப்படுகிறது; ஆகையால், அவர்களுடைய மாசின்மையின் நிலைமையானது பறிகொடுக்கப்பட்டபோது, அவர் கள் தங்களுடைய நிருவாணத்தைக் குறித்து வெட்கப்பட்டு, தாங் களே ஒளிந்து கொண்டார்கள் (அத்தியா. iii. 7, 10, 11). சுருங் கச் சொல்லில், தேவர்கள் எவ்வளவு அதிக அறிவுள்ளவர்களா யிருக்கிறார்களோ, அவ்வளவு அதிகமாக அவர்கள் குற்றமற்றவர் களாக இருக்கிறார்கள்; மேலும், அவர்கள் எவ்வளவு குற்றமற்றவர் களா யிருக்கிறார்களோ, அவ்வளவு அதிகமாய் சிறு குழந்தைகளைப் போல் அவர்கள் தங்களுக்கே தோன்றுகிறார்கள்; ஆகவே, வேதத் தில் இளமை என்பது மாசின்மை என்று அருத்தம் கொள்ளுகிறது (மேலே. 278 பார்க்கவும்).

**342.** நான் தேவர்களை, அவர்களுக்கு பக்குவமானவர் களைப்போல் நிசமான தீமையில்லாதபடியினால், தீமைகள் இல்லா மல் சுத்தமாயிருக்கிறார்களாவென்று, சிறு குழந்தைகளைக் குறித்து நான் வினவியிருக்கிறேன்; ஆனால், அவர்களும் சமமாய் தீமையி லிருக்கிறார்களென்றும், நிஜமாகவே அவர்கள்கூட தீமையைத் தவிர வேறொன்றுமில்லை என்றும், தேவர்களைப்போல் அவர்கள், தங்களிடமிருந்தே நன்மையிலிருப்பதாக தங்களுக்கே தோன்றும் படியாக, தீமையிலிருந்து பிடித்து வைக்கப்பட்டு, ஆண்டவரால் நன் மையில் வைக்கப்படுகிறார்களென்றும் எனக்கு சொல்லப்பட்டது. ஆகையினால், சுவர்க்கத்தில் வளர்ந்த பிள்ளைகள், தங்களையே குறித்து ஓர் பொய்யான அபிப்பிராயத்தைக்கொண்டு, தங்களிடமிரு க்கும் நன்மை, ஆண்டவரிடமிருந்தல்லாமல், தங்களிடமே இருந்து வருகிறதென்று நினைக்காதபடி, பரம்பரையாய் தாங்கள் பெற்றுக் கொண்ட தீமைகளில், சில வேளைகளில் விடப்பட்டு, தங்களுக்கு அந்த விஷயத்தின் உண்மை தெரிந்து, ஒத்துகொண்டு, நம்புகிற

[illegible] விடப்பட்டிருக்கள். [illegible]த்தில் இறந்து [illegible] ஒரு [illegible] ஒருவர்கூட [illegible] கொண்டு [illegible]. ஆகையால், தான் [illegible] நிலைமை [illegible] விடப்பட்டார். ஆகிலும், அவருடைய [illegible] [illegible]த்திலிருந்து, மற்ற [illegible] அதிகாரம் [illegible], [illegible] இலே [illegible], ஒரு நாளும் அவருக்கு [illegible]தாக நான் [illegible]; ஏனென்றால் இந்த [illegible]ளை அவருடைய [illegible] அவர் அடைந்தார். இந்த [illegible] நான் இருக்கிறதாக அவர் ஒத்துக்கொண்ட பிறகு, தான் முன்னிருந்த [illegible] அவர் மறுபடியும் [illegible]. பரம்பரையான தீமையின் பொருட்டு, [illegible] தண்டனையடைகிறதில்லை; ஏனென்றால், அது அவனுடைய சொந்தமானதல்ல, அதனால் அது அவனுடைய தப்பிதமல்ல; ஆனால், அவனுக்கு சொந்தமானதாயிருக்கிற உண்மையான தீமையின் பொருட்டு அவன் தண்டிக்கப்படுகிறான்; இவ்விதமாக, உண்மையான வாழ்க்கையினால், பரம்பரையான தீமையைதான் தனதாக்கினது வரையில் தண்டிக்கப்படுகிறான். ஆகையினால், பருவமானவர்களான சிறு குழந்தைகள், தாங்கள் உரிமை வழியாய் அடைந்த தீமையின் நிலைமையில் விடப்பட்டால், அப்படி விடப்பட்டது, அதற்காக தாங்கள் தண்டனை அடையும் படிக்கல்லாமல், தாங்களே தீமையைத் தவிர வேறொன்றுமில்லையென்றும், தாங்கள் இருக்கப்பட்ட நரகத்திலிருந்து சுவர்க்கத்துக்கு, ஆண்டவரின் இரக்கத்தினால் தாங்கள் எடுத்துக்கொள்ளப்படுகிறார்களென்றும், தாங்கள் சுவர்க்கத்திலிருப்பது தங்களுடைய சொந்த தகைமையினால் அல்லாமல் ஆண்டவரால் அப்படியிருக்கிறார்களென்றும், ஆகவே மற்றவர்கள் முன்பாக தங்கள் நற்குணத்தைப்பற்றி பெருமை பாராட்டுதல், விசுவாசத்தின் உண்மைக்கு விரோதமாயிருக்கிறதுபோல அன்னியோன்னிய அன்பின் நன்மைக்கு விரோதமாயிருப்பதினால், அப்படி அவர்கள் செய்யக்கூடாதென்றும், அவர்கள் தெரிந்துகொள்ளும் பொருட்டுதான்.

**343.** அநேக சமயங்களில், சுத்த பாலிய நிலைமையிலிருந்த சில குழந்தைகள், பாடகர் கூட்டத்தில் என்னுடன் இருந்தபோது, அவைகளின் பாட்டுகள் மிருதுவானதாகவும் ஒழுங்கில்லாததுமாகவும், அதாவது, இன்னும் கொஞ்சம் வயது வந்தபிறகு

அவைகள் பாடுகிறமாதிரி ஒரு வழியாக இல்லாததாகவும் கேழ்க்கப்பட்டது. எனக்கு அதிசயம் உண்டாக்கும்படியாக, என்னுடன் இருந்த ஆவிகள் அவைகளைப் பேச தூண்டுதலிலிருந்து விட்டுவிட முடியவில்லை. இந்த ஆசையானது ஆவிகளுக்கு இயல்பானதாயிருக்கிறது. இந்த சந்தர்ப்பங்களிலெல்லாம், குழந்தைகள் எதிர்த்து பேச இஷ்டமில்லாதவைகளா யிருந்தனவென்று நான் கவனித்தேன். அந்த மறுதலையும் எதிர்ப்பும், ஓர்வித கோபத்தோடு சேர்ந்திருந்ததென்பதை நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன்; அவைகள் தன்னிஷ்டமாக பேச விடப்பட்டபோது, அது அப்படியில்லை என்றுமாத்திரம் கூறின. சிறு குழந்தைகள் எதிர்க்க பழகவும், பொய்யையும் தீமையையும் எதிர்க்க ஆரம்பிக்கவும், அதனுடன் மற்றவனைக்கொண்டு நினைக்காமலும் பேசாமலும், செயல்படாமலுமிருக்கக் கற்றுக்கொள்ளவும், அதனால் ஆண்டவரைத் தவிர வேறு யாராலும், நடத்தப்பட விடக்கூடாதென்று கற்றுக்கொள்ளவும், அவைகள் அப்படி சோதிக்கப்பட்டனவென்று எனக்கு சொல்லப்பட்டது.

**344**. முன் சொன்னதிலிருந்து, சுவர்க்கத்தில் சிறு குழந்தைகளின் படிப்பின் சுபாவம் என்னவென்று, அதாவது, அது, உண்மையின் விவேகத்தினாலும், நன்மையின் ஞானத்தினாலும், அவர்களை மாசின்மை யிருக்கப்பட்ட ஆண்டவரிடத்து அன்பாகவும், அன்னியோன்னிய அன்பாகவு மிருக்கிற தேவதா வாழ்வில் நடத்தல், என்று விசதமாகிறது. பூமியின்பேரில் குழந்தைகளின் படிப்பு, அநேக சங்கதிகளில் எப்படி விரோதமாயிருக்கிறதென்பது, இந்த உதாரணத்திலிருந்து தோன்றும். நான் ஒரு நகரத்தின் தெருவில் இருந்து, சிறு பிள்ளைகள் ஒருவரோடொருவர் சண்டை பிடிப்பதைப் பார்த்தேன். அவர்களை கூடிக்கொண்டிருந்த கூட்டம், இதை அதிக சந்தோஷத்துடன் பார்த்தார்கள்; அவர்களுடைய பெற்றோர்கள், தங்களுடைய சிறு பிள்ளைகளை அவ்வித சண்டைகளுக்கு தூண்டிவிடுகிறார்களென்று எனக்கு சொல்லப்பட்டது. என்னுடைய கண்கள் மூலமாக இவைகளைப் பார்த்த நல்ல ஆவிகளும் தேவர்களும், நான் அவர்களுடைய ஏக்கத்தை உணரும்படியாக, அவ்வித வெறுப்பை உணர்ந்தார்கள்; முக்கியமாய் பெற்றோர்களே, தங்களுடைய சிறு குழந்தைகளை இவ்வித காரியங்களைச் செய்ய தூண்டிவிடுகிறார்களென்பதைப்பற்றி, வெறுப்புற்றார்கள். பெற்றோர்களே, சிறுவயதிலேயே, ஆண்டவரிடமிருந்து குழந்தை

கள் அடைகிற எல்லா அன்னியோன்ய அன்பையும் எல்லா மாசின்மையையும் இவ்விதமாக அழிக்கிறார்களென்றும், வெறுப்பிலும் பழிவாங்குதலிலும் அவைகளைதொடக்குகிறார்களென்றும், ஆகையினால், தங்களுடைய சொந்த முயற்சியினாலேயே, அன்னியோன்ய அன்பு தவிர வேறொன்றுமில்லாத சுவர்க்கத்திலிருந்து தங்களுடைய சிறு குழந்தைகளை தங்கள் முயற்சியாலேயே நீக்குகிறார்களென்றும், அவர்கள் சொன்னார்கள். ஆகையினால், தங்களுடைய குழந்தைகள் க்ஷேமத்தைக் கோரும் பெற்றோர்கள், இவ்வித விஷயங்களைக் குறித்து எச்சரிக்கையாயிருக்கட்டும்.

**345**. சிறு குழந்தைகளாயிருக்கும்போது இறக்கிறவர்களுக்கும், வயதுவந்த பிறகு இறக்கிறவர்களுக்கும், உள்ள வித்தியாசம் கூட விவரிக்கப்பட வேண்டும். புருடத்துவமடைந்த பிறகு இறக்கிறவர்கள், தங்களுடன் கூடவே கொண்டுபோகிற, மண்சம்பந்தமானதும் அசித்தானதுமான உலகத்திலிருந்து சம்பாதித்த ஒரு சமதளத்தை உடைத்தாயிருக்கிறார்கள். இந்த சமதளமானது அவர்களுடைய ஞாபகமாகவும், அதன் ஸ்தூலமான இயற்கை சம்பந்தமான ஆசையாகவுமிருக்கிறது; இது நிலைபட்டு நிற்கிறது, மேலும் அசையாமலிருக்கிறது; என்றாலும், சிந்தனையானது முதலில் அதற்குள் பாய்கிறபடியினால், அது இறந்த பிறகு அவர்கள் சிந்தனையின் இறுதியான சமதளமாக உபயோகப்படுகிறது. அதனால்தான், அந்த சமதளம் எப்படியிருக்கிறதோ, அதற்குள் இருக்கும் பொருள்களுக்குப் பகுத்தறியும் மனோசக்திக்கும் அன்னுவயம் எப்படியிருக்கிறதோ, அவ்விதமாக இறந்த பிறகு மனிதன் இருக்கிறான். ஆனால், சுவர்க்கத்தில் கற்பிக்கப்பட்டு, இளமையில் இறந்து போகிறவர்கள், ஜட உலகத்திலிருந்தும் மண் சரீரத்திலிருந்தும், எதையும் எடுத்துக் கொண்டு, போகாதபடியினால், அவர்களுக்கு அவ்வித சமதளம் கிடையாது; ஆனால் அவர்களுக்கு ஒரு சூக்குமஜட சமதளமிருக்கிறது. ஆகையினால், அவர்கள் அவ்வித பருத்த ஆசைகளிலும், அவைகளிலிருந்துவந்த சிந்தனைகளிலும் அவர்கள் இருக்கமுடியாது; ஏனென்றால், அவர்கள் எல்லா பொருள்களையும் சுவர்க்கத்திலிருந்து எடுத்துக் கொள்ளுகிறார்கள். இதுவுமன்றி, இக்குழந்தைகளுக்கு தாங்கள் உலகத்தில் பிறந்திருப்பதாக தெரியாது; அவைகள் சுவர்க்கலோகத்தில் பிறந்ததாக நம்புகின்றன. இவ்விதமாக, அவர்களுக்கு, மனிதன் மனிதனாக செய்கிற நன்மையினுடையவும் உண்மையி

னுடையவும் அறிவுகளாலும், விவேகத்தினாலும் ஞானத்தினாலும் காரியப்படுகிற ஞானபிறப்பைத் தவிர, எந்த பிறப்பைப் பற்றியும் யாதொன்றும் தெரியாது; மேலும், இவைகள் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், தாங்கள் ஆண்டவருடைய சொந்தமென்று அவைகள் நம்புகின்றன; மேலும் அப்படி நம்ப பிரியப்படுகின்றன. அப்படி யிருந்தாலும், பூமியின் பேரில் வளருகிற மனிதர்களின் நிலைமையானது, தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலாயிருக்கிற ஜடமானதும் மண் சம்பந்தமானதுமாகிய, ஆசைகளை அவர்கள் நீக்கி, அவைகளுக்குப் பதிலாக ஞான சம்பந்தமான ஆசைகளை ஏற்றுக்கொண்டால், சுவர்க்கத்தில் வளருகிற சிறு குழந்தைகளின் நிலைமையைப்போல, அவ்வளவு சம்பூரணமாகக் கூடும்.

# XXXVIII

## சுவர்க்கத்திலிருக்கும் அறிஞர்களும் நிஷ்கபடிகளும்

**346**. தானியேல் என்பதில், "ஞானவான்கள் ஆகாயமண்டலத்தின் ஒளியைப்போலவும், அநேகரை நீதிக்குட்படுத்துகிறவர்கள் நட்சத்திரங்களைப்போலவும் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் பிரகாசிப்பார்கள்" என்று (xii. 3) கூறியிருப்பதினால், சுவர்க்கத்திலிருக்கும் கபடமற்றவர்களுக்குமேலே, ஞானவான்கள் மகிமையையும் மேன்மையையும் உடைத்தாயிருப்பார்களென்று நம்பப்படுகிறது; ஆனால், ஞானவான்கள் என்பதினாலும், அநேகரை நீதிக்குட்படுத்துகிறவர்கள் என்பதினாலும், யார் கருதப்படுகிறதென்று சிலருக்குதான் தெரியும். விவேகிகள் என்றும் கற்றவர்களென்றும் சொல்லப்படுகிறவர்களும், முக்கியமாய் திருச்சபையில் கற்பித்துக்கொடுத்து, கொள்கையிலும் பிரசங்கத்திலும் மற்றவர்களைவிட மேற்பட்டவர்களும், இன்னும், அவர்களுள் சமயத்துக்கு அநேகரைத் திருப்பியவர்களும் தான், அவர்கள் என்று சாதாரணமாய் நம்பப்படுகிறது. உலகத்திலிருக்கும் அவ்விதமானவர்கள் எல்லாரும் விவேகிகளென்று நம்பப்படுகிறார்கள்; அப்படியிருந்தாலும் தங்களுடைய விவேகமானது, சுவர்க்கத்துக்கு அடுத்த விவேகமாயிருந்தாலொழிய, இந்த வார்த்தைகளால் சொல்லப்பட்டவர்கள் சுவர்க்கத்தில் விவேகிகள் அல்ல. இது என்ன என்பது பின்வரும் பக்கங்களில் இப்பொழுது சொல்லப்படும்.

**347**. சுவர்க்கத்துக்கு அடுத்த ஞானமென்பது, உலகத்தில் வரும் எந்த மாட்சிமைக்கும் அல்லாமலும், சுவர்க்கத்தில் வரும் எந்த மகிமைக்கும் அல்லாமலும், தாங்கள் அந்தரங்கமாய் தங்கள் மனதில் தாக்கப்பட்டு, ஆனந்தமடைகிற உண்மையின்பொருட்டாகவே, உண்மையினிடத்து கொள்ளும் அன்பிலிருந்து உண்டாகிற உள்ளான ஞானமாயிருக்கிறது. உண்மையாலேயே தாக்கப்பட்டு ஆனந்தம் அடைகிறவர்கள், சுவர்க்கத்தின் வெளிச்சத்தினால் தாக்கப்பட்டு ஆனந்தமடைகிறார்கள்; மேலும், சுவர்க்கத்தின் வெளிச்சத்தினால் தாக்கப்பட்டு ஆனந்தமடைகிறவர்கள், தெய்வீக உண்மையினால் நிஜமாகவே, ஆண்டவராலேயேகூட தாக்கப்பட்டு ஆனந்தமடைகிறார்கள்; ஏனென்றால், சுவர்க்கத்தின் வெளிச்சமானது தெய்வீக

உண்மையாயிருக்கிறது, தெய்வீக உண்மையும் சுவர்க்கத்தில் ஆண்டவராயிருக்கிறது (மேலே. செ. 126 முதல் 140 வரையில் பார்க்கவும்). இந்த வெளிச்சமானது மனதின் உள்ளானவைகளுக்குள் மாத்திரம் பிரவேசிக்கிறது; ஏனென்றால், மனதின் உள்ளானவைகள், அந்த வெளிச்சத்தை ஏற்றுக்கொள்ள உருவாகப்பட்டு, அது பிரவேசிக்கும்போது, அந்த வெளிச்சத்தினால் தாக்கப்பட்டு ஆனந்தமடைகின்றன; ஏனென்றால், சுவர்க்கத்திலிருந்துவந்து பாய்ந்து, ஏற்றுக்கொள்ளப்பட்டது எதுவும், ஆனந்தமானதையும் இன்பமுடையதையும் தன்னில் உடைத்தாயிருக்கிறது. இதிலிருந்து, உண்மையின் பொருட்டு உண்மையினிடத்து கொள்ளும் ஆசையாயிருக்கிற, உண்மையினிடத்துகொள்ளும் ஒரு உண்மையான ஆசைவருகிறது. இந்த ஆசையிலிருக்கப்பட்டவர்கள், அல்லது அதேவாகிறபடி இந்த அன்பிலிருக்கப்பட்டவர்கள், சுவர்க்கத்துக்கடுத்த ஞானத்திலிருந்துகொண்டு, ஆகாயத்தின் சோதியைப்போல சுவர்க்கத்தில் பிரகாசிக்கிறார்கள். தெய்வீக உண்மையானது, அது சுவர்க்கத்தில் எங்கே யிருந்தபோதிலும், வெளிச்சத்தை கொடுக்கிறபடியினால் (மேலே. செ 132 பார்க்கவும்), அவர்கள் இம்மாதிரியாக பிரகாசிக்கிறார்கள்; சுவர்க்கத்தின் ஆகாயம் என்பது, அன்னுவபத்திலிருந்து, தேவர்களுக்குள்ளும், மனிதர்களுக்குள்ளும் சுவர்க்கத்தின் வெளிச்சத்திலிருக்கிற அந்த உள்ளான புத்தியை அருத்தங் கொள்ளுகிறது. ஆனால், உலகத்தில் வரும் மகிமையின் பொருட்டாவது, சுவர்க்கத்தில் உண்டாகும் மகிமையின் பொருட்டாவது, உண்மையினிடத்து அன்பில் இருக்கப்பட்டவர்கள், சுவர்க்கத்தில் பிரகாசிக்கமாட்டார்கள்; ஏனென்றால், அவர்கள், சுவர்க்கத்தின் வெளிச்சத்தினாலேகூட அல்லாமல், உலகத்தின் வெளிச்சத்தினால் தாக்கப்பட்டு ஆனந்தமடைகிறார்கள்; உலகத்தின் வெளிச்சம், சுவர்க்கத்தின் வெளிச்சமில்லாமல், சுவர்க்கத்தில் அடர்ந்த இருளாய் மாத்திரமிருக்கிறது. ஏனென்றால், தன் கீர்த்தியை நாடுதல் நோக்கமானபடியினால், அதுவே தலைமையாகிறது; அந்த கீர்த்தியானது நோக்கமாயிருக்கிறபோது, முதலில் மனிதன் தன்னையே மதிக்கிறான்; தன்னுடைய சொந்த கீர்த்திக்கு உதவியான உண்மைகளை, அந்த நோக்கத்திற்கு வழிவகையாக மாத்திரமும், இவ்விதமாக அவனுடைய பணிவிடைக்காரர்களாக அவன் மதிக்கிறான். ஏனென்றால், தன்னுடைய சொந்த கீர்த்திக்காக தெய்வீக உண்மைகளை நேசிக்கிறவன், தெய்

வீக உண்மைகளில் ஆண்டவரை யல்லாமல் தன்னையே மதிக்கிறான். இந்தக் காரணத்துக்காக தன்னுடைய புத்திக்கும் விசுவாசத்துக்கும் சேர்ந்த தன்னுடைய பார்வையை, சுவர்க்கத்திலிருந்து உலகத்துக்கும், ஆண்டவரிடமிருந்து தன்னிடமேயும் திருப்பிவிடுகிறான். ஆகையினால், அவ்வித ஜனங்கள் சுவர்க்கத்தின் வெளிச்சத்தில் அல்லாமல், உலகத்தின் வெளிச்சத்திலிருக்கிறார்கள். வெளி தோற்றத்தில், இவ்விதமாக மனிதர்கள் முன்பாக, அவர்கள் சுவர்க்கத்தின் வெளிச்சத்திலிருக்கிறவர்கள்போல, அவ்வளவு அறிவுள்ளவர்களாகவும் கற்றவர்களாகவுமிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் அம்மாதிரி பேசுகிறார்கள்; சில சமயங்களில், வெளி தோற்றத்தில் அதிக ஞானமுள்ளவர்களாக தோன்றுகிறார்கள்; ஏனென்றால், அவர்கள் சுயநலத்தால் தூண்டப்பட்டு, இவ்விதமாக சுவர்க்கத்துக்கு அடுத்த ஆசைகளை சிர்ஷ்டனை செய்ய கற்பிக்கப்படுகிறார்கள்; என்றாலும், தேவர்கள் முன்பாக தாங்கள் தோன்றுகிற அவர்ளுடைய உள்ளான உருவத்தில், அவர்கள் முழுமையும் வேறு விதமான நடத்தையுடையவர்களாயிருக்கிறார்கள்; ஆகவே, ஆகாயத்தின் சோதிபோல சுவர்க்கத்தில் பிரகாசிக்கிற அறிவுள்ளவர்கள் என்பதினால், யார் கருதப்படுகிறார்களென்பது கொஞ்சம் தூரம் விசதமாகிறது; ஆனால், அநேகரை நீதிக்கு செலுத்தி, நட்சத்திரங்கள்போல பிரகாசிக்கிறவர்கள் என்பதினால் யார் கருதப்படுகிறார்களென்பது இப்பொழுது சொல்லப்படும்.

**348**. அநேகரை நீதிக்கு திருப்புகிறவர்கள் என்பதினால், ஞானமுள்ளவர்கள் கருதப்படுகிறார்கள்; சுவர்க்கத்தில் நன்மையிலிருக்கப்பட்டவர்கள் ஞானிகள் என்று சொல்லப்படுகிறார்கள்; மேலும், தெய்வீக உண்மைகளை வாழ்வில் உடனே கையாளுகிறவர்கள், சுவர்க்கத்தில் நன்மையிலிருக்கிறார்கள். ஏனென்றால், தெய்வீக உண்மையானது வாழ்க்கையை சேர்ந்தபோது, அது நன்மையாகிறது; ஏனென்றால், அது சித்தத்திற்கும் அன்புக்கும் சேர்ந்தது, சித்தத்திற்கும் அன்புக்கும் சேர்ந்தது எதுவும் நன்மை என்று சொல்லப்படுகிறது. ஆகையினால் இவர்கள் ஞானிகளென்று சொல்லப்படுகிறார்கள்; ஏனென்றால், ஞானமானது வாழ்விற்கு சேர்ந்தது. ஆனால், தெய்வீக உண்மைகளை வாழ்வில் உடனே கொண்டுவராமல், பின்னிட்டு ஞாபகத்திலிருந்து எடுக்கப்பட்டு, வாழ்வில் கையாளப்படுகிற முதலில் ஞாபகத்தில் வழங்குகிறவர்கள் அறிவுள்ளவர்கள் என்றுசொல்லப்படுகிறார்கள். அறிவுள்ளவர்கள்ஞானிகளிடமிருந்து

சுவர்க்கத்தில் எவ்விதமாயும் எவ்வளவு பரிமாணம் வித்தியாசப்படு கிறார்களென்பது, பரலோகம் ஞானலோகம் என்கிற இரண்டு சுவர்க் கத்து இராச்சியங்களைப்பற்றி சொல்லுகிற அத்தியாயத்திலும் (நெ. 20 முதல் 25 வரையில்), மூன்று சுவர்க்கங்களையும் குறித்து சொல்லுகிற அத்தியாயத்திலும் (நெ. 29 முதல் 40 வரையில்) பார்க் கப்படலாம். ஆண்டவருடைய பரலோகத்திலிருக்கப்பட்டவர்கள், இவ்விதமாக மூன்றாவது மிகவும் உள்ளான சுவர்க்கத்திலிருக்கப் பட்டவர்கள், தங்களுக்கே யாதொரு நீதியையும் ஆரோபிக்காமல், எல்லாம் ஆண்டவருக்கே சாட்டுகிறபடியினால் நீதிமான்கள் என்று சொல்லப்படுகிறார்கள்; சுவர்க்கத்தின் ஆண்டவரின் நீதியானது, ஆண்டவரிடமிருந்து வரும் நன்மையாயிருக்கிறது; ஆகையினால், அநேகரை நீதிக்கு திருப்புகிறவர்கள் என்பதால் இங்கே இவர்கள் தான் கருதப்படுகிறது; மேலும், இவர்களைப்பற்றிதான், ஆண்டவர் "நீதிமான்கள் எங்கள் பிதாவின் ராஜ்யத்திலே சூரியனைப்போல பிர காசிப்பார்கள்" (மத்தே. xiii. 43) என்று சொல்லியது. அவர் கள், ஆண்டவரிடமிருந்து ஆண்டவரிடத்து அன்பில் இருக்கிறதினா லும், மேலேபார்க்கப்படுகிறபடி (நெ. 116 முதல் 125.) சூரியன் என் பதினால் அந்த அன்பு கருதப்படுகிறபடியினாலும், அவர்கள் சூரிய னைப்போல பிரகாசிப்பார்கள். அவர்களைச் சுற்றியிருக்கும் வெளிச் சம்கூட சுவாலை மயமாயிருக்கிறது; அவர்கள் சிந்தனையின் அபிப் பிராயங்கள் அம்மாதிரி நிறமுடையதா யிருக்கிறது; ஏனென்றால் சுவர்க்கத்திலிருக்கும் சூரியனைப்போல அவர்கள் அன்பின் நன் மையை ஆண்டவரிடமிருந்து நேராய் அடைகிறார்கள்.

**349**. உலகத்தில் அறிவையும் ஞானத்தையும் சம்பாதித் தவர்கள், ஒவ்வொருவனும் தன்னுடைய அறிவினுடையவும், ஞானத்தினுடையவும், குணத்துக்கும் பிரமாணத்துக்கும் தக்கபடி சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டு, தேவர்களாகிறார்கள். ஏனென் றால், உலகத்தில் ஒருமனிதன் சம்பாதிக்கிறது எதுவும், இறந்த பிறகு அவனிடம் நின்று அவனுடன் கொண்டுபோகப்படுகிறது; மேலும், அது அவனுடைய ஆசையின் பிரமாணத்துக்குள்ளும், உண்மையி னிடத்தும், அதன் நன்மையினிடத்தும் கொள்ளும் விருபத்திற்குள் ளும், அதற்குமேலல்லாமல், அதிகமாக்கப்பட்டு, நிரப்பப்படுகிறது. உண்மையினிடத்தும், அதன் நன்மையினிடத்தும் கொஞ்சம் ஆசையும் விருப்பமும் உடைத்தாயிருந்தவர்கள், கொஞ்சம்தான் அடைகிறார்கள்; அப்படியிருந்தாலும், தங்களுடைய ஆசையி

னுடையவும் விருப்பத்தினுடையவும் பிரமாணத்திற்குள்ளாக தாங்கள் ஏற்றுக்கொள்ள சக்தியிருக்கிற அளவு அடைகிறார்கள். அதிக ஆசையும் விருப்பமும் உடைத்தாயிருந்தவர்கள் அதிகம் அடைகிறார்கள். ஆசையினுடையவும் விருப்பத்தினுடையவும் பிரமாணம் பூர்த்தியாய் நிரப்பப்படுகிற அளவைப்போலிருக்கிறது. பெரிய அளவை உடைத்தாயிருக்கிறவன், அதிகமாயும், சிறு அளவை உடைத்தாயிருக்கிறவன் குறைவாயும் அடைகிறான் ஆசையும் விருப்பமும் உடையதாகும் அன்பானது தன்னுடன் ஒத்துப்போகிற ஒவ்வொன்றையும் அடைகிறபடியினால், அது அப்படியிருக்கிறது. ஆகவே, ஒரு மனிதன் தன்னுடைய அன்பிற்குத் தக்கபடி பெற்றுக்கொள்ளுகிறான். ஆண்டவருடைய இந்த வார்த்தைகளால், இதுதான் கருதப்படுகிறது;— "உள்ளவன் எவனோ அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்" (மத்தே. xiii. 12; xxv. 29). "அமுக்கிக் குலுக்கிச் சரிந்து விழும்படி நன்றாய் அளந்து உங்கள் மடியிலே போடுவார்கள்" (லூக் vi. 38).

**350**. நன்மையையும் உண்மையும், நன்மையையின் பொருட்டும் உண்மையின் பொருட்டும், நேசித்தவர்கள் எல்லாரும் சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப்படுகிறார்கள்; ஆகையினால், அதிகம் நேசித்தவர்கள் ஞானிகளென்றும் சொல்லப்படுகிறார்கள்; ஆனால் கொஞ்சம் நேசித்தவர்கள் பேதமையானவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். சுவர்க்கத்திலிருக்கும் ஞானிகள் அதிக வெளிச்சத்திலிருக்கிறார்கள். ஆனால் பேதமையானவர்கள் குறைந்த வெளிச்சத்திலிருக்கிறார்கள்; ஒவ்வொருவனும் நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் தன் அன்பின் அளவிற்குத் தக்கபடி இருக்கிறான். உண்மையையும் நன்மையையும், உண்மையின்பொருட்டும், நன்மையின் பொருட்டும் நேசித்தலென்பது அவைகளை இச்சித்து செய்தலாயிருக்கிறது; ஏனென்றால், இச்சித்து செய்கிறவர்கள்தான் நேசிக்கிறவர்கள்;ஆனால் இச்சித்து செய்யாதவர்கள் அப்படிநேசிக்காதவர்கள். அவ்விதமானவர்கள்கூட ஆண்டவரை நேசிக்கிறவர்களாயிருக்கிறார்கள்; மேலும் அவர்கள் ஆண்டவரால்நேசிக்கப்படுகிறார்கள்; ஏனென்றால் நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறது. நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், ஆண்டவர் கூட நன்மையிலும் உண்மையிலும் இருக்கிறார்; அதனால், தங்கள் வாழ்க்கையில் நன்மையையும் உண்மையையும் இச்

சிப்பதிலும் செய்வதிலும் ஏற்றுக்கொள்ளுகிறவர்களுடன் கூட அவர் இருக்கிறார். மனிதன்கூட அவனையே கவனித்துப்பார்த்தால், அவனுடைய சொந்த நன்மையும் உண்மையும் தவிர வேறொன்றுமில்லை; ஏனென்றால், நன்மை என்பது அவனுடைய சித்தத்திற்கும், உண்மை என்பது அவனுடைய புத்திக்கும் சேர்ந்தது; மேலும் மனிதனானவன் தன்னுடைய சித்தமும் புத்தியுமிருக்கிறமாதிரி யிருக்கிறான். ஆகவே, மனிதனுடைய சித்தம், நன்மையிலும், புத்தியானது உண்மையிலும் எவ்வளவு உருவாக்கப்படுகிறதோ, அவ்வளவு தூரம் அவன் ஆண்டவரால் நேசிக்கப்படுகிறானென்பது விசதமாகிறது. அன்பானது அந்யோந்யமானதானபடியினால், ஆண்டவரால் நேசிக்கப்படுதலென்பது, ஆண்டவரை நேசித்தலாககூட இருக்கிறது; ஏனென்றால், ஆண்டவர் நேசிக்கப்படுகிறவன் பேரில், நேசிக்கும் சக்தியை கொடுக்கிறார்.

**351**. திருச்சபையினுடையவும் வேதத்தினுடையவும் கற்பனையிலிருந்தும் அல்லது அறிவுகளிலிருந்தும் அநேக விஷயங்களை தெரிந்திருக்கிறவர்கள், மற்றவர்களைவிட உண்மைகளை அதிக உள்ளாயும் கூர்மையாயும் பார்க்கிறார்களென்றும், இவ்விதமாக அதிக விவேகமுள்ளவர்களாயும் ஞானிகளாகவும் இருக்கிறார்களென்றும், உலகத்தில் நம்பப்படுகிறது; அப்பேர்ப்பட்ட மனிதர்கள்கூட, தங்களைப்பற்றியே அவ்விதமான அபிப்பிராயத்தைக் கொள்ளுகிறார்கள்; ஆனால், உண்மையான விவேகத்தினுடையவும் ஞானத்தினுடையவும் சுபாவமும், அதனுடன், போலியானதும் பொய்யானதுமானதின் சுபாவமும், பின்வருவதில் விவரிக்கப்படவேண்டும். உண்மையான விவேகமும் ஞானமும் எது உண்மையானது நன்மையானது என்று பார்ப்பதிலும் உணருதலிலும், அதிலிருந்து எது பொய்யானது எது தீமையானது என்று பார்ப்பதிலும் உணருதலிலும், ஒன்றை மற்றொன்றிலிருந்து இயற்கை உணர்விலிருந்தும், அந்தரங்க உணருதலிலிருந்தும் திட்டமாய் வகையறுத்தலிலும் அமைந்திருக்கிறது. ஒவ்வொரு மனிதனிடத்திலும் உள்ளான சக்திகளும் புறம்பான சக்திகளுமிருக்கின்றன. உள்ளான சக்திகள் உள்ளான அல்லது பரமார்த்தமான மனிதனை சேர்ந்திருக்கின்றன; புறம்பான சக்திகள் புறம்பான அல்லது ஸ்தூல சம்பந்தமான மனிதனை சேர்ந்திருக்கின்றன. மனிதனுடைய உள்ளானவைகள், அவனுடைய புறம்பானவைகளோடு, உருவாக்கப்பட்டு ஒன்றாக்கப்படுகிறதற்கு தக்கபடி மனித

னானவன் பார்த்து உணருகிறான். மனிதனுடைய உள்ளானவைகள் சுவர்க்கத்தில்மட்டும் உருவாக்கப்படும், ஆனால் அவனுடைய புறம்பானவைகள் உலகத்தில் உருவாக்கப்படுகின்றன. உள்ளானவைகள் சுவர்க்கத்தில் உருவாக்கப்படும்போது, அக்காலத்தில் அவர்களுக்குள்ளிருப்பது, உலகத்திலிருந்துவரும் புறம்பானவைகளுக்குள் பாய்கிறது; இவ்விதமாக அவைகள் அன்னுவயத்துக்குள் கொண்டு வரப்படுகின்றன, அதாவது அவைகள் உள்ளானவைகளோடு ஒன்றாக செயல்படுகின்றன. இது செய்யப்பட்டபோது, மனிதனானவன் உள்ளேயிருந்து பார்த்து உணருகிறான். உள்ளானவைகள் உருவாக்கப்படுவதற்கு, மனிதனுக்கு, தெய்வத்தையும் சுவர்க்கத்தையும் எதிர்பார்த்தல் மாத்திரம் வழிவகைகளாயிருக்கின்றன; ஏனென்றால், முன் சொல்லப்பட்டபடி, உள்ளானவைகள் சுவர்க்கத்தில் உருவாக்கப்படுகின்றன; மனிதன் தெய்வத்தை நம்பும்போதும், எல்லா உண்மையும் நன்மையும், அதனால் எல்லா விவேகமும் ஞானமும் தெய்வத்தினிடமிருந்து வருகிறதென்று நம்பும்போதும், அவன் தெய்வத்தை எதிர்பார்க்கிறான்; மேலும், அவன் தெய்வத்தால் நடத்தப்பட மனமுள்ளவனாயிருக்கும்போது தெய்வத்தை நம்புகிறான். வேறு வழியில் அல்லாமல், இந்த வழியில் மனிதனுடைய உள்ளானவைகள் திறக்கப்படுகின்கின்றன. அந்த விசுவாசத்திலும், அந்த விசுவாசத்துக்கு தக்கபடி ஓர் வாழ்விலும், இருக்கப்பட்ட மனிதன் விவேகமுள்ளவனாகவும் ஞானியாகவும், ஆகக்கூடிய வல்லமையையும் மனோ சக்தியையும் உடைத்தாயிருக்கிறான். ஆனால், விவேகமுள்ளவனாகவும் ஞானமுள்ளவனாகவும் ஆகும்பொருட்டு, சுவர்க்கத்திற்கு சம்பந்தபட்டவைகள் மட்டுமல்லாமல், உலகத்திற்கு சம்பந்தபட்ட அநேக விஷயங்களை அவன் கற்றுகொள்ளவேண்டும்; சுவர்க்கத்துக்கு சம்பந்தபட்டவைகளை வேதத்திலிருந்தும் திருச்சபையிலிருந்தும், உலகத்துக்கு சம்பந்தபட்டவைகளை பூதசாஸ்திரங்களிலிருந்தும், கற்றுக்கொள்ளவேண்டும். மனிதனானவன் இந்த விஷயங்களைக் கற்றுக்கொண்டு, அவைகளை எவ்வளவு வாழ்வில் பிரயோகிக்கிறானோ, அவ்வளவு அவன் விவேகமுள்ளவனாகவும் ஞானமுள்ளவனாகவுமாகிறான்; ஏனென்றால், அவ்வளவு தூரம் அவனுடைய புத்தியின் பார்வையும், அவனுடைய சித்தத்தின் உள்ளான ஆசையும், பூர்த்தியாக்கப்படுகின்றன. இந்த வகுப்பின் பேதமையானவர்கள், தங்க

ளுடைய உள்ளானவைகள் திறக்கப்பட்டு, ஆனால் பரமார்த்தமானதும், சன்மார்க்கமானதும், ஊருக்குறியதும், இயல்பானதுமான உண்மைகளால் இவ்விதமாக பண்படுத்தப்படாதவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் அவைகளைக் கேட்கும்போது உண்மைகளை உணருகிறார்கள், ஆனால், அவர்கள் அவைகளைத் தங்களுக்குள்ளே பார்க்கிறதில்லை. இந்த வகுப்பைச் சேர்ந்த ஞானிகள், தங்களுடைய உள்ளானவைகள் திறக்கப்பட்டிருப்பது மல்லாமல், அதனுடன் பண்படுத்தப்பட்டவர்களாகவுமிருக்கிறார்கள். அவ்விரு வகையாரும் உண்மைகளை தங்களிலே கண்டு அவைகளை உணருகிறார்கள். இவைகளிலிருந்து, உண்மையான விவேகத்தினுடையவும் ஞானத்தினுடையவும் குணமானது தெளிவாய் அறிந்து கொள்ளப்படலாம்.

**352**. போலியான விவேகமும் ஞானமும், உண்மையானது எதுவென்றும் நல்லது எதுவென்றும், அதிலிருந்து எது பொய்யானதென்றும், எது தீமையானதென்றும் உள்ளிருந்து பார்த்து உணர்தல் அல்ல; ஆனால், அது மற்றவர்கள் அப்படியிருப்பதாக சொல்லப்படுவதை உண்மையானதென்றும் நல்லதென்றும் அல்லது பொய்யானதென்றும் தீமையானதென்றும் நம்பி, பிறகு அதை ஸ்திரப்படுத்தலாயிருக்கிறது. இவர்கள் உண்மையை உண்மையிலிருந்தே யல்லாமல் மற்றவன் கற்பித்ததின்பேரில் பார்க்கிறபடியினால், உண்மையைப்போல் பொய்யையும் எடுத்துக்கொண்டு நம்பி, அதனுடன் அது நிஜமாக தோன்றுகிறவரையில் அதை ஸ்திரப்படுத்துகிறார்கள்; ஏனென்றால், எது ஸ்திரப்படுத்தப்படுகிறதோ, அது உண்மைபோல தோற்றத்தை போட்டுக்கொள்ளுகிறது; மேலும் ஸ்திரப்படுத்த முடியாதது ஒன்றுமில்லை. இவர்களின் உள்ளானவைகள் கீழே இருந்து மாத்திரம் திறக்கப்பட்டிருக்கின்றன, ஆனால், அவர்களுடைய புறம்பானவைகள், தாங்கள் தாங்களே ஸ்திரப்படுத்திய அளவு திறக்கப்பட்டிருக்கின்றன. இந்த காரணத்திற்காக, தாங்கள் பார்க்கப்பட்ட வெளிச்சம் சுவர்க்கத்து வெளிச்சமல்ல, ஆனால் அது ஸ்தூல வெளிச்சமென்று சொல்லப்படுகிற உலகத்து வெளிச்சமாயிருக்கிறது. இந்த வெளிச்சத்தில் பொய்கள் உண்மைகளைப் போல பிரகாசிக்கக்கூடும்; நிஜமாகவே, ஸ்திரப்படுத்தப்பட்டபோது அவர்கள் சுவர்க்கத்தின் வெளிச்சத்தில் அல்லாவிட்டாலும், மகா ஜோதியுடன் தோன்றலாம். இந்த வகுப்பில், தங்கள் அபிப்பிராயங்களில் தாங்களே பலமாய் ஸ்திரப்பட்டவர்கள், குறைந்த விவேகமுள்ளவர்களாகவும் ஞானமுள்ளவர்களாயுமிருக்கிறார்கள்; குறை

வாய்தாங்களை ஸ்திரப்பட்டவர்கள், அதிக விவேகிகளாகவும் ஞானிகளாகவுமிருக்கிறார்கள். இவைகளிலிருந்து போலியான விவேகமும் ஞானமும் எவ்வளவென்று வெளிப்படையாகிறது. ஆனல், இளமையில் தங்களுடைய உபாத்தியாயர்களிடமிருந்து கேழ்விப்பட்டதை உண்மையென்று நம்பி, வயது முதிர்ந்தபின் தங்கள் புத்தியிலிருந்து நினைக்கும் காலத்தில், அதை உறுதியாய் பிடிக்காமல், உண்மையை கண்டுபிடிக்கவிரும்பி, அந்த ஆசையிலிருந்து அதை தேடி, அதைக்காணும்போது, அதனல் உள்ளுக்குள்ளாய் அசைக்கப்படுகிறவர்கள் இந்த வகுப்பில் சேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் உண்மையின் பொருட்டு உண்மையினல் அசைக்கப்படுகிற படியினல், அதை ஸ்திரப்படுத்துவதற்கு முன் உண்மையைப்பார்க்கிறார்கள். இது ஒரு உதாரணத்தினல் திருஷ்டாந்தப்படுத்தப்படலாம். மனிதன் அப்படியல்லாமல், பிராணிகள் தங்கள் சுபாவத்துக்கு தக்கப்படி எல்லா அறிவுகளிலும் ஏன் பிறந்திருக்கிறதென்கிற கேழ்வியைப்பற்றி, ஆவிகளுக்குள் ஒரு சம்பாஷணை நடந்தது. பிராணிகள் தங்கள்வாழ்வின் ஒழுங்கில் இருக்கின்றன வென்பதும், ஆனல் மனிதன் அப்படியிருக்கவில்லை யென்பதும், காரணமாயிருக்கிறதென்று சொல்லப்பட்டது. ஆகையினல், அவன் உள்ளானதைப்பற்றியும், புறம்பானதைப்பற்றியும் தான் கற்றுக்கொள்வதின் மூலமாய் ஒழுங்குக்கு நடத்தப்படவேண்டும்; ஆனல், எல்லாவற்றிற்கும் மேலாய் கடவுளையும் அயலானை தன்னைப்போலேயும் நேசித்தலாயிருக்கிற அவனுடைய வாழ்வின் ஒழுங்கில் மனிதன் பிறந்திருந்தால், அவன் விவேகத்திலும் ஞானத்திலும் பிறந்திருப்பான்; மேலும் அவனுடைய அறிவுகள் அதிகரித்தபோது எல்லா உண்மைகளையும் நம்புவான். நல்ல ஆவிகள் இதை உடனே அறிந்துகொண்டு, உண்மையின் வெளிச்சத்தினல் மாத்திரம் அது அப்படியிருக்கிறதென்று உணர்ந்தார்கள்; ஆனல், விசுவாசத்தில் மாத்திரம் தாங்களே ஸ்திரபட்டு, அதனல் அன்பையும் தருமத்தையும் எறிந்துவிட்ட ஆவிகள், அதை அறிந்துகொள்ள முடியவில்லை; ஏனென்றால், தாங்கள் ஸ்திரப்படுத்திய பொய்யின் வெளிச்சம் உண்மையின்வெளிச்சத்தை மறைத்தது.

**353.** பொய்யான விவேகமும் ஞானமும்தான் தெய்வத்தை ஒத்துக்கொள்ளாவிட்டால் நிற்கின்றன. ஏனென்றால் தெய்வத்தை ஒத்துக்கொள்ளாமல், தெய்வத்திற்கு பதிலாக இயற்கையை மதிக்கிறவர்கள், உலகத்தில் எவ்வளவு கற்ற அறிஞர்களாயிருக்கிறார்களென்று நம்பப்பட்டபோதிலும், பஞ்சேந்திரியங்களி

லிருந்து நினைத்து, புலனுக்கு அடுத்தவர்களாய் மாத்திரம் இருக்கிறார்கள்; ஆனால் அவர்களுடைய கல்வி, உலகத்தில் கண்களுக்குத் தோன்றுகிற பொருள்களுக்கு மேலே ஏறுகிறதில்லை. புத்தியை உருவாக்க உண்மையாய் விவேகமுள்ளவர்களுக்கு உதவுகிற அதே பூத சாஸ்திரங்களாக அவைகள் இருந்தபோதிலும், இவைகளை அவர்கள் தங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஏறக்குறைய சடத்துவமாய் ஆதரிக்கிறார்கள். சாஸ்திரங்கள் என்பதினால், சகள சாஸ்திரம், வானசாஸ்திரம், ரசாயனம், யந்திரசாஸ்திரம், க்ஷேத்திரக் கணிதம், அங்காதிபாத சாஸ்திரம், ஆத்துமதத்துவ நூல், தத்துவஞானம், இராச்சியங்களின் சரித்திரம், அதனுடன் கற்றோர் கூட்டத்தில் நுட்ப பிழைபார்த்தல், பாஷைகள் போன்ற சோதனைக்கடுத்த அறிவுகளின் பலவகைகளும் கருதப்படுகின்றன. தெய்வத்தை மறுத்து, புறம்பான மனிதனுடைய ஐம்புலனுக்கடுத்த விஷயங்களுக்குமேல் தங்களுடைய சிந்தனைகளை உயர்த்தாத சிரேஷ்ட குருக்கள், வேதத்தில் சொல்லப்பட்டவைகளை, மற்றவர்கள் சாஸ்திரங்களை மதிக்கிறதுபோல மதிக்கிறார்கள்; ஏனென்றால், தங்களுடைய உள்ளானவைகளும், அதனுடன் தங்கள் உள்ளானவைகளுக்கு மிகவும் சமீபத்திலுள்ள புறம்பானவைகளும் மூடப்பட்டிருப்பதினால், அவர்கள் அவைகளை சிந்தனைக்கு சேர்ந்த விஷயங்களாகவும் அல்லது தெளிவிக்கப்பட்ட விவேகத்தோடிசைந்த மனதிலிருந்து வரும் இயற்கை உணர்வின் விஷயங்களாகவும், அவைகளை செய்கிறதில்லை. அவர்கள் சுவர்க்கத்திலிருந்து திரும்பிவிட்டபடியினாலும், மேலே கூறியபடிமானிட மனதின் உள்ளானவைகளாயிருக்கிற,அந்த திக்கை நோக்க சக்தியுள்ளதாயிருந்த தங்களுக்குள்ளிருந்ததை கவிழ்த்துவிட்டபடியினாலும், இவைகள் மூடப்பட்டிருக்கின்றன. இந்த காரணத்துக்காக அவர்கள் எது உண்மையானது எது நல்லதென்று அறிந்துகொள்ள முடியாது; ஏனென்றால், இந்த விஷயங்கள், அவர்கள் சம்பந்தப்பட்டவரையில் நள்ளிருளிலும், பொய்யானதும் தீங்குள்ளதும் வெளிச்சத்திலிருக்கின்றன. என்றாலும், ஐம்புலனுக்கு சேர்ந்த மனிதர்கள் விவேகத்துடன் விசாரிக்க சக்தியுடையவர்களா யிருக்கிறார்கள்; அவர்களில் சிலர், மற்றவர்களைவிட அதிக சாதுரியமாகவும் கூர்மையாகவும் விசாரிக்கிறார்கள்; ஆனால், அவர்கள், தங்களுடைய அறிவுகளினால், ஸ்திரப்படுத்தப்பட்ட ஐம்புலன்களின் ஆபாசங்களிலிருந்து விசாரிக்கிறார்கள்; அவர்கள் இந்த விதத்தில் விசாரிக்க சக்தியுள்ளவர்களா யிருப்பதி

ஞல், மற்றவர்களைவிட புத்தியுள்ளவர்களென்று தாங்களே நம்பிக் கொள்ளுகிருர்கள். அவர்களுடைய யூகித்தறிகைகளை, ஆசையினல் கொளுத்துகிற தீயானது தன்னையேயும் உலகத்தையும் நேசித்த லின் நெருப்பாயிருக்கிறது. பொய்யான விவேகத்திலும் ஞானத்தி லும் இருக்கிறவர்களும், மத்தேயுவில் ஆண்டவரால் அடியில் கண்ட படி கருதப்படுகிறவர்களுமானவர்கள் இவர்கள்தான்: "கண்டும் காணுதவர்களாயும், கேட்டும் கேட்காதவர்களாயும், உணர்ந்து கொள்ளாதவர்களாயு மிருக்கிருர்கள்" (xiii. 13, 14, 15.). மேலும் இன்னும் ஒரு இடத்தில்; "இவைகளை ஞானிகளுக்கும், கல்விமான் களுக்கும் மறைத்து, பாலகருக்கு வெளிப்படுத்தினீர்" (xi. 25).

**354**. வித்தியா சம்பந்தமான உலகத்தில், தங்கள் பிரபந்தங் களினல் பெயர்பெற்ற நற்கீர்த்தியுடையவர்கள் சிலருடனும், அப்படி பெயர் பெற்றிராவிட்டாலும், ஆழ்ந்த ஞானமுடைய மற்றவர்களுடனுமாக, உலகத்தைவிட்டு போனபிறகு, கல்வி மான்களில் அநேகருடன் பேச எனக்கு அருள்செய்யப்பட்டது. இருதயத்தில் தெய்வத்தை மறுத்தவர்கள், தங்கள் உதடுகளினல் எவ்வளவு அவரை ஒத்துகொண்டபோதிலும், எந்த தேசாசார உண்மையையும், இன்னும் குறைவாய் எந்த ஞானசம்பந்தமான உண்மையையும் அறிந்து கொள்ள முடியாதபடி அவர்கள் அவ்வளவு மந்த புத்தியுள்ளவர்களாய் விட்டார்கள். அவர்க ளுடைய மனங்களின் உள்ளானவைகள் கருப்பாய் தோன் றும்படி மூடப்பட்டதையும், (ஏனென்ருல், சூக்கும உலகத்தில் இவ்விதமானவைகள் பார்க்கக்கூடியவைகளா யிருக்கின்றன) அதனல், அவர்கள் எந்த சுவர்க்கத்து வெளிச்சத்தை பொருக்கவும், அல்லது சுவர்க்கத்திலிருந்துவரும் எந்த உட்பெருக்கையும் ஏற்றுக் கொள்ளவும் சக்தியில்லாதிருந்ததையும், நான் உணர்ந்ததுடன் கண்டுமிருக்கிறேன். அவர்களுடைய உள்ளானவைகள் தோன்றிய இருள், தாங்கள் அடைந்த அறிவுகளினல் தெய்வத்துக்கு விரோத மாக தாங்களே ஸ்திரப்பட்டவர்கள் விஷயத்தில், மகாபெரியதாக வும் மிக விரிவாகவுமிருந்தது. இப்பேர்பட்டவர்கள் இதர வாழ்வில், எல்லா பொய்யையும் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு, அதை கடற்பஞ்சு தண்ணீரை உறிஞ்சுகிறதுபோல் உறிஞ்சுகிருர்கள்; ஆனல், அவர்கள், ஒரு துவளத்தக்க எலும்புள்ள மேற்புறம் தன் பேரில் விழுவதை தள்ளுகிறதுபோல், எல்லா உண்மையையும் தள்ளு கிருர்கள். தெய்வத்துக்கு விரோதமாயும் இயற்கைக்கு அனுகூலமா

யும் தாங்களே ஸ்திரப்பட்டவர்களின் உள்ளானவைகள், எலும்பாக் கப்படுகின்றனவென்றுகூட சொல்லப்படுகிறது; அவர்களுடைய தலைகள்கூட மூக்குவரையில் கருங்காலியைப்போல் கடினமானதா யிருக்கிறது; இது அவர்களுக்கு இனி எந்த உணர்ச்சியுமில்லை என் பதற்கு ஒரு அடையாளமாக இருக்கிறது. இவ்வித விளக்கமுள்ள வர்கள், சதுப்பு நிலங்கள்போல் தோன்றுகிற சேற்று நிலங்களில் மூழ்கியிருக்கிறார்கள்; அங்கே, தங்கள் பொய்கள் திருப்பப்பட்ட மனோபவங்களால் அவர்கள் கலக்கத்தில் வைக்கப்படுகிறார்கள். அவர்களுடைய நரகத்து நெருப்பானது கீர்த்திக்கும் பெயருக்கும் கொள்ளும் துரிச்சையாயிருக்கிறது; இந்த மோகத்திலிருந்து அவர் கள் ஒருவரையொருவர் தாக்குகிறார்கள்; மேலும், பேய்த்தனமுள்ள உற்சாகத்தினால், தங்களை தெய்வங்களாக ஆராதிக்காதவர்களை வதைக்கிறார்கள்; இதை அவர்கள் ஒருவருக்கொருவர் மாற்றி மாற்றி செய்கிறார்கள். தெய்வத்தை ஒத்துக்கொள்வதினால் சுவர்க் திலிருந்து தனக்குள்ளேயே வெளிச்சத்தைப் பெற்றிராத உலகத்தின் அந்த கல்வி இவ்வித விஷயங்களுக்கு மாற்றப்படுகிறது.

**355.** இறந்த பிறகு சூக்கும உலகத்திற்கு வந்தபோது, இவர்கள் அவ்வுலகத்தில் அவ்வித சுபாவமுடையவர்களாயிருக் கிறார்களென்பது, மேலே கூறிய அறிவுகளைப்போல்,ஸ்தூல ஞாபகத் திலிருந்துகொண்டு, சரீர புலன்களைச் சேர்ந்தவைகளோடு நேராய் சேர்க்கப்பட்டிருக்கிற எல்லா பொருள்களும், அப்பொழுது அமைவாயிருக்கின்றன வென்பதிலிருந்தும், அவைகளிலிருந்து விவேகத்தோடிசைந்த பொருள்கள் மாத்திரம் சிந்தனைக்கும் பேச் சுக்கும் உதவுகின்றன என்பதிலிருந்தும் மாத்திரம் தீர்மானிக்கப் படலாம். ஏனென்றால், நிஜமாகவே மனிதன் எல்லா ஸ்தூல ஞாப கத்தையும் தன்னுடன் கொண்டுபோகிறான்; ஆனால், அதிலிருக்கும் பொருள்கள், அவனுடைய பார்வைக்குள் இல்லாமல், அவன் உலகத்தில் வாழ்ந்தபோதுபோல, அவனுடைய சிந்தனைக்குள் பிர வேசிக்கிறதில்லை. ஆகையினால், அவன் அதிலிருந்து எதையும் எடுத்துகொண்டு, அதை சூக்கும வெளிச்சத்திற்குள் கொண்டுவர முடியாது; ஏனென்றால், அதிலிருக்கும் பொருள்கள் அந்த வெளிச் சத்தின் பொருள்கள் அல்ல. ஆனால், சரீரத்தில் வாழும்போது மனிதனைவன் சாஸ்திரங்களிலிருந்து அடைந்த பகுத்தறிவுள்ள அல்லது விவேகமுள்ள விஷயங்கள், சூக்கும உலகத்து வெளிச்சத் துடன் ஒத்துப்போகின்றன; ஆகையினால், மனிதனுடைய ஆவி

யானது அறிவுகளினாலும் சாஸ்திரங்களினாலும், எவ்வளவு தூரம் விவேகமுடன் இசைந்ததாக செய்யப்படுகிறதோ, அவ்வளவு தூரம் அவன் சரீரத்திலிருந்து விடுதலையான பிறகு விவேகமுடன் இசைந்தவனாயிருக்கிறான்; ஏனென்றால், அப்பொழுது, மனிதன் ஒரு ஆவியாகயிருக்கிறான்; மேலும், சரீரத்தில் நினைக்கிறது ஆவியாகத்தான்யிருக்கிறது.

**356**. ஆயினும், அறிவுகளினாலும் சாஸ்திரங்களினாலும், அறிவையும் ஞானத்தையும் அடைந்து, ஒவ்வொன்றையும் வாழ்க்கையின் உபயோகத்திற்காக வழங்கி, அதே காலத்தில் தெய்வத்தை ஒத்துக்கொண்டு, வேதத்தின்பேரில் அன்புபாராட்டி, மேலே (நெ. 319) பேசிய ஞான சன்மார்க்க வாழ்வை நடத்தினவர் விஷயத்தில் சாஸ்திரங்கள் ஞானமுள்ளவர்களாகவும், விசுவாசத்தின் விஷயங்களை உறுதிப்படுத்தவும்கூட வழி வகைகளாக உதவுகின்றன. ஒளி வீசுகின்ற வைரங்கள், கெம்புகள், நீலமணிகள் இவைகளுடையதுபோல், வெண்மையானதும் சுவாலையுள்ளதும், அல்லது நீல வர்ணமுள்ளதுமான நிறங்களின் வெளிச்சத்துடன் தெளிவாயிருக்கிறதாக தோன்றிய மனதைச்சேர்ந்த அவர்களுடைய உள்ளானவைகளை, நான் உணர்ந்தும் பார்த்தும்கூட இருக்கிறேன்; இதையும், தெய்வத்திற்கும், சாஸ்திரங்களிலிருந்து அடைந்த தெய்வீக உண்மைகளுக்கும் அனுகூலமாக ஸ்திரப்படுத்தலுக்கு தக்கபடி அப்படி பார்த்திருக்கிறேன். சூக்கும உலகத்தில் பார்வைக்கு காண்பிக்கப்பட்டபோது, உண்மையான விவேகத்தினுடையவும் ஞானத்தினுடையவும் தோற்றமானது அவ்விதமாயிருக்கிறது; இந்த காட்சியானது சுவர்க்கத்தின் வெளிச்சத்திலிருந்து உண்டாகிறது; மேலும் அந்த வெளிச்சமானது, எல்லா விவேகத்திற்கும் ஞானத்துக்கும் மூலமாயிருக்கிற ஆண்டவரிடமிருந்து வெளி வருகிற தெய்வீக உண்மையாயிருக்கிறது (மேலே நெ. 126—133 பார்க்கவும்). வர்ணங்களுடையதுபோன்ற பலவிதங்கள் இருக்கிற அந்த வெளிச்சத்தின் சமதளங்கள், மனதின் உள்ளானவைகளாயிருக்கின்றன; இயற்கையில் இருக்கிறதும், இவ்விதமாக சாஸ்திரங்களிலிருக்கிறதுமானவைகளால், தெய்வீக உண்மைகளை ஸ்திரப்படுத்தல், இந்த பல வகைகளை உண்டாக்குகின்றன. ஏனென்றால், மனிதனுடைய உள்ளான மனது, ஸ்தூலஞாபகத்தின் பொருள்களைப் பார்க்கிறது. ரூபகாரங்களாக உதவக்கூடிய அங்கிருக்கும் பொருள்களை, சுவர்க்கத்துக்கு அடுத்த அன்பின் நெருப்பினால் அது சுத்தப்படுத்தி

அவைகளைப் பிரித்து, சூக்கும அபிப்பிராயங்களாக செய்கின்றன. சரீரத்திலிருக்கும் காலத்தில்,இது மனிதனுக்கு தெரியாது; ஏனென்றால், அவன் அப்பொழுது சூக்குமமாகவும் ஸ்தூலமாகவும் நினைக்கிறபோதிலும், ஸ்தூலமாக நினைப்பதை மாத்திரம் கவனிக்கிறான், சூக்குமமாய் அவன் நினைப்பதை உணருகிறதில்லை. ஆயினும் அவன் சூக்கும உலகத்திற்கு வருகிறபோது, உலகத்திலிருந்தபோது தான் ஸ்தூலமாய் நினைத்ததைக் குறித்த உணர்ச்சியில்லாமல், சூக்குமமாய் நினைத்ததைக் குறித்த உணர்ச்சி மாத்திரம்இருக்கிறது; இவ்விதமாக நிலைமை மாற்றப்படுகிறது. இவைகளிலிருந்து, மனிதனைவன் அறிவுகள் மூலமாயும் சாஸ்திரங்களின் மூலமாயும் ஞானமுள்ளவனுக்கப்படுகிறானென்றும், அவைகள் ஞானமுள்ளவனாக வழிவகைகளென்றும் விசதமாகிறது; ஆனால் இது, விசுவாசத்திலும் வாழ்விலும் தெய்வத்தை ஒத்துக்கொண்டவர்கள் விஷயத்தில் மாத்திரம் அப்படியிருக்கிறது. இவர்கள்கூட மற்றவர்களுக்கு மேலாக சுவர்க்கத்தில் ஒத்துக்கொள்ளப்பட்டு, மத்தியிலிருக்கப்பட்டவர்களுக்குள் (நெ. 43) இருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் மற்றவர்களைவிட அதிகமாய் வெளிச்சத்திலிருக்கிறார்கள். இவர்கள்தான் ஆகாயத்தின் ஜோதியைப்போல பிரகாசித்து, நட்சத்திரங்கள்போல வெளிச்சத்தைக் கொடுக்கிற சுவர்க்கத்திலிருக்கும் விவேகிகளும் ஞானிகளுமாயிருக்கிறார்கள்; ஆனால், தங்களுடைய மனங்களின் உள்ளானவைகளை அறிவுகளினாலும் சாஸ்திரங்களினாலும் சீர்படுத்தாமல், தெய்வத்தை ஒத்துகொண்டு, வேதத்தின்பேரில் அன்பு பாராட்டி, பரமார்த்த சன்மார்க்க வாழ்க்கையை நடத்தினவர்கள் அங்கே பேதமையானவர்களாயிருக்கிறார்கள்; ஏனென்றால்,மானிட மனதானது, சாகுபடிக்குத் தக்கபடி ஒரு குணத்தை யடைகிற பூமியைப்போலிருக்கிறது.

# XXXIX

## சுவர்க்கத்தில் பணக்காரர்களும் ஏழைகளும்

**357.** சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்வதைப்பற்றி பலவித அபிப்பிராயங்கள் இருக்கின்றன. சிலர், பணக்காரர்கள் அல்லாமல் ஏழைகள்தான் ஏற்றுக்கொள்ளப் படுகிறார்களென்று நினைக்கிறார்கள்; சிலர், பணக்காரர்களும் ஏழைகளும் ஒரேமாதிரி ஏற்றுக் கொள்ளப்படுகிறார்களென்று நினைக்கிறார்கள்; மற்றவர்கள், பணக்காரர்கள் தங்கள் செல்வத்தை கொடுத்துவிட்டு, ஏழைகளைப் போலானாலொழிய அவர்கள் ஏற்றுக்கொள்ளப்பட முடியாதென்று நினைக்கிறார்கள்; ஒவ்வொருவனும் வேதத்திலிருந்தே தன் அபிப் பிராயத்தை உறுதிப்படுத்துகிறான். ஆனால், சுவர்க்கம் விஷயத்தில் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் வித்தியாசத்தை உண்டாக்கு கிறவர்கள், வேதத்தை அறிந்து கொண்டவர்களாக இல்லை. வேத மானது உள்ளர்த்தத்தில் சூக்ஷ்மமாயிருக்கிறது; ஆனால் சொல்லார்த் தத்தில் ஸ்தூலமாயிருக்கிறது; ஆகையினால், எந்த ஞானார்த்தத் தின்படியுமல்லாமல், சொல்லார்த்தத்தின்படி மாத்திரம், வேதத்தை கிரகிக்கிறவர்கள், அநேக விஷயங்களில், முக்கியமாய், பணக்காரர் கள் ஏழைகள் விஷயத்தில் விபரீத அர்த்தம் பண்ணுகிறார்கள்; ஏனென்றால், பாக்கியவான்கள் சுவர்க்கத்தில் பிரவேசித்தால், ஒரு ஒட்டகமானது ஒரு ஊசியின் கண்ணில் பிரவேசிப்பதற்கு எவ்வளவு பிரயாசமாக இருக்குமோ அவ்வளவு பிரயாசமாயிருக்கிறதென்றும், "தரித்திரர் பாக்கியவான்கள்; தேவனுடைய ராஜ்யம் அவர்களுடை யது" (லூக். vi. 20) என்று சொல்லப்படுகிறபடியினால், தாங்கள் ஏழைகளாயிருப்பதினால், தரித்திரர்களுக்கு அது சுலபமானதென் றும் அவர்கள் நினைக்கிறார்கள்; ஆனால், வேதத்தின் ஞானார்த்தத் தைக் குறித்து ஏதாவது கொஞ்சம் தெரிந்தவர்கள் வேறு விதமாய் நினைக்கிறார்கள். சுவர்க்கமானது, பாக்கியவான்களாயிருந்தாலும் சரி, தரித்திரர்களாயிருந்தாலும் சரி, விசுவாசத்தினுடையவும் அன்பினுடையவும் வாழ்க்கையை வாழ்கிறவர்கள் எல்லோருக்கும் உண்டென்று அவர்களுக்கு தெரியும்; அதனால் பாக்கியவான் என்பதினாலும், தரித்திரர்கள் என்பதினாலும் வேதத்தில் யார் கருதப்படுகின்றனர் என்பது பின் வருவதில் காண்பிக்கப்படும்.

தேவர்களுடன் அதிக சம்பாஷணையாலும், அவர்களுடன் வாழ்தலி னாலும், பாக்கியவான்கள் தரித்திரர்களைப்போல் அவ்வளவு சுலப மாக சுவர்க்கத்துக்கு வருகிறார்களென்றும், எந்த மனிதனும் திரண்ட செல்வத்தில் வாழ்வதினால் சுவர்க்கத்திலிருந்து நீக்கப் படுகிறதில்லை என்றும், தரித்திரனாயிருப்பதினால் எந்த மனிதனும் சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப் படுகிறதில்லையென்றும், நிச்சய மாய் தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது. அங்கே பாக்கியவான்களும் தரித்திரர்களும் இருக்கிறார்கள்; பாக்கியவான் களில் அநேகர் தரித்திரர்களைவிட அதிக மகிமையிலும் சுகத்திலு மிருக்கிறார்கள்.

**358**. ஒரு மனிதனானவன், கபடத்தினால் அல்லது வஞ்சனை யினால் அல்லாமல், உசித சமயம் கொடுக்கப்படுகிறவரையில் திரவி யம் சம்பாதிக்கலாமென்றும் செல்வத்தை குவிக்கலாமென்றும், தன்னுடைய வாழ்க்கையானது அதனாலேயே அமைந்திருக்க செய்யாவிட்டால் அன்னபானத்தின் உருசிகரங்களை அனுபவிக்கலா மென்றும், தன்னுடைய நிலைமைக்கு தக்கபடி அவன் மகத்துவத் தில் வசிக்கலாமென்றும், அதே நிலைமையிலுள்ள மற்றவர்களோடு சம்பாஷிக்கலாமென்றும் கொண்டாட்டமுள்ள இடங்களுக்கு பல காற்போய், உலக விஷயங்களை பேசலாமென்றும், அவன் ஒரு பக்தனைப்போல் ஒரு துக்கமும் சஞ்சலமும் உள்ள முகத்துடனும் தாழ்ந்த தலையுடனும் நடக்க அவசியமில்லையென்றும், ஆனால் அவன் சந்தோஷமாகவும் பூரிப்பாகவும் இருக்கலாமென்றும், ஆசை அவனை நடத்துகிற அளவுதவிர, தரித்திரர்களுக்கு தன் னுடைய சொத்துகளை கொடுக்கவேண்டியதில்லை என்றும், முன்ன தாக சொல்லுதல் சரியாக இருக்கிறது. சுருங்கச் சொல்லில், அவன், முழுமையும் உலகத்தின் மனிதனைப்போல புறம்பாய் வாழலாம்; இவைகள் எல்லாம், அவன் கடவுளைக் குறித்து உள்ளுக் குள்ளாய் தகுந்தமாதிரி நினைத்து அவனுடைய அயலானுடன் உண்மையாயும் நியாயமாயும் நடக்கும்பட்சத்தில், அவன் சுவர்க்கத்தில் பிரவேசிப்பதை தடுக்கிறதில்லை. ஏனென்றால், மனிதனானவன், அவனுடைய ஆசையும் சிந்தனையும் அல்லது அவனுடைய அன்பும் விசுவாசமும் இருக்கிறதுபோல இருக் கிறான்; இவைகளிலிருந்து அவனுடைய எல்லா புறம்பான செய்கைகளும் தங்களுடைய உயிரை அடைகின்றன; ஏனென் றால், ஒவ்வொருவனும் சித்தத்திலிருந்து செயல்பட்டு, சிந்தனையி

விருந்து பேசுகிறபடியினால், செயல்படுதல் என்பது இச்சித்தலாகவும் பேசுதல் நினைத்தலாகவும் இருக்கிறது. ஆகையினால், மனிதனானவன் தன்னுடைய செய்கைகளுக்கு தக்கபடி தீர்மானிக்கப்படுவான் என்றும், அவன் அவனுடைய பணிவிடைகளுக்கு தக்கபடி பரிசு கொடுக்கப்படுவானென்றும் சொல்லப்பட்ட வேத வாக்கியங்களினால், அவனுடைய செய்கைகள் வருகிறதும் அல்லது அவனுடைய செயல்களில் இருப்பதுமாகிய, அவனுடைய சிந்தனைக்கும் ஆசைக்கும் தக்கபடி அவன் தீர்மானிக்கப்பட்டு, பரிசு கொடுக்கப்படுவான் என்பது அருத்தம் கொள்ளப்படுகிறது; ஏனென்றால், செய்கைகள் சிந்தனையும் ஆசையுமிருப்பதுபோல, முழுமையும் இருக்கின்றன; அவைகள் இல்லாவிட்டால் அவைகள் கணக்கில் வராது. ஆகவே, மனிதனுடைய புறம்பானது ஒன்றையும் செய்கிறதில்லை என்றும், ஆனால், புறம்பானது உண்டாகிற அவனுடைய உள்ளானது அப்படி செய்கிறதென்றும் விசதமாகிறது. அந்த விஷயமானது இவ்விதமாக திருஷ்டாந்தப் படுத்தப்படலாம். எவனாவது ஒருவன் சட்டத்துக்கும், பெயர்போய்விடுமென்றும், அதனால் கண்ணியம் அல்லது லாபம் போய்விடுமென்றும், பயந்துகொண்டு மாத்திரம் உண்மையாய் நடந்து மற்றவனுக்கு மோசம் செய்யாவிட்டால், அந்த பயத்தினால் அவன் தடுக்கப்படாவிட்டால், தன்னால் கூடியமட்டும் மற்றவர்களை மோசம் செய்வான்; ஆகையினால், அவனுடைய செய்கைகளை புறம்பாய் உண்மையாக தோன்றினபோதிலும், அவனுடைய சிந்தனையிலும் சித்தத்திலும் மோசத்தை உடைத்தாயிருக்கிறான். அவ்விதமான மனிதன், அந்தரங்கமாய் கபடமுள்ளவனாகவும், மோசக்காரனாகவும் இருக்கிறதினால், தனக்குள்ளேயே நரகத்தை உடைத்தாயிருக்கிறான். ஆனால், கடவுளுக்கு விரோதமாகவும் அயலானுக்கு விரோதமாகவும் இருப்பதினால், உண்மையாக செயல்பட்டு, மற்றவனை மோசம் செய்யாதவன், தன்னால்கூடுமானால், மற்றவனுக்கு மோசம் செய்யவிரும்பமாட்டான்; அவனுடைய சிந்தனையும் சித்தமும், மனசாட்சிகளாயிருக்கின்றன; அவனுக்கு தனக்குள்ளேயே சுவர்க்கமிருக்கிறது. இந்த இருவகையாரின் செய்கைகள் புறம்பான உருவத்தில் ஒரேமாதிரி தோன்றுகின்றன, ஆனால் உள்ளுக்குள்ளாய் அவைகள் முழுமையும் வேறுமாதிரியாக இருக்கின்றன.

**359.** ஒரு மனிதன் உள்ளுக்குள்ளாய் தெய்வத்தை ஒத்துக்கொண்டு அயலானுடைய க்ஷேமத்தை கோரும்பட்சத்தில், அவன்

மற்றவர்களைப்போல புறம்பாய் வாழ்ந்து பணக்காரனுப், ஏராள மாய் சாப்பிட்டு, நேர்த்தியான வீட்டில் வசித்து, தன்னுடைய அந்தஸ்துக்கும் தொழிலுக்கும் தக்கபடி சிறப்பான ஆடையை அணிந்து, இன்பங்களையும் மகிழ்ச்சிகளையும் அனுபவித்து, தனக்கு ஒரு தொழிலுக்காகவும் அலுவலுக்காகவும் அவனுடைய மனதி னுடையவும் சரீரத்தினுடையவும் பொழுதுபோக்குக்காகவும் லௌகிகவேலைகளை ஏற்றுக்கொள்ளலாமாகையால், சுவர்க்கத்துக்கு போகும் வழியில் பிரவேசிப்பது அநேகர் நம்புகிறபடி, அவ் வளவு கஷ்டமாயில்லை என்று விசதமாகிறது. தன்னையே நேசித்தலை யும் உலகத்தை நேசித்தலையும் எதிர்த்து, அவைகள் முதன்மை யாகாதபடி தடுக்க சக்தியுள்ளவனாயிருத்தலில் முழுகஷ்டமுமிருக் கிறது; ஏனென்றால், இதுதான் எல்லா தீமைகளுக்கும் உற்பத்தி ஸ்தானமாயிருக்கிறது. நம்பப்படுகிறபடி, சுவர்க்கத்திற்கு போகும் வழியில் பிரவேசித்தல், அவ்வளவு கஷ்டமாயில்லை என்பது ஆண் டவரின் அடியில்கண்ட வார்த்தைகளால் கருதப்படுகிறது:— "நான் சாந்தமும் மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன். ஆனபடியி னால் என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது, உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும்; என் நுகத்தடிமெது வாயும் என் சுமை இலகுவாயும் இருக்கிறது" (மத்தே. xi. 29, 30). ஒரு மனிதனானவன் தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலி லிருந்து பாய்கிற தீமைகளை எதிர்க்கிற அளவு, அவன் தன்னால் அல்லாமல் ஆண்டவரால் நடத்தப்பட்டு, பின்னர், ஆண்டவரும் மனிதனிலிருக்கும் அந்த தீமைகளை எதிர்த்து, அவைகளை நீக்குகிற படியினால், ஆண்டவரின் நுகத்தடி மெதுவாகவும் அவருடைய சுமை இலகுவாயுமிருக்கிறது.

**360.** சுவர்க்கத்தின் மார்க்கத்தில் பிரவேசிக்கலாமென்று நம்பி, உலகப் பொருள்களிலிருந்து தங்களுடைய சிந்தனைகளை பிரிப்பதினால், தேவபக்தியுள்ள தியானங்களைச் செய்ய சந்தர்ப் பத்தை அடையும் பொருட்டு, தாங்கள் உலகத்தில் இருந்தபோது உலகத்தை பரித்தியாகம் செய்துவிட்டு, ஏறக்குறைய ஏகாந்த வாழ்வை பிடித்த சிலருடன், அவர்கள் இறந்த பிறகு நான் பேசி யிருக்கிறேன். ஆனால், இவர்கள் இதர வாழ்வில் விசனமுள்ள குண முள்ளவர்களாயிருந்து தங்களைப்போ லில்லாதவர்களை அலட்சியம் செய்கிறார்கள்; தாங்கள் மற்றவர்களைவிட அதிக சுகத்தை அடை யாதபடியினால் தாங்கள் அதற்கு பாத்திரர்களென்று நம்பி, அவர்

கள் கோபமுள்ளவர்களாககூட இருக்கிறார்கள்; மற்றவர்களைப் பற்றி அவர்களுக்கு அக்கரை இல்லாமல், சுவர்க்கத்துடன் சேர்க்கையை உண்டாக்குகிற தருமத்தைச் சேர்ந்த கடமைகளை செய்யாமல் திரும்பிக்கொள்ளுகிறார்கள். அவர்களுக்கு மற்றவர்களைவிட சுவர்க்கத்தின்பேரில் அதிக ஆசை உண்டு; ஆனால், அவர்கள் தேவர்கள் மத்தியில் கொண்டுபோகப்படும்போது, தேவர்களின் சுகத்தை கலைக்கிற கவலைகள் உண்டுபண்ணுகிறார்கள். ஆகையினால், அவர்கள் அவர்களிலிருந்து பிரிக்கப்படுகிறார்கள்; அப்படி பிரிக்கப்பட்டபோது, குடியில்லாத இடங்களுக்கு சென்று, அங்கே தாங்கள் உலகத்தில் வாழ்ந்த வாழ்வைப்போல் ஒரு வாழ்க்கையை அவர்கள் நடத்துகிறார்கள். மனிதனானவன், உலகத்தின் மூலமாய் மாத்திரம் சுவர்க்கத்திற்கு உருவாக்கப்படுகிறான்; உலகத்தில், ஒவ்வொருவனுடைய ஆசையும் முடிவாகவேண்டிய இறுதியான காரிய சித்திகள் அங்கே இருக்கின்றன; ஏனென்றால், மற்றவர்களுடன் சேர்ந்து செய்யப்படுகிறதாயிருக்கிற ஆசையானது தானே வெளிவந்து, செய்கைகளில் பாய்ந்தால் ஒழிய, மனிதனானவன் தன் அயலானை மதிக்காமல், தன்னையே நோக்கும்படியாக, அவ்வளவு தூரம் கடைசியில் அது திகைக்கச் செய்யப்படுகிறது. தருமத்தை நீக்கிய தேவபக்தியுள்ள வாழ்க்கையில்லாமல், ஒவ்வொரு தொழிலிலும் உத்தியோகத்திலும் நியாயமானதும் சரியானதுமா யிருக்கிறவைகளை செய்தலாயிருக்கிற அயலானிடத்து காட்டும் தருமத்தின் வாழ்க்கையானது சுவர்க்கத்துக்கு வழிகாட்டுகிறதா யிருக்கிறதென்று, இவைகள் எல்லாம் விசதமாக்குகிறது; ஆகவே, வாழ்க்கையின் தொழில்களில் மனிதனானவன் எவ்வளவு தூரம் உடன்பட்டிருக்கிறானோ அவ்வளவு தூரம் மாத்திரம் தருமமானது நடத்தப்படுமென்றும், தரும வாழ்வு வளருமென்றும், அவன் அவைகளிலிருந்து, தானே நீக்கிக்கொள்ளுகிற அளவு அது முடியாதென்றும் இதிலிருந்து ஏற்படுகிறது. நான் இதை அனுபவத்திலிருந்து திருஷ்டாந்தப்படுத்துகிறேன். வர்த்தகத்திலும் வணிகத்திலும் உலகத்தில் அமர்ந்திருந்து, அந்தத் தொழில்களால் தனவந்தனர்களானவர்களில் அநேகர், சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; ஆனால் கண்ணியமான நிலைமைகளில் இருந்து தங்கள் உத்தியோகங்களால் பணக்காரர்களானவர்களில் சிலர் மாத்திரம் அங்கே இருந்தார்கள். பின் கூறியவர்கள், தியையும் நேர்மையையும் செலுத்துபவர்களாகவும், அதனுடன்

கூட மற்றவர்களுக்கு லாபமுள்ளதும், கண்யமுள்ளதுமான வேலைகளை கொடுப்பவர்களாகவும் இருந்ததினால் வந்த லாபங்களினாலும் கண்யங்களாலும், தங்களையேயும் உலகத்தையும் நேசித்து. இவ்விதமாக, தங்களுடைய சிந்தனைகளையும் ஆசைகளையும் சுவர்க்கத்தினிடம் செலுத்துவதை நீக்கி, அவைகளை தங்களிடமே திருப்ப ஏவப்பட்டார்களென்பது காரணமாயிருந்தது; ஏனென்றால், மனிதனானவன் தன்னையேயும் உலகத்தையும் நேசித்து, தன்னையேயும் உலகத்தையும் ஒவ்வொன்றிலும் எவ்வளவு மதிக்கிறானோ, அவ்வளவு அவன் தானே தெய்வத்தினிடமிருந்து பிரிந்து, சுவர்க்கத்திலிருந்து தானே நீக்கிக்கொள்கிறான்.

**361**. சுவர்க்கத்தில் பாக்கியவான்களின் கதி மற்றவர்களைவிட செல்வத்தில் மேற்படும்படியானதாயிருக்கிறது. அவர்களில் சிலர், பொன்னையும் வெள்ளியையும்போல, ஒவ்வொன்றும் உள்ளே அதிக பிரகாசமுள்ளதாயிருக்கிற அரண்மனைகளில் வசிக்கிறார்கள்; அவர்களுக்கு, வாழ்க்கையின் பிரயோசனங்களுக்காக எல்லா பொருள்களும் திரளாயிருக்கின்றன. ஆயினும் தங்களுடைய இருதயங்களை இவைகளின்பேரில் கொஞ்சம்கூட வைக்காமல், உபயோகங்கள் பேரிலேயே செலுத்துகிறார்கள். அவர்கள் இவைகளை வெளிச்சத்திலிருப்பதுபோல பிரகாசத்தில் பார்க்கிறார்கள்; ஆனால், பொன்னும் வெள்ளியும் ஒப்பான மங்கலிலும் நிழலிலும் தோன்றுகின்றன. அவர்கள் உலகத்தில் உபகாரங்களை நேசித்து, பொன்னையும் தங்கத்தையும் வழிவகைகளாகவும் துணைக்கருவிகளாகவும் மதித்தார்களென்பது காரணமாயிருக்கிறது. உபகாரங்களே சுவர்க்கத்தில் இவ்விதமாக பிரகாசிக்கின்றன; உபகாரத்தின் நன்மை பொன்னைப்போலவும், அதன் உண்மை வெள்ளியைப்போலவும் பிரகாசிக்கின்றன. ஆகையினால் உலகத்தில் அவர்களின் உபகாரங்கள் எப்படியிருந்ததோ, அப்படியே அவர்களுடைய செல்வமும், அப்படியே அவர்கள் சந்தோஷமும் சுகமும் இருந்தன. நல்ல உபகாரங்கள் என்பவை, ஒரு மனிதனானவன் தனக்கேயும் தன் குடும்பத்துக்கும் அவசியமானவைகளை சம்பாதிப்பதிலும், தன் தேசத்திற்காகவும், ஏழையைவிட அநேக வழிகளில் ஒரு பாக்கியவான் நன்மை செய்யக்கூடிய தன்னுடைய அயலானுக்காகவும் செல்வத்தை நாடுதலிலும், அமைந்திருக்கின்றன; ஏனென்றால், சோம்பலான வாழ்வில், மனிதனில் நடப்பட்டிருக்கும் தீமையின் நிமித்தம், அவனுடைய சிந்தனைகள் தீமைக்கே ஓடுகிறபடியினால்,

நீங்கான வாழ்வாயிருக்கிற சோம்பலான வாழ்விலிருந்து அவன் இவ்விதமாக தன்னுடைய மனதை இழுத்துக்கொள்ளக் கூடும். இந்த உபகாரங்கள், அவைகளில் தெய்வம் இருக்கிற அளவு அநாவது மனிதனைவன் தெய்வத்தையும் சுவர்க்கத்தையும் எதிர் பார்த்து, இவைகளில் தன்னுடைய நன்மையை கண்டு, செல்வத்தில் துணையான நன்மையை மாத்திரம் பார்க்கிற அளவு நன்மையானவைகளாயிருக்கின்றன.

**362.** ஆனால், தெய்வத்தை நம்பாமல், சுவர்க்கத்திற்கும் திருச்சபைக்கும் சேர்ந்த விஷயங்களை தள்ளிவிட்ட பாக்கியவான்களின் கதி இதற்கு எதிரிடையாயிருக்கிறது. அழுக்கும், சஞ்சலமும், வறுமையும் இருக்கப்பட்ட நரகத்தில் அவர்கள் இருக்கிறார்கள். செல்வத்தை ஒரு முடிவாக நேசிக்கப்பட்டபோது, அது அவ்வித பொருள்களாக மாற்றப்படுகின்றன; மேலும், செல்வம் மாத்திரம் அல்ல, தாங்கள் விரும்புகிறபடி வாழவும், சந்தோஷங்களை அனுபவிக்கவும், நிறைவாயும் தன்னிஷ்டமாயும் மனது தீமையை செய்ய சமயம் உடைத்தாயிருக்கவும், அல்லது தாங்கள் அலட்சியம் பண்ணுகிற மற்றவர்களுக்கு மேலே எழவும், ஒரு அவாவாகவும் இருக்கிற அவர்களுடைய உபகாரங்களேகூட அம்மாதிரி மாற்றப்படுகின்றன. அவ்விதமான செல்வமும் அவ்விதமான உபகாரங்களும், தங்களிடத்தில் ஞான சம்பந்தமானது ஒன்றுமில்லாமல், உலக சம்பந்தமானது மாத்திரம் இருக்கிறபடியினால், மலமுடையதாகிறது; ஏனென்றால், செல்வத்திலும் அவைகளின் உபயோகத்திலும் ஒரு ஞானசம்பந்தமான கருத்து சரீரத்தில் ஒரு ஆன்மாவைப்போலவும், ஈரமான நிலத்தின்பேரில் படும் சுவர்க்கத்தின் வெளிச்சம்போலவும் இருக்கிறது. சுவர்க்கத்தின் வெளிச்சமில்லாவிட்டால், ஆன்மா இல்லாத சரீரம்போலவும், சுவர்க்கத்து வெளிச்சம்படாத ஈரநிலத்தைப்போலவும் அவைகள் அழுகிப்போகின்றன. செல்வமானது கெடுத்து, சுவர்க்கத்திலிருந்து இழுக்கப்பட்டவர்கள் இவர்கள்தான்.

**363.** ஒவ்வொரு மனிதனுடைய அரசாளும் ஆசை அல்லது அன்பு இறந்த பிறகு அவனுடன் நிற்கிறது; அது எக்காலத்திலும் வேரோடழிக்கப்படுகிறதில்லை; ஏனென்றால் மனிதனுடைய ஆவியானது அவனுடைய அன்பு இருக்கிறதுபோல முழுமையும் இருக்கிறது. ஒவ்வொரு ஆவியினுடையவும் தேவனுடையவும் சரீரம் அவனுடைய ஸ்தூலமானதும் பகுத்தறிவுள்ளதுமான மன

தைச்சேர்ந்த, அதன் உள்ளான உருவத்திற்கு முழுமையும் அன்னு வயப்படுகிற அவனுடைய அன்பின் புறம்பான உருவமாயிருக்கிறது என்பது, ஒரு மறைந்த உண்மையாயிருக்கிறது. அதனால்தான் ஆவிகள் அவைகளுடைய குணம் விஷயத்தில், அவைகளின் முகத்தினுலும், அபிநயங்களினுலும், பேச்சினுலும் அறிந்துகொள்ளப்படுகின்றன; மனிதனுனவன் தன் முகத்திலும், அபிநயத்திலும் பேச்சிலும், தனக்கு சொந்தமல்லாததை வேஷம்போட கற்றுக்கொள்ளாதிருந்தால், உலகத்திலிருக்கும்போது அவன் ஆவி விஷயத்தில்கூட. தெரிந்திருக்கப்படுவான். மனிதனுனவன் தன்னுடைய அரசாளும் ஆசை அல்லது அன்பு இருக்கிறபடி சதாகாலமும் இருக்கிருனென்று வெளிப்படையாகும். பதினேழு நூற்றுண்டுகளாக வாழ்ந்து, அக்காலத்து நூற்களிலிருந்து அவர்களுடைய சரித்திரங்கள் நன்ருய் தெரிந்திருக்கிற சிலருடன் பேச எனக்கு அருள் செய்யப்பட்டது; பூமியிலிருந்த காலத்தில் போல, அதே அன்பு அவர்களே அரசாளுகிறது என்று கண்டுபிடிக்கப்பட்டது. அதனுல் கூட, செல்வத்தின்பேரிலும் அதிலிருந்து வந்த உபயோகத்தின்பேரிலும் செலுத்தும் அன்பு, சதாகாலமும் ஒவ்வொருவனிடமும் இருக்கிறதென்றும், உலகத்தில் அடைந்ததுபோன்ற அதே குணம் அதற்கு இருக்கிறதென்றும், தெளிவாயிருக்கிறது; என்றுலும், நல்ல உபயோகங்களில் அவைகளே உபயோகப்படுத்தினவர்கள் விஷயத்தில், செல்வமானது அவைகளின் உபயோகங்களுக்கு தக்கபடி இன்பங்களாக திருப்பப்படுகின்றன என்கிறதும், கெட்ட உபயோகங்களில் அவைகளே உபயோகப்படுத்தினவர்கள் விஷயத்தில் செல்வமானது மலமாக திருப்பப்படுகிறதென்கிறதுமாகிய வித்தியாசமிருக்கிறது. கெட்டவர்கள் தீமையான உபயோகங்களின் பொருட்டு, உலகத்திலிருக்கும்போது செல்வத்துடன் தாங்கள் சந்தோஷப்பட்டது போலவே, அவ்வித ஊழல்களிடத்தில் சந்தோஷப்படுகிருர்கள். தங்களுடைய செல்வங்களே பிரதிஷ்டை செய்து வைத்த உபயோகங்களாயிருந்த மலமுள்ள சந்தோஷங்களும் குற்றங்களும், அதனுடன் உபயோகத்தை மதிக்காமல், செல்வத்தின்பேரில் கொள்ளும் ஆசையாயிருக்கிற பொருளாசையும், மலத்துக்கு அன்னுவயப்படுகிறபடியினுல், அவ்விதமானவர்கள் மலத்தில் சந்தோஷப்படுகிருர்கள். பரமார்த்த மலமும் வேறென்றுமில்லே.

**364.** ஏழைகள், தங்கள் தரித்திரத்தின் பொருட்டல்லாமல், தங்கள் வாழ்வின் பொருட்டு சுவர்க்கத்துக்கு வருகிறார்கள். ஒருவன் ஏழையாயிருந்தாலும் பணக்காரனாயிருந்தாலும், ஒவ்வொருவனும் வாழ்ந்த வாழ்க்கையானது அவனை தொடர்ந்து வருகிறது. மற்றவனைவிட ஒருவனுக்கு சிறப்பான இரக்கம் கிடையாது; நன்றாய் வாழ்ந்தவன் ஏற்றுக்கொள்ளப்படுகிறான், தீமையாய் வாழ்ந்தவன் நீக்கப்படுகிறான். அல்லாமலும், செல்வத்தைப்போல, தரித்திரமானது மனிதர்களைக் கெடுத்து சுவர்க்கத்திலிருந்து இழுக்கின்றது. தங்கள் கதி விஷயத்தில் திருப்தியடையாமல், அநேக பொருள்களைத் தேடி, செல்வமானது வரங்களென்று நம்புகிற அநேகர் ஏழைகளிலிருக்கிறார்கள். ஆகையினால், அவர்கள் அவைகளை அடையாவிட்டால்கோபப்பட்டு தெய்வ பரிபாலனத்தைப்பற்றி தீங்காய்நினைக்கிறார்கள். மற்றவர்கள்பேரில் அவர்கள் வைத்திருக்கும் நல்ல பொருள்களைப்பற்றி பொறாமைப்படுகிறார்கள்; சமயம் நேரிட்டபோது அவர்களை மோசம் செய்கிறார்கள்; மேலும் அவர்கள் இழிவான சந்தோஷங்களில்கூட அவ்வளவு வாழ்கிறார்கள். ஆனால், தங்களுக்கு வாய்த்த கதிவிஷயத்தில் திருப்தியடைந்து, தங்கள் வேலைகளில் பத்திரமாயும் முயர்ச்சியுள்ளவர்களாயுமிருந்து, சோம்புத்தனத்தைவிட உழைப்பை அதிகமாய் நேசித்து, உண்மையாயும் விசுவாசத்துடனும் செயல்பட்டு, அதே காலத்தில் கிருஸ்துவ வாழ்க்கையை நடத்துகிற ஏழைகள் விஷயத்தில் விஷயம் வேறுமாதிரி. உலகத்தில் வாழ்ந்தபோது கடவுளை நம்பி, தங்களுடைய தொழில்களில் நியாயமானதையும் சரியானதையும் செய்துவந்த, கிருஷிகர்களாகவும் சாதாரண ஜனங்களாகவும், இருந்தவர்களுடன் நான் சில சமயங்களில் பேசியிருக்கிறேன். தாங்கள் உண்மையைத் தெரிந்துகொள்ளும் ஆசையிலிருந்தபடியினாலும், உலகத்தில் விசுவாசத்தைப்பற்றி அதிகமாயும், ஆனால், இதர வாழ்வில் தருமத்தைப்பற்றி அதிகமாயும் தாங்கள் கேட்டிருப்பதினாலும், அவர்கள் தருமத்தினுடையவும் விசுவாசத்தினுடையவும் சுபாவத்தைப்பற்றி அவர்கள் விசாரித்தார்கள். ஆகையினால், தருமமானது வாழ்க்கைக்கு சம்பந்தப்பட்ட எல்லாமாயிருக்கிறதென்றும், விசுவாசமானது கொள்கைக்கு சம்பந்தப்பட்ட எல்லாமாயிருக்கிறதென்றும், ஆதலால், தருமமென்பது ஒவ்வொரு தொழிலிலும் நியாயமானதையும் சரியானதையும் இச்சித்து செய்தலென்றும், ஆனால் விசுவாசமென்பது நியாயமாயும் சரியாயும் நினைத்தலென்றும், விசுவாசமும்

தருமமும் கொள்கையும், அதை அனுசரித்த வாழ்வும்போலவும், அல்லது சிந்தனையும் சித்தம்போலவும், தாங்களே சேர்த்துக் கொள்ளுகின்றன வென்றும், மேலும், விசுவாசமானது, நியாயமாகவும் சரியாகவும் ஒரு மனிதன் நினைப்பதை அவன் இச்சித்து செய்கிறபோது தருமமாகிறதென்றும், அப்பொழுது அவைகள் இரண்டல்லாமல் ஒன்று என்றும், அவர்களுக்கு சொல்லப்பட்டது. தாங்கள் உலகத்திலிருந்தபோது, நம்புதல் என்பது வாழ்தலைவிட வேறு ஒன்றாய் எப்படி இருக்கக்கூடுமென்று, கிரகிக்க முடியவில்லை என்று சொல்லி இதை அவர்கள் நன்றாய் அறிந்துகொண்டு சந்தோஷப்பட்டார்கள்.

**365.** இவைகளிலிருந்து, ஏழைகளைப்போல பாக்கியவான்களும் சுவர்க்கத்துக்கு வருகிறார்களென்றும், ஒரு வகையார் மற்ற வகையாரைப்போல் சுலபமாக வருகிறார்களென்றும் விசதமாகலாம். பணக்காரர்களைப்பற்றியும் ஏழைகளைப்பற்றியும், பேசும் இடத்தில் வேதமானது சரியாய் அறிந்துகொள்ளப்படாத படியினால், ஏழைகள் சுலபமாயும், பணக்காரர்கள் கஷ்டத்துடனும் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்களென்று, நம்பப்படுகிறது. வேதத்தில் பணக்காரர்கள் என்பதினால், ஞானார்த்தத்தில், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அறிவுகளினால் வளமுள்ளவர்களும், இவ்விதமாக, வேதம் இருக்கப்பட்ட திருச்சபைக்குள் இருக்கிறவர்களும், ஏழைகள் என்பதினால், அந்த அறிவுகள் இல்லாவிட்டாலும், அவைகள் பேரில் மனங்கொண்டவர்களும், வேதம் இல்லாத திருச்சபைக்கு வெளியே இருப்பவர்களும் கருதப்படுகின்றன. சிவப்பானதும் நேர்த்தியானதுமான சணனூல் ஆடைகளால் உடுத்தப்பட்டு, நரகத்தில் தள்ளப்பட்ட பணக்காரன் என்பதினால், வேதத்தை அடைந்து, அதிலிருந்து நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அறிவுகளால் வளமடைந்தபடியினால், செல்வமுள்ளதென்று சொல்லப்பட்ட யூதர் வமிசம் கருதப்படுகிறது. சிவப்பான ஆடைகள் என்பதினால், நன்மையினுடைய அறிவுகளும், நேர்த்தியான சணனூல் ஆடைகள் என்பதினால், உண்மையின் அறிவுகளும் அர்த்தம் கொள்ளப்படுகின்றன. ஆனால், தன் வாசலண்டை இருந்துகொண்டு, பணக்காரனுடையமேஜையிலிருந்து விழுந்த சேடங்களால் நிரப்பப்பட விரும்பி, தேவர்களால் சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப்பட்ட ஏழை என்பதினால், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அறிவுகள் இல்லாவிட்டாலும்

அவைகள் பேரில் மனம் கொண்ட (லூக்கா. xiv. 19 முதல் 31 வரையில்) கிருஸ்துவர் அல்லாத மற்றவர்கள் கருதப்படு கிறார்கள். ஒரு பெரிய இராப்போஜனத்துக்கு கூப்பிடப்பட்டு சாக்கு போக்கு சொல்லி நின்றுவிட்ட பணக்காரர்கள் யூதர்ஜாதி என்று அருத்தம் கொள்ளுகிறது; அவர்களுக்கு பதிலாக கொண்டுவரப்பட்ட ஏழைகள் என்பதினால் திருச் சபைக்கு வெளியுள்ள கிருஸ்துவரல்லாதவர்கள் அருத்தம் கொள்ளப்படுகிறது (லூக. xvi. 16 முதல் 24 வரையில்). "ஐசு வரியவான் தேவனுடைய ராஜ்பத்தில் பிரவேசிப்பதைப் பார்க் கிலும், ஒட்டகமானது ஊசியின் காதிலே நுழைவது எளிதா யிருக்குமென்று உங்களுக்கு சொல்லுகிறேன்" என்று ஆண்டவர் சொல்லிய (மத்தே. xix. 24) ஐசுவரியவான் என்பதினால், யார் கருதப்படுகிறார்களென்பது இப்பொழுது விவரிக்கப்படும். இந்த வாக்கியத்தில், ஐசுவரியவான் என்பது ஸ்தூலார்த்தத்திலும் ஞானார்த்தத்திலும் செல்வமுள்ளவர்களை காண்பிக்கிறது. ஸ்தூல அர்த்தத்தில், ஐசுவரியவான்கள் என்பது செல்வம் மிகுந்து, அதின் பேரில் மனதை செலுத்துகிறவர்களா யிருக்கிறார்கள்; ஆனால், ஞானார்த்தத்தில், ஐசுவரியவான்கள் என்பது, ஞான செல்வங்களா யிருக்கிற அறிவுகளிலும் படிப்புகளிலும் மிகுந்து, அவைகள் மூல மாய் தங்களுடைய சொந்த விவேகத்திலிருந்து சுவர்க்கத்தி னுடையவும் திருச்சபையினுடையவும் விஷயங்களில் தாங்களே பிரவேசிக்க விரும்புகிறவர்களா யிருக்கிறார்கள். இது தெய்வீக ஒழுங்குக்கு எதிரிடையா யிருக்கிறது; ஆகையினால் ஒரு ஒட்டகமானது ஒரு ஊசியின் காதின் மூலமாய் நுழைவது எளிதாயிருக்குமென்று சொல்லப்படுகிறது; ஏனென்றால், ஒரு ஒட்டகம் என்பது ஞானார்த்தத்தில், படிப்பினுடையவும் அறிவி னுடையவும் மனோசக்தியை பொதுவாகவும், ஊசியின் காது என்பது ஞானசம்பந்தமான உண்மையையும் அருத்தம் கொள்ளு கிறது. ஒரு ஒட்டகமும், ஊசியின் காதும் இந்த அர்த்தம் கொள்ளுகிறதென்று இக்காலத்தில் தெரிந்திருக்கப்படவில்லை. ஏனென்றால், இதுவரையில், வேதத்தின் சொல்லார்த்தத்தில் உரைக்கப்பட்ட பொருள்களால், ஞானார்த்தத்தில் கருதப்படுவதை கற்பிக்கிற அந்த அறிவானது, திறக்கப்படவில்லை. வேதத்தின் ஒவ் வொரு விசேஷ சங்கதியிலும், ஒரு ஞானார்த்தமும், அதனுடன் கூட ஒரு ஸ்தூலார்த்தமும் இருக்கிறது; ஏனென்றால், வேதமானது,

நேரான சேர்க்கை நின்றுவிட்ட பிறகு, உலகத்துடன் சுவர்க்கத்தினுடையவும், மனிதர்களுடன் தேவர்களுடையவும், சேர்க்கை இருக்கும் பொருட்டு, சூக்கும பொருள்களுடன் ஸ்தூலப் பொருள்களின் சுத்தமான அன்னுவயங்களால் எழுதப்பட்டது. அதனால் தான் மேல் கூறிய வாக்கியத்தில் ஐசுவரிய வான் என்பதினால் யார் குறிப்பாய் கருதப்படுகிறதென்பது விசதமாகிறது. வேதத்தில் ஐசுவரியவான்கள் என்பது, ஞானார்த்தத்தில், உண்மையினுடையவும் நன்மையினுடையவும் அறிவுகளில் இருக்கப்பட்டவர்களேயும், ஐசுவரியம் என்பது ஞானசெல்வமாய்கூட இருக்கிற அறிவுகளேயேயும் காண்பிக்கிறதென்பது, அநேக வாக்கியங்களிலிருந்து விசதமாகிறது (ஏசா. x. 13, 14: xxx. 6, 7; xlv. 3. ஏரே. xvii. 3; xlviii. 7; i. 36, 37; li. 13; தானி. v. 2, 3, 4; ஏசேக். xxvi 7, 12; xxvii. 1 முதல் முடிவுவரையில்; சகரி. ix. 3, 4; சங்கீ. xlv. 13; ஓசி. xii 8; வெளி. iii. 17, 18; லூக். xiv. 33. இதர இடங்களிலும் போல்). ஞானார்த்தத்தில் ஏழைகள் என்பது, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அறிவில்லாமல் போனாலும், அதை இச்சிக்கிறவர்களேக் காண்பிக்கிறது என்பதற்கு வாக்கியங்கள் (மத்தே. xi. 5; லூக். vi. 20; xiv. 21; ஏசா. xiv. 30; xxix. 19; xli. 17; செப். iii. 12, 13). இந்த வாக்கியங்கள் எல்லாம் தெய்வலோக இரகசியங்கள் எனும் நூலில் (நெ. 10227) ஞானார்த்தத்தின்படி விவரிக்கப்படுவது பார்க்கப்படலாம்.

## XL

## சுவர்க்கத்தில் விவாகங்கள்

**366**. மானிட வமிசத்திலிருந்து சுவர்க்கம் ஏற்படுத்தப் பட்டபடியினால், சுவர்க்கத்தின் தேவர்கள், ஆண் பெண் என்கிற இருவகையான இனங்களாக இருக்கிறார்கள்; சிருஷ்டி முதல் மனுஷி மனுஷனுக்கும், மனிதன் மனுஷிக்கும், இவ்விதமாக ஒவ்வொருவரும் மற்றொருவருக்கும், இருக்கும்படியாக சிருஷ்டி முதல் நியமிக்கப்பட்டிருக்கிறபடியினாலும், இருவகையிலும் இந்த அன்பு இயல்பாக இருக்கிறபடியினாலும், பூமியில்போல சுவர்க்கத்திலும் விவாகங்கள் இருக்கின்றனவென்று தொடருகிறது; ஆனால், சுவர்க்கத்திலிருக்கும் விவாகங்கள், பூமியின்பேரில் நடத்தும் விவாகங்களிலிருந்து வித்தியாசப்படுகின்றன. சுவர்க்கத்தில் நடக்கும் விவாகங்களின் சுபாவமும் குணமும் பூமியில் நடக்கும் விவாகங்களிலிருந்து எதில் அவைகள் வித்தியாசப்படுகின்றனவென்பதும், எதில் ஒத்துப்போகின்றனவென்பதும், பின் வருவதில் சொல்லப் படவேண்டும்.

**367**. சுவர்க்கங்களில் விவாகம் என்பது இருவர் ஒருமனதாக சேருதலாயிருக்கிறது. இந்த சேர்க்கை என்னவென்பது முதலில் விவரிக்கப்படவேண்டும். ஒன்று புத்தி என்றும், மற்றது சித்தம் என்றும் சொல்லப்பட்ட இரண்டுபாகங்களாக மனதானது அமைந்திருக்கிறது. இந்த இரண்டு பாகங்களும் ஒன்றாய்செயல்படும் போது அப்பொழுது அவைகள் ஒருமனது என்று சொல்லப்படுகின்றன; சுவர்க்கத்தில், புத்தி என்று சொல்லப்பட்ட மனிதன் ஓர் பாகத்தை கணவன் நடிக்கிறான்; மனைவி சித்தம் என்று சொல்லப்பட்டதை நடிக்கிறாள். உள்பாகங்களுக்கு சேர்ந்த இந்த சேர்க்கையானது, சரீரத்துக்கு சேர்ந்த தாழ்ந்தவைகளில் இறங்கும்போது, அது அன்புபோல பார்க்கப்பட்டு உணரப்படுகிறது. இந்த அன்பானது விவாக அன்பாயிருக்கிறது; ஆகவே, விவாக அன்பானது, இருவர் ஒரு மனதாக சேர்வதினால் உற்பத்தியாகிறது; இதை சுவர்க்கத்தில் சேர்ந்து வாழ்தல் என்று சொல்லப்படுகிறது; மேலும், அவ்விதமானவர்களைப்பற்றி, அவர்கள் இருவரல்லாமல் ஒருவர்தான் என்று சொல்லப்படுகிறது; ஆகையினால் சுவர்க்கத்தில், இரண்டு

விவாக கூட்டாளிகள், இருவர் என்று அல்லாமல், ஒரு தேவனாக சொல்லப்படுகிறது.

**368.** மனதுக்கு சேர்ந்த தங்களுடைய உள்ளான மூலாங்கத்தில் கணவனுடையவும் மனைவியினுடையவும் அவ்வித சேர்க்கை கூட இருக்கிறதென்பது, சிருட்டியிலேயே இருந்து விளைகிறது; ஏனென்றால், மனிதனானவன், பகுத்தறிவுள்ளவனாக இருக்கவும், இவ்விதமாக புத்தியிலிருந்து நினைக்கவும் பிறந்திருக்கிறான்; ஆனால் மனுஷியோ, அன்புடனிருக்கவும், இவ்விதமாக சித்தத்திலிருந்து நினைக்கவும் பிறந்திருக்கிறாள்; ஒவ்வொருவருடைய மனவாஞ்சையிலிருந்தும் அல்லது இயற்கையான குணத்திலிருந்தும், அவர்களுடைய உருவத்திலிருந்தும்கூட இதுகூட விசதமாகிறது. மனிதன் பகுத்தறிதலிலிருந்தும், ஆனால் மனுஷி ஆசையிலிருந்தும் செயல்படுகிறதினால், அவர்கள் குணத்திலிருந்து என்று சொல்லப்பட்டது; மனிதனுக்கு கரடானதும், குறைந்த அழகுள்ளதுமான முகமும், ஆழ்ந்த தொனியும், அதிகவலிய சரீரமும் இருக்கிறபடியினாலும், அப்படியிருக்கையில் மனுஷிக்கு, மிக மெல்லியதும், அதிக அழகானதுமான முகமும், அதிக மிருதுவான தொனியும், அதிக மென்மையான சரீரமும் இருக்கிறபடியினாலும், உருவத்திலிருந்து என்று சொல்லப்பட்டது. புத்திக்கும் சித்தத்திற்கும், அல்லது சிந்தனைக்கும் ஆசைக்கும், அதனுடன்கூட உண்மைக்கும் நன்மைக்கும், விசுவாசத்திற்கும் அன்பிற்கும், அவ்விதமான வித்தியாசமிருக்கிறது; ஏனென்றால், உண்மையும் விசுவாசமும் புத்திக்கும் நன்மையும் அன்பும் சித்தத்திற்கும், சேர்ந்தவைகள். அதனால்தான், வேதத்தில், வாலிபன் என்பதினாலும் மனிதன் என்பதினாலும், ஞானார்த்தத்தில், உண்மையை அறிந்துகொள்ளுதலும், ஒரு கன்னிகையும் மனுஷியும் என்பதினால், நன்மையினிடத்து ஆசை கொள்ளுதலும், கருதப்படுகிறது; அதனுடன்கூட திருச்சபையானது, நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும், கொள்ளும் அதன் ஆசையிலிருந்து ஒரு மனுஷி என்றும், ஒரு கன்னிகை என்றும் சொல்லப்படுகிறதும், நன்மையினிடத்து கொள்ளும், ஆசையிலிருக்கப்பட்டவர்கள் எல்லாரும் கன்னிகை என்று சொல்லப்படுகிறதும், அதனால்தான் (வெளி: xiv. 4).

**369.** மனிதனாயிருந்தாலும் மனுஷியாயிருந்தாலும் ஒவ்வொருவரும், புத்தியும் சித்தமும் உடைத்தாயிருக்கிறார்கள்; ஆனால், மனிதன் விஷயத்தில் புத்தியும், மனுஷி விஷயத்தில் சித்த

மும், தலைமையாயிருக்கிறது; ஒருவருடைய நடத்தை, எது தலைமையா யிருக்கிறதோ அதன்படி இருக்கிறது. சுவர்க்கங்களில் நடக்கும் விவாகங்களில் எந்த தலைமையும் கிடையாது; ஏனென்றால், மனைவியின் சித்தம் கணவனுடைய சித்தமாகவும், கணவனுடைய புத்தி, மனைவியினுடையதாகவும் இருக்கிறது; ஏனென்றால், ஒவ்வொருவரும் மற்றவர் இச்சித்து நினைக்கிறதுபோல் இச்சித்து நினைக்க விரும்புகிறார்கள்; இவ்விதமாக, அவர்கள் அன்னியோன்னியமாயும், மாறி மாறியும் இச்சித்து நினைக்கிறார்கள். இவ்விதமாக அவர்கள் ஒருவராக சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். இந்த சேர்க்கை நிஜமான சேர்க்கையா யிருக்கிறது; ஏனென்றால், மனைவியின் சித்தம், கணவனுடைய புத்தியிலும், கணவனுடைய புத்தி மனைவியின் சித்தத்திலும், முக்கியமாய் இது அவர்கள் ஒருவரை ஒருவர் நேரில் பார்க்கும்போது பிரவேசிக்கிறது; ஏனென்றால், மேலே அடிக்கடி சொன்னபடி, ஒருவரை ஒருவர் நேசிப்பதால், கணவனுக்கும் மனைவிக்கும் முக்கியமாயும், மற்றவர்களுக்குள்ளும் சுவர்க்கத்தில், சிந்தனைகளும் ஆசைகளும் போக்குவரவு செய்கின்றன. விவாகத்தை ஏற்படுத்தி, சுவர்க்கங்களில் விவாக அன்பை உற்பத்தி செய்கிற, மனதுகளின் சேர்க்கையினுடைய சுபாவம் என்னவென்பது, அதாவது ஒருவன் தனக்கு சொந்தமானதெல்லாம் மற்றவருடையதாயிருத்தலும், இதுவும் அன்னியோன்னியமாகயிருக்க விரும்புகிறனென்பதும் இவைகளிலிருந்து தெளிவாகிறது.

**370.** இரண்டு விவாகமானவர்கள் இவ்வித சேர்க்கையில் இருக்கிற அளவு, அவர்கள் விவாக அன்பிலும், அதே காலத்தில், விவேகத்திலும், ஞானத்திலும், சுகத்திலும் இருக்கிறார்களென்று தேவர்களால் எனக்கு சொல்லப்பட்டது; ஏனென்றால், எல்லா விவேகமும், ஞானமும், சுகமும் உற்பத்தியாகிற தெய்வீக நன்மையும் தெய்வீக உண்மையும் விவாக அன்பில் முக்கியமாய் பாய்கின்றன. ஆதலால், விவாக அன்பு அதே காலத்தில், உண்மையினுடையவும் நன்மையினுடையவும் விவாகமாயிருப்பதினால், அது தெய்வம் பாய்கிற அதே சமதளமாயிருக்கிறது; ஏனென்றால், புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் சேர்க்கை யிருக்கிறது போல, உண்மையினுடையவும் நன்மையினுடையவும் சேர்க்கையும் அதேமாதிரி யிருக்கிறது; ஏனென்றால், புத்தியானது தெய்வீக உண்மையை பெற்றுக்கொண்டு, உண்மைகளால்கூட உருவாக்கப்படுகிறது. மேலும், சித்தமானது தெய்வீக நன்மையை பெற்றுக்

கொண்டு, நன்மைகளால்கூட உருவாக்கப்படுகிறது. ஒரு மனிதன் இச்சிப்பது, அவனுக்கு நல்லதாயிருக்கிறது; அவன் அறிந்து கொள்வது, அவனுக்கு உண்மையாயிருக்கிறது. ஆகையினால், புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் இணைவு என்றுவது, உண்மையினுடையவும் நன்மையினுடையவும் சேர்க்கை என்றுவது, எப்படி சொன்னாலும், ஒன்றேயாகிறது. உண்மையினுடையவும் நன்மையினுடையவும் சேர்க்கை, ஒரு தேவனை உண்டுபண்ணுகிறது, மேலும் அது அவனுடைய விவேகத்தையும் ஞானத்தையும், சுகத்தையும் உண்டாக்குகிறது. ஏனென்றால், ஒரு தேவனுடைய குணமானது, அவனிலிருக்கும் நன்மை உண்மையுடனும், உண்மை நன்மையுடனும் சேர்ந்திருக்கிற அளவின்பேரில் சார்ந்திருக்கிறது; அல்லது அதேவாகிறபடி, அவனுடைய அன்பானது விசுவாசத்துடனும், விசுவாசம் அன்புடனும் சேர்க்கப்பட்டிருக்கிற அளவின் பேரில் சார்ந்திருக்கிறது.

**371**. ஆண்டவரிடமிருந்து வெளிபடும் தெய்வம், விவாக அன்பில் முக்கியமாய் பாய்கிறது; ஏனென்றால், விவாக அன்பு நன்மையினுடையவும் உண்மையினுடைவும் இணைவிலிருந்து கீழே இறங்குகிறது; ஏனென்றால், இப்பொழுது தான் கூறியபடி, புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் சேர்க்கை என்றாலும், அல்லது நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கை என்றாலும், அதேவாகிறது. நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கை, சுவர்க்கத்திலும் பூமியின்பேரிலும் இருக்கப்பட்டவர்கள் எல்லாரிடத்திலும் காண்பிக்கப்படும் ஆண்டவருடைய தெய்வீக அன்பிலிருந்து அதன் உற்பத்தி ஏற்படுகிறது. தெய்வீக அன்பிலிருந்து தெய்வீக நன்மை புறப்படுகிறது, தெய்வீக நன்மையானது, தேவர்களாலும் மனிதர்களாலும், தெய்வீக உண்மைகளில் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன; ஏனென்றால், நன்மையினுடைய ஒரே கொள்கலம் உண்மையாயிருக்கிறது; ஆகையினால், ஆண்டவரிடமிருந்தும் சுவர்க்கத்திலிருந்தும், உண்மைகளில் இல்லாத எவனும் எதுவும் ஏற்றுக்கொள்ள முடியாது. ஆகையினால், மனிதனிடத்தில் உண்மைகள் நன்மையுடன் எவ்வளவு சேர்க்கப்பட்டிருக்கிறதோ, அவ்வளவு அவன் ஆண்டவருடனும் சுவர்க்கத்துடனும் சேர்க்கப்படுகிறான். இதுதான் விவாக அன்பின்மூலம்; ஆகையினால், அந்த அன்பானது, தெய்வீக பெருக்கு பாய்கிற சமதளமாகவே இருக்கிறது. நன்மையினுடையவும் உண்மையி

னுடையவும் சேர்க்கை, சுவர்க்கத்தின் விவாகமென்று சொல்லப்படுகிறதும், வேதத்தில் சுவர்க்கம் என்பது, ஒரு விவாகத்திற்கு ஒப்பிடப்பட்டு, ஒரு விவாகம் என்றுகூட சொல்லப்படுகிறதும், ஆண்டவர் மணவாளன் என்றும், கணவனென்றும், சுவர்க்கமென்பதும் திருச்சபை என்பதும், மணவாளி என்றும் மனைவி என்றுகூட சொல்லப்படுகிறதும், இதனால்தான்.

372. ஒரு தேவனிடத்திலும் அல்லது ஒரு மனிதனிடத்திலும் சேர்க்கப்பட்ட நன்மையும் உண்மையும் இரண்டல்லாமல் ஒன்றாகிறது; ஏனென்றால், அக்காலத்தில் நன்மை உண்மைக்கும், உண்மை நன்மைக்கும் சேர்ந்திருக்கிறது. இந்த சேர்க்கையானது, மனிதனானவன் தான் இச்சிக்கிறதை நினைத்து, தான் நினைக்கிறதை இச்சிக்கும்போது, நிலைத்திருக்கிறதுபோல, இந்தச் சேர்க்கையிருக்கிறது; அப்பொழுது, சிந்தனையும் சித்தமும் ஒன்றாகிறது, அதாவது ஒரு மனதாகிறது; ஏனென்றால், சிந்தனையானது அவனுடைய சித்தம் விரும்புகிறதை உருவாக்குகிறது அல்லது உருவத்தில் காண்பிக்கிறது; சித்தமானது அதற்கு சந்தோஷத்தை கொடுக்கிறது. அதனால்கூட சுவர்க்கத்தில் இரண்டு விவாகம் செய்துகொண்ட இருவர், இருவர் என்று சொல்லப்படாமல், ஒரு தேவனென்று சொல்லப்படுகிறது. இதுகூட பின்வரும் ஆண்டவரின் வார்த்தைகளால் கருதப்படுகிறது: "ஆதியிலே, மனுஷரை உண்டாக்கினவர் அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார் என்பதையும், இதினிமித்தம் புருஷனானவன் தன் தகப்பனையும் தாயையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்திருப்பான்; அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று அவர் சொன்னதையும், நீங்கள் வாசிக்கவில்லையா? இப்படி இருக்கிறபடியினால், அவர்கள் இருவராயிராமல், ஒரே மாம்சமாயிருக்கிறார்கள்; ஆகையால், தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்காதிருக்கக் கடவன் என்றார்......வரம் பெற்றவர்களே தவிர மற்றவர்கள் இந்த வசனத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்" (மத்தே. xix. 4, 5, 6, 11; மார். x. 6, 7, 8, 9; ஆதி. ii. 24). இங்கே தேவர்கள் இருக்கும் சுவர்க்கத்தின் விவாகத்தையும், அதே காலத்தில் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் விவாகத்தையும் விவரிக்கப்பட்டிருக்கிறது; கடவுள் சேர்த்ததை மனிதன் போட்டு விடாதிருத்தல் என்பதினால், நன்மையானது உண்மையிலிருந்து பிரிக்கப்படக் கூடாது என்று அருத்தம் கொள்ளப்படுகிறது

**373.** இவைகளி லெல்லாமிருந்து உண்மையான விவாக மன்பு எங்கிருந்து தொடங்குகிற தென்று, அதாவது, அது முதலில், விவாகம் செய்துகொள்ள இருப்பவர்கள் மனதில் உருவாகி, மன்மைப்போல பார்க்கப்பட்டு உணரப்படுகிற சரீரத்திற்குள் அதிலிருந்து இறங்குகிறதென்று இப்பொழுது அறிந்துகொள்ளலாம். ஏனென்றால், சரீரத்தில் உணரப்பட்டு பார்க்கப்படுகிறதெல்லாம், மனிதனுடைய சூக்கும சுபாவத்திலிருந்து உண்டாகிறது; ஏனென்றால், அது புத்தியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் வருகிறது. புத்தியும் சித்தமும் சூக்கும மனிதனை உண்டாக்குகிறது. சூக்கும மனிதனிடத்திலிருந்து சரீரத்திற்குள் இறங்குவது எல்லாம், அங்கே வேறு தோற்றத்தில் தானே தெரியக் காட்டுகிறது: ஆனால் அப்படியிருந்தாலும், அன்னுவயங்களைக் குறித்து சொல்லும் இரண்டு அத்தியாயங்களில் சொல்லப்பட்டு காண்பிக்கப்பட்டதிலிருந்து தெளிவாகிறபடி, ஆன்மாவும் சரீரமும், காரணமும் காரியமும் போல், அது அதே மாதிரியாகவும், அதை ஒத்ததாகவுமிருக்கிறது.

**374.** ஒரு தேவன், உண்மையான அன்பும் அதன் சுவர்க்கத்து சந்தோஷமும் இருவரில் சேர்க்கப்பட்டிருக்கிற தெய்வீக நன்மையாகவும் தெய்வீக உண்மையாகவும் இருக்கிற சுவர்க்கங்களிலிருக்கும் ஆண்டவரின் தேவத்துவமென்றும், அப்படியிருந்தாலும், அவைகள் இரண்டல்லாமல் ஒன்றைப்போல் இருக்கின்றனவென்றும் விவரித்துச் சொல்லுவதை நான் ஒரு சமயத்தில் கேட்டிருக்கிறேன். ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த நன்மையாகவும் தன்னுடைய சொந்த உண்மையாகவும், மனது விஷயத்திலும் சரீர விஷயத்திலும் இருக்கிறபடியினால், இரண்டு விவாகமான தோழர்கள் சுவர்க்கத்தில், உருவத்தில் அந்த அன்பாயிருக்கிறார்கள் என்று அந்த தேவன் சொன்னான்; ஏனென்றால், சரீரமானது அதன் சாயலில் உருவாக்கப்பட்டபடியினால், அது மனதின் பிரதிமையாயிருக்கிறது. இதிலிருந்து, உண்மையான விவாக அன்பிலிருக்கப்பட்டவர்களாகிய இருவரில் தெய்வமானது சாயல் காட்டப்படுகிறதென்று அந்த தேவன் தீர்மானத்துக்கு வந்தான்; தெய்வமானது அம்மாதிரி சாயல் காட்டப்படுகிறபடியினால், சுவர்க்கமும் அம்மாதிரியே யிருக்கிறது; ஏனென்றால், முழு சுவர்க்கமும், ஆண்டவரிடமிருந்து வெளிவரும் தெய்வீக நன்மையாகவும் தெய்வீக உண்மையாகவும் இருக்கிறது; மேலும், இந்த காரணத்துக்காகத்தான் சுவர்க்கத்திலிருக்கும் எல்லா

பொருள்களும், கணக்கிடக் கூடாதபடி அதிக வரங்களுடனும் சந்தோஷங்களுடனும் விவாக அன்பின்பேரில் எழுதப்பட்டிருக்கின்றன. பத்தாயிரங்கள் பத்தாயிரங்களை அகப்படுத்திய ஒரு வார்த்தையினால் அவன் அந்த எண்ணை வெளிப்படுத்தினான். திருச்சபையானது, பூமியின் பேரில் ஆண்டவருடைய சுவர்க்கமாயிருந்தபோதிலும், சுவர்க்கமானது நன்மையினுடையவும் உண்மையினுடையவும் விவாகமாயிருந்தபோதிலும், திருச்சபையைச் சேர்ந்த மனிதனுக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை என்று அவன் ஆச்சரியப்பட்டான். திருச்சபைக்கு வெளியைவிட, அதற்குள்ளே அதிக விபசாரங்கள் செய்யப்பட்டு ஸ்திரப்படுத்தப்படுகிறதென்றுங்கூட, நினைக்க தான் பிரமித்ததாக அவன் சொன்னான்; இந்த இன்பமானது தன்னில்தானே, ஞானார்த்தத்தில், அதனால் சூக்கும உலகத்தில், தீமையுடன் சேர்க்கப்பட்ட பொய்யினிடத்து கொள்ளும் அன்பின் இன்பத்தைத் தவிர வேறொன்றுமில்லை. இந்த இன்பமானது நரகத்துக்கு அடுத்ததாயிருக்கிறது; ஏனென்றால், நன்மையுடன் சேர்க்கப்பட்ட உண்மையினிடத்து கொள்ளும் அன்பின் சந்தோஷமாயிருக்கிற சுவர்க்கத்து இன்பத்துக்கு அது முழுமையும் எதிரிடையாயிருக்கிறது.

**375.** ஒருவரை ஒருவர் நேசிக்கிற இரண்டு விவாகமான தோழர்கள், உள்ளுக்குள்ளாய் சேர்க்கப்பட்டிருக்கிறார்களென்றும், விவாகத்தின் சாரம் ஆன்மாக்களின் அல்லது மனங்களின் ஐக்கியமென்றும் ஒவ்வொருவனுக்கும் தெரியும். ஆன்மாக்களோ மனங்களோ தங்களுக்குள்ளேயே எப்படியிருக்கிறதோ, அப்படியே ஐக்கியமும், அதனுடன்கூட அவைகளுக்குள்ளிருக்கிற அன்பும் இருக்கிறதென்று, இதிலிருந்து தெரிந்துகொள்ளப்படலாம். மனதானது உண்மைகளாலும் நன்மைகளாலும் முழுமையும் உருவாக்கப்படுகிறது; ஏனென்றால், பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் நன்மைக்கும் உண்மைக்கும், அதனுடன்கூட அவைகளின் சேர்க்கைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது; ஆகவே, மனங்களின் ஐக்கியம், அவைகள் உண்டாக்கப்படுகிற உண்மைகளையும் நன்மைகளையும்போல அவ்விதமாக சரிவர இருக்கிறது; ஆதலால், உண்மையான உண்மைகளாலும் நன்மைகளாலும் உண்டாக்கப்பட்ட மனங்களின் ஐக்கியம், மிகவும் சம்பூரணமானதாயிருக்கிறது நன்மையும் உண்மையும்விட வேறு எந்த இரண்டு பொருளும் ஒன்றை ஒன்று அதிக அன்னியோன்னியமாய் நேசிக்கிறதில்லை

என்று தெரிந்திருக்கப் படவேண்டும்; ஆகையினால் அந்த அன்பி லிருந்து உண்மையான விவாக அன்பு இறங்குகிறது. பொய்யும் தீமையுங்கூட ஒன்றை ஒன்று நேசிக்கிறது, ஆனால் இந்த அன்பா னதுபின்னிட்டு நரகமாக மாற்றப்படுகிறது.

**376**. விவாக அன்பின் உற்பத்தியைப்பற்றி இப்பொழுது கூறப்பட்டதிலிருந்து, அந்த அன்பில் யார் இருக்கிறார்களென்றும் யார் இல்லை என்றும், அநுமானிக்கலாம்; அதாவது, தெய்வீக உண்மைகளிலிருந்து தெய்வீக நன்மையில் இருக்கிறவர்கள், விவாக அன்பிலிருக்கிறார்களென்றும், விவாக அன்பானது, நன்மைக்கு சேர்க்கப்பட்டிருக்கிற உண்மைகள் எவ்வளவு தூரம் அதிக உண் மையாயிருக்கிறதோ அவ்வளவு தூரம் சரியாய் உண்மையாயிருக் கிறதென்றும், அநுமானிக்கலாம். உண்மைகளுடன் சேர்க்கப்பட் டிருக்கிற எல்லா நன்மையும், ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், எவனும் தான் ஆண்டவரையும் அவருடைய தெய்வீகத்தையும் ஒத்துக்கொண்டாலொழிய, உண்மையான விவாக அன்பில் இருக்க முடியாது என்று ஏற்படுகிறது; ஏனென்றால், அப்படி ஒத்துக் கொள்ளாவிட்டால், ஆண்டவர் உள்ளே பாய்ந்து, மனிதனுக்குள் ளிருக்கும் உண்மைகளுடன் சேர்க்கப்பட முடியாது.

**377**. ஆகவே, பொய்களில் இருக்கப்பட்டவர்கள், முக்கிய மாய் தீமையிலிருந்து வந்த பொய்களிலிருக்கப்பட்டவர்கள், விவாக அன்பில் இருக்கிறதில்லை என்பது விசதமாகிறது. தீமையிலும், அதி லிருந்து பொய்களிலும் இருக்கப்பட்டவர்கள் விஷயத்தில், மன தின் உள்ளானவைகள்கூட மூடப்படுகிறது; ஆகையினால், விவாக அன்பின் மூலம் எதுவும் அங்கே இருக்கமுடியாது; ஆனால், உள் ளிருக்கும் மனிதனுக்கு,வேறான வெளியேயிருக்கும் அல்லது ஸ்தூல மான மனிதனிலிருக்கும் உள்ளானவைகளுக்கு, அடியில் பொய்யி னுடையவும் தீமையினுடையவும் சேர்க்கையிருக்கிறது; அந்த இணைவு நரகத்துக்கு அடுத்த விவாகம் என்று சொல்லப்படுகிறது. நரகத்திற்கு அடுத்த விவாகம் என்று சொல்லப்பட்ட, தீமையின் பொய்களில் இருக்கப்பட்டவர்களுக்குள் இருக்கும் விவாகத்தின் சுபாவத்தை பார்க்கும்படி எனக்கு உத்திரவு கொடுக்கப்பட்டது. அவர்கள் ஒருவரோடொருவர் பேசுகிறார்கள். அதனுடன் காம விகாரத்தினால், சேர்க்கப்படுகிறார்கள்; ஆனால் உள்ளுக்குள்ளாய், எல்லா விளக்கத்தையும் மிஞ்சும்படியாக, அவ்வளவு மிகுந்திருக்கிற பிராணயாயமான வெறுப்புடன் ஒருவர்மேல் ஒருவர் எரிந்து விழு கிறார்கள்.

**378.** வேறான சமயங்களுக்கு சேர்ந்த இருவருக்குள் விவாக அன்பு இருக்க முடியாது; ஏனென்றால், ஒன்றின் உண்மை மற்றதின் நன்மையுடன் ஒத்துப்போகிறதில்லை; மேலும், இரண்டு வேற்றுமையானதும், ஒவ்வாததுமான பொருள்கள் இரண்டிலிருந்து ஒரு மனதை உண்டாக்க முடியாது; இந்த காரணத்துக்காக, அவர்கள் அன்பின் உற்பத்தி, ஞான சம்பந்தமானவைகளில் எதையும் பகிர்ந்து கொள்ளுகிறதில்லை; அவர்கள் ஒத்து வாழ்ந்தால் அது ஸ்தூல சம்பந்தமான காரணங்களிலிருந்துதான் வருகிறது. ஆகவே, சுவர்க்கங்களில் விவாகங்கள், வேறான கூட்டங்களில் இருக்கப்பட்டவர்களுக்குள் அல்லாமல், ஒரே கூட்டத்திலிருக்கப்பட்டவர்களுக்குள் நடத்தப்படுகிறது; ஏனென்றால் அவர்கள் ஒரே விதமான நன்மையிலும் உண்மையிலும் இருக்கிறார்கள். ஒரே கூட்டத்தில் இருக்கப்பட்டவர்கள் எல்லாரும் ஒரே விதமான நன்மையிலும் உண்மையிலும் இருக்கிறார்களென்பதும், அதற்கு வெளியே இருக்கப்பட்டவர்களிடமிருந்து வித்தியாசப்படுகிறார்களென்பதும் மேலே பார்க்கப்படலாம் (செ. 41ம் பின்வரும் பிரிவுகளும்). இஸ்ரவேல் தேசத்தாரில், தங்கள் வமிசத்துக்குள்ளேயே, முக்கியமாக குடும்பத்துக்கு வெளியேயல்லாமல் அதற்குள்ளேயே விவாகங்கள் செய்யப்படுவதினால்கூட இது சாயல் காட்டப்பட்டது.

**379.** இதுவுமன்றி, ஒரு கணவனுக்கும் பல மனைவிகளுக்கும் மத்தியில் உண்மையான விவாக அன்பு இருக்க முடியாது; ஏனென்றால், இரண்டு மனதிலிருந்து ஒரு மனதை உண்டாக்குவதில் அமைந்திருக்கிற அதன் பரமார்த்த மூலத்தை இது அழிக்கிறது; அப்படியிருப்பதால் அந்த அன்பின் சாரம் உண்டாகிற நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையாயிருக்கிற உள்ளான சேர்க்கையை அது அழிக்கிறது. ஒருவருக்குமேல் பட்டவர்களோடு விவாகம் செய்துகொள்ளுதல், அனேக சித்தங்களுக்குள் பகிர்ந்து கொடுக்கப்பட்ட புத்தியைப்போலிருக்கிறது; அல்லது, அது ஒரு திருச்சபைக்கல்லாமல், அனேக திருச்சபைகளுக்கு சேர்ந்த ஒரு மனிதனைப்போலிருக்கிறது; ஏனென்றால், அவனுடைய விசுவாசமானது, அதனால் ஒன்றுமில்லாமல் போகும்படி அவ்வளவு கலைக்கப்படுகிறது. அனேக மனைவிகளை விவாகம் செய்துக் கொள்ளுதல், தெய்வ ஒழுங்குக்கு முழுமையும் எதிரிடையாயிருக்கிறதென்றும், இது அநேக காரணங்களிலிருந்தும் முக்கியமாய், தாங்கள் அனேகருடன் விவாகம் செய்துகொள்ள நினைத்த

டடனே, உள்ளான தேவஅருள் பெருகலிலிருந்தும், சுவர்க்கத்துக்கு அடுத்த சுகத்திலிருந்தும் நீக்கப்பட்டு, பிறகு குடியர்களைப்போல் ஆய்விடுகிறார்களென்பதிலிருந்தும், தங்களுக்கு தெரியுமென்றும் தேவர்கள் சொல்லுகிறார்கள்; ஏனென்றால், அவர்கள் விஷயத்தில், அவர்களில் நன்மையானது அதன் சொந்த உண்மையிலிருந்து பிரிக்கப்படுகிறது; அவர்களுடைய மனங்களுடையதாயிருக்கிற உள்ளானவைகள், எந்த உத்தேசத்தோடேயாவது பலபாரித்துவத்தை நினைத்த மாத்திரத்திலே, அவ்வித நிலைமைக்குள் விழுகிறபடியினால், ஒருவருக்கு மேல்பட்டவர்களுடன் விவாகம் செய்துக் கொள்ளுதலானது, இந்த உள்ளான மனிதனை மூடி, விவாக அன்பிற்கு பதிலாக, காம விகாரத்தை தானே உள்ளே பாயச்செய்கிறதென்று, அவர்கள் தெளிவாய் உணருகிறார்கள். காம விகாரமானது சுவர்க்கத்திலிருந்து இழுத்துவிடுகிறது. சிலர்மட்டும் உண்மையான விவாக அன்பில் இப்பொழுது இருக்கிறபடியாலும், உண்மையான விவாக அன்பானது உலகத்தில் விருத்தாப்பிய காலம் வரையில் நிலைகொள்வது மட்டுமல்லாமல், இறந்த பிறகும்கூட சுவர்க்கத்தின் ஆனந்தமாய், சதா காலம் வரையில் சம்பூரணமர்க்கப்பட்ட உள்ளான இன்பத்தினால் பின்னிட்டு நிரப்பப்படுகிறதா யிருக்கையில், அந்த அன்பில் இல்லாதவர்களுக்கு அந்த அன்பிலிருக்கும் உள்ளான இன்பத்தைப்பற்றி ஒன்றும் தெரியாமல், கொஞ்சகாலம் சேர்ந்து அவர்கள் வாழ்ந்த பிறகு அருவருப்பானதாக மாற்றப்படுகிற காம விகாரத்தின் இன்பத்தைப்பற்றி மாத்திரம் தெரிந்து கொண்டிருக்கிறபடியினாலும், மனிதனானவன் இதை பிரயாசையுடன் அறிந்து கொள்ளுகிறானென்று அவர்கள் இன்னமும் சொல்லுகிறார்கள். உண்மையான விவாக அன்பினால் உண்டாகும் வரங்களின் விகற்பங்கள், அவைகளில் ஒன்றுகூட மனிதனுக்கு தெரியாததும், ஆண்டவரிடமிருந்து வரும் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் விவாகத்தில் இல்லாத எவனும் கிரகிக்க முடியாததுமான, அநேக ஆயிரங்கள் பரப்பாக விவரித்துச் சொல்லலாமென்றுகூட அவர்கள் சொன்னார்கள்.

**380**. ஒருவர் மற்றவர்பேரில் அதிகாரம் செய்யும் ஆசையானது, விவாக அன்பையும் அதனுடைய சுவர்க்க ஆனந்தத்தையும் முழுமையும் நீக்கி விடுகிறது; ஏனென்றால், மேலே கூறியபடி, விவாக அன்பும் அதன் ஆனந்தமும், ஒருவருடைய சித்தமானது

அன்னியோன்னியமாயும் இணைக்கிணையாயும், மற்றவருடைய சித்தமாய் இருக்கிற தென்பதில் அமைந்திருக்கிறது. விவாகத்தில் அதிகாரம் செய்யும் ஆசையானது இதை அழிக்கிறது; ஏனென்றால், அதிகாரம் செலுத்துகிறவன் தன்னுடைய சித்தம் மாத்திரம் மற்றவரிடத்தில் இருக்கவேண்டுமென்றும், மற்றவருடைய சித்தத்தில் எதுவும், தன்னிலே அன்னியோன்னியமாய் இருக்கக்கூடாதென்றும் விரும்புகிறான். அதனால்தான் அன்னியோன்னியமானது ஒன்றும் இல்லை; ஆதலால், எந்த அன்பினுடையவும் அதன் இன்பத்தினுடையவும் போக்குவரவும், மற்றவருடன் இணைக்கிணையாய் இல்லை; ஆனால், இந்த சம்பந்தமும் அதனால் உண்டாகிற சேர்க்கையும், விவாகத்தில் வரம் என்று சொல்லப்படுகிற அதே உள்ளான சுகமாகவே இருக்கிறது. அதிகாரம் செய்யும் ஆசையானது, இந்த தேவ அருளையும் அதனுடன் விவாக அன்பிலிருக்கும் சுவர்க்கத்துக்கு அடுத்ததும் ஞான சம்பந்தமான ஒவ்வொன்றையும், அந்த அன்பு இருப்பதே தெரியாதபடி அழிக்கிறது; அந்த அன்பைப்பற்றி சொல்லப்பட்டால், அந்த மூலத்திலிருந்து தேவ அருளைப்பற்றி ஏதாவது சொல்லுதல், சிரிப்பு அல்லது கோபம் எழும்படியாக அவ்வித ஏளனத்தில் வைக்கப்படும். எல்லா சுயர்ச்சியும் அன்பைச் சேர்ந்தபடியினால், மற்றவர் இச்சிக்கிறது அல்லது நேசித்ததை ஒருவர் இச்சித்தால் அல்லது நேசித்தால், இருவரும் தங்கள் இஷ்டம்படி நடக்கலாம்; ஆனால் அதிகாரம் செலுத்தப்படும்போது, யாருக்கும் சுயர்ச்சி கிடையாது; ஒருவர் மற்றவனுக்கு அடிமையாகிறார்; அதிகாரம் செலுத்துகிற மற்றவனும் அடிமையாயிருக்கிறான்; ஏனென்றால், அவன்கூட ஆளும் ஆசையினால் ஒரு அடிமைப்போல அவன் நடத்தப்படுகிறான். இது நிஜமாகவே, சுவர்க்கத்து அன்பின் சுயேச்சை என்னவென்று தெரியாதவனுக்கும் முழுமை கிரகிக்க முடியாததாயிருக்கிறது. என்றாலும், விவாக அன்பின் மூலத்தையும், சத்தையும்பற்றி சொன்னதிலிருந்து, எவ்வளவுதூரம் ஆட்சி பிரவேசிக்கிறதோ, அவ்வளவு தூரம் மனதுகள் சேர்க்கப்படாமல், பிரிக்கப்படுகிறதென்று தெரிந்திருக்கப்படலாம். அரசாட்சி செய்தல், கீழ்ப்படுத்துகிறது; மேலும், கீழ்ப்படிந்த ஒரு மனதுக்கு எந்த சித்தமும் இல்லை அல்லது ஒரு எதிரிடையான சித்தத்தை உடைத்தாயிருக்கிறது. அதற்கு சித்தமில்லாவிட்டால், அதற்கு அன்புகூட இல்லை; மேலும், அதற்கு எதிரிடையான சித்தமிருந்தால், அன்பிற்கு பதிலாக வன்மம் இருக்

கிறது. அவ்வித விவாகத்தில் வாழ்கிறவர்களின் உள்ளானவைகள், அவர்களுடைய புறம்பானவைகள் சமாதானத்தின்பொருட்டு எவ்வளவு அடக்கப்பட்டு சாந்தமாக வைக்கப்பட்டாலும், இரண்டு எதிரிடையானவைகள் எப்பொழுதும் இருக்கிறதுபோல அன்னியோன்னிய எதிரிடையிலும் சண்டையிலும் இருக்கின்றன. அந்த அவர்களுடைய உள்ளானவைகளின் எதிரிடையும் சண்டையும் இறந்தபிறகு, பகிரங்கமாய் தோன்றுகின்றன; அப்பொழுது அவர்கள் சாதாரணமாய் சந்தித்து விரோதிகளைப்போல் சண்டைசெய்து ஒருவரை ஒருவர் துண்டுகள் துண்டுகளாக கிழிப்பார்கள்; ஏனென்றால், அப்பொழுது, அவர்கள் தங்களுடைய உள்ளானவைகளின் நிலைமைக்குத் தக்கபடி செயல்படுகிறார்கள். எனக்கு சில சமயங்களில், பழிவாங்குதலினாலும் குரூரத்தினாலும், அநேக திருஷ்டாந்தங்களில் நிறைந்திருந்த அவர்களுடைய சண்டைகளையும் கெடுதிகளையும் பார்க்க அனுமதி கொடுக்கப்பட்டது. ஏனென்றால், இதா வாழ்வில் ஒவ்வொருவனுடைய அந்தரங்கமானவைகளும் தங்கள் இஷ்டப்படி வைக்கப்படுகின்றன. மேலும் அவைகள் புறம்பான ஆலோசனைகளாலும் லௌகீக காரணங்களாலும், அப்புறம் தடுக்கப்படுகிறதில்லை. ஏனென்றால், அக்காலத்தில், ஒவ்வொருவனும் அவன் உள்ளுக்குள்ளாய் இருக்கிறபடி இருக்கிறான்.

**381.** சிலருக்கு விவாக அன்பின் சாயல் கொடுக்கப்பட்டிருக்கிறது. என்றாலும், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அன்பில் அவர்கள் இருந்தாலொழிய, அது விவாக அன்பாகாது; ஆனால், அது அநேக காரணங்களிலிருந்து உண்டாகிற விவாக அன்பைப்போல தோன்றுகிற ஒரு அன்பாயிருக்கிறது; உதாரணமாக வீட்டில் அவர்கள் வருதலை எதிர் பார்க்கப்படவும், அவர்கள் பத்திரமாயும் சமாதானமாயும், ஆறுதலாயும் வாழவும், அவர்கள் வியாதியாயிருக்கும்போதும் விருத்தாப்பியத்திலும் போஷிக்கப்படவும், அல்லது தாங்கள் நேசிக்கிற குழந்தைகள் கவனிக்கப்படவும், அவர்கள் காட்டும் அன்பு அவ்வித அன்பாயிருக்கிறது; சில திருஷ்டாந்தங்களில் மற்ற விவாக கூட்டாளியின் பயத்திலிருந்தும், அல்லது பெயர் போய்விடுமென்கிற பயத்தினாலும், அல்லது தீமை விளையும் என்கிற பயத்தினாலும் சிலர் அடக்கப்படுகிறார்கள்; சிலர் விஷயத்தில், காமவிகாரத்தினால் அவ்வித தோற்றம் உண்டாகிறது. விவாக அன்பானது இரண்டு விவாகமானவர் விஷயத்திலகூட வித்தியாசப்படலாம். அவர்களில் ஒரு

வருக்கு அது அதிகம் அல்லது கொஞ்சம் இருக்கும்; மற்றவர்களிடத்தில் கொஞ்சம் அல்லது ஒன்றுமில்லாதிருக்கும்; ஆகவே சுவர்க்கம் ஒருவர் பாகமாகவும், நரகம் மற்றவர் பாகமாகவுமிருக்கலாம்.

**382.** உண்மையான விவாக அன்பு மிகவும் உள்ளான சுவர்க்கத்தில் இருக்கிறது; ஏனென்றால், அந்த சுவர்க்கத்தின் தேவர்கள் நன்மையினுடையவும், உண்மையினுடையவும் விவாகத்திலும், அதனுடன்கூட மனப்புனிதத்திலும் இருக்கிறார்கள். தாழ்ந்த சுவர்க்கங்களின் தேவர்கள்கூட விவாக அன்பிலிருக்கிறார்கள்; ஆனால், மனப்புனிதத்தில் இருக்கிறவரையில்தான் அப்படியிருக்கிறார்கள்; ஏனென்றால், விவாக அன்பையே நோக்குமிடத்தில், அது ஒரு மனப்புனித நிலையாயிருக்கிறது. இந்த காரணத்துக்காக, விவாக அன்பிலிருக்கும் விவாகமான தோழர்கள், சிறு குழந்தைகளுக்குள் மனப்புனித விளையாட்டைப்போல், ஏறக் குறைய அவர்கள் மனங்களுக்கு முன் தோன்றுகிற சுவர்க்கத்து சந்தோஷங்களை அனுபவிக்கிறார்கள்; ஏனென்றால், ஒவ்வொன்றும் அவர்களுடைய மனங்களை சந்தோஷப் படுத்துகின்றது; அதற்கு காரணம் சுவர்க்கம், அதன் சந்தோஷத்துடன், அவர்களுடைய உயிரின் எல்லா பொருள்களிலும் பாய்கிறது. ஆகையினால், விவாக அன்பமானது சுவர்க்கத்தில் மிகவும் அழகான பொருள்களால் சாயல் காட்டப்படுகிறது. பிரகாசமுள்ள மேகத்தினால் சூழப்பட்டு, சொல்லில் அமையாத அழகுள்ள ஒரு கன்னிப் பெண்ணினால், அது சாயல் காட்டப்படுவதை, நான் பார்த்திருக்கிறேன்; மேலும், சுவர்க்கத்திலிருக்கும் தேவர்கள், விவாக அன்பிலிருந்து தங்கள் எல்லா அழகையும் அடைகிறார்களென்று எனக்கு சொல்லப்பட்டது. அதிலிருந்து பாயும் ஆசைகளும் சிந்தனைகளும், மனதின் அந்தரங்கங்களை இயக்குகிற சந்தோஷங்களோடு இருக்கிற மாணிக்கங்களிலிருந்தும் இரத்தினங்களிலிருந்தும்போல வருகிற துலக்கங்களுடன் வைரம்போன்ற நுண்ணிய ஆகாயங்களால் சாயல் காட்டப்படுகின்றன. சுருங்கச்சொல்லில், சுவர்க்கமானது விவாக அன்பில் தானே சாயல் காட்டிக்கொள்ளுகிறது; ஏனென்றால், தேவர்கள் விஷயத்தில் சுவர்க்கமானது, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையாயிருக்கிறது; இந்த சேர்க்கை விவாக அன்பை உண்டாக்குகிறது.

**382.—A.** சுவர்க்கங்களில் விவாகங்கள் பூமியின்பேரில் நடக்கும் விவாகங்களிலிருந்து, பூமியின்பேரில் நடக்கும் விவாகங்கள் குழந்தை ஜனிப்பிக்க ஏற்படுத்தப்பட்டிருக்கிற தென்பதிலும், ஆனால் சுவர்க்கங்களில் அப்படி இல்லை என்பதிலும் வித்தியாசப்படுகின்றன; குழந்தைகள் ஜனிப்பிக்கிறதற்கு பதிலாக, சுவர்க்கங்களில் நன்மைகளும் உண்மைகளும் ஜனிப்பிக்கப்படுகின்றது. இந்த ஜனிப்பிக்கை முன் கூறியதற்கு பதிலாகயிருக்கிறது; ஏனென்றால், மேலே காண்பிக்கப்பட்டபடி, சுவர்க்கத்தில் விவாகமானது நன்மையினுடையவும் உண்மையினுடையவும் விவாகமாயிருக்கிறது; மேலும், அந்த விவாகத்தில், நன்மையும் உண்மையும், அதன் சேர்க்கையும், எல்லாவற்றிற்கும் மேலாக நேசிக்கப்படுகின்றன. ஆகையினால், இவைகள் சுவர்க்கங்களில் நடக்கும் விவாகங்களிலிருந்து பரப்பப்படுகின்றன. அதனால் தான் வேதத்தில் ஜனனங்களும் சந்ததிகளும், நன்மைக்கும் உண்மைக்கும் சேர்ந்தவைகளாயிருக்கிற ஞான சம்பந்தமான ஜனனங்களையும் சந்ததிகளையும் அருத்தம் கொள்ளுகின்றன. தாயும் தகப்பனும், ஜனிப்பிக்கிற நன்மையுடன் சேர்க்கப்பட்ட உண்மையையும், குமாரர்களும் குமார்த்திகளும், ஜனிப்பிக்கப்பட்ட உண்மைகளையும் நன்மைகளையும், மருமகனும் மறுமகளும், இவைகளின் சேர்க்கைகளையும் இவ்விதமாக அருத்தம் கொள்ளப்படுகிறது. அதனால், சுவர்க்கங்களில் நடக்கும் விவாகங்கள் பூமியின்பேரில் நடக்கும் விவாகங்களைப்போல இல்லை என்பது விசதமாகிறது. சுவர்க்கங்களில், விவாகங்கள் என்று சொல்லப்படக் கூடாத ஆத்ம சம்பந்தமான விவாகங்கள் நடக்கின்றன; ஆனால், அவைகள் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையிலிருந்து வந்த மனங்களின் சேர்க்கையாயிருக்கின்றன. ஆனால், பூமியின் பேரில் விவாகங்கள் இருக்கின்றன; ஏனென்றால், இவைகள் ஆத்ம சம்பந்தமானது மட்டுமல்லாமல், சரீர சம்பந்தமானதாயும் கூடயிருக்கின்றன. சுவர்க்கங்களில் விவாகங்கள் இல்லாதபடியினால், அங்கே இரண்டு விவாகமானவர்கள் கணவன் என்றும், மனைவி என்றும் சொல்லப்படுகிறதில்லை; ஆனால், ஒவ்வொருவரும், இரண்டு மனங்கள் ஒன்றுகும் சேர்க்கையைப் பற்றிய தேவதா அபிப்பிராயத்திலிருந்து, ஒவ்வொருவரும், அன்னியோன்னியமாயும் இணைக்கிணையாயும், ஒருவருடைய சொந்தம் என்கிற அருத்தம் கொள்ளுகிற ஒரு பெயரால் மற்றவரை குறிப்பிடுகிறார்கள். இந்த குறிப்புகளிலெல்லாமிருந்து, விவாகங்களைக் குறித்து

(லூக். xx. 35, 36), ஆண்டவர் சொல்லிய வார்த்தைகள் எப்படி அறிந்து கொள்ளப்பட வேண்டுமென்று தெரிந்து கொள்ளப்படலாம்.

**383**. சுவர்க்கங்களில் விவாகங்கள் எப்படி செய்யப்படுகிறதென்று நான் பார்க்க விடப்பட்டிருக்கிறேன். சுவர்க்கத்தில் எவ்விடத்திலும், ஒரே மாதிரியான குணமுள்ளவர்கள் சேர்க்கப்படுகிறார்கள், அப்படியில்லாதவர்கள் பிரிக்கப்படுகிறார்கள்; ஆகவே சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டமும், ஒரேமாதிரி குணமுள்ளவர்களால் அமைந்திருக்கிறது; ஏனென்றால், ஒரே மாதிரியிருக்கிறவர்கள், தங்களாலேயே யல்லாமல், ஆண்டவரிடமிருந்து சேர்க்கப்படுகிறார்கள். (மேலே நெ 41, 43, 44யும் பின்வரும் நெம்பர்களையும் பார்க்கவும்). அதே மாதிரியாக, ஒன்றாக சேர்க்கப்பட தகுந்த மனமுடையவர்களாகிய விவாகம் செய்து கொண்ட கூட்டாளிகள் ஒருவரால் ஒருவர் இழுக்கப்படுகிறார்கள்; ஆகையினால், முதலில் பார்க்கும்போதே, அவர்கள் ஒருவரை ஒருவர் நேசித்து, விவாக கூட்டாளிகள் என்று அறிந்து, தங்களுடைய உள்ளான ஆன்மாக்களிலிருந்து விவாகம் செய்து கொள்ளுகிறார்கள். அதனால்தான் சுவர்க்கங்களில் நடக்கும் எல்லா விவாகங்களும், ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வருகின்றன. மேலும், அவர்கள், ஏராளமான கூட்டம் கூடிய விவாகத் திருவிழாவை கொண்டாடுகிறார்கள்; இந்த விழாக்கள் பற்பல கூட்டங்களில் வித்தியாசப்படுகின்றன.

**384**. பூமியின்பேரில் நடக்கும் விவாகங்கள், மானிட வமிசத்தினுடையவும், அதனுடன்கூட சுவர்க்கத்தின் தேவர்களுடையவும் (முன்னமே காண்பித்தபடி சுவர்க்கம் மானிட வமிசத்திலிருந்து ஏற்படுகிறபடியினால்) வித்தியாலயமாய் இருப்பதினாலும், மேலும், அவைகள் ஆத்ம சம்பந்தமான மூலத்திலிருந்து அதாவது நன்மையினுடையவும் உண்மையினுடையவும் விவாகத்திலிருந்து ஏற்படுகிறபடியினாலும், ஆண்டவரின் தேவத்துவம் அந்த அன்பில் பிரதானமாய் பாய்கிறபடியினாலும், அவைகள், சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் பார்வையில், அதிக பரிசுத்தமானவைகளாயிருக்கின்றன. அது அப்படியிருக்க, விபசாரங்கள் விவாக அன்புக்கு எதிரிடையாயிருப்பதினால், அவர்கள் அவைகளை தேவ நிந்தனையானதென்று மதிக்கிறார்கள் ஏனென்றால், தேவர்கள் விவாகங்களில் சுவர்க்கமாயிருக்கிற நன்மை

யினுடையவும் உண்மையினுடையவும் விவாகத்தைப் பார்க்கிறது போல, விபசாரங்களில் நரகமாயிருக்கிற பொய்யினுடையவும் தீமையினுடையவும் விவாகத்தை அவர்கள் பார்க்கிறார்கள். அப்பொழுது விபசாரம் என்று சொல்வதை கேட்டமாத்திரத்தில், அவர்கள் திரும்பிக்கொள்ளுகிறார்கள். ஒரு மனிதனானவன் இன்பத்தின்பொருட்டு விபசாரம் செய்யும் காலத்தில் அவனுக்கு விரோதமாய் சுவர்க்கம் ஏன் மூடப்படுகிறது என்பதற்கு இது தான் காரணம்; சுவர்க்கமானது அவனுக்கு விரோதமாய் மூடப்படுகிறபோது, அவன் தெய்வத்தையாவது, திருச்சபையின் விசுவாசத்தை சேர்ந்த எதையாவது, அதற்குமேல் அவன் ஒத்துக் கொள்ளுகிறதில்லை. நரகத்திலிருப்பவர்கள் எல்லாரும் விவாக அன்புக்கு விரோதமாய் இருக்கிறார்கள் என்பதை விவாகங்களை குலைத்து பலவந்தமாய் கற்பழிக்க இடைவிடாத முயற்சிபோலிருந்து அங்கிருந்து வெளிவரும் கோளத்திலிருந்து பார்க்க எனக்கு அநுமதி கொடுக்கப்பட்டது. நரகத்தில் அரசாளும் இன்பம் விபசார இன்பமென்றும், விபசார இன்பமானது, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கை சுவர்க்கத்தை ஏற்படுத்துகிறபடியினால், அந்த சேர்க்கையை அழிக்கிற இன்பமாய்கூட இருக்கிறதென்றும் இதிலிருந்து விசதமாயிற்று. ஆகவே, விபசார இன்பமானது, சுவர்க்க இன்பமாயிருக்கிற விவாக இன்பத்திற்கு முழுமையும் எதிரிடையாயிருக்கிற நரகத்துக்கு அடுத்த இன்பமாயிருக்கிறது என்று ஏற்படுகிறது.

**385.** சரீர வாழ்விலிருக்கும்போது தேடிக்கொண்ட ஒரு வழக்கத்திலிருந்து, அனுகூலம் செய்யும் ஆவிகளின் உட்பெருக்கைப்போல் ஒரு அமைதியானதும், அலைபோல் ஆடுகிற உட்பெருக்கினால் நூதனமான கபடத்துடன் எனக்கு உபாதிசெய்த சில ஆவிகள் இருந்தன; ஆனால், அவைகளிடத்தில், மாட்டிக்கொண்டு மோசம் செய்வதற்காக கபடமும் அதைப்போன்றதும், இருந்ததாக நான் அறிந்துகொண்டேன். கடைசியில், உலகத்திலிருக்கும்போது ஒரு சேனைக்கு தலைவனாயிருந்ததாக எனக்கு சொல்லப்பட்ட அவைகளில் ஒன்றுடன் நான் பேசினேன்; அதனுடைய சிந்தனையின் அபிப்பிராயங்களில் காமவிகாரம் இருந்ததை நான் தெரிந்து கொண்டபடியினால், கருதிய எல்லாவற்றையும், இன்னும் அநேக விஷயங்களையும் ஒரு கொடி நேரத்தில் வெளிப்படுத்துகிற ஆத்ம சம்பந்தமான பேச்சை அறிகுறிகளுடன் உபயோகப்படுத்தி, விவா

கத்தைப்பற்றி நான் அதனுடன் பேசினேன். சரீர வாழ்வில் விபசாரங்கள் குற்றமில்லாததென்று தான் மதித்ததாக அது சொன்னது. ஆனால், அதைப் போன்றவர்களுக்கு விபசாரங்கள் அப்படி தோன்றிவிட்டாலும், அவைகளின் சீர் அழிக்கிறதும் மயக்குகிறதுமான இன்பங்களின்பொருட்டு, அனுமதிகொடுக்க தக்கதாக கூட தோன்றினபோதிலும், விபசாரங்கள் பாதகமானதென்று அதற்கு சொல்ல நான் விடப்பட்டேன். விவாகங்கள் மானிட வமிசத்தின் வித்தியாலயங்கள் என்பதிலிருந்தும், இவ்விதமாக கூட பரமண்டல இராச்சியத்தின் வித்தியாலயங்களாகவும் இருக்கின்றனவென்கிற உண்மையிலிருந்தும், அவைகள் பாதகமானதென்று அது தெரிந்துகொள்ளலாம்; ஆதலால், அவைகளை எந்த காரணத்தினாலும் மீறி நடக்கக்கூடாது. ஆனால் பரிசுத்தமானதாக மதிக்கப்படவேண்டும். விவாக அன்பானது சுவர்க்கத்தின் மூலமாய் ஆண்டவரிடமிருந்து இறங்குகிறதென்கிறதும், ஒரு பெற்றோரிடமிருந்துபோல் அந்த அன்பிலிருந்து, சுவர்க்கத்தின் அஸ்திவாரமாயிருக்கிற அன்னியோன்னிய அன்பு உண்டாகிறதென்கிறதுமாகிய உண்மையிலிருந்தும், மறுபடியும், விபசாரிகள் சுவர்க்கத்து கூட்டங்களுக்கு சமீபத்தில் மாத்திரம் சென்றால், தங்களுடைய சொந்த துர்க்கந்தத்தை அறிந்து, தாங்களே நரகத்தில் தலைகீழாய் விழுகிறார்களென்பதிலிருந்தும், இது அதற்கு தெரிந்திருக்கலாம். விவாகங்களைப் பங்கப்படுத்துதல், மற்ற முகாந்தரங்களை சொல்லாமலே, தெய்வீக ஒழுங்குக்கும் மானிட ஒழுங்குக்கும் எதிரிடையாகயிருப்பதினால், அப்படிச் செய்தல், தெய்வீக சட்டங்களுக்கும், எல்லா இராச்சியங்களின் தேசாசார சட்டங்களுக்கும், அதனுடன் பகுத்தறியும் அறிவின் உண்மையான வெளிச்சத்துக்கும் விரோதமாயிருக்கிறதென்று, குறைந்த பட்சம் அது தெரிந்திருக்கவேண்டும். ஆனால் அது சரீர வாழ்விலிருக்கும்போது, இவ்விதமான விஷயங்களை நினைக்கவில்லையென்று பதில் சொல்லியது. அது அப்படியிருக்கிறதா என்று விசாரிக்க அது விரும்பியது; ஆனால் பரிக்ஷித்து நியாயம் கண்டறிதல் இன்பங்களுக்கும், இவ்விதமாக தீமைகளுக்கும் பொய்களுக்கும், அனுகூலமாயிருப்பதினால், உண்மையானது அவைகளை ஏற்றுக்கொள்ளுகிறதில்லையென்றும், உண்மைகளாயிருப்பதினால், சொல்லப்பட்ட விஷயங்களை அது முதலில் நினைக்கவேண்டுமென்றும், அல்லது, மறுபடியும் தனக்கு மற்றவன் செய்வ[illegible]டமில்லாததை

எவனும் மற்றவனுக்கு செய்யக்கூடாதென்கிற உலகத்தில் ஒத்துக் கொள்ளப்பட்ட கொள்கையிலிருந்து, அவைகளைப்பற்றி குறைந்த பட்சம் நினைக்கவேண்டுமென்றும், இவ்விதமாக எவனாவது ஒரு வன் விவாகமான முதல் பருவத்தில், ஒவ்வொருவனும் நேசிக்கிறபடி, தான் நேசித்த தன் மனைவியை அம்மாதிரி ஏமாற்றியிருந்தா லும், தன் கோப நிலைமையில் அந்த விஷயத்தை பேசியிருந்தாலும், விபசாரங்களை தானே வெறுத்திருக்க மாட்டாதா என்றும், மேலும், வலிமையுள்ள மனதுடைய மனிதனாக அவர்களுக்கு நரகதண்டனைகூடயிட்டு, அவர்களுக்கு விரோதமாக மற்றவர்களை விட அதிகமாய் தானே ஸ்திரப்பட்டிருக்கமாட்டாதா என்றும், நினைக்கவேண்டுமென்று அதற்கு சொல்லப்பட்டது.

**386**. விவாக அன்பின் இன்பங்கள் சுவர்க்கம் பக்கமும், விப சாரத்தின் இன்பங்கள் நரகம் பக்கமும், எப்படி முந்துகின்றன வென்று எனக்கு காண்பிக்கப்பட்டது. சுவர்க்கம் பக்கம் விவாகத் தின் இன்பங்களில் செல்லுதல், கணக்கற்றவைகளாகவும் சொல்ல முடியாததாகவும், ஆகிறவரையில் தொடர்ச்சியாக அதிகம் அதிக மாய் வரங்களுடையவும் சுகத்தினுடையவும் நிலைமைகளுக் குள்ளாக இருந்தது; அவைகள் உள்ளுக்குள்ளாய் எவ்வளவு சென்றதோ, அவ்வளவு, மனப்புனிதத்தின் சுவர்க்கமாயிருக்கிற மிக வும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் வரங்களையும் சுகங்களையும் அவை கள் எட்டுகிறவரையில், கணக்கற்றதாகவும் வாக்குக்கு எட்டாத தாகவும் அவைகள் ஆகிவிட்டன. இவைகள் எல்லாம் மிகவும் சம் பூரணமான சுவேச்சையில் செய்யப்பட்டன. ஏனென்றால், எல்லா சுவேச்சையும் அன்பிலிருந்து வருகிறது. ஆகையினால், மிகவும் சம் பூரணமான சுவேச்சை, சுவர்க்க அன்பாகவேயிருக்கிற விவாக அன் பிலிருந்து வருகிறது. ஆனால், விபசாரத்தின் போக்கு நரகத்தின் பக்கமாயும், படிபடியாய் பயங்கரமானதும் கொடுமையானதும் தவிர, வேறொன்றுமில்லாத மிகவும் தாழ்ந்த நரகத்தின் பக்கமாயும் இருந்தது. விபசாரிகளுக்கு உலகத்தின் வாழ்க்கைக்கு பிறகு, இவ் விதமான கதி காத்திருக்கிறது. விபசாரிகள் என்பதால், விபசா ரங்களில் இன்பத்தை உணருகிறவர்களும், விவாகங்களில் எந்த இன்பத்தையும் உணராதவர்களையும் கருதப்படுகின்றன.

## XLI

# சுவர்க்கத்தில் தேவர்களின் தொழில்கள்

**387.** சுவர்க்கத்தில் தொழில்கள் கூட்டங்களின் கடமைகளுக்கு தக்கபடி, எண்ணிறந்ததாயும் பலவிதமானதாயுமிருக்கிறபடியினால், அவைகள் விரிவாய் எண்ணப்படவும் அல்லது விவரிக்கப்படவும் முடியாது; ஆனால் பொதுவாக சிலது அவைகளைப்பற்றி சொல்லப்படலாம்; கூட்டங்கள் நன்மைகளுக்கு தக்கபடி வேறு வேறாயிருக்கிறதுபோல (செ. 41), சுவர்க்கங்களில் எல்லாருடைய விஷயத்திலும், நன்மைகள், உபயோகங்களாயிருக்கிற செய்கையில் நன்மைகளாயிருக்கிறபடியினால், உபயோகங்களுக்குத் தக்கபடி. அவைகள் வேறு வேறானதாயிருக்கிறதின் நிமித்தம், ஒவ்வொரு கூட்டமும் தன் சுயதொழிலை உடைத்தாயிருக்கிறது. ஆண்டவருடைய இராச்சியம் உபயோகங்களின் இராச்சியமாயிருப்பதினால், அங்கே ஒவ்வொருவனும் ஒரு உபயோகமானதை செய்கிறான்.

**388.** பூமியின்பேரில் போல, சுவர்க்கங்களிலும் அநேக அரசாட்சிகள் இருக்கின்றன; ஏனென்றால் அங்கே திருச்சபைக்குறிய காமாமிசுகளும், தேசாசாரகமாமிசுகளும் இல்வாழ்விற்குறிய சங்கதிகளுமிருக்கின்றன. திருச்சபைக்குறிய விஷயங்கள் இருக்கின்றனவென்பது, தெய்வ ஆராதனையைப்பற்றி மேலே (செ. 221 முதல் 227 வரையில்) சொல்லிக்காண்பிக்கப்பட்டதிலிருந்து தெளிவாயிருக்கிறது; தேசாசாரமான காமாமிசுகள் இருக்கின்றனவென்பது, சுவர்க்கத்தில் அரசாட்சியைக் குறித்து (செ. 213 முதல் 220 வரையில்) சொல்லி காண்பிக்கப்பட்டதிலிருந்து வெளிப்படையாகிறது; இல்வாழ்க்கைக்குறிய பாபத்துகள் இருக்கின்றன வென்பது தேவர்களின் உரைவிடங்களைப்பற்றியும் வீடுகளைப்பற்றியும் (செ. 183 முதல் 190 வரையில்), சுவர்க்கத்தில் விவாகங்களைக் குறித்தும் (செ. 366 முதல் 386 வரையில்), சொன்னதிலிருந்தும் தெளிவாயிருக்கிறது. ஆகவே, ஒவ்வொரு சுவர்க்கத்து கூட்டத்திலும் அநேக தொழில்களும் அரசாட்சிகளும் இருக்கின்றன வென்பது விசதமாகிறது.

**389.** சுவர்க்கங்களில் எல்லா விஷயங்களும் தேவர்களால் செய்து முடிக்கப்பட்ட அரசாட்சிகளால், எவ்விடத்திலும் பாது

காக்கப்பட்டிருக்கிற தெய்வீக ஒழுங்கிற்கு தக்கபடி, ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; அதிக புத்தியுள்ள தேவர்கள் பொதுவான நன்மை அல்லது உபயோகமாயிருக்கிற விஷயங்களை பாதுகாக்கிறார்கள். குறைந்த புத்தியுள்ள தேவர்கள் தனித்த நன்மைகள் அல்லது உபயோகங்களுக்கு சம்பந்தப்பட்டவைகளையும் இந்த விதமாக பார்த்துக்கொள்ளுகிறார்கள். தெய்வீக ஒழுங்கிலிருக்கும் உபயோகங்கள் தாழ்த்தப்படுவதுபோல, எல்லாரும் கீழாய்வைக்கப்பட்டிருக்கிறார்கள். அதனால்கூட, கண்ணியமானது, உபயோகத்தின் கண்ணியத்துக்கு தக்கபடி ஒவ்வொரு தொழிலுக்கும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆயினும், எந்த தேவனும், கண்ணியத்தைதனக்கே பெருமையாக கொள்ளாமல், எல்லாவற்றையும் உபயோகத்துக்கு ஆரோபிக்கிறார்; உபயோகம் என்பது தான் செய்கிற நன்மையாய் இருக்கிறபடியினாலும், ஒவ்வொரு நன்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், அவர் எல்லாவற்றையும் ஆண்டவருக்கு ஆரோபிக்கிறார். ஆகையினால், முதலில் உபயோகத்துக்கும் பிறகு தனக்கேயும் அல்லாமல், தனக்கே முதலிலும் பிறகு உபயோகத்துக்கும் நினைக்கிறவன், சுவர்க்கத்தில் எந்த தொழிலையும் செய்ய முடியாது. ஏனென்றால், அவ்விதமானவன், தன்னையே முதலிலும், உபயோகத்தை இரண்டாவதாகவும் மதித்து, ஆண்டவரிடமிருந்து பின்புறம் பார்க்கிறான். கொஞ்சம் மேலே கூறியபடி, உபயோகம் நல்லதாக இருக்கிறபடியினாலும், நன்மை என்பது ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், உபயோகத்தைப்பற்றி நாம் பேசுங்கால், ஆண்டவர்கூட கருதப்படுகிறது.

**390.** சுவர்க்கங்களில் கீழ்படிதலின் சுபாவம், ஒவ்வொருவனும் உபயோகத்தை நேசித்து, மதித்து, கனம் பண்ணுகிற அளவு அந்த உபயோகம் சேர்க்கப்பட்டிருக்கிறவனை நேசித்து, மதித்து கனம் பண்ணுகிறானென்கிறதும், மேலும், தனக்கே அந்த உபயோகத்தை ஆரோபிக்காமல், ஆண்டவருக்கு தான் ஆரோபிக்கிற அளவு அந்த மனிதன் நேசிக்கப்பட்டு, மதிக்கப்பட்டு, கனம் பண்ணப்படுகிறானென்கிறதுமாகிய, இந்த ஆலோசனைகளிலிருந்து கிரகிக்கப்படலாம்; ஏனென்றால், அவன் அவ்வளவு புத்தியுள்ளவனாக இருக்கிறான்; மேலும் அவன் செய்யும் உபயோகங்கள் நன்மையிலிருந்து வருகின்றன. ஆன்ம சம்பந்தமான அன்பும், மதிப்பும், கீர்த்தியும், அந்த மனிதனிலிருக்கும் உபயோகத்தின் அன்பும், மதிப்பும், கீர்த்தியுமாயல்லாமல் வேறொன்றுமில்லை; மேலும் அந்த மனிதனுடைய

த்தி, உபயோகத்திலிருந்து வருகிறது; மனிதனைப்பற்றி உபயோ
த்திற்கு கீர்த்திவருகிறதில்லை. ஞானசம்பந்தமான உண்மையிலி
ந்து, மனிதர்களைப் பார்க்கிறவன்கூட அவர்களை வேறு விதமாக
திக்கிறதில்லை; ஏனென்றால், ஒரு மனிதன் பெரிய மாட்சிமையி
வது சிறிய மாட்சிமையிலாவது எதிலிருந்தாலும், ஒரு மனிதன்
ற்ற மனிதனைப்போலிருக்கிறான் என்று அவன் நினைக்கிறான்;
லும், அவன் ஞானத்தில் மாத்திரம் வித்தியாசத்தைப் பார்க்கி
ன்; ஞானமென்பது உபயோகத்தையும், இவ்விதமாக தன்னகரத்
னுடையவும், கூட்டத்தினுடையவும், நம் தேசத்தினுடையவும்,
நச்சபையினுடையவும் நன்மையையும் நேசித்தலாயிருக்கிறது.
தில்கூட ஆண்டவரிடத்து காண்பிக்கும் அன்பு அமைந்திருக்கிறது;
னென்றால், உபயோகத்தின் நன்மையாயிருக்கிற எல்லா நன்மை
ம் ஆண்டவரிடமிருந்து வருகிறது. அயலானிடத்து காண்பிக்கும்
ன்புகூட இவ்விதமாயிருக்கிறது; ஏனென்றால், அயலானென்பது
ன்னகரத்தானிடத்திலும், கூட்டத்திலும், நம்ம தேசத்திலும்,
நச்சபையிலும் இருக்கும் நேசிக்கப்படவேண்டியதாயும், அவர்
ரின் பொருட்டு செய்யப்படுவதாகவுங் கூட இருக்கிற நன்மை
யுமிருக்கிறது.

**391**. சுவர்க்கங்களிலிருக்கும் எல்லா கூட்டங்களும் அவை
ரின் உபயோகங்களுக்குத் தக்கபடி வேறு வேறானதாயிருக்கிறது;
னென்றால், மேலே (நெ. 41 அதன் பின்வரும் பிரகரணத்திலும்)
றப்பட்டபடி, தங்களுடைய நன்மைகளுக்கு தக்கபடி அவைகள்
று வேறாயிருக்கின்றன; மேலும், இந்த நன்மைகள், செயலில்
ன்மைகளாகவும், அல்லது உபயோகங்களாயிருக்கிற தருமத்தின்
ன்மைகளாயிருக்கின்றன. சிறிய குழந்தைகளை பாதுகாக்கும்
டமைகளையுடைய கூட்டங்களும், இருக்கின்றன; அவைகள்
ாரவளர, அவைகளுக்கு போதித்து கற்பிக்கும் கடமைகளை
டைய இதர கூட்டங்களும், உலகத்தில் பெற்ற படிப்பினாலும்,
ல குணமுடையவர்களாய், அதிலிருந்து சுவர்க்கத்துக்கு வருகிற
ண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும், அதேமாதிரி
ாதித்து கற்பிக்கும் மற்ற கூட்டங்களுமிருக்கின்றன. கிறிஸ்
வ உலகத்திலிருந்து, சுத்த நன்மையை கற்பிக்கிறதும் சுவர்க்கத்
க்கு போகும் வழியில் நடத்துகிறதுமான சில கூட்டங்கள் இருக்
ன்றன; மேலும், பலவிதமான கிறிஸ்துவர் அல்லாத தேசத்தா
ருக்கு, அம்மாதிரி கற்பித்து வழிகாட்டும் மற்ற கூட்டங்களுமிருக்

கின்றன. தீய ஆவிகளின் உபாதிகளிலிருந்து, புதிய ஆவிகள் அல்லது உலகத்திலிருந்து சில காலத்திற்குமுன் வந்த ஆவிகளை காக்கிற சில கூட்டங்களும் இருக்கின்றன; தாழ்ந்த பூமியிலிருக்கிறவர்கள் சமீபத்தில் சிலகூட்டங்கள் இருக்கின்றன; மேலும் சிலகூட்டங்கள் நரகங்களில் இருக்கிறவர்கள் சமீபத்தில் இருந்துகொண்டு, நிரூபிக்கப்பட்ட எல்லைகளுக்குமேல் ஒருவரை ஒருவர் வதைக்கவிடாமல் அடக்குகின்றன. மறித்ததலிருந்து எழுப்பப்படுகிறவர்களுடன் இருக்கிற சில கூட்டங்கள்கூட இருக்கின்றன. பொதுவாக, ஒவ்வொரு கூட்டத்தின் தேவர்களும், மனிதர்களை பாதுகாத்து, தீமையான ஆசைகளிலிருந்தும், அதனால் உண்டாகும் தீமையான எண்ணங்களிலிருந்தும் அவர்களை இழுத்து சுவேச்சையாய் அவைகளை ஏற்றுக்கொள்ள தாங்கள் மனம்கொள்ளுகிற அளவு; நல்ல ஆசைகளை அவர்களுக்கு புகட்டும்பொருட்டு, அவர்களிடத்தில் அனுப்பப்படுகிறார்கள். இவைகள் மூலமாய் கூடுமட்டும் கெட்ட எண்ணங்களை நீக்குவதினால், மனிதர்களுடைய செய்கைகள் அல்லது வேலைகளுக்கு அவர்கள் வழிகாட்டுகிறார்கள். தேவர்கள் மனிதர்களுடன் இருக்கும்போது, அவர்கள் அவர்களுடைய ஆசைகளில் வசித்து, மனிதனானவன் உண்மைகளிலிருந்து நன்மையில் இருக்கிற அளவு, அவனுக்கு சமீபத்திலிருக்கிறார்கள்; ஆனால், அவனுடைய உயிரானது நன்மைக்கு தூரத்திலிருக்கிறதற்கு தக்கபடி அவர்கள் அதிக தூரத்திலிருக்கிறார்கள். ஆனால் தேவர்களின் இந்த தொழில்கள் எல்லாம் தேவர்கள் மூலமாய் ஆண்டவருடைய தொழில்களாயிருக்கின்றன; ஏனென்றால், தேவர்கள், அவைகளை தங்களிடமேயிருந்து அல்லாமல் ஆண்டவரிடமிருந்து, செய்கிறார்கள். அதனால்தான் வேதத்தில் தேவர்கள் என்பதினால், அதன் உள்ளான அருத்தத்தில், தேவர்கள் என்று கருதப்படாமல், ஆண்டவரின் ஏதோ ஒன்று என்று கருதப்படுகிறது; ஆகவே, வேதத்தில் தேவர்கள் கடவுளர் என்று சொல்லப்படுகிறார்கள்.

**392.** தேவர்களின் இந்த தொழில்கள், அவர்களுடைய சாதாரண தொழில்களாயிருக்கின்றன; ஆனால், ஒவ்வொருவனுக்கும் தன்னுடைய சிறப்பான கடமை உண்டு; ஏனென்றால், ஒவ்வொரு பொதுவான உபயோகமும், மத்தியமானதும், சேவிக்கிறதும், துணையானதுமாகிய உபயோகங்கள் என்று சொல்லப்படுகிற கணக்கற்ற உபயோகங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது. எல்லாமும்

ஒவ்வொன்றும், தெய்வீக ஒழுங்குக்கு தக்கபடி சமப்படுத்தப்பட்டும், கீழ்படுத்தப்பட்டும் இருக்கின்றன; ஒன்றுப்சேர்த்தால், பொது நன்மையாயிருக்கிற பொது உபயோகத்தை உண்டாக்கி, சம்பூரணமாக்குகின்றன.

**393**. உலகத்திலிருக்கும்போது, கீர்த்திக்கும் லாபத்திற்கும் அல்லாமல், தங்களுக்காகவும் பிறருக்காகவும் வாழ்வின் உபயோகங்களின் பொருட்டு, வேதத்தின்பேரில் அன்பு பாராட்டி, அதில் உண்மைகளை தேடினவர்கள் சுவர்க்கத்தில் திருச்சபைக் குறிய விஷயங்களில் தொழில் படுகிறார்கள். இவர்கள், தங்களுடைய அன்புக்கும் உபயோகத்தின்பேரில கொள்ளும் ஆசைக்கும் தக்கபடி, சுவர்க்கத்தில் தெளிவிலும் ஞானத்தின் வெளிச்சத்திலும் இருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள், உலகத்தில்போல சுவர்க்கங்களில் ஸ்தூலமாயிராமல், ஞானசம்பந்தமாயிருக்கிற (மேலே செ. 259 பார்க்கவும்) வேதத்திலிருந்து அங்கே அந்த வெளிச்சத்திற்குள் வருகிறார்கள். இவர்கள் போதகர் வேலையை செய்கிறார்கள்; தெய்வீக ஒழுங்கின்படி, தெளிவிலிருந்து,ஞானத்தில் மற்றவர்களை மேற்படுகிறவர்கள், அதிக உயர்ந்த நிலைமையிலிருக்கிறார்கள். உலகத்திலிருக்கும்போது, தங்களுக்கு சொந்தமானதைவிட தங்கள் தேசத்தையும் பொது நன்மையையும், நல்லதென்று தெரிந்து அவைகளை நேசித்து, நியாயமானதின் பேரிலும், சரியானதின் பேரிலும் கொள்ளும் அன்பிலிருந்து நியாயமானதையும் சரியானதையும் செய்தவர்கள், தேசாசாரமான விஷயங்களில் உடன்படுகிறார்கள். அன்பிடத்து கொள்ளும் அவாவிலிருந்து, நியாயமானதைப் பற்றிய சட்டங்களை அவர்கள் எவ்வளவு விசாரித்து,விவேகிகளானார்களோ, அவ்வளவு சுவர்க்கத்தில் உத்தியோகங்களை நடத்தும் சக்தியிலிருக்கிறார்கள்; மேலும், தங்களுடைய விவேகமிருக்கும் இடத்தில், அல்லது பிரமாணத்தில் அவர்கள் அவைகளை நடத்துகிறார்கள்; இந்த விவேகமானது பொது நன்மையின் பொருட்டு உபயோகத்தினிடத்து கொள்ளும் அவர்கள் அன்புக்கு சமமாயிருக்கிறது. இவைகளைத் தவிர, அநேகமாய் இருப்பதினால் கணக்கிட முடியாதபடி, சுவர்க்கத்தில் அவ்வளவு அநேக உத்தியோகங்களும், அரசாட்சிகளும், தொழில்களும் இருக்கின்றன; அதனுடன் ஒப்பிட்டால், உலகத்திலிருப்பவைகள் கொஞ்சமாயிருக்கின்றன. அவைகள் எவ்வளவு ஏராளமானதாயிருந்தபோதிலும், எல்லாரும்உபயோகத்தினிடத்துகொள்ளும் அன்பிலிருந்து,தங்களுடைய வேலையிலும்

உழைப்பிலும் இன்பம் அடைகிறார்கள்; யாரும் தன்னையே நேசித்தலிலிருந்தும் அல்லது லாபத்திலிருந்தும் இன்பம் அடைகிறதில்லை. வாழ்க்கைக்கு வேண்டியவைகளெல்லாம், அவர்களுக்கு கைமாறின்றி கொடுக்கப்படுகிறபடியினால், வாழ்தல் பொருட்டு யாருக்கும் லாபத்தினிடத்து ஆசைகிடையாது; அவர்களுக்கு வீடும், துணிகளும், உணவும் இலவசமாக கொடுக்கப்படுகின்றன. ஆகவே, தங்களையும் உலகத்தையும், உபயோகத்தைவிட அதிகமாய் நேசித்தவர்களுக்கு சுவர்க்கத்தில் இடமில்லை என்பது விசதமாகிறது; ஏனென்றால், ஒவ்வொரு மனிதனுடைய அன்பு அல்லது ஆசை, உலகத்தில் வாழ்ந்த பிறகு அவனுடன் இருக்கிறது; சதா காலம் அது நிர்மூலமாக்கப்படுகிறதில்லை (செ. 363 பார்க்கவும்).

**394**. சுவர்க்கத்தில் ஒவ்வொருவனும் அன்னுவயத்திற்கு தக்கபடி தன்னுடைய சொந்த தொழிலுக்கு வருகிறான்; அந்த அன்னுவயமானது தொழிலோடல்லாமல், ஒவ்வொரு தொழிலின் உபயோகத்துடனும் இருக்கிறது (மேலே செ. 112 பார்க்கவும்); ஒவ்வொன்றினுடைய அன்னுவயமும் இருக்கிறது (செ. 106 பார்க்கவும்). தன்னுடைய உபயோகத்திற்கு தக்கபடி ஒரு உத்தியோகத்திலும் தொழிலிலும் சுவர்க்கத்தில் இருக்கப்பட்டவன் அவன் உலகத்திலிருந்ததுபோல சரியாய் ஒரு வாழ்க்கையின் நிலைமையிலிருக்கிறான்; ஏனென்றால் சூக்குமமானதும் ஸ்தூலமானதும் அன்னுவயங்களால் ஒன்றாகின்றன; என்றாலும், அவன் அப்பொழுது அந்தரங்கமான வாழ்வாயிருக்கிற சூக்கும வாழ்விற்கு வருகிறபடியினால், சுவர்க்கத்து வரங்களை ஏற்றுக்கொள்ளக் கூடியவனா யிருக்கிறதின் நிமித்தம், உள்ளான ஆனந்தத்தில் வருகிறானென்கிற வித்தியாசமிருக்கிறது.

# XLII

## சுவர்க்கத்து ஆனந்தமும் சுகமும்

**395.** சுவர்க்கம் என்னவென்றும், சுவர்க்கத்து ஆனந்தம் என்னவென்றும், இக்காலத்தில் சாதாரணமாய் யாருக்கும் தெரியாது; அந்த விஷயத்தைப்பற்றி நினைத்தவர்கள், ஒரு அபிப்பிராயமாகக்கூடாதபடி, அவ்வளவு பருத்ததும் பொதுவானதுமாகிய ஒரு அபிப்பிராயத்தை கொண்டார்கள். உலகத்திலிருந்து மறுமைக்கு சென்ற ஆவிகளிடமிருந்து, அவைகள் சுவர்க்கத்தைப்பற்றியும் சுவர்க்க ஆனந்தத்தைப்பற்றியும் என்ன எண்ணம் கொண்டதென்று, நான் முழுமையும் தெரிந்துகொண்டேன்; ஏனென்றால், அவைகள் உலகத்திலிருந்ததுபோல், தங்கள் இஷ்டப்படிவிடப்பட்டால், அவைகள் அப்பொழுது செய்ததுபோலவே நினைக்கின்றன. சுவர்க்க ஆனந்தம் என்னவென்று தெரிந்திருக்கப்படவில்லை; ஏனென்றால், அதைப்பற்றி நினைத்தவர்கள், ஸ்தூல மனிதனுக்கு சேர்ந்த புறம்பான சந்தோஷங்களிலிருந்து நினைத்தார்களே ஒழிய, உள்ளான அல்லது ஞானசம்பந்தமான மனிதன் யார் என்றும், அதனால், அவனுடைய இன்பமும் வரமும் என்னவென்றும் தெரிந்துகொண்டிருக்கவில்லை. சூக்கும அல்லது உள்ளான இன்பத்திலிருக்கப்பட்டவர்கள், சுவர்க்கத்து ஆனந்தத்தின் உண்மையான சுபாவத்தைப்பற்றி அவர்களுக்கு சொன்னால், அதைக் கிரகிக்க அவர்களுக்கு சக்தி கிடையாது; ஏனென்றால், அது தெரிந்திருக்கப்படாத ஓர் அபிப்பிராயத்தில் விழும், இவ்விதமாக உணர்ச்சிக்கு எட்டாது; அதனால், ஸ்தூல மனிதன் தள்ளுகிறவைகளில் ஒன்றாகும். என்றாலும், ஒவ்வொருவனுக்கும், தான் புறம்பான அல்லது ஸ்தூல மனிதனை விட்டுவிடும்போது, உள்ளான அல்லது ஞானசம்பந்தமான மனிதனில் வருகிறோமென்று தெரிந்திருக்கலாம்; அதிலிருந்து, சுவர்க்கானந்தம் புறம்பானதும் ஸ்தூலமானதல்லாமல் உள்ளானதென்றும், ஞானசம்பந்தமானதென்றும் உள்ளானதும் ஞானசம்பந்தமானதுமாயிருப்பதினால், அது அதிக சுத்தமாயும், அதிக சூக்குமமாகவும் இருந்துகொண்டு, தன்னுடைய ஆன்மா அல்லது ஆவிக்கு சேர்ந்த மனிதனுடைய உள்ளானவைகளை மனதிற்பட செய்கிறதென்றும் தெரிந்திருக்கப்படலாம். இந்த

ஆலோசனைகளிலிருந்து மாத்திரம், ஒவ்வொருவனும் மறுமையில் தன் இன்பம், தன்னுடைய ஆன்மாவின் இன்பம் இருந்ததுபோல, அதே குணமுடையதாயிருக்கு மென்றும், மாமிசத்தின் இன்பம் என்று சொல்லப்படுகிற சரீரத்தின் இன்பம் ஒப்பனையில் சுவர்க்கத்துக்கு அடுத்ததாயில்லையென்றும், தீர்மானிக்கலாம். சரீரத்தை விடும்போது மனிதனுடைய ஆவியிலிருக்கிறது, இறந்த பிறகும் நிற்கிறது; ஏனென்றால், அப்பொழுது அவன் மனித ஆவியாய் வாழ்கிறான்.

**396**. எல்லா இன்பங்களும் அன்பிலிருந்து வெளியே வருகிறது; ஏனென்றால், ஒருமனிதன் எதை நேசிக்கிறானோ அதை இன்பமுள்ளதாக நினைக்கிறான். யாருக்கும் வேறு எந்த மூலத்திலிருந்தும் எந்த இன்பமும் கிடையாது. ஆகவே, இதிலிருந்து அன்பு இருக்கிற மாதிரி இன்பமுமிருக்கிறதென்று ஏற்படுகிறது. சரீரத்தினுடைய அல்லது மாமிசத்தினுடைய எல்லா இன்பங்களும் தன்னையே நேசித்தலிலிருந்தும் உலகத்தை நேசித்தலிலிருந்தும் ஊறுகின்றன; இவ்விதமாக, அவைகள் சிற்றின்ப சம்பந்தமான துர் இச்சைகளாகவும் அவைகளின் சந்தோஷங்களாகவு மிருக்கின்றன. ஆனால், ஆன்மாவினுடைய அல்லது ஆவியினுடைய எல்லா இன்பங்களும், நன்மையினுடையவும் உண்மையினுடையவும், உள்ளான திருப்தியினுடையவும் மூலமாயிருக்கிற ஆண்டவரிடத்து அன்பிலிருந்தும், அயலானிடத்து அன்பிலிருந்தும் ஊறுகின்றன. இந்த ஆசைகளும் அவைகளின் இன்பங்களும் ஆண்டவரிடமிருந்தும் மேலேயிருந்து வந்து, உள்ளானவைகளை பகட்டுகிற ஒரு உள்ளான வழியினால் சுவர்க்கத்திலிருந்தும் உள்ளே பாய்கின்றன; ஆனால், முன் கூறிய ஆசைகளும் அவைகளின் இன்பங்களும், கீழே இருந்து வந்து, புறம்பானவைகளை பகட்டுகிற ஒரு புறம்பான வழியினால் மாமிசத்திலிருந்தும் உலகத்திலிருந்தும் உள்ளே பாய்கின்றன. ஆகையினால், சுவர்க்கத்தின் அந்த இரண்டு அன்புகளும் எவ்வளவுதூரம் ஏற்றுக்கொள்ளப்பட்டு மனிதனை பகட்டுகிறதோ, அவ்வளவுதூரம் ஆன்மாவிற்கு அல்லது ஆவிக்குச் சேர்ந்த அவனுடைய உள்ளானவைகள் திறக்கப்பட்டு, உலகத்திலிருந்து சுவர்க்கத்தை பார்க்கின்றன; ஆனால், உலகத்தின் அந்த இரண்டு அன்புகளும் ஏற்றுகொள்ளப்பட்டு அவனை பகட்டுகிற அளவு, சரீரத்துக்கு அல்லது மாமிசத்துக்கு சேர்ந்த புறம்பானவைகள், திறக்கப்பட்டு, சுவர்க்கத்திலிருந்து உலகத்தை பார்க்கின்றன.

புன்புகள் உள்ளே பாய்ந்து ஏற்றுக்கொள்ளப்படுகிறபோது, அதே காலத்தில்கூட அவைகளின் சந்தோஷங்களும் உள்ளே பாய்கின்றன; எல்லா இன்பமும் சற்று முன்கூறியபடி, அன்புக்கு சேர்ந்தபடியினால், சுவர்க்கத்தின் இன்பங்கள் உள்ளானவைகளுக்குள்ளும், உலகத்தின் இன்பங்கள் புறம்பானவைகளுக்குள்ளும் பாய்கின்றன.

**397.** சுவர்க்கமே, யோசித்துப் பார்த்தால், தேவ அருளும் இன்பமும் தவிர வேறொன்றுமில்லாதபடி, அவ்வளவு இன்பங்களால் நிறைந்ததாயிருக்கிறது; ஏனென்றால், ஆண்டவருடைய தெய்வீக அன்பிலிருந்து வெளிவரும் தெய்வீக நன்மை, அங்கிருக்கும் ஒவ்வொருவனுக்கும் பொதுவாகவும் சிறப்பாகவும் சுவர்க்கத்தை உண்டாக்குகிறது; தெய்வீக அன்பு என்பது மிகவும் உள்ளான மூலவஸ்துக்களிலிருந்தும், நிறைவாகவும், எல்லாருடைய மேற்றத்தையும் சுகத்தையும் இச்சிப்பதில் அமைந்திருக்கிறது. ஆகவே, நீர் சுவர்க்கமென்றும் அல்லது சுவர்க்க சந்தோஷமென்றும் எது சொன்னாலும் ஒன்றேயாகிறது.

**398.** சுவர்க்கத்தின் இன்பங்கள் வாக்குக்கு எட்டாததாகவும் கணக்கற்றதாகவும் இருக்கின்றன; ஆனால், அந்த கணக்கற்ற இன்பங்களில் ஒன்றுகூட, சரீரத்தினுடைய அல்லது மாமிசத்தினுடைய இன்பத்தில் மாத்திரம் இருக்கிறவனால் தெரிந்துகொள்ளப்படவும், நம்பப்படவும் முடியாது; ஏனென்றால், மேலே கூறப்பட்டபடி, அவனுடைய உள்ளானவைகள் சுவர்க்கத்திலிருந்து உலகத்தையும் இவ்விதமாக பின்புறமும் பார்க்கின்றன. ஏனென்றால், சரீரத்தினுடையவும் அல்லது மாமிசத்தினுடையவும் இன்பத்திலும் அல்லது அதேவாகிறபடி, தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலிலும், முழுமையும் இருக்கிறவன், கீர்த்தியிலும், லாபத்திலும் சரீரத்தினுடையவும் இந்திரியங்களுடையவும் சந்தோஷங்களிலும் தவிர, வேறு எதிலும் ஆனந்தமடைகிறதில்லை; மேலும் இவைகள் சுவர்க்கத்துக்குச் சேர்ந்த உள்ளான ஆனந்தங்களை, அவைகளைக் குறித்த எல்லா நம்பிக்கையையும் அழிக்கும்படியாக அவ்வளவு அழித்து, திக்குமுக்காடச்செய்கிறது. இந்த காரணத்துக்காக, கீர்த்தியினுடையவும், லாபத்தினுடையவும், சந்தோஷங்களை நீக்கிவிடுவதினால், இன்பங்கள் கொடுக்கப்படுமென்று அவனுக்குச் சொல்லப்பட்டால், அவன் அதிகமாய் ஆச்சரியப்படுவான்; மேலும், அவைகளுக்கு பதிலாக வரும் சுவர்க்கத்து இன்பங்கள் கணக்கற்றவைகளென்றும், கீர்த்திக்கும் லாபத்திற்கும் முக்கியமாய் சேர்ந்த

றவைகளாய் இருக்கிற சரீரத்தினுடையவும் மாமிசத்தினுடையவும் ந்தோஷங்கள், அவைகளுடன் ஒப்பிடக்கூடாதபடி அவ்விதமா யிருக்கின்றனவென்று, அவனுக்கு சொல்லப்பட்டால் இன்னும் அதிகமாய் ஆச்சரியப் படுவான். ஆகவே, சுவர்க்க ஆனந்தம் ன்னவென்று ஏன் தெரிந்திருக்கப்படவில்லை என்பதும் இப் பொழுது விசதமாகிறது.

**399**. சுவர்க்கத்தின் இன்டம் எவ்வளவு பெரியதாயிருக்கிற தென்பது, இந்த விஷயத்திலிருந்து, அதாவது சுவர்க்கத்தில் இருப்பவர்கள் எல்லாருக்கும் தங்களுடைய இன்பங்களையும் வரங் களையும் மற்றவர்களுக்கு அறிவித்தல், இன்பமானதென்பதிலிருந்து தோன்றலாம்; சுவர்க்கத்திலிருப்பவர்கள் எல்லாரும் இந்த குண முடையவர்களா யிருக்கிறபடியினுல், சுவர்க்கத்தின் இன்பமானது எவ்வளவு அளவற்றதா யிருக்கிறதென்பது தெளிவாகிறது; ஏனென்றால், மேலே (செ. 268) காண்பிக்கப்பட்டபடி, சுவர்க்கங் களில், எல்லாரும் ஒவ்வொருவனுடனும், ஒவ்வொருவனும் எல்லா ருடனும், சம்பந்தம் வைத்திருக்கிறார்கள். அவ்விதமான சம்பந்தம், முன் சொல்லியபடி ஆண்டவரிடத்து அன்பும் அயலானிடத்து அன்புமாயிருக்கிற சுவர்க்கத்தின் இரண்டு அன்புகளிலிருந்து பெருக்கெடுக்கின்றது. இந்த அன்புகள், தங்களுடைய இன்பங் களை வெளியிடும் தன்மை உடையவைகளா யிருக்கின்றன. ஆண்ட வர் எல்லாருடைய சுகத்தையும் கோருகிறபடியினுல், அவருடைய அன்பு தன்னிடமிருப்பதை எல்லாம் எல்லாருக்கும் அறிவிப்பதின் அன்பாயிருப்பதின் நிமித்தம், ஆண்டவருடைய அன்பானது அவ் விதமானதாயிருக்கிறது. அவரை நேசிக்கிறவர்கள் ஒவ்வொருவரிடத் திலும், அவ்விதமான அன்பு இருக்கிறது; ஏனென்றால் ஆண்டவர் அவனில் இருக்கிறார். ஆகவே, தேவர்களின் இன்பங்களுடைய அன் னியோன்னிய சம்பந்தத்தை ஒவ்வொருவரும் மற்றவர்களுடன் உடைத்தாயிருக்கிறார்கள். அயலானிடத்து அன்பு என்பது அவ்வித மான குணமுடையதென்பது பின் வருவதில் அறிந்துகொள்ளப் படலாம். இவைகளிலிருந்து இந்த ஆசைகள் தங்களுடைய இன்பங் களை வெளிப்படுத்தக் கூடியவைகளா யிருக்கின்றனவென்பது விசித மாகிறது. தன்னிடமேயும் உலகத்தினிடத்தும் கொள்ளும் அன் புகள் விஷயத்தில் அது வேறுமாதிரி. தன்னையே நேசித்தல் எல்லா இன்பத்தையும் மற்றவர்களிடமிருந்து பிரித்து எடுத்து, தன்னிடமே இழுத்துக்கொள்ளுகிறது; ஏனென்றால், அது தனக்கே மாத்திரம்

ன்மையை கோருகிறது. உலகத்தினிடத்து அன்பு, தன்னுடைய அயலானுடையது, தன்னுடைய சொந்தமானதாயிருக்க விரும்புகிறது. ஆகையினால், இந்த ஆசைகள், மற்றவர்களுடைய இன்பங்களை நாசப்படுத்தப்பட்டவைகளாயிருக்கின்றன. அவைகள் அறிவிக்கத்தக்கவைகளாயிருந்தால், மற்றவர்களுக்காக அல்லாமல், தங்களுக்காகவே அப்படி இருக்கின்றன; ஆகையினால், மற்றவர்கள் விஷயத்தில், அவைகள் மற்றவர்களுடைய சந்தோஷங்கள் தங்களுடன் அல்லது தங்களிலேயே இருக்கிற அளவு தவிர, அறிவிக்கத்தக்கவைகளாயில்லாமல், நாசப்படுத்தக்கூடியவைகளாயிருக்கின்றன. தன்னிடத்திலும் உலகத்தினிடத்தும் கொள்ளும் அன்புகளின் சுபாவம் அரசாட்சி செய்யுங்கால், அவ்விதமாயிருக்கிறதென்று, உயிருள்ள அனுபவத்தில் நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன். உலகத்தில் மனிதர்களாக வாழ்ந்த காலத்தில் அந்த அன்புகளில் இருந்த ஆவிகள் சமீபத்தில் வந்தபோது, என்னுடைய சந்தோஷமானது பின்னடைந்து மறைந்து போய்விட்டது. இப்பேர்ப்பட்டவைகள், எந்த சுவர்க்கத்து கூட்டத்தை சமீபித்தால் மாத்திரம், அவைகளின் சந்நிதியின் அளவுக்குதக்கபடி, அந்த கூட்டத்தில் இருக்கிறவர்கள் சந்தோஷம் குறைக்கப்படுகிறதென்று எனக்கு கூட சொல்லப்பட்டது; மேலும், ஆச்சரியம் என்னவென்றால், அந்த தீங்கான ஆவிகள், அக்காலத்தில் தங்களுடைய இன்பத்தில் இருக்கின்றன. ஆகவே, சரீரத்திலிருக்கும் அவ்வித மனிதனுடைய ஆன்மாவின் குணம் விசதமாயிற்று; ஏனென்றால், அது சரீரத்திலிருந்து பிரிந்த பிறகு இருக்கிறதுபோல் இருக்கிறது; அதாவது, அந்த ஆவியானது மற்றவர்களுடைய இன்பங்களை அல்லது நன்மைகளை விரும்புகிறது அல்லது இச்சிக்கிறது; மேலும், அது அவைகளை எவ்வளவு அடைகிறதோ அவ்வளவு இன்பத்தை உடைத்தாயிருக்கிறது. ஆகையினால், இவைகளிலிருந்து தன்னையேயும் உலகத்தையும் நேசித்தல், சுவர்க்கத்தின் ஆனந்தங்களை அழிக்கக்கூடியனவைகளாயிருக்கின்றன வென்றும், அதனால் பகிர்ந்து கொள்ள விரும்புகிற சுவர்க்கத்து ஆசைகளுக்கு முழுமையும் எதிரிடையாயிருக்கின்றன வென்றும் அறிந்துகொள்ளலாம்.

**400.** ஆயினும், எந்த சுவர்க்கத்து கூட்டத்தை யாராவது அணுகும்போது, தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலில் இருக்கப்பட்டவர்களின் இன்பமானது, அவர்கள் தூர் இச்சையின் இன்பமாயிருக்கிறதென்றும், இவ்விதமாக சுவர்க்கத்து இன்பத்

க்கு முழுமையும் எதிரிடையாயிருக்கிறதென்றும், கவனிக்கப்படவேண்டும்; இவ்விதமானவைகள், அவ்வித இன்பத்தில் இருக்கப்பட்டவர்களிடத்தில் இருக்கும் சுவர்க்கத்து இன்பத்தை அவர்கள் எடுத்துக்கொண்டு, நீக்குவதின் நிமித்தம், தங்களுடைய துர் இச்சையின் இந்த இன்பத்துக்கு வருகின்றன. சுவர்க்கத்து இன்பமானது எடுத்துக்கொள்ளப்படாவிட்டால் அல்லது அகற்றப்படாவிட்டால், விஷயம் வேறு மாதிரியிருக்கிறது; ஏனென்றால், அப்பொழுது அவைகள் சமீபத்தில் வர சக்தியற்றவைகளாயிருக்கின்றன; ஏனென்றால், அவைகள் சமீபத்தில் வருகிற அளவு, தங்களுக்கே வியாகூலத்தையும் வருத்தத்தையும் உண்டாக்கிக்கொள்ளுகின்றன; இந்த காரணத்துக்காக அவைகள் சமீபத்தில்வர அடிக்கடி துணிகிறதில்லை. இதுகூட, பலமுறையும்கண்ட அனுபவத்திலிருந்து நான் தெரிந்துகொள்ள எனக்கு அருள்செய்யப்பட்டது; அதிலிருந்து சில உதாரணங்களை எடுத்துக் காட்டுகிறேன். உலகத்திலிருந்து மறுமைக்குவரும் ஆவிகள், சுவர்க்கத்திற்கு வருவதைவிட எதையும் அதிக முயற்சியாய் விரும்புகிறதில்லை. ஏறக்குறைய எல்லா ஆவிகளும் பிரவேசிக்க நாடுகின்றன; ஏனென்றால், சுவர்க்கம் என்பது இடங்கொடுக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்படுதலில் மாத்திரம் அமைந்திருக்கிறதென்று அவைகள் நினைக்கின்றன. இந்த காரணத்துக்காக அவர்களின், விருப்பத்தின்படி, மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் ஏதோ ஒரு கூட்டத்திற்கு அவைகள் கொண்டுவரப்படுகின்றன; ஆனால், தன்னையேயும் உலகத்தையுமே நேசித்தலில் இருக்கப்பட்டவைகள், அந்த சுவர்க்கத்தின் முதல் வாயிற்படியை அணுகும்போது, சுவர்க்கத்தைவிட தங்களுக்குள்ளேயே நரகத்தை உணரும்படியாக அவ்வளவு துன்பமுற்று, உள்ளுக்குள்ளாய் வதைக்கப்பட ஆரம்பிக்கின்றன; ஆகையினால், அவைகள் தாங்களே அங்கிருந்து தலைகீழாய் விழுகின்றன; அதுவுமன்றி, தங்களைப் போன்றவர்கள் மத்தியில் நரகத்துக்கு வருகிறவரையில், அவைகள் இளைப்பாறுகிறதில்லை. அவ்விதமான ஆவிகள் சுவர்க்கத்து இன்பம் என்னவென்று தெரிந்துகொள்ள விரும்பினதாகவும், தேவர்களின் உள்ளான பாகங்களில் அது இருப்பதாக அவைகள் கேள்விப்பட்டபோது, அது தங்களுக்கு பகிர்ந்து கொடுக்கப்பட அவைகள் விரும்பினதாகவும் அடிக்கடி நேரிட்டிருக்கிறது. இது அவைகளுக்கு அருள் செய்யப்பட்டது; ஏனென்றால், சுவர்க்கத்திலாவது நரகத்திலாவது எப்பொழுதும் இல்லாத ஒரு ஆவி விரும்

புகிறது, அதற்கு ஏதாவது பிரயோசனமாயிருக்கும் பட்சத்தில் அதற்கு உபகரிக்கப்படுகிறது. ஆனால், அந்த சந்தோஷமானது பகிர்ந்து கொடுக்கப்பட்ட உடனே, வருத்தத்தினால் சரீரத்தை எப்படிமுறுக்குகிறது, அல்லது திருப்புகிறதுஎன்று தெரியாதபடி, அவைகள் சித்திரவதைக்குள்பட ஆரம்பித்தன. தங்கள் தலைகளை தங்கள் பாதங்கள் வரையில் அமுக்கி, பூமியின்பேரில் தாங்களை விழுந்து, அங்கே, உள்வேதனையினால், ஒரு பாம்பைப்போல வட்டம் வட்டமாக அவைகள் புரளுவது பார்க்கப்பட்டன. தங்களிடத்திலேயும், உலகத்தினிடத்திலும் கொள்ளும் ஆசைகளிலிருந்துவரும் சந்தோஷங்களில் இருந்தவர்களிடத்து, இவ்விதகாரிய சித்தி சுவர்க்கத்து ஆனந்தத்தினால் உண்டாக்கப்பட்டது. அந்த ஆசைகள் சுவர்க்கத்து ஆசைகளுக்கு முழுமையும் எதிரிடையா யிருக்கின்றனவென்பதும், எதிரிடையானவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாய் செயல்படும்போது, அவ்வித உபாதி உண்டாக்கப்படுகிறதென்பதும் காரணமாயிருக்கிறது. மேலும், சுவர்க்கத்து இன்பமானது ஓர் அந்தரங்கமான வழியில் பிரவேசித்து, எதிரிடையான இன்பத்தில் பாய்கிறபடியினால், பின்கூறியதில் இருக்கும் உள்ளானவைகளை பின்பக்கம், இவ்விதமாக தங்களுக்கே எதிரிடையானவைகளுக்குள் அது திருப்புகிறது; ஆகவே, இவ்வித வேதனைகள் உண்டாகின்றன. மேல் கூறியபடி, தங்களுடைய இன்பமாயிருக்கிறபடியினால், ஆண்டவரிடத்து அன்பும், அயலானிடத்து அன்பும், தங்களுடைய சொந்தமானவைகள் எல்லாவற்றையும் மற்றவர்களுக்குப் பகிர்ந்துகொடுக்கவிரும்புகிறபடியினாலும், தன்னையேயும் உலகத்தையும் நேசித்தல் மற்றவர்களிடமிருந்து, அவர்கள் உடைத்தாயிருக்கிற எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, தங்களிடத்திலேயே இழுத்துக்கொள்ள விரும்புகிறபடியினாலும், அப்படி செய்யக்கூடிய அளவு, தங்கள் இன்பத்தில் இருக்கிறபடியினாலும், மாறுபாடு அவ்விதமாயிருக்கிறது. இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து, நரகமானது சுவர்க்கத்திலிருந்து ஏன் பிரிக்கப்படுகிறதென்பதுகூட தெரிந்திருக்கப்படலாம். உலகத்தில் வாழ்ந்தபோது, நரகத்திலிருப்பவர்கள் எல்லாம், தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலிலிருந்து, சரீரத்தினுடையவும் மாமிசத்தினுடையவும் இன்பங்களில் மாத்திரம் இருந்தார்கள்; ஆனால், சுவர்க்கங்களில் இருக்கப்பட்டவர்கள், எல்லாம் உலகத்தில் வாழ்ந்தபோது, ஆண்டவரிடத்து அன்பிலிருந்தும் அயலானிடத்து அன்பி

லிருந்தும், ஆன்மாவினுடையவும் ஆவியினுடையவும், இன்பங்களில் இருந்தார்கள். இந்த அன்புகள் எதிரிடையானவைகளானபடியி ஞல், நரகத்திலிருக்கும் ஒரு ஆவியானது, அதிலிருந்து ஒரு விரலை வெளியிடவாவது, தன்னுடைய உச்சந்தலையை தூக்கவாவது துணி யாதபடி, நரகங்களும் சுவர்க்கங்களும் அவ்வளவு முழுமையும் பிரிக்கப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், அது அப்படி எவ்வளவு கொஞ்சம் செய்தபோதிலும், அது சித்திரைவதைக்குள்பட்டு வாதிக் கப்படுகின்றன. இதைக்கூட நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன்.

**401**. தன்னையேயும் உலகத்தையும் நேசித்தலில் இருக்கப் பட்ட மனிதன், சரீரத்தில் இருக்கிற வரையில், அந்த அன்புகளி லிருந்தும், அதனுடன்கூட, அவைகளிலிருந்து வருகிற பலவித மான சந்தோஷங்களிலிருந்தும், இன்பத்தை உணருகிறான். ஆனால், ஆண்டவரிடத்து அன்பிலும் தன்னுடைய அயலானிடத்து அன்பி லும் இருக்கிற மனிதன், சரீரத்தில் வாழ்கிற வரையில், அந்த அன்புகளிலிருந்தும், அவைகளிலிருந்து வரும் நல்ல ஆசைகளி லிருந்தும், உண்டாகிற வெளிப்படையான சந்தோஷத்தை உணரா மல், தன்னுடைய உள்ளானவைகளில் சேகரிக்கப்பட்டு, சரீரத்தைச் சேர்ந்த புறம்பானவைகளால் மறைக்கப்பட்டு, உலக கவலைகளால் சுரணை அழிக்கப்பட்டு இருப்பதினால், ஏறக்குறைய புலப்படாத ஒரு மோட்ச ஆனந்தத்தை மாத்திரம் அடைகிறான். இந்த நிலைமைகள் இறந்த பிறகு முழுமையும் மாற்றப்படுகின்றன. தன்னையும் உலகத்தையும் நேசித்தலின் இன்பங்கள், நரகத்தின் நெருப்பு என்று சொல்லப்படுகிற நோவு உண்டாக்குகிறதும் பயங்கரமானது மாகவும், அவைகளினால் அப்பொழுதும், அவைகளுக்கு நமக்குச் சொல்ல ஆச்சரியமாயிருக்கிற, இன்பமாயிருக்கிற, அசுத்தமான இன்பங்களுக்கு ஒத்துப்போகிற, அழுக்குள்ளதும் ஊழலானதுமான பொருள்களாக திருப்பப்படுகின்றன. ஆனால், ஆண்டவரிடத்து அன்பிலும், அயலானிடத்து அன்பிலும் உலகத்தில் இருந்தவர்களு டன் இருந்த தெளிவற்ற இன்பமும், ஏறக்குறைய புலப்படாத மோட்ச ஆனந்தமும், எந்த வழியிலும் பார்க்கக்கூடியதும், உணரக் கூடியதுமாகிய சுவர்க்கத்து ஆனந்தமாக பிறகு திருப்பப்படுகிறது; ஏனென்றால், அவர்கள் உலகத்திலிருந்தபோது, அவர்களுடைய உள்ளான பாகங்களில் சேகரிக்கப்பட்டு, மறைந்து கிடந்த அந்த மோட்ச ஆனந்தம், அப்பொழுது வெளிப்படுத்தப்பட்டு தெளிவான உணர்ச்சிக்கு கொண்டுவரப்படுகிறது; ஏனென்றால், அவர்களுடைய

ஆவியின் சந்தோஷம், அவ்விதமாயிருந்தது; மேலும், அவர்கள் அப்பொழுது ஆவியிலிருக்கிறார்கள்.

**402.** உபயோகங்களானவை தேவர்கள் இருக்கப்பட்ட அன்பினுடையவும் தருமத்தினுடையவும் நன்மைகளாயிருக்கிற படியினால், உபயோகங்களில், சுவர்க்கத்தின் எல்லா சந்தோஷங்களும் ஒருமிக்க கொண்டுவரப்பட்டு நிகழுகின்றன; ஆகையினால், ஒவ்வொருவனும், தன்னுடைய உபயோகங்களோடு உடன்படுகிற சந்தோஷங்களை, உபயோகத்தினிடத்து கொள்ளும் ஆசையின் அளவுக்கு தக்கபடி உடைத்தாயிருக்கிறான். சுவர்க்கத்தின் எல்லா சந்தோஷங்களும் உபயோகத்தின் சந்தோஷங்களாயிருக்கின்றன என்பது, மனிதனுடைய பஞ்சேந்திரியங்களுடன் ஒப்பிடுவதினால், வெளிப்படையாகும். ஒவ்வொரு இந்திரியத்துக்கும் அதன் உபயோகத்திற்கு தக்கபடி ஒரு இன்பமானது கொடுக்கப்பட்டிருக்கிறது. சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் எனும் ஒவ்வொன்றுக்கும் தன்னுடைய சொந்த சந்தோஷமிருக்கிறது; ரூபமானது, உருவங்களின் அழகிலிருந்தும், சப்தமானது இசைவுள்ள நாதத்திலிருந்தும், கந்தமானது இன்பமுள்ள வாசனைகளிலிருந்தும், ரசமானது நேர்த்தியான உருசியிலிருந்தும் சந்தோஷத்தை அனுபவிக்கின்றன. அவைகள் தனித்தனியாய் செய்யும் உபயோகங்கள் அவைகளை அவதானிக்கிறவர்களுக்கு தெரிந்திருக்கிறது; மேலும், அவைகளின் அன்னுவயங்கள் அறிந்தவர்களுக்கு அதிக முழுமையும் தெரியும். ரூபமானது, உட்பார்வையாயிருக்கிற புத்திக்கு அது செய்கிற உபயோகத்திலிருந்து, அவ்வித இன்பத்தை உடைத்தாயிருக்கிறது; சப்தமானது, உற்றுக் கேழ்ப்பதினால் புத்தி சித்தமாகிய இரண்டுக்கும் தான் செய்யும் உபயோகத்திலிருந்து, அவ்வித இன்பத்தை உடைத்தாயிருக்கிறது; கந்தமானது, மூளைக்கும் அதனுடன் சுவாசாசயங்களுக்கும், அது செய்கிற உபயோகத்திலிருந்து அவ்வித இன்பத்தை உடைத்தாயிருக்கிறது; ரசமானது, இரைப்பைக்கும், அதிலிருந்து போஷிப்பதினால் முழு சரீரத்துக்கும் தான் செய்கிற உபயோகத்திலிருந்து அவ்வித இன்பத்தை உடைத்தாயிருக்கிறது. ஸ்பரிசத்தின் அதிக சுத்தமானதும் தீவிரமிருந்ததுமான சந்தோஷமாயிருக்கிற விவாக இன்பமானது, மானிட வமிசத்தையும், அதிலிருந்து சுவர்க்கத்து தேவர்களையும் தோற்றுவித்தலாயிருக்கிற அதன் உபயோகத்தின் பொருட்டு மற்றவைகளை எல்லாம்விட மேற்படுகிறது. இந்த இன்பங்கள், ஒவ்

வொரு இன்பமும் உபயோகத்துக்கு சேர்ந்ததாகவும், உபயோகத்தை ஒத்ததாகவும், இருக்கிற சுவர்க்கத்தின் உட்பெருக்கிலிருந்து, சேதன நிலையங்களில் இருக்கின்றன.

**403.** உலகத்தில் உண்டான ஒரு கருத்திலிருந்து, சில ஆவிகள், பிறர் தங்களுக்கு தொண்டு செய்கிற ஒரு சோம்பான வாழ்வில், சுவர்க்கத்தின் சுகம் அமைந்திருப்பதாக நம்பின; ஆனால், சுகம் என்பது வேலை செய்யாமலிருப்பதிலும், அதனால் திருப்தியடைவதிலும், எப்பொழுதும் அமைந்திருக்கவில்லை என்று அவர்களுக்கு சொல்லப்பட்டது; ஏனென்றால், ஒவ்வொருவனும் மற்றவர்களுடைய சுகத்தை தானே அடைய விரும்புவான்; ஒவ்வொருவனும், அதை விரும்புவானகையினால், யாருக்கும் அது இல்லாமல் போய்விடும். அவ்விதமான வாழ்வு முயற்சியுள்ளதாயிராமல் சோம்பானதாயிருந்து, வாழ்வின் சக்திகளையெல்லாம் மயக்கும்; மேலும், வாழ்வில் முயற்சியில்லாவிட்டால், வாழ்க்கையில் சுகமே இல்லை என்றும், முயற்சியில்லாமல் ஓய்வு அடைதல், தன் வாழ்வின் முயற்சிக்கு அதிக வீரியத்துடன் ஒருவன் திரும்பிவர, பொழுதுபோக்குக்காக மாத்திரம் இருக்கவேண்டும் என்று, ஒவ்வொருவனுக்கும் தெரிந்திருக்கவேண்டும். தேவர்களின் வாழ்க்கையானது, உபயோகங்களாயிருக்கிற தருமத்தின் நன்மைகளைச் செய்தலில் அமைந்திருக்கிறதென்றும், தேவர்களின் எல்லா சுகமும் உபயோகத்திலும், உபயோகத்திலிருந்தும், உபயோகத்துக்குத் தக்கபடியும் இருக்கிறதென்றும், அநேக சாட்சியங்களால் பின்னிட்டு காண்பிக்கப்பட்டது. சுவர்க்கத்து ஆனந்தமானது, சோம்பான வாழ்விலும், சோம்புத்தனத்தில் சதாகால ஆனந்தத்தை சுவாசித்தலிலும், அமைந்திருக்கிறதென்கிற அபிப்பிராயத்தைக் கொண்டவைகள் வெட்கமடைய, அவ்வித வாழ்வின் கொஞ்சம் அனுபவத்துக்கு இடம் கொடுக்கப்பட்டது; அது மிகவும் விசனமுள்ளதென்றும், எல்லா ஆனந்தமும் இவ்விதமாக அழிந்த பிறகு, கொஞ்சகாலத்தில் அதைத்தள்ளி வெறுப்பாக்குமென்றும் அவைகள் அறிந்துகொண்டன.

**404.** மற்றவைகளைவிட நன்றாய் கற்பிக்கப்பட்டதாக தாங்களே நம்பிய சில ஆவிகள் தாங்கள் உலகத்திலிருக்கும்போது சுவர்க்கத்து ஆனந்தம் கடவுளை போற்றுவதிலும், மகிமைப் படுத்துதலிலும் முழுமையும் அமைந்திருக்கிறதென்றும், இதுதான் முயற்சியுள்ள வாழ்வென்றும் தாங்கள் நம்பியதாக கூறின, ஆனால், கடவுளை

போற்றுதலும், மகிமைப்படுத்தலும், சரியாய் பார்த்தால் ஒரு முயற்சி யுள்ள வாழ்வு அல்லவென்றும், கடவுளுக்கு துதியும் மகிமைபடுத்த லும் தேவையில்லை என்றும், ஆனால் அவர் சித்தமானது, எல்லாரும் உபயோகங்களை செய்து, இவ்விதமாக தருமத்தின் நன்மைகள் என்று சொல்லப்படுகிற நற்செய்கைகளை செய்யவேண்டு மென்கிறது மாயிருக்கிறதென்றும், அவைகளுக்கு சொல்லப்பட்டது. ஆயினும், அவைகளுக்கு அடிமைத்தனம் என்கிற அபிப்பிராயம் தவிர, தருமத்தின் நன்மையில்சுவர்க்க ஆனந்தத்தின் எந்த அபிப்பிராயத் தையும் கொள்ள முடியவில்லை; என்றாலும், அவ்வித நல்ல வேலை களைச் செய்வதில்,முழுசுவேட்கையும் இருக்கிறதென்று தேவர்கள் சாட்சியிட்டார்கள்; ஏனென்றால் அது உள்ளான ஆசையிலிருந்து வந்து, சொல்ல முடியாத ஆனந்தத்துடன் சேர்க்கப்பட்டிருக் கிறது.

**405.** இதர வாழ்வில் பிரவேசிக்கும் கிட்டதட்ட எல்லாரும், நரகமானது ஒவ்வொருவனுக்கும் ஒரேமாதிரி இருக்கிறதென்றும், சுவர்க்கமானது ஒவ்வொருவனுக்கும் ஒரேமாதிரி இருக்கிறதென் றும் நினைக்கிறார்கள்; என்றாலும், இரண்டிலும் முடிவற்ற விகற்பங் களும் வேறுபாடுகளுமிருக்கின்றன.ஒருவனுடைய நரகமானது மற்ற வனுடையதைப்போல் சரியாய் எப்பொழுதுமில்லை;அன்றியும் ஒருவ னுடைய சுவர்க்கமானது மற்றவனுடைய சுவர்க்கத்தைப்போலு மில்லை; ஏனென்றால், முகம் விஷயத்தில்கூட எந்த மனிதனும், ஆவி யும் தேவனும் முழுமையும் மற்றவனைப்போல் எப்பொழுதுமில்லை. இருவர் சரியாய் ஒரேமாதிரியாகவும் அல்லது சமமாகவும் இருப்ப தாக நான் நினைத்தமாத்திரத்தில், தேவர்கள் ஏக்கம் கொண்டு, ஒவ்வொரு சம்பூரணமும், அநேக பொருள்களின் இசைவுள்ள ஒற்றுமையினால் உண்டாக்கப்படுகிறதென்றும், அந்த ஒற்றுமையி லிருந்து, அதன் குணத்தை யடைகிறதென்றும், இவ்விதமாக சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டமும் ஒன்றாகிறதென்றும், சுவர்க் கத்தின் எல்லா கூட்டங்களும் ஒருமிக்க பார்த்தால் ஒன்றாகக்கூட ஆகிறதென்றும், இதுவும் அன்பின்மூலமாய், ஆண்டவரிடமிருந்து மாத்திரம் ஆகிறதென்றும் சொன்னார்கள். சுவர்க்கங்களில் உபயோகங்கள் பலவிதமாகவும் வேறுபாடுள்ளவைகளாகவும்கூட இருக்கின்றன. ஒரு தேவனுடைய உபயோகம் மற்றவனுடையது போல எப்பொழுதும் திட்டமாய் இல்லை; ஆகையினால், ஒரு தேவனுடைய சந்தோஷம் மற்றவனுடைய சந்தோஷத்தைப்போல்

சரியாய் ஒரே மாதிரி இல்லை. இன்னமும், ஒவ்வொரு உபயோகத்தின் இன்பங்களும் கணக்கற்றவைகளா யிருக்கின்றன; இந்த கணக்கற்ற இன்பங்கள் அநேகமாதிரி நானுவிதமா யிருக்கின்றன; என்றாலும், சரீரத்திலுள்ள ஒவ்வொரு அவயவத்தினுடையவும், அங்கத்தினுடையவும், ஆந்திரிகத்தினுடையவும் உபயோகங்கள் போலவும், இன்னமும் ஒவ்வொரு அவயவத்திலும் அங்கத்திலும், ஆந்திரிகத்திலுமிருக்கும் ஒவ்வொரு குழாயினுடையவும், நாரினுடையவும் உபயோகங்கள் போலவும், ஒன்றை ஒன்று அன்னியோன்னியமாய் மதிக்கும்படியாக அவ்வித ஒழுங்கில் சேர்க்கப்பட்டிருக்கின்றன; அவைகளில் ஒவ்வொன்றும், எல்லாமும், தங்கள் சொந்த நன்மையில், மற்றவனுடைய நன்மையை மதிக்கும்படியாக, இவ்விதமாக எல்லாவற்றிலும் ஒவ்வொன்றும், ஒவ்வொன்றிலும் எல்லாமும், இருக்கும்படியாக சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த சர்வ வியாபகமானதும் தனித்ததுமான சம்பந்தத்தில் அவைகள் ஒன்றாக செயல்ப்படுகின்றன.

**406**. நான், உலகத்திலிருந்து புதிதாய் வந்த ஆவிகளுடன் நித்தியகால இராச்சியத்தின் ஆண்டவர் யார் என்றும், அதற்கு எவ்வித அரசாட்சி யிருக்கிறதென்றும், அதன் உருவம் என்னவென்றும், தெரிந்துகொள்ளுதல் முக்கியமென்று சொல்லி, சில சமயங்களில் பேசியிருக்கிறேன். உலகத்தில் வேறு இராச்சியத்திற்கு போகிறவர்களுக்கு, அரசன் யார், அவன் என்னமானவன் என்றும், அவனுடைய இராச்சியத்தின் சுபாவமும் அந்த இராச்சியத்தைக் குறித்து இதர விசேஷங்களும் என்னவென்றும், தெரிந்துகொள்வதைவிட வேறு எதுவும் முக்கியமானதா யில்லாததுபோல, சதாகாலம் தாங்கள் வாழ இருக்கிற இந்த இராச்சியத்தில், அது அதிக பெரிய விசேஷ சங்கதியா யிருக்கிறது. ஆகையினால் ஒன்றை ஆளுகிறவர், மற்ற ஒன்றை ஆளுகிறபடியினால், சுவர்க்கத்தையும், பிரபஞ்சத்தையும்கூட ஆளுகிறவர், ஆண்டவர்தான் என்றும், இவ்விதமாக, தாங்கள் இப்பொழுது இருக்கும் இராச்சியம் ஆண்டவருடையதென்றும், இந்த இராச்சியத்தின் சட்டங்கள், எல்லா பொருள்களையும்விட ஆண்டவரையும், தங்கள் அயலானை தங்களைப் போலவும், நேசிக்க வேண்டுமென்கிற சட்டத்தின்பேரில் ஏற்படுத்தப்பட்ட சாசுவத உண்மைகளென்றும் தெரிந்திருக்கட்டும். நிஜமாகவே, தேவர்களைப்போல இருக்க அவைகள் விரும்பினால், தங்கள் அயலானை தங்களைவிட அதிகமாய்

அவைகள் நேசிக்க வேண்டும். இந்த விஷயங்களைக் கேட்டதின் பேரில், அவைகளுக்கு பதில் சொல்ல முடியவில்லை; ஏனென்றால், சரீரவாழ்வில், அவ்வித சங்கதிகளை போன்றவைகளை அவைகள் கேழ்விப்பட்டிருக்கின்றன, ஆனால், அதை நம்பவில்லை. சுவர்க்கத்தில் அவ்விதமான அன்பு இருப்பதைப் பற்றியும், எவனாவது ஒருவன் தன்னுடைய அயலானை தன்னைவிட அதிகமாய் நேசிக்கக்கூடுமென்பதைப் பற்றியும், அவைகள் ஆச்சரியப்பட்டன. ஆனால், ஒவ்வொரு நன்மையும் இதர வாழ்வில் அளவற்று அதிகரிக்கிறதென்றும், சரீர சம்பந்தமானவைகளில் மூழ்கியிருக்கிறதினால், சரீர வாழ்வில், அயலானைத் தங்களைப்போல நேசிப்பதைவிட மேலே போக, முடியாதென்றும், இவைகள் நீக்கப்பட்டபோது, அந்த அன்பானது அதிக சுத்தமாய், கடைசியில் தங்களைவிட அயலானை அதிகமாய் நேசித்தலாயிருக்கிற தேவர்களுக்குரியதாயிருக்கிறதென்றும், அவைகளுக்கு தெரியப்படுத்தப்பட்டது. ஏனென்றால், சுவர்க்கங்களில் மற்றவனுக்கு நன்மை செய்வதில் சந்தோஷமிருக்கிறது; ஆனால், மற்றவனுடையதாக ஆகும்படியாக, இவ்விதமாக மற்றவன் பொருட்டாக, செய்தாலொழிய தனக்கே நன்மை செய்துக் கொள்ளுதலில் ஒரு சந்தோஷமும் இல்லை. இதுதான் தங்களையேவிட அயலானை நேசித்தலாயிருக்கிறது. இன்னமும், தங்களுடைய துணைவிக்கு எந்த கெடுதியும் செய்யப்படுவதைவிட, மரணத்துக்கு இடம் கொடுத்த உலகத்திலுள்ள சிலரின் விவாக அன்பிலிருந்தும், ஒரு தாயானவள் தன் குழந்தை சாப்பாடு இல்லாதிருப்பதை பார்ப்பதை விட பசியை சகிப்பாளாகையால், தங்கள் குழந்தைகளிடத்து பெற்றோர்கள் காண்பிக்கும் அன்பிலிருந்தும், ஒரு சிநேகிதனானவன் மற்ற சிநேகிதனுடைய ஆபத்துகளுக்கு உட்பட ஏவுகிற உண்மையான சிநேகிதத்திலிருந்தும், உண்மையான சிநேகிதம் மேவிட வகை தேட முயற்சி செய்து, இருதயத்தில் அல்லாமல், வாயிலே அவ்வித நல்ல மனதை வைத்துகொண்டு, தன்னுடைய மிகவும் மேலான உடைமைகளை, தான் நல்ல எண்ணத்தை உடைத்தாயிருக்கிறதாக நடிக்கிறவர்களுக்கு கொடுக்கிற, மரியாதையுள்ளதும் கள்ளத்தனமானதுமான, சிநேகிதத்திலிருந்து கூடவும், கடைசியாய், தனக்கே அல்லாமல், மற்றவர்களுக்காக, தன்னுடைய சந்தோஷமானது ஊழியம் செய்வதாயிருக்கிற அன்பின் சுபாவத்திலிருந்தும், அவ்வித அன்பு இருக்கக்கூடுமென்று வெளிப்படையாகிறதாக சொல்லப்பட்டது. ஆனால், இந்த விஷயங்

கள், மற்றவர்களைவிட தங்களையே அதிகமாய் நேசித்தவர்களாலும், சரீர வாழ்வில் லாபத்தின்பேரில் பேராசை கொண்டவர்களாலும், அதிக குறைவாய், லோபிகளாலும் கிரகிக்கப்படமுடியாது.

**407**. சரீர வாழ்வில் இருந்தபோது, மற்றவர்கள் பேரில் அதிகாரம் செலுத்திய ஒரு ஆவி, மறுமையிலும் அரசாட்சி செய்யும் விருப்பத்தை வைத்திருந்தது; ஆனால், சாசுவதமாயிருக்கிற இதர இராச்சியத்தில் அது இருந்ததாகவும், பூமியின்பேரில் அதன் அரசாட்சிபோய்விட்டதாகவும், தான் இப்பொழுது இருந்த உலகத்தில் எவனும், நன்மைக்கும் உண்மைக்கும் தக்கபடிக்கும், தன்னுடைய உலகவாழ்வின் பொருட்டு தான் அடைந்த ஆண்டவரின் இரக்கத்தின் அளவுக்கு தக்கபடிக்கும் தவிர, வேறு காரணத்தினால் மதிக்கப்படுகிறதில்லை என்பதாகவும், மேலும், செல்வம் என்பது இங்கே நன்மையாகவும் உண்மையாகவும், அரச தயவு என்பது ஒருவன் உலகத்தில் வாழ்ந்ததற்கு தக்கபடி ஆண்டவரால் கொடுக்கப்பட்ட இரக்கமாகவும், இருப்பதின் நிமித்தம், மனிதர்கள் தங்கள் செல்வத்திற்காகவும் அரசன் கொள்ளும் தயவுக்காகவும் மதிக்கப்படுகிற பூமியின் பேரில்போல, இந்த இராஜ்யத்திலும் உண்மையாயிருக்கிறதாகவும், அதற்கு சொல்லப்பட்டது. இதற்கு எதிராய் அது அரசாட்சி செய்ய விரும்பினால், வேறு சுயாதிபதியின் இராச்சியத்தில் அது இருந்தபடியினால், அது இராஜாதிகார விரோதியாக இருக்கிறது. இவைகள் எல்லாவற்றையும் கேட்டபோது, அது வெட்கமடைந்தது.

**408**. சுவர்க்கமும் சுவர்க்கத்து ஆனந்தமும், சிறந்தவர்களாவதில் அமைந்திருக்கிறதென்று நினைத்த ஆவிகளுடன் நான் பேசியிருக்கிறேன். ஆனால், அதிகாரமும் ஞானமுமில்லாமல் தன்னிடமே யிருந்து எந்த அதிகாரத்தையும், ஞானத்தையும் அடைய விரும்பாமல், ஆண்டவரிடமிருந்து அடைய விரும்புகிறவன் அற்பனென்று சொல்லப்படுகிறபடியினால், சுவர்க்கத்தில் அற்பனாயிருக்கிறவன் சிறந்தவனென்றும், இம்மாதிரி அற்பனாயிருக்கிறவன் மிகவும் பெரிய சுகத்தை உடைத்தாயிருக்கிறானென்றும், ஆண்டவரிடமிருந்து எல்லா சக்தியையும் பெற்று, மற்றவர்கள் எல்லாரையும்விட ஞானத்தில் மேற்படுகிறபடியினால், மிகப் பெரிய சுகத்தை உடைத்தாயிருக்கிறதின் நிமித்தம், அவன் மிக சிறந்தவனென்றும் அவைகளுக்கு சொல்லப்பட்டது. மிகவும் சுகமாயிருத்தலைவிட சிறந்தவன் என்பது என்ன? ஏனென்றால் மிக சுகமாயிருத்தலைத்

தான், மிக வலிமை உள்ளவர்கள் அதிகாரத்தாலும், தனவந்தர்கள் செல்வத்தாலும் தேடுகிறதா யிருக்கிறது. மிகச் சிறந்தவனாயிருக்கும் நோக்கத்துடன் மிக அற்பனா யிருக்க விரும்புதல், என்பது மிகச் சிறந்தவனாயிருக்க நாடி அவாவுதலாயிருத்தலினால், சுவர்க்கமானது அப்படி யிருத்தலில் அமைந்திருக்கவில்லை என்றும், ஆனால், இருதயத்திலிருந்து தனக்கேயல்லாமல் மற்றவர்கள் நன்மையை கோருதலிலும் சுயலாப திருஷ்டி வைக்காமல் அன்பிலிருந்து, அவர்களின் சுகத்தின் பொருட்டு அவர்களுக்கு ஊழியம் செய்தலிலும் அமைந்திருக்கிறதென்றும், அவைகளுக்கு இன்னமும் சொல்லப்பட்டது.

**409**. சுவர்க்கத்து ஆனந்தம், அதன் சத்தில் என்னவென்பது விவரிக்கப்பட முடியாது; ஏனென்றால், அது தேவர்களின் வாழ்க்கையின் மிகவும் உள்ளான மூலாங்கத்திலும், அதனால் அவர்களுடைய சிந்தனையினுடையவும் ஆசையினுடையவும் ஒவ்வொரு நுண்ணியதிலும், இவ்விதமாக அவர்களுடைய பேச்சினுடையவும் செய்கையினுடையவும் ஒவ்வொரு நுண்ணியதிலும் இருக்கிறது. இழைகள் ஒவ்வொன்றிலும், இவ்விதமாக முழு சரீரத்திலும் வியாபித்திருக்கிற ஆனந்தத்தையும் அருளையும் ஏற்றுக்கொள்ள, உள்ளானவைகள் முழுமையும் திறக்கப்பட்டு தடைப்படாததாயிருந்ததுபோல அது இருக்கிறது. இந்த ஆனந்தத்தை அறிதலும் உணர்தலும், விவரிக்கப்பட முடியாததாயிருக்கிறது. ஏனென்றால், மிகவும் உள்ளானவைகளில் ஆரம்பித்து, அதிலிருந்து வந்த ஒவ்வொரு நுண்ணியதிலும் அது பாய்ந்து, வெளிப்பக்கத்தில் வளர்ச்சியுடன் தானே பரப்புகிறது. இன்னம் சுவர்க்கத்துக்கு உயர்த்தப்படாதபடியினால், அந்த ஆனந்தத்தில் இல்லாத நல்ல ஆவிகள், அதனுடைய அன்பின் திரட்சியினால் ஒரு தேவனிடமிருந்து வருவதை பார்க்கிறபோது, ஒரு ரம்மியமான மூர்ச்சையில் போல் விழும்படியாக அவ்வித ஆனந்தத்தால் நிரப்பப்படுகிறார்கள். சுவர்க்கத்து ஆனந்தம் என்னவென்று தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு இது சில வேலைகளில் நேரிடுகிறது.

**410**. சுவர்க்கத்து ஆனந்தம் என்னவென்று தெரிந்து கொள்ள விரும்பிய சில ஆவிகள், அதை இன்னமும் பெருக்க முடியாத அவ்வளவு தூரம் அதைப் பார்க்க விடப்பட்டன; என்றாலும், அது தேவதா ஆனந்தம் அல்ல; அதை பங்கிட்டுக் கொள்வதினால் உணரவிடப்பட்டபடியினால், அது கொஞ்சம்கூட தேவர்களுக்கு சம்பந்தப் பட்டதாயில்லை; ஆனால் ஏறக்குறைய

துளிரானதாயிருக்கும்படியாக, அவ்வளவு அற்பமானதா யிருந்தது; என்றாலும், அது அவைகளுக்கு மிகவும் உள்ளான ஆனந்தமா யிருந்தபடியினால், அவைகள் அதை அதிகம் சுவர்க்க சம்பந்தமானதா யிருக்கிறதென்று சொன்னார்கள். ஆகவே, சுவர்க்கத்து ஆனந்தங்களின் பிரமாணங்கள் இருக்கின்றன என்பது மட்டுமல்லாமல், ஒன்றினுடைய மிகவும் உள்ளான ஆனந்தம், மற்றதினுடைய மிகவும் தாழ்ந்த அல்லது மத்திய ஆனந்தத்தை அறிதாய் சமீபிக்கிறது என்றும், இன்னமும் எவனாவது ஒருவன் தன்னுடைய சொந்த மிகவும் உள்ளான ஆனந்தத்தை அடையும்போது, அவன் அவனுடைய சொந்த சுவர்க்கத்து ஆனந்தத்தில் இருக்கிறான் என்றும், தனக்கு வருத்தம் உண்டாக்கக் கூடியதா யிருப்பதினால், அதிக உள்ளான சந்தோஷத்தை பொருக்க முடியாதென்றும்கூட இதிலிருந்து விசதமாகிறது.

**411**. கெட்டவைகளாயில்லாத சில ஆவிகள், தூக்கத்தில் போல, அமைதியில் அமிழ்ந்தபோது, மனதின் உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில் சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப் பட்டன; ஏனென்றால், ஆவிகள் தங்களுடைய உள்ளானவைகள் திறக்கப் படுகிறதற்கு முன், சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப்பட்டு, அங்கே யிருக்கப்பட்டவர்களின் சுகம் விஷயத்தைப்பற்றி கற்பிக்கப் படலாம். அவைகள் அரைமணி நேரம் அமைதியிலிருந்து பின்னிட்டு, தாங்கள் முன்னிருந்த தங்களுடைய புறம்பானவைகளுக்குள்ளும், பிறகு மறுபடியும் தாங்கள் பார்த்தவைகளின் நினைவிற்குள்ளும், திரும்பினவென்றும் நான் சொல்லுகிறேன். தாங்கள் சுவர்க்கத்தில் தேவர்கள் மத்தியில் இருந்ததாகவும், விசித்திரமான உருவங்களிலும், அதிசயப் படும்படியான விகர்ப்பத்திலும், தங்கத்திலும், வெள்ளியினாலும், விலை உயர்ந்த கற்களினாலும் செய்யப்பட்டு, எல்லாம் பிரகாசித்த, பிரமிக்கப் பண்ணும்படியானபொருள்களை தாங்கள் பார்த்து உணர்ந்ததாகவும், அதனுடன்கூட, தேவர்கள், புறம்பான பொருள்களிலேயே சந்தோஷப்படாமல், தெய்வீகமானதும், வாக்குக்கு எட்டாததும், முடிவற்ற ஞானமுடையதுமாயிருந்த அவைகளை சாயல் காட்டிய பொருள்களிடத்தில் சந்தோஷப்பட்டதாகவும், இவைகள் தான் அவைகளுக்கு ஆனந்தமாக யிருந்ததாகவும், பத்தாயிரத்தில் ஒரு பாகம்கூட மானிட பாஷையில் வெளியாக்க முடியாததும், ஜடசம்பந்தமான எதிலும் பகிர்ந்து கொள்ளுகிற அபிப்பிராயங்களில் விழாததுமான, இன்னும் கணக்கற்ற இதர விஷயங்களையும் அவைகள் கூறின.

**412.** இகர வாழ்விற்குள் பிரவேசிக்கும் ஏறக்குறைய எல்லாரும் சுவர்க்கத்து வாத்தினுடையவும் சுகத்தினுடையவும் சுபாவத்தைப் பற்றி அறியாமலிருக்கிறார்கள்; ஏனென்றால், ஸ்தூலமானதும் லௌகிகமானதுமாகிய சந்தோஷத்திலிருந்தும் உல்லாசத்திலிருந்தும் தாங்கள் எண்ணுகிறதைத்தவிர, அந்தரங்கமான ஆனந்தத்தைப்பற்றி, அவர்களுக்கு ஒன்றும் தெரியாது; ஆகவே, ஸ்தூலமானதும் லௌகிகமானதுமாகிய ஆனந்தம் ஒத்துப் பார்க்கும் பட்சத்தில், உண்மையில் கணக்கில் இல்லாதபோதிலும், தங்களுக்கு தெரியாதது சூனியமென்று நினைக்கிறார்கள். சுவர்க்கத்து ஆனந்தம் என்னவென்று தெரியாத சில சம்பன்னர்கள், அதன் சுபாவத்தை தெரிந்து உணரும்பொருட்டு, மனோபாவத்தின் ஒவ்வொரு அபிப்பிராயத்துக்கும் மேற்படுகிற ஆனந்த பதத்திற்குரிய காட்சிகளுக்கு, முதலில் அவர்கள் கொண்டுபோகப்படுகிறார்கள். அப்பொழுது அவர்கள் திவ்வியமான மோக்ஷ ஸ்தலத்துக்கு வந்திருப்பதாக நினைக்கிறார்கள்; ஆனால், இது உண்மையான சுவர்க்க சுகம் அல்லவென்று கற்பிக்கப்படுகிறார்கள்; தங்களுடைய அந்தரங்கமானவைகளால், அறியப்படுகிற ஆனந்தத்தின் உள்ளான நிலைமைகளை அனுபவிக்க, அவர்கள் விடப்படுகிறார்கள். பின்னிட்டு, தங்கள் உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில் கூட, சமாதான நிலைமைக்கு கொண்டுவரப்படுகிறார்கள்; அப்பொழுது அவர்கள் அதில் எந்த பாகமும் சொல்லவும் அல்லது நினைக்கவும் முடியாதென்று ஒத்துக் கொள்ளுகிறார்கள்; கடைசியாய் அவர்களுடைய உள்ளான உணர்ச்சி விஷயத்தில் கூட மனப்புனித நிலைமைக்குள் அவர்கள் விடப்படுகிறார்கள். இவ்விதமாக, உண்மையான ஆத்மார்த்தமானதும் பரத்துக் கடுத்ததுமாகிய நன்மை எதுவென்று தெரிந்துகொள்ள அவர்கள் உத்திரவு கொடுக்கப்படுகிறார்கள்.

**413.** சுவர்க்கத்தினுடையவும், சுவர்க்கத்து ஆனந்தத்தினுடையவும் சுபாவத்தையும் குணத்தையும், நான் தெரிந்துகொள்ளும்பொருட்டு, ஆண்டவரால் எனக்கு, அடிக்கடியும் அநேககாலம் வரையில், சுவர்க்க ஆனந்தங்களில் மகிழ்ச்சிகளை உணர இடங்கொடுக்கப்பட்டது. ஆகையினால், உயிருள்ள அனுபவத்திலிருந்து அவைகள் எனக்கு தெரியும், ஆனால், நான் எப்பொழுதும் அவைகளை விவரிக்க முடியாது; ஆயினும் சில குறிப்புகள் அவைகளைக் குறித்து சில அபிப்பிராயம் கொடுக்கும். மோட்ச ஆனந்தம் என்பது ஒருமிக்க எடுத்துக்கொண்டால், பொதுவான சிலவற்றை

தரியக் காட்டுகிற கணக்கற்ற இன்பங்களுடையவும் சந்தோஷங்க நடையவும் ஒரு உணர்ச்சியா யிருக்கிறது; இந்த பொதுவானவை ளில் அல்லது பொதுவான உணர்ச்சிகளில் கணக்கற்ற உணர்ச்சி ளின் இசைவுகள் இருக்கின்றன. உணர்ச்சியானது அதிக பொது பாயிருக்கிறதினுல், இவைகள் வேறுவேறுனதாயல்லாமல், தெளி பற்று அறிந்துகொள்ளப்படுகின்றன. அப்படியிருந்தும், கணக்கற்ற றவைகள் சுவர்க்கத்து ஒழுங்கிலிருந்து வரப்பட்டவைகளாயிருக்கிற தின்நிமித்தம், அவைகள் எப்பொழுதும் விவரிக்கப்படாதபடி துவ்வித ஒழுங்கில் இருக்கின்றனவென்று உணர எனக்கு அருள் செய்யப்பட்டது. அவைகளின் பதார்த்தமாயிருக்கிறவனுடைய சக்திக்கு தக்கபடி, மிகவும் பொதுவானதாக காட்டப்பட்டு அறியப் படுகிற உணர்ச்சியின் மிகவும் நுண்ணிய சங்கதிகளில் அதே ஒழுங்கு மேற்கொள்ளுகிறது; சுருங்கச் சொல்லில், மிகவும் பூரணமான ஒழுங்கில் ஒழுங்காக்கப்பட்ட முடிவற்ற பொருள் கள், ஒவ்வொரு பொதுவான உணர்ச்சியிலும் இருக்கின்றன; அதில் உயிரில்லாததும், மிகவும் உள்ளானவைகளி லிருந்து அவைகள் எல்லாவற்றையும் நடத்துகிறது மல்லாததும், ஒன்று அதில் இல்லை; ஏனென்றால், மோக்ஷ ஆனந்தங்கள் உள்ளான வைகளிலிருந்து வெளியே வருகின்றன. ஒவ்வொரு நாரும், சந்தோ ஷமும், இன்பமும் தவிர வேறொன்று மில்லாதபடிக்கும், அதனுல் உணர்ச்சியினுடையவும் இந்திரிய ஞானத்தினுடையவும் ஒவ்வொரு வல்லமையும், அப்மாதிரியே சுகத்துடன் ஊக்கமுடையதாக தோன்றும்படிக்கும், அவ்வித சந்தோஷத்தின் மிகவும் உள்ளான அறிவுடன், சந்தோஷமும் இன்பமும் மிகவும், உள்ளான நார் களின் மூலமாயும் அதிலிருந்து, நார்களின் கட்டுகளிலும், மிகவும் மெதுவாய் பரவி, இருதயத்திலிருந்து வந்ததுபோல கூட நான் அறிந்து கொண்டேன். சரீர சந்தோஷங்களின் இன் பங்களை, இந்த இன்பங்களோடு ஒப்பிட்டபோது, தடித்ததும் கார்ப்புள்ளதுமான தூளை, சுத்தமானதும் மிகவும் அமைதியானது மான இளங்காற்றுக்கு ஒப்பிட்டதுபோலிருக்கிறது. என்னுடைய இன்பங்கள் எல்லாவற்றையும் மாற்ற நான் விரும்பியபோது, முன் கூறியதைவிட அதற்கு பதிலாக அதிக உள்ளானதும், பூரண மானதுமாகிய இன்பம் தொடர்ச்சியாய் பாய்ந்தது; இதை நான் அதிகமாய் விரும்பியபோது, அது அதிகமாய் உள்ளே பாய்ந்தது; இதுவும்கூட, ஆண்டவரிடமிருந்து வந்தாக காணப்பட்டது.

**414.** சுவர்க்கத்தில் இருக்கிறவர்கள் வாழ்வின் வசந்த காலத்திற்கு தொடர்ச்சியாய் முந்திக்கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் எவ்வளவு அதிகம், ஆயிரங்கள் கணக்கான வருஷங்கள் உயிரோடிருக்கிறார்களோ, அவ்வளவு அதிகம், அவர்கள் அடையும் வசந்த காலம் அதிக சந்தோஷமானதாயும் சுகமானதாயும் இருக்கிறது; இதுவும், அவர்களுடைய அன்பினுடையவும், தருமத்தினுடையவும், பக்தியினுடையவும் வளர்ச்சிகளுக்கும் அளவுகளுக்கும் தக்கபடி, அதிகரிப்புடன் சதாகாலம் நடக்கிறது. வயசினால் இளைத்து விருத்தாப்பியத்தில் இறந்த ஸ்திரீகள், ஆண்டவரிடத்து பக்தியிலும், அயலானிடத்து தருமத்திலும், ஒரு புருஷனுடன் சுகமான விவாக அன்பிலும், வாழ்ந்திருந்தால் காலம் செல்லச்செல்ல, இளமையின் யௌவனத்தையும், ஆரம்ப பெண்மையையும், மேலும் மேலும் அடைந்து, நம்முடைய பார்வையினால், என்றைக்காயினும் பார்க்கக்கூடிய சௌந்திரியத்தின் எல்லா அபிப்பிராயத்துக்கும் மேற்படுகிற அழகை அடைகிறார்கள். நன்மையையும் தரும குணமும்தான், தரும குணத்தின் சந்தோஷத்தையும் அழகையும், முகத்தின் ஒவ்வொரு சின்னஞ் சிறிய நுண்ணிய பாகத்திலிருந்தும், பிரகாசிக்கவும் அவைகளை தரும குணத்தின் உருவங்களாகவே இருக்கவும் செய்து, அவைகளில் தன் சொந்த சாயலை உருவாக்கி தெரியக்காட்டுகிறது. அவைகளைப் பார்த்த சிலர் ஆச்சரியத்தில் அமிழ்வார்கள். சுவர்க்கத்தில் உயிருள்ள வழியில் பார்க்கப்படுகிற அன்பின் இந்த உருவத்தில் அன்பேதான் உருவாக்குகிறதும், உருவாக்கப்படுவதுமா யிருக்கிறது; இதுவும் முழுதேவனும், முக்கியமாய் முகமும், ஒரு தருமமாக இருக்கிற விதமாக இருக்கிறது; மேலும், இது தெளிவாய் பார்த்து உணரப்படுகிறது. இந்த உருவமானது பார்க்கப்பட்டபோது, அது சொல்ல முடியாதபடி அழகாயிருந்து, மனதின் மிகவும் உள்ளான உயிரையே தருமமாகவே செய்கிறது சுருங்கச் சொல்லில், சுவர்க்கத்தில் வயது அதிகரித்தல் என்பது சிறுவனாகுதலா யிருக்கிறது. ஆண்டவரிடத்து அன்பிலும், தங்கள் அயலானிடத்து தரும குணத்திலும் வாழ்ந்தவர்கள், மறுமையில் அவ்வித உருவங்களாக அல்லது இவ்விதமாக அழகுள்ளவர்களாகிறார்கள். எல்லா தேவர்களும், கணக்கற்ற விகற்பத்துடன் அவ்வித உருவங்களா யிருக்கிறார்கள். இவர்களிலிருந்து சுவர்க்கம் அமைந்திருக்கிறது.

# XLIII

## சுவர்க்கத்தின் எல்லையின்மை

**415.** ஆண்டவருடைய சுவர்க்கம் எல்லையற்று இருக்கிறதென்பது, முன் அத்தியாயங்களில் சொல்லி காண்பிக்கப்பட்ட அநேக விஷயங்களிலிருந்தும், முக்கியமாய் திருச்சபைக்குள் பிறந்தவர்களிடமிருந்து மாத்திரமல்லாமல், அதற்கு வெளியிலே பிறந்தவர்களிடமிருந்துகூட, (செ. 318 முதல் 328 வரையில்) சுவர்க்கமானது மானிட வமிசத்திலிருந்து வந்தவர்களிடமிருந்தும் (செ. 311 முதல் 317 வரையில்), இவ்விதமாக பூமியின் முதல் சிருட்டி முதல் நன்மையில் வாழ்ந்த எல்லாரிடமிருந்தும் வந்ததென்று விசதமாகலாம். இந்த முழு உலகத்தில் எவ்வளவு பெரிய கூட்டமிருக்கிறதென்பது, இந்த பூமியின் பிரிவுகளைக் குறித்தும், தேசங்களைக் குறித்தும், இராச்சியங்களைக் குறித்தும், யாதொரு அறிவுடைய ஒவ்வொருவனாலும் தீர்மானிக்கப்படலாம். கணக்கிடப்போகிறவன் ஒவ்வொருவனும், ஒவ்வொரு தினத்திலும் அநேக ஆயிரம்வகை மனிதர்களும், ஒவ்வொரு வருஷத்திலும் சில பதினாயிரங்கள் அல்லது பத்து லட்சங்கள் கணக்கானவர்களும், இறப்பதைக் கண்டுகொள்வான். சில ஆயிரங்கள் வருஷங்கள் முன்பாக, மிகவும் பூர்வீக காலமுதல் இது ஆரம்பித்தது. இவர்களில் எல்லாரும், இறந்த பிறகு, சூக்கும உலகம் என்று சொல்லப்படுகிற மற்ற உலகத்திற்கு முன்னிட்டே வந்தும், அடிக்கடி வந்துகொண்டுமிருக்கிறார்கள். ஆனால், இவர்களில் எத்தனையோ முன்னிட்டே சுவர்க்கத்தின் தேவர்களாயும், தேவர்களாயிக்கொண்டுமிருக்கிறார்கள் என்பது சொல்லப்பட முடியாது. பூர்வ காலங்களில் மனிதர்கள் அதிக உள்ளாயும், அதிக ஆத்மார்த்தமாயும் நினைத்து, அதிலிருந்து சுவர்க்கத்து அன்பிலிருந்தபடியினால், அக்காலங்களில் அவர்கள் ஏராளமாயிருந்தார்களென்றும், பின் வந்த காலங்களில், மனிதன் காலப்போக்கில் அதிக புறம்பானவனாய், அதிக ஸ்தூலமாய் நினைக்கவும், அதிலிருந்து லௌகிக ஆசையிலிருக்கவும், ஆரம்பித்தபடியினால் அவர்கள் குறைந்து போனார்களென்றும், எனக்கு சொல்லப்பட்டது. இந்த பூமியிலிருக்கப்பட்ட குடிகளிலிருந்து மாத்திரம் உண்டான சுவர்க்கமா

னது பெரிய பரிமாணமுள்ளதென்று இவைகளிலிருந்து முதலில் விசதமாகலாம்.

**416.** ஆண்டவருடைய சுவர்க்கம் எல்லையற்றதென்பது, திருச்சபைக்குள்ளாவது, அதற்கு வெளியாவது பிறந்த எல்லா குழந்தைகளும் ஆண்டவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, தேவர்களாகிறார்களென்பதிலிருந்து மாத்திரம் விசதமாகலாம். ஏனென்றால், இவர்கள் மாத்திரம் பூமியின் பேரிலுள்ள முழு மானிட வமிசத்தின் நான்கில் அல்லது ஐந்தில் ஒரு பாகமாகிறது. திருச்சபைக்குள்ளாவது அதற்கு வெளியாவது, தேவ பக்தியுள்ள பெற்றோர்களுக்காவது, பொல்லாத பெற்றோர்களுக்காவது, எங்கே பிறந்தபோதிலும் ஒவ்வொரு குழந்தையும், அது இறந்தபோது, ஆண்டவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, தெய்வீக ஒழுங்கின்படி சுவர்க்கத்தில் வளர்க்கப்பட்டு, நன்மையினிடத்து கொள்ளும் ஆசையினாலும் இவைகளின் மூலமாய் உண்மையின் அறிவுகளினால் புகட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறதென்பதும், விவேகத்திலும், ஞானத்திலும் அது சம்பூரணமாக்கப்பட்டபோது, சுவர்க்கத்துக்கு கொண்டு வரப்பட்டு, ஒரு தேவனாகிறதென்பதும், மேலே (நெ. 329-345) பார்க்கப்படலாம். ஆகவே, முதல் சிருட்டி முதல் தற்காலம்வரையில், இந்த குழந்தைகளிடமிருந்துமாத்திரம், சுவர்க்கத்து தேவர்களின் எவ்வளவு ஏராளமான கூட்டம் தோன்றினதென்று தீர்மானிக்கப்படலாம்.

**417.** ஆண்டவருடைய சுவர்க்கம் எவ்வளவு எல்லையற்றதென்பது, நம்முடைய ஆதித்திய மண்டலத்தில் கண்ணுக்கு புலப்படும், எல்லா கிரகங்களும், பூமிகளாயிருக்கின்றனவென்பதிலிருந்தும், இவைகளைத்தவிர பிரபஞ்சத்தில் எல்லாம் குடிகளால் நிறைந்த கணக்கற்ற மற்றவைகள் இருக்கின்றனவென்பதிலிருந்தும் கூட, வெளிப்படையாகின்றன. இவைகள் அந்த பூமிகளைக் குறித்து எழுதிய சிறிய நூலில் குறிப்பாய் சொல்லப்பட்டிருக்கின்றன; அதிலிருந்து அடியில்கண்ட வாக்கியத்தை எடுத்துச் சொல்லுகிறேன்:—

"அநேக பூமிகளும், அவைகளின்பேரில் மனிதர்களும், அவைகளிலிருந்து, ஆவிகளும் தேவர்களும் இருக்கின்றனவென்பது இதர வாழ்வில் நன்றாய் தெரிந்திருக்கிறது; ஏனென்றால், அங்கே உண்மையினிடத்தும், அதிலிருந்து உபயோகத்தினிடத்தும் கொள்

ளும் ஆசையிலிருந்து, அதை விரும்புகிற ஒவ்வொருவனும், பலவித மான உலகங்கள் இருக்கின்றனவென்று தெரிவிக்கப்படவும், மானிட வமிசம் ஒரு பூமியிலிருந்து மாத்திரமல்லாமல், கணக்கற்றவைகளிலிருந்து வருகின்றனவென்று கற்பிக்கப்படவும், இதர பூமிகளின் ஆவிகளுடன் பேசவிடப்பட்டிருக்கிறது. நம்ம பூமியிலிருந்து வந்த ஆவிகளுடன், இந்த விஷயத்தைப்பற்றி நான் பேசியிருக்கிறேன்; விவேகமுள்ள எவனும் தனக்கு தெரிந்திருக்கும் அநேக சங்கதிகளிலிருந்து, அநேக பூமிகளும், அவைகளின்மேரில் மனிதர்களும் இருக்கிறார்களென்று, அறிந்து கொள்ளலாமென்று சொல்லப்பட்டது. ஏனென்றால், சிலது பரிமாணத்தில் நம்ம பூமியை விட அதிகப்படுகிற கிரகங்கள்போன்ற அவ்வித பிரமாண்டமான பொருள்கள், வெளியிலே சூரியனைச் சுற்றிகொண்டு போகப்படவும், சுழலவும், ஒரு பூமியின் நன்மைக்காக அவைகளின் ஒடுக்கமான வெளிச்சத்துடன் பிரகாசிக்கவும் மாத்திரம் சிருஷ்டிக்கப்பட்ட மேற்பூச்சான பொருள்களாயல்லாமல், அவைகளின் உபயோகம் மிகவும் உயர்ந்ததாயிருக்கவேண்டுமென்று புத்தியிலிருந்து தீர்மானிக்கப்படலாம். ஒவ்வொருவனும் நம்பவேண்டியபடி, மானிட வமிசம் சுவர்க்கத்தின் வித்தியாலபமாயிருப்பதினால், தெய்வமானது பிரபஞ்சத்தை மானிட வமிசம் நிலைத்திருக்கவும், அதிலிருந்து சுவர்க்கம் உண்டாகவும் தவிர, வேறு எந்த நோக்கத்துடனும் சிருஷ்டிக்கவில்லை என்று நம்புகிறவன், ஒரு பூமியிருக்குமிடமெல்லாம் மனிதர்கள் இருக்கிறார்களென்று நம்பவேண்டியிருக்கிறது. நமது கண்களுக்கு புலப்படுகிற கிரகங்கள், நமது சூரிய மண்டலத்தின் எல்லைக்குள் இருப்பதினால், பூமிகளாயிருக்கின்றனவென்பது, சூரியனுடைய வெளிச்சத்தை பிரதிபிம்பிக்கச் செய்வதிலிருந்து தெரிந்துகொள்ளப்படும் மண்ணான ஜடப் பொருள்களால் செய்யப்பட்ட பொருள்களாயிருப்பதிலிருந்தும், தூரதிருஷ்டிக் கருவிகள் மூலமாய் பார்த்தபோது, சுவாலையுடன் எரிகிற நட்சத்திரங்கள்போல அல்லாமல், அதிக இருண்ட கூறுகளால் பலவர்ணமுள்ளதாக செய்யப்பட்ட பூமிகளைப்போல் தோன்றுவதிலிருந்தும், அதுவுமன்றி நமது பூமியைப்போல், சூரியனைச் சுற்றிக்கொண்டு போகப்பட்டு, இராசி மண்டலத்தில் செல்வதிலிருந்தும், அதனால் வருஷங்களையும், வசந்தகாலம், வேனிற்காலம், இலையுதிர்காலம், மாரிகாலம் என்று சொல்லப்படும் வருஷத்தின் பருவங்களையும் உடைத்தாயிருக்கிறதென்பதிலிருந்தும், தெளி

வாய் அறிந்துகொள்ளப்படலாம். அவைகள் அம்மாதிரியே நம்ம பூமியைப்போல் தங்கள் சேர்ந்த ஜோனத்தின் மையத்தில் சுழலுகின்றன; ஆகையினால், அவைகளுக்கு நாட்களும்; காலை, மத்தியானம், மாலை, இரவு என்கிற தினத்தின் காலங்களுமுண்டு. அவைகளில் சிலவற்றிற்குக்கூட, சந்திரன் நமது கிரகத்தை சுற்றுவதுபோல், பூமியை சுற்றி குறிப்பிட்ட காலங்களில் சுழலுகிற உபகிரகங்கள் என்று சொல்லப்படுகிற சந்திரன்கள் உண்டு. சனி கிரகமானது, சூரியனிடமிருந்து இருக்கும் பெரும் தூரத்தின்பொருட்டு பிரதிவிம்பிதத்தாயிருந்தபோதிலும் அதிக வெளிச்சத்தை அந்த பூமிக்கு கொடுக்கிற பெரிய பிரகாசமுள்ள பெரிய அறைக்கச்சால்கூட சூழப்பட்டிருக்கிறது. இந்த விஷயங்கள் தெரிந்து, புத்தியிலிருந்து நினைக்கிற எவனுக்கு இந்த கிரகங்கள் வெறுமையான பொருள்கள் என்று சொல்ல எப்படி முடியும்? மேலும் நட்சத்திரங்கள் நிறைந்த சுவர்க்கமானது அவ்வளவு எல்லையற்றதாயும், அங்கிருக்கும் நட்சத்திரங்கள் அவ்வளவு கணக்கற்றதாயும், அவைகளில் ஒவ்வொன்றும், தன்னுடையஇடத்தில் அல்லது மண்டலத்தில், பலவித பரிமாணமுள்ளதாயிருந்தபோதிலும், நம்ம சூரியனை ஒத்து, ஒரு சூரியனாயிருக்கிறது என்கிற விஷயத்திலிருந்து, பிரபஞ்சத்தில் ஒன்றைவிட அநேக பூமிகள் இருக்கின்றனவென்று, மனிதன் நம்பலாமென்று ஆவிகளிடம் நான் சொல்லியிருக்கிறேன். இதை சரியாய் யோசிக்கிற எவனும், இவ்வளவு எல்லையற்ற முழுவதும் ஒரு முடிவுக்கு ஒரு வழிவகையாக இருக்கவேண்டுமென்றும், அந்த முடிவானது சிருட்டியின் கடைசியான முடிவென்றும் தீர்மானிக்கவேண்டும்; இந்த முடிவானது, தெய்வமானது தேவர்களுடனும் மனிதர்களுடனும் வசிக்கிற பரமண்டல இராச்சியமாயிருக்கிறது. ஏனென்றால், கண்ணுக்கு புலப்படுகிற பிரபஞ்சம் அதாவது அவ்வளவு அநேக சூரியன்களாயிருக்கிற இவ்வித கணக்கற்ற நட்சத்திரங்கள் கூட்டங்களால், மகாஜோதியுள்ளதாயிருக்கிற சுவர்க்கம், பூமிகளுடையவும், அதிலிருந்து ஒரு சுவர்க்க இராச்சியம் உருவாக்கப்படக்கூடிய அதின்பேரிலிருக்கும் மானிட பிராணிகளுடையவும் இருப்புக்கு ஒருவழி வகையாயிருக்கிறது. இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து, ஒரு பகுத்தறிவுள்ள மனிதன் அவ்வளவு பெரிய நோக்கத்துடன் சிருட்டிக்கப்பட்ட அவ்வளவு எல்லையற்ற ஒரு வழிவகையானது, ஒரு பூமியின் மானிடவமிசத்திற்காக மாத்திரம் செய்யப்படவில்லை

என்று நினைக்கவேண்டியிருக்கிறது. எல்லாம் குடிகளால் நிறைந்த ஆயிரங்கள், மெய்யாகவே பத்தாயிரங்கள் கணக்கான பூமிகள் சிறிய தாயும், ஏறக்குறைய சூனியமாயும் இருக்கிறதினால், முடிவற்ற தெய்வம் விஷயத்தில் இது என்னமாயிருக்கும்? அறிவுகளை சம்பாதிப்பதே தங்கள் ஏக நாட்டமாயிருக்கிற ஆவிகளுமிருக்கின்றன; ஏனென்றால், அவர்களுடைய இன்பமானது இதில்மாத்திரமிருக்கிறது; ஆகையினால், இந்த ஆவிகள் திரிந்து, இந்த சூரியமண்டலத்தி லிருந்து இதரமண்டலங்களுக்கு சென்று, அறிவுகளை சம்பாதிக்க விடப்படுகின்றன. இந்த சூரியமண்டலத்தில் மட்டுமல்லாமல், அதற்கு அப்புறமும் நட்சத்திரங்கள் நிறைந்த சுவர்க்கத்தில், மனிதர்கள் வசிக்கிற எல்லையற்ற பூமிகள் இருக்கின்றனவென்று, அவைகள் கூறியிருக்கின்றன. இந்த ஆவிகள் புதன் கிரகத்திலிருந்து வந்தவை. பிரபஞ்சத்தில் பத்துலக்ஷம் பூமிகளும், ஒவ்வொரு பூமியின் பேரிலும் முப்பதுகோடி மனிதர்களும் இருந்து, இருநூறு தலைமுறைகள், ஆறாயிரவருஷங்களில் ஒன்றன்பின் ஒன்றாய்தொடர்ந்து, ஒவ்வொரு மனிதனுக்கும் அல்லது ஆவிக்கும் மூன்று கனவடிவமுள்ள எல் என்று சொல்லப்பட்ட மூன்றுமுக்கால் அடிகள் கொடுக்கப்பட்டால், முழு எண்ணும் இந்த பூமியின் இடத்தை நிறப்பாமல், ஒரு உபகிரகமானது வெறுங்கண்ணால் அறிதாய் பார்க்கக்கூடியதா யிருப்பதினால், ஏறக்குறைய கண்ணுக்கு பார்க்கக்கூடாததாய் இருக்கும்படி, பிரபஞ்சத்தில் அவ்வளவு சிறிய இடமாகிய கிரகங்களின் ஒன்றின் உபகிரகத்தினால் இடம்கொண்ட இடத்தைப்பார்க்கிலும் கொஞ்சம்அதிகமாக, நிஜமாகவே இடங்கொள்ளும். முடிவற்றவரா யிருப்பதினால், முழு பிரபஞ்சமும் நிரப்பப்பட்டபோதிலும் போதுமானதாயில்லாத பிரபஞ்சத்தின் சிருட்டிகர்த்தாவுக்கு இது என்ன கணக்கு? இந்த விஷயத்தைப்பற்றி நான் தேவர்களுடன் பேசியிருக்கிறேன்; சிருட்டி கர்த்தரின் எல்லையற்ற தன்மையை நோக்குமிடத்து, மானிடவம்சத்தின் சின்மையைப்பற்றி தாங்கள் அநேகவிதமான அபிப்பிராயத்தைகொண்டதாகவும், அப்படியிருந்தா லும், தாங்கள், இடங்களிலிருந்து அல்லாமல் நிலைமைகளிலிருந்து நினைத்ததாகவும், தங்கள் அபிப்பிராயத்தின்படி, எண்ணக்கூடிய அவ்வளவு பதினாயிரங்கள் கணக்கிட்ட பூமிகளும் ஆண்டவரை நோக்குமிடத்து ஒன்றுமில்லாமல் போகுமென்பதாகவும் அவர்கள் சொன்னார்கள்" (பிரபஞ்சத்திலுள்ள பூமிகள் என்கிற நூலில் செ. 2, 3, 6, 126 பார்க்கவும்). பிரபஞ்சத்திலுள்ள பூமிகளைப்பற்றியும்,

அவைகளின் குடிகளைப்பற்றியும், அவைகளிலிருந்து வரும் ஆவிகளைப்பற்றியும், தேவர்களைப்பற்றியும், மேலே சொல்லிய சிறிய நூலில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆண்டவருடைய சுவர்க்கமானது எல்லையற்றதென்றும், அது எல்லாம் மானிட வமிசத்திலிருந்து வருகிறதென்றும், நம்முடைய ஆண்டவர் சுவர்க்கத்துக்கும் பூமிக்கும் கடவுளாக எவ்விடத்திலும் ஒத்துக்கொள்ளப்படுகிறாரென்றும், தெரிந்திருக்கும்பொருட்டு, அதில் அடங்கியவைகள் எனக்கு வெளிப்படுத்தப்பட்டு, காண்பிக்கப்பட்டது.

**418.** ஆண்டவருடைய சுவர்க்கம் எல்லையற்றதென்பது, சுவர்க்கமானது அதன் சம்பூரணத்தில் ஒரு மனிதனைப்போலிருந்து, மனிதனிலிருக்கும் எல்லாவற்றிற்கும் ஒவ்வொன்றுக்கும் கூட அன்னுவயப்படுகிறதென்பதிலிருந்தும், இந்த அன்னுவயமானது, எப்பொழுதும் முழுதும் நிறைவு அடையாதென்பதிலிருந்தும்கூட விசதமாகலாம்; ஏனென்றால், பொதுவாக சரீரத்தின் அங்கங்கள், அவயவங்கள், ஆந்திரிகங்களின் ஒவ்வொன்றினோடும் அது அன்னுவயமாயிருப்பதுமட்டுமல்லாமல், ஒவ்வொரு சின்னஞ்சிறிய நுண்ணியதிலும், அவைகளுக்குள்ளிருக்கும் சிறிய ஆந்திரிகத்தினுடையவும், சிறிய அங்கத்தினுடையவும் எல்லாவற்றினோடும் ஒவ்வொன்றோடும், ஒவ்வொரு குழலோடும் நாரோடும்கூட அன்னுவயமாயிருக்கிறது; இவைகளுடன் மாத்திரமல்லாமல், மனிதனுடைய மனதின் தொழிற்பாடுகளுக்கு உதவியாயிருக்கிற அவனுடைய உள்ளான முயற்சிகள் வருகிற சுவர்க்கத்தின் உட்பெருக்கை உள்ளுக்குள்ளாய் பெற்றுக்கொள்ளுகிற அங்கத்திற் கடுத்த பொருள்களோடும் அது அன்னுவயமாயிருக்கிறது; ஏனென்றால், பொருள்களில், அதன் நினைக்கும் கருவியாக இல்லாதது சூனியமானபடியினால் மனிதனுக்குள் உள்ளுக்குள்ளாய் இருக்கிறது, பொருள்களாயிருக்கிற எதுவும் உருவங்களில் இருக்கிறது. மனிதனுடைய எல்லா பொருள்களோடும், சுவர்க்கத்தின் எல்லா பொருள்களுடைய அன்னுவயத்தைப்பற்றிக் கூறிய அத்தியாயத்தில் பார்க்கக்கூடியதுபோல், சுவர்க்கத்துடன் இந்த எல்லா பொருள்களின் ஒரு அன்னுவயமிருக்கிறது (செ. 87—102). இந்த அன்னுவயமானது எப்பொழும் பூரணமாகமாட்டாது; ஏனென்றால், ஒன்றுடன் ஒன்று அன்னுவயப்படுகிற தேவதா சேர்க்கைகள் எவ்வளவு ஏராளமாயிருக்கிறதோ, சுவர்க்கமானது அவ்வளவு சம்பூரணமாகிறது; ஏனென்றால், சுவர்க்கங்களில் ஒவ்வொரு சம்பூ

ரணமும் எண் அதிகப்படுகிறதற்கு தக்கபடி விர்த்தியாகிறது. ஏனென்றால், இதுவும் அங்கே எல்லாரும் ஒரே நோக்கத்தை உடையவர்களாய், அந்த நோக்கத்தை ஒருமனதுடன் பார்க்கிறார்கள். அந்த நோக்கமானது பொதுநன்மையைக் குறித்ததாயிருக்கிறது; அது அரசாளும்போது, பொதுநன்மையிலிருந்து, ஒவ்வொருவனுக்கும் நன்மையும், ஒவ்வொருவனுடைய நன்மையிலிருந்து சர்வ ஜனங்களுக்கும் நன்மையும் யிருக்கிறது. ஆண்டவர் சுவர்க்கத்திலிருக்கும் எல்லாரையும் தன்னிடமே திருப்பி (மேலே செ. 123 பார்க்கவும்), அதனால் அவர்களை தன்னிடமே ஒன்றாக செய்கிறார் என்கிற காரணத்துக்காக இது அப்படி யிருக்கிறது; முக்கியமாய் இவ்வித தொடக்கத்திலிருந்தும், இவ்வித உடன்பாட்டிலிருந்தும், உண்டாகும் அநேகருடைய ஏகசிந்தையும் இணக்கமும் சம்பூர்ணத்தை உண்டாக்குகிற தென்பதை கொஞ்சமாவது தெளிந்த புத்தியுடைய ஒவ்வொருவனும் அறிந்துகொள்ளக்கூடும்.

**419.** குடியிருக்கப்பட்டதும், அதனுடன் குடியில்லாததுமான சுவர்க்கத்தின் பரப்பை பார்க்க எனக்கு அருள் செய்யப்பட்டது; வாசம்பண்ணப்படாத சுவர்க்கத்தின் விசாலமானது, பூமிகளில் பதினாயிரங்கள் கணக்கானவைகளும், நம்முடைய பூமியில் இருக்கிறதுபோல, ஒவ்வொரு பூமியின்பேரிலும் அவ்வளவு பெரிய மனிதக்கூட்டங்களும் இருந்தபோதிலும், சதாகாலம் வரையில் நிரப்பப்படாதபடி, அவ்வளவு ஏராளமாயிருந்ததை நான் பார்த்தேன். இந்த விஷயத்தைப்பற்றிகூட, பிரபஞ்சத்திலுள்ள பூமிகளைக் குறித்து எழுதப்பட்ட சிறிய நூலைப் பார்க்கவும் (செ. 168).

**420.** சுவர்க்கமானது எல்லையற்றதாயல்லாமல், சிறிய தென்பதை சொல்லார்த்தத்தின்படி, அறிந்துகொள்ளப்பட்டவேதத்தின் சில வாக்கியங்களிலிருந்து, உதாரணமாக, ஏழைகளைத் தவிர, சுவர்க்கத்தில் யாரும் ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை என்றும், தெரிந்து எடுக்கப்பட்டவர்கள் தவிர, வேறு யாரும் ஒத்துக்கொள்ளப்படமாட்டார்களென்றும், திருச்சபைக்கு வெளியிலிருக்கிறவர்கள் அல்லாமல், அதற்குள் இருக்கிறவர்கள் மாத்திரம் சேர்த்துக்கொள்ளப்படக் கூடுமென்றும், அந்த சுவர்க்கமானது, ஆண்டவர் மத்தியஸ்தம் பேசுகிறவர்களுக்கு மாத்திரம் இருக்கிறதென்றும், அது நிரப்பப்பட்டபோது மூடப்படும் என்றும், இந்த காலமானது முன்னமே தீர்மானிக்கப்பட்டிருக்கிறதென்றும், சொல்லப்பட்டிருக்கிற வாக்கியங்களிலிருந்து, சிலர் அனுமானிக்கிறார்கள்.

ஆனால், சுவர்க்கமானது எப்பொழுதும் மூடப்படுகிறதில்லை என்றும் முன்னிட்டே தீர்மானிக்கப்பட்ட காலமாவது, எந்த வரையறுக்கப் பட்ட எண்ணுவது இல்லை என்றும், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் வாழ்க்கையிலிருக்கிறவர்கள்தான் தெரிந்து எடுக்கப்பட்டவர்கள் என்று சொல்லப்படுகிறார்களென்றும், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அறிவுகள் இல்லாமல் அவைகளை விரும்புகிறவர்கள்தான், ஏழைகளென்று சொல்லப்படுகிறார்களென்றும், அந்த அவாவிலிருந்து அவர்கள் பட்டினியானவர்கள் என்றும்கூட சொல்லப்படுகிறார்களென்றும், அவர்களுக்கு தெரியாது. வேதத்திலிருந்து சரியாய் அறிந்துகொள்ளாமல், சுவர்க்கத்தைக் குறித்து சிறிய விசாலமுடையதென்று அபிப்பிராயம் கொண்டவர்கள், அந்த சுவர்க்கமானது கணக்கற்ற கூட்டங்களால் அமைக்கப்பட்டிருந்தபோதிலும் (மேலே செ. 41 முதல் 50 வரையில் பார்க்கவும்), எல்லாரும் சேர்ந்திருக்கிற ஒரு இடத்தில் இருப்பதாக உத்தேசிக்கிறார்கள். அதனுடன்கூட, சுவர்க்கமானது ஒவ்வொருவனுக்கும் உடனே இரக்கத்தினால் கொடுக்கப்படுகிறதென்றும், இவ்விதமாக தயையினாலேயே மாத்திரம் பிரவேசிக்க உத்திரவும் அங்கீகாரமும் இருக்கிறதென்றும், அவர்கள் நினைக்கிறார்கள். ஆண்டவர், தம்முடைய இரக்கத்திலிருந்து தன்னை ஏற்றுக்கொள்ளுகிற ஒவ்வொருவனையும் நடத்துகிறார் என்றும், அன்பினுடையவும் பக்தியினுடையவும் கட்டளைகளாயிருக்கிற தெய்வ ஒழுங்கின் சட்டங்களுக்கு தக்கபடி, வாழ்கிறவனை அவர் ஏற்றுக்கொள்ளுகிறாரென்றும், உலகத்தில் இளம்பிராயம் முதல் வாழ்நாள் முடிவு வரையிலும், பின்னிட்டு சதாகாலம் வரையிலும், இவ்விதமாக ஆண்டவரால் நடத்தப்படுதல் இரக்கம் என்பதால் கருதப்பட்டது என்றும், அவர்களுக்கு தெரியாது. ஆகையினால், ஒவ்வொருவனும் சுவர்க்கத்துக்காக பிறந்திருக்கிறானென்றும், உலகத்தில் தன்னிடத்திலேயே சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளுகிறவன் ஏற்றுக்கொள்ளப் படுகிறானென்றும், அதை ஏற்றுக்கொள்ளாதவன் நீக்கப்படுகிறானென்றும் தெரிந்திருக்கட்டும்.

## ஆவிகள்உலகம் என்பது என்னமாயிருக்கிறது

**421.** ஆவிகள்உலகம் சுவர்க்கமும் அல்ல, நரகமும் அல்ல, ஆனால் அது இரண்டுக்கும் மத்தியிலுள்ள இடம் அல்லது நிலைமை; ஏனென்றால், அது மனிதனானவன் இறந்த பிறகு வருகிறதும், சில காலம் பொருத்து, உலகத்தில் அவன் வாழ்க்கைக்கு தக்கபடி சுவர்க்கத்திற்கு உயர்த்தப்படுகிறதும், அல்லது நரகத்தில் தள்ளப் படுகிறதுமான இடமாயிருக்கிறது.

**422.** ஆவிகள்உலகமானது சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியிலுள்ள இடமாயும், அதனுடன்கூட இறந்த பிறகு மனித னுடைய வாழ்க்கையின் நடுநிலைமையாயுமிருக்கிறது. நரகங்கள் கீழேயும் சுவர்க்கங்கள் மேலேயும் இருக்கிறபடியினால், அது மத்தி யிலுள்ள இடமென்றும், அங்கே மனிதன் இருக்கிறவரையில், அவன் சுவர்க்கத்திலாவது நரகத்திலாவது இல்லாதபடியினால், அது மத்தியிலுள்ள நிலைமை என்றும் எனக்கு விசதமாக்கப்பட்டது. மனிதனிடத்தில் சுவர்க்கத்தின் நிலைமை என்பது, அவனிடத்தில் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையாகவும், நரகத்தின் நிலைமை என்பது அவனிடத்தில் தீமையினுடையவும் பொய்யினுடையவும் சேர்க்கையாகவு மிருக்கிறது. ஓர் மானிட ஆவியிடத்தில் நன்மையானது உண்மையுடன் சேர்க்கப்பட்டால், அது சுவர்க்கத்தில் பிரவேசிக்கிறது; ஏனென்றால், இப்பொழுது தான் சொல்லியபடி, அந்த சேர்க்கையானது அதற்குள் சுவர்க்க மாகிறது. ஆனால், ஓர் மானிட ஆவியினிடத்தில் தீமையானது பொய்யுடன் சேர்க்கப்பட்டால், அது நரகத்திற்கு வருகிறது; ஏனென்றால், அந்த சேர்க்கையானது அதற்குள் நரகமாயிருக்கிறது. இந்த சேர்க்கையானது, ஆவிகள் உலகத்தில் உண்டாக்கப்படுகிறது. ஏனென்றால், மனிதனானவன் அப்பொழுது ஓர் மத்தியிலுள்ள நிலைமையிலிருக்கிறான். புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் சேர்க்கை என்றாவது, உண்மையினுடையவும் நன்மையினுடைய வும் சேர்க்கை என்றாவது எது சொன்னாலும் ஒரே பொருளாகிறது.

**423.** முதலில், புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் சேர்க்கையைப்பற்றியும், உண்மையினுடையவும் நன்மையினுடை

யவும்சேர்க்கைக்கு அதன் ஒப்பனையைப்பற்றியும், சிலது இப்பொழுது சொல்லப்படவேண்டும்; ஏனென்றால், அந்த சேர்க்கையானது ஆவிகள் உலகத்தில் காரியப்படுத்தப்படுகிறது. மனிதனுக்கு ஒரு புத்தியுமிருக்கிறது, அவனுக்கு ஒரு சித்தமுமிருக்கிறது: புத்தியானது உண்மைகளை ஏற்றுக்கொண்டு, அவைகளிலிருந்து உருவாக்கப்படுகிறது; சித்தமானது நன்மைகளை ஏற்றுக்கொள்வதாயிருந்து, அவைகளிலிருந்து உருவாக்கப்படுகிறது. ஆகவே, ஒரு மனிதன் அறிந்துகொண்டு அதிலிருந்து நினைக்கிறதை எல்லாம், உண்மை என்று சொல்லுகிறான்; அவன் இச்சித்து அதிலிருந்து நினைக்கிறதை எல்லாம், நன்மை என்று சொல்லுகிறான். மனிதனானவன் புத்தியிலிருந்து நினைத்து, அதிலிருந்து எது உண்மையானதென்றும், அதனுடன்கூட எது நன்மையானதென்றும் உணருகிறான்; ஆனால், அவன் அதை இச்சித்து செய்தாலொழிய, சித்தத்திலிருந்து அதை அவன் நினைக்கிறதில்லை. அவன் இம்மாதிரியாக இச்சித்து செய்தால், உண்மையானது புத்தியிலும் சித்தத்திலும் இரண்டிலுமிருக்கிறது; அதனால், அந்த மனிதனிடத்திலுமிருக்கிறது. ஏனென்றால், புத்திமாத்திரம் ஒரு மனிதனை உண்டாக்குகிறதில்லை; அதுவுமன்றி சித்தமும் அப்படிசெய்கிறதில்லை; புத்தியும் சித்தமும் சேர்ந்து அப்படி செய்கிறது; ஆகையினால், இரண்டிலும் இருக்கப்பட்டது, மனிதனில் இருக்கிறது; அது அவனுக்கு உரித்தாக்கப்படுகிறது. புத்தியில் மாத்திரம் இருக்கிறது, நிஜமாகவே மனிதனுடன் இருக்கிறது, ஆனால் அது அவனில் இல்லை; தன்னிலேயேயல்லாமல், மற்றவர்கள் கூட்டத்திலும், தனக்கு வெளியேயும் இருக்கும் காலத்தில் தான் நினைக்கக் கூடிய அவன் ஞாபகத்தின் ஒரு பொருளாக அல்லது அவன் ஞாபகத்தில் அறிவின் ஓர் விஷயமாக மாத்திரம் அது இருக்கிறது. இவ்விதமாக, அது அவன் பேசவும் விசாரிக்கக் கூடியதும், அதன்படி கூட அவன் ஆசைகளையும் சைகைகளையும் ஒப்பாசாரம் பண்ணக் கூடியதுமாகிய பொருளாய் இருக்கிறது.

**424.** மனிதனானவன் சீர்திருத்தப்பட தகுந்தவனாயிருக்கும்பொருட்டு, அவன் புத்தியிலிருந்து நினைக்க முடியவும், அதே காலத்தில் சித்தத்திலிருந்து நினைக்க முடியாதபடிக்கும் அமைத்து வைக்கப்பட்டிருக்கிறது; ஏனென்றால், மனிதனானவன் உண்மைகளால் சீர்திருத்தப்படுகிறான்; மேலும், இப்பொழுதுதான் சொல்லியபடி உண்மைகள் புத்திக்கு சேர்ந்தவைகளாயிருக்கின்

றன. ஏனென்றால், சித்தம் விஷயத்தில் மனிதனானவன் ஒவ்வொரு தீமையிலும் பிறந்திருக்கிறான்; ஆகவே, தானே, தனக்கே மாத்திரம் தவிர அவன் யாருக்கும் நன்மை செய்ய நினைக்கிறதில்லை; தனக்கே மாத்திரம் நன்மை வேண்டுமென்று இச்சிக்கிறவன், மற்றவர்களுக்கு நேரிடுகிற அதிர்ஷ்ட வீனங்கள் விஷயத்தில், அவைகள் முக்கியமாய் தன்னுடைய சொந்த இலாபத்துக்கு சார்வழியாக இருக்கும் பட்சத்தில், இன்பத்தை அடைகிறான்; ஏனென்றால், மற்ற எல்லாருடைய பொருள்களும், கீர்த்திகளாகவாவது செல்வங்களாகவாவது எதாயிருந்தபோதிலும், அவைகளை தனக்கே உரித்தாக்க விரும்புகிறான்; அவன் அனுகூலமடைகிற அளவு, அவன் தனக்குள்ளேயே சந்தோஷப்படுகிறான். இந்த சித்தமானது, திருத்தப்பட்டு, சீர்படுத்தப்படும் பொருட்டு, உண்மைகளை தெரிந்துகொண்டு, அவைகள் மூலமாய், சித்தத்திலிருந்து உண்டாகிற கெட்ட ஆசைகளை அடக்க மனிதனுக்கு அருள் செய்யப்பட்டிருக்கிறது. அதனால் தான், மனிதனுக்கு புத்தியிலிருந்து உண்மைகளை நினைக்கவும், அதனுடன் அவைகளைப் பேசவும், அவைகளைச் செய்யவும் கூடும்; அப்படி இருந்தாலும், அவைகளை இச்சித்து தன்னிடமே இருந்து அதாவது இருதயத்திலிருந்து, அவைகளை செய்யும்படியாக குணத்தில் அவன் அப்படி யிருக்கிறவரையில், சித்தத்திலிருந்து உண்மைகளை அவன் நினைக்கமுடியாது. மனிதனானவன் குணத்தில் அப்படிப்பட்டவனாயிருக்கும் பட்சத்தில், புத்தியிலிருந்து அவன் நினைக்கிறது, அவனுடைய விசுவாசத்துக்கு சேர்ந்தது; சித்தத்திலிருந்து அவன் நினைப்பது, அவனுடைய அன்புக்கு சேர்ந்தது; ஆகையினால், அவனிடத்தில், புத்தியையும் சித்தத்தையும்போல விசுவாசமும் அன்பும் அப்பொழுது தாங்களே சேர்ந்துக்கொள்ளுகின்றன.

425. ஆகையினால், புத்தியின் உண்மைகள் சித்தத்தின் நன்மைகளோடு எவ்வளவு சேர்க்கப்பட்டிருக்கிறதோ, அதாவது ஒரு மனிதன் உண்மைகளை இச்சித்து, அவனுடைய சித்தத்திலிருந்து அவைகளை எவ்வளவு செய்கிறானோ, அவ்வளவு அவன் தன்னிலேயே சுவர்க்கத்தை உடைத்தாயிருக்கிறான்; ஏனென்றால், மேலே கூறியபடி, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையானது சுவர்க்கமாயிருக்கிறது. ஆனால், புத்தியின் பொய்கள் சித்தத்தின் தீமைகளோடு எவ்வளவு சேர்க்கப்பட்டிருக்கிறதோ, அவ்வளவு மனிதனானவன் தன்னிலேயே நரகத்தை உடைத்தாயிருக்கிறான்; ஏனென்றால், பொய்யினுடையவும் தீமை

யினுடையவும் சேர்க்கையானது நரகமாயிருக்கிறது. ஆனால், புத்தியின் உண்மைகளானவை, சித்தத்தின் நன்மைகளோடு எவ்வளவு சேர்க்கப்படாதிருக்கிறதோ, அவ்வளவு மனிதனானவன் ஒரு நடுநிலைமையிலிருக்கிறான். ஏறக்குறைய ஒவ்வொரு மனிதனும் இக்காலத்தில், உண்மைகளை தெரிந்துகொண்டும், அறிவிலிருந்தும் புத்தியிலிருந்தும் உண்மைகளை நினைத்தும், அவைகளில் அநேகத்தை அல்லது சிலவற்றை செய்தும், ஒன்றையும் செய்யாமலும், அல்லது தீமைனிடத்துகொள்ளும் ஆசையிலிருந்தும், அதிலிருந்துபொய்யை நம்புவதிலிருந்தும், அவைகளுக்கு விரோதமாய் நடந்தும்கொள்ளுகிற அவ்வித நிலைமையிலிருக்கிறான். ஆகையினால், சுவர்க்கத்துக்காவது அல்லது நரகத்துக்காவது அவன் தகுதியாக்கப்பட, இறந்த பிறகு ஆவிகள் உலகத்திற்கு முதலில் கொண்டுவரப்படுகிறான்; அங்கே சுவர்க்கத்துக்கு உயர்த்தப்பட இருக்கிறவர்கள் விஷயத்தில், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் ஒரு சேர்க்கையும், நரகத்திற்கு தள்ளப்பட இருக்கிறவர்கள் விஷயத்தில் தீமையினுடையவும் பொய்யினுடையவும் ஒரு சேர்க்கையும், சித்தியாக்கப்படுகிறது. ஏனென்றால், சுவர்க்கத்திலாவது நரகத்திலாவது எவனும், கூறு செய்த மனதை உடைத்தாயிருக்க அதாவது ஒன்றை அறிந்து மற்றொன்றை இச்சிக்க விடப்படுகிறதில்லை. ஆனால், ஒவ்வொருவனும் தான் இச்சிப்பதை அறிந்துகொள்ளவேண்டும்; தான் அறிந்துகொண்டதை இச்சிக்கவேண்டும்: ஆகவே, சுவர்க்கத்தில் நன்மையை இச்சிக்கிறவன் உண்மையை அறிந்துகொள்வான்; நரகத்தில், தீமையை இச்சிக்கிறவன், பொய்யானது எதுவென்று அறிந்துகொள்வான். இந்த காரணத்துக்காக, நல்லவர்கள் விஷயத்தில், அங்கே பொய்கள் நீக்கப்பட்டு, அவர்களுடைய நன்மையுடன் ஒத்து இணங்குகிற உண்மைகள் அவர்களுக்கு கொடுக்கப்படுகின்றன; கெட்டவர்கள் விஷயத்தில், உண்மைகள் நீக்கப்பட்டு, அவர்களுடைய தீமைகளோடு ஒத்து இசைந்துபோகிற பொய்கள், அவர்களுக்கு கொடுக்கப்படுகின்றன. இந்த சங்கதிகளிலிருந்து, ஆவிகள் உலகம் என்ன என்பது வெளிப்படையாகிறது.

**426**. ஆவிகள்உலகத்தில் அளவிறந்தவர்கள் இருக்கிறார்கள்; ஏனென்றால், எல்லாரும் கூடப்பட்ட முதல் சங்கம் அங்கே நடந்து, அங்கே எல்லாரும் விசாரணை செய்யப்பட்டு ஆயத்தம் பண்ணப்படுகிறார்கள். அவர்கள் அங்கே தொடர்ச்சியாயிருக்க நிலை படுத்திய காலமில்லை; சிலர் மாத்திரம் அதில் பிரவேசிக்கிறார்

ள் ; உடனே அவர்கள் சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப்படுகிறார் ள் அல்லது நரகத்தில் தள்ளப்படுகிறார்கள் ; சிலர், அங்கே சில பாரங்கள் மாத்திரம் இருக்கிறார்கள், மற்றவர்கள் அநேக வருஷங் ள் இருக்கிறார்கள் ; ஆனால், முப்பது வருஷத்துக்குமேல் யாரும் இருக்கிறதில்லை. காலத்தின் வித்தியாசங்கள், மனிதனில் உள்ள உள்ளானவைகள் புறம்பானவைகளின் அன்னுவயம் அன்னுவய மில்லாமையின்பேரில் சார்ந்திருக்கின்றன. ஆனால், அந்த உலகத் தில் உள்ள மனிதன், எந்த வழியில் ஒரு நிலைமையிலிருந்து மற்ற துக்கு கொண்டுவரப்பட்டு, ஆயத்தம் பண்ணப்படுகிறானென்பது, பின்வரும் அத்தியாயத்தில் விவரிக்கப்படும்.

**427**. மனிதர்கள் இறந்த பிறகு ஆவிகள் இருக்கப்பட்ட உலகத்துக்கு அவர்கள் வந்தவுடன், ஆண்டவரால் தெளிவாய் வகை பறிக்கப்படுகிறார்கள். துன்மார்க்கர்கள், தங்கள் அரசாளும் அன்பு விஷயத்தில், உலகத்தில் தாங்கள் இருந்த நரகத்திற்குறிய கூட்டத்தில் உடனே சேர்க்கப்படுகிறார்கள்; தங்களுடைய அன்பி னாலும், தருமத்தினாலும், விசுவாசத்தினாலும், நல்லவர்கள், உலகத் திலிருக்கும்போது தாங்கள் சேர்க்கப்பட்டிருந்த சுவர்க்கத்து கூட் டத்துடன் உடனே சேர்க்கப்படுகிறார்கள். ஆனால், அவர்கள் இம் மாதிரியாக பிரிக்கப்பட்டபோதிலும், சரீர வாழ்வில் சிநேகிதர் களாகவும், அறிமுக மானவர்களாகவும் இருந்தவர்கள் எல்லாரும், முக்கியமாய், மனைவிகளும், புருடர்களும், சகோதரர்களும், சகோதரி களும், தாங்கள் இஷ்டப்படும்போதெல்லாம் ஒருவரை ஒருவர் சந் தித்து, சம்பாஷிக்கிறார்கள். ஒரு தகப்பனார் தான் முன்னிட்டே தெரிந்துகொண்ட தன்னுடைய ஆறு குமாரர்களுடன் பேசுவதை நான் பார்த்திருக்கிறேன்; மேலும் இன்னும் அநேகரை தங்களு டைய பந்துக்களுடனும் சிநேகிதர்களுடனும் பார்த்திருக்கிறேன்; ஆனால், உலகத்தில் தங்கள் வாழ்க்கையிலிருந்து பலவித குணங்களை உடையவர்களாயிருந்தபடியினால், கொஞ்சகாலம் பொருத்து அவர் கள் பிரிக்கப்பட்டார்கள். ஆனால், ஆவிகள் உலகத்திலிருந்து சுவர்க் கத்துக்குள்ளாவது நரகத்திற்குள்ளாவது வந்தபோது ஒரேவிதமான அன்பிலிருந்து, ஒரேவிதமான குணமுடையவர்களாயிருந்தா லொழிய, அதற்குமேல் ஒருவரை ஒருவர் பார்க்கிறதுமில்லை தெரிந்துகொள்ளுகிறதுமில்லை. அவர்கள், சுவர்க்கத்திலாவது நரகத் திலாவது அல்லாமல், ஆவிகள் உலகத்தில் ஒருவரை ஒருவர் பார்க் கிறார்கள்; ஏனென்றால், ஆவிகள் உலகத்தில் இருக்கப்பட்டவர்கள்

சரீர வாழ்வில் தங்களுக்கு இருந்த நிலைமைகள்போன்ற நிலைமைகளுக்கு ஒன்றன்பின் ஒன்றாய் கொண்டு வரப்படுகிறார்கள்; ஆனால், பின்னிட்டு, எல்லாரும், தங்களுடைய அரசாளும் அன்பை ஒத்து, ஒரு மாறாத நிலைமைக்கு கொண்டு வரப்படுகிறார்கள்; அந்த நிலைமையில் ஒருவன் மற்றவனை அன்பின் ஒப்பனையால் மாத்திரம் தெரிந்துகொள்ளுகிறான். ஏனென்றால், அப்பொழுது, ஒப்பனை சேர்க்கிறது, வேற்றுமை பிரிக்கிறது (மேலே, நெ. 41 முதல் 50 வரையில் பார்க்கவும்).

**428.** ஆவிகள் உலகம் மனிதன் விஷயத்தில் சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில் இருக்கும் நடு நிலைமையாயிருக்கிறபடியினால், அது மத்திய இடமாகக்கூட இருக்கிறது. கீழே நரகங்களும், மேலே சுவர்க்கங்களுமிருக்கின்றன. அந்த உலகம் பக்கம், எல்லா நரகங்களும் மூடப்பட்டிருக்கின்றன; அவைகள், பாறைகளில் இருப்பவைகள்போன்ற துவாரங்கள் மூலமாயும் வெடிப்புகள் மூலமாயும்; உத்திரவன்றி யாரும் வெளியே வராதபடி தடுக்கும் பொருட்டு, பாதுகாக்கப்படுகிற அகன்ற துவாரங்கள் மூலமாயும் மாத்திரம், திறந்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஆவசிகமான எந்த ஆபத்தாவது இருக்கும்போது, இந்த உத்திரவு கொடுக்கப்படுகிறது; அதைப்பற்றி நாம் இப்போதே பேசுவோம். சுவர்க்கம்கூட எல்லா பக்கங்களிலும் மூடப்பட்டிருக்கிறது; தன் உட் பிறவேசம்கூட பாதுகாக்கப்படுகிற ஒரு இடுக்கமான வழியைத் தவிர, எந்த சுவர்க்கத்து கூட்டத்திற்கும் போக ஒரு வழியும் திறக்கப்பட்டிருக்கவுமில்லை. இந்த வெளியேயும் உள்ளேயும் போகும் வழிகள் வேதத்தில் நரகத்தினுடையவும் சுவர்க்கத்தினுடையவும் வாசலென்றும் கதவுகளென்றும் சொல்லப்பட்டவைகளா யிருக்கின்றன.

**429.** ஆவிகள் உலகம், மலைகளுக்கும் பாறைகளுக்கும் மத்தியில் இருக்கும் ஒரு பள்ளத்தாக்குபோல இங்கும் அங்குமாக வளைவுகளோடும் மேடுகளோடுமிருக்கின்றன. சுவர்க்கத்து கூட்டங்களின் வாசல்களும் கதவுகளும், சுவர்க்கத்துக்கு ஆயுத்தம்பண்ணப்படுகிறவர்களால் தவிற மற்றவர்களால் பார்க்கப்படுகிறதில்லை; அதுவுமன்றி மற்றவர்களால் கண்டுபிடிக்கப்படுகிறதுமில்லை. ஆவிகள் உலகத்திலிருந்து ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஒரு உட்பிரவேசமிருக்கிறது, அப்புறம்கூட மேலே ஏறும்போது, அநேக கிளை வழிகளாக பிரிகிற ஒரு வழியுமிருக்கிறது. நரகங்களின் வாசல்களும் கதவுகளும், பிறகு அவைகள், அவர்களுக்கு திறக்கப்பட இருக்கிற,

உள்ளே பிரவேசிக்க இருக்கிறவர்களுக்கு மாத்திரம் பிரத்தியட்சமாகும். இவைகள் திறக்கப்படும்போது, மங்கலானதும் தோற்றப்படி ஓட்டறையுள்ள கெபிகள், அநேக கதவுகள் இருக்கப்பட்ட பாதாளத்துக்கு, கீழ்புறம் கோணலாய்போவது பார்க்கப்படுகிறது. இந்த கெபிகள்மூலமாய், நல்ல ஆவிகள் வெறுத்து ஓடிப்போகிறதும், தங்களுக்கு இன்பமாயிருக்கிறபடியினால், கெட்ட ஆவிகள் தேடுகிறதுமான உவட்டானதும் நாற்றமுள்ளதுமான கவிச்சு நாற்றங்கள் வெளியேவருகின்றன. ஏனென்றால், உலகத்தில் ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த தீமை விஷயத்தில் இன்பமடைந்திருந்தபடியினால், இறந்த பிறகு, தன்னுடைய தீமையானது அன்னுவயப்படுகிற துர்நாற்றத்தில் இன்பமடைகிறான். இந்த விஷயத்தில், துர்கந்த வாசனைப் பட்டபோது, அழுகும் பிணத்தண்டை அல்லது குப்பை மேட்டுக்கு பறக்கிற அல்லது ஓடுகிற அண்டங்காகங்கள், ஓநாய்கள், பன்றிகள்போன்ற பறிக்கிற பட்சிகளுக்கும் மிருகங்களுக்கும் அவைகள் ஒப்பிடப்படலாம். சுவர்க்கத்திலிருந்து ஒரு சுவாசம் ஒரு ஆவியின்பேரில் அடித்தபோது, உள் வேதனையிலிருந்ததுபோல, அது ஒரு உரத்த சத்தத்துடன் அழுதலை நான் ஒருதரம் கேட்டிருக்கிறேன்; பின்னிட்டு நரகத்திலிருந்து ஒரு இரேசகம் அதை எட்டியபோது, அது அமைதியாயும் சந்தோஷமாயும் இருந்ததை நான் பார்த்தேன்.

**430**. ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு கதவுகள் இருக்கின்றன; அதில் ஒன்று நரகத்துக்கு வழிகாட்டுகிறது; மேலும் அது அதிலிருந்து வரும் தீமைகளுக்கும் பொய்களுக்கும் திறக்கப்பட்டிருக்கிறது; மற்றது சுவர்க்கத்துக்கு வழிகாட்டுகிறது; மேலும் அது அதிலிருந்து வரும் நன்மைகளுக்கும் உண்மைகளுக்கும் திறக்கப்பட்டிருக்கிறது. தீமையிலும் அதன் பொய்யிலும் இருக்கப்பட்டவர்களில் நரகத்து கதவு திறக்கப்பட்டிருக்கிறது; சுவர்க்கத்திலிருந்து வரும் வெளிச்சத்தின் சில கதிர்கள், மேலிருந்து வெடிப்புக்கள் மூலமாய் பாய்ந்து, ஒரு மனிதனுக்கு நினைக்கவும், நியாய முத்தரிக்கவும், பேசவும் சக்தியை கொடுக்கிறது; ஆனால், சுவர்க்கத்து கதவு நன்மையிலும், அதிலிருந்து உண்மையிலும் இருக்கப்பட்டவர்களில் திறக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், மனிதனுடைய பகுத்தறிவுள்ள மனதுக்கு வழிகாட்டுகிற இரண்டு வழிகளிருக்கின்றன; நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து பிறவேசிக்கிற அதிக உயர்ந்த அல்லது உள்ளான வழி ஒன்றும், தீமையும் பொய்யும்

நரகத்திலிருந்து பிரவேசிக்கிற அதிக தாழ்ந்த அல்லது புறம்பான வழி ஒன்றும் இருக்கின்றன. அந்த வழிகள் சாய்கிற பகுத்தறிவுள்ள மனதே கூட மத்தியிலிருக்கிறது. ஆகவே, சுவர்க்கத்திலிருந்து வெளிச்சமானது எவ்வளவு ஏற்றுக்கொள்ளப்படுகிறதோ, அவ்வளவு மனிதனானவன் பகுத்தறிவுள்ளவனாயிருக்கிறான்; அது ஏற்றுக்கொள்ளப்படாத அளவு, தான் அப்படியிருப்பதாக தனக்கே எவ்வளவு தோன்றினபோதிலும் அவன் பகுத்தறிவுடையவன் அல்ல. மனிதனுக்கு சுவர்க்கத்துடனும் நரகத்துடனும் என்ன அன்னுவயமிருக்கிறதென்று தெரிந்திருக்கப்படக்கூட இந்த குறிப்புகள் காட்டப்பட்டன. அவனுடைய பகுத்தறிவுள்ள மனது, அது உருவாக்கப்படும் காலத்தில், ஆவிகள் உலகத்துக்கு அன்னுவயப்படுகிறது; அதற்கு மேலிருப்பது சுவர்க்கத்துக்கும், கீழிருப்பது நரகத்திற்கும் அன்னுவயப்படுகிறது. சுவர்க்கத்துக்கு ஆயத்தம் பண்ணப்படுகிறவர்கள் விஷயத்தில், தீமையினுடையவும் பொயினுடையவும் உட்பெருக்கு, அதற்கு மேலிருப்பவைகள் திறக்கப்பட்டும், அதற்கு கீழ் இருப்பவைகள் மூடப்பட்டுமிருக்கின்றன; ஆனால், நரகத்துக்கு ஆயத்தம் பண்ணப்படுகிறவர் விஷயத்தில், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் உட்பெருக்குக்கு, அதற்கு கீழ் இருக்கும் பொருள்கள் திறக்கப்பட்டும், அதற்கு மேலிருக்கும் பொருள்கள் மூடப்பட்டுமிருக்கின்றன. ஆகவே, பின் கூறியவர்கள் தங்களுக்கு கீழேயே, அதாவது நரகத்தையே தவிர வேறொன்றையும் பார்க்க முடியாது; முன் கூறியவர்கள், தங்களுக்கு மேலேயே, அதாவது சுவர்க்கத்தையே தவிர வேறொன்றையும் பார்க்க முடியாது. ஆண்டவரானவர் சுவர்க்கத்தின் எல்லா பொருள்களும் பார்க்கிற பொதுவானமையமாயிருப்பதினால், தங்களுக்கே மேலே பார்த்தல் என்பது ஆண்டவரைப் பார்த்தலாகயிருக்கிறது; ஆனால், தங்களுக்கே, கீழே பார்த்தல் என்பது நரகத்தின் எல்லா பொருள்களும் எதிர்பார்த்து சாய்கிற எதிரான மையத்துக்கு ஆண்டவரிடமிருந்து பின் பக்கம் பார்த்தலாயிருக்கிறது. (மேலே செ. 123, 124 பார்க்கவும்.)

**431.** முன் சென்ற பக்கங்களில் ஆவிகள் என்பது சொல்லப்பட்ட போதெல்லாம், ஆவிகள் உலகத்திலிருக்கிறவர்கள் கருதப்படுகின்றன; தேவர்கள் என்று சொல்லப்பட்டபோது, சுவர்க்கத்திலிருக்கப்பட்டவர் கருதப்படுகின்றன.

# XLV

## ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில் ஒரு ஆவியாயிருக்கிறன்.

**432.** இந்த விஷயத்தை சரியாய் விசாரிக்கும் ஒவ்வொருவனுக்கும், சரீரமானது ஸ்தூலமாயிருப்பதினால் அது நினைக்காமல், ஆனால், ஆன்மாவானது சூக்குமமாயிருப்தினால் அது நினைக்கிறதென்றும் தெரிந்திருக்கலாம். அநேகர் அழிந்து போகாதென்று எழுதியிருக்கிற மனிதனுடைய ஆன்மாவானது அவனுடைய ஆவியாயிருக்கிறது; ஏனென்றால், இந்த ஆவியானது முற்றும் அழியாததாயிருக்கிறது. சரீரத்தில் நினைக்கிறது ஆவியாயிருக்கிறது; ஏனென்றால், அது சூக்குமமாயிருக்கிறது; அப்படி சூக்குமமாயிருக்கப்பட்டது, சூக்குமமாயிருப்பதை ஏற்றுக்கொண்டு, நினைத்தலும் இச்சித்தலுமாயிருக்கிற ஆவியாய் வாழ்கிறது. ஆகையினால், சரீரத்தில் தோன்றும் எல்லா பகுத்தறிவுள்ள வாழ்க்கையும் ஆவிக்கு சேர்ந்தது, அதில் எந்த பாகமும் சரீரத்துக்கு சேர்ந்தில்லை; ஏனென்றால், மேலே கூறியபடி சரீரமானது ஜடமாயிருக்கிறது, அப்படி ஜடமாயிருப்பது, சரீரத்துக்கு சேர்ந்தபடியினால், மனிதனுடைய ஆவியானது ஸ்தூல உலகத்தில் வாழ்ந்து உபயோகமானவைகளை செய்யும்பொருட்டு, ஆவியுடன் சேர்க்கப்பட்டு, பிரத்தியக்ஷமாய் ஏறக்குறைய அதை அடுத்திருக்கிறது; ஏனென்றால், இந்த உலகத்தில் உள்ள பொருள்களெல்லாம், ஜடமாயும், தங்களுக்குள்ளேயே உயிரில்லாததாயுமிருக்கிறது. ஸ்தூலமானதற்கு உயிரில்லாமல், ஆவி சம்பந்தமானதற்கு மாத்திரம் உயிரிருக்கிறபடியினால், மனிதனுக்குள் வாழ்வது எதுவும் அவனுடைய ஆவி என்றும், சரீரமானது, ஒரு துணைக்கருவியானது அசையும் உயிருள்ள சக்திக்கு உதவுகிறதுபோல அதற்கு உதவுகிறதென்றும் வெளிப்படையாகலாம். ஒரு துணைக்கருவியைப்பற்றி, அது செயல்படுகிறதென்றும், அசைகிறதென்றும், அல்லது மொத்துகிறதென்றும் நிஜமாகவே சொல்லப்படுகிறது; ஆனால், இவைகள் எல்லாம், செயல்பட்டு, அசைத்து, துணைக்கருவியினால் அடிக்கிறவனுடைய செயல்கள் அல்லாமல், அந்த துணைக்கருவியின் செயல்களென்று நம்புதல் பிழையாயிருக்கிறது.

**433.** சரீரத்தில் வாழ்ந்து, உயிரினால் செயல்பட்டு உணர்கிற ஒவ்வொன்றும், சரீரத்துக்கல்லாமல் ஆவிக்கு முழுமையும் சேர்ந்திருக்கிறபடியினால், ஆவிதான் உண்மையான மனிதனென்றும், அல்லது, அதேவாகிறபடி மனிதனுக்குள்ளே பார்த்தால், அவன் ஆவியென்றும் அதனுடன்கூட அவன் அதே உருவத்தில் இருக்கிறானென்றும், ஏற்படுகிறது. ஏனென்றால், மனிதனுக்குள் உயிரோடிருந்து உணர்கிற எதுவும் அவனுடைய ஆவிக்கு சேர்ந்திருக்கிறது; மனிதனுக்குள் தலை முதல் உள்ளங்கால் வரையில் இருப்பதெல்லாம் உயிரோடிருந்து உணருகிறது. அதனால்தான், சரீரமானது அதன் ஆவியிலிருந்து பிரிக்கப்பட்டபோது (இதுதான் இறத்தல் என்று சொல்லப்படுவது) மனிதன் அதற்கு அப்புறமும் நின்று உயிரோடிருக்கிறான். இறந்துபோகும் சிலர், உயிர்ப்பிக்கப் படுவதற்கு முன்னர் பாடையின்மேல் கிடக்கும்போது தங்களுடைய குளிர்ந்த சரீரத்தில்கூட நினைக்கத் தொடர்கிறார்களென்றும், சரீரத்துக்கு சேர்ந்த பொருளின் ஒரு அணுவைக்கூட அசைக்க அவர்கள் சக்தியற்றவர்களாயிருக்கிறார்களென்பதைத் தவிர இன்னும் உயிரோடில்லை என்று அவர்களுக்கு தெரியாதென்றும் சுவர்க்கத்திலிருந்து கேழ்விப்பட்டிருக்கிறேன்.

**434.** ஒரு உற்பத்தி ஸ்தானமாகவும் கொள்கலமாக உதவக்கூடிய ஒரு சத்தாயிருக்கிற ஒரு பதார்த்தமாக மனிதன் இருந்தாலொழிய, நினைக்கவும் இச்சிக்கவும் அவனால் முடியாது. ஒரு சத்துள்ள பொருளைக்கொண்டு அல்லாமல் நிலைக்கிறதென்பதெல்லாம் சூனியமாயிருக்கிறது. தன் பார்வைக்கு பொருளாயிருக்கிற ஒரு அவயவமில்லாமல் மனிதனுக்கு பார்க்க முடியாதென்கிற உண்மையிலிருந்தும், தான் கேழ்ப்பதற்கு பதார்த்தமாயிருக்கிற ஒரு அவயவமில்லாமல் கேட்கமாட்டான் என்கிற உண்மையிலிருந்தும், இது தெரிந்துகொள்ளப்படலாம்; இந்த அவயவங்கள் இல்லாமல் பார்த்தலும் கேட்டலும் சூனியமாகின்றன; அன்றியும், அவைகள் நிலைக்காமலும் போகின்றன. உட்பார்வையாயிருக்கிற சிந்தனை விஷயத்திலும், அந்தரங்கமாய் கேட்டலாயிருக்கிற உணர்ச்சி விஷயத்திலும் அதேமாதிரிதான்; அவைகள் சத்தானவைகளில் இருந்து, அங்கமுள்ள உருவங்களாகவும், மனோசக்திகளுக்கு பொருள்களாகவும் இருக்கிற பொருள்களிலிருந்து உற்பத்தியானாலொழிய அவைகள் இருக்கவே முடியாது. இவைகளிலெல்லாமிருந்து, மனிதனுடைய ஆவியானது சமமாய் ஒரு உருவத்தில் இருக்கிறதென்

ம், அது மானிட உருவத்திலிருக்கிறதென்றும், சரீரத்தில் இருக் ம்போது போல அதிலிருந்து பிரிக்கப்பட்டபோதும்கூட சேதன லயங்களையும் பஞ்சேந்திரியங்களையும் அது சமமாய் அனுபவிக் றதென்றும், கண்ணின் எல்லா உயிரும், காதின் எல்லா உயிரும், ருங்கச் சொல்லில், மனிதனுக்கு இருக்கும் பஞ்சேந்திரியங்களின் ல்லா உயிரும், அவனுடைய சரீரத்துக்கு சேர்ந்ததாயல்லாமல், ருந்த அவயவங்களிலும், அவைகளின் மிகவும் நுண்ணிய பாகங் ளிலும் இருக்கும் அவனுடைய ஆவிக்கு சேர்ந்ததாயிருக்கிற தென்றும், விசதமாகலாம். அதனால்தான், ஆவிகள், சரீரத்தை விட்டு பிரிந்தபிறகு ஸ்தூல லோகத்தில் அல்லாமல், சூக்கும லோகத் தில் மனிதர்களைப்போல பார்த்தும் கேட்டும் உணருகின்றன. ஆவி யானது சரீரத்தில் இருந்தபோது உடைத்தாயிருந்த ஸ்தூல இந் திரிய ஞானமானது, அவனுக்கு சேர்க்கப்பட்டிருந்த ஜடபாகத்தின் விளைவாயிருந்தது; ஆனால், அக்காலத்திலும்கூட, நினைப்பதினாலும் இச்சிப்பதினாலும் அதே காலத்தில் அவனுக்கு சூக்கும சைதன் னியமிருந்தது.

**435**. மனிதனையே பார்க்கும்பட்சத்தில் அவன் ஒரு ஆவி யென்றும், ஸ்தூலமானதும் ஜடமானதுமாகிய உலகத்தில் வேலைகள் நடக்கும்பொருட்டு, ஆவிக்கு சேர்க்கப்பட்டிருக்கிற ஸ்தூல சரீரம் மனிதன் அல்லாமல், அவனுடைய ஆவியின் உபயோகத்தின் பொருட்டு ஒரு கருவி என்றும் பகுத்தறிவுள்ள மனிதன் உள்ளத்தில் அறிந்துகொள்ளப்பட இவைகளெல்லாம் சொல்லப்பட்டன. ஆனால், அநுபவத்திலிருந்து ஸ்திரப்படுதல் மிகவும் நல்லது; ஏனென்றால், அறிவிலிருந்து ஏற்படும் அனுமானங் கள் அநேகரால் கிரகிக்கப்படுகிறதில்லை; மேலும் எதிரிடையான அபிப்பிராயத்தில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள் அவ்வித அனு மிதங்களை, ஐம்புலன்களின் பிழைகளிலிருந்து யூகித்து அறிதலினால் சந்தேக விஷயங்களாக திரும்புகிறார்கள். எதிரிடையான அபிப் பிராயங்களில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், மிருகங்கள் மனிதர்க ளைப்போல் வாழ்ந்து உணருகிறதாகவும், ஆகையினால் மனிதனுக்கு இருக்கும் ஆன்ம சம்பந்தத்தைப்போல் ஏதோ ஒரு ஆன்ம சம் பந்தம்கூட அவைகளுக்கு இருக்கிறதாகவும், அப்படியிருந்தும் அது சரீரத்துடன் இறந்துபோகிறதாகவும் நினைக்கபழக்கப்பட்டிருக் கிறார்கள். ஆனால் மிருகங்களில் ஆன்ம சம்பந்தமான பாகம் மனித னுடைய ஆன்ம சம்பந்தமான பாகம் இருக்கிறதுபோல் இல்லை;

ஏனென்றால், மனிதனுக்கு ஒரு மிகவும் அந்தரங்கமான பாகம் இருக்கிறது, அது மிருகங்களுக்கு இல்லை; தெய்வமானது இதில் ஒடி, மனிதனை தன்னிடமே உயர்த்தி, அவனை தன்னுடனேயே சேர்த்துக்கொள்ளுகிறது. ஆகவே மிருகங்களல்லாமல், மனிதனே, கடவுளைப்பற்றியும், சுவர்க்கத்தினுடையவும் திருச்சபையினுடைய தெய்வீக பொருள்களைப்பற்றியும் நினைக்கக்கூடும்; மேலும் அவைகளிலிருந்தும், அவைகளிலும் கடவுளிடத்து அன்பு பாராட்டக் கூடும்; இவ்விதமாக அவருடன் சேர்க்கப்படக்கூடும்; ஆனால், தெய்வத்துடன் சேர்க்கப்படக்கூடியது, நீக்கப்படமுடியாது; தெய்வத்துடன் சேர்க்கப்படமுடியாதது நீக்கப்படுகிறது. மிருகங்களுக்கு மேல் மனிதன் உடைத்தாயிருக்கிற மிகவும் உள்ளானது, மேலே சொல்லப்பட்டது (கெ. 39). அப்பொழுது சொல்லப்பட்டது இங்கே திரும்பச் சொல்லப்படும்; ஏனென்றால், அறிவின்மையினாலும், மட்டான புத்தியினாலும், அவ்வித விஷயங்களைக் குறித்து பகுத்தறிவுள்ள தீர்மானங்களை செய்யமுடியாத மனிதனால் இந்த தப்பிதத்திலிருந்து உண்டாக்கப்பட்ட பிழைகளை சிதறடித்தல் முக்கியமானது. அந்த வார்த்தைகள் இவைதான் :

" கடைசியாய், பிரமாணங்கள் அறிந்துகொள்ளப்படாதபடியினால், எவனுக்கும் இதுவரையில் தோன்றாத, மூன்று சுவர்க்கங்களின் தேவர்களைக் குறித்த ஒரு இரகசியம் சொல்லப்படலாம். ஆண்டவரின் தேவத்துவம், முதலாவது அதிக நேராயாவது பாய்கிறதும், அதிலிருந்து ஒழுங்கின் பிரமாணங்களுக்கு தக்கபடி தொடர்கிற அவனிலிருக்கும் மற்ற உள்ளானவைகளை அது ஒழுங்காக்குகிறதுமாகிய, ஒரு மிகவும் அந்தரங்கமான அல்லது மிகவும் உயர்ந்த பிரமாணம், அல்லது மிகவும் அந்தரங்கமானதும் மிகவும் உயர்ந்ததுமானது ஏதோ ஒன்று ஒவ்வொறு தேவனிடத்திலும் ஒவ்வொரு மனிதனிடத்திலும் இருக்கிறது. இந்த எல்லாவற்றிலும் உள்ளான அல்லது எல்லாவற்றிலும், உயர்ந்த பிரமாணம், தேவன் அல்லது மனிதனுக்கு வாயிலென்றும், அவர்களில் அவருடைய விசேஷமான உறைவிடமென்றும் சொல்லப்படலாம். இந்த மிகவும் உள்ளானதினாலும் அல்லது மிகவும் உயர்ந்ததினாலும் தான் மனிதன் மனிதனாயிருக்கிறான் ; மேலும், அதை உடைத்தாயிராத மிருகப் பிராணிகளிலிருந்தும் அவன் வகையறுக்கப்படுகிறான். இதனால்தான் மிருகங்களைப் போலல்லாமல், மனிதனானவன், அவன் மனதிற்கும் குணத்திற்கும் சார்ந்த அவனுடைய

ந்தரங்கமானவைகள் விஷயத்தில் ஆண்டவரால் அவரிடமே தூக்
ப்படவும், ஆண்டவரை நம்பவும், ஆண்டவரிடத்து அன்பினால்
சைக்கப்படவும், அதனால் அவரைப் பார்க்கவும், புத்தியையும்
ானத்தையும் பெற்றுக்கொள்ளவும், அறிவுடன் பேசவும், சக்தி
ள்ளவனுயிருக்கிறான். மேலும், இதனால்தான் அவன் சதாகாலம்
யிரோடிருக்கிறான். ஆனால், இந்த மிகவும் அந்தரங்கமான பிர
ாணத்தில், ஆண்டவரால் ஒழுங்குபடுத்தப்பட்டு, முன்னறிந்து
ற்படுத்தப்பட்டது, அவனுடைய நினைவிற்கு மேற்பட்டும், அவ
படைய ஞானத்தை கடந்தும் இருப்பதினால், அது எந்த தேவ
ுடைய உணர்ச்சியிலும் தெளிவாய் விடுகிறதில்லை."

**436**. தன் உள்ளானவைகள் சம்பந்தப்பட்ட வரையில்
மனிதனானவன் ஒரு ஆவியென்று, அதிக அனுபவத்திலிருந்து
தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது; ஆனால், அது
முழுமையும் எடுத்துச் சொல்லுதல், ஒரு சாதாரண பழமொழிப்
படி அநேக புஸ்தகங்களை நிரப்பும். நான் ஆவிகளுடன்
ஒரு ஆவியாக பேசியிருக்கிறேன்; மேலும் நான் அவர்களுடன்
சரீரத்திலுள்ள ஒரு மனிதனாக பேசியிருக்கிறேன். நான் அவர்
களுடன் ஒரு ஆவியாக பேசியபோது, நானே ஒரு ஆவியென்றும்,
அதனுடன்கூட அவைகள் இருந்ததுபோல ஒரு மானிட உருவத்
தில் இருந்ததாகவும் தவிர அவைகளுக்கு வேறு ஒன்றும் தெரி
யாது; ஆகையினால், என்னுடைய உள்ளானவைகள் அவைகளுக்கு
புலப்பட்டது; ஏனென்றால், நான் அவைகளுடன் ஒரு ஆவியாக
பேசியதில், என்னுடைய ஸ்தூல சரீரம் பார்க்கப்படவில்லை.

**437**. தன் உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில் மனி
தன் ஒரு ஆவி என்பது, அவன் இறந்தபிறகு சம்பவிக்கிறபடி சரீ
ரம் பிரிக்கப்பட்டபிறகு, அவன் முன்போல,இன்னும் உயிரோடிருக்
கிறானென்பதிலிருந்து விசதமாகலாம். இதில் நான் ஸ்திரப்பட,
சரீர வாழ்வில், எப்பொழுதாகிலும் தெரிந்திருந்த ஏறக்குறைய
எல்லாருடனும், சிலரிடத்தில் அநேக மணிகளும், மற்ற சிலரிடத்
தில் அநேக வாரங்களும், மாதங்களும், வேறு சிலரிடத்தில்
அநேக வருஷங்களும், பேசவிடப்பட்டிருக்கிறேன்; இதுகூட
எனக்கு ரூபகாரம் இருக்கும்பொருட்டும், அதற்கு சாட்சியிடவும்
முக்கியமாய் அனுமதி கொடுக்கப்பட்டது.

**438**. ஒவ்வொரு மனிதனும், சரீர வாழ்விலிருக்கும்போது
கூட, தன் ஆவிசம்பந்தப்பட்டவரையில், தனக்கு தெரியாவிட்டா

லும், ஆவிகளின் தோழமையிலிருக்கிறானென்பது சேர்த்துகொள்ளப்படலாம். அவைகளினால், ஒரு நல்ல மனிதன் ஒரு தேவதா சம்பந்தமான கூட்டத்திலும், ஒரு கெட்ட மனிதன் நரகத்திற்கு சம்பந்தப்பட்ட கூட்டத்திலும் இருக்கிறான்; மேலும், இறந்தபிறகும் அந்த கூட்டத்திற்கே வருகிறான். இது, இறந்தபிறகு ஆவிகள் மத்தியில் வந்தவர்களுக்கு, அடிக்கடி சொல்லப்பட்டு நிரூபிக்கப்பட்டது. நிஜமாகவே, ஒரு மனிதன், உலகத்திலிருக்கும்போது, அந்த கூட்டத்தில் ஒரு ஆவியைப்போல் தோன்றுகிறதில்லை; ஏனென்றால், அவன் அப்பொழுது ஸ்தூலமாய் நினைக்கிறான்; ஆனால், சரீரத்தினின்று வேறாக நினைக்கிறவர்கள், அவர்கள் அப்பொழுது ஆவியில் இருக்கிறதின் நிமித்தம், சில சமயங்களில் தங்கள் சொந்த கூட்டத்திலேயே தோன்றுகிறார்கள்; பார்க்கப்பட்டபோது, அங்கேஇருக்கும் ஆவிகளிலிருந்து இலகுவாய் வறையறுக்கப்படுகிறார்கள்; ஏனென்றால், அவர்கள், தியானித்துகொண்டும், மௌனமாகவும், நடந்துகொண்டும், அவர்களைப் பார்த்ததுபோல் காண்பித்து, மற்றவர்களைப் பார்க்காமலும், போய்க்கொண்டிருக்கிறார்கள்; மேலும், எந்த ஆவியாவது தங்களுடன் பேசினால், அவைகள் மறைந்து போகின்றன.

**439**. தன்னுடைய உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில், மனிதனானவன் ஒரு ஆவி என்கிற உண்மையை திருஷ்டாந்தப்படுத்த, சரீரத்திலிருந்து அவன் எந்த விதத்தில் பிரிக்கப்படுகிறானென்பதையும், அவன் ஆவியினால் வேறு இடத்துக்கு எப்படி கொண்டுபோகப் படுகிறானென்பதையும் அநுபவத்திலிருந்து நான் சொல்லுகிறேன்.

**440**. முதலில், சரீரத்திலிருந்து பிரித்தல் இம்மாதிரியாக நடக்கிறது. தூங்குதலுக்கும் விழித்திருத்தலுக்கும் மத்தியிலிருக்கிற ஒரு நிலைமைக்கு மனிதன் கொண்டுவரப்படுகிறான்; அந்த நிலைமையிலிருக்கும்போது அவனுக்குதான் முழுமையும் விழித்திருப்பதாக தவிர வேறுவிதமாய் ஒன்றும் தெரிந்துகொள்ளமுடியாது. ரூபமும், சப்தமும், ஆச்சரியம் என்னவென்றால், சரீரம் விழித்திருக்கும்போது,எப்பொழுதும் இருக்கக்கூடியதைவிட, அக்காலத்தில் அதிக தீவிரமானதாயிருக்கிற ஸ்பரிசமும் சேர்த்து, எல்லா புலன்களும் சரீரத்தின் மிகவும் சம்பூரணமான சாக்கிரத்தில்போல இந்த நிலைமையில் அவ்வளவு விழிப்பானதாயிருக்கின்றன. இந்த நிலைமையில், ஆவிகளும் தேவர்களும் உயிரோடிருக்கும்போதே பார்க்கப்பட்டிருக்கின்றன; அதனுடன் அவர்கள் பேசுவது கேட்கப்பட்

ருக்கின்றன; ஆச்சரியம் என்னவென்றால், அவைகள், சரீரசம் ந்தமில்லாமலே தொடப்பட்டிருக்கின்றன. ஒருவன் சரீரத்தி ருக்கிறான் அல்லது அதற்கு வெளியே யிருக்கிறானென்பது தரியாமலே, சரீரத்திலிருந்து பிரிக்கப்படுதல் என்று சொல்லப்படு ற நிலைமை இதுதான். அதன் சுபாவத்தை தெரிந்துகொள்ளவும், ஏதே காலத்தில், ஆவிகளும் தேவர்களும் ஒவ்வொரு புலனையும் நுபவிக்கிறார்கள் என்றும், மனிதனானவன் சரீரத்திலிருந்து பிரிக் ப்பட்டபோது, தன் ஆவி சம்பந்தப்பட்டவரையில் அப்படியேகூட செய்கிறானென்றும் தெரிந்துகொள்ளவும், இந்த நிலைமையில் ான் மூன்று அல்லது நான்கு தடவைகளில் மாத்திரம் ஏற்றுகொள் ாப்பட்டிருக்கிறேன்.

**441.** இன்னொரு விஷயத்தைப்பற்றி,—ஆவியினால் வேறு இடத்துக்கு கொண்டுபோகப் படுதல் என்னவென்றும், அது எப் படி செய்யப்படுகிறதென்றும், ஆனால், இது இரண்டு அல்லது மூன்று தடவைகளில் மாத்திரம் செய்யப்படுகிறதென்றும் உயி ருள்ள அனுபவத்தினால்கூட எனக்கு காண்பிக்கப்பட்டது. நான் ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன். ஒரு நகரத்தின் தெருவுகளிலும் வயல்களிலும் நடந்துகொண்டும், ஏதேகாலத் தில் ஆவிகளுடன் பேசிக்கொண்டும் இருந்தபடியினால், மற்ற காலங்களில் போல, என் கண்களை திறந்து கொண்டு நான் விழித்திருந்தேன் என்பதைவிட எனக்கு வேறு ஒன்றும் தெரியாது. இவ்விதமாக, தோப்புகளையும், நதிகளையும், அரண்மனைகளையும், வீடுகளையும், மனிதர்களையும், பல இதரபொருள்களையும் பார்த்துக் கொண்டு, திருஷ்டியில் நான் நிஜமாக இருந்தபோதிலும் இடருறுமல் நான் நடந்துபோனேன்; ஆனால், நான் இந்த பிரகாரம், சில மணி கள் நேரம் நடந்த பிறகு, திடீரென்று, நான் என்னுடைய சரீர கண்களினால் பார்த்து, நான் வேறு இடத்திலிருப்பதாக கவனித் தேன். ஆவியினால் வேறு இடத்துக்கு கொண்டுபோகப்பட்டதாக சொல்லப்பட்டவர்கள் நிலைமைக்கு ஒத்த நிலைமையில் நான் இருந்த தாக மிகவும் ஆச்சரியத்துடன் அறிந்துகொண்டேன். ஏனென்றால், இந்த நிலைமையில், தூரமானது, அநேக மைல்கள் இருந்தபோதி லும், காலமானது அநேக மணிகள் அல்லது நாட்களாக இருந்த போதிலும் நினைக்கப்படுகிறதில்லை; அன்றியும், அங்கே யாதொரு இளைப்பின் உணர்ச்சியுமில்லை; ஆனால் மனிதனானவன் தனக்கு

தெரியாத வழிகள் மூலமாய், நியமிக்கப்பட்ட இடத்துக்கு பிழை படாமல் நடத்தப்படுகிறான்.

**442.** ஆனால், மனிதனானவன் தன்னுடைய உள்ளானவைகளில் இருக்கும்போது, அதேவாகிறபடி, ஆவியில் இருக்கும்போது தன்னுடைய நிலைமைகளாயிருக்கிற இந்த இரண்டு அவனுடைய நிலைமைகளும் அசாதாரணமாயிருக்கின்றன; அவைகள் திருச்சபைக்குள் தெரிந்திருக்கிறபடியினால், அவைகள் என்னவென்று எனக்கு தெரிந்திருக்கும் பொருட்டு மாத்திரம் எனக்கு காண்பிக்கப்பட்டன. ஆயினும், ஆவிகளுடன் பேசவும், அவைகளில் ஒன்றாக அவைகளுடன் இருக்கவும், சென்ற அநேக வருஷங்களாக சரீரத்தின் முழு விழிப்பிலும்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது.

**443.** சுவர்க்கமும் நரகமும் மானிட வமிசத்திலிருந்து ஏற்படுகின்றனவென்று காண்பிக்கப்பட்ட மேலே (செ. 311 முதல் 317 வரையில்) சொல்லி காண்பிக்கப்பட்டதிலிருந்து, மனிதனானவன் தன் அந்தரங்கமானவைகள் சம்பந்தப்பட்டவரையில் ஒரு ஆவியாயிருக்கிறானென்று இன்னமும் ஸ்திரப்படுத்தப்படலாம்.

**444.** தன்னுடைய உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில், மனிதனானவன் ஒரு ஆவி என்று நாம் சொல்லும்போது, அவனுடைய சிந்தனைக்கும் சித்தத்துக்கும் சேர்ந்த பொருள்கள் என்று நாம் கருதுகிறோம்; ஏனென்றால், இவைகள்தான் மனிதனை மனிதனுக்குகிறதும், உள்ளானவைகள் விஷயத்தில் அவன் இருக்கிறபடி அவ்வித மனிதனுக்குகிறதுமான உள்ளானவைகளாயிருக்கின்றன.

# XLVI

## இறந்த பிறகு மனிதனை உயிர்ப்பித்தலும், அவன் நித்திய வாழ்விற்குள் பிரவேசித்தலும்

**445**. ஆவிக்கு, சூக்கும உலகத்திலிருந்து வருகிற அதன் சிந்தனைகளுக்கும் ஆசைகளுக்கும் அனுவயப்படுகிற சரீரவேலைகளை, சரீரமானது ஸ்தூல உலகத்தில் செய்ய சக்தியில்லாமல் போகும்போது, மனிதனானவன் இறந்துபோவதாக சொல்லப்படுகிறது. சுவாசாசயத்தின் மூச்சு வாங்குதல் விடுதலும், இருதய துடிப்புகளும் நின்றபோது இது சம்பவிக்கிறது. என்றாலும், மனிதன் அப்பொழுது இறந்து போகாமல், உலகத்தில் உபயோகத்திற்காக தான் வைத்திருந்த சரீரபாகத்திலிருந்து மாத்திரம் பிரிக்கப்படுகிறான்; ஏனென்றால், மனிதனே உயிரோடிருக்கிறான். சரீரத்தின் பொருட்டு மனிதன் மனிதனாகாமல், ஆவியினால் அப்படியாகிறபடியினால், மனிதனே உயிரோடிருக்கிறானென்று சொல்லப்படுகிறது; ஏனென்றால், ஆவியானது மனிதனில் நினைக்கிறது, சிந்தனையும் ஆசையும் சேர்ந்து மனிதனை உண்டாக்குகிறது. ஆகவே, மனிதன் இறந்துபோகும்போது, அவன் ஒரு உலகத்திலிருந்து மற்றதற்கு மாத்திரம் போகிறானென்று விசதமாகிறது. இந்த காரணத்துக்காக, மரணம் என்பது, வேதத்தில் அதன் உள்ளார்த்தத்தில் உயிர்த்தெழுகையையும், உயிரின் தொடர்ச்சியையும் அருத்தம் கொள்ளுகிறது.

**446**. சுவாசித்தலுடனும், இருதயதுடிப்புடனும் ஆவியினுடைய மிகவும் அந்தரங்கமான சம்பந்தமிருக்கிறது; ஏனென்றால், அவனுடைய சிந்தனையானது சுவாசித்தலுடனும், அன்பைச் சேர்ந்த ஆசையானது இருதயத்துடனும் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையினால், இந்த இரண்டு அசைவுகளும் சரீரத்தில் நின்றபோது, உடனே ஒரு பிரிவினை சம்பவிக்கிறது. சுவாசாசயங்களின் சுவாசித்தலும், இருதயத்தின் துடிப்புமாகிய இந்த இரண்டு அசைவுகளும், பிரிக்கப்பட்ட உடனே ஆவியானது தன்னிஷ்டப்படி நடக்கிற அசேதன பந்தங்களாகயிருக்கின்றன; சரீரமானது அதன் ஆவியின் உயிர் அப்பொழுது இல்லாமல் இருப்பதின் நிமித்தம், குளிர்ந்து அழிந்துபோக ஆரம்பிக்கிறது. மனிதனுடைய

ஆவியின் மிகவும் உள்ளான சம்பந்தம் சுவாசித்தலுடனும் இருதயத்துடனுமிருக்கிறது; ஏனென்றால், எல்லா உயிருள்ள அசைவுகளும், இவைகளின்பேரில், பொதுவாக மட்டுமல்லாமல், ஒவ்வொரு பாகத்திலும்கூட சார்ந்திருக்கின்றன.

**447**. மனிதன் இறந்துபோகப்பட்ட வியாதியின் சுபாவத்திற்கு தக்கபடி சம்பவிக்கிறதாயிருக்கிற இருதயத்தின் அசைவு முழுமையும் நிற்கிறவரையில் மனிதனுடைய ஆவி, அது பிரிக்கப்கப்பட்ட பிறகு சரீரத்தில் கொஞ்சகாலமிருக்கிறது; ஏனென்றால், சிலர் விஷயத்தில், இருதயத்தின் அசைவு நெடுங்காலம் தங்குகிறது; மற்றதில் அவ்வளவு நேரம் இல்லை. இந்த அசைவு நின்றவுடன், மனிதனானவன் மறுபடியும் எழுப்பப்படுகிறான்; ஆனால், இது ஆண்டவரால் மட்டும் செய்யப்படுகிறது. மறுபடியும் எழுப்பப்படுதல் என்பதினால், சரீரத்திலிருந்து மனிதனுடைய ஆவியை பிரித்தலும், உயிர்த்தெழுதல் என்று சாதாரணமாய் சொல்லப்படுகிற சூக்கும உலகத்தில் அவனுடைய உட்செல்லுதலும் கருதப்படுகின்றன. மனிதனுடைய ஆவியானது, இருதயத்தின் அசைவு நிற்கிற வரையில் சரீரத்திலிருந்து பிரிக்கப்படுகிறதில்லை; ஏனென்றால், இருதயமானது, மனிதனுடைய உயிரேயாகயிருக்கிற அன்பைச் சேர்ந்த ஆசைக்கு அன்னுவயப்படுகிறது; ஏனென்றால், அன்பிலிருந்து ஒவ்வொருவனுக்கும் உயிருள்ள சூடு வருகிறது; இந்த சேர்க்கை நிலைக்கிறவரையில், அன்னுவயமிருக்கிறது; அதனால் ஆவியின் உயிரானது சரீரத்திலிருக்கிறது.

**448**. மனிதன் எப்படி எழுப்பப்படுகிறானென்று எனக்கு சொல்லப்பட்டது தவிர, உயிருள்ள அனுபவத்தினால்கூட அது எனக்கு காண்பிக்கப்பட்டது. அந்த அயன் அனுபவமானது, அந்த விதத்தை நான் முழுமையும் கிரகிக்கும்பொருட்டு எனக்கு அருள் செய்யப்பட்டது.

**449**. சரீர புலன்கள் விஷயத்தில், உணர்ச்சியின் ஓர் நிலைமைக்கு, இவ்விதமாக, ஏறக்குறைய இறந்துபோக இருக்கப்பட்டவர்களின் நிலைமைக்கு கொண்டுவரப்பட்டேன்; அப்படியிருந்தாலும், எனக்கு சம்பவித்ததும் மறித்தபின், எழுப்பப்பட்டவர்களுக்கும் சம்பவிக்கிறதுமான விஷயங்களை நான் பார்த்து ஞாபகத்தில் வைக்கக்கூடிய அளவு, சிந்தனையுடன் உள்ளான உயிர் பூரணமாகநின்றது. சரீரத்தின்மூச்செறிதல் ஏறக்குறைய நீக்கப்பட்டதாகநான் உணர்ந்தேன். ஆனால், ஆவியின்உள்ளானமூச்செறிதல், சரீரத்தின் அமைதியுள்

ளதும் மௌனமுள்ளதுமான மூச்சுவாங்கிவிடுதலுடன் சேர்க்கப் பட்டு நின்றது. பரம இராச்சியமானது, மனிதனிலிருக்கும் இருதயத் துக்கு அன்னுவயப்படுகிறபடியினால், இருதய துடிப்பு விஷயத்தில், அந்த இராச்சியத்துடன் சம்பந்தம் இப்பொழுது திறக்கப்பட்டது. அந்த இராச்சியத்திலிருந்து வந்த தேவர்கள், சிலர் தூரத்திலும் இரண்டு பேர் என் தலை பக்கத்திலும் உட்கார்ந்துகொண் டிருப்பது பார்க்கப்பட்டார்கள். இவ்விதமாக என் சொந்த ஆசை நீக்கப்பட் டது, ஆனால் அப்படியிருந்தும் சிந்தனையும் உணர்ச்சியும் நின்றன. நான் சில மணிகள் காலம், இந்த நிலைமையில் இருந்தேன்; அக்காலத் தில் என்னைச் சுற்றியிருந்த ஆவிகள், நான் இறந்துபோய் விட்டே னென்று நினைத்து பிரிந்துபோய்விட்டன. சுகந்த மிடப்பட்ட சரீ ரத்திலிருந்து வருவதைப்போன்ற ஒரு பரிமளமுள்ள வாசனையைக் கூட நான் உணர்ந்தேன்; ஏனென்றால், பரம இராச்சியத்தின் தேவர்கள் இருக்கும் காலத்தில், மரணத்தைச் சேர்ந்தது பரிமள முள்ளதாக உணரப்படுகிறது. அதை ஆவிகள் உணரும்போது, சமீ பிக்க முடியாது. இவ்விதமாகக்கூட மனிதனானவன் நித்தியகால வாழ்விற்கு முதலில் செலுத்தப்படும்போது, தீமையான ஆவிகள் மனித ஆவிக்கு தூரத்தில் வைக்கப்படுகின்றன. என் தலைப் பக்கத் தில் உட்கார்ந்திருந்த தேவர்கள், தங்களுடைய சிந்தனைகளை என் னுடையவைகளுடன் போக்குவரவு மாத்திரம் செய்துகொண்டு, மௌனமாயிருந்தார்கள்; அவர்களுடைய சிந்தனைகள் ஏற்றுக்கொள் ளப்படும்போது, தேவர்களுக்கு மனிதனுடைய ஆவியானது, சரீரத்தி லிருந்து பிரிக்கக்கூடிய ஓர்நிலைமையில் இருக்கிறதாக தெரியும். அவர் களுடைய சிந்தனைகள் உட்செலுத்துதல், என்னுடைய முகத்தை பார்ப்பதினால் நடத்தப்படுகிறது; ஏனென்றால், இந்த விதமாகத் தான், சுவர்க்கத்தில் சிந்தனைகள் உட்செலுத்தப்படுகின்றன. உயிர் பிக்கை எப்படி செய்யப்படுகிறதென்பதை, நான் தெரிந்துகொண்டு ஞாபகத்தில் வைக்கும்பொருட்டு, சிந்தனையும் உணர்ச்சியும் என் னிடத்தில் நின்றபடியினால், மாமூலாய் நித்திய காலவாழ்வைக் குறித் ததாயிருக்கிற, இறந்துபோக இருக்கிறவர்கள் சிந்தனைகளுக்கு ஒக்கது இருக்கிறதா என்று நிதானிக்கும் பொருட்டு, என்னுடைய சிந்தனை கள் என்னவென்று அந்த தேவர்கள் முதலில் தெரிந்துகொள்ள விரும்பினார்களென்றும், அவர்கள் என்னுடைய மனதை அந்த சிந் தனையில் வைக்க விரும்பினார்களென்றும் நான் அறிந்துகொண் டேன். உலகத்தில், தன்னுடைய பொதுவான அல்லது அரசாளும்

ஆசையிலிருந்து உண்டாகிற சிந்தனைகளுக்கு, மனிதனுடைய ஆவி திரும்புகிறவரையில், சரீரம் இறந்துபோகும்போது, அது சிந்தனையின் கடைசி நிலைமையில் வைக்கப்படுகிறதென்று, பின்னிட்டு எனக்கு சொல்லப்பட்டது. என்னுடைய மனதினுடையவும், இவ்விதமாக என்னுடைய ஆவியினுடையவும் உள்ளானவைகளை, சரீரத்திலிருந்து இழுத்தலும், ஈர்ப்பும் இருந்ததுபோல அறிந்து கொள்ளவும், உணரவும்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது; மேலும், இது ஆண்டவரிடமிருந்து வந்ததாகவும், உயிர்த்தெழுகை செய்யப்படுவதற்கு வழி வகையாகவும் இருப்பதாகவும் எனக்கு சொல்லப்பட்டது.

**450**. மறுபடியும் எழுப்பப்பட்டவனுடன் இருக்கிற பரம இராச்சியத்தின் தேவர்கள், அவர்கள் ஒவ்வொருவர்களையும் நேசிக்கிறபடியினால், அவனை விடுகிறதில்லை; ஆனால், பரம இராச்சியத்தின் தேவர்கள் கூட்டத்தில் இருக்கமுடியாதபடி, அவனுடைய ஆவி அவ்வித நிலைமையிலிருக்கும்போது, அவன் அவர்களை விட்டுப் போக விரும்புகிறான்; சங்கதி இப்படியிருக்கையில், ஆண்டவருடைய ஆன்ம சம்பந்தமான இராச்சியத்திலிருந்து தேவர்கள் வந்து, வெளிச்சத்தின் உபயோகத்தை கொடுக்கிறார்கள்; ஏனென்றால், சிந்தனையைத் தவிர இதுவரையில் வேறொன்றையும் அவன் பார்த்திருக்கவில்லை. இது எப்படி செய்யப்பட்டதென்றுகூட எனக்கு காண்பிக்கப்பட்டது. ஆன்ம சம்பந்தமான இராச்சியத்தின் தேவர்கள் இடது கண்ணிலிருந்து ஒரு போர்வையை மூக்கந்தண்டு பக்கம், கண் திறக்கப்பட்டு, பார்க்க சக்தியுடையதாயிருக்கும் பொருட்டு, சுருள் விரிக்கிறதுபோல் தோன்றினார்கள். இது ஒரு தோற்றம். ஆனால், ஆவியானது நிஜமாய் செய்யப்படுவதுபோல் அதை பார்க்கிறது; மூக்கந்தண்டு சுருள் விரிக்கப்பட்டதாக தோன்றும்போது, கொஞ்சம் வெளிச்சம் பார்க்கப்படுகிறது; ஆனால், அது முதலில் நித்திரை தெளிந்தபோது கண் ரெப்பைகள் மூலமாய் ஒரு மனிதன் பார்க்கிறதுபோல், மங்கலாய்ப் பார்க்கப்படுகிறது. இந்த மங்கலான வெளிச்சம், எனக்கு சுவர்க்கத்து நிறம்போல் தோன்றியது; ஆனால், அந்த நிறமானது பலரிடத்தில் பலவிதமாய் மாறுகிறதென்று, எனக்கு பின்னிட்டு சொல்லப்பட்டது. அடுத்தாப்போல், ஏதோ ஒன்று முகத்திலிருந்து மெதுவாய் விரிக்கப்படுவதுபோல் ஒரு உணர்ச்சி உண்டானது; இது செய்தான பிறகு, ஆன்ம சம்பந்தமான சிந்தனை எழுப்பப்படுகிறது. முகத்திலிருந்து இந்த

சுருள் விரித்தல், ஆவி ஸ்தூல சிந்தனையிலிருந்து சூக்கும சிந்தனைக்கு செல்லுதலை சாயல் காட்டுகிற ஒரு தோற்றமாகக்கூட இருக்கிறது. எழுப்பப்பட்டவனிடமிருந்து, அன்பிலிருந்து உண்டாகாத எந்த அபிப்பிராயமும் வராதபடி, தேவர்கள் மிகவும் ஜாக்கிரதையாயிருக்கிறார்கள். அவர்கள், அவன் ஒரு ஆவியென்று இப்பொழுது சொல்லுகிறார்கள். வெளிச்சத்தைக் கொடுத்த பிறகு, ஆன்மார்த்த இராச்சியத்தின் தேவர்கள் அந்த புதிய ஆவிக்கு, அது அந்த நிலைமையில் எப்பொழுதும் விரும்பக்கூடிய எல்லா பணிவிடைகளையும் செய்து, அது அவைகளை அறிந்துகொள்ளக்கூடிய அளவு இதர வாழ்வின் விஷயங்களைப்பற்றி, அதற்கு போதிக்கிறார்கள்; ஆனால், அந்த ஆவியானது அந்த போதனையை ஏற்றுக்கொள்ள இஷ்டப்படாவிட்டால், அது இந்த தேவர்களின் கூட்டத்திலிருந்து போய்விட அப்பொழுது விரும்புகிறது. இந்த தேவர்கள் நிஜமாகவே, அதை விடுகிறதில்லை; ஆனால் அது அவர்களிடமிருந்து தானே பிரிந்துபோய் விடுகிறது; ஏனென்றால், தேவர்கள் ஒவ்வொருவனையும் நேசித்து, உருக்கமான உபகாரங்களைச் செய்து போதித்து, சுவர்க்கத்துக்குள் செலுத்துவதைத் தவிர வேறு எதையும் அதிகமாய் விரும்புகிறதில்லை; ஏனென்றால், இதுதான் அவர்களுடைய மிகவும் உயர்ந்த இன்பமாயிருக்கிறது. ஆவியானது, இவ்விதமாக தானே பிரிந்துகொண்ட பிறகு, அது அவைகளோடிருக்கும்போது எல்லா உருக்கமான உபகாரங்களையும்கூட செய்கிற நல்ல ஆவிகளால், அது ஏற்றுக்கொள்ளப்படுகிறது; ஆனால், அதன் உலக வாழ்க்கையானது, நல்லவர்களின் கூட்டத்தில் இருக்கமுடியாததாயிருந்திருந்தால், அது அவைகளையும்கூட விட்டுப்போக விரும்புகிறது; மேலும் இந்த மாறுதலான உலகத்தில் அதன் வாழ்விற்கு முழுமையும் ஒத்தவர்களுடன் அது சேருகிறவரையில் மறுபடியும் தொடருகின்றன. அவ்விதமானவர்களிடத்தில், தன்னுடைய சொந்த வாழ்க்கையைக் காண்கிறது; ஆச்சரியம் என்னவென்றால், அது அப்பொழுதுதான் உலகத்தில் நடத்திய வாழ்வைப்போல, ஒரு வாழ்வை நடத்துகிறது.

**451**. ஆனால், இறந்த பிறகு மனிதனுடைய உயிரின் முதல் தொடக்கம், சில நாட்களுக்குமேல் நீடிக்கிறதில்லை. ஆனால், பின்னிட்டு அவன் ஒரு நிலைமையிலிருந்து மற்றதற்கும், கடைசியில் சுவர்க்கத்துக்காவது நரகத்திற்காவது எப்படி நடத்தப்படுகிறானென்பது, பின் வருவதில் காண்பிக்கப்படும்; இதுகூட, அதிக

அனுபவத்திலிருந்து தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது.

**452.** இறந்த பிறகு மூன்றும் நாள் நான் சிலருடன் பேசியிருக்கிறேன்; அப்பொழுது மேலே கூறிய பிரகாரம் அவ்வித சங்கதிகள் சம்பவித்தன (செ. 449, 450). இந்த ஆவிகளில் மூன்று உலகத்திலிருக்கும்போது எனக்கு தெரிந்திருந்தன; அவைகளுடைய சரீரங்களை அடக்கம் செய்ய உத்திரகிரிகை ஏற்பாடுகள் அப்பொழுது செய்யப்பட்டுக்கொண்டிருப்பதாக, நான் அவைகளுக்கு சொன்னேன். அவர்களைப் புதைக்கிற சங்கதி நான் சொன்னபோது, அதைக்கேட்டு, பிரமித்துபோய், தாங்கள் உயிரோடிருப்பதாயும், தங்கள் சிநேகிதர் தங்களுக்கு உலகத்தில் உதவியதை அடக்கம் செய்யலாமென்றும் கூறின. தாங்கள் சரீரத்தில் உயிரோடிருக்கையில், இறந்த பிறகு இவ்வித வாழ்வு இருப்பதாக நம்பவில்லை என்று, பின்னிட்டு அவைகள் மிகவும் ஆச்சரியப்பட்டன; மேலும், திருச்சபைக்குள் யாரும் நம்புகிறதில்லை என்று முக்கியமாய் ஆச்சரியப்பட்டன. சரீர வாழ்விற்கு பின்னிட்டு, ஆன்மாவிற்கு எந்த வாழ்க்கையாவது உண்டென்று உலகத்திலிருக்கும் நம்பாதவர்கள், இறந்த பிறகு தாங்கள் உயிரோடிருப்பதாக அறிந்துகொள்ளும்போது, மிகவும் வெட்கமடைகிறார்கள்; அவ்வித அவநம்பிக்கையில் தாங்களை ஸ்திரப்பட்டவர்கள், தங்களைப்போன்றவர்களோடு சேர்க்கப்பட்டு, நம்பினவர்களிடமிருந்து பிரிக்கப்படுகிறார்கள். அவர்கள் அநேகமாய், ஏதோ ஒரு நரகத்திற்குரிய கூட்டத்துடன் சேர்க்கப்படுகிறார்கள்; ஏனென்றால், அப்படி யிருப்பதினால், அவர்கள் தெய்வத்தைக்கூட நிராகரித்து, திருச்சபையின் உண்மைகளை அலட்சியம் செய்தார்கள்; ஏனென்றால், தன்னுடைய ஆன்மாவின் நித்திய வாழ்க்கைக்கு விரோதமாய் ஒருவன் எவ்வளவு ஸ்திரப்படுகிறானோ, அவ்வளவு சுவர்க்கத்தினுடையவும் திருச்சபையினுடையவும் விஷயங்களுக்கு விரோதமாய்கூட தானே ஸ்திரப்படுகிறான்.

## XLVII

## இறந்த பிறகு மனிதன் பரிபூரணமான மானிட உருவத்திலிருக்கிறான்.

**453.** மனிதனுடைய ஆவியின் உருவமானது மானிட உருவமென்பது, அல்லது தன்னுடைய உருவத்தில்கூட ஆவி ஒரு மனிதனாயிருக்கிறது என்பது, அநேக முன் அத்தியாயங்களிலும், முக்கியமாய் ஒவ்வொரு தேவனும் சம்பூரண மானிட உருவத்தில் இருக்கிறானென்று சொல்லப்பட்டவைகளிலிருந்தும் (செ. 73 முதல் 77 வரையில்), அவன் உள்ளானவைகள் சம்பந்தப்பட்ட வரையில் ஒவ்வொரு மனிதனும் ஒரு ஆவி யென்பது (செ. 432 முதல் 444 வரையிலும்), சுவர்க்கத்திலிருக்கும் தேவர்கள் மானிட வமிசத்திலிருந்து வருகிறார்களென்பது (செ. 311 முதல் 317 வரையிலும்) சொல்லப் பட்டவைகளிலிருந்தும் விசதமாகிறது. மனிதன் மனிதனாயிருக்கிறது, அவன் சரீரத்திலிருந்ததல்லாமல், அவன் ஆவியிலிருந்து அப்படியிருக்கிறான் என்கிறதும், ஆவியானது அதன் சொந்த உருவத்திற்குத் தக்கபடி ஒரு சரீரத்தினால் உடுக்கப்படுகிறதின் நிமித்தம், ஸ்தூல உருவம் ஆவிக்கு எதிரிடையாயல்லாமல், அதன் உருவத்தின்படி சேர்க்கப்படுகிறது என்கிறதுமாகிய உண்மையிலிருந்து, இது இன்னும் தெளிவாய் அறிந்துகொள்ளப்படலாம். ஆகவே, மனிதனுடைய ஆவியானது, அதனால் நடப்பிக்கப்படாமல் அல்லது அதில் ஆவி செய்வினையில்லாததாயிருக்கிற ஒரு பாகமிருந்தால், அந்த பாகத்துக்கு உயிரில்லாதபடி, சரீரத்தின் ஒவ்வொரு பாகத்திலும், மிகவும் நுண்ணியதின் பேரிலும்கூட, அவ்வளவு நெருங்கி செயல்படுகிறது. ஒவ்வொன்றும் பொருந்தும்படியாகவும், பொருந்தாத எதுவும் சரீரத்தின் ஒரு பாகமாக அல்லாமல், உயிரில்லாத எதோ ஒன்றைப் போல் தள்ளிவிடப் படும்படியாகவும், அதிகாரத்தின் அவ்வளவு சம்பூர்ணத்துடன் சிந்தனையும் சித்தமும், சரீரத்தின் எல்லா பாகங்களையும், ஒவ்வொரு பாகத்தையும் செயல்படச் செய்கிறதென்கிற உண்மையிலிருந்து, இது இப்படியிருக்கிறதென்று தெரிந்திருக்கப் படலாம். சிந்தனையும் சித்தமும் சரீரத்துக்கல்லாமல் மனிதனுடைய ஆவிக்கு சேர்ந்திருக்கிறது. சரீர பார்வைக்கு அங்கமாயிருக்கிற கண்ணானது, உலகத்தில் அது பார்க்கிற வரையில்

ஸ்தூலமாயிருக்கிறபடியினாலும், ஸ்தூலமானது ஸ்தூலமானதைத் தவிர வேறொன்றையும் பார்க்காதபடியினாலும், ஆன்ம சம்பந்தமானது ஆன்ம சம்பந்தமானதை பார்க்கிறபடியினாலும், மனிதனானவன், அதனுடைய சரீரத்திலிருந்து கழற்றப்பட்ட ஒரு ஆவியையாவது, மற்றவனுக்குள்ளிருக்கும் ஆவியையாவது, ஒரு மானிட உருவத்தில் பார்க்கிறதில்லை. ஆகையினால், கண்ணின் ஸ்தூலபாகமானது, மறைக்கப்பட்டு, ஆன்ம சம்பந்தமானதுடன் உடன் உழைத்தல் நீக்கப்பட்டபோது, சூக்கும உலகத்திலுள்ள ஆவிகள் மட்டுமல்லாமல், சரீரத்திலேயே இருக்கும்போது, மனிதர்களுடைய ஆவிகள்கூட, மானிட உருவமாயிருக்கிற தங்களுடைய சொந்த உருவத்தில் பார்க்கப்படுகின்றன.

**454**. மனிதனானவன் தன்னுடைய ஆவி சம்பந்தப்பட்ட வரையில் சுவர்க்கத்தின் ஒரு உருவமாக இருக்க சிருட்டிக்கப்பட்டிருக்கிற படியினால், ஆவியின் உருவம் மானிடத் தன்மையானதாயிருக்கிறது. ஏனென்றால், சுவர்க்கத்தினுடையவும், அதன் முறைமையினுடையவும் எல்லா பொருள்களும், மனிதனுடைய மனதை அமைக்கிற பொருள்களில், சேர்க்கப்படுகின்றன; . மேலும், இதிலிருந்து விவேகத்தையும் புத்தியையும் ஏற்றுக்கொள்ளும் சக்தி உண்டாகிறது. விவேகத்தையும் ஞானத்தையும், ஏற்றுக்கொள்ளும் சக்தி என்றுவது, அல்லது சுவர்க்கத்தை ஏற்றுக்கொள்ளும் சக்தி என்றுவது நீர் எதை சொன்னபோதிலும், சுவர்க்கத்தின் வெளிச்சத்தையும் சூட்டையும் குறித்தும் (செ. 126-140), சுவர்க்கத்தின் உருவத்தைக் குறித்தும் (செ. 200-212), தேவர்களின் ஞானத்தைக் குறித்தும் (செ. 265-275), மேலும், முழுமையும் ஒவ்வொரு பாகத்திலும், சுவர்க்கத்தின் உருவம் ஒரு மனிதனைப்போலிருக்கிறதென்கிற அத்தியாயத்திலிருந்தும் (செ. 59-77), இதுவும், சுவர்க்கமும் அதன் உருவமுமாயிருக்கிற (செ. 78-86) ஆண்டவரின் தெய்வீக மானிடத்தன்மையிலிருந்தும் காண்பிக்கப்பட்டதிலிருந்து, அறிந்துகொள்ளக்கூடியதுபோல், அதே பொருளாகிறது.

**455**. ஒரு பகுத்தறிவுள்ள மனிதன் இந்த விஷயங்களை அறிந்துகொள்ளக்கூடும்; ஏனென்றால், அவன் காரணங்களின் சம்பந்தங்களிலிருந்தும், இவ்விதமாக ஒழுங்கில் உண்மைகளிலிருந்தும் அவன் பார்க்க சக்தியுள்ளவனா யிருக்கிறான்; ஆனால், பகுத்தறிவில்லாத மனிதன் அவைகளை அறிந்துகொள்ளமாட்டான். இதற்கு

அநேக காரணங்கள் இருக்கின்றன; ஆனால், தான் தன்னுடைய உண்மைகளாக செய்துகொண்ட பொய்களுக்கு, அவைகள் எதிரிடையாயிருப்பதினால், அவன் அதை அறிந்துகொள்ள இஷ்டப்படவில்லை என்பதும், இந்த காரணத்துக்காக அறிந்துகொள்ள இஷ்டப்படாதவன், தன்னுடைய பகுத்தறியும் சக்திக்கு போகும் சுவர்க்கத்தின் வழியை மூடி விட்டான் என்பதும் முக்கிய காரணமாயிருக்கிறது. அப்படி இருந்தாலும், சித்தமானது எதிர்ப்பதை விட்டுவிட்டால், போக்கு வரவு சம்பந்தம் எப்போதும் திறக்கப்படலாம் (மேலே செ. 424-ஐப்பார்க்கவும்). மனதுள்ளவனாயிருந்தால், மனிதனானவன் உண்மைகளை தெரிந்துகொண்டு பகுத்தறிவுள்ளவனாகலாமென்று, எனக்கு அதிக அனுபவத்திலிருந்து நிரூபிக்கப்பட்டது. தெய்வத்தையும், திருச்சபையின் உண்மைகளையும் உலகத்திலிருக்கும்போது நிராகரித்து பகுத்தறிவில்லாமல் போனவர்களும், அந்த உண்மைகளுக்கு விரோதமாய் ஸ்திரப்பட்டவர்களுமாகிய கெட்ட ஆவிகள், தெய்வத்தின் சக்தியினால் உண்மையின் வெளிச்சத்திலிருந்தவர்கள் பக்கம் அடிக்கடி திருப்பப்பட்டன; அப்பொழுது, தேவர்கள் செய்ததுபோல, எல்லா விஷயங்களையும் அவைகள் கிரகித்து, அவைகள் உண்மைகள் என்றும், அவைகளை எல்லாம் கிரகித்துக்கொண்டதாகவும் ஒத்துக்கொண்டன; ஆனால், அந்த வெளிச்சத்தை விட்டு தங்கள் சொந்த நிலைமைக்கு வந்து, தங்களுடைய சித்தத்தின் அன்புக்கு திருப்பப்பட்ட உடனே, அவைகள் ஒன்றையும் கிரகிக்காமல், எதிரிடையானவைகளை கூறின. தாங்கள் செய்வது தீமையானதென்று நினைப்பது பொய்யென்றும், தாங்கள் அறிந்து உணருகிறதாகவும், ஆனால், தங்கள் அன்பின் இன்பத்தையும், இவ்விதமாக தீமை நல்லதாகவும், பொய் உண்மையாகவும், பார்க்கத் தங்கள் சிந்தனைகளை நடத்துகிற தங்கள் சித்தத்தையும், தங்களால் தடுக்க முடியவில்லை என்றும், நரகத்திற்குரிய ஆவிகள் சொல்வதைக்கூட நான் கேட்டிருக்கிறேன். இவ்விதமாய், தீமையிலிருந்து பொய்களிலிருக்கிறவர்கள், அறிந்துகொள்ளவும், ஆகையினால் பகுத்தறிவுள்ளவர்களாகவும், சக்தியுள்ளவர்களாயிருக்கிறார்களென்றும், ஆனால், அவர்களுக்கு இஷ்டமில்லை என்றும், பொய்கள், தாங்கள் இருந்த தீமைகளோடு ஒத்துப்போகிறதின் நிமித்தம், அவர்கள் பொய்களை உண்மைகளைவிட அதிகமாய் நேசிக்கிறபடியினால், அவர்களுக்கு இஷ்டமில்லை என்றும் மெய்ப்பிக்கப்பட்டது. நேசித்தலும் இச்சித்தலும் ஒன்றே; ஏனென்றால், ஒரு மனிதன் இச்சிக்

றதை அவன் கேட்கிறான், தான் நேசிப்பதை அவன் இச்சிக்கிறான். ஆகையினால், தான் இஷ்டப்பட்டால், உண்மைகளை அறிந்துகொள்ள சக்தியுள்ளவனா யிருக்கும்படி, மனிதனுடைய நிலைமை யிருக்கிறபடியினால், அநேகருடைய பகுத்தறிவை மூடிவிட்ட பொய்கள், புத்தியின் தீர்மானங்களால் கலைக்கப்படும்பொருட்டும், கண்கள் இவ்விதமாக கொஞ்சம் அளவு திறக்கப்படும்பொருட்டும், சுவர்கத்தினுடையவும் திருச்சபையி னுடையவும், ஞான சம்பந்தமான உண்மைகளை, பகுத்தறிவுள்ள யோசனைகளால் ஸ்திரப்படுத்த எனக்கு உத்திரவு கொடுக்கப்பட்டது; ஏனென்றால், பகுத்தறிவுள்ள உண்மைகளால் ஞானசம்பந்தமான உண்மைகளை ஸ்திரப்படுத்தல், உண்மைகளில் இருக்கப்பட்டவர்கள் எல்லாருக்கும் இடம்கொடுக்கப்பட்டிருக்கிறது. வேதத்தில் இருக்கும் உண்மைகளை தெளிந்த புத்தியிலிருந்து பார்த்தாலொழிய, அதை அதன் சொல்லார்த்தத்திலிருந்து, யார் அறிந்துகொள்ளக்கூடும்? ஒரே வேதத்திலிருந்து உண்டான அவ்வளவு அநேக வேதப்புரட்டுகளுக்கு இது மூலம் அல்லவா?

**456.** சரீரத்திலிருந்து பிரிந்த பிறகு, மனிதனுடைய ஆவியானது தானே மனிதனென்பதும், அதே உருவத்திலிருக்கிறதென்பதும், அநேக வருஷங்களின் அனுதின அனுபவத்தினால் எனக்கு நிரூபிக்கப்பட்டது; ஏனென்றால், நான் அவ்விதமானவர்களை பார்த்தும், ஆயிரம் தடவைகளில் அவர்கள் சொல்வதை உற்றுக்கேட்டும், உலகத்திலிருக்கும் மனிதர்கள் அவர்களை மனிதர்களென்று நம்புகிறதில்லை என்கிறதும், இதை அப்படி நம்புகிறவர்கள் கற்றோரால் பேதமையானவர்களாக எண்ணப்படுகிறார்களென்கிறதுமாகிய, இந்த செய்தியைப்பற்றி அவர்களுடன் பேசியுமிருக்கிறேன். இவ்வித அறியாமை உலகத்திலும் முக்கியமாய் திருச்சபைக்குள்ளும் இன்னும் நீடித்திருக்கிறதென்று ஆவிகள் முழு இருதயத்துடன் விசனப்பட்டார்கள். ஆனால், இந்த நம்பிக்கையானது, சரீர உணர்ச்சியிலிருந்து உண்டான அபிப்பிராயங்களிலிருந்து, ஆன்மாவைக் குறித்து நினைத்த கற்றோரிடமிருந்து முக்கியமாய் தோன்றியதென்றும், அவ்வித அபிப்பிராயங்களிலிருந்து, ஆன்மாவைக் குறித்து தாங்கள் ஏற்படுத்தக்கூடிய ஒரே மனோபாவனையானது கேவல சிந்தனையா யிருந்ததென்றும், இது, அதனுடைய கொள்கலமாகவும் உற்பத்தி ஸ்தானமாகவும் எந்த பொருளுக்கும் வேறாய் பார்க்கப்பட்டால், சரீரம் இறக்கும்போது

லிக்கப்பட வேண்டிய சுத்தமான ஆகாய நுண்ணணுவின் ஆவியாய்ப் பறக்கிற ஒன்று என்றும், அவர்கள் சொன்னார்கள். ஆனால், திருச்சபையானது வேதத்திலிருந்து ஆன்மாவின் அழிவின்மையை நம்புகிறபடியினால், சிந்தனைக்கு சேர்ந்த ஏதோ ஒரு உயிருள்ளதை, அதற்கு ஆரோபிக்க பலாத்காரம் பண்ணப்படுகிறார்கள்; ஆனால், அது மறுபடியும் சரீரத்துடன் சேர்க்கப்படுகிறவரையில், மனிதன் உடைத்தாயிருக்கிற உணர்ச்சியின் எதுவும், அதற்கு இல்லை என்கிறார்கள். உயிர்த்தெழுகையைக் குறித்த கொள்கையினுடையவும், கடைசி தீர்ப்பு வருங்காலத்தில், ஆன்மாவும் சரீரமும் மறுபடியும் சேர்க்கப்படும் என்கிற நம்பிக்கையினுடையவும், அஸ்திவாரம் இதுதான். ஆகவே, எவனாவது ஒருவன் கொள்கையிலிருந்தும், உத்தேசத்திலிருந்தும் ஆன்மாவைப்பற்றி நினைத்தால், அது ஒரு ஆவியென்றும் ஒரு மானிட உருவத்திலிருக்கிறதென்றும், அவன் கிரகிக்கிறதில்லை. நிஜமாகவே, சூக்குமமானது எதுவென்று எவனுக்கும் அரிதாய் தெரியும். தேவர்களைப்போலவும் ஆவிகளைப் போலவும் இருக்கிற சூக்கும பிராணிகளாயிருக்கிறவர்கள், எந்த உருவத்தையும் உடைத்தாயிருக்கிறார்களென்று, இன்னும் குறைவாய் தெரிந்திருக்கிறது. ஆகையினால், உலகத்தை விட்டு விட்டு வந்த ஏறக்குறைய எல்லாரும், தாங்கள் உயிரோடிருப்பதையும், முன்போலவே அவ்வளவு மனிதர்களாயிருப்பதையும், தாங்கள் பார்த்து, கேட்டு, பேசுகிறதையும், தங்களுடைய சரீரம் யாதொரு வித்தியாசமுமில்லாமல், முன்போலவே ஸ்பரிச உணர்ச்சியை அனுபவிக்கிறதையும் கண்டு, பெரிதாய் ஆச்சரியப்படுகிறார்கள் (மேலே நெ. 74 பார்க்கவும்). ஆனால், தங்களைப்பற்றியே ஆச்சரியப்படுவது நின்றபோது, உலகத்தில் எக்காலத்திலும் இருந்தவர்கள் எல்லாரும் இதர வாழ்க்கையிலிருந்து, மனிதர்களைப்போல் உயிரோடிருக்கையில், திருச்சபைக்கு, இறந்தபின் மனிதனுடைய அவ்வித நிலைமையைக் குறித்தாவது, சுவர்க்கத்தைக் குறித்தாவது, நரகத்தைக் குறித்தாவது, யாதொன்றும் தெரியாதிருப்பதைப்பற்றி அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். அவர்கள், மனிதர்களுக்கு இது ஏன் திர்ஷ்டிகளினால் தெளிவாய் வெளிப்படுத்தப்படவில்லை என்றுகூட அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள்; ஏனென்றால், அது திருச்சபையின் விசுவாசத்தினுடைய பிரதான அம்சமாயிருக்கிறது. ஆனால், ஆண்டவர் இஷ்டப்பட்டால் எதுவும் அவருக்கு சுலபமானதாயில்லாமல் போகாதபடியினால், இது செய்திருக்கப்படலாமென்றும்,

ஆனால், இவ்விதமான விஷயங்களுக்கு விரோதமாய் பொய்களில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், தாங்களே பார்த்தபோதிலும் கூட நம்பமாட்டார்களென்றும், மேலும், பொய்களிலிருக்கப் பட்டவர்கள் விஷயத்தில் அவர்கள் முதலில் நம்பி, பின்னிட்டு மறுகளித்து, இவ்விதமாக உண்மையையேகூட நிந்திப்பார்களான படியினால், சிருஷ்டியினால் எதையும் ஸ்திரப்படுத்தல் அபாயமான தென்றும், சுவர்க்கத்திலிருந்து அவர்களுக்கு சொல்லப்பட்டது உண்மையை நம்பி, பின்னிட்டு அதை நிராகரித்தல் தேவதூஷணமா யிருக்கிறது; உண்மைகளை நிந்திப்பவர்கள், எல்லா நரகங்களுக்கும் மிகவும் தாழ்ந்ததும், துக்கமானதுமானதில் தள்ளப்படுகிறார்கள். ஆண்டவருடைய அடியில்கண்ட வார்த்தைகளால், கருதப்பட்டது இந்தஅபாயம்தான்:"அவர்கள் கண்களினால்காணாமலும்,இருதயத்தி னால் உணராமலும், குணப்படாமலும் இருக்கும்படிக்கும், நான் அவர்களை ஆரோக்கியமாக்காமல்இருக்கும்படிக்கும், அவர்களுடைய கண்களை அவர் குருடாக்கி, அவர்கள் இருதயத்தையும் கடின மாக்கினார்." (யோவா. xii: 40); பொய்களில் இருக்கப்பட்டவர்கள் அவநம்பிக்கையில் பிடிவாதமாய் நிற்பவர்கள் என்பது இந்த வார்த்தைகளால் கருதப்படுகிறது:—"ஆபிரகாம் நரகத்திலுள்ள தனவந்தனுக்கு சொன்னதாவது, அவர்களுக்கு மோசேயும், தீர்க்கதரிசிகளும் உண்டு, அவர்களுக்கு அவர்கள் செவி கொடுக் கட்டும் என்றான். அதற்கு அவன் அப்படியல்ல, தகப்பனாகிய ஆபிரகாமே, மரித்தோரிலிருந்து ஒருவன் அவர்களிடத்திற்குப் போனால் மனந்திரும்புவார்களென்றான். அதற்கு அவன் • அவர்கள் மோசேவிக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் செவி கொடாவிட்டால், மரித் தோரிலிருந்து ஒருவன் எழுந்து போனாலும், நம்பமாட்டார்கள் என்றார்" (லூக். xvi. 29, 30, 31).

**457**. ஒரு மனிதனுடைய ஆவியானது, ஆவிகள் உலகத் திற்குள் பிரவேசிக்கும்போது (இது மேலே கூறியபடி அவன் உயிர்பிக்கப்பட்டபின் கொஞ்சகாலத்திற்குள் சம்பவிக்கிறது) தன்னுடைய புறம்பானவைகளின் நிலைமையில்,அப்பொழுது அவன் இருக்கிறபடியினாலும், அவனுடைய உள்ளானவைகள் இன்னும் வெளிப்படுத்தப்படாமல் இருப்பதினாலும், தனக்கு உலகத்தில் இருந்ததைப்போன்ற முகத்தையும் கண்டத்தொனியையும், அது உடைத்தாயிருக்கிறது; இதுதான் இறந்த பிறகு மனிதனுடைய முதல் நிலைமை. ஆனால், பின்னிட்டு முகம் மாற்றப்பட்டு,

முழுமையும் வேறுவிதமாய் விடுகிறது; ஏனென்றால், அது, உலகத்திலிருக்கும்போது அவனுடைய மனதின் உள்ளான வைகள் இருந்ததும், சரீரத்தில் இருக்கும்போது தன் ஆவி இருந்ததுமாகிய, ஆசையினுடையவும் அல்லது அரசாளும் அன்பினுடையவும் சாயலை அது எடுத்துக்கொள்ளுகிறது; ஏனென்றால், மனிதனுடைய ஆவியின் முகமானது, அவன் சரீரத்தின் முகத்தினின்று அதிகமாய் வித்தியாசப்படுகிறது; சரீரத்தின் முகம், அவனுடைய பெற்றோர்களிடமிருந்து வருகிறது, ஆனால், ஆவியின் முகம் அவனுடைய ஆசையிலிருந்து உண்டாகிறது; மேலும், அது அதின் பிரதிமையாயிருக்கிறது. புறம்பானவைகள் நீக்கப்பட்டு, உள்ளானவைகள் வெளிபடுத்தப்படும்போது, சரீர வாழ்விற்கு பிறகு, ஆவியானது இந்த ஆசைக்குள் வருகிறது; இதுதான் மனிதனுடைய மூன்றாவது நிலைமை. உலகத்திலிருந்து வந்த உடனே, நான் சில ஆவிகளைப் பார்த்து இருக்கிறேன்; அவைகளை, அவைகளின் முகத்தினாலும் பேச்சினாலும் நான் தெரிந்துகொண்டேன்; ஆனால், நான் அவைகளை மறுபடியும் பின்னிட்டு பார்த்தபோது, அவைகள் எனக்கு தெரியவில்லை. நல்ல அன்புகளில் இருந்தவைகள், அப்பொழுது அழகுள்ள முகங்களோடு தோன்றின; ஆனால், தீமையான அன்புகளில் இருந்தவர்களின் முகங்கள் கோரமானதாயிருந்தது; ஏனென்றால், மனிதனுடைய ஆவியானது, அதையே யோசிக்குங்கால், அவனுடைய ஆசையைத் தவிர வேறொன்றுமில்லை; முகமானது அதன் வெளிஉருவம் இதரவாழ்வில், தனக்கு நியாயமாய், சொந்தமாய் இல்லாத அன்புகளை பாவனை செய்யவும், அதனால் தன்னுடைய உண்மையான அன்பிற்கு எதிரிடையாயிருக்கிற பார்வைகளை போர்த்துக் கொள்ளவும் விடப்படுகிறதில்லையானபடியினாலும், முகத்தின் இந்த மாறுதல்கள் சம்பவிக்கின்றன. அங்கே இருப்பவர்களெல்லாம், தாங்கள் நினைப்பதுபோல் பேசவும், தங்கள் பார்வைகளாலும் சைகைகளாலும், தங்கள் சித்தம் எப்படி இருக்கிறது என்று காண்பிக்கவும் கூடிய, அவ்வித நிலைமைக்கு கொண்டுவரப்படுகிறார்கள். அதனால் தான், இப்பொழுது, எல்லா ஆவிகளுடைய முகங்களும் அவர்களுடைய அன்புகளின் உருவங்களாகவும் பிரதிமைகளாகுகின்றன; ஆகையினால், உலகத்திலிருக்கும்போது ஒருவரை ஒருவர் தெரிந்த எல்லாரும், ஆவிகள் உலகத்திலும்கூட ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளுகிறார்கள்; ஆனால், சுவர்க்கத்திலும் நரகத்திலும் அப்படி தெரிந்துகொள்ளுகிறதில்லை (மேலே நெ. 427 பார்க்கவும்).

**458**. வேஷதாரிகளுடைய முகங்கள் மற்றவர்களுடைய முகங்களைவிட, பின்னிட்டு மாற்றப்படுகின்றன; ஏனென்றால், அவர்கள், வழக்கத்தினால், தங்களுடைய உள்ளானவைகளை, நல்ல அன்புகளுடன் பாவிக்கும்படியாக ஒழுங்குபடுத்தும் அப்பியாசத்தை உண்டாக்கி யிருக்கிறார்கள். ஆகையினால், அவர்கள் நெடுங்காலம் அழகில்லாமல் இருக்கிறதில்லை என்று தோன்றுகிறார்கள். ஆனால், தாங்கள் கற்பித்துக்கொண்டது படிப்படியாய் நீக்கப்பட்டு, மனதின் உள்ளானவைகள், அவர்களுடைய அன்புகளின் உருவங்களோடு ஒத்துப்போக செய்கிறபடியினால், கொஞ்சகாலம் பொருத்து அவர்கள் மற்றவர்களைவிட அதிக அவலக்ஷணமாய் விடுகிறார்கள். வேஷதாரிகள், தேவர்களைப்போல் பேச பழகி, ஆனால், தெய்வத்தை அல்லாமல் இயற்கையை மாத்திரம் உள்ளுக்குள்ளாய் ஒத்துக்கொண்டு, அதனால், சுவர்க்கத்துக்கும் திருச்சபைக்கும் சேர்ந்தவைகளை மறுத்தவர்களாயிருக்கிறார்கள்.

**459**. இறந்த பிறகு ஒவ்வொரு மனிதனுடைய மானிட உருவம், தான் தெய்வீக விஷயங்களை அதிக உள்ளுக்குள்ளாய் நேசித்து, அவைகளின்படி வாழ்ந்த அளவு, அதிக அழகுள்ளதாயிருக்கிறதென்று தெரிந்திருக்கப்படவேண்டும்; ஏனென்றால், ஒவ்வொருவனுடைய உள்ளானவைகளும், அவனுடைய அன்புக்கும் வாழ்க்கைக்கும் தக்கபடி திறக்கப்பட்டு, உருவாக்கப்படுகின்றன; ஆகையினால், அன்பானது எவ்வளவு உள்ளானதாயிருக்கிறதோ, அவ்வளவு சுவர்க்கத்துடன் உறுதிபடத்தக்கதாயும், அதனால் முகமானது அதிக அழகாயுமிருக்கிறது. இதனால் தான், மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்தின் தேவர்கள் மிகவும் அழகுள்ளவர்களா யிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் பரத்துக்கடுத்த அன்பின் உருவங்களா யிருக்கிறார்கள். ஆனால், தெய்வீக உண்மைகளை அதிக புறம்பாய் நேசித்து, அதனால் அவைகளின்படி புறம்பாய் வசித்தவர்கள், குறைந்த அழகுள்ளவர்களாக இருக்கிறார்கள்; ஏனென்றால், புறம்பான ஆசைகள் மாத்திரம், அவர்களுடைய முகங்களிலிருந்து பிரகாசிக்கின்றன; இன்பங்களின் மூலமாய் எந்த அந்தரங்கமான சுவர்க்கத்து அன்பும், அதினால் அது இருக்கிறபடி சுவர்க்கத்தின் உருவத்தின் எதுவும் பிரகாசிக்கிறதில்லை. உள்ளான உயிர், அதன்மூலமாய் பிரவேசிப்பதினால், உயிர்ப்பிக்கப்படாத அவர்களுடைய முகங்களிலிருந்து ஏதோ ஒன்று ஒப்பீடாய் மங்கலாய் தோன்றுகிறது. சுருங்கச் சொல்லில் எல்லா சம்பூரணமும் உட்பாக

கங்கள் பக்கம் அதிகரித்து வெளிப்பாகங்கள் பக்கம் குறைகிறது; சம்பூரணம் அதிகரிக்கிறதும் குறைகிறதும்போல, அழகும்கூட அப்படியேயாகிறது. எந்த சித்திரக்காரனும், தன்னுடைய வித்தை சமத்தெல்லாம் சேர்த்து, அவனுடைய வர்ணங்களுக்கு, அவர்களுடைய வெளிச்சத்தினுடையவும் உயிரினுடையவும் ஆயிரத்தில் ஒரு பங்குக்கு கூட, சமமாக அவ்வித வெளிச்சத்தை கொடுக்க எப்பொழுதும் முடியாதபடி, அவ்வளவு அழகாயிருந்த மூன்றாவது சுவர்க்கத்தின் தேவர்கள் முகங்களை நான் பார்த்திருக்கிறேன்; ஆனால், மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்தின் தேவர்களின் முகங்கள், கூடியமட்டும், போதுமான அளவு எடுத்துக் காட்டப் படலாம்.

**460.** முடிவில், இதுவரையிலும் தெரிந்திராத சில இரகசியங்களை நான் சொல்லுவேன். ஆண்டவரிடமிருந்து புறப்பட்டு, சுவர்க்கத்தை உண்டாக்குகிற ஒவ்வொரு நன்மையும், உண்மையும், முழுவதிலும், மிகப் பெரியதாயிருப்பதிலும் மட்டுமல்லாமல், ஒவ்வொரு பாகத்திலும் சின்னஞ் சிறியதிலும்கூட, ஒரு மானிட உருவத்தில் இருக்கிறது; இந்த உருவமானது, ஆண்டவரிடமிருந்து நன்மையையும் உண்மையையும் பெற்றுக்கொள்ளுகிற ஒவ்வொருவனையும் தாக்கி, சுவர்க்கத்திலிருக்கும் ஒவ்வொருவனையும் தான் ஏற்றுக்கொள்ளுகிற அளவுக்கு தக்கபடி, மானிட உருவத்தில் இருக்கச் செய்கிறது. அதனால்தான், சுவர்க்கமானது பொதுவாகவும் சிறப்பாகவும் தன்னைப்போன்றேயிருக்கிறது; மேலும் நான்கு அத்தியாயங்களில் காண்பிக்கப்பட்டபடி (நெ. 59-86) மானிட உருவமானது முழுவதினுடையவும், ஒவ்வொரு கூட்டத்தினுடையவும், ஒவ்வொரு தேவனுடையவும் உருவமாயிருக்கிறது; அதனுடன், அது, தேவர்களிடமிருக்கும் சுவர்க்கத்து அன்பிலிருந்து உற்பத்தியான ஒவ்வொரு சிந்தனையின் உருவமாயிருக்கிறதென்று சேர்க்கப்படட்டும். ஆயினும், எந்த மனிதனும் இந்த உண்மையை இலகுவாய் கிரகிக்கமுடியாது. ஆனால், தேவர்கள் சுவர்க்கத்தின் வெளிச்சத்திலிருப்பதினால், அவர்களால் அது தெளிவாய் கிரகிக்கப்படுகிறது.

# XLVIII

## இறந்த பிறகு மனிதனுக்கு, தனக்கு உலகத்திலிருந்த எல்லா புலன்களும், ஞாபகமும், சிந்தனையும், ஆசையும் உண்டு, மண் சரீரத்தைத் தவிர எதையும் விட்டுவிட்டு வருகிறதில்லை.

**461**. மனிதனானவன், அவன் இறக்கும்போது நடக்கிறபடி, ஸ்தூல உலகத்திலிருந்து, சூக்கும உலகத்திற்கு போகும்போது, தன்னுடைய மண் சரீரத்தைத் தவிர, அவனுடையதா யிருக்கிறதும், மனிதனாக அவனுக்கு சேர்ந்ததுமாகிய எல்லாவற்றையும், தன்னுடன் கூட எடுத்துக்கொண்டு போகிறான் என்பது அதிக அனுபவத்திலிருந்து எனக்கு நிரூபிக்கப்பட்டது; ஏனென்றால், அவன் சூக்கும உலகத்தை அல்லது இறந்த பிறகு ஏற்படும் வாழ்க்கையில் பிரவேசிக்கிறபோது, ஸ்தூல உலகத்தில் அவன் இருந்ததுபோல, ஒரு சரீரத்தில் இருக்கிறான்; அவன் எந்த வித்தியாசத்தையும் உணராதபடியினால் அல்லது பார்க்காதபடியினால் தோற்றத்துக்கு வித்தியாசமில்லை. ஆனால், அவ்வுடைய சரீரம் அப்பொழுது சூக்குமமாய், இவ்விதமாக உலகப்பொருள்களிலிருந்து பிரிக்கப்பட்டு அல்லது சுத்தப்படுத்தப்படுகிறது. சூக்குமமானது, சூக்குமமானதை தொட்டு பார்க்கும் காலத்தில், ஸ்தூலமானது ஸ்தூலமானதை தொட்டு பார்க்கிறதுபோலவே, சரிசமானமாயிருக்கிறது; ஆகையினால், மனிதன் ஒரு ஆவியாகும்போது, தான் உலகத்திலிருந்த தன்னுடைய சரீரத்தில் இருக்கிறதாகத் தவிர, அவனுக்கு வேறொன்றும் தெரியாது; இவ்விதமாக தான் இறந்துபோனதாக அவனுக்கு தெரியாது. ஆவியாக ஒரு மனிதன், தான் உலகத்தில் அனுபவித்த புறம்பானதும் உள்ளானதுமான ஒவ்வொரு புலனையும் கூட அனுபவிக்கிறான்; முன்போலவே, அவன் பார்க்கிறான்; முன்போலவே அவன் கேட்டு பேசுகிறான்; முன்போலவே, அவன் முகர்ந்து பார்த்து உருசி பார்க்கிறான்; தொடப்படும்போது, முன்போலவே உணருகிறான்; மேலும் அவன் முன்போலவே, ஆசைப்படுகிறான், இச்சிக்கிறான், ஆவல் கொள்ளுகிறான், நினைக்கிறான், தியானிக்கிறான், இயக்கப்படுகிறான், நேசிக்கிறான், மனங் கொள்ளுகிறான்; மேலும், படிப்பு விஷயத்தில் இன்பம் கொள்பவன் முன்போலவே படித்து எழுது

கிறான். சுருங்கச் சொல்லில், மனிதனானவன், ஒரு வாழ்க்கையி லிருந்து, மற்ற ஒரு வாழ்க்கைக்கு அல்லது ஒரு உலகத்தி லிருந்து மற்றதிற்கு செல்லும்போது, ஒரு இடத்திலிருந்து மற்ற தற்கு செல்லுதல்போலிருக்கிறது; ஏனென்றால், மண் சரீரத்தின் மரணமாய் மாத்திரம் இருக்கிற மரணத்துக்குப் பின், மனிதனான வன் தன்னுடைய சொந்தமான எதையும் இழந்துவிட்டான் என்று சொல்லப்பட முடியாதபடி, தான் மனிதனாக தனக்குள்ளே இருந்த எல்லாவற்றையும், அவன் தன்னுடனேயே கொண்டுபோகி றான். அவன் தன்னுடனே ஸ்தூல ஞாபகத்தை கொண்டு போகிறான்; ஏனென்றால், உலகத்தில் மிக இளம்பிராய முதல் வாழ்க்கையின் முடிவு வரையில் தான் கேட்டதும், பார்த்ததும், படித்ததும், கற்றதும், நினைத்ததுமாகிய ஒவ்வொன்றையும் பத்திர மாய் வைத்துக்கொண்டிருக்கிறான்; ஆனால், ஞாபகத்திலிருக்கும் ஸ்தூல பொருள்கள் சூக்கும உலகத்தில் நூதனமாய் தோற்று விக்கப்பட முடியாதபடியினால், அவைகள், மனிதனானவன் அவை களிலிருந்து நினைக்காதபோது, அவன் விஷயத்தில் இருக்கிறது போல, மௌனமாயிருக்கின்றன: அப்படியிருந்தாலும், ஆண்ட வருக்கு தயவு வந்தபோது அவைகள் தோற்றுவிக்கப்படு கின்றன. ஆனால், இந்த ஞாபகத்தைப்பற்றியும், இறந்த பிறகு அதன் நிலைமையைப்பற்றியும், சீக்கிரம் அதிகம் சொல்லப்படும். ஐம்புலனுக்கடுத்த மனிதன், அதை கிரகிக்க முடியாதபடியினால், இறந்த பிறகு மனிதனுடைய நிலைமை அப்படியிருக்கிறதென்று அவன் நம்பமாட்டான்; ஏனென்றால், சரீர சம்பந்தமான மனிதன், சூக்குமமான பொருள்களைப்பற்றிகூட, ஸ்தூலமாய் நினைப்பதைத் தவிர வேறுவிதமாய் யாதொன்றும் செய்யமுடியாது; ஆகையினால், தான் பார்க்காத எதையும் அதாவது, தன்னுடைய சரீர கண்களால் பார்த்து, தன்கைகளால் உணராத எதையும், யோவானில் (xx. 25, 27, 29) தாமஸ் என்பவரைப்பற்றி நாம் வாசிக்கிறதுபோல, உள் பொருளாக இல்லை என்று அவன் உறுதியாய் சொல்லுகிறான். சிற்றின்ப சம்பந்தமுள்ள மனிதன் நடத்தையைப்பற்றி மேலே நெ. 267 லும், குறிப்புகளிலும், விவரிக்கப்பட்டிருக்கிறது.

**462**. அப்படியிருந்தாலும், சூக்கும உலகத்திலிருக்கும் மனிதனுடைய வாழ்க்கைக்கும், ஸ்தூல உலகத்திலிருக்கும் அவ னுடைய வாழ்க்கைக்கும், அவனுடைய புறம்பான புலன்களுக்கும் அவைகளின் ஆசைகளுக்கும், உள்ளான புலன்களுக்கும், அவைகளின்

ஆசைகளுக்கும் இந்த இரண்டிக்கும் இருக்கிறதுபோல ஒரு பெரிய வித்தியாசமிருக்கிறது. சுவர்க்கத்திலிருக்கிறவர்கள், உலகத்திலிருந்ததைவிட அதிக தீவிர மிகுதியாய் உணருகிறார்கள்; அதாவது பார்த்து கேட்கிறார்கள்; அதினுடன் அதிக அறிவுடன் நினைக்கிறார்கள்; ஏனென்றால், உலகத்தின் வெளிச்சத்தைவிட அநேக பிரமாணங்கள் அதிகப்படுகிற சுவர்க்கத்தின் வெளிச்சத்திலிருந்து அவர்கள் பார்க்கிறார்கள் (மேலே நெ. 126 பார்க்கவும்); பூமியின் ஆகாயத்தைவிட, அநேக பிரமாணங்கள் அதேமாதிரி அதிகரிக்கிற ஒரு சூக்கும ஆகாயத்தின் மூலமாய் அவர்கள் கேட்கிறார்கள் (நெ. 235). புறம்பான புலன்களின் இந்த வித்தியாசங்கள், உலகத்தில் சுத்தமான ஆகாயத்திற்கும், இருண்ட மந்தாரத்துக்கும் உள்ள வித்தியாசங்கள் போலவும், அல்லது பட்டம்பகல் மத்தியான வெளிச்சத்திற்கும் சாயந்திர மப்புக்கும் போலவுமிருக்கின்றன; ஏனென்றால், சுவர்க்கத்தின் வெளிச்சமானது, தெய்வீக உண்மையாயிருப்பதினால், அது தேவர்கள் பார்வைக்கு, மிகவும் நுண்ணிய பொருள்களை உணரவும், வகையறுக்கவும் சக்தி கொடுக்கிறது. தேவர்களின்புறம்பான பார்வை, அவர்களுடைய உள்ளான பார்வை அல்லது புத்திக்குகூட அன்னுவயப்படுகிறது ; ஏனென்றால், தேவர்கள் விஷயத்தில், மற்றதுடன் ஒன்றாக செயல்பட ஒரு பார்வை மற்றதற்குள் பாய்கிறது; ஆகவே, அவர்கள் பார்வையின் ஆச்சரியமான கூர்மை உண்டாகிறது. அவர்கள் கேட்டலும்கூட புத்திக்கும் சித்தத்துக்கும் இரண்டுக்கும் சேர்ந்த அவர்கள் உணர்ச்சிக்கு அன்னுவயப்படுகிறது; ஆகையினால், பேசுகிறவனுடைய சப்தத்திலும் வார்த்தைகளிலும், அவனுடைய ஆசையினுடையவும் சிந்தனையினுடையவும் நுட்பமானவைகளை அவர்கள் உணருகிறார்கள்; சப்தத்தில் அவனுடைய ஆசையின் நுண்ணியவைகளையும், அவனுடைய வார்த்தைகளில், அவன் சிந்தனையின் நுண்ணியவைகளையும் அவர்கள் உணருகிறார்கள் (மேலே 234-245 வரையில் பார்க்கவும்). ஆனால், தேவர்களின் இதர புலன்கள், பார்வைப் புலனையும் கேட்கும் புலனையும்போல, அவ்வளவு தீவிர மிகுதியாயில்லை; ஏனென்றால், பார்த்தலும் கேட்டலும், அவர்களுடைய விவேகத்துக்கும் ஞானத்திற்கும் ஏதுவாயிருக்கின்றன; ஆனால், மற்றவைகள் அப்படியல்ல; ஆகையினால், அவைகள் அவ்வளவு தீவிர மிகுந்ததாயிருந்தால், அவர்களுடைய ஞானத்தின் வெளிச்சத்தையும் இன்பத்தையும் நீக்கி, அவைகள் மேற்படுகிற அளவு புத்தியை மங்க

லாக்கி, மெலிவிக்கிற பலவித நிபனங்களிலிருந்தும், சரீரத்திலிருந்தும், உண்டாகிற ஆசைகளின் இன்பத்தை ஏற்படுத்தும் உலகத்திலிருக்கும் மனிதர்கள் விஷயத்தில், இதுதான் மெய்யாய் சம்பவிக்கிறது; ஏனென்றால் அவர்கள் இரச ஞானத்திற்கும், சரீரபரிசத்தின் மயக்குதலுக்கும், இடம் கொடுக்கிற அளவு, ஞானசம்பந்தமான உண்மைகள் சம்பந்தப்பட்ட வரையில், மந்த புத்தியுள்ளவர்களாகவும் மூடர்களாகவுமிருக்கிறார்கள். தங்களுடைய சிந்தனைக்கும் ஆசைக்கும் சேர்ந்த சுவர்க்கத்து தேவர்களின் உள்ளான புலன்கள் கூட, அவைகள் உலகத்திலிருந்ததைவிட அதிக தீவிரம் மிருந்ததாயும், சம்பூரணமானதாயுமிருக்கிறது என்பது, சுவர்க்கத்துதேவர்களின் ஞானத்தைக் குறித்து சொல்லும் அத்தியாயத்திலிருந்து விசதமாகிறது (செ. 265 முதல் 275 வரையில்). நரகத்திலிருப்பவர்களின் நிலைமைகூட, உலகத்திலிருக்கும்போது இருந்த அவர்கள் நிலைமைக்கு விரிவாய் வித்தியாசப்படுகிறது; ஏனென்றால், இந்த புறம்பானதும் உள்ளானதுமான புலன்கள் நரகத்திலிருப்பவர்கள் விஷயத்தில், அளவாய் குறைவாயும் மங்கலாயுமிருப்பதுபோல, சுவர்க்கத்து தேவர்களின், அந்த புலங்களின் சம்பூரணமும் மேன்மையும் அவ்வளவு பெரியதாயிருக்கின்றன. ஆனால் இவைகளைப் பற்றி இனிமேல் அதிகம் சொல்லப்படும்.

மனிதனானவன், உலகத்திலிருந்து தன்னுடைய எல்லா ஞாபகத்தையும், தன்னுடன் கொண்டுபோகிறானென்பது, அநேகவிதமாய் காண்பிக்கப்பட்டிருக்கிறது; மேலும், சொல்லத்தகுந்த அநேக விஷயங்கள் பார்க்கப்பட்டும், கேட்கப்பட்டுமிருக்கிறது; அவைகளில் சிலவற்றைப்பற்றி நான் ஒழுங்காக சொல்லுகிறேன். சில ஆவிகள், தாங்கள் உலகத்தில் செய்த குற்றங்களையும் அதிக கொடுமைகளையும் மறுதளித்தார்கள்; ஆகையினால், அவர்கள் குற்றவாளிகள் அல்லவென்று நினைக்கப்படாதபடி, அவர்கள் செய்கைகள் எல்லாம் திறந்துவைக்கப்பட்டு, சிறுவயது முதல் வாழ்வு நாள் முடிவு வரையில், அவைகளுடைய ஞாபகத்திலிருந்தே ஒழுங்காக சொல்லப்பட்டது. அவைகள் எல்லாம் முக்கியமாய் விபசாரங்களும் வேசித்தனங்களுமாயிருந்தன. பொல்லாத வித்தைகளால் மற்றவர்களை மோசம் செய்தவர்களும், திருட்டு குற்றம் செய்தவர்களுமாகிய சிலர் இருந்தார்கள். இவர்களுடைய மோசங்களும் திருடுகளும் கூட, விரிவாய் சொல்லப்பட்டது; அவைகளில் அநேகம் தங்களைத் தவிர உலகத்திலிருக்கும் யாருக்கும் அரிதாய் தெரியும். அக்காலத்

தில் அவர்கள் மனதில் இருந்த ஒவ்வொரு சிந்தனையுடனும், உத்தேசத்துடனும், சந்தோஷத்துடனும், பயத்துடனும் அந்த செய்கைகள் தெளிவாய் வெளியிடப்பட்டபடியினால், அவைகளை அவர்கள் ஒத்துக்கொண்டார்கள். லஞ்சம் கொடுக்கப்படும்போது வாங்கிக்கொண்டு, தீர்ப்பைக்கொண்டு லாபமடைந்த மற்றவர்கள், தங்கள் ஞாபகத்திலிருந்து அதேமாதிரி பரிசோதிக்கப்பட்டார்கள்; அதிலிருந்து, தாங்கள் உத்தியோகத்திற்கு வந்த முதல் நாள் முதல், கடைசி நாள் வரையில், எல்லா விஷயங்களும் சொல்லப்பட்டது. அவர்கள் எதை, எவ்வளவு பெற்றுக் கொண்டார்களென்கிற எல்லா விபரத்துடன் அந்த காலமும், மனதினுடையவும் கருத்தினுடையவும் நிலைமையும், அதே காலத்தில் அவர்கள் ஞாபகத்துக்கு கொண்டுவரப்பட்டு, அநேக நூறுகளாக அவர்கள் பார்வைக்கு காண்பிக்கப்பட்டன. இது அநேகர் விஷயத்தில், செய்யப்பட்டது; ஆச்சரியம் என்னவென்றால், இவ்வித விஷயங்களை எழுதி வைத்திருந்த அவர்களுடைய ஞாபகக் குறிப்பு புஸ்தகங்கள்கூட திறக்கப்பட்டு, அவர்கள் முன்பாக பக்கம் பக்கமாக படிக்கப்பட்டது. கன்னிப்பெண்களை மானங்கெடுத்து கற்பை அழித்த மற்றவர்கள், அம்மாதிரியான தீர்ப்புக்கு கொண்டுவரப்பட்டார்கள்; அவர்களுடைய குற்றங்களின் ஒவ்வொரு விபரமும், அவர்கள் ஞாபகத்திலிருந்து இழுத்து ஒப்பிவிக்கப்பட்டது. அந்த கன்னிகளுடையவும் ஸ்திரீகளுடையவும் முகங்களோ, நேரில் இருந்ததுபோல இடங்களுடனும், வார்த்தைகளுடனும், உட்குறிப்புகளுடனும் காண்பிக்கப்பட்டன; அந்த காட்சிகள், சில சமயங்களில் சில மணிகள் காலம் நீண்டு, பார்வைக்கு காண்பிக்கப்பட்ட ஒரு காட்சிபோல நீடரென்று காண்பிக்கப்பட்டன. புறம் கூறுதலின் தீமையைப் பற்றி இலேசாய் நினைத்த ஒருவன் இருந்தான். அவனுடைய புறங் கூறுதலும் அவதூறுகளும்; அதே வார்த்தைகளோடும், யாரைப்பற்றி யார்முன்பாக அவைகள் சொல்லப்பட்டது என்பதுடனும், அவைகளின் ஒழுங்கில் மறுபடியும் கூறப்படுவதை நான் கேட்டேன்; இவைகள் எல்லாம், அவன் உலகத்திலிருந்தபோது அவனால் ஒவ்வொன்றும் ஜாக்கிரதையாய் மறைக்கப்பட்டபோதினும், உயிரோடிருப்பதுபோல கொண்டுவந்து காட்டப்பட்டது. ஒரு மோசமுள்ள சாக்குபோக்கினால், ஒரு பந்துவுக்கு அவனுடைய காணியாட்சிக்கு நஷ்டம் உண்டாக்கின வேறு ஒருவன் அதேமாதிரியாக குற்றவாளியாக தீர்மானிக்கப்பட்டான்; ஆச்சரியம் என்ன

வென்றால், அவர்களுக்குள் சென்ற கடிதங்களும் காகிதங்களும் நான் கேட்கும்படி வாசிக்கப்பட்டன; மேலும், ஒரு வார்த்தை யாவது இல்லாமல் போகவில்லை என்று எனக்கு சொல்லப்பட்டது. அதே மனிதன்கூட, தான் இறக்கிறதற்கு கொஞ்சம் முன், தன் னுடைய அயலானை இரகசியமாய் விஷம் வைத்து கொன்றுபோட் டான்; இந்த குற்றமானது, இவ்விதமாக வெளிப்படுத்தப்பட்டது. தன்னுடைய பாதங்களின் கீழ் ஒரு சுரங்கத்தை வெட்டுவதாக தோன்றினான்; அதிலிருந்து, ஒரு மனிதன் பிரேதக் குழியிலிருந்து வருகிறதுபோல் வெளியே வந்து, "நீ எனக்கு என்ன செய்தாய்? என்று கூச்சலிட்டான். கொலையாளி, அவனுடன் சினேகித தன் மையாய் எப்படி பேசி ஒரு கிண்ணத்தை விடாது பிடித்துகொண் டான் என்கிறதும், அதனுடன், அவன் முன்னிட்டே என்ன நினைத்தான் என்கிறதும், பின்னிட்டு நடந்த சங்கதிகள் என்ன என்கிறதுமாகிய ஒவ்வொரு விவரமும் அப்பொழுது வெளியிடப் பட்டது. இவைகளெல்லாம் பகிரங்கமான பிறகு, அவன் நரகத் துக்கு தண்டனை யிடப்பட்டான். சுருங்கச் சொல்லில், ஒவ் வொரு கெட்ட ஆவிக்கும் அதன் எல்லா தீமைகளும், பொல்லாத செய்கைகளும், கொள்ளைகளும், சூதுகளும், மோசங்களும் தெரி விக்கப்பட்டும், அதன் ஞாபகத்திலிருந்து வெளியே கொண்டுவரப் பட்டும், அதன் குற்றம் முழுமையும் ஸ்தாபிக்கப்பட்டது; இதுவு மன்றி, எல்லா விஷயங்களும் வெளிப் படுத்தப்பட்டபடியினால், மறுதளிக்க இடமில்லாமல் போய்விடுகிறது. மேலும், ஒரு மனித னுடைய ஞாபகத்திலிருந்து, அது தேவர்களால் பார்க்கப்பட்டு பரிசோதிக்கப்பட்டபோது, நாளுக்கு நாள் ஒரு மாதம் வரையில், அவனுடைய எண்ணங்கள் என்னமா யிருந்தனவென்று நான் தெரிந்துகொண்டேன்; இதுவும்கூட, நாளுக்கு நாள் சிந்தனைகள் எழுந்த உடனே மறந்தவைகளை நினைக்கப்பட்டபடியினால், பிழை யில்லாமல் செய்யப்பட்டது. இந்த உதாரணங்களிலிருந்து, மனித னானவன் அவனுடைய எல்லா ஞாபகத்தையும் தன்னுடன் கொண்டு போகிறானென்றும், உலகத்தில் எவ்வளவு மறைத்து வைத்தபோதி லும், இறந்த பிறகு வெளிப்படையாகாதது ஒன்றுமில்லை என்றும், இது அநேகர் முன்னிலையில் நடக்கிறதென்றும், ஆண்டவரின் அடி யில்கண்ட வார்த்தைகளின்படி, விசதமாகிறது:—"வெளியாக்கப் படாத மறைபொருளுமில்லை, அறியப்படாத இரகசியமுமில்லை; ஆதலால் நீங்கள் இருளிலே பேசினது எதுவோ, அது வெளிச்

சத்திலே கேட்கப்படும்; நீங்கள் அறைகளில் காதிலே சொன்னது எதுவோ, அது வீடுகளின் மேல் கூறப்படும் (லூக். xii. 2:3).

**463.** இறந்த பிறகு, ஒரு மனிதனுக்கு அவன் செய்தவைகளை வெளிப்படுத்தும்போது, அந்த சோதனை செய்யகடமைப்பட்ட தேவர்கள், அவன் முகத்தை பார்த்து, ஒவ்வொரு கையின் விரல்களுடன் ஆரம்பித்து, இவ்விதமாக முழுமையும பார்த்து, முழு சரீரத்தையும் சோதனைபோடுகிறார்கள். நான் இதைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன்; அதனால், அதற்கு காரணம் எனக்கு விரித்து உரைக்கப்பட்டது. மனிதனுடைய சிந்தனையினுடையவும், சித்தத்தினுடையவும் ஒவ்வொரு விவரமும், மூளையின்பேரில் எழுதப்பட்டிருக்கிறது; ஏனென்றால், அவைகளின் ஆரம்பங்கள் அங்கேயிருக்கின்றன. அவைகள் முழு சரீரத்தின்பேரிலும்கூட எழுதப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், சிந்தனையினுடையவும் சித்தத்தினுடையவும் எல்லா பொருள்களும், அவைகளின் ஆரம்பங்களிலிருந்து அவ்விடத்திற்கு விசாலித்து, அங்கே தங்கள் இறுதிப் பொருள்களில்போல முடிகின்றன. அதனால்தான், சித்தத்திலிருந்தும் அதன் சிந்தனையிலிருந்தும், ஞாபகத்தின்பேரில் எழுதிவைக்கப்பட்ட எதுவும், மூளையின்பேரில் மட்டுமல்லாமல், முழு மனிதன் பேரிலும்கூட எழுதப்பட்டிருக்கிறது; மேலும், அங்கே சரீரத்தின் பாகங்களின் ஒழுங்குக்குத் தக்கபடி ஒழுங்கில் இருக்கிறது. இவ்விதமாக, முழு மனிதனும் அவன் தன்னுடைய சித்தத்திலும் சிந்தனையிலுமிருக்கிறதுபோல இருக்கிறானென்று தெளிவாக்கப்பட்டது; அதனால், ஒரு கெட்ட மனிதன் தன்னுடைய சொந்ததீமையிலும், நல்ல மனிதன் தன்னுடைய சொந்த நன்மையிலும் இருக்கிறான். இவைகளில் எல்லாமிருந்துங்கூட, வேதத்தில் மனிதனுடைய வாழ்வின் புஸ்தகம் என்பதனால், என்ன அருத்தம் கொள்ளப்படுகிறது என்பது, அதாவது அவனுடைய எல்லா செய்கைகளும், அவனுடைய எல்லா சிந்தனைகளும், முழு மனிதன்பேரிலும் எழுதப்பட்டு, ஞாபகத்திலிருந்து நினைத்தபோது, அவைகள் ஒரு புத்தகத்திலிருந்து படிக்கப்பட்டதுபோலவும், ஆவியானது சுவர்க்கத்து வெளிச்சத்தில் பார்க்கப்படுகிறபோது, பார்வைக்குக் காண்பிக்கப்பட்டதுபோலவும், தோன்றுகின்றன என்பது விசதமாகலாம். பொதுவாக விஷயங்கள் மட்டுமல்லாமல், ஞாபகத்தில் பிரவேசிக்கும் மிகவும் நுண்ணிய விவரங்களும் நிலைக்கிறதென்றும், எப்பொழுதும் அழிக்கப்படுகிறதில்லையென்றும் எனக்கு உறுதி சொல்லப்பட்ட, இறந்த பிறகு

மனிதனுடைய ஞாபகத்தைக் குறித்து, ஞாபகப்படத்தக்க சில வற்றை நான் இவைகளுடன் சேர்க்கிறேன். உலகத்தில் இருப்பது போல, எழுத்துகளையுடைய புத்தகங்களை நான் பார்த்திருக்கிறேன். மேலும், அவைகள் எழுதினவர்களின் ஞாபகத்திலிருந்து எடுக்கப்பட்டதாகவும், உலகத்திலிருக்கும்போது அதே மனிதனால் எழுதப்பட்ட புத்தகத்தில் இருந்த ஒரு வார்த்தைகூட அங்கே இல்லாமல் போகவில்லை என்று எனக்கு சொல்லப்பட்டது. இவ்விதமாக, மிகவும் நுட்பமான விஷயங்களும், உலகத்திலிருக்கும் போது, மனிதன் மறந்துபோனவைகளும்கூட, அவனுடைய ஞாபகத்திலிருந்து கொண்டுவரப்படலாம். இதற்கு காரணம் எனக்கு விவரப்படுத்தப்பட்டது. மனிதனுக்கு புறம்பான ஞாபகமும், உள்ளான ஞாபகமுமிருக்கிறது; அவனுடைய ஸ்தூல மனிதனுக்கு சேர்ந்த ஒரு புறம்பான ஞாபகமும், அவனுடைய சூக்கும மனிதனுக்கு சேர்ந்த ஒரு உள்ளான ஞாபகமும், இருக்கிறது. மனிதனானவன் நினைத்து, இச்சித்துபேசி, செய்து, அல்லது கேட்டும் அல்லது பார்த்ததுமான ஒவ்வொன்றும், அவனுடைய உள்ளான அல்லது சூக்கும ஞாபகத்தின்பேரில் எழுதப்பட்டிருக்கிறது; ஆனால், அங்கேயிருப்பது எதுவும், எப்பொழுதும் துடைத்து தள்ளப்படுகிறதில்லை; ஏனென்றால், மேல்கூறியபடி, அது ஆவியின் பேரிலேயும், சரீரத்தின் அவயவங்கள் பேரிலும் அதேகாலத்தில் எழுதப்பட்டிருக்கிறது; இவ்விதமாக, சித்தத்தின் செயல்களுக்கும் சிந்தனைகளுக்கும் தக்கபடி ஆவியானது உருவாக்கப்படுகிறது. இந்த விஷயங்கள் எல்லாம் அசத்தியாபாசங்களைப்போல் தோன்றுகிறதென்றும், அதனால் அரிதாய் நம்பப்படுகிறதென்றும், அப்படியிருந்தாலும் அவைகள் உண்மைகளென்றும் எனக்கு தெரியும். ஆகையினால், எந்த மனிதனையும், தனக்குள்ளேயே நினைத்து இரகசியமாய் செய்தது, இறந்த பிறகும் இரகசியமாய் இருக்குமென்று நம்பவிடக்கூடாது; ஆனால், ஒவ்வொரு தனித்த விஷயமும், பட்டப்பகலில்போல் வெளிப்படையாயிருக்கிறதென்று அவனுக்கு தெரிந்திருக்கட்டும்.

**464.** புறம்பான அல்லது ஸ்தூலமான ஞாபகம் இறந்த பிறகு மனிதனிலிருக்கிறபோதிலும், அதிலிருக்கும் ஸ்தூலபொருள்கள் மாத்திரம் இதர வாழ்வில் தோற்றுவிக்கப்படாமல், ஸ்தூலப் பொருள்களுக்கு அன்னுவயங்களால் சேர்க்கப்பட்டிருக்கிற சூக்கும பொருள்கள், மறுபடியும் அப்படி தோற்றுவிக்கப்படுகின்றன.

அப்படியிருந்தாலும், இந்த சூக்குமபொருள்கள் பார்வைக்கு காண்பிக்கப்படும்போது, ஸ்தூல உலகத்திலிருப்பதைப்போல் சரியாய் ஒரு உருவத்தில் தோன்றுகின்றன. ஏனென்றால், சுவர்க்கங்களில் பார்க்கப்படும் எல்லா பொருள்களும், அவைகளின் சத்தில், சுவர்க்கத்தில் காணப்படும் அறிகுறிகளைப்பற்றியும், தோற்றங்களைப்பற்றியும் கூறும் அத்தியாயத்தில் (நெ. 170 முதல் 176) மேலே காண்பித்தபடி, அவைகள் ஸ்தூலமாயில்லாமல் சூக்குமமாயிருந்தபோதிலும், உலகத்தில்போல ஒரேமாதிரி தோன்றுகின்றன, புறம்பான அல்லது ஸ்தூலமான ஞாபகம் ஜடமானதிலிருந்தும். கால இடவரையிலிருந்தும், பிரகுருதிக்கு சேர்ந்த இதர மற்ற பொருள்களிலிருந்தும் உற்பத்தியான, அதிலிருக்கும் பொருள்கள் சம்பந்தப்பட்டவரையில் மனிதனுக்கு உலகத்திலிருக்கும்போது உதவியாயிருந்த அதே உபயோகத்திற்கு, ஆவிக்கு உதவுகிறதில்லை; ஏனென்றால், உலகத்திலிருக்கும்போது மனிதன், உள்ளான அல்லது அறிவுசம்பந்தமான ஐம்புலனுக்கடுத்தவைகளிலிருந்தல்லாமல், புறம்பான ஐம்புலனுக்கடுத்தவைகளிலிருந்து நினைத்தபோது, சூக்குமமாயல்லாமல் ஸ்தூலமாய் நினைத்தான்; ஆனால், மறுமையில், ஆவியானது சூக்கும உலகத்திலிருக்கும்போது, அது ஸ்தூலமாயல்லாமல் சூக்குமமாய் நினைக்கிறது. சூக்குமமாய் நினைத்தல் புத்தி சம்பந்தமாயும், விவேகத்தோடு இசைந்தும் நினைத்தலாயிருக்கிறது. அதனால்தான், புறம்பான அல்லது ஸ்தூல ஞாபகம், ஜடசம்பந்தமான பொருள்கள் விஷயத்தில், அக்காலத்தில் அமைவாய் இருக்கிறது; மேலும், அதனால்தான் ஜடபதார்த்தங்கள் மூலமாய் உலகத்திலிருக்கும்போது மனிதன் உட்கொண்டு, பகுத்தறிவுள்ளவனாக செய்த உபயோகங்களுக்குள் அவைகள் மாத்திரம் வருகின்றன. புறம்பான ஞாபகம், ஜடமாயிருக்கிறபொருள்கள் விஷயத்தில் அமைவாய் இருக்கிறது; ஏனென்றால், அவைகளை மறுபடியும் தோற்றுவிக்கப்பட முடியாது; ஏனென்றால், ஆவிகளும் தேவர்களும், தங்களுடைய ஆசைகளிலிருந்தும், அவைகளின் மனதுக்கு சேர்ந்த அதிலிருந்து வரும் சிந்தனைகளிலிருந்தும் பேசுகின்றன. இந்த காரணத்துக்காக, அவைகளுடன் சரிப்படாத விஷயங்களை, சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் பேச்சைப் பற்றியும், மனிதனுடன் அவைகள் பேசும் பேச்சைப்பற்றியும், சொல்லப்பட்டதிலிருந்து (நெ. 234 முதல் 257 வரையில்) விசதமாகிறதுபோல, அவைகளுக்கு உச்சரிக்க முடியாது. அதனால்

தான் இறந்த பிறகு மனிதனானவன், உலகத்தில் பாஷையிலும் சாஸ்திரத்திலும் கெட்டித்தனமாயிருந்த அளவு அல்லாமல், இவைகளின் மூலமாய் அவன் பகுத்தறிவுள்ளவனாகிய அளவு, விவேகத்தோடு இசைந்திருக்கிறான். ஹீப்ரூ, கிரீக், லத்தின் போன்ற பூர்விக பாஷைகள் அவர்களுக்கு தெரிந்திருந்தும், அந்தப் பாஷைகளில் எழுதப்பட்டிருக்கிறவைகளினால், தங்கள் பகுத்தறியும் மனோசக்தியை பண்படுத்தாதபடியினால், கற்றோர்களென்று உலகத்தில் நம்பப்பட்ட அநேகருடன் நான் பேசியிருக்கிறேன். அவர்களில் சிலர், அந்த பாஷைகளைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்களைப்போல் அவ்வளவு பேதைமையானவர்களா யிருந்தார்கள்; மேலும் சிலர் மடையர்களாகவுங்கூட இருந்தார்கள்; அப்படியிருந்தாலும், தாங்கள் மற்றவர்களைவிட புத்திசாலிகளாய் இருந்ததுபோல, அவர்களிடத்தில் ஒரு அகங்காரம் இருந்தது. மனிதனானவன், தன்னுடைய ஞாபகத்தின் விசாலத்துக்கு தக்கபடி, புத்தியுள்ளவனா யிருக்கிறானென்று உலகத்தில் நம்பி, அதனால் அநேக விஷயங்களை தங்கள் ஞாபகத்தில் துறுத்தினவர்கள் சிலருடன் நான் பேசியிருக்கிறேன். அவர்கள்கூட ஏறக்குறைய அதிலிருந்து மாத்திரம் பேசினார்கள்; இவ்விதமாக, தங்களிடமிருந்தல்லாமல், மற்றவர்களிடமிருந்து பேசினார்கள்; மேலும், அவர்கள் தங்கள் ஞாபகத்திலிருக்கும் விஷயங்கள் மூலமாய் யாதொரு பகுத்தறிவுடைமையையும் அடையவில்லை. அவர்களில் சிலர் மடையர்களாயிருந்தார்கள்; மற்றவர்கள், ஒரு உண்மையானது உண்மையா இல்லையா என்று கிரகிக்க சக்தியில்லாமல், கற்றோர் என்று தாங்களே சொல்லிக்கொண்டவர்களால், உண்மைகளாக விடப்பட்ட எல்லா பொய்களையும் பிடித்துக்கொண்டு, மூடத்தனமாயிருந்தார்கள். ஏனென்றால், தாங்களே அது உண்மையா பொய்யா என்று எதையும் அறிந்துகொள்ள சக்தியற்றவர்களா யிருந்தார்கள்; அதனால், அவர்கள் மற்றவர்கள் பேசுவதை உற்று கேழ்க்கும்போது, எதையும் விவேகத்துடன் இசைந்து அறிந்துகொள்ள சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள். எல்லாவித பூத சாஸ்திர விஷயங்களைக் குறித்து, உலகத்திலிருக்கும்போது அதிக நூற்கள் எழுதி, அதனால் கல்வி விஷயத்தில் உலக பிரசித்தி அடைந்த சிலருடன்கூட நான் பேசியிருக்கிறேன். நிஜமாகவே, அவர்களில் சிலர், உண்மையாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், உண்மைகளைப்பற்றி பேச சக்தியுள்ளவர்களா யிருந்தார்கள்; மற்றவர்கள் உண்மையின் வெளிச்

சத்திலிருந்தவர்கள் பக்கம் திரும்பியபோது, அவைகள் உண்மை என்று அறிந்துகொண்டார்கள்; என்றாலும், அவைகளை அறிந்து கொள்ள இஷ்டமில்லாமல், தங்கள் சொந்த பொய்களிலேயே, இவ் விதமாக, தங்களிலேயே தாங்கள் இருந்தபோது, அவைகளை மறு படியும் மறுதளித்தார்கள். சிலருக்கு கல்வியில்லாதவர்களைவிட அதிக ஞான மில்லாமலிருந்தது. இவ்விதமாக, தான் எழுதிய அல் லது அடுக்கி வைத்த அறிவுகள் மூலமாய், தன்னுடைய பகுத்தறியும் மனோ சக்தியை தான் பயின்றதற்கு தக்கபடி, ஒவ்வொருவனும் மற் றவனிடமிருந்து வித்தியாசப்பட்டார்கள். ஆனால், திருச்சபையின் உண்மைகளுக்கு எதிரிடையாயிருந்து, அறிவிலிருந்து மாத்திரம் நினைத்து, அதனால், தாங்களே பொய்களில் ஸ்திரப்பட்டவர்கள், தங்களுடைய பகுத்தறியும் சக்தியை விர்த்தி செய்யாமல் உலகத் தில் பகுத்தறிவுடைமை என்று நம்பப்படுகிற விசாரணை செய்யும் சக்தியை மாத்திரம் பயின்றார்கள். ஆனால், இந்த சக்தியானது பகுத்தறிவுடைமைக்கு முழுமையும் வித்தியாசமாயிருக்கிறது; தனக்கு பிரியமான எதையும் நிரூபிக்கவும், முன்னமே தீர்மானித்த கொள்கைகளிலிருந்தும் ஆபாசங்களிலிருந்தும், உண்மைகளை அல் லாமல் பொய்களை பார்க்கவும், கூடிய ஒரு சக்தியாயிருக்கிறது. இவ்விதமான ஜனங்களை, உண்மைகளை ஒத்துக்கொள்ள செய்தல் எப்பொழுதும் முடியாது; ஏனென்றால், பொய்களிலிருந்து உண் மைகள் பார்க்கப்படமுடியாது, ஆனால் உண்மைகளிலிருந்து பொய் கள் பார்க்கப்படலாம்.

மனிதனுடைய பகுத்தறியும் சக்தி, ஒரு தோட்டத்தைப் போலும், பூந் தோட்டம் போலும், அல்லது ஒரு கரம்பான வயல்போலும் இருக்கிறது; ஞாபகம் என்பது பூமியாயும் சாஸ்திர உண்மைகளும் அறிவுகளும் விதைகளாயிருக்கின்றன. சுவர்க்கத்து வெளிச்சமும் சூடும் அவைகளை வளரச் செய்கின்றன; இவைகள் இல்லாமல், எந்த உற்பேதமுமில்லை. தெய்வீக உண்மையாயிருக்கிற சுவர்க்கத்து வெளிச்சமும் தெய்வீக அன்பாயிருக்கிற சுவர்க்கத்து சூடும் சேர்க்கப்பட்டால் ஒழிய, மனது விஷயத்திலும் அதே மாதிரி தான்; இவைகளில் மாத்திரம் இருந்து பகுத்தறிவுடைமை உண் டாகிறது. கற்றோர்களில் அவ்வளவு அநேகர், சுவர்க்கத்தின் வெளிச்சமாயிருக்கிற உண்மையின் வெளிச்சத்திலிருந்து உண்மை என்பதைப்பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ளாதபடிக்கு, எல்லா வற்றையும் பிரகுருதிக்கு ஆரோபித்து, இவ்விதமாக, தங்களுடைய

)சொந்த மனங்களின் உள்ளானவைகளை தாங்களே மூடிக்கொண் டார்களென்று, தேவர்கள் மிகவும் விசனப்படுகிறார்கள். ஆகை யினால், மறுமையில், தங்கள் தர்க்கங்களால், பேதைமையான நல்ல வர்கள் மத்தியில், பொய்களை பரப்பி, இவ்விதமாக அவர்களை தீமைகளுக்கு உட்படுத்தாதபடிக்கு, குதர்க்கம் செய்யும் சக்தி அவர்களுக்கில்லாமல் செய்யப்படுகிறது.

**465.** ஒரு ஆவியானது, சரீர வாழ்வில் தனக்கு தெரிந்திருந்த அநேக விஷயங்களை ஞாபகப்படுத்த முடியாதபடியினால், கோபம் கொண்டது; மேலும், அது தான் அவ்வளவு பெரியதாய் அனுப வித்த ஒரு சந்தோஷத்தை இழந்ததற்காகவும் விசனப்பட்டது; ஆனால், தான் எதையும் இழக்கவில்லை யென்றும், அதற்கு அப் பொழுதுகூட எல்லா விஷயமும் தெரியு மென்றும், ஆனால் அப் பொழுது அது இருந்த உலகத்தில் அவ்வித விஷயங்களை ஞாபகத் தில் கொண்டுவர விடப்படா தென்றும், தான் செய்ய வழக்கப்பட் டிருப்பதுபோல தன்னுடைய பகுத்தறியும் சக்தியை தான் இப் பொழுது வந்திருக்கும் உலகத்திற்கு எந்த உபயோகமும்படாத பருத்ததும், தெளிவற்றதும், சடமானதும், தேக முள்ளதுமான பொருள்களில், தன்னுடைய பகுத்தறியும் சக்தியை தான் முன் செய்ததுபோல் அமிழ்த்தாமல், தான் இப்பொழுது அதிக நன்று யும் அதிக சம்பூரணமாயும் நினைத்து பேசக்கூடுமென்பது போது மானதென்றும், தான் இப்பொழுது, சதாகால வாழ்வின் உபயோ கங்களை அதிகப்படுத்த ஒவ்வொன்றையும் உடைத்தாயிருக்கிறதென் றும், இந்த வழியில்தான், அது ஆசீர்வதிக்கப்பட்டு சுகமடையுமென் றும், ஆகையினால், மனது புறம்பான மனிதனுடைய அல்லது சரீரத் தின் ஐம்புல விஷயங்களிலிருந்து இழுக்கப்படுகிறதற்கு தக்கபடி, அது, சூக்குமமானதும் சுவர்க்கத்துக்கு அடுத்ததுமானவைகளுக்கு உயர்த்தப்படுகிற தென்பது உண்மையாயிருக்கையில், இந்த இராச் சியத்தில், விவேகமானது, ஞாபகத்திலுள்ள சடப்பொருள்கள் நீக் கப்படுவதினாலும், அமைவு அடைவதினாலும் அழிந்துபோகிற தென்று நம்புதல், மூடத்தனத்தின் கூறுயிருக்கிற தென்றும் அதற்கு சொல்லப்பட்டது.

**466.** அந்த இரண்டு ஞாபகங்களின் குணமானது, மறுமை யில் அங்கேமட்டும் பார்க்கப்படுகிற உருவங்களால் சிலவேளைகளில் பார்வைக்கு காண்பிக்கப்படுகிறது; ஏனென்றால் மனிதர்கள் விஷ யத்தில், அபிப்பிராயங்களில் மாத்திரம் விழுகிற பார்வைக்கு

அநேக பொருள்கள் அங்கே காட்டப்படுகின்றன. புறம்பான ஞாபகம் கடினப்படுத்திய சருமத்தைப்போலவும், உள்ளான ஞாபகம் மானிட மூளையிலிருப்பதுபோல, மச்சைமயமான பொருளைப்போலவும் தோன்றுகின்றன; இதிலிருந்து, அவைகளின் குணத்தை தெரிந்துகொள்ள அனுமதி கொடுக்கப்படுகிறது. சரீரத்தில் வாழும்போது ஞாபகத்தை மாத்திரம் விர்த்திசெய்து, இவ்விதமாக தங்கள் பகுத்தறியும் சக்தியை விர்த்தி செய்யாதவர்கள் விஷயத்தில், அந்த உரப்பு கடினமாகவும், தசைநார்கள் விஷயத்தில் போல உள்ளே நிறப்பட்டும், தோன்றுகிறது. ஞாபகத்தை பொய்களினால் நிரப்பினவர்கள் விஷயத்தில், அதிலிருக்கும் பொருள்களின் ஒழுங்கீனமான குவியின் பொருட்டு, மயிருள்ளதாகவும் கரடுமுரடானதாகவும் அது தோன்றுகிறது. சுயஅன்பிற்கும், உலக ஆசையின் பொருட்டும் ஞாபகத்தை பண்படுத்தினவர்கள் விஷயத்தில். அது ஒட்டப்பட்டு எலும்பாக்கப்பட்டதுபோல் தோன்றுகிறது, சாஸ்திரங்கள் மூலமாய், முக்கியமாய் தத்துவ சாஸ்திர மூலமாய் பரம இரகசியங்களுக்குள் பிரவேசிக்க ஆவலுள்ளவர்கள் விஷயத்திலும், அவ்வித விஷயங்களால், வசப்படுத்தப்படுகிற வரையில் நம்பாதவர்கள் விஷயத்திலும், ஞாபகம் இருளாக தோன்றுகிறது; மேலும், அது வெளிச்சத்தின் கிரணங்களை உரிஞ்சி, இருளாக திருப்பும்படியான சுபாவமுடையதாயிருந்தது. வினையமுள்ளவர்களாகவும் ஒப்பாகாரமானவர்களாகவும் இருந்தவர்கள் விஷயத்தில், எலும்புள்ளதாகவும், வெளிச்சத்தின் கிரணங்களை பிரதி விம்பிக்கச் செய்கிற கருங்காலிபோல் கடினமாகவும், அது தோன்றுகிறது; ஆனால், அன்பின் நன்மையிலும் விசுவாசத்தின் உண்மையிலும் இருந்தவர்கள் விஷயத்தில், அவ்வித கடினம் ஒன்றும் தோன்றுகிறதில்லை; ஏனென்றால், அவர்களுடைய உள்ளான ஞாபகம் வெளிச்சத்தின் கிரணங்களை புறம்பானதில் கொண்டுபோகிறது; மேலும் அதன் கருத்துகளில் அல்லது அபிப்பிராயங்களில் அவைகளின் அஸ்திவாரத்தில் அல்லது அவைகளில் பூமியில்போல கிரணங்கள் முடிந்து இன்பமான கொள்கலங்களை அங்கே காண்கின்றன; ஏனென்றால், புறம்பான ஞாபகம் என்பது, நன்மைகளும் உண்மைகளும் அங்கே யிருக்கையில், சூக்குமமானதும் சுவர்க்கத்துக்கு அடுத்ததுமான பொருள்கள் முடிந்து வசிக்கிற ஒழுங்கின் இறுதியாயிருக்கிறது.

**467.** ஆண்டவரிடத்து அன்பிலும், அயலானிடத்து தருமத்திலும், உலகத்திலிருந்தபோது இருந்தவர்கள் தங்களோடும், தங்களிடத்தும், தேவதா விவேகமும், ஞானமும் உடைத்தாயிருக்கிறார்கள்; ஆனால், அவைகள், அவர்களின் உள்ளான ஞாபகத்தின் மிகவும் உள்ளான பக்கங்களில் அப்பொழுது சேகரிக்கப்படுகின்றன; அவர்கள் சரீர சம்பந்தமான பொருள்களை நீக்குகிற வரையில், இந்த விவேகத்தையும் ஞானத்தையும் அவர்களால் பார்க்கமுடியாது. பிறகு, ஸ்தூல ஞாபகம் தூக்கத்தில் விடப்படுகிறது; அவர்கள் தங்களுடைய அந்தரங்க ஞாபகத்திலும், பிறகு படிப்படியாய் தேவதா ஞாபகத்திலுமே விழித்துக்கொள்ளுகிறார்கள்.

**468.** பகுத்தறிவுடைமை எப்படி பண்படுத்தப்பட வேண்டுமென்பது, சில வார்த்தைகளில் இப்பொழுது காண்பிக்கப்படலாம். உண்மையான பகுத்தறிவுடைமை, பொய்களால் அல்லாமல் உண்மைகளால் அமைக்கப்பட்டிருக்கிறது; ஏனென்றால், பொய்களில் அமைந்திருப்பது பகுத்தறிவுடைமையல்ல. உண்மைகள், தேசாசாரமானதென்றும், சன்மார்க்கமானதென்றும், ஞானசம்பந்தமானதென்றும் மும்மடங்கானதாயிருக்கிறது. தேசாசாரமான உண்மைகள் இராச்சியங்களில் தீர்ப்பினுடையவும், அரசாங்கத்தினுடையவும் விஷயங்களுக்கு சம்பந்தப்பட்டிருக்கின்றன; பொதுவாக, நியாயத்துக்கும் நேர்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. சன்மார்க்க சம்பந்தமான உண்மைகள் தோழமை விஷயத்திலும், கூட்டுறவுகள் விஷயத்திலும், ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கைக்கு சேர்ந்தவைகளுக்கு சம்பந்தப்பட்டிருக்கின்றன; பொதுவாக, உண்மையானதற்கும் சரியானதற்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; சிறப்பாக, எல்லாவித அறங்களுக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஆனால், ஞானசம்பந்தமான உண்மைகள் சுவர்க்கத்தினுடையவும் திருச்சபையினுடையவும் விஷயங்களுக்கு சம்பந்தப்பட்டிருக்கின்றன; பொதுவாக, அன்பின் நன்மைக்கும், விசுவாசத்தின் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு மனிதனிலும் வாழ்க்கையின் மூன்று பிரமாணங்கள் இருக்கின்றன (மேலே செ. 267 பார்க்கவும்.) பகுத்தறிவுடைமை முதல் பிரமாணத்துக்கு தேசாசாரமான உண்மைகளாலும், இரண்டாவது பிரமாணத்துக்கு, சன்மார்க்க சம்பந்தமான உண்மைகளாலும், மூன்றாவது பிரமாணத்துக்கு ஞானசம்பந்தமான உண்மைகளாலும் திறக்கப்படுகிறது. ஆனால், பகுத்தறிவுடைமை, அந்த உண்மைகளை

[illegible] அறிந்துகொள்வதினால் அல்லாமல், அவைகளின்படி [illegible]ழ்தலினால், உருவாக்கப்பட்டு திறக்கப்படுகிறது என்று தெரிந்[illegible]ருக்கப்படவேண்டும்; அவைகளின்படி வாழ்தலென்பதினால், ஞானசம்பந்தமான ஆசையிலிருந்து அவைகளை இச்சித்தல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. ஞானசம்பந்தமான ஆசையிலிருந்து உண்மைகளை நேசித்தலென்பது, அது நியாயமாயும் நேர்மையாயும் இருக்கிறபடியினால், அப்படி நியாயமானதையும் நேர்மையானதையும் நேசித்தலாயும், உண்மையாயும் தெளிவுள்ளதாயு மிருப்பதினால், அப்படி உண்மையானதையும் தெளிவுள்ளதையும் நேசித்தலாயும், நல்லதாயும் உண்மையானதாயு மிருக்கிறபடியினால், அப்படி நல்லதையும் உண்மையானதையும் நேசித்தலாயு மிருக்கிறது. அவைகளின்படி வாழ்தல் என்பதும், சரீரசம்பந்தமான ஆசையிலிருந்து அவைகளை நேசித்தலென்பதும், தனக்காகவும், அதன் கீர்த்திக்காகவும் கனத்துக்காகவும் அல்லது லாபத்துக்காகவும் அவைகளை நேசித்தலா யிருக்கிறது. ஆகையினால், மனிதனானவன் இந்த உண்மைகளை சரீர சம்பந்தமான ஆசையிலிருந்து நேசிக்கிறவரையில், அவன் பகுத்தறிவுடையவனாகிறதில்லை; ஏனென்றால், அவன் உண்மையாய் அவைகளையல்லாமல் தன்னையே நேசிக்கிறான்; வேலைக்காரர்கள் தங்கள் எஜமானனுக்கு ஊழியம் செய்கிறதுபோல, உண்மைகள் அவனுக்கு ஊழியம் செய்யும்படி செய்யப்படுகின்றன. மேலும், உண்மைகள் வேலைக்காரர்களாகும்போது, அவைகள் மனிதனுக்குள் பிரவேசித்து, அவன் உயிரின் எந்த பிரமாணத்தையும், முதலாயிருப்பதையும் கூட திறக்கிறதில்லை; ஆனால், அவைகள் ஜடமான ஓர் உருவத்தில், அறிவுகளாக மாத்திரம் ஞாபகத்தில் வசித்து, சரீர அன்பாயிருக்கிற தன்னையே நேசித்தலோடு, அங்கே தாங்களை சேர்ந்துக்கொள்ளுகின்றன. மனிதனானவன் பகுத்தறிவுடையவனாகும் விதம் இப்பொழுது விசதமாகிறது:—அதாவது, சுவர்க்கத்துக்கும் திருச்சபைக்கும் சேர்ந்த நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் ஞானசம்பந்தமான அன்பினால், அவன் மூன்றாவது பிரமாணத்துக்கும்,உண்மையானதையும் சரியானதையும் நேசிப்பதினால், இரண்டாவது பிரமாணத்துக்கும், நியாயமானதையும் நேர்மையானதையும் நேசிப்பதினால், முதல் பிரமாணத்துக்கும் பகுத்தறிவுள்ளவனாகிறானென்பதுவிசதமாகிறது. பின்கூறிய இரண்டு அன்புகளும் [illegible]க்கும் உண்மையினிடத்தும் கொள்ளும் ஞான

சம்மந்தமான அன்பிலிருந்து ஞான சம்பந்தமானதாய்விடுகிறது. ஏனென்றால், இது அவைகளுக்குள் பாய்ந்து அவைகளுடன் தானே கலந்துகொண்டு, அவைகளிலேயே தன்னுடைய சொந்த சாயலைப்போலவே உருவாக்குகின்றன.

**469.** ஆவிகளும் தேவர்களும், மனிதர்களைப்போலவே ஞாபகத்தை உடைத்தாயிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் கேட்கிறதும், பார்க்கிறதும், நினைக்கிறதும், இச்சிக்கிறதும் செய்கிறதுமாகிய எதுவும் அவர்களிடத்திலேயே நிற்கிறது; அதனால் அவர்களுடைய பகுத்தறியும் சக்தி சதாகாலம் வரையில் தொடர்ச்சியாய் சீர்படுத்தப்படுகிறது. அதனால்தான், ஆவிகளும் தேவர்களும் மனிதர்களைப்போல், உண்மையினுடையவும் நன்மையினுடையவும் அறிவுகளால், விவேகத்திலும் ஞானத்திலும் விர்த்தியாகின்றன. ஆவிகளுக்கும் தேவர்களுக்கும் ஞாபகம் இருக்கிறது என்பது, அதிக அநுபவத்திலிருந்து தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது. ஏனென்றால், இதர ஆவிகளுடன் அவர்கள் இருந்த காலத்தில், பகிரங்கமாயும் இரகசியமாயும் அவர்கள் நினைத்து செய்த எல்லா விஷயங்களும், அவர்கள் ஞாபகத்திலிருந்து நினைத்து பார்க்கப்பட்டன;மேலும் சுத்த நன்மையிலிருந்து எந்த உண்மையிலாவது இருந்தவர்கள், அறிவுகளாலும், அவைகளின் மூலமாய் விவேகத்தினாலும் புகட்டப்பட்டு, பின்னிட்டு சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப்படுவதைகூட நான் பார்த்திருக்கிறேன். ஆனால், அவர்கள், தாங்கள் உலகத்திலிருந்தபோது இருந்த நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் ஆசையின் பிரமாணத்துக்கு மிஞ்சி அறிவுகளாலும், அவைகளின் மூலமாய் விவேகத்தினாலும் புகட்டப்பட்டிருக்கவில்லை என்று தெரிந்திருக்கப்படவேண்டும்; ஏனென்றால் ஒவ்வொரு ஆவியினுடையவும் தேவனுடையவும், ஆசையானது, உலகத்தில்அது இருந்ததுபோல,எல்லா விஷயத்திலுமிருக்கிறது; மேலும், இது பின்னிட்டு சதாகாலம்வரையில் மிகவும் நிறைந்ததாக செய்யப்படுவதினால் சம்பூரணமாக்கப்படுகிறது. சதாகாலம் வரையில் அதிகம் நிறைந்ததாக செய்யப்படக்கூடாத யாதொன்றும் இல்லை; ஏனென்றால், ஒவ்வொரு பொருளும் முடிவற்று விகர்ப்பிக்கப்பட்டு, இவ்விதமாக பலபொருள்களால் செழிப்பிக்கப்பட்டு, பெருக்கப்பட்டு, கனிகொடுக்க செய்யப்படலாம்; எந்த நல்ல பொருளுக்கும், அது முடிவற்ற பொருளிலிருந்து வருவதினால், முடிவு இல்லை. ஆவிகளும் தேவர்களும், உண்மையினுடையவும்

நன்மையினுடையவும் அறிவுகளால் தொடர்ச்சியாய் அதிக சம்பூரணமாகிறார்கள் என்பது, சுவர்க்கத்து தேவர்களின் ஞானத்தைக் குறித்த அத்தியாயங்களிலும்(செ. 265 முதல் 275வரையில்), திருச்சபைக்கு வெளியே உள்ள தேசத்தார்கள் அல்லது ஜனங்களுக்கு சேர்ந்த சுவர்க்கத்தில் உள்ளவர்களைப்பற்றி, (செ. 318 முதல் 328 வரையிலும்), சுவர்க்கத்திலிருக்கும் சிறு குழந்தைகளைப் பற்றி (செ. 329 முதல் 345 வரையிலும்), இதுவும் உலகத்திலிருக்கும்போது அவர்கள் இருந்த நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் ஆசையின் பிரமாணத்துக்கு விசாலிக்கிறதல்லாமல் அதற்குமேல் இல்லை என்பது (செ. 349 லும், பார்க்கப்படலாம்.)

# XLIX

## இறந்த பிறகு மனிதன், உலகத்தில் அவன் வாழ்க்கை இருந்ததுபோல இருக்கிறான்

**470.** ஒவ்வொருவனுடைய உயிரும், இறந்த பிறகு அவனுடன் நிற்கிறது என்பது, ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும், வேதத்திலிருந்து தெரிந்திருக்கிறது; ஏனென்றால், மனிதனானவன் தன்னுடைய செய்கைகளுக்கும் தொழில்களுக்கும் தக்கபடி, நீதி தீர்க்கப்பட்டு, பரிசு கொடுக்கப்படுகிறானென்று, அநேக வாக்கியங்களில் அங்கே சொல்லப்பட்டிருக்கிறது; மேலும், நன்மையிலிருந்தும், சத்துவமான உண்மையிலிருந்தும் நினைக்கிற ஒவ்வொருவனும், நன்றாய் வாழ்ந்தவன் சுவர்க்கத்துக்கு வருகிறான் என்பதையும், துடுக்காய் வாழ்ந்தவன் நரகத்திற்கு வருகிறானென்பதையும்விட, வேறு விதமாய் அறிந்துகொள்ளுகிறதில்லை. என்றாலும், தீமையிலிருக்கப்பட்டவன், இறந்த பிறகு தன்னுடைய நிலைமை உலகத்திலிருந்த போது, தான் நடத்திய வாழ்க்கைக்கு தக்கபடி இருக்கிறதென்று நம்ப மனமில்லாதவனா யிருக்கிறான்; ஏனென்றால், அவன் அதற்கு பதிலாக, முக்கியமாய் தான் நோய்கொண்டபோது, ஒருவனுடைய வாழ்க்கை எதாயிருந்திருந்தபோதிலும், சுவர்க்கம் ஒவ்வொருவனுக்கும் மாசற்ற இரக்கத்திலிருந்து கொடுக்கப்படுகிறது என்றும், தான் வாழ்க்கையிலிருந்து பிரிக்கிற தன்னுடைய விசுவாசத்துக்கு தக்கபடி, இது செய்யப்படுகிறதென்றும் நினைக்கிறான்.

**471.** மனிதனானவன் தன்னுடைய செய்கைகளுக்கும் தொழில்களுக்கும் தக்கபடி, நீதி தீர்க்கப்பட்டு பரிசு கொடுக்கப்படுகிறானென்பது, வேதத்தின் அநேக வாக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கிறது; அவைகளில் சிலது இங்கே எடுத்துரைக்கிறேன்:—

"மனுஷ குமாரன் தம்முடைய பிதாவின் மகிமை பொருந்தினவராய்த் தம்முடைய தூதரோடுங்கூட வருவார்; அப்பொழுது அவனவன் கிரியைக்கு தக்கதாக அவனவனுக்கு பலனளிப்பர் (மத்தே. xvi. 27). "கர்த்தருக்குள் மரிக்கிறவர்கள் இது முதல் பாக்கியவான்கள்......அவர்கள் தங்கள் பிரயாசங்களை விட்டொழிந்து இளைப்பாறுவார்கள்; அவர்களுடைய கிரியைகள் அவர்களோடே கூடப்போம்" (வெளி. xiv. 13). "உங்களில் ஒவ்வொரு

வனுக்கும் உங்கள் கிரியைகளின்படியே பலனளிப்பேன்" (வெளி. ii. 23). "மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் தேவனுக்கு முன்பாக நிற்கக் கண்டேன்; அப்பொழுது புஸ்தகங்கள் திறக்கப்பட்டன;......அப்பொழுது அந்த புஸ்தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே மரித்தோர் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்கதாக நியாய தீர்ப்படைந்தார்கள். சமுத்திரம் தன்னிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தது; மரணமும் பாதாளமும் தங்களிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தன. யாவரும் தங்கள் தங்கள் கிரியைகளின் படியே நியாயத் தீர்ப்படைந்தார்கள்" (வெளி. xx. 12, 13). "இதோ சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின் படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வருகிறது" (வெளி. xxii. 12). "நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் கேட்டு, இவைகளின்படி செய்கிறவன் எவனோ, அவனை புத்தியுள்ள மனுஷனுக்கு ஒப்பிடுவேன். நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் கேட்டு இவைகளின்படி செய்யாதிருக்கிறவன் எவனோ அவன் புத்தியில்லாத மனிதனுக்கு ஒப்பிடப்படுவான்" (மத்தே. vii. 24, 26). பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவனே பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பானேயல்லாமல், என்னை நோக்கி, "கர்த்தாவே! கர்த்தாவே! என்று சொல்லுகிறவன் அதில் பிரவேசிப்பதில்லை. அந்நாளில் அநேகர் என்னை நோக்கி: "கர்த்தாவே! கர்த்தாவே! உமது நாமத்தினாலே தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினாலே பிசாசுகளை துரத்தினோம் அல்லவா? உமது நாமத்தினாலே அநேக அற்புதங்களைச் செய்தோம் அல்லவா என்பார்கள். அப்பொழுது நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைக்காரரே, என்னைவிட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்குச் சொல்லுவேன்" (மத்தே. vii. 21-23). "அப்பொழுது நீங்கள்: உம்முடைய சமூகத்தில் போஜன பானம் பண்ணினோமே, நீர் எங்கள் வீதிகளில் போதகம் பண்ணினீரே என்று சொல்லுவீர்கள். ஆனாலும் அவர்: நீங்கள் எவ்விடத்தாரோ, உங்களை அறியேன் அக்கிரமக்காரராகிய நீங்களெல்லாரும் என்னை விட்டு அகன்று போங்கள் என்று சொல்லுவார்" (லூக். xiii. 26-27). "நான் அவர்களுக்கு அவர்கள் கிரியைகளுக்குத் தக்கதாகவும், அவர்கள் கைகளின் செய்கைகளுக்குத் தக்கதாகவும் பதில் அளிப்பேன்" (எரே. xxv. 14). "ஏகோவாவே! அவனவனுக்கு அவனவ

னுடைய வழிக்குத் தக்கதாகவும், அவனவனுடைய கிரியைகளின் பயனுக்குத் தக்கதாகவும்,அளிக்கும்படி உம்முடைய கண்கள் மனித னுடைய எல்லா வழிகள் பேரிலும் நோக்கமாயிருக்கின்றன" (ஏரே. xxxii. 19). "அவர்கள் வழிகளின்படி நான் அவர்களை விசாரித்து, அவர்கள் கிரியைகளின்படி அவர்களுக்குப் பலனளிப் பேன்" (ஓசி. iv. 9). "எங்கள் வழிகளின்படியேயும் எங்கள் கிரியை களின்படியேயும் கர்த்தர் எங்கள் விஷயத்தில் நடக்கிறார்" (சக. i. 6).

கடைசி தீர்ப்பைப்பற்றி முன்னறிவித்தபோது, ஆண்டவர், மத்தேயுவில் (xxv. 32-46) போலும், மனிதனுடைய மோக்ஷத் தைப்பற்றியும், தண்டனையைப்பற்றியும் சொல்லுகிற இதர அநேக வாக்கியங்களிலும் போலும், நல்ல காரியங்களை செய்தவர்கள் சதா கால வாழ்வில் பிரவேசிப்பார்கள் என்றும், கெட்ட காரியங்களைச் செய்தவர்கள் நரகாக்கினைத் தீர்ப்புக்கு உள்ளாவார்களென்றும் கற்பித்து, கிரியைகளைத் தவிர வேறு எதையும் சொல்லுகிறதில்லை. தொழில்களும் செயல்களும், மனிதனுடைய புறம்பான வாழ்க்கை என்றும், அவனுடைய உள்ளான வாழ்வின் குணம் அவைகளில் வெளிப்படையாகிறதென்றும் விசதமாகிறது.

**472**. ஆனால், செயல்கள் என்பதாலும் வேலைகள் என்பதா லும் வெளி உருவத்தில் அவைகள் தோன்றுவதுபோல் மாத்திர மல்லாமல், உள் உருவத்திலும் அவைகள் இருப்பதுபோலும்கூட அருத்தம் கொள்ளப்படுகிறது; ஏனென்றால், ஒவ்வொரு செயலும் ஒவ்வொரு வேலையும், மனிதனுடைய சித்தத்திலிருந்தும் சிந்தனையி லிருந்தும், புறப்படுகிறதென்று ஒவ்வொருவனுக்கும் தெரியும்; ஏனென்றால், அவ்விதமாக அவைகள் புறப்படாவிட்டால், தற் சலனியினுடையவும் பிரதிமையினுடையவும் அசைவுபோல, அது சலனமாக மாத்திரம் இருக்கும். ஆகையினால் ஒரு செயல் அல்லது வேலை என்பது, அதையே யோசிக்கும்கால், அது காரியத்தில் சித்த மாகவும் சிந்தனையாகவும், இவ்விதமாக வெளி உருவத்தில் சித்த மாகவும் சிந்தனையாகவும் இருக்கும்பொருட்டு, சித்தத்திலிருந்தும் சிந்தனையிலிருந்தும், அதன் ஆன்மாவையும் உயிரையும் அடைகிற ஒரு காரியமாக மாத்திரம் இருக்கிறது. ஆகவே, ஒரு செயலை அல்லது வேலையை உற்பத்தி செய்கிற சித்தமும், சிந்தனையும் எப்படி இருக்கின்றனவோ, அப்படியே, செயலும் வேலையும்கூட இருக்கிறது என்று ஏற்படுகிறது. சிந்தனையும் சித்தமும் நல்லதா

யிருந்தால், செயல்களும் வேலைகளும் நல்லவைகளாயிருக்கின்றன; ஆனால், சிந்தனையும் சித்தமும் தீமையானதாயிருந்தால், செயல்களும் வேலைகளும், வெளிக்கு அவைகள் ஒரே மாதிரி தோன்றின போதிலும், தீமையுள்ளவைகளா யிருக்கின்றன. ஒரு ஆயிரம் மனிதர்கள் ஒரே மாதிரி நடக்கலாம், அதாவது ஏறக்குறைய வகை யறக்கப்படாதபடி, வெளி உருவத்தில் ஒரேமாதிரியிருந்தும், ஒவ்வொன்றும், அதையே யோசிக்கும் பட்சத்தில், வேறு வேறான சித்தத்திலிருந்து வருகிறபடியினால், வேறு வேறானதாயிருக்கும்படி, ஒரேவிதமான செயல்களைச் செய்யலாம். உதாரணமாக, ஒரு தோழனோடு உண்மையாயும் நியாயமாயும் நடக்கும் விஷயத்தில், ஒருவன் தனக்காகவும் தன்னுடைய சொந்த கன்னியத்துக்காகவுமே, உண்மையாகவும் நியாயமாகவும் இருக்கிறதாக தோன்றும்பொருட்டு, உண்மையாகவும் நியாயமாகவும், மற்றொருவன், உலகத்திற்காகவும் லாபத்திற்காகவும், மூன்றாவது மனிதன் கைம்மாறுக்காகவும், வெகுமதிக்காகவும், நான்காவது மனிதன் சிநேகிதத்திற்காகவும், ஐந்தாவது மனிதன் சட்டத்தின் பயத்திற்காகவும், அல்லது பெயரும் தொழிலும் போய்விடுமென்கிறதற்காகவும், ஆறாவது மனிதன், கெட்டதாயிருந்த போதிலும் மற்றவனை தன் பக்கம் சேர்த்துக் கொள்வதற்காகவும், ஏழாவது மனிதன் மோசம் செய்வதற்காகவும், மற்றவர்கள் இதர நோக்கங்களிலிருந்தும், செயல்படலாம். இவர்கள் எல்லாருடைய செயல்களும், நல்லதாக தோன்றலாம்; ஏனென்றால், ஒரு தோழனோடு உண்மையாயும் நியாயமாயும் நடத்தல் நல்லதுதான்: அப்படியிருந்தாலும், அவைகள் தீமையானவைகளே; ஏனென்றால் அவைகள் உண்மையானதின் பொருட்டும் நியாயமானதின் பொருட்டும், அல்லது அதினிடத்து கொள்ளும் அன்பின் பொருட்டும் செய்யப்படாமல், நேசிக்கப்பட்ட தனக்கேயும் உலகத்திற்காகவும் செய்யப்படுகின்றன; உண்மையும் நியாயமும், வேலைக்காரர்கள், தனக்கு ஊழியம் செய்யாதபோது, தங்களை அலட்சியம் செய்துதள்ளிவிடுகிற ஒரு எஜமானனிடம் வேலை செய்வதுபோல, இந்த சுயநலம் கோரும் அன்பிற்கு ஊழியம் செய்கின்றன. உண்மையினிடத்தும் நியாயத்தினிடத்தும் கொள்ளும் அன்பிலிருந்து செயல்படுகிறவர்களின் உண்மையானதும் நியாயமானதுமாகிய நடத்தை, புறம்பாய் ஒரே மாதிரி தோன்றுகிறது. இவர்களில் சிலர் விசுவாசத்தின் உண்மையிலிருந்தும் அல்லது கீழ்படிதலிலிருந்தும் செயல்படுகிறார்கள்;

ஏனென்றால், வேதத்தில் அம்மாதிரி கட்டளையிடப்பட்டிருக்கிறது; சிலர் விசுவாசத்தின் நன்மையிலிருந்தும், அல்லது மனசாட்சியி லிருந்தும் செயல்படுகிறார்கள்; ஏனென்றால் அது சமய நோக்கத்தி லிருந்து வருகிறது; சிலர் அயலானிடத்து காட்டும் தருமத்தின் நன்மையிலிருந்து செயல்படுகிறார்கள்; ஏனென்றால், அவனுடைய நன்மையானதுகூடி யோசிக்கப்படவேண்டும்; சிலர் ஆண்டவரிடத்து காட்டும் அன்பின் நன்மையிலிருந்து செயல்படுகிறார்கள்; ஏனென் றால், நன்மையானது நன்மையின் பொருட்டு செய்யப்படவேண் டும், அதாவது உண்மையானதும் நியாயமானதும்கூட உண்மை யின் பொருட்டும் நியாயத்தின் பொருட்டும், செய்யப்படவேண்டும்; இதை அவர்கள் நேசிக்கிறார்கள்; ஏனென்றால், அது ஆண்டவரிட மிருந்து வருகிறது; மேலும், ஆண்டவரிடமிருந்து புறப்படும் தேவத் துவம் அதிலிருக்கிறது, அதனால் அதன் சத்தில் பார்க்கும் காலத் தில் அது தெய்வமாயிருக்கிறது. இவர்களின் செய்கைகள் அல் லது வேலைகள், உள்ளுக்குள்ளாய் நல்லவைகளாயிருக்கின்றன; ஆகை யினால், புறம்பாய்கூட நல்லவைகளாயிருக்கின்றன; ஏனென்றால், மேலே கூறியபடி, அவைகள் புறப்படுகிற சிந்தனையையும் சித்தத்தை யும்போல, குணத்தில் ஒரேமாதிரி இருக்கின்றன; சிந்தனையும் சித்த மும் நீக்கலாய், அவைகள் செய்கைகளாகவும் வேலைகளாகவும் இல் லாமல் உயிரில்லாத சலனங்களாகமாத்திரம் இருக்கின்றன. வேதத் தில், செய்கைகள் வேலைகள் என்பதினால் என்ன அருத்தம் கொள் ளப்படுகிறது என்பது இவைகளிலிருந்து வெளிப்படையாகிறது.

**473**. செய்கைகளும் வேலைகளும், சித்தத்தையும் சிந்தனையை யும் சேர்ந்தபடியினால், அவைகள் அன்பிற்கும் விசுவாசத்திற்கும் சேர்ந்திருக்கின்றன; அதனால், அவைகள் அன்பும் விசுவாசமும் இருக்கின்றதுபோல இருக்கிறது; ஏனென்றால், மனிதனுடைய அன்பு அல்லது சித்தம் என்கிற எதைப்பற்றி நீர் பேசினாலும், ஒரே பொருளாகிறது; அவனுடைய விசுவாசம் அல்லது அவனு டைய நிச்சயப்படுத்தப்பட்ட சிந்தனை என்கிற எதைப்பற்றி பேசின லும், அதுகூட ஒரே பொருளாகிறது; ஏனென்றால் ஒரு மனிதன் நேசிக்கிறதை, அவன் இச்சிக்கிறான், தான் நம்புகிறதை, அவன் நினைக்கிறான். ஒரு மனிதன் தான் நம்புவதை நேசித்தால், அவன் அதைகூட இச்சிக்கிறான், தனக்கு சக்தியிருக்கிற வரையில் அதை செய்கிறான். ஒவ்வொருவனுக்கும், அன்பும் விசுவாசமும் மனிதனு டைய சித்தத்திற்கும் சிந்தனைக்கும் வெளியேயல்லாமல், உள்ளே

யிருக்கிறதென்று தெரிந்திருக்கலாம்; ஏனென்றால், சித்தமானது அன்பினால் ஏவப்படுகிறது, சிந்தனையானது விசுவாச விஷயங்களில் புலப்படுத்தப்பட்டதாயிருக்கிறது. ஆகையினால், விவேகமாய் நினைக்கக்கூடியவர்கள் மாத்திரம் தெளிவிக்கப்படுகிறார்கள்; மேலும் அவர்கள் உண்மையானதை நினைக்கிறார்கள், தெளிவின்படி இச்சிக்கிறார்கள், அல்லது அதே வாகிறபடி, அவர்கள் உண்மையானதை நம்பி, அதை நேசிக்கிறார்கள்.

**474**. ஆனால், சித்தம் மனிதனை ஆக்குகிறதென்றும், சிந்தனையானது சித்தத்திலிருந்து போகிற அளவு மாத்திரம் மனிதனுக்குகிறதென்றும், மேலும் செய்கைகளும் வேலைகளும் இரண்டிலுமிருந்தும் புறப்படுகின்றனவென்றும் தெரிந்திருக்கப்பட வேண்டும். அல்லது அதேவாகிறபடி, மனிதனுக்குகிறது அன்புதான், விசுவாசம் என்பது, அன்பிலிருந்து அது போகிறமட்டும்தான் அப்படி செய்கிறது; செய்கைகளும் வேலைகளும் இரண்டிலிருந்தும் புறப்படுகின்றன. அதனால், சித்தம் அல்லது அன்பு மனிதனாகவே இருக்கிறது; ஏனென்றால், போவது எதுவும், அது எதிலிருந்து போகிறதோ, அதற்கு சேர்ந்திருக்கிறது. வெளியே போகுதல் என்பது வெளியே கொண்டுவரப்பட்டு, உணரப்பட்டு பார்க்கப்பட, தகுந்த உருவத்தில் காண்பிக்கப்படுதலா யிருக்கிறது.

அன்பிலிருந்து பிரிக்கப்பட்டபோது விசுவாசம் என்ன என்பது, அதாவது தனக்குள் ஞான சம்பந்தமான வாழ்க்கை இல்லாதது, கேவல அறிவேயன்றி விசுவாச மல்லவென்றும், அதே மாதிரியே அன்பில்லா செய்கை அல்லது வேலை என்ன வென்பது, அதாவது அது வாழ்வின் செய்கை அல்லது வேலையில்லாமல், தீமையை நேசிப்பதிலிருந்தும் பொய்யானதை நம்புவதிலிருந்தும், ஓர் உயிரின் தோற்றம் இருக்கிற மரணத்தின் செய்கை அல்லது வேலை என்றும், இவைகளிலிருந்து விசதமாகிறது. உயிரின் இந்த தோற்றத்துக்கு ஞான சம்பந்தமான சாவு என்று சொல்லப்படுகிறதா யிருக்கிறது.

**475**. முழு மனிதனும் தன்னுடைய செயல்களிலும் வேலைகளிலும் காண்பிக்கப்படுகிறானென்று, தெரிந்திருக்கப்பட வேண்டும். அவனுடைய உள்ளானவைகளா யிருக்கிற சித்தமும் சிந்தனையும் அல்லது அன்பும் விசுவாசமும், அவனுடைய புறம்பானவைகளாயிருக்கிற செய்கைகளிலும் தொழில்களிலும் இருக்கிறவரையில், பூரணமானதாயில்லை; ஏனென்றால், சித்தமும் சிந்தனையும்

முடிகிற இறுதிப் பொருள்களாக இவைகள் யிருக்கின்றன; அவ்வித முடிவுகள் இல்லாவிட்டால், அவைகள் பூரணமில்லாததாயும், இன்னும் உள்பொருளாய் இல்லாததாயும், அதாவது மனிதனுக்குள் வாராததாயு மிருக்கின்றன. ஒருவனுக்கு சக்தியிருக்கும்போது செய்கை இல்லாமல் நினைத்தலும் இச்சித்தலும் அழிந்து போகிறது. ஒரு பாத்திரத்தில் மூடி வைக்கப்பட்டதுமான ஒரு சுவாலையைப்போலும், அல்லது வளராமல் தன் முளைக்கும் சக்தியுடன் அழிந்துபோகிற மணலின்பேரில் போட்ட ஒரு விதையைப்போ லிருக்கிறது. ஆனால், நினைத்து, இச்சித்து அதிலிருந்து செயல்படுதல், சுற்றிலும் சூட்டையும் வெளிச்சத்தையும் தருகிற ஒரு சுவாலையைப் போலவும், அல்லது ஒரு மரமாக அல்லது புஷ்பமாகத் தோன்றி, உயிரோடிருக்கிற பூமியில் விதைக்கப்பட்ட ஒரு விதையைப்போலவும் இருக்கிறது. சக்தியிருக்கும் காலத்தில் இச்சித்து செயல்படாதிருத்தல், இச்சித்தலா யில்லை என்றும், சக்தி யிருக்கும் காலத்தில் நேசித்து, நன்மை செய்யாதிருத்தல் நேசித்தலா யில்லாமல், ஒருவன் இச்சித்து நேசிக்கிறானென்று நினைத்தலாக மாத்திரம் இருக்கிறதென்றும், இவ்விதமாக அது மறைந்துபோய் நீக்கப்படுகிற பிரித்தெடுத்த சிந்தனை என்றும், ஒவ்வொருவனுக்கும் தெரிந்திருக்கலாம். அன்பும் சித்தமும் ஒரு செய்கை அல்லது வேலையின் ஆன்மாவாகவே யிருந்து, ஒரு மனிதன் செய்கிற உண்மையானதும், நியாயமானதுமாகியவைகளில், அதன் சரீரத்தை உருவாக்குகிறது. சூக்கும சரீரம் அல்லது மனிதனுடைய ஆவியின் சரீரம், வேறு மூலத்திலிருந்து வருகிறதில்லை; ஏனென்றால், அது மனிதன் தன்னுடைய அன்பு அல்லது சித்தத்திலிருந்து செய்கிறதைத் தவிர வேறு ஒன்றிலுமிருந்து உருவாக்கப்படுகிறதில்லை (மேலே நெ. 463 பார்க்கவும்). சுருங்கச் சொல்லில் மனிதனுடையவும் அவனுடைய ஆவியினுடையவும் எல்லா விஷயங்களும், அவனுடைய செய்கைகளில் அல்லது வேலைகளில் இருக்கின்றன.

**476**. இவைகளிலிருந்து, இறந்தபிறகு மனிதனோடு நிற்கிற உயிரென்பதினால், என்ன அருத்தம் கொள்ளப்படுகிறதென்பது, அதாவது அது தத்துவத்தில் மாத்திரமல்லாமல் செயலிலும்கூட அவனுடைய அன்பாகவும், அதிலிருந்து வரும் விசுவாசமாகவு மிருக்கிறதென்றும், இவ்விதமாக அவன் செய்கைகளும் வேலைகளும் மனிதனுடைய அன்பினுடையவும் விசுவாசத்தினுடையவும்

எல்லா பொருள்களையும் கொள்கிறபடியினால், அது அவைகளா யிருக்கிறதென்றும், இப்பொழுது விசதமாகலாம்.

**477**. அரசாளும் ஆசை, இறந்த பிறகு மனிதனிடத்தில் இருக்கிறது; சதாகாலம் வரையில் இது எப்பொழுதும் மாற்றப் படுகிறதில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் அநேக ஆசைகள் இருக் கின்றன; அப்படியிருந்தாலும், அவைகள் எல்லாம் அவனுடைய அரசாளும் ஆசைக்கு சம்பந்தப்பட்டு, அதனுடன் ஒன்றுகிறது அல்லது சேர்ந்து அதை உண்டாக்குகிறது. அரசாளும் அன்புடன் ஒத்துப்போகிற சித்தத்தின் எல்லா பொருள்களும், நேசிக்கப்படுகிற படியினால் ஆசைகள் என்று சொல்லப்படுகின்றன. இந்த ஆசைகள் உள்ளானதும் புறம்பானதுமாயிருக்கிறது; சிலது அரசாளும் ஆசை யுடன் நேராயும், சிலது நடுப்போக்காயும் சேர்க்கப்பட்டிருக்கின்றன; சிலது அதிக சமீபத்திலும் சிலது அதிக தூரத்திலும் இருக்கின் றன; சிலது பல வழிகளில் ஒத்தாசையாயிருக்கின்றன. சேர்த்துப் பார்த்தால், ஒரு இராச்சியத்தை அவைகள் ஏற்படுத்துகிறது போலிருக்கின்றன; ஏனென்றால், மனிதனுக்கு அவைகளின் ஒழுங் கைப்பற்றி ஒன்றும் தெரியாவிட்டாலும், மனிதனிடத்தில் அவ்வித ஒழுங்கில் அவைகள் இருக்கின்றன. இதில் சிலது மறுமையில் அவனுக்கு வெளிப்படுத்தப்படுகிறது; ஏனென்றால், அவனுடைய ஆசைகளின் ஒழுங்குக்குத்தக்கபடி, சிந்தனையினுடையவும் ஆசை யினுடையவும் விரிவு அவனுக்கு இருக்கிறது; அந்த சிந்தனையும் ஆசையும், அவனுடைய அரசாளும் ஆசை சுவர்க்கத்துக்கு அடுத்த ஆசைகளால் அமைந்திருந்தால், சுவர்க்கத்துக்கு அடுத்த கூட்டங் களுக்கும், அவனுடைய அரசாளும் ஆசை நரகத்துக்கு அடுத்த ஆசைகளால் அமைக்கப்பட்டிருந்தால், நரகத்துக்கு அடுத்தகூட்டங் களும் பரவுகிறது. ஆவிகளுடையவும் தேவர்களுடையவும் எல்லா சிந்தனையும் ஆசையும் கூட்டங்களுக்கு பரவுகிறதென்பது, மேலே, சுவர்க்கத்து தேவர்களின் ஞானத்தைக் குறித்த அத்தியாயத்திலும், எல்லா ஐக்கிய கூட்டங்களையும் சம்பந்தங்களையும் தீர்மானிக்கிற சுவர்க்கத்தின் உருவத்தைபற்றி சொல்லும் அத்தியாயத்திலும் அறிந்துகொள்ளப்படலாம்.

**478**. இவ்வளவு தூரம் கூறிய விஷயங்கள் பகுத்தறிவுள்ள மனிதனுடைய சிந்தனையை மாத்திரம் பகட்டுகிறது, ஆனால், அவை கள் ஐம்புலன்களுடைய உணர்ச்சிக்கு காண்பிக்கப்படும்படி, அவை களை திருஷ்டாந்தப்படுத்தி உறுதிசெய்ய சில அனுபவ சங்கதிகளை

நான் சேர்க்கிறேன். முதலாவது, இறந்த பிறகு மனிதன் தன்னுடைய சொந்த ஆசையாகவும் அல்லது தன்னுடைய சொந்த சித்தமாகவும் இருக்கிறான் என்பதும், இரண்டாவது, தன்னுடைய சித்தம் அல்லது அரசாளும் அன்பு விஷயத்தில் அவன் இருக்கிற மாதிரியே சதாகாலம் இருக்கிறானென்பதும், மூன்றாவது, சுவர்க்கத்துக்கு அடுத்ததும் ஞானசம்பந்தமானதுமான அன்பை உடைத்தாயிருக்கிற மனிதன், சுவர்க்கத்துக்கு வருகிறானென்பதும், சுவர்க்கத்துக்கு அடுத்ததும் ஞானசம்பந்தமானதுமாகிய அன்பில்லாமல் சரீர சம்பந்தமுள்ளதும் உலகசம்பந்தமுள்ளதுமான அன்பில் இருக்கிறவன், நரகத்திற்கு போகிறானென்பதும், நான்காவது, விசுவாசமானது சுவர்க்கத்து அன்பிலிருந்து வந்தாலொழிய மனிதனுடன் நிற்கிறதில்லை என்பதும், ஐந்தாவது, மனிதனுடைய உயிராகவே இருக்கிற செயலில் இருக்கும் அன்பு நிற்கிறதென்பதுமாய் அவைகள் இருக்கின்றன.

**479.** இறந்த பிறகு மனிதன் தன்னுடைய சொந்த அன்பாக அல்லது தன்னுடைய சொந்த சித்தமாக இருக்கிறானென்பது, பல விதமான அநுபவத்திலிருந்து சாக்ஷி யிடப்பட்டிருக்கிறது. முழு சுவர்க்கமும், நன்மையினுடைய அன்பின் வித்தியாசங்களுக்கு தக்கபடி கூட்டங்களாக வகையறுக்கப்படுகின்றன; மேலும், சுவர்க்கத்திற்கு கொண்டுபோகப்பட்டு, தேவனாகிற ஒவ்வொரு ஆவியும், தன்னுடைய அன்பு இருக்கப்பட்ட கூட்டத்திற்கு கொண்டுவரப்படுகிறது. அது, அங்கே வருகிறபோது வீட்டில் இருக்கிறதுபோலவும், தான் பிறந்த வீட்டில் இருக்கிறதுபோலவும் இருக்கிறது; இதை, அந்த தேவன் பார்த்து, தன்னைப்போன்றவர்களுடன் அங்கே ஐக்கியப்படுகின்றது. அது அந்த கூட்டத்தை விட்டுவிட்டு, வேறு இடத்துக்கு போகும்போது ஓர்வித எதிர்ப்பையும், தன்னைப் போன்றவர்களிடத்திற்கும், இவ்விதமாக தன்னுடைய அரசாளும் அன்பிற்கும் திரும்ப, ஓர் ஆசையையும் விடாப்பூட்டாய் உணருகிறது. இந்த வழியில்தான் சுவர்க்கத்தில் கூட்டுறவுகள் உண்டாக்கப்படுகின்றன; சுவர்க்கத்து, அன்புகளின் எதிரிடையாயிருக்கிற அன்புகளுடன் ஒத்து உருவாக்கப்படுகிற நரகத்திலும், அதேமாதிரிதான் உண்டாக்கப்படுகின்றன. சுவர்க்கமும், நரகமும் கூட்டங்களால் அமைக்கப்பட்டிருக்கிறதென்பதும், அவைகள் எல்லாம் அன்பின் வித்தியாசங்களுக்கு தக்கபடி வேறு வேறானதாயிருக்கிறதென்பதும், மேலே பார்க்கப்

படலாம் (செ. 41 முதல் 50 வரையிலும், செ. 200 முதல் 212 வரையிலும்). இறந்த பிறகு, மனிதன் தன்னுடைய சொந்த அன்பாயிருக்கிறானென்பது, தன்னுடைய அரசாளும் அன்புடன் ஒன்றாகாத பொருள்கள் அப்பொழுது பிரிக்கப்பட்டு, அவனிடமிருந்து எடுத்துக்கொள்ளப்படுகிற தென்பதிலிருந்துகூட வெளிப்படையாகலாம். அது நல்ல ஆவியாயிருந்தால், பேதமானதும் அல்லது இணங்காததும் பிரிக்கப்பட்டு, எடுத்துக்கொள்ளப்படுகிறது; அது இவ்விதமாக தன்னுடைய அன்பில் விடப்படுகிறது. துஷ்ட ஆவியிடமிருந்து உண்மைகள் நீக்கப்படுகின்றன என்கிறதும், நல்ல ஆவியிடமிருந்து பொய்கள் நீக்கப்படுகின்றன என்கிறதும், ஒவ்வொன்றும் தன் சொந்த அன்பாகிறவரையில் இது நடக்கிறது என்கிறதுமாகிய வித்தியாசத்துடன், துஷ்ட ஆவி விஷயத்தில் அதேமாதிரிதான் இருக்கிறது. மானிட ஆவி தன்னுடைய மூன்றாவது நிலைமைக்கு கொண்டுவரப்பட்டபோது, இது சம்பவிக்கிறது. இதைப் பற்றி இனிமேல் பேசப்படும். இது செய்யப்படுகிறபோது அது தன்னுடைய சொந்த அன்புக்கு தன்னுடைய முகத்தை திருப்பிக்கொள்ளுகிறது; எந்த திக்குக்கு அது திரும்பினபோதிலும் தன் கண்கள் முன்பாக இதை தொடர்ச்சியாய் வைத்திருக்கிறது (மேலே செ. 123, 124 பார்க்கவும்). தங்கள் சொந்த அரசாளும் ஆசையில்வைக்கப்படும் பட்சத்தில் எல்லா ஆவிகளும் எதேச்சையாக நடத்தப்படலாம்; ஏனென்றால் செய்யப்படுகிறது, என்னவென்று அவைகளுக்கு எவ்வளவு தெரிந்திருந்தபோதிலும், தாங்கள் எதிர்க்கலாமென்று எவ்வளவு நினைத்தபோதிலும், அவைகளுக்கு எதிர்க்கும் சக்தி கிடையாது. தங்களுடைய அரசாளும் ஆசைக்கு விரோதமாய் எதையாவது செய்ய முடியுமாவென்று சோதனை செய்ய அவைகளுக்கு அடிக்கடி அனுமதி கொடுக்கப்பட்டது; ஆனால், அவைகள் வீணாய்ப் போய்விட்டன. அவர்களுடைய ஆசையானது, அவைகளினால் நடத்தப்பட்டு, அவைகளிலிருந்து தாங்களே பிரிந்துக்கொள்ள முடியாத அவைகளை சுற்றி கட்டியிருக்கும் ஒரு சங்கிலியை அல்லது வடத்தைப்போ லிருக்கிறது. தங்கள் ஆசையினால்கூட நடத்தப்படுகிற, அல்லது அவர்களுடைய ஆசையினால் மற்றவர்களால் நடத்தப்படுகிற உலகத்திலிருக்கும் மனிதர்கள் விஷயத்தில் அதேமாதிரிதான்; ஆனால், தாங்கள் ஆவிகளாகும் போது அது அதிகம் அப்படியிருக்கிறது; ஏனென்றால், அக்காலத்தில் வேறு எந்த ஆசையும் தோற்றத்துக்கு காண்பிக்கவும்,

தங்கள் சொந்தமில்லாததை சொந்தமாக கள்ளஞ் செய்யவும், இடம் கொடுக்கப்படுகிறதில்லை. மனிதனுடைய ஆவி அவனுடைய அரசாளும் அன்பாயிருக்கிறதென்பது, மறுமையில் எல்லா வியவகாரங்களிலும் வெளிப்படையாக்கப்படுகிறது; ஏனென்றால், மற்றவனுடைய அன்புடன் எவனாவது ஒருவன், எவ்வளவு ஒத்து செயல்படுகிறானோ அல்லது பேசுகிறானோ, அவ்வளவு பின்கூறியவன் பூரணமானதும், மனக் களிப்பானதும், உற்சாகமுள்ளதுமான முகத்துடன் முழுமையும் பார்க்கப்படுகிறான். ஆனால், மற்றவனுடைய அன்புக்கு எதிரிடையாய் எவனாவது ஒருவன் எவ்வளவு செயல்பட்டு பேசுகிறானோ, அவ்வளவு, மற்றவனுடைய முகமானது, கடைசியில் தான் முழுமையும், அங்கே யில்லாதது போல முழுமையும் தோன்றாமல் போகிறவரையில், மாற்றப்பட்டு, இருட்டாக்கப்பட்டு, பார்க்க முடியாமல் போக ஆரம்பிக்கிறது. இது இப்படி எப்படியிருக்கலாமென்று, நான் அடிக்கடி ஆச்சரியப்பட்டிருக்கிறேன்; ஏனென்றால், அவ்விதமான எதுவும் உலகத்தில் சம்பவிக்க முடியாது; ஆனால், ஆவியானது மற்றவனைவிட்டு திரும்பிக்கொள்ளும்போது, அவன் பார்வையில் இல்லாமலிருக்கிற மனிதனிலிருக்கும் அந்த ஆவி விஷயத்திலும், அதேமாதிரிதான் என்று எனக்கு சொல்லப்பட்டது. ஒரு ஆவியானது அதன் அரசாளும் அன்பு என்பது, ஒவ்வொரு ஆவியும் தன்னுடைய அன்புடன் ஒத்துப்போகிற ஒவ்வொன்றையும் பிடித்துகொண்டு, தனதாக்கிக்கொள்ளுகிற தென்பதினாலும், தன்னுடன் ஒத்துப் போகாத எல்லா பொருள்களையும் தள்ளிவிட்டு, தன்னிடமிருந்து நீக்கிக் கொள்ளுகிறது என்பதினாலும்கூட ருஜுவாக்கப்பட்டது. ஒவ்வொருவனுடைய அரசாளும் அன்பும், தன் வளர்ச்சியை அதிகப்படுத்துகிறதாயிருக்கிற நீர்களை உறிஞ்சி, மற்றவைகளை நீக்குகிற கடல்பஞ்சு போன்றும், துவாரமுள்ளதுமான மரத்தைப்போல் இருக்கிறது. அது, தங்களுக்கு தகுந்த ஆகாரத்தை தெரிந்துகொண்டு, தங்கள் சுபாவத்துடன் ஒத்துப்போகிறவைகளை நாடி, ஒத்துப்போகாதவைகளை விலக்குகிற எல்லாவித பிராணிகளைப்போல் கூட இருக்கிறது; ஏனென்றால், கெட்ட ஆசை பொய்களினாலும், நல்ல ஆசை உண்மைகளினாலும், ஒவ்வொரு ஆசையும் தன்னுடைய சொந்தமானதினால் போஷிக்கப்பட விரும்புகிறது. சில பேதைமையான நல்ல ஆவிகள் பொல்லாதவைகளை உண்மைகளினாலும், நன்மைகளினாலும் கற்பிக்க விரும்பினதையும், ஆனால், அவைகள்

அவ்வித கற்பனையை விட்டுவிட்டு தூரம் ஓடிப்போனதையும், தங்கள் சொந்தமானதற்கு வந்தபோது, தங்கள் அன்புடன் ஒத்துப் போகிற பொய்களை அதிக சந்தோஷத்துடன் பிடித்துக்கொண்டதையும், பார்க்கும்படி எனக்கு அருள் செய்யப்பட்டது. நல்ல ஆவிகள் ஒன்றோடொன்று உண்மைகளைப்பற்றி பேசிக்கொண்டிருப்பதையும், அங்கே இருந்த நல்லவைகள் இந்த சம்பாஷணையை ஆவலாய் கேட்டதாகவும், ஆனால் அங்கேகூட இருந்த பொல்லாதவைகள் கேட்காததுபோல் எதையும் கவனிக்கவில்லை என்றும், நான் பார்த்தும்கூட இருக்கிறேன்.

ஆவிகள் உலகத்தில், வழிகள் பார்க்கப்படுகின்றன; சிலது சுவர்க்கத்துக்கும், சிலது நரகத்துக்கும், ஒவ்வொன்றும் ஒரு கூட்டத்துக்கும் வழி காட்டுகின்றன. நல்ல ஆவிகள் சுவர்க்கத்துக்கும், தங்கள் சொந்த அன்பின் நன்மையிலிருக்கிற கூட்டத்துக்கும், வழிகாட்டப்பட்டவைகளைத் தவிர, வேறு எதிலும் பிரவேசிக்கிறதில்லை; வேறு இடங்களுக்கு போகும் வழிகளை அவைகள் பார்க்கிறதில்லை. ஆனால், கெட்ட ஆவிகள் நரகத்துக்கும், தங்கள் சொந்த அன்பின் தீமையில் அங்கே இருக்கிற கூட்டத்துக்கும் வழி காட்டுகிறவைகளைத் தவிர, வேறு எந்த வழியிலும் பிரவேசிக்கிறதில்லை; அதுவுமன்றி, அவைகள் வேறு எதையும் பார்க்கிறதில்லை; அல்லது அப்படி அவைகள் பார்த்தாலும், அவைகள் அவைகளுக்குள் போகிறதில்லை. சூக்கும உலகத்தில் அவ்விதமான வழிகள், உண்மைகள் அல்லது பொய்களுக்கு அனுவயப்படுகிற உண்மையான தோற்றங்களாயிருக்கின்றன; ஆகவே, வேதத்தில் வழிகள் என்பது உண்மைகளையாவது பொய்களையாவது கருதுகின்றன. அனுபவத்தில் ஏற்பட்ட இந்த சாட்சியத்தினால், அறிவிலிருந்து முன் சொல்லியது, அதாவது, இறந்த பிறகு ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சொந்த அன்பாகவும், தன்னுடைய சொந்த சித்தமாகவுமிருக்கிறானென்பது, ஸ்திரப்படுத்தப்படுகிறது. ஒவ்வொருவனுடைய சித்தமும் அவனுடைய அன்பாயிருக்கிறபடியினால், அவனுடைய சொந்த சித்தமென்று சொல்லப்படுகிறது.

**480**. இறந்த பிறகு மனிதன், தன்னுடைய சித்தம் அல்லது அரசாளும் அன்பு விஷயத்தில் அவன் இருக்கிறபடி, சதாகாலம் இருக்கிறானென்பதுகூட, மிகுந்த அனுபவத்திலிருந்து ரூபகாரம் செய்யப்பட்டிருக்கிறது. இரண்டாயிரம் வருஷங்களுக்குமுன் வாழ்ந்ததும், சரித்திரத்தில் விவரிக்கப்பட்டபடி அவர்கள் வாழ்க்கைகள்,

எனக்கு தெரிந்திருந்ததுமான ஆவிகளுடன் பேச எனக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. அவைகள் விவரிக்கப்பட்டபடித் தங்களைப் போலவே, இன்னும் அப்படியே யிருந்ததாகவும், இவ்விதமாக, அவைகளின் வாழ்க்கைகள் உற்பத்தியானதும், அதை அனுசரித்து இருந்ததுமான, அன்பு விஷயத்தில் அதேமாதிரி இருந்ததாகவும் அவைகள் காணப்பட்டன. பேச எனக்கு அனுமதி கொடுக்கப் பட்ட ஓராயிரத்தி ஏழுநூறு வருஷங்களுக்குமுன் வாழ்ந்தவை களும், சரித்திரத்திலிருந்து தெரிந்திருக்கிறவைகளுமான மற்றவை களும், நானூறு வருஷங்களுக்குமுன் இருந்தவைகளும், முன்னூறு வருஷங்களுக்குமுன் இருந்தவைகளும் இன்னம் வாழ்ந்தவைகளும் இருந்தன; அவைகளின் ஆசைகளின் இன்பங்கள் அவைகளுக்கு ஒத்திருக்கிற சூக்கும இன்பங்களாக திருப்பப்பட்டன என்பது தவிர, இதர எந்த வித்தியாசமுமில்லாமல், ஒரே ஆசை இன்னும் அவர்களில் அரசாட்சி செய்ததென்று நான் கண்டுபிடித்தேன். அரசாளும் அன்பின் வாழ்க்கை சதாகாலம்வரையில், யார் விஷயத்திலும் எப்பொழுதும் மாற்றப்படுகிறதில்லை என்று, தேவர்கள் சொன்னார்கள்; ஏனென்றால், ஒவ்வொருவனும் தன் னுடைய சொந்த அன்பாயிருக்கிறான்; ஆகையினால், ஒரு ஆவி யின் அரசாளும் அன்பை மாற்றுதலென்பது, அதன் உயிரை நீக்குத லாயும் அல்லது அதை நிர்மூலமாக்குதலாயுமிருக்கும். இயற்கை யான அறிவுகளினாலும் ஆசைகளாலும் அமைந்திருக்கிற இறுதி யான சமதளம் சூக்குமமானதாயில்லாதபடியினால், அக்காலத்தில் அமைவானதாய் இருந்து திறக்கப்பட முடியாததாயிருந்ததின் நிமித்தம், இறந்த பிறகு மனிதன் படிப்பினால் சீர்திருத்தப்படமுடியா தென்பதும் (மேலே செ. 464 பார்க்கவும்), மனதுக்கும் குணத்துக் கும் சேர்ந்த உள்ளானவைகள், தன் அஸ்திவாரத்தின் பேரில் நிற் கும் வீட்டைப்போல அந்த சமதளத்தின்பேரில் நிற்கிறதென்பதும், அதனால்தான் தன் அன்பின் வாழ்க்கை உலகத்திலிருந்ததுபோல் சதாகாலம் மனிதன் இருக்கிறானென்பதும், காரணமென்று அவர் கள் சொன்னார்கள். மனிதனுக்கு, ஒவ்வொருவனும் தன்னுடைய அரசாளும் அன்பு இருக்கிறதுபோல் இருக்கிறானென்று தெரிய வில்லையென்றும், அநேகர் தங்கள் வாழ்க்கை விஷயத்தில் எப்படி யிருந்தபோதிலும், உடனே இரக்கத்தினாலும், விசுவாசத்தினாலும் மாத்திரம் இரக்ஷிக்கபடலாமென்று நம்புகிறார்களென்றும், தெய்வ இரக்கமானது ஒன்றின்மூலமாய் நடக்கிறதென்றும், மனிதன்

ஆண்டவரால், உலகத்திலும் பின்னிட்டு சதாகாலம் வரையிலும் நடத்தப்படுவதில் அது அமைந்திருக்கிறதென்றும், தீமையில் வாழ்ந்தவர்கள் இரக்கத்தினால் நடத்தப்படுகிறார்களென்றும், அன்றியும் விசுவாசமென்பது, ஆண்டவரிடமிருந்துவரும் சுவர்க்கத்து அன்பிலிருந்து புறப்படுகிற உண்மையினிடத்து கொள்ளும் ஆசையாயிருக்கிறதென்றும், அவர்களுக்கு தெரியவில்லை என்றும் தேவர்கள் மிகவும் ஆச்சரியப்படுகிறார்கள்.

**481.** பரம அன்பிலும் ஞானசம்பந்தமான அன்பிலும் இருக்கிற மனிதன், சுவர்க்கத்துக்கு வருகிறானென்பதும், பரம அன்பும் ஞான சம்பந்தமான அன்பும் இல்லாமல், சரீர சம்பந்தமானதும் உலகசம்பந்தமானதுமாகிய அன்பிலிருக்கிறவன், நரகத்துக்கு வருகிறானென்பதும், சுவர்க்கத்துக்கு எடுத்துக்கொண்டு போவதை நான் பார்த்த எல்லாரிடமுமிருந்தும் நரகத்தில் தள்ளப்பட்டவர்களிடமிருந்தும், எனக்கு தெளிவாக்கப்பட்டது; ஏனென்றால் சுவர்க்கத்துக்குள் எடுத்துக்கொண்டு போகப்பட்டவர்கள் சுவர்க்கத்துக்கு அடுத்ததும் ஞானசம்பந்தமானதுமாகிய அன்பின் வாழ்க்கையில் இருந்தார்கள்; ஆனால், நரகத்தில் தள்ளப்பட்டவர்கள், சரீர சம்பந்தமானதும் உலக சம்பந்தமானதுமாகிய வாழ்க்கையில் இருந்தார்கள். சுவர்க்கத்துக்கு அடுத்த அன்பு நல்லதாகவும், உண்மையானதாகவும், நியாயமானதாகவும் இருக்கிறபடியினால், அது நல்லதாகவும், உண்மையானதாகவும், நியாயமானதாகவும் இருப்பதை நேசிப்பதிலும், அந்த அன்பிலிருந்து அதை செய்வதிலும் அமைந்திருக்கிறது. இவ்விதமாக, சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்கள் சுவர்க்கத்து வாழ்க்கையாயிருக்கிற, நல்லதாகவும், உண்மையானதாகவும் நியாயமானதாகவு மிருக்கிற வாழ்க்கையை உடைத்தாயிருக்கிறார்கள். நல்லதாகவும், உண்மையானதாகவும் நியாயமானதாகவும் இருப்பதை, அதன் பொருட்டாகவே நேசித்து, அதை செய்து, அதை வாழ்கிறவர்கள், இது ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், எல்லா பொருள்களுக்கும் மேலாய் கூட, அவரிடத்து அன்பு பாராட்டுகிறார்கள்; மேலும் அவர்கள், நேசிக்கப்படவேண்டிய அயலான் இதாகயிருக்கிறபடியினால், அயலானைகூட நேசிக்கிறார்கள். ஆனால், சரீர சம்பந்தமுள்ள அன்பு என்பது அதன்பொருட்டே அல்லாமல் தனக்காகவே நல்லதாகவும், உண்மையானதாகவும், நியாயமானதாகவும் இருக்கிறதைநேசித்தலாயிருக்கிறது; ஏனென்றால், கியாதியும், கண்யமும், லாபமும் அத

ளால் சம்பாதிக்கப்படுகின்றன. இந்த மனிதர்கள், நல்லதாகவும், உண்மையாகவும் நியாயமாகவும் இருக்கிறதில், ஆண்டவரையும் அயலானையும் மதிக்காமல், தங்களையேயும் உலகத்தையுமே மதித்து, மோசம் செய்வதில் இன்பம் அடைகிறார்கள்; மோசத்திலிருந்து வரும் நல்லதாகவும் உண்மையானதாகவும், நியாயமானதாகவுமிருக்கிறது; தீமையானதாகவும், உண்மையற்றதும், அநியாயமானதாகவும் இருக்கிறது; நல்லதாயிருப்பதில் அவர்கள் நேசிப்பது இதுதான். இவ்விதமாக, ஆசைகள், ஒவ்வொருவனுடைய வாழ்க்கையை தீர்மானிக்கிறபடியினால், இறந்த பிறகு ஆவிகள் இருக்கும் உலகத்திற்குள் பிரவேசித்த உடனே, எல்லாரும் அவர்கள் குணம் கண்டுபிடிக்க பரிசோதிக்கப்பட்டு, அவ்விதமான அன்பிலிருக்கிறவர்களுடன் சேர்க்கப்படுகிறார்கள்; சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்கள், சுவர்க்கத்திலிருக்கிறவர்களுடனும், சரீர அன்பிலிருக்கிறவர்கள் நரகத்திலிருக்கிறவர்களுடனும், சேர்க்கப்படுகிறார்கள். அவர்கள் தங்களுடைய முதலாவது இரண்டாவது நிலைமைகளை கடந்து போனபோது, ஒருவரை ஒருவர் பார்க்காதபடிக்கும், ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ளாதபடிக்கும், அவர்கள் பிரிக்கப்படுகிறார்கள்; ஏனென்றால், ஒவ்வொருவனும், தனது மனதின் உள்ளானவைகள் சம்பந்தபட்டவரையில் மட்டுமல்லாமல், முகத்தையும், சரீரத்தையும் பேச்சையும் சேர்ந்த புறம்பானவைகள் விஷயத்திலும் கூட, தன்னுடைய சொந்த அன்பாகிறான்; மேலும், இவ்விதமாக, வெளி உருவத்தில்கூட, ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த அன்பின் பிரதிமையாகிறான். சரீரசம்பந்தமுள்ள ஆசைகளாயிருக்கிறவர்கள், பருக்கனாகவும், மங்கலாகவும், கருப்பாகவும், அந்தக்கேடாகவும் இருக்கிறார்கள்; ஆனால் சுவர்க்கத்து அன்புகளாயிருக்கிறவர்கள் மனகளிப்பானவர்களாகவும், பிரகாசமுள்ளவர்களாகவும், சீரானவர்களாகவும், அழகுள்ளவர்களாகவுமிருக்கிறார்கள். மேலும், தங்கள் சிந்தனைகள் உணர்ச்சிகள் விஷயத்தில், அவர்கள் முழுமையும் வேறுமாதிரியாய்கூட யிருக்கிறார்கள்; சுவர்க்கத்து அன்புகளாயிருக்கிறவர்கள், விவேகமுள்ளவர்களாகவும் ஞானமுள்ளவர்களாகவும் கூட யிருக்கிறார்கள்; ஆனால், சரீர சம்பந்தமுள்ள அன்புகளாயிருக்கிறவர்கள், மந்த புத்தியுள்ளவர்களாகவும், காண்கிறபடி பைத்தியக்காரர்களாகவுமிருக்கிறார்கள். சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்களின் சிந்தனையினுடையவும் ஆசையினுடையவும் உள்ளானவைகளையும் புறம்பானவைகளையும் பார்க்க அனுமதி கொடுக்

கப்பட்டபோது, உள்ளானவைகள் வெளிச்சத்தைபோலவும், சிலரில் சுவாலிக்கிற வெளிச்சத்தைப்போலவும், புறம்பானவைகள் வானவில்லுகள்போல் பற்பல அழகுள்ள நிறங்கள் போலவும் தோன்றுகின்றன; ஆனால், சரீரசம்பந்தமுள்ள ஆசையிலிருக்கப்பட்டவர்களின் உள்ளானவைகள் ஏதோ ஒரு கருப்புநிறமுள்ளதாக தோன்றுகின்றன; ஏனென்றால் அவைகள் மூடப்பட்டிருக்கின்றன; சிலருடைய உள்ளானவைகள் மங்கலான நெருப்பு போல் தோன்றுகின்றன; வன்மமுள்ள வஞ்சனையில் உள்ளுக்குள்ளாய் இருந்தவர்கள் இவர்கள்தான்; புறம்பானவைகள்கூட அழுக்குள்ள நிறமுடையவைகளாகவும் பார்வைக்கு ஒவ்வாததாயும் தோன்றுகின்றன. மனதுக்கும் நடத்தைக்கும் சேர்ந்த உள்ளானவைகளும் புறம்பானவைகளும், ஆண்டவர் இஷ்டப்படும்போது, சூக்கும உலகத்தில் பார்க்கும்படியாய் காட்டப்படுகின்றன. சரீர சம்பந்தமான ஆசையிலிருக்கிறவர்கள், தங்களுக்குள் நள்ளிருளாயிருக்கிற சுவர்க்கத்தின் வெளிச்சத்தில் ஒன்றையும் பார்க்கிறதில்லை; ஆனால், எரிகிற மரக்கரியிலிருந்து வரும் வெளிச்சத்தைப் போலிருக்கிற நரகத்தின் வெளிச்சம், அவர்களுக்கு தெளிவான வெளிச்சத்தைப்போலிருக்கிறது. அவர்களுடைய உள்ளான பார்வைகூட, அவர்கள் பைத்தியக்காரர்களாகிறவரையில்கூட, சுவர்க்கத்து வெளிச்சத்தில் இருட்டாக்கப்படுகிறது; ஆகையினால் அவர்கள் அதை தவிர்த்து, குகைகளிலும் கெபிகளிலும், தங்களுடைய தீமைகளிலிருந்து உண்டான அவர்களிடத்தில் இருக்கும் பொய்களுக்குத்தக்கபடி, ஏறக்குறைய ஆழமாய் தாங்களே ஒழித்துக்கொள்ளுகிறார்கள். மற்றபடி, சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்கள் சுவர்க்கத்து வெளிச்சத்தில் எவ்வளவு அதிக உயர்ந்தும் அல்லது உள்ளாயும் வருகிறார்களோ, எல்லா பொருள்களையும் அவ்வளவு அதிக தெளிவாயும் அழகுள்ளதாகவும், பார்க்கிறார்கள். மேலும், அவர்கள் உண்மைகளை அவ்வாறு அதிக விவேகத்துடனும் ஞானத்துடனும் உணருகிறார்கள். சரீர சம்பந்தமான அன்பிலிருக்கிறவர்கள், சுவர்க்கத்து சூட்டில் எவ்விதத்திலும் வாழ முடியாது; ஏனென்றால், சுவர்க்கத்து சூடு சுவர்க்கத்து அன்பாயிருக்கிறது. ஆனால், தங்களுக்கு சகாயமாயில்லாத மற்றவர்களுக்கு விரோதமாய் சீறுகிற ஆசையாயிருக்கிற நரகத்தின் சூட்டில் அவர்கள் வாழ்கிறார்கள். அந்த அன்பின் இன்பங்கள், மற்றவர்களை இகழ்ச்சிசெய்தலாகவும் விரோதமாகவும், வெறுப்பாகவும், பழிவாங்குதலாகவு

யிருக்கின்றனர்; அவர்கள் இந்த இன்பங்களிலிருக்கும்போது, தங்கள் வாழ்விலிருக்கிறார்கள்; மேலும், நன்மைக்கேயாகவும், நன்மையின்பொருட்டேயாகவும், மற்றவர்களுக்கு நன்மைசெய்தல் என்னவென்று அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது; ஆனால் அவர்களுக்கு தீமையிலிருந்தும் தீமையின் பொருட்டும், நன்மைசெய்தல் என்னவென்று மாத்திரம் தெரியும்.

சரீர சம்பந்தமான அன்பிலிருக்கிறவர்கள், சுவர்க்கத்தில் சுவாசிக்க சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள். எந்த பொல்லாத ஆவியாவது சுவர்க்கத்துக்கு கொண்டுவரப்பட்டால், ஒரு சண்டையில் மல்லுகட்டுகிறதுபோல, அது சுவாசத்தை இழுக்கிறது. ஆனால், சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்கள் சுவர்க்கத்தில் எவ்வளவு அதிகமாய் உள்ளாய் இருக்கிறார்களோ, அவ்வளவு அதிகமாய் தடைபடாமல் சுவாசித்து, அவ்வளவு அதிகமாய் முழுமையும் வாழ்கிறார்கள். அதனால்தான், சுவர்க்கத்தின் எல்லா பொருள்களும் அந்த அன்பின் பேரில் எழுதப்பட்டிருப்பதினால், சுவர்க்கத்து அன்பும் ஞானசம்பந்தமான அன்பும், மனிதன் விஷயத்தில் சுவர்க்கமாயிருக்கிறதென்பதும், நரகத்தின் எல்லா பொருள்களும், அந்த ஆசைகளின் பேரில் எழுதப்பட்டிருப்பதினால், சரீர சம்பந்தமான ஆசையும் உலக ஆசையும், சுவர்க்கத்து அன்பும் ஞானசம்பந்தமான அன்பும் இல்லாவிட்டால், மனிதன் விஷயத்தில் நரகமாயிருக்கிறதென்பதும் விசதமாகிறது. ஆகையினால், சுவர்க்கத்து அன்பையும் ஞானசம்பந்தமான அன்பையும் உடைத்தா யிருக்கிறவன் சுவர்க்கத்துக்கு வருகிறானென்றும், சுவர்க்கத்துக்கு அடுத்ததும் ஞானசம்பந்தமானதுமாகியவைகள் இல்லாமல், சரீர சம்பந்தமானதும் உலக சம்பந்தமானதுமாகிய ஆசையை உடைத்தா யிருக்கிறவன், நரகத்திற்கு வருகிறானென்றும் ஏற்படுகிறது.

**482.** விசுவாசமானது சுவர்க்கத்து அன்பிலிருந்து வராவிட்டால், அது மனிதனிடத்தில் நிற்கிறதில்லை என்பது, அந்த விஷயத்தைப்பற்றி நான் பார்த்து கேட்டவைகள் எடுத்துக் காட்டப்பட்டால், ஒரு புஸ்தகம் நிறம்பும்படியாக அவ்வளவு அனுபவத்தினால் எனக்கு வெளிப்படையாக்கப்பட்டது. சுவர்க்க சம்பந்தமானதும் ஞான சம்பந்தமானதுமாகியவைகள் இல்லாத, சரீர சம்பந்தமுள்ளதும்உலகசம்பந்தமுள்ளதுமாகிய அன்பிலிருக்கப்பட்டவர்கள் விஷயத்தில்,எந்தவிசுவாசமும் இல்லையென்றும், எதுவும் இருக்க முடியாதென்றும்நான்சாட்சியிடக்கூடும்; தங்களுடையஆசைகளுக்கு உதவு

கிறபடியினால், ஒரு விஷயம் நிஜம் என்கிற ஓர் அறிவு அல்லது மன நிதானம் மட்டும் தவிர அவர்களிடத்தில் வேறொன்றுமில்லை. தங்களுக்கு விசுவாசமிருப்பதாக நினைத்த அநேகர், விசுவாசமுள்ளவர்களிடம் கொண்டுவரப்பட்டார்கள். அவர்களுடன் போக்குவரவு திறக்கப்பட்டபோது, தங்களுக்கு எந்த விசுவாசமும் இல்லையென்று அவர்கள் அறிந்துகொண்டார்கள். உண்மையையும் வேதத்தையும் நம்புதல் மட்டும் விசுவாசமல்லவென்றும், ஆனால் விசுவாசமானது, சுவர்க்கத்து அன்பிலிருந்து உண்மையை நேசித்தலும், உள்ளான ஆசையிலிருந்து அதை இச்சித்து, செய்தலுமாயிருக்கிறதென்றும், பின்னிட்டு அவர்கள்கூட ஒத்துக்கொண்டார்கள். அவர்கள் விசுவாசம் என்று சொல்லிய, அவர்களுடைய மன நிதானம், சூடில்லாதபடியினால், பூமியின்பேரில் உள்ள எல்லா பொருள்களும் உறைபனியால் கட்டப்பட்டு, அசைவற்று, இமக் கட்டியின் கீழ் புதைந்து கிடக்கிற மாரிகாலத்து வெளிச்சத்தைப் போல மாத்திரம் இருந்ததென்றுகூட காண்பிக்கப்பட்டது. இந்த காரணத்துக்காக அவர்களுடன் இருக்கும், பிரியப்படுத்துகிற விசுவாசத்தின் வெளிச்சம், சுவர்க்கத்து வெளிச்சத்தின் கிரணங்கள், அதின்பேரில் பிரகாசித்த உடன், அணைக்கப்படுகிறதுமட்டுமல்லாமல், எவனும் தன்னைத்தானே பார்க்காத நள்ளிருளாய்கூட ஆய்விடுகிறது; மேலும் அப்பொழுது, உள்ளானவைகள், அவர்கள் ஒன்றையும் அறிந்துக்கொள்ளாதபடிக்கும், கடைசியில் பொய்களிலிருந்து பைத்தியக்காரர்களாகும்படிக்கும், அதேகாலத்தில் அவ்வளவு இருட்டாக்கப்படுகிறது. ஆகையினால், வேதத்திலிருந்தும், திருச்சபையின் கொள்கையிலிருந்தும், அவர்கள் கற்றுக்கொண்டு, அவர்கள் விசுவாசத்தின் உண்மைகள் என்று சொல்லிய எல்லா உண்மைகளும் அவ்விதமானவர்கள் விஷயத்தில் நீக்கப்பட்டு, அவைகளுக்கு பதிலாக, அவர்களுடைய வாழ்க்கையின் தீமைகளுடன் ஒத்துப்போகிற ஒவ்வொரு பொய்யுடனும், அவர்கள் ஊறவைக்கப்படுகிறார்கள்: ஏனென்றால், எல்லாரும் தங்களுடைய சொந்த அன்புகளிலும், அவைகளுடன் ஒத்துப்போகிற பொய்களிலும்விடப்பட்டு, பிறகு, உண்மைகள், தாங்கள் இருக்கப்பட்ட தீமையின் பொய்களுக்கு விரோதமாயிருக்கிறபடியினால், அவர்கள் அவைகளை விரோதித்து, வெறுத்து இவ்விதமாக தள்ளுகிறார்கள். கொள்கையிலிருந்து விசுவாசத்தை மாத்திரம் அறிக்கையிட்டு, வாழ்க்கை விஷயத்தில் தீமையிலிருந்த எல்லாரும், நரகத்திலிருக்கிறார்களென்று, சுவர்க்

கத்தினுடையவும் நரகத்தினுடையவும் விஷயங்களின் என்னுடைய எல்லா அனுபவத்திலிருந்தும், நான் சாட்சியம் கொடுப்பேன். அவர்களில் அநேகம் ஆயிரங்கள் கணக்கானவர்கள் நரகத்தில் தள்ளப்படுவதை நான் பார்த்திருக்கிறேன். அவர்களைக் குறித்து கடைசி தீர்ப்பும், பாபிலோன் சங்காரமும் என்னும் சிறிய நூலைப் பார்க்கவும்.

**483**. செய்கையில் அன்புகாட்டலும், இவ்விதமாக மனிதனுடைய வாழ்க்கைதான் நிலைகொள்ளுகிறதென்பது, அனுபவத்திலிருந்து, இப்பொழுது காண்பிக்கப்பட்டதிலிருந்தும், செய்கைகளையும் வேலைகளையும் குறித்து சொன்னதிலிருந்தும், அவசியமாய் தொடருகிற ஒரு முடிவாயிருக்கிறது. செயலில் அன்பு காட்டல் வேலையும் வினையுமாயிருகிறது.

**484**. எல்லா வேலைகளும் செயல்களும், சன்மார்க்கமானதும், தேசாசாரமானதுமாகிய வாழ்க்கைக்கு சேர்ந்ததாயிருக்கிறதென்றும், ஆகையினால் அவர்கள் நேர்மையானதையும், சரியானதையும், நியாயமானதையும், சமநிலையானதையும் ஆதரிக்கிறார்களென்றும் தெரிந்திருக்கப்படவேண்டும்; உண்மையானதும் சரியானதும், சன்மார்க்க வாழ்க்கைக்கு சேர்ந்திருக்கிறது; நியாயமானதும் சமநிலையானதும் தேசாசாரவாழ்விற்கும் சேர்ந்திருக்கிறது. செயல்கள் செய்யப்படுகிற அன்பு, சுவர்க்கத்துக்கு அல்லது நரகத்துக்கடுத்ததாயிருக்கிறது. சன்மார்க்க வாழ்வினுடையவும் தேசாசாரமான வாழ்வினுடையவும் வேலைகளும் வினைகளும், சுவர்க்கத்து அன்பிலிருந்து செய்யப்பட்டால், சுவர்கத்தை அடுத்தவைகளாயிருக்கின்றன; ஏனென்றால், சுவர்க்கத்து அன்பிலிருந்து செய்யப்படுகிறது, ஆண்டவரிடமிருந்து செய்யப்படுகிறது; மேலும், ஆண்டவரிடமிருந்து செய்யப்படுகிறது எதுவும், நல்லதாயிருக்கிறது. ஆனால், சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய வாழ்க்கையின் செய்கைகளும் வேலைகளும், நரகத்துக்குரிய ஆசையிலிருந்து செய்யப்பட்டால், நரகத்துக்கு உரியவைகளாயிருக்கின்றன; ஏனென்றால், தன்னையே நேசித்தலாயும் உலகத்தையே நேசித்தலாயுமிருக்கிற இந்த ஆசையிலிருந்து செய்யப்படுவது எதுவும், மனிதனிடமேயிருந்து செய்யப்படுகிறது; மேலும், மனிதனிடமிருந்தே செய்யப்படுகிற எதுவும், தன்னில் தானே தீமையாயிருக்கிறது; ஏனென்றால், மனிதனானவன், அவன் இருக்கிறதையேயும், அல்லது அவனுடைய சொந்தமானதையுமே, பார்த்தால் தீமையைத் தவிர வேறொன்றுமில்லை.

**ஒவ்வொருவனுடைய வாழ்க்கையின் இன்பங்கள் இறந்த பிறகு, அவைகளுக்கு இணங்குகிற இன்பங்களாக திருப்பப்படுகின்றன.**

**485**. அரசாளும் ஆசை அல்லது ஆட்சி செய்யும் அன்பு, ஒவ்வொருவனுடனும் சதாகாலம் நிலை நிற்கிறதென்பது, முன் அத்தியாயத்தில் காண்பிக்கப்பட்டது; ஆனால், அந்த ஆசை அல்லது அன்பின் இன்பங்கள், அவைகளுக்கு இணங்குகிற இன்பங்களாக திருப்பப்படுகின்றனவென்பது, இப்பொழுது காண்பிக்கப்படவேண்டும். இணங்குகிற இன்பங்களாக திருப்பப்படுதல் என்பதினால், ஸ்தூல இன்பங்களோடு அன்னுவயப்படுகிற ஞான சம்பந்தமான இன்பங்களாக திருப்பப்படுதல் கருதப்படுகிறது. இவைகள் ஞான சம்பந்தமான இன்பங்களாக திருப்பப்படுகின்றனவென்பது, மனிதனானவன் தன்னுடைய மண் சரீரத்தில் இருக்கிறவரையில், ஸ்தூல உலகத்தில் இருக்கிறானென்பதிலிருந்தும், ஆனால் அவன் அந்த சரீரத்தை விட்டுவிடுகிறபோது, சூக்கும உலகத்திற்கு வந்து, ஒரு சூக்கும சரீரத்தை தரித்துக் கொள்ளுகிறானென்பதிலிருந்தும் விசதமாகிறது. தேவர்களும், இறந்த பிறகு மனிதர்களும்கூட, சம்பூரணமான மானிடஉருவத்தில் இருக்கிறார்களென்பதும், அவர்கள் உடுத்துக்கொண்டிருக்கிற சரீரங்கள் சூக்குமமானதென்பதும் மேலே பார்க்கப்படலாம் (நெ. 73 முதல் 77 வரையிலும், 453 முதல் 460 வரையிலும்); அதனுடன்கூட ஸ்தூல பொருள்களோடு சூக்கும பொருள்களின் அன்னுவபங்கள் என்னவென்பது நெ. 87 முதல் 115 வரையிலும் பார்க்கப்படலாம்.

**486**. மனிதனுக்கு இருக்கும் எல்லா இன்பங்களும் அவனுடைய அரசாளும் அன்புக்கு சேர்ந்திருக்கின்றன; ஏனென்றால், மனிதனானவன், தான் நேசிப்பதை, இவ்விதமாக முக்கியமாய், எல்லா பொருள்களுக்கும் மேலாகதான் நேசிப்பதைத் தவிர, வேறு எதையும் இன்பமானதாக உணருகிறதில்லை; ஏனென்றால், நீர் அரசாளும் அன்பு என்று சொன்னாலும், அல்லது எல்லாவற்றிற்கும் மேலாக நேசிக்கப்படுவது என்று சொன்னாலும் ஒன்றேயாகிறது. அந்த இன்பங்கள் பலவிதங்களாயிருக்கின்றன. பொது

வாக, எவ்வளவு அரசாளும் அன்புகள் இருக்கின்றனவோ, அவ்வளவு அநேகம் அவைகள் இருக்கின்றன; ஆதலால், எவ்வளவு மனிதர்களும், ஆவிகளும், தேவர்களும் இருக்கிறார்களோ அவ்வளவு அநேகம் இருக்கின்றன; ஏனென்றால், எவனுடைய அரசாளும் அன்பும், எல்லா விஷயத்திலும் மற்றவனுடையதுபோல் இருக்கிறதில்லை. இந்த காரணத்துக்காக, எவனுக்கும், மற்ற எவனுடைய முகத்தைப்போல் சரியாய் அதே மாதிரி இருக்கிறதில்லை; ஏனென்றால், ஒவ்வொருவனுடைய முகமும், அவனுடைய மனதின் பிரதிமையாயிருக்கிறது. சூக்கும உலகத்தில், அது அவனுடைய அரசாளும் அன்பின்பிரதிமையாயிருக்கிறது. ஒவ்வொருவனுடைய குறிப்பான இன்பங்கள் முடிவற்ற விகற்பங்களாயிருக்கின்றன. அன்றியும் ஒன்று மற்ற ஒன்றே ஆகாதபடியினால், ஒன்றன்பின் ஒன்றாய் வந்தபோதிலும், அல்லது ஒரே காலத்தில் சேர்ந்திருந்தபோதிலும், எந்த ஒரு இன்பமும் மற்றதைப்போலவும் அல்லது அதேவாகவும் இருக்கிறதில்லை. அப்படியிருந்தாலும், ஒவ்வொருவனிடமிருக்கும் இந்தக் குறிப்பான இன்பங்கள் அவனுடைய அரசாளும் அன்பாயிருக்கிற தன்னுடைய சொந்த அன்பை குறிப்பிடுகின்றன; ஏனென்றால், அவைகள் அதை உண்டாக்கி, இவ்விதமாக அதனுடன் ஒன்றுகின்றன. அம்மாதிரியே, பொதுவாக எல்லா இன்பங்களும், சுவர்க்கத்தில் ஆண்டவரிடத்து அன்பாயும், நரகத்தில் தன்னையே நேசித்தலாயுமிருக்கிற சர்வவியாபகமாய் அரசாளும் ஒரு அன்புக்கு சம்பந்தப்பட்டிருக்கின்றன.

**487**. ஒவ்வொருவனுடைய ஸ்தூல இன்பங்களும், இறந்த பிறகு திருப்பப்படுகிற சூக்கும இன்பங்கள் என்னவென்பதும், அவைகளின் சுபாவம் என்னவென்பதும், அன்னுவய சாஸ்திரங்களிலிருந்து தவிர தெரிந்துகொள்ளப்படமுடியாது. இது ஸ்தூலமான எதுவும், அதற்கு அன்னுவயப்படுகிற சூக்குமமான ஒன்று இல்லாமல் நிலைக்காதென்று பொதுவாக கற்பிக்கிறது. குறிப்பாக, அன்னுவயப்படுகிறது எது என்றும், அது எவ்வித பொருளென்றும் கூட அது கற்பிக்கிறது. ஆகையினால், இதை தெரிந்திருக்கிற எவனும், தன்னுடைய அன்பு என்னவென்றும், எல்லா அன்புகளும் சம்பந்தப்பட்டிருக்கிற மேலேகூறிய சர்வ வியாபகமான அரசாளும் அன்புக்கு, அதன் சம்பந்தம் என்னவென்றும், தெரிந்துகொண்டிருந்தால் மாத்திரம், இறந்த பிறகு தன்னுடைய சொந்த நிலைமை என்னமாயிருக்குமென்று நிச்சயித்து அறிந்து கொள்ளக்கூடும்.

ஆனால், தன்னையே நேசித்தலில் இருக்கிறவர்களுக்கு, தங்களுடைய அரசாளும் அன்பை தெரிந்துகொள்ளுதல் முடியாத காரியமாயிருக்கிறது; ஏனென்றால், அவர்கள் தங்களுக்கு சொந்தமானதை நேசித்து, தங்களுடைய தீமைகளை நன்மைகள் என்கிறார்கள். அதேகாலத்தில், தங்களுக்கு சகாயமாயிருக்கிறதும், அதனால் தங்களுடைய தீமைகளை ஸ்திரப்படுத்துகிறதுமான பொய்களை, உண்மைகளென்று அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படியிருந்தாலும், தாங்கள் இஷ்டப்பட்டால், யார் ஞானிகளென்று மற்றவர்களிடமிருந்து அவர்கள் தெரிந்துகொள்ளலாம்; ஏனென்றால், அவர்களே பார்க்காததை இவர்கள் பார்க்கிறார்கள்; ஆனால், ஞானிகளின் எல்லா கற்பனைகளையும் தள்ளும்படியாக அவ்வளவு சுய அன்பிலேயே நிறைந்திருக்கிறவர்கள் விஷயத்தில் இது முடியாது. ஆனால், சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்கள் போதனையை ஏற்றுகொண்டு, தாங்கள் பிறந்திருக்கும் தீமைகளுக்குள், அவர்கள் கொண்டுவரப்பட்டபோது, அவர்கள் உண்மைகளிலிருந்து அவைகளைப் பார்க்கிறார்கள்; ஏனென்றால், உண்மைகள் தீமைகளை வெளிப்படையாக்குகின்றன. ஒவ்வொருவனும், நன்மையிலிருந்து வருகிற உண்மையிலிருந்து, தீமையையும் அதன் பொய்யையும் பார்க்கக்கூடும்; ஆனால், எவனும் தீமையிலிருந்து, நல்லதாயும் உண்மையானதாயு மிருக்கிறதை பார்க்கமுடியாது. தீமையின் பொய்கள் இருட்டா யிருக்கிற தென்பதும், இருட்டுக்கு அனுவயப்படுகிற தென்பதும் காரணமாயிருக்கிறது. ஆகையினால், தீமையிலிருந்து பொய்களிலிருக்கிறவர்கள், வெளிச்சத்திலிருக்கும் பொருள்களைப் பார்க்காமல், இரவு பட்சிகளைப்போல் அவைகளை தள்ளுகிற குருடர்களா யிருக்கிறார்கள். ஆனால், நன்மையிலிருந்து வரும் உண்மைகள் வெளிச்சமாயிருந்து, அதே மாதிரி வெளிச்சத்துடன் அனுவயப்படுகின்றன. (மேலே செ. 126 முதல் 134 வரையில் பார்க்கவும்). ஆகையினால், நன்மையிலிருந்து வரும் உண்மைகளிலிருக்கிறவர்கள் பார்க்க சக்தியுள்ளவர்களா யிருக்கிறார்கள்; அவர்கள் தங்கள் கண்களை திறந்து வைத்துகொண்டு, வெளிச்சத்துக்கும் இருட்டுக்கும் சேர்ந்த பொருள்களைப் பார்க்கிறார்கள். இந்த விஷயங்கள் சம்பந்தப்பட்ட வரையில்கூட, அனுபவத்தில் ஸ்திரப்படுத்தப் பட்டிருக்கிறேன். சுவர்க்கத்திலிருக்கும் தேவர்கள், தங்களுக்குள்ளேயே சில சமயங்களில் உண்டாகிற தீமைகளையும் பொய்களையும், அவைகளுடன் ஆவிகள் உலகத்தில் நரகங்களுடன் சம்பந்தப்பட்டிருக்கிற ஆவிகள்

இருக்கிற தீமைகளையும் பொய்களையும்கூட பார்த்து உணருகிறார்கள்; ஆனால், ஆவிகளேகூட தங்கள் சொந்த தீமைகளையும் பொய்களையும் பார்க்க சக்தியற்றவைகளா யிருக்கின்றன. தங்கள் பிரயோஜனத்துக்கு செய்யப்படுவதைத் தவிர சுவர்க்கத்து அன்பின் நன்மை என்னவென்றும், மனச்சாட்சி என்னவென்றும், நிஷ்கபடமும் நியாயமும் என்னவென்றும், அன்றியும் ஆண்டவரால் நடத்தப்படுதல் என்னவென்றும் அவைகள் கிரகிக்கிரதில்லை; அவ்விதமான விஷயங்கள் இல்லை யென்றும், ஆகையால் அவைகள் கணக்கில் இல்லையென்றும் அவைகள் சொல்லுகின்றன. மனிதன் தன்னைத்தானே சோதித்து, தன்னுடைய இன்பங்களிலிருந்து தன்னுடைய ஆசையை தெரிந்துகொண்டு, இவ்விதமாக அன்னுவயங்கள் சாஸ்திரத்தை தான் அறிந்துகொள்ளுகிறவரையில், இறந்தபிறகு தன்னுடைய வாழ்க்கையின் நிலைமை தெரிந்து கொள்ளும் கருத்துடன், இவைகள் எல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது.

**488.** ஒவ்வொருவனுடைய வாழ்க்கையின் இன்பங்கள் இறந்த பிறகு, அவைகளுக்கு அன்னுவயப்படுகிற இன்பங்களாக எந்த விதத்தில் திருப்பப்படுகின்றனவென்பது, அன்னுவயங்களைக் குறித்த அறிவிலிருந்து நிஜமாகவே தெரிந்திருக்கப்படலாம்; ஆனால், அந்த அறிவானது, இதுவரையில் சாதரணமாய் இல்லாதபடியினால், அந்த விஷயத்தைப்பற்றி அனுபவத்திலிருந்து தெரிந்துகொண்ட சில உதாரணங்களைக்கொண்டு, கொஞ்சம் தெளிவு உண்டாக்க நான் விரும்புகிறேன். தீமையிலிருந்துகொண்டு, திருச்சபையின் உண்மைகளுக்கு விரோதமாய் பொய்களில் ஸ்திரப்பட்டவர்கள் எல்லாரும், முக்கியமாய் வேதத்தைத் தள்ளினவர்கள், சுவர்க்கத்து வெளிச்சத்தை விட்டு ஓடி, தொடக்கங்களில் மிகவும் இருட்டாய் தோன்றுகிற, மறைந்துகொள்ளும் இடங்களுக்குள்ளும், தாங்கள் ஒளிந்துக்கொள்ளுகிற பாறைகளின் வெடிப்புகளுக்குள்ளும் பாய்கிறார்கள். அவர்கள் பொய்களை நேசித்து, உண்மைகளை வெறுத்தபடியினால் இது இப்படி இருக்கிறது. ஏனென்றால், அவ்வித ஒளித்து கொள்ளும் இடங்களும், பாறைகளின் வெடிப்புகளும், வெளிச்சம் உண்மைகளுக்கு அன்னுவயப்படுகிறதுபோல், பொய்களுக்கு அன்னுவயப்படுகிறது. அவ்வித இடங்களில் வசிப்பது அவர்களுக்கு இன்பமாயும், வெட்டவெளியான வயல்களிலிருப்பது இன்பமில்லாததாயுமிருக்கிறது. இரகசியமானதும் கபடமானது

மாகிய [illegible]களிலும், [illegible]ரண்டகமான சூழ்ச்சிகளிலும் இன்பத்தை [illegible]வர்கள், [illegible] திரி நடக்கிறார்கள்; அவர்கள் கூட ஒளித்[illegible]கொள்ளும் இடங்களில் இருந்து, ஒருவரை ஒருவர் பார்க்கவும் [illegible], அவ்வளவு இரு[illegible]ன அறைகளில் பிரவேசித்து, மூலைகளில் சேர்ந்து குசுகுசுவென்று பேசுகிறார்கள்; அவர்களின் அன்பின் இன்பம் இதில் மாற்றப்படுகிறது. கல்விமான்கள் என்று சொல்லப்படுவதைத் தவிர வேறு இதர நோக்கத்தினால் அல்லாமல் பூத சாஸ்திரங்களை கற்றுக்கொண்டு, அவைகளினால் பகுத்தறியும் சக்தியை விருத்திசெய்யாமல், இவ்வித விஷயங்களில்கொண்ட ஒரு இறுமாப்பிலிருந்து, ஞாபக விஷயங்களில் இன்பத்தை அடைந்தவர்கள், மணலுள்ள இடங்களை நேசித்து, மணலுள்ள இடங்கள் அவ்வித படிப்புகளுக்கு அனுவயப்படுகிறபடியினால், வயல்களையும் தோட்டங்களையும் விட்டுவிட்டு, அவைகள்பேரில் மனம் கொண்டு அவைகளை தெரிந்தெடுக்கிறார்கள். தங்களுடைய சொந்தமான திருச்சபையினுடையவும், இதர திருச்சபைகளுடையவும் கொள்கைகளை கற்றுக்கொண்டிருக்கிறவர்களும், தங்களுடைய அறிவை வாழ்க்கைக்கு கொண்டுவராதவர்களும், பாறையான இடங்களை தெரிந்தெடுத்து, கற்கள் குவியலின் மத்தியில் வசிக்கிறார்கள். அவர்கள், சாகுபடியான இடங்களை விரும்பாதபடியினால், அவைகளை ஒழிக்கிறார்கள். எல்லா பொருள்களையும் பிரகிருதிக்கு ஆரோபித்தவர்களும், அதனுடன்கூட எல்லாவற்றையும் தங்களுடைய சொந்த புத்திக்கு ஆரோபித்து, பலவிதமான உபாயங்களால் கண்யங்களுக்கு தாங்களே உயர்த்திக்கொண்டு, செல்வத்தை சம்பாதித்தவர்களும், மறுமையில் தெய்வீக ஒழுங்கின் பிரயோக வழுக்களாயிருக்கிற ஜாலவித்தைகளை கற்றுக்கொள்ள, தாங்களே பொருந்திக்கொண்டு, அவைகளில் தங்கள் வாழ்வின் மிகவும் உயர்ந்த சந்தோஷத்தை காண்கிறார்கள். தங்களுடைய சொந்த ஆசைகளுக்கு தெய்வீக உண்மைகளை ஆரோபித்து, இவ்விதமாக அவைகளை பொய்படுத்தியவர்கள், மூத்திர சம்பந்தமான பொருள்கள், அவ்வித ஆசைகளின் இன்பங்களுடன், அனுவ்வயப்படுகிறபடியினால், அவைகளை நேசிக்கிறார்கள். பரமலோபிகளாயிருந்தவர்கள், கெபிகளில் வசித்து, பன்றியின் மலத்தின்பேரிலும், இரைப்பையிலிருக்கும் ஜீரணமாகாத பொருள்களிலிருந்து வெளியிடப்படுகிற கவிச்சுகள் பேரிலும், ஆசைப்படுகிறார்கள். கேவல சந்தோஷத்திலேயே தங்கள் வாழ்க்கையை கழித்து, விகயமாய் வாழ்ந்து,

மேல்வாயினுடையவும் இரைப்பையினுடையவும் தீபனங்களை, வாழ்க்கையின் மிகவும் உயர்ந்த நன்மையாக நேசித்து, இவைகளுக்கு இடங்கொடுத்தவர்கள், மறுமையில் தாங்கள் சந்தோஷத்தை காண்கிற குப்பை மேடுகளையும் மலங்கழிக்கும் இடங்களையும் நேசிக்கிறார்கள்; ஏனென்றால், அவ்வித சந்தோஷங்கள் ஞான சம்பந்தமான மலமாயிருக்கின்றன. சுத்தமானதும் மலமில்லாததுமாகிய இடங்களை அவர்கள் தள்ளுகிறார்கள்; ஏனென்றால், அவைகள் அவர்களுக்கு இன்பமில்லாதவைகளாய் இருக்கின்றன. விபசாரங்களில் இன்பம் கொண்டவர்கள், எல்லா பொருள்களும் இழிஉள்ளதாகவும் கசுமாலமானதாகவும் இருக்கிற வேசிகளின் வீடுகளில், இதர உலகத்தில் வசிக்கிறார்கள்; இவைகளை அவர்கள் நேசித்து, கற்புள்ள வீடுகளைத் தள்ளி, அவர்கள் சமீபத்தில் வர நேரிட்ட போது, தியங்குகிறார்கள். விவாகங்களை உடைப்பதைவிட, வேறு எதுவும் அவர்களுக்கு அதிக சந்தோஷத்தை உண்டாக்குகிறதில்லை. பழிவாங்க இச்சித்து, அதனால் அநாகரிகமானதும் குரூரமானதுமாகிய சுபாவத்தை அடைந்தவர்கள், பிரேதமுகம் போன்றவைகளை நேசித்து, அவ்விதமான நரகங்களில் இருக்கிறார்கள்; மற்ற உதாரணங்களிலும் அப்படியே.

**489.** ஆனால், உலகத்தில் சுவர்க்கத்து அன்பில் வாழ்ந்தவர்களின் இன்பங்கள், சுவர்க்கத்து சூரியனிடமிருந்தும், அந்த சூரியனுடைய வெளிச்சத்திலிருந்தும், உண்டாகிற சுவர்க்கங்களில் இருப்பவைகள்போல, அதற்கு அனுவயப்படுகிற பொருள்களாக மாற்றப்படுகின்றன; மேலும், இந்த வெளிச்சமானது, தெய்வீகமானவை... ள்ளுக்குள்ளாய் தங்களுக்குள் மறைத்து வைத்... ...பொருள்களை பார்வைக்கு காண்பிக்கிறது. இந்த கொடுக்கப்பட்ட... ...லமாய் பார்க்கப்பட்ட பொருள்கள், தேவர் சொல்லப்பட்டவைக... ...ய மனதுகளில் உள்ளுக்குள்ளாயும், அதே ...சரீரத்தில் புறம்பாயும் தாவுகின்றன.

**490.** அன்... ஆண்ட ஒவ்வொருவனுடைய... ...படும் தெய்வீக உண்மையா யிருக்கிற தெய்வீக அனுவயங்களாக... ...அன்பினால் திறக்கப்பட்ட... ...லாம் விசதமாக்குகின்றது. இது ...அன்பினுடைய இன்பியாயம் யோக்கியம், நன்மை உண்மை, இவைகள் ...புறம்பாய்ச் சாஸ்திரங்கள் அறிவுகள் விஷயத்திலும், விவேகம் ஞானம் ...ள் கள் விஷயத்திலும், மற்றவைகள் விஷயத்திலும் கொள்ளும் அன்...

ருந்து அவர்களுடைய வி... ...துக்கும் ...த்துக்கும் சேர்ந்த வைகளுக்கும் அனுபவ... ..., சுவர்க்கத்தில் இருக்கிற அறிகுறிகளைப் ... தோற்றங்களைப்பற்றியும் பேசும் அத்தியாயத்திலும் (... 17... முதல் 176 வரையில்), சுவர்க்கத்து தேவர்களின் ஞான... பற்றிப் பேசும் அத்தியாயத்திலும் (செ. 265 முதல் 2... வரையில்), காண்பிக்கப்பட்டிருக்கிறது. பொருள்களின் காரண...லிருந்து, முன்... அனுமானிக்கப் பட்டவைகளை உதகரிக்கு... ..., இந்த விஷயத்தை அனுப வத்திலிருந்து எடுத்த உதார...ங்களிலிருந்து ஸ்திரப்படுத்த நாம் ஆரம்பித்துவிட்டபடியினால், உலகத்தில் சுவர்க்கத்து அன்பில் வாழ்கிறவர்கள் விஷயத்தில், ஸ்தூல இன்பங்கள் மாற்றப்படுகிற சுவர்க்கத்து இன்பங்களைப்பற்றி சில விவரங்களை நான் எடுத்துக் காட்டுகிறேன். தெய்வீக உண்மைகளையும் வேதத்தையும் உள்ளான ஆசையிலிருந்து அல்லது உண்மையினிடத்தே கொள்ளும் ஆசையி லிருந்து நேசித்தவர்கள், மறுமையில் வெளிச்சத்திலும், அவர்கள் தொடர்ச்சியாய் சுவர்க்கத்து வெளிச்சத்திலிருக்கிற மலைகளைப் போல தோன்றுகிற உன்னதமாக்கப்பட்ட இடங்களிலும் வசிக்கி ருர்கள். அவர்களுக்கு, உலகத்திலிருக்கும் இரவின் இருட்டைப் போன்ற இருட்டு என்னவென்று தெரியாது; மேலும் அவர்கள் வசந்த காலத்தைச் சார்ந்த சீதோஷ்ண நிலையில்கூட வசிக்கிருர் கள்; அவர்களுடைய பார்வைக்கு தானியங்களும் திராட்சத் தோட்டங்களும் நிறைந்த வயல்கள் காட்டப்படுகின்றன. அவர் களின் வீடுகளிலிருக்கும் ஒவ்வொன்றும், விலை உயர்ந்த கற்களால் செய்யப்பட்டதுபோல மின்னுகின்றன; அவர்கள் ஜன்னல்கள் மூலமாய் பார்க்கும்போது, சுத்தமான பளிங்கு மூலமாய் பார்ப் பதுபோல இருக்கிறது. இவைகள், அவர்கள் திருஷ்டியின் மிகவும் களாயிருக்கின்றன; ஆனால், அதே பொருள்களுடைய சொந்த அடுத்த தெய்வீக பொருள்களோடு அனுபவத்து, இவ்விதமாக உள்ளுக்குள்ளாய் இன்பம் தரத்தக்கவைகளுமான பொருள் ஏனென்றால், அவர்கள் நேசித்த வேதத்திலிருந்து அனுபவப்படுகிற கள், நிற்கும் தானியத்...க்கிருர்கள். பரமலோபிகளாயிருந்தவர் உயர்ந்த ...களில் வசித்து, பன்றியின் மலத்தின்பேரிலும், இரைப் ஆசீயிலிருக்கும் ஜீரணமாகாத பொருள்களிலிருந்து வெளியிடப் படுகிற கலிச்சுகள் பேரிலும், ஆசைப்படுகிருர்கள். கேவல சந்தோ ஷத்திலேயே தங்கள் வாழ்க்கையை கழித்து, விநயமாய் வாழ்ந்து,

கள் பேசி முடிந்த உடன், அவர்கள் சொன்ன விஷயங்கள் முகத்தில் உடனே தெளிவாய் வெளிப்படையாகிறது. அவர்களைச் சுற்றியிருக்கும் பொருள்கள், அவர்களுக்குள்ளிருப்பவைகளோடு அன்னுவயப் படுகிறபடியினால், இவைகள், அவைகள் எதற்கு அறிகுறியாகி, எதை கருதுகிறதென்று மற்றவர்கள் தெளிவாய் உணரும்படியாக, ஓர் தோற்றத்தை கோலங் காட்டுகின்றன இரகசியமான செய்கைகளில் இன்பத்தை கண்ட ஆவிகள், அவ்விதமானவைகளை, தூரத்தில் பார்க்கும்போதே, அவைகளை விட்டுவிட்டு ஓடிப்போய் விடுகின்றன; சர்ப்பங்களைப்போல் அவைகளை விட்டுவிட்டு நகர்ந்து போகிறதுபோல், தங்களுக்கே தோன்றுகின்றன.

விபசாரங்களை மிகவும் பொல்லாதவைகளென்று நினைத்து, விவாகத்தின் கற்புள்ள ஆசையில் வாழ்ந்தவர்கள், மற்ற எல்லாரையும்விட சுவர்க்கத்து ஒழுங்கிலும் உருவத்திலும், ஆகையினால் எல்லா அழகிலும் இருந்துகொண்டு, யௌவனத்தில் இடைவிடாமல் இருக்கிறார்கள். அவர்கள் ஆசையின் இன்பங்கள் சொல்ல முடியாததா யிருக்கின்றன; மேலும் அவைகள் சதாகாலம் வரையில் அதிகரித்து வருகின்றன; ஏனென்றால், சுவர்க்கத்தின் எல்லா இன்பங்களும் சந்தோஷங்களும் அந்த அன்பில் பாய்கின்றன; ஏனென்றால், அந்த அன்பானது திருச்சபையுடனும் சுவர்க்கத்துடனும், ஆண்டவரின் சேர்க்கையிலிருந்தும், அந்த சேர்க்கையானது பொதுவாக சுவர்க்கமாகவும், ஒவ்வொருதேவனிடத்திலும் சிறப்பாக சுவர்க்கமாகவும் (மேலே நெ. 366 முதல் 386 வரையில்) இருக்கிற, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சேர்க்கையிலிருந்தும்,பொதுவாகவும் இறங்குகிறது. அவைகளின் புறம்பான இன்பங்கள் என்னவென்று மானிட வார்த்தைகளால் விவரிக்க முடியாததா யிருக்கிறது. சுவர்க்கத்து அன்பிலிருக்கிறவர்களுக்கு கொடுக்கப்பட்ட இன்பங்களின் அன்னுவயங்களைப்பற்றி, எனக்கு சொல்லப்பட்டவைகளில் இவைகள் எல்லாம் கொஞ்சம்தான்.

**490.** அன்பே சதாகாலம் வரையில் நீடித்து நிற்கையில், ஒவ்வொருவனுடைய இன்பங்களும், இறந்த பிறகு அவைகளின் அன்னுவயங்களாக மாற்றப்படுகின்றன வென்பது, இவைகள் எல்லாம் விசதமாக்குகின்றது. இது விவாக அன்பு விஷயத்திலும், நியாயம் யோக்கியம், நன்மை உண்மை, இவைகள் விஷயத்திலும், சாஸ்திரங்கள் அறிவுகள் விஷயத்திலும், விவேகம் ஞானம் இவைகள் விஷயத்திலும், மற்றவைகள் விஷயத்திலும் கொள்ளும் அன்பு

சம்பந்தப்பட்டவரையில் இது உண்மையா யிருக்கிறது. இந்த அன்புகளிலிருந்து இன்பங்கள் தலையூற்றிலிருந்து வரும் நீரோட்டங்கள்போல பாய்கின்றன; ஆகையால், அவைகள்கூட ஸ்திரமானதா யிருக்கின்றன; ஆனால், ஸ்தூல இன்பங்களிலிருந்து சூக்கும இன்பங்களுக்கு தூக்கப்பட்டபோது, அவைகள் அதிக உயர்ந்த நிலைமைக்கு ஏற்றப்படுகின்றன.

## LI

### இறந்த பிறகு மனிதனுடைய முதல் நிலைமை

**491.** இறந்தபிறகு மனிதன், சுவர்க்கம் அல்லது நரகத்திற்கு வருவதற்கு முன், போகிற மூன்று நிலைமைகள் இருக்கின்றன. முதல் நிலைமை, அவனுடைய புறம்பானவைகளின் நிலைமையாயிருக்கிறது; இரண்டாவது, அவனுடைய உள்ளானவைகளின் நிலைமையாயிருக்கிறது; மூன்றாவது, அவன் ஆயத்தம் செய்யும் நிலைமையாயிருக்கிறது. மனிதன் இந்த நிலைமைகள் மூலமாய் ஆவிகள் உலகத்தில் செல்லுகிறான்; ஆனால், சிலர் இந்த நிலைமைகள் மூலமாய் செல்லுகிறதில்லை; ஏனென்றால், அவர்கள் இறந்தவுடன் சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப்படுகிறார்கள் அல்லது நரகத்தில் தள்ளப்படுகிறார்கள். சுவர்க்கத்துக்கு உடனே எடுத்துக்கொள்ளப்பட்டவர்கள், மறுபடி பிறக்கச் செய்யப்பட்டு, இவ்விதமாக உலகத்திலிருக்கும்போது, ஆயத்தம் பண்ணப்பட்டவர்களா யிருக்கிறார்கள். சரீரத்திலிருக்கும் ஸ்தூல அசுத்தங்களை தள்ளவேண்டியவர்களாக மாத்திரம் இருக்கிற அவ்வளவு குணப்படுத்தப்பட்டு, ஆயத்தம் பண்ணப்பட்டவர்கள், சுவர்க்கத்துக்கு தேவர்களால் உடனே கொண்டு போகப்படுகிறார்கள். இறந்த நேரத்திற்கு அடுத்தாப்போல், அவர்கள் எடுத்துகொண்டுபோகப்படுவதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால், மேலுக்கு நல்லவர்களைப்போல் சாதித்து, உள்ளுக்குள்ளாய் பொல்லாதவர்களாயிருந்து, இவ்விதமாக, அவர்கள் பொல்லாங்கின் பரிமாணத்தை சூதுகளால் நிறப்பி, சுசீலத்தை ஏமாற்றுவதற்கு வழிவகையாக உபயோகப்படுத்தினவர்கள், உடனே நரகத்திற்கு அனுப்பப்படுகிறார்கள். இறந்த உடனே, அவர்களில் சிலர் நரகத்தில் தள்ளப்படுவதை நான் பார்த்திருக்கிறேன்; மிகவும் வஞ்சகமுள்ள ஒருவன் தலைகீழாயும், பாதங்கள் மேலாயும், மற்றவர்கள் மற்றவிதமாயும் தள்ளப்படுவதை பார்த்திருக்கிறேன். இறந்த உடனே கெபிகளில் தள்ளப்பட்டு, இவ்விதமாக ஆவிகள் உலகத்திலிருக்கப்பட்டவர்களை விட்டு பிரிக்கப்பட்டு, இவைகளிலிருந்து வெளியே கொண்டுவரப்பட்டு, ஒருவன்பின் ஒருவனாக உள்ளே தள்ளப்படுகிற சிலர்கூட இருக்கிறார்கள். தேசாசாரமான பாசாங்குகள் மூலமாய், அயலானிடத்து விஷமத்தனமாய் நடந்துகொண்

டவர்கள் அவர்களாயிருக்கிறார்கள். ஆனால், ஆவிகள் உலகத்தில் வைக்கப்பட்டு, தெய்வீக ஒழுங்கை அனுசரித்து சுவர்க்கத்துக்காவது நரகத்திற்காவது ஆயத்தம்பண்ணப்பட்டவர்களுடன் ஒப்பிட்டால், இவர்கள் எல்லாம் சிலராகத்தான் இருக்கிறார்கள்.

**492.** புறம்பானவைகளின் நிலைமையாயிருக்கிற முதல் நிலைமை விஷயத்தில், மனிதன் இறந்த உடனே அதற்குள் தான் வருகிறான். ஒவ்வொரு மனிதனும் தன் ஆவிசம்பந்தப்பட்டவரையில், புறம்பானவைகளையும் உள்ளானவைகளையும் உடைத்தாயிருக்கிறான். ஆவியின் புறம்பானவைகள், மனிதனுடைய சரீரத்தை, முக்கியமாய் முகத்தையும் பேச்சையும், சலனங்களையும், மற்றவர்களுடன் சேர்மானத்திற்காக, அது பொருந்தப்பண்ணுகிற ஏதுக்களாயிருக்கின்றன; ஆனால், ஆவியின் உள்ளானவைகள், அதன் சொந்த சித்தத்திற்கும் சிந்தனைக்கும் சேர்ந்தவைகளாயிருக்கின்றன; இவைகள் முகத்திலும் பேச்சிலும், கலனத்திலும் அரிதாய் வெளிப்படுத்தப்படுகின்றன. ஏனென்றால், மனிதனானவன் சிறுபிராயம் முதல் சிநேகிதம், பரோபகாரம், நிஷ்கபடம் உள்ளவனாக மேலுக்கு காண்பித்து, அவனுடைய சொந்த சித்தத்தின் சிந்தனைகளை மறைக்க பழகியிருக்கிறான். ஆகவே, அவன் உள்ளுக்குள்ளாய் எப்படி யிருந்தபோதிலும், சாதனையிலிருந்து புறம்பாய் சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய வாழ்க்கையை நடத்துகிறான். மேலும், இந்த சாதனையின் பயன், மனிதனுக்கு தன்னுடைய உள்ளானவைகள் தெரியாமலும், அவைகளைப்பற்றி நினைக்காமலும் போய்விடுகிறதாயிருக்கிறது.

**493.** இறந்த பிறகு மனிதனுடைய முதல் நிலைமை, அவன் உலகத்திலிருந்த நிலைமைபோலிருக்கிறது; ஏனென்றால், அவன் புறம்பானவைகளில், அப்பொழுதும் அதேமாதிரியிருக்கிறான். ஆகையினால், அதே முகத்தையும், அதே பேச்சையும், அதே குணத்தையும், இவ்விதமாக அதே சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய வாழ்க்கையையும், அவன் உடைத்தாயிருக்கிறான். அதனால்தான் சந்திக்கிற பொருள்களையும், தான் எழுப்பப்பட்டபோது தேவர்களால் தான் ஆவியாய்விட்டதாக தனக்கு சொல்லப்பட்டதையும் கவனித்தால் ஒழிய, தான் உலகத்திலிருப்பதாக தவிர அவனுக்கு வேறு ஒன்றும் தெரியாது (செ. 450). இவ்விதமாக ஒரு வாழ்க்கையானது மற்றதில் நீட்டப்படுகிறது; மரணம் என்

பது ஒன்றிலிருந்து மற்றதற்கு போகும் வழியாகமாத்திரம் இருக்கிறது.

**494.** இந்த உலகத்தின் வாழ்க்கையிலிருந்து புதிதாய் விட்டு வந்த ஒரு மனிதனுடைய ஆவியானது, இந்த சுபாவமுடையதாயிருக்கிறபடியினால், அது சிநேகிதர்களாலும், உலகத்திலிருந்தபோது தனக்கு தெரிந்தவர்களாலும் அறிந்துகொள்ளப்படுகிறது; ஏனென்றால், ஆவிகள் ஒருவனை, அவனுடைய முகத்திலிருந்தும் பேச்சிலிருந்தும் மட்டு மல்லாமல், தாங்கள் சமீபிக்கும்போது இருக்கும் அவன் வாழ்க்கையின் கோளத்திலிருந்து உணருகின்றன. மறுமையில் எவனாவது ஒருவன் மற்றவனைக் குறித்து நினைக்குங்கால், அவனுடைய முகத்தையும், அதேகாலத்தில் அவனுடைய வாழ்க்கையில் சிலவற்றையும் நினைக்கிறான்; அப்படி அவன் இதை செய்யும்போது மற்றவன், சொல்லி அனுப்பி கூப்பிடப்பட்டது போல் தெரியக் காட்டுகிறான். சிந்தனைகள் சூக்கும உலகத்தில் அறிவிக்கப்படுகின்றன என்பதிலிருந்தும், ஸ்தூல உலகத்திலிருப்பதுபோல் (செ. 191 முதல் 199) அங்கே அவ்வித இடமில்லை என்பதிலிருந்தும், சூக்கும உலகத்தில் அம்மாதிரி இது இருக்கிறது. ஆகவே, எல்லாரும் அவர்கள் முதலில் மறுமைக்கு முதலில் வரும்போது, தங்களுடைய சிநேகிதர்களாலும், பந்துக்களாலும், எந்த வழியிலாவது அவர்களுக்கு தெரிந்தவர்களாலும் அறிந்துகொள்ளப்படுகிறார்கள்; மேலும், அவர்கள் அவர்களோடு சேர்ந்து பேசுகிறார்கள்; பின்னிட்டு, உலகத்தில் இருந்தபோது இருந்த அவர்களுடைய சிநேகிதத்திற்குத் தக்கபடி சேர்ந்திருக்கிறார்கள். உலகத்திலிருந்து வந்தவர்கள் தங்களுடைய சிநேகிதர்களை மறுபடி பார்ப்பதினால் சந்தோஷமடைந்ததாகவும், அவர்களுடைய சிநேகிதர்கள், தாங்கள் சம்பந்தப்பட்டவரையில் தாங்கள் வந்துவிட்டதாகவும், சந்தோஷமடைந்ததாகவும் நான் அடிக்கடி கேழ்விப்பட்டிருக்கிறேன். வெகு சாதாரணமாய், ஒரு புருஷனும் மனைவியும் ஒன்றுசேர்ந்து, ஒருவரை ஒருவர் வாழ்த்தி, உலகத்திலிருந்தபோது ஒன்றுசேர்ந்து வாழ்ந்ததில், தாங்கள் அடைந்த இன்பத்திற்கு தக்கபடி, நீண்ட நேரம் அல்லது கொஞ்ச நேரம் சேர்ந்து இருக்கிறார்கள். சுவர்க்கத்துக்கு அடுத்த அன்பிலிருந்துவந்த மனதுகளின் சேர்க்கையாயிருக்கிற உண்மையான விவாக அன்பு, அவர்களை ஒன்றாக சேர்க்காதிருந்தால், கொஞ்சம் பொறுத்து அவர்கள் பிரிக்கப்படுகிறார்கள். ஆனால், துணைவர்களின்

மனங்கள் இசைவில்லாததாயிருந்திருந்து, உள்ளுக்குள்ளாய் ஒன்றுக்கொன்று வெறுப்புள்ளதாயிருந்தால், பகிரங்கமான விரோதத்திலும், சில சமயங்களில் நிசமான சண்டையிலும் பிரவாகிக்கிறார்கள்; இதுவுமல்லாமல், அவர்கள், உடனே சொல்லப்படும் இரண்டாவது நிலைமைக்குள் பிரவேசிக்கிறவரையில் பிரிக்கப்படுகிறதில்லை.

**495** புதிதாய் உலகத்திலிருந்து வந்த ஆவிகளின் உயிர், ஸ்தூல உலகத்திலிருந்தபோது இருந்த உயிருக்கு வேறுபாடில்லாததாக இருக்கிறபடியினாலும், வேதத்தின் சொல்லார்த்தத்திலிருந்தும், அதிலிருந்து, செய்யும் பிரசங்கத்திலிருந்தும், தாங்கள் கற்றுக்கொண்டது தவிர, இறந்த பிறகு அவர்கள் உயிரின் நிலைமையைப் பற்றியும், அதுவுமன்றி சுவர்க்கத்தைப்பற்றியும், நரகத்தைப்பற்றியும், எதுவும் தங்களுக்கு தெரியாதபடியினாலும், தாங்கள் ஒரு சரீரத்தில் இருக்கிறதாகவும், உலகத்தில் தங்களுக்கு இருந்த ஒவ்வொரு இந்திரிய ஞானத்தையும், தாங்கள் உடைத்தாயிருக்கிறதாகவும், அதேமாதிரி பொருள்களை பார்க்கிறதாகவும், ஆச்சரியப்பட்ட பிறகு, சுவர்க்கம் என்னவென்றும், நரகம் என்னவென்றும், அவைகள் எங்கேயிருக்கிறதென்றும் தெரிந்துகொள்ள அவர்கள் ஆவலுள்ளவர்களாகிறார்கள். ஆகையினால், அவர்கள் சதாகாலவாழ்வின் நிலைமையைப்பற்றி சினேகிதர்களால் கற்பிக்கப்பட்டு, பலவிதமான இடங்களுக்கும், பலவிதமானகூட்டங்களுக்கும், சில சமயங்களில் நகரங்களுக்கும், தோட்டங்களுக்கும், ஆனந்த ஸ்தலங்களுக்கும், தாங்கள் இருக்கப்பட்ட புறம்பானவைகளை இவ்விதமான பொருள்கள் உவப்பிக்கிறபடியினால், மகத்துவமான பொருள்களுக்கும்கூட நடத்தப்படுகிறார்கள். இந்த விஷயங்களைப் பற்றி தாங்கள் முழுமையும் தெரியாதவர்களாயிருக்கிறோமென்றும், அவ்வித அறியாமை திருச்சபைக்குள் மேற்கொள்ளுகிறதென்றும், அவர்களுக்கு கோபம் உண்டாகிறவரையில், இறந்த பிறகு ஆன்மாவின் நிலைமையைப்பற்றியும் சுவர்க்கத்தைப்பற்றியும், நரகத்தைப் பற்றியும் சரீரவாழ்வில தாங்கள் உடைத்தாயிருந்த சிந்தனைகளுக்குள் ஒருவர்பின் ஒருவராய்கூட நடத்தப்படுகிறார்கள். அவர்களில் ஏறக்குறைய எல்லாரும் சுவர்க்கத்துக்கு வருகிறோமோ இல்லையோ என்று தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள்; அநேகர், பொல்லாதவர்களும் நல்லவர்களும், புறம்பாய் ஒரேமாதிரி வாழ்க்கையை நடத்துகிறார்களென்றும், அதே மாதிரியே மற்றவர்களுக்கு நன்மை செய்கிறார்களென்றும், கோயில்களுக்கு போகிறார்களென்

றும், பிரசங்கங்களை கேட்கிறார்களென்றும், பிரார்த்திக்கிறார்களென்றும், நினைக்காமலும், புறம்பான செயல்கள் புறப்படுகிற உள்ளான நிலைமைகள் தவிர, புறம்பான செய்கைகளும் பிரார்த்தனையின் புறம்பான செயல்களும், பிரயோசனமில்லை என்று கொஞ்சம் கூட தெரியாமலும், தாங்கள் சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய வாழ்க்கையை, உலகத்திலிருக்கும்போது நடத்தியதினால், சுவர்க்கம் போகப் போகிறோமென்று நம்புகிறார்கள். உள்ளானவைகள் என்னவென்றும், அது அவர்களுக்குள் மனிதனுனவன் சுவர்க்கத்தையும் திருச்சபையையும் காணும்பொருட்டு இருக்கிறதென்றும், தெரிந்துக்கொள்ளுகிறவர்கள் ஆயிரம் ஆயிரங்கள் கணக்கில், ஒருவன்கூட கிடையாது. புறம்பான செயல்கள், எண்ணங்களும் சிந்தனைகளும் இருக்கிறபடி இருக்கின்றன வென்றும், இவைகளில் அவைகள் உண்டாகிற அன்பும் விசுவாசமும் இருக்கின்றனவென்றும், இன்னும் குறைவாய் தெரிந்திருக்கப்படுகிறது. அவர்கள் கற்பிக்கப்பட்டபோதுகூட, பேசுதலும் செயல்படுதலும் தவிர, நினைத்தலும் இச்சித்தலும் பிரயோசனமில்லை என்று, அவர்கள் கிரகித்துக் கொள்ளுகிறதில்லை. கிறிஸ்துவ உலகத்திலிருந்து மறு வாழ்விற்கு தற்காலம் வருகிறவர்கள் அநேகமாய் அவ்விதமானவர்களா யிருக்கிறார்கள்.

**496**. நல்ல ஆவிகள் அவர்களை அவர்களின் குணம் விஷயத்தில் பற்பல விதங்களில் பரிசோதிக்கிறார்கள். ஏனென்றால், மேலே கூறியபடி, நல்லவைகளைப்போல புறம்பான விஷயங்களில் சன்மார்க்கமாய் அவர்கள் ஒரேமாதிரி வாழ்ந்தபடியினால், இந்த முதல் நிலைமையில், பொல்லாதவர்கள் உண்மைகளைப் பேசி, நல்லவர்களைப் போல நல்ல காரியங்களை செய்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் நல்ல துரைத்தனத்துக்குள்ளும், சட்டங்களுக்கு கீழ்படிந்தும் வாழ்ந்து, அதனால், நியாயமானவர்களென்றும் உண்மையானவர்களென்றும் பெயரை பெற்று, சகாயத்தை சம்பாதித்து, இவ்விதமாக கண்யங்களுக்கு உயர்த்தப்பட்டு, திரவியத்தை அடைந்தார்கள்; ஆனால், துன்மார்க்கமான ஆவிகள், புறம்பானவைகளைப்பற்றி சொல்லப்பட்டதை ஆவலுடன் கவனித்து, திருச்சபையினுடையவும் சுவர்க்கத்தினுடையவும், உண்மைகளாகவும் நன்மைகளாகவும் இருக்கிற உள்ளானவைகளைப்பற்றி, சொல்லப்பட்டதை கவனிக்காமலும் இருக்கின்றனவென்பதினால், அவைகள் நல்ல ஆவிகளிலிருந்து முக்கியமாய் வகையறுக்கப்படுகின்றன. உண்மையாகவே,

[illegible] அவைகளை கேட்கின்றன. ஆனால், கவனத்துடனும் சந்தோஷத்துடனும் கேட்கிறதில்லை. அடிக்கடி சில திக்குகளுக்கு தாங்களே திரும்பிக்கொள்ளுவதினாலும், தங்கள் இஷ்டப்படி விடப்பட்ட காலத்திலெல்லாம், அவைகளுக்கு வழிகாட்டுகிற பாதைகளில் நடப்பதினாலும், துஷ்ட ஆவிகள் நல்ல ஆவிகளிலிருந்துகூட வகையறுக்கப்படுகின்றன. அவைகள் திரும்பும் திக்குகளிலிருந்தும், அவைகள் போகும் பாதைகளிலிருந்தும், அவைகளை நடத்துகிற அன்பு என்னவென்று நிதானிக்கப்படுகிறது.

**497**. உலகத்திலிருந்து வரும் எல்லா ஆவிகளும், சுவர்க்கத்திலிருக்கும் ஏதோ ஒரு கூட்டத்துடனும், அல்லது நரகத்திலிருக்கும் ஏதோ ஒரு கூட்டத்துடனும் சேர்க்கப்படுகின்றன; ஆனால், அவைகள், அவைகளின் உள்ளானவைகள் விஷயத்தில் அப்படி சேர்க்கப்படுகின்றன; மேலும் இவைகள், அவைகள் புறம்பானவைகளில் இருக்கிறவரையில் எதற்கும் வெளிப்படுத்தப்படுகிறதில்லை; ஏனென்றால், புறம்பானவைகள் உள்ளானவைகளை ஒளித்து மூடுகின்றன, முக்கியமாய் உள்ளான தீமையில் இருக்கிறவர்கள் விஷயத்தில் அப்படி செய்யப்படுகிறது. ஆனால், பின்னிட்டு, இரண்டாவது நிலைமைக்கு அவைகள் வரும்போது, அவைகளுடைய தீமைகள் வெளிப்படையாகின்றன; ஏனென்றால், அவைகளின் உள்ளானவைகள் திறக்கப்பட்டு, புறம்பானவைகள் தூக்கத்தில் விடப்படுகின்றன.

**498**. இறந்த பிறகு மனிதனுடைய முதல் நிலைமை, சிலர் விஷயத்தில் நாட்கள் கணக்காகவும், மற்றவர்கள் விஷயத்தில் மாதங்களாகவும், இன்னும் மற்றவர்கள் விஷயத்தில் ஒரு வருஷகாலமாகவும், நீடிக்கிறது, ஆனால், யார் விஷயத்திலும் ஒரு வருஷத்திற்குமேல் நீடிக்கிறதில்லை புறம்பானவைகளுடன் உள்ளானவைகள் ஒப்புதல் அல்லது ஒவ்வாமைக்கு தக்கபடி, ஒவ்வொருவருடனும், கொஞ்ச காலம் அல்லது சில காலம் நீடிக்கிறது. ஏனென்றால், ஒவ்வொருவர் விஷயத்திலும், புறம்பானவைகளும் உள்ளானவைகளும் ஒன்றாய், அனுவயப்பட வேண்டியது; அதற்கு காரணம், சூக்கும உலகத்தில் எவனும் ஒருவிதமாய் நினைக்கவும் இச்சிக்கவும், வேறு விதத்தில் பேசவும், செய்யவும் விடப்படுகிறதில்லை. அங்கே ஒவ்வொருவனும், தன்னுடைய சொந்த ஆசையின் அல்லது தன்னுடைய அன்பின் பிரதிமையாக இருக்கவேண்டும்; ஆகையால், அவன் உள்ளே இருக்கிறமாதிரி, புறம்பாயும் இருக்கவேண்டும்.

இந்த காரணத்துக்காக, ஒரு ஆவியின் புறம்பானவைகள், உள்ளானவைகளுக்கு ஒத்துப்போகிற ஒரு சமதளமாக உதவ, முதலில் வெளிப்படுத்தப்பட்டு ஒழுங்குக்கு கொண்டுவரப்படுகின்றன.

## LII

## இறந்த பிறகு மனிதனுடைய இரண்டாவது நிலைமை

**499.** இறந்த பிறகு மனிதனுடைய இரண்டாவது நிலைமை, அவனுடைய அந்தரங்கமானவைகளின் நிலைமை என்று சொல்லப் படுகிறது; ஏனென்றால், அவன் அக்காலத்தில் அவனுடைய மனதின், அதாவது அவனுடைய இச்சையினுடையவும் சிந்தனையி னுடையவும் உள்ளானவைகளுக்குள் விடப்படுகிறான்; அக்காலத் தில், அவனுடைய முதல் நிலைமையில் அவன் இருந்த புறம்பான வைகள், தூக்கத்தில் விடப்படுகின்றன. மனிதனுடைய வாழ்க்கை யையும், அவனுடைய பேச்சையும், அவனுடைய செயல்களையும் கவனிக்கிறவன், ஒவ்வொருவனுக்கும் புறம்பானவைகளும் உள் ளானவைகளும் அல்லது புறம்பானதும் உள்ளானதுமாகிய சிந்தனை களும் கருத்துகளும், இருக்கின்றனவென்று தெரிந்திருக்கலாம். பின்வரும் ஆலோசனைகளிலிருந்து இதை அவன் தெரிந்து கொள் ளலாம்: திருத்தமான கூட்டத்தில் வசிக்கும் ஒவ்வொருவனும், மற்றவர்களைப்பற்றி, ஜனப்பிரவாதத்திலிருந்தாவது சம்பாஷணையி லிருந்தாவது, அவர்களைப்பற்றி தான் கேள்விப்பட்டது அல்லது அறிந்துகொண்டதற்கு தக்கபடி நினைக்கிறான்; என்றாலும், அவன் தன்னுடைய சிந்தனைக்கு தக்கபடி அவர்களோடு பேசுகிறதில்லை; அவர்கள் துன்மார்க்கர்களாயிருந்தாலும், அவன் அவர்களை மரி யாதையுடன் நடத்துகிறான். இது இப்படி இருக்கிறதென்று, தாங்கள் நினைப்பதற்கும் இச்சிப்பதற்கும் மிகவும் பேதகமாய் பேசி, செயல்படுகிற பாசாங்கர்களிடமிருந்தும், முகஸ்துதிக்காரர் களிடமிருந்தும், தாங்கள் இருதயத்தில் வேறு விதமாய் நம்பி தங்களையே நேசித்தபோதிலும், விசுவாசத்திலிருந்தும் அன்பி லிருந்தும் போல, கடவுளைப்பற்றியும், சுவர்க்கத்தைப்பற்றியும், ஆன்மாக்களின் ஈடேற்றத்தைப்பற்றியும், திருச்சபையின் உண்மை களைப்பற்றியும், தங்கள் தேசத்தினுடையவும் அயலானுடையவும் நன்மையைப்பற்றியும்,பேசுகிற வஞ்சகர்களிடமிருந்தும், நமக்கு நன் றாய் தெரியும். ஆகவே, ஒன்று புறம்பானதும் மற்றது உள்ளானது மாக, சிந்தனையின் இரண்டு விதங்கள் இருக்கின்றனவென்றும், தங்களுடைய உள்ளான சிந்தனையில் இருந்து இதர எண்ணங்களை

வைத்துகொண்டு, புறம்பான சிந்தனையிலிருந்து பேசுகிறவர்களு மிருக்கிறார்களென்றும், சிந்தனைகளை இந்த இரண்டு விதங்களும் வெவ்வேறாய் வைக்கப்படுகின்றன வென்றும், உள்ளானது, புறம்பானதில் பாய்ந்து எவ்விதத்திலும் வெளியாகாதபடி கருத்தாய் தடுக்கப்படுகிற தென்றும், இவைகள் எல்லாம் விசதமாக்குகிறது. சிருட்டியிலேயே, மனிதன் தன்னுடைய உள்ளானதும் புறம்பானதுமாகிய சிந்தனையானது, அன்னுவயத்தினால் ஒன்றாகும் படியாக உருவாக்கப்பட்டிருக்கிறான்; இந்த இரண்டும் நன்மையிலிருக்கப்பட்டவர்களிடத்தில் ஒன்றாகின்றன; ஏனென்றால், அவ்விதமானவர்கள், நன்மையானதைமாத்திரம் நினைத்து பேசுகிறார்கள். ஆனால், தீமையிலிருக்கப்பட்டவர்களிடத்தில் உள்ளான சிந்தனையும் புறம்பான சிந்தனையும் ஒன்றாகிறதில்லை; ஏனென்றால், அவ்விதமானவர்கள், தீமையானதை நினைத்து, நன்மையானதை சொல்லுகிறார்கள். ஆகையினால், அவர்கள் விஷயத்தில், ஒழுங்கு தலைகீழாய் திருப்பப்பட்டிருக்கிறது; ஏனென்றால், அவர்களிடத்தில் நன்மையானது வெளியேயும், தீமை உள்ளேயும் இருக்கிறது. ஆகவே, தீமையானது நன்மையின்பேரில் அரசாட்சி செய்து, அதை, அவர்களுடைய அன்பிற்கு சேர்ந்த நோக்கங்களை அடைய ஒரு வழிவகையாக உதவ, ஒரு வேலைக்காரனைப்போல் தனக்கு ஆட்கொள்ளுகிறது. மேலும், அவர்கள் பேசி செய்கிற நன்மையில், அவ்வித முடிவு இருக்கிறபடியினால், அவர்களுடைய உள்ளானவைகளைத் தெரிந்து கொள்ளாதிருக்கிறவர்களுக்கு, புறம்பான உருவத்தில் எவ்வளவு நன்மையாக தோன்றின போதிலும், அவர்களுடைய நன்மை நன்மையல்ல வென்பதும், தீமையினால் பழுதாக்கப்படுகிறதென்பது விசிதமாகிறது. நன்மையிலிருக்கப்பட்டவர்கள் விஷயத்தில், அது வேறுமாதிரியிருக்கிறது; ஏனென்றால், அவர்கள் விஷயத்தில் ஒழுங்கு தலைகீழாய் இல்லாமல், உள்ளான சிந்தனையிலிருந்துவரும் நன்மை புறம்பானதில் பாய்ந்து, அதிலிருந்து வார்த்தையிலும் செய்கைகளிலும் செல்லுகிறது. மனிதன் சிருஷ்டிக்கப்பட்டது, இந்த ஒழுங்கு தான்; ஏனென்றால், இவ்விதமாக அவனுடைய உள்ளானவைகள் சுவர்க்கத்திலும், சுவர்க்கத்தின் வெளிச்சத்திலும் இருக்கின்றன; ஆனால், சுவர்க்கத்தின் வெளிச்சம் என்பது, சுவர்க்கத்தில் ஆண்டவராயிருக்கிற ஆண்டவரிடமிருந்து புறப்படுகிற தெய்வீக உண்மையாக இருக்கிறது (செ. 126 முதல் 140 வரையில்); ஆகையினால்,

றுவர்கள் ஆண்டவரால் நடத்தப்படுகிறார்கள். ஒவ்வொரு மனித னுக்கும் உள்ளான சிந்தனையும் புறம்பான சிந்தனையும் இருக்கிற தென்றும், அவைகள் ஒன்றுக்கு ஒன்று வேறுவேறானதாயிருக்கின் றனவென்றும், தெரிந்திருக்கப்பட இவைகள் எல்லாம் சொல்லப் பட்டன. சிந்தனை என்பது சொல்லப்பட்டபோது, சித்தம்கூட கருதப்படுகிறது; ஏனென்றால், சித்தமில்லாமல் எவனும் நினைக்க முடியாதபடியினால், சிந்தனையானது சித்தத்திலிருந்து வருகிறது. இவைகளிலெல்லாமிருந்து, மனிதனுடைய புறம்பானவைகளின் நிலைமையினாலும், அவனுடைய உள்ளானவைகளின் நிலைமையினா லும் என்ன அருத்தம் கொள்ளப்படுகிறதென்பது தெளிவாகிறது.

**500.** நாம் சித்தத்தையும் சிந்தனையையும் குறித்து பேசும் காலத்தில், சித்தம் என்பதினால், ஆசையும் அன்பும், ஆசைக்கும் அன்புக்கும் சேர்ந்த எல்லா இன்பமும் உவப்பும்கூட அருத்தம் கொள்ளப்படுகிறது; ஏனென்றால், இவைகள் எல்லாம், சித்தத்திற் கும், அதன் விசேஷங்களுக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், ஒரு மனிதன் இச்சிப்பதை, அவன் நேசித்து அதை இன்பமானதாகவும் உவப்பானதாகவும் உணருகிறான்; அதற்கு எதிரிடையாய், ஒரு மனிதன் நேசித்து, இன்பமானதாகவும் உவப் பானதாகவும் உணருகிறதைக்கூட அவன் இச்சிக்கிறான். மேலும், சிந்தனை என்பதினால், மனிதனானவன் தன்னுடைய ஆசையையும் அல்லது அன்பையும் ஸ்திரப்படுத்துகிற ஒவ்வொன்றும் கருதப்படு கிறது; ஏனென்றால், சிந்தனை என்பது, சித்தத்தின் உருவம் அல் லது மனிதன் இச்சித்து வெளிச்சத்தில் தோன்றுகிறதற்கு காரண மாகமாத்திரம் இருக்கிறது. இந்த உருவமானது, சூக்கும உலகத் தில் உற்பத்திஸ்தானத்தை உடைத்தாயிருந்து, மனிதனுடைய ஆவிக்கு தகுதியாய் சேர்ந்த பலவிதமான விவேகத்தோடு இசைந்த கூறுபாடுகள் மூலமாய் பிரத்தியக்ஷமாக்கப்படுகிறது.

**501.** மனிதனானவன், தன்னுடைய உள்ளானவைகள் விஷ யத்தில் இருக்கிறதுபோல முழுமையும் இருக்கிறானென்றும், உள் ளானவைகளுக்கு வேறான புறம்பானவைகள் விஷயத்தில் அவன் இருக்கிறதுபோல் இல்லையென்றும், தெரிந்திருக்கப்படவேண்டும். உள்ளானவைகள் ஆவியைச் சேர்ந்ததென்பதும், மனிதனுடைய உயிரானது அவனுடைய ஆவியின் உயிர் என்பதும் இதற்கு காரணமாயிருக்கிறது; ஏனென்றால், இதிலிருந்து சரீரம் வாழ் கிறது. இந்த காரணத்துக்காககூட, மனிதன் தன் உள்ளான

வைகள் விஷயத்தில் இருக்கிறதுபோல, சதாகாலம் வரையில் அவன் அப்படியே இருக்கிறான். ஆனால், இறந்த பிறகு நீடித்திருக்கிற மனிதனுடைய ஞாபகத்தைப்பற்றி, பேசுங்காலத்தில் காண்பிக்கப்பட்டபடி, புறம்பானவைகள் சரீரத்திற்கு சேர்ந்திருக்கிறபடியினால், இறந்த பிறகு அவைகள் பிரிக்கப்பட்டு, அவைகளில் ஆவியில் விடாது ஓட்டிக்கொள்ளுகிறவைகள் தூக்கத்தில் விடப்பட்டு, உள்ளானவைகளுக்கு ஒரு சமதள மாகமாத்திரம் உதவுகின்றன. மனிதனுடைய சொந்தமானது எது என்றும், அவனுக்கு சொந்தமில்லாதது எதுவென்றும், இது விசதமாக்குகிறது; அதாவது, துன்மார்க்கன் விஷயத்தில், தான் பேசுகிற புறம்பான சிந்தனைக்கும், தான் செயல்படுகிற புறம்பான சித்தத்திற்கும் சேர்ந்த எதுவும், அவனுடைய சொந்தமானதல்ல; ஆனால், அவனுடைய உள்ளான சிந்தனைக்கும் சித்தத்திற்கும் சேர்ந்ததுமாத்திரம் அப்படி சொந்தமானது.

**502.** முன் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட புறம்பானவைகளின் நிலைமையாயிருக்கிற முதல் நிலைமையைக் கடந்த பிறகு, இப்பொழுது ஆவியாயிருக்கிற மனிதன், தன் இஷ்டமாயும் கட்டுப்பாடு இல்லாமலும் நினைக்க விடப்பட்டபோது, உலகத்தில் அவன் இருந்த அவனுடைய உள்ளானவைகளின் நிலைமைக்குள்ளாவது, அவனுடைய உள்ளான சித்தத்தினுடையவும், அதன் சிந்தனையினுடையவும் நிலைமைக்குள்ளாவது விடப்படுகிறான். உலகத்திலிருக்கும்போது தன்னுடைய பேச்சுக்கு அதிக சமீபமாயிருக்கிற அதாவது அதிலிருந்து தான் பேசுகிற சிந்தனையை, தன்னுடைய உள்ளான சிந்தனை பக்கம் பிரித்து, அதில் தங்குகிறதுபோல், தனக்கு தெரியாமலே இந்த நிலைமையில் விழுகிறான்; ஆகையினால், இப்பொழுது ஆவியாயிருக்கிற மனிதனானவன், இந்த நிலைமையிலிருக்கும்போது, அவன் தன்னிலேயும் தன்னுடைய உயிரிலேயுமே இருக்கிறான்; ஏனென்றால், தன்னுடைய சொந்த ஆசையிலிருந்து தன்னிஷ்டமாய் நினைத்தல், மனிதனுடைய உயிரேயாகவும் அவனேயாகவுமிருக்கிறது.

**503.** இந்த நிலைமையிலிருக்கும் ஒரு ஆவியானது, தன்னுடைய சித்தத்திலேயேயிருந்தும், இவ்விதமாக தன்னுடைய ஆசையிலேயே யிருந்தும் அல்லது தன்னுடைய அன்பிலேயே யிருந்தும், நினைக்கிறது. அப்பொழுது அந்த சிந்தனையானது அவன் சித்தத்துடன் ஒன்றுகிறது; இச்சிப்பதை தவிர நினைக்காதமாதிரிபோல் தோன்றுகிறது. அவன் பேசும்போதும் விஷயம் ஏறக்குறைய அப்

படியே; என்றாலும், உலகத்திலிருக்கும்போது கூட்டுறவு வாழ்க்கையினால், இந்த வழக்கமானது அவனுடைய சித்தத்திற்கு சேர்ந்தபடியினால், சித்தத்தின் சிந்தனைகள் நிருவாணமாய் வெளியேற்றப்படும் என்கிற கொஞ்சம் பயத்துடன் அவன் பேசுகிறான் என்கிற வித்தியாசம்மட்டும் உண்டு.

**504**. விலக்கின்றி, எல்லா மனிதர்களும் இறந்த பிறகு இந்த நிலைமையில் விடப்படுகிறார்கள்; ஏனென்றால், அது அவர்களுடைய ஆவியின் சொந்த நிலைமையாயிருக்கிறது. முன்கூறிய நிலைமை, கூட்டத்திலிருக்கும்போது மனிதன் ஆவியிலிருந்தமாதிரி இருக்கிறது; இந்த நிலைமை அவனுடைய சொந்தமானதல்ல, முன் அத்தியாயத்தில் காண்பிக்கப்பட்டபடி, இறந்த பிறகு மனிதன்முதலில் இருக்கிற புறம்பானவைகளின் இந்த நிலைமையானது, அவனுடைய சொந்தமானதல்லவென்பது, அநேக ஆலோசனைகளிலிருந்து விசதமாகலாம்: உதாரணமாக, ஆவிகள் நினைக்கிறதுமட்டுமல்லாமல், தங்களுடைய சொந்த ஆசையிலிருந்துகூட பேசுகிறது என்பதிலிருந்து விசதமாகலாம்; ஏனென்றால் அவர்களுடைய பேச்சானது, தேவர்களின் பேச்சைக்குறித்து எழுதிய அதிகாரத்தில் (நெ. 234 முதல் 245 வரையில்) சொல்லி, காண்பிக்கப்பட்டபடி, அந்த ஆசையிலிருந்து வருகிறது. மனிதனானவன் தனக்குள்ளேயே நினைத்தபோது, அவன் உலகத்திலிருக்கும்போது, இம்மாதிரியாககூட நினைத்தான்; ஏனென்றால், அக்காலத்தில், அவன் தன் வாயின் வார்த்தைகளிலிருந்து நினைக்காமல், பொருள்களை தன் மனதில் மாத்திரம் பார்த்தான்; பின்னிட்டு அவன் அரைமணிகாலத்தில் சொல்லக்கூடியதைவிட அதிகமாய் ஒரு நிமிஷத்தில் பார்த்தான். மனிதனுடைய புறம்பானவைகளின் நிலைமை அவனுடைய சொந்த நிலைமையையாவது அல்லது அவனுடைய ஆவியின் நிலைமையாயாவது இல்லை என்பது, உலகத்தில் அவன் கூட்டத்திலிருக்கும்போது, சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய சட்டங்களை அனுசரித்து பேசுகிறானென்கிற உண்மையிலிருந்தும், அக்காலங்களில், மரியாதையினுடையவும் நல்லொழுக்கங்களுடையவும் எல்லைகளை மீறாதபடி வைக்க, ஒருவன் மற்றொருவனை அரசாளுகிறதுபோல், உள்ளான சிந்தனை புறம்பான சிந்தனையை அரசாளுகிறது என்கிற உண்மையிலிருந்தும் விசதமாகிறது. ஒரு மனிதன் தனக்குள்ளேயே நினைக்குங் காலத்தில், அவன், பிரியப்படுத்தி, சிநேகிதத்தையும், நல்ல கருத்தையும், தயையையும் அடையும்பொருட்டு, இதுவும் பேத

மான வழிகளிலும், இவ்விதமாக, தன்னுடைய சொந்தமான இஷ்டத்தின்படி நடந்திருந்தால், அவன் செய்யப் போகிறதைவிட வேறுவிதமாய் அடையும்பொருட்டு, அவன் எப்படி பேசி செயல்பட வேண்டுமென்று நினைக்கிறான் என்கிற உண்மையிலிருந்தும் கூட அது விசதமாகிறது. ஆகவே, ஆவியானது விடப்படுகிற உள்ளானவைகளின் நிலைமை அவனுடைய சொந்த நிலைமை என்றும், அவன் உலகத்திலிருந்தபோது அவனுடைய சொந்த நிலைமை என்றும் விசதமாகிறது.

**505.** ஒரு ஆவியானது அதன் உள்ளானவைகளின் நிலைமையிலிருக்கும்போது, மனிதன் உலகத்தில் இருந்தபோது தனக்குள்ளேயே என்னமாய் இருந்தான் என்பது தெளிவாய் விசதமாகிறது; ஏனென்றால், அவன் அப்பொழுது தன்னுடைய சொந்தமானதிலிருந்து செயல்படுகிறான். உலகத்திலிருக்கும்போது அந்தரங்கமாய் நல்லவனாயிருந்தவன், இப்பொழுது பகுத்தறிவுடனும், ஞானத்துடனும், நிஜமாகவே, உலகத்திலிருந்ததைவிட அதிக ஞானத்துடனும் செயல்படுகிறான்; ஏனென்றால், அவன் சரீர சம்பந்தத்திலிருந்தும், ஆகையினால், மங்கலை உண்டாக்கி ஒரு மேகத்தை நடுவில் வைத்ததுபோல் வைத்த உலகப் பொருள்களிலிருந்தும் விடுதலை அடைகிறான். ஆனால், உலகத்திலிருந்தபோது தீமையிலிருந்தவன், இப்பொழுது மூடத்தனமாயும் உன்மத்தமாயும், உலகத்திலிருந்ததைவிட நிஜமாக அதிக உன்மத்தமாயும் செயல்படுகிறான்; ஏனென்றால், அவன் சுவேச்சையிலும் தன்னிஷ்டமானவனாகவும் இருக்கிறான். அவன் உலகத்திலிருந்தபோது, வெளி தோற்றத்தில் சொஸ்த புத்தியுள்ளவனாக இருந்தான்; ஏனென்றால், அவன் அதனால் பகுத்தறிவுள்ள மனிதனைப் போல் பொய்யாய் நடந்துகொண்டான்; ஆனால், அவனிடமிருந்து வெளிதோற்றம் நீக்கப்பட்டபோது, அவனுடைய பைத்தியங்கள் வெளிபடுத்தப்படுகின்றன. புறம்பானவைகளில், ஒரு நல்ல மனிதனுடைய ஆயாசத்தை போட்டுக்கொள்ளுகிற ஒரு துன்மார்க்கன், "நீங்கள், வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள், அவைகள் புறம்பே அலங்காரமாய்க் காணப்படும்; உள்ளே மரித்தவர்களின் எலும்புகளினாலும், சகல அசுத்தத்தினாலும் நிறைந்திருக்கும்" என்று ஆண்டவர் கூறியபடி (மத்தே. xxiii, 27), எல்லாவித மலங்களும் மறைந்திருக்கிற, பிரகாசித்துகொண்டும், வெளியே மினுக்கப்பட்டும், ஒரு மூடியினால் மூடப்பட்டுமிருக்கும், ஒரு பாத்திரத்துக்கு ஒப்பிடப்படலாம்

**506**. உலகத்தில் நல்ல வாழ்க்கையை நடத்தி, மனசாட்சியை அனுசரித்து நடந்தவர்களும், தெய்வத்தை ஒத்துக்கொண்டு தெய்விக உண்மைகளை ஒத்துக்கொண்டவர்களும், முக்கியமாய் அந்த உண்மைகளை வாழ்க்கையில் கையாண்டவர்களும், அவர்களுடைய உள்ளானவைகளின் நிலைமைக்குள் விடப்பட்டபோது, நித்திரையிலிருந்து முழுசாக்கிரத்திற்கு எழுப்பப்பட்டவனைப்போலவும், இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கு போகிறவனைப்போலவும், தங்களுக்கே தோன்றுகிறார்கள். மேலும் அவர்கள், சுவர்க்கத்தின் வெளிச்சத்திலிருந்து, இவ்விதமாக, உள்ளான ஞானத்திலிருந்து நினைக்கிறார்கள்; மேலும் அவர்கள் நன்மையிலிருந்து இவ்விதமாக உள்ளான ஆசையிலிருந்து செயல்படுகிறார்கள். சுவர்க்கமே, அவர்களுடைய சிந்தனைகளிலும் ஆசைகளிலும், தங்களுக்கு முன்னிட்டு ஒன்றும் தெரியாத உள்ளான தேவ அருளுடனும் இன்பத்துடனும் செல்லுகின்றன; ஏனென்றால், இப்பொழுது அவர்களுக்கு சுவர்க்கத்து தேவர்களுடன் போக்குவரவு சம்பந்தம் உண்டு. அப்பொழுதுகூட அவர்கள் ஆண்டவரை ஒத்துகொண்டு, தங்கள் வாழ்க்கையிலேயிருந்து அவரை ஆராதிக்கிறார்கள்; ஏனென்றால், கொஞ்சம் மேலேகூறியபடி (நெ. 505), அவர்கள் தங்களுடைய உள்ளானவைகளின் நிலைமையில் இருக்கும் காலத்தில், தங்கள் சொந்த வாழ்க்கையிலிருக்கிறார்கள். சுவேச்சை உள்ளான ஆசைக்கு சேர்ந்தபடியினால், அவர்கள் சுவேச்சையிலிருந்து ஆண்டவரை ஒத்துகொண்டு ஆராதிக்கிறார்கள்; மேலும், இவ்விதமாக அவர்கள் புறம்பான புனிதத்திலிருந்து விலகி, உண்மையான ஆராதனை, உண்மையாய் அமைந்திருக்கிற உள்ளான புனிதத்திற்குள் வருகிறார்கள். வேதத்தின் கட்டளைகள்படி, கிறிஸ்துவ வாழ்க்கையை நடத்தினவர்களின் நிலைமை இவ்விதமாகயிருக்கிறது. ஆனால், உலகத்தில் தீமையில் வாழ்ந்தவர்களுடையவும், மனசாட்சி இல்லாமல், அதனால் தெய்வத்தை தள்ளினவர்களுடையவும் நிலைமை, முழுமையும் எதிரிடையாயிருக்கிறது. தீமையில் வாழ்கிறவர்கள் எல்லாரும், புறம்பான சிந்தனையில் தாங்கள் மறுத்தளிக்கிறதில்லை என்றும் ஒத்துக்கொள்ளுகிறதாகவும், எவ்வளவு நினைத்தப்போதிலும், தங்களுக்குள்ளேயே உள்ளுக்குள்ளாய் தெய்வத்தை நிராகரிக்கிறார்கள்; ஏனென்றால், தெய்வத்தை ஒத்துக்கொள்ளுதலும், அதற்காய் வாழ்தலும் எதிரிடையானவைகள். அவ்விதமான மனிதர்கள், மறுமையில் தங்களுடைய உள்ளானவை

களின் நிலைமைக்குள் வந்தும், பேசுவதைக் கேட்கப்படும்போதும், செயல்படுவதைப் பார்க்கப்படும்போதும், அவர்கள் அறிவு மயங்கினவர்களாகத் தோன்றுகிறார்கள். ஏனென்றால், அவர்களுடைய தீமையான துர் இச்சைகளிலிருந்து எல்லா அருவருப்புகளிலும், மற்றவர்களை நிந்தித்தலிலும், பரிகாசம் செய்வதிலும், தேவநிந்தனையிலும், குரோதத்திலும், சலஞ்சாதித்தலிலும், பிரவாகிக்கிறார்கள். அவர்கள் கபடச் செய்கைகளை யோசிக்கிறார்கள். அவர்களில் சிலர், எந்த மனிதனிலும் இருக்கக்கூடுமென்று நம்பக்கூடாதபடி, தந்திரமாகவும் வன்மமாகவும், அப்படி துர் ஆலோசனை செய்கிறார்கள். ஏனென்றால், உலகத்திலிருக்கும்போது தங்களை அடக்கி இடையூறுசெய்த புறம்பான நிபந்தனைகளிலிருந்துப் பிரிக்கப்பட்டிருக்கிறபடியினால், அவர்கள அக்காலத்தில் தங்களுடைய சித்தத்தின் சிந்தனைகளுடன் இசைந்து செயல்படும்படியாக சுயேச்சை ஒரு நிலைமையில் இருக்கிறார்கள். சுருங்கச் சொல்லின், அவர்கள் தங்களுக்கு பகுத்தறிவுடைமை இல்லாமல்போகச் செய்யப்படுகிறார்கள். ஏனென்றால், உலகத்திலிருக்கும்போது, அவர்களுடைய அறிவு உள்ளானவைகளில் அல்லாமல் புறம்பானவைகளில் இருந்தது; என்றாலும், மற்றவர்களைவிட புத்திசாலிகளாக அவர்களுக்கே அக்காலத்தில தோன்றியது. இந்த இரண்டாவது நிலைமையில் அவர்கள் இருக்கும் காலத்தில், அவர்களுடைய நடத்தை அவ்விதமாயிருந்தபடியினால், தங்களுடைய புறம்பான நிலைமைக்குள் குறுகின இடைக்காலங்களிலும், பிறகு அவர்களுடைய உள்ளானவைகளின் நிலைமையில் இருந்தபோது இருந்த, தங்கள் செயல்களின் ஞாபகத்திற்குள்ளும் அவர்கள் விடப்படுகிறாகள. சிலர் அக்காலத்தில் வெட்கப்பட்டு, தாங்கள் உன்மத்தர்களாக இருந்ததாக ஒத்துக்கொள்ளுகிறார்கள்; ஆனால், சிலர் அப்படி வெட்கப்படுகிறதில்லை; சிலர் தங்களுடைய புறம்பானவைகளின் நிலைமையில் தொடர்ச்சியாய் இருக்கவிடப்படாதபடியினால், கோபப்படுகிறார்கள். ஆனால், அந்த நிலைமையில் அவர்கள் தொடர்சசியாய் இருந்தால, அவர்கள் என்னமாய் இருப்பார்களென்று, அதாவது, அதே தீயநோக்கங்களை இரகசியமானவழிகளில் செய்துமுடிக்கமுயற்சி செய்வார்களென்றும், நன்மையினுடையவும், யோக்கியத்தினுடையவும், நியாயத்தினுடையவும் தோற்றங்களினால், இருதயத்திலும், விசுவாசத்திலும், பேதமையானவர்களை தப்பு வழியாய் நடத்துவார்களென்றும், [illegible] மாய்த்துக்கொள்வார்களென்றும், இவர்களுக்கு காண

பிக்கப்படுகிறது; ஏனென்றால், அவர்களுடைய புறம்பானவைகள் அவர்களுடைய உள்ளானவைகளைப்போல் கடைசியில் எரிந்து, அவர்களுடைய உயிரை எல்லாம் நாசமாக்கும்.

**507**. தேவர்கள், இந்த இரண்டாவது நிலைமையில் இருக்கும் காலத்தில் உலகத்தில் தங்களுக்குள்ளேயே தாங்கள் இருந்தமாதிரி சரிவர தோன்றுகிறார்கள்; மேலும், அவர்கள் இரகசியத்தில் பேசினதும் செய்ததும் வெளிப்படையாக்கப்படுகிறது; ஏனென்றால், அக்காலத்தில் எந்த புறம்பான விஷயமும் அவர்களை தடுக்காத படியினால், தாங்கள் உலகத்தில் இருந்த காலத்தில் பெற்றிருந்த எந்த கீர்த்தியையும் கவனிக்காமல், அவைகளைப் போன்றவைகளையே சொல்லி, அம்மாதிரியான காரியங்களையே பகிரங்கமாய் செய்ய முயலுகிறார்கள். அதனுடன்கூட, தேவர்களுக்கும் நல்ல ஆவிகளுக்கும், அவர்களுடைய உண்மையான குணம் தோன்றும் படியாக, தங்கள் தீமைகளின் அநேக நிலைமைகளில் விடப்படுகிறார்கள்; மேலும், "வெளியாக்கப்படாத மறை பொருளுமில்லை, அறியப்படாத இரகசியமும் இல்லை. ஆதலால், நீங்கள் இருளிலே பேசினது எதுவோ, அது வெளிச்சத்திலே கேட்கப்படும்; நீங்கள் அறைகளில் காதிலே சொன்னது எதுவோ, அது வீடுகளின்பேரில் கூறப்படும்" (லூக். xii. 2, 3.) என்றும், மறுபடியும் "மனுஷர் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து நியாயத் தீர்ப்பு நாளிலே கணக்கொப்புவிக்க வேண்டும் என்று உங்களுக்கு சொல்லுகிறேன்" (மத்தே. xii. 36) என்றும், ஆண்டவர் கூறியபடி, இவ்விதமாக மறைப் பொருள்கள் பகிரங்கமாய் வைக்கப்பட்டு, இரகசியமானவைகள் திறந்து வைக்கப்படுகின்றன.

**508**. இந்த நிலைமையில் இருக்கையில் பொல்லாதவர்களின் குணமானது, சில வார்த்தைகளில் விவரிக்கபடமுடியாது; ஏனென்றால், ஒவ்வொருவனும் அக்காலத்தில், தன்னுடைய துராசைகளுக்கு தக்கப்படி புத்தி குறைச்சல் உள்ளவனாயிருக்கிறான்; மேலும், இவைகள் பற்பல விதமாய் இருக்கின்றன. ஆகையினால் நான் மற்றவைகளைக் குறித்து ஓர் தீர்மானம் ஏற்படக் கூடிய சில முக்கியமான சங்கதிகளை எடுத்துக் காட்டுகிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக தங்களையே நேசித்து, தாங்கள் செய்யும் கிர்த்தியங்களிலும் தொழில்களிலும், தங்கள் கண்யத்தையே நோக்கி, மற்றவர்களைவிட அதிக பாத்திரமானவர்களாக தாங்கள் மதிக்கப்பட்டு இருந்தவர்கள் தங்களுடைய சொந்த கீர்த்தியின் புகழ்ச்சியை அது

பணிக்கும் பொருட்டு, உபயோகங்களின் பொருட்டும், உபயோகத்தின் சந்தோஷத்திலிருந்தும் அல்லாமல், கீர்த்தியின் பொருட்டு உபயோகங்களை செய்தவர்கள், இந்த இரண்டாவது நிலைமையில் மற்றவர்களைவிட அதிக மூடமானவர்களாக இருக்கிறார்கள்; ஏனென்றால், ஒருவன் தன்னையே எவ்வளவு நேசிக்கிறானோ அவ்வளவு சுவர்க்கத்திலிருந்து நீக்கப்படுகிறான்; சுவர்க்கத்திலிருந்து எவ்வளவு நீக்கப்படுகிறானோ, அவ்வளவு ஞானத்திலிருந்து நீக்கப்படுகிறான். சுய அன்பிலேயே யிருந்து, அதே காலத்தில் சூதானவர்களாகவும் இருந்து, கபடமான சாதனைகளால் தாங்களே கீர்த்திகளுக்கு உயர்த்திக்கொண்டவர்கள், ஆவிகளில் மிகவும் கெட்டவைகளுடன் சேர்ந்து, தெய்வீக ஒழுங்கிற்கு மாறுபாடுகளாக இருக்கிற விநோத வித்தைகளைக் கற்றுக்கொள்ளுகிறார்கள்; இவைகள் மூலமாய், தங்களை கனம் பண்ணாதவர்கள் எலலாரையும் தாக்கி தொந்தரை பண்ணுகிறார்கள், மேலும், அவர்கள், சிக்கல் போட்டும், குரோதத்தை போஷித்தும், பழி வாங்க எரிந்தும், தாங்களோ தங்களுக்கு கீழ்ப்படியாதவர்கள் பேரில் தங்களுடைய கோபத்தை போக விடுகிறார்கள். அவர்களுடன் இருக்கும் பொல்லாத கும்பு, அவைகளை உபகரிக்கிற அளவு, இந்த எல்லா பாதகங்களுக்குள்ளும் பிரவாகிக்கிறார்கள். கடைசியில், தாங்கள் எப்படி சுவர்க்கத்திற்கு ஏறி அதை அழிக்கலாமென்றும், அல்லது அங்கே எப்படி தாங்கள் கடவுளர்களாக ஆராதிக்கப்படலாமென்றும், தங்கள் இருதயத்தில் அவர்கள் யோசிக்கிறார்கள்; அவ்வளவு தூரம் அவர்களுடைய பைத்தியம் போகிறது. இந்த குணமுடையவர்களாயிருந்த ரோமன் கதோலிக் கிறிஸ்துவர்கள், மற்றவர்களைவிட அதிக உன்மத்தமானவர்களா யிருக்கிறார்கள்; ஏனென்றால், சுவர்க்கமும் நரகமும் தங்கள் அதிகாரத்துக்கு கீழ்ப்பட்டதென்றும், தாங்கள் பாவங்களை ஏதேச்சையாக குறைக்கக் கூடுமென்றும், அவர்களுக்கு ஓர் உறுதியான கொள்கை உண்டு; தெய்வீகமான எல்லாவற்றின் பேரிலும் பாத்தியம் பாராட்டி, தாங்களே கிறிஸ்து நாதர் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். இவைகள் எல்லாம் நிஜமென்று அவர்கள் கொள்ளும் கொள்கை, அது செல்லுமிடமெல்லாம் மனதை கலக்கி, உபாதி உண்டாக்கும்படியாககூட, இருளைக் கொண்டு வரும்படியாக, அவ்வளவு பலமானதாயிருக்கிறது. இந்த ஆவிகள், இரண்டு நிலைமைகளிலும் அதிகமாய் ஒரே மாதிரி யிருக்கின்றன; ஆனால், இரண்டாவது நிலைமையில்,

அவைகளுக்கு பகுத்தறிவுடைமை கிடையாது. அவைகளின் பைத்தியங்களையும், இந்த நிலைமைக்குபின் அவைகளின் கதியையும் குறித்து, கடைசி தீர்ப்பைப்பற்றியும், பாபிலோன் அழிக்கப்படுதலைப் பற்றியும் எழுதிய சிறு நூலில், சில விவரங்கள் சொல்லப்படும். பிரகுருதிக்கு சிருஷ்டியை ஆரோபித்து, அதிலிருந்து வாயினால் அல்லாவிட்டாலும், இருதயத்திலேயே தெய்வத்தையும், அதனால் திருச்சபையினுடையவும் சுவர்க்கத்தினுடையவும் எல்லா விஷயங் களையும் மறுத்தவர்கள், இந்த நிலைமையில் தங்களைப்போன்ற வர்களுடன் சேர்ந்து, கபடத்தில் மேற்படுகிற ஒவ்வொருவனையும் ஒரு கடவுள் என்று கூபபிட்டு, தெய்வீக பிரதிஷ்டையுடன் அவனை ஆராதிக்கிறார்கள். ஒரு சபையில் அவ்விதமான மனிதர்கள் ஒரு மந்திரவாதியை தொழுவதையும், பிரகுருதியைப்பற்றி தர்க் கிப்பதையும், அவர்கள் மானிட உருவத்தில் மிருகங்களைப்போல் அவ்வளவு மூடத்தனமாய்தாங்களே நடந்துக்கொள்வதையும், நான் பார்த்திருக்கிறேன்; என்றாலும், இவர்களுக்குள், உலகத்திலிருக்கும் போது மாட்சிமைதங்கிய நிலைமைகளில் இருந்தவர்களில் சிலரும் கலவிமான்களென்றும் ஞானிகளென்றும் உலகத்திலிருக்கும்போது நம்பபபட்ட சிலரும் இருந்தார்கள். அம்மாதிரியே, மற்ற நிலைமை களிலும் மற்றவர்கள் விஷயததிலுமிருந்தது. இந்த சில உதாரணங் களிலெலலாமிருந்து, தெய்வத்தை ஒத்துக்கொள்ளுவதின் மூலமா யும், விசுவாசத்தின் வாழ்க்கையின் மூலமாயும், சுவர்க்கத்திலிருந்து எந்தஉட்பெருக்கையும் பெற்றுக்கொள்ளாதவர்கள் எலலார்விஷத்தி லும் இருப்பதுபோல்,தங்களுடைய மனங்களின் உள்ளானவைகளை சுவர்க்கம்பக்கம் மூடினவர்கள், என்ன குணமுடையவர்களென்று அனுமானிக்கபபடலாம். தான் அவ்வித நடத்தை உடையவனாக இருந்து, சட்டத்திற்கும் உயிர் இழப்பதற்கும் பயப்படாமலும் தன்னுடைய கீர்த்திக்கு கெடுதி, அலலது கண்யம், லாபம், இவை களிலிருந்து உண்டாகும் சந்தோஷங்கள் போய்விடுமென்கிற பயம் போன்ற, இவ்வித புறம்பான தடைகள் இல்லாமலும், செயல்பட விடப்பட்டால், தான் என்னமாயிருப்பானென்று, தன்னிடமே இருந்து ஒவ்வொருவனும் தீர்மானிக்கலாம். அப்படியிருந்தாலும், அவ்வித ஆவிகளின் பைத்தியம், உபயோகத்தின் எல்லைகளுக்கு மேலே பிரவாகிக்காதபடி, தடுக்கும்படியாக, ஆண்டவரால் தடை செய்யப்படுகிறது; ஏனென்றால், அவ்வித ஆவிகள்கூட சில உப யோகமான காரியத்தை செய்கின்றன. நல்ல ஆவிகள், அவைகளில்

நிலைமை என்னவென்றும், அதன் குணம் என்னவென்றும், ஆண்டவரால் நடத்தப்படாவிட்டால் மனிதன் என்னமாய் இருப்பானென்றும் அறிந்துகொள்ளுகின்றன. தங்களைப்போன்ற கெட்ட ஆவிகளை ஒன்றாய் சேர்த்து, நல்லவைகளைவிட்டு, அவைகளைப் பிரிப்பது, அவைகள் செய்யும் உபயோகங்களில் வேறொன்றாயிருக்கிறது. கெட்டவைகள் புறம்பாய் சொல்லி, ஒப்பாசாரம் செய்த உண்மைகளும் நன்மைகளும் அவைகளிடமிருந்து நீக்கப்பட்டு, அவைகளின் வாழ்க்கையின் தீமைகளுக்குள்ளும், அவைகளின் தீமையின் பொய்களுக்குள்ளும் கொண்டுவரப்பட்டு, இவ்விதமாக நரகத்துக்கு ஆயத்தம் பண்ணப்படுகிறார்களென்பது மற்றொன்று. ஏனென்றால், அங்கே எவனும் கூறுசெய்த மனதை உடைத்தாயிருக்க அதாவது ஒன்றை நினைத்து பேசவும், மற்றொன்றை இச்சிக்கவும் விடப்படாதபடியினால், எவனும் தான் தன் சொந்த தீமையிலும், அதன் பொய்களிலும் இருக்கிறவரையில் நரகத்திற்கு போகிறதில்லை. அங்கேயிருக்கும் ஒவ்வொரு ஆவியும், உலகத்திலிருக்கும்போது தன்னுடைய ஆவியில் நினைத்தபடி, அதாவது உள்ளான ஆசையின் செல்வாக்கிலிருக்கும் காலத்தில் தனக்குள்ளே சரிவர நினைத்துகொண்டபடி, சித்தத்திலிருந்து, ஆசையினால் அதன் இன்பத்துடனும் சந்தோஷத்துடனும் தன்னுடைய சொந்த அன்பிலிருந்து, தீமையிலிருந்து வந்த பொய்யானதை நினைத்து, தீமையின் பொய்யிலிருந்து பேசவேண்டும். சிந்தனையானது சித்தத்தில் பகிர்ந்து வாங்குகிற அளவு தவிர, அது அல்லாமல், சித்தமே மனிதனை இருக்கிறதென்பது காரணமாயிருக்கிறது; சித்தமானது, மனிதனுடைய சுபாவமாகவே அல்லது குணமாக இருக்கிறது; அதனால், மனிதன் தன்னுடைய சித்தத்தில் விடப்படுதல் என்பது அவனுடைய சுபாவத்திலும் அல்லது குணத்திலும், அதேமாதிரி அவனுடைய வாழ்விலும் விடப்படுதலாயிருக்கிறது; ஏனென்றால், தன்னுடைய வாழ்வினால், மனிதனானவன் சில சுபாவத்தை அடைகிறான்; இறந்தபிறகு, உலகத்திலிருந்த காலத்தில் வாழ்வினால் தான் சம்பாதித்த சுபாவம் இருக்கிறதுபோல இருக்கிறான். இந்த குணமானது சிந்தனையின் மூலமாவது, உண்மையை அறிந்துக்கொள்ளுவதினாலாவது, பொல்லாதவர்கள் விஷயத்தில் சீர்படுத்தப்படவும் அல்லது மாற்றப்படவும் முடியாது.

**509.** இந்த இரண்டாவது நிலைமையில் கெட்ட ஆவிகள் இருக்கும் காலத்தில் எல்லாவித தீமைகளில் அவைகள் பிரவேசிக்

கிறபடியினால், பலமுறையும் சஞ்சலமுண்டாகும்படியாக தெண்
டனை செய்யப்பட பழகியிருக்கிறார்கள். ஆவிகள் உலகத்தில் அநேக
வித தண்டனைகள் உண்டு; உலகத்தில் ஒருவன் அரசனாக இருந்
திருந்தபோதிலும் சரி, அல்லது ஆட்காரனாக இருந்திருந்தபோதி
லும் சரி, மனிதனைப்பற்றி மதிப்பில்லை. தீமையும் தண்டனையும்
ஒன்றாய் சேர்க்கப்பட்டிருப்பதினால், ஒவ்வொரு தீமையும் தன்
னுடைய தண்டனையை தன்னுடன் கூடவே கொண்டுவருகிறது;
ஆகையினால், தீமையிலிருக்கப்பட்டவன், தீமையின் தண்டனையில்
கூட இருக்கிறான். அப்படியிருந்தாலும், எவனும் உலகத்திலிருக்
கும்போது, தான் செய்த தீமைகளுக்கு அல்லாமல், அப்பொழுது
அவன் செய்கிற தீமைகளின்பொருட்டு, தண்டனை அடைகிறான்.
என்றாலும், மனிதர்கள் உலகத்தில் செய்த தங்களுடைய் தீமை
களுக்கு தண்டிக்கப்படுகிறார்களென்றாவது, மறுமையில் அவர்கள்
செய்கிற தீமைகளுக்கு அவர்கள் தண்டனை அடைகிறார்களென்றா
வது, எப்படி சொன்னபோதிலும் ஒன்றேயாகிறது அல்லது ஒரு
பொருளாகிறது; ஏனென்றால், இறந்தபிறகு ஒவ்வொருவனும்,
தன்னுடைய சொந்த வாழ்க்கைக்கும் இம்மாதிரியாக அவ்வித தீமை
களுக்கும் திரும்புகிறான்; ஏனென்றால், மனிதனுடைய குண
மானது, சரீர வாழ்வில் அவன் இருந்ததுபோல் அதேமாதிரி இருக்
கிறது (செ. 470 முதல் 484). இந்த நிலைமையில் தண்டனையாகும்
என்கிற பயமானது, அவர்களுடைய தீமைகள் அடக்கப்படுவதற்கு
ஓரே வழிவகையாக இருக்கிறபடியினால் கெட்ட ஆவிகள் தண்டிக்கப்
படுகின்றன. ஒவ்வொருவனும் தன்னுடைய சுபாவத்திலிருந்து, அப்
பொழுது செயல்படுகிறபடியினாலும், அந்த சுபாவமானது தண்டனை
களால் மாத்திரம் எல்லைபடுத்தப்பட்டு, உண்டாக்கப்படலாமாகை
யாலும், எச்சரிப்பும் பயிர்ச்சியும் சட்ட பயமும் பெயர்போய்விடு
மென்கிற பயமும், இனி யாதொரு பிரயோசனமுமில்லை. ஆனால்,
நல்ல ஆவிகள் தாங்கள் உலகத்திலிருக்கும்போது, தீமைகளை செய்
திருந்தபோதிலும், எப்பொழுதும் தண்டிக்கப்படுகிறதில்லை; ஏனென்
றால், அவர்கள் தீமைகள் திரும்பிவருகிறதில்லை. அவர்களுடைய
தீமைகள் வேறுவிதம் அல்லது சுபாவமுள்ளதென்றும், உண்
மைக்கு விரோதமான எந்த எண்ணத்திலிருந்தும், உள்ளானவை
களிலிருந்து பிரிந்த புறம்பானவைகளில், அவர்கள் இருந்த காலத்
தில், ஒரு குருட்டு இன்பத்தினால் அவர்கள் கொண்டுபோகப்பட்ட,
தங்களுடைய பெற்றோர்களிடமிருந்து தாங்கள் பாரம்பரையாய்

பெற்றதைவிட, வேறு இதர கெட்ட இருதயத்திலிருந்தும், அவை கள் செய்யப்படவில்லை என்றும், தெரிந்து கொள்ளவும்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது.

**510.** ஒவ்வொருவனும், தான் உலகத்திலிருந்தபோது, தன்னுடைய ஆன்மா இருந்த தன்னுடைய சொந்த கூட்டத்திற்குள் வருகிறான்; ஏனென்றால், ஒவ்வொருவனும் தன்னுடைய ஆவி விஷயத்தில், சுவர்க்கத்துக்கு சேர்ந்த அல்லது நரகத்திற்கு சேர்ந்த, ஏதோ ஒன்றின் கூட்டத்துடன் சேர்க்கப்படுகிறான். ஒரு பொல்லாத மனிதன் நரகத்தின் ஒரு கூட்டத்துடனும், ஒரு நல்ல மனிதன் சுவர்க்கத்தின் ஒரு கூட்டத்துடனும் சேர்க்கப்படுகிறான்; ஒவ்வொருவனும், இறந்தபிறகு தன்னுடைய சொந்த கூட்டத்திற்கு திரும்புகிறான் (நெ. 438). ஆவியானது, இந்த கூட்டத்திற்கு தொடர்பானபடிகளால் கொண்டுவரப்பட்டு, கடைசியில் அதற்குள் பிரவேசிக்கிறது. ஒருகெட்ட ஆவியானது தன்னுடைய உள்ளானவைகளின் நிலைமையில் இருக்கும்போது, அது படிப்படியாய் தன்னுடைய சொந்த கூட்டத்திற்கேயும், கடைசியில் இந்த நிலைமை முடிகிறதற்கு முன், அதற்கே நேராய்திருப்பப்படுகிறது; இந்த நிலைமை முடிந்த பிறகு அது, தன்னைப்போன்றவர்கள் இருக்கப்பட்ட நரகத்திற்குள் தானே விழுகிறது. அது தானே கீழே விழும்போது, தனனுடைய கால்கள் மேலேயும், தலை கீழாயும், தலைகீழாய் விழுகிற ஒருவனைப் போல் தோன்றுகிறது. அது அப்படி தோன்றுகிறதற்கு காரணம், நரகத்திற்குரிய பொருள்களை நேசித்து, சுவர்க்கத்திற்குறியவைகளை தள்ளிவிட்டபடியினால், அது தலை கீழான ஒழுங்கிலிருக்கிறது, என்பதா யிருக்கிறது. சில கெட்ட ஆவிகள், இந்த இரண்டாவது நிலைமையில், நரகத்திற்குள் பிரவேசித்து, மறுபடியும் வெளியே வருகின்றன; ஆனால், இவைகள் முழுமையும் பாழாக்கப்பட்ட போது செய்கிறதுபோல, தலைகீழாய் விழுகிறதாக தோன்றுகிறதில்லை. தாங்கள் உலகத்திலிருந்த காலத்தில், தங்கள் ஆவிகள் விஷயத்தில், தாங்கள் இருந்த கூட்டமேகூட, சரீர வாழ்வில்கூட தாங்கள் நரகத்திலிருந்ததாக தெரிந்துகொள்ளும்பொருட்டு, தங்களுடைய புறம்பானவைகளின் நிலைமையில் இருக்கும் காலத்தில், அவைகளுக்கு காண்பிக்கப்படுகிறது; என்றாலும், நரகத்திலேயே இருக்கிறவர்களுடைய நிலைமைகளைப்போல், ஒரு நிலைமையில் அல்லாமல், ஆவிகள் உலகத்தில் இருக்கிறவர்களின் நிலைமையைப் போல், ஒரு நிலைமையில் காண்பிக்கப்படுகிறது; நரகத்திலிருக்கிற

வர்கள் நிலைமையுடன் ஒப்பிட்டு இந்த நிலைமையைப்பற்றி, இனி மேல் அதிகம் சொல்லப்படும்.

**511.** நல்ல ஆவிகளிலிருந்து தீய ஆவிகளின் பிரிவினை, இந்த இரண்டாவது நிலைமையில் சம்பவிக்கிறது. முதல் நிலைமையில், அவைகள் சேர்ந்திருக்கின்றன; ஏனென்றால், ஒரு ஆவியானது தன்னுடைய புறம்பானவைகளில் இருக்கும் காலத்தில், அது உலகத்திலிருந்ததுபோல இருக்கிறது. இவ்விதமாக கெட்டவைகள் நல்லவைகளுடனும், நல்லவைகள் கெட்டவைகளுடனும் இருக்கின்றன; ஆனால், அது தன்னுடையது, உள்ளானவைகளுக்குள் கொண்டுவரப்பட்டு, தன்னுடைய சொந்த சுபாவம் அல்லது சித்தத்திற்குள் விடப்பட்டபோது, விஷயம் வேறுமாதிரி யிருக்கிறது. கெட்ட ஆவிகளிடமிருந்து நல்ல ஆவிகளின் பிரிவினை பற்பல விதங்களில் செய்யப்படுகிறது. பொல்லாதவைகள், தங்கள் முதல் நிலைமையில் நல்ல சிந்தனைகளாலும் ஆசைகளாலும், தாங்கள் சம்பந்தம் வைத்திருந்த கூட்டங்களுக்கும், அப்படியே தாங்கள் கெட்டவைகள் அல்லவென்று, நம்ப புறம்பான தோற்றங்களால் தூண்டப்பட்ட அந்த கூட்டங்களுக்கே, சாதாரணமாய் நடத்தப் படுகிறார்கள். சாதாரணமாய், ஒரு அகன்ற எல்லை மூலமாய் அவைகள் நடத்தப்படுகின்றன. மேலும், எவ்விடத்திலும் அவைகள் நிஜமாய் என்னமாயிருக்கின்றன வென்று, நல்ல ஆவிகளுக்கு வெளிப்படையாக்கப்படுகிறது. பிறகு, அவைகளைப் பார்த்த உடனே நல்ல ஆவிகள் தாங்களே திரும்பி கொள்ளுகின்றன; அவைகள் திரும்பிகொண்ட உடனே, வழிகாட்டப்பட்ட கெட்ட ஆவிகள் தாங்களே அவைகளைவிட்டு, தங்கள் முகங்களை திருப்பிகொண்டு, தாங்கள் பிரவேசிக்க இருக்கிற நரகத்து கூட்டம் இருக்கும் திசையை பார்க்கின்றன. இதைத் தவிர, பிரவினையின் அநேக இதர விதங்கள் சொல்லப்படலாம்.

## சுவர்க்கத்துக்கு வருகிறவர்களின் பயிற்சியின் நிலைமையா யிருக்கிற இறந்த பிறகு மனிதனுடைய மூன்றாவது நிலைமை.

**512.** இறந்த பிறகு மனிதனுடைய அல்லது மனிதனுடைய ஆவியின் மூன்றாவது நிலைமை, பயிற்சி நிலைமையாயிருக்கிறது. இந்த நிலைமையானது, சுவர்க்கத்துக்குள்வந்து தேவர்களாகிறவர்களுக்கு உண்டு; அது, நரகத்திற்கு வருகிறவர்களுக்கு இல்லை; ஏனென்றால், அவர்கள் கற்பிக்கப்பட முடியாது; ஆகையினால், அவர்கள் இரண்டாவது நிலைமை மூன்றாவது' நிலைமையாககூட இருக்கிறது; அது, அவர்கள் தங்கள் சொந்த அன்பிற்கும், இவ்வித மாக, அதைப்போன்ற அன்பிலிருக்கிற நரகத்தின்கூட்டத்திற் கும் முழுமையும் திருப்பப்படுவதில் முடிகிறது. இது சம்பவிக் கும் காலத்தில், அவர்கள் அந்த அன்பிலிருந்து நினைத்து இச்சிக் கிறார்கள்; அந்த அன்பானது நரகத்துக்கு அடுத்ததாயிருப்பதினால், தீமையானதைவிட வேறொன்றையும் இச்சிக்கிறதுமில்லை, பொய்யா னதைவிட வேறொன்றையும் நினைக்கிறதுமில்லை;ஏனென்றால், அவை கள் அவர்களுடைய அன்பைச் சேர்ந்தவர்களாயிருக்கிறபடியினால், இவைகள் எல்லாம் அவர்களுடைய இன்பங்களாயிருக்கின்றன. ஆகவே, அவர்களின் அன்பின் முடிவுகளை அடையும்வழி வகை யாக, முன்னமே அவர்கள் எடுத்துக்கொண்ட நன்மையானதும் உண்மையானதுமாகிய எல்லாவற்றையும் அவர்கள் தள்ளுகிறார் கள். ஆனால், நல்லவர்கள், இரண்டாவது நிலைமையிலிருந்து, சுவர்க் கத்துக்கு பயிற்சியினால், அவர்களுடைய ஆயத்தத்தின் நிலைமையா யிருக்கிற மூன்றாவது நிலைமைக்கு, கொண்டுவரப்படுகிறார்கள். ஏனென்றால், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அறிவு களினால் தவிர, அதாவது பயிற்சியினால் தவிர, சுவர்க்கத்துக்கு எவ னும் ஆயத்தம்பண்ணப்படமாட்டான்; ஏனென்றால், சூக்கும நன்மையும் உண்மையும், அவைகளின் எதிரிடையானவைகளாகிய தீமையினுடையவும் பொய்யினுடையவும், சுபாவமும் என்ன வென்றும் கற்பிக்கப்பட்டாலொழிய யாராலும் தெரிந்துக்கொள்ள முடியாது. நியாயமென்றும் நிஷ்கபடமென்றும் சொல்லப்படுகிற, தேசாசாரமானதும் சன்மார்க்கமானதுமாகிய,நன்மையும் உண்மை

யும் என்னவென்று, உலகத்தில் தெரிந்துகொள்ளப்படலாம்; ஏனென்றால், உலகத்தில் நியாயத்தைக் கற்பிக்கும் தேசாசாரமான சட்டங்கள் இருக்கின்றன; மேலும், உண்மையையும் நேர்மையையும் சுட்டிப் பேசுகிற சன்மார்க்க சட்டங்களை அநுசரித்து, மனிதன் வாழக் கற்றுக்கொள்ளுகிற கூட்டங்களின் சம்பந்தம், அங்கே இருக்கிறது. ஆனால், சூக்கும நன்மையும் உண்மையும் உலகத்திலிருந்து அல்லாமல், சுவர்க்கத்திலிருந்து கற்றுக்கொள்ளப்படுகிறது. நிஜமாகவே, வேதத்திலிருந்தும், வேதத்திலிருந்துவந்த திருச்சபையின் கொள்கையலிருந்தும், அவைகள் அறிந்து கொள்ளப்படலாம். என்றாலும், மனிதனானவன், அவனுடைய மனதின் உள்ளானவைகள் விஷயத்தில் சுவர்க்கத்திலிருந்தாலொழிய, அவைகள் வாழ்க்கைக்குள் செல்லாது; மனிதனானவன் தெய்வத்தை ஒத்துக்கொண்டு, அதே காலத்தில், வேதத்தில் வேண்டுமென்று சொல்லியிருப்பதினால் தான் அப்படி செய்யவேண்டுமென்கிற மன நிதானத்திலிருந்து நியாயமாகவும் உண்மையாகவும் செயல்படும்போது, அவன் சுவர்க்கத்திலிருக்கிறான். இவ்விதமாக, முடிவுகளாக தனக்கேயும் உலகத்தினெண்ணிக்கைக்குமல்லாமல், தெய்வத்தின்பொருட்டு, நியாயமாயும் உண்மையாயும் அவன் வாழ்கிறான். ஆனால், ஒரு கடவுள் இருக்கிறாரென்றும், ஒரு சுவர்க்கமும் நரகமும் இருக்கிறதென்றும், இறந்தபிறகு ஒரு வாழ்க்கை இருக்கிறதென்றும், கடவுளானவர் எல்லாவற்றிற்கும் மேலாயும், அயலான்தானேயாயும், நேசிக்கப்படவேண்டு மென்றும், வேதமானது தெய்வீகமானபடியினால், அதில் சொல்லப்படப்பட்டது நம்பப்படவேண்டுமென்றும், முதலில் கற்பிக்கப்பட்டிருந்தால் ஒழிய, எவனும் அப்படி செயல்பட முடியாது. இந்த உண்மைகளை தெரிந்துகொண்டு ஒத்துக்கொண்டால் ஒழிய, மனிதனானவன் பரமார்த்தமாய் நினைக்கமுடியாது. மேலும், அவன் அவைகளைப்பற்றி நினைக்காவிட்டால், அவைகளை இச்சிக்க முடியாது; ஏனென்றால், ஒரு மனிதன் தனக்கு தெரியாததைப் பற்றி நினைக்க முடியாது. மேலும் தான் நினைக்க முடியாததை இச்சிக்கமுடியாது. ஆகையினால், மனிதன் இந்த உண்மைகளை இச்சிக்கும்கால், சுவர்க்கம், அதாவது சுவர்க்கத்தின் மூலமாய் ஆண்டவர், மனிதனுடைய வாழ்க்கையில் பாய்கிறார்; ஏனென்றால், அவர் சித்தத்திலும், சித்தத்தின் மூலமாய் சிந்தனையிலும், இரண்டின் மூலமாய் வாழ்க்கையிலும் பாய்கிறார்; ஏனென்றால், அவைகளிலிருந்து தான், மனிதனுடைய வாழ்வு

ருக்கிறது. ஆகவே, சூக்கும நன்மையும் உண்மையும் உலகத்தி ருந்து அல்லாமல், சுவர்க்கத்திலிருந்து கற்றுக்கொள்ளப்படுகிற தென்றும், எவனும் சுவர்க்கத்துக்கு போதனையினால் அல்லாமல், ரூபத்தம் பண்ணப்பட முடியாதென்றும் விசதமாகிறது. எவ னுடைய வாழ்க்கையிலும், ஆண்டவர் எவ்வளவுபாய்கிறாரோ, அவ்வ ளவு அவர் அவனுக்குகற்பிக்கிறார்; ஏனென்றால், அவர் உண்மைகளை தெரிந்துக்கொள்ளும் பொருட்டு, அன்புடன்சித்தத்தை அவ்வளவு கொளுத்தி, சிந்தனையை அவைகளை தெரிந்துக்கொள்ளும் பொருட்டு தெளிவிக்கிறார். இவைகள் எவ்வளவு சம்பவிக்கிறதோ, அவ்வளவு மனிதனுடைய உள்ளானவைகள் திறக்கப்பட்டு, அவைகளில் சுவர்க்கமானது நடப்படுகிறது; மேலும், தெய்வீகமானதும் சுவர்க் கத்துக்கு அடுத்தது மானதுமாகியவைகள், சன்மார்க்க வாழ்வின் நேர்மையானவைகளிலும், மனிதன் விஷயத்தில் தேசாசாரமான வாழ்க்கையின் நியாயமானவைகளிலும், பாய்ந்து அவைகளை பர மார்த்தமானவைகளாக செய்கின்றது; ஏனென்றால், அப்பொழுது தெய்வத்தின் பொருட்டாய் இருப்பதனால், மனிதனானவன் தெய்வத்திலிருந்து அவைகளை செய்கிறான். ஏனென்றால், அந்த மூலத்திலிருந்து மனிதன் செய்கிற சன்மார்க்கமானதும் தேசாசார மானதுமாகிய வாழ்க்கையின் உண்மையானதும் நியாயமானது மாகியவைகள், பரமார்த்த வாழ்வின் காரியங்களாகவே இருக் கின்றன; மேலும் காரிய சித்திகள், தங்களுடைய மூல காரணத் திலிருந்து தங்களுடைய எல்லா குணத்தையும் அடைகின்றன; ஏனென்றால், காரணம் இருக்கிறபடி, காரியசித்தியுமிருக்கிறது.

**513**. அநேக கூட்டங்களின் தேவர்களாலும், முக்கியமாய் வடக்கு திக்குகளிலும், தெற்கு திக்குகளிலும் இருக்கிறவர்களாலும் பயிற்சி செய்யப்படுகிறது; ஏனென்றால், இந்த தேவதா சம்பந்த மான கூட்டங்கள், நன்மை உண்மைகளின் அறிவுகளிலிருந்து விவேகத்திலும் ஞானத்திலும் இருக்கிறார்கள். பயிற்சி செய்யும் இடங்கள், சுற்றிலும் வெகு தூரம் விசாலித்து, வடக்கு பக்கத்தி லிருந்துகொண்டு, தங்களுடைய குணத்துக்கும் ஏற்றுகொள்ளும் சக்திக்கும் தக்கபடி, எல்லாரும் ஒவ்வொருவரும் அங்கே கற்பிக்கப் படும்படி, சுவர்க்கத்துக்கு அடுத்த நன்மையின் வகைகளுக்கும் விகற்பங்களுக்கும் தக்கபடி, ஒழுங்குபடுத்தப்பட்டு வகையறுக்கப் பட்ட, பற்பல மாதிரிகளாக இருக்கின்றன. கற்பிக்கப்பட வேண்டிய நல்ல ஆவிகள், ஆவிகள் உலகத்தில் தங்களுடைய இரண்டாவது

நிலைமைவிட்டு வந்தபோது, அங்கே ஆண்டவரால் நடத்தப்படுகிறார்கள்; அப்படி யிருந்தாலும், எல்லாரும் அப்படி நடத்தப்படுகிறதில்லை; ஏனென்றால், உலகத்தில் கற்பிக்கப்பட்டவர்கள், சுவர்க்கத்துக்கு ஆண்டவரால்கூட ஆயத்தம் பண்ணப்பட்டு, வேறு வழியில் சுவர்க்கத்துக்கு கொண்டுபோகப்படுகிறார்கள்; சிலர், இறந்த உடனே கொண்டுபோகப்படுகிறார்கள்; வேறு சிலர், உலகத்திலிருக்கும் காலத்தில், கீர்த்திகளிலிருந்தும் செல்வங்களிலிருந்தும், தங்களிடம் பொருந்திய தங்களுடைய சிந்தனைகளுடையவும் ஆசைகளுடையவும், பருக்கனானவைகள் நீக்கப்படுகிற நல்ல ஆவிகளுடன் கொஞ்ச காலம் இருந்த பிறகு கொண்டுபோகப்பட்டு, இவ்விதமாய் பரிசுத்தமாக்கப்படுகிறார்கள். சிலர் நாசமாக்கப் படுகிறார்கள்; சிலர் அதிக கடினமாய் துன்பப்படுகிற தாழ்ந்த பூமி என்று சொல்லப்படுகிற பாதத்தின் உள்ளங்காலுக்கு கீழ் உள்ள இடங்களில் அப்படி செய்யப்படுகிறது; பொய்களில் ஸ்திரப்பட்டு, அப்படியிருந்தாலும் நல்வாழ்க்கையை நடத்தினவர்கள் இவர்கள்தான்; ஏனென்றால், ஸ்திரமானபோது, பொய்கள் பிடிவாதமாய் நிலைகொள்ளுகின்றன; மேலும், அவைகள் நீக்கப்படுகிறவரையில், உண்மைகள் பார்க்கப்பட முடியாது; இவ்விதமாய் ஏற்றுக்கொள்ளப்படவும் முடியாது. ஆனால், நாசமாக்குதலும், அவைகள் செய்யப்படுகிற பல மாதிரிகளும், தெய்வலோக இரகசியங்கள் என்னும் நூலில் சொல்லப்படுகின்றன.

**514.** பயிற்சி செய்யும் இடங்களில் இருக்கப்பட்டவர்கள் எல்லாரும் தனித்தனியாய் வசிக்கிறார்கள்; ஏனென்றால், ஒவ்வொருவனும், தன்னுடைய உள்ளானவைகள் சம்பந்தப்பட்டவரையில், தான் சீக்கிரத்தில் பிரவேசிக்கப்போகிற சுவர்க்கத்தின் கூட்டத்துடன், சம்பந்தப்பட்டிருக்கிறான்; இவ்விதமாக, சுவர்க்கத்தின் கூட்டங்கள் சுவர்க்கத்து உருவத்துக்கு தக்கபடி, ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கிறபடியினால் (மேலே செ. 200-212 பார்க்கவும்), போதிக்கப்படும் இடங்களும் அம்மாதிரியே யிருக்கின்றன; இந்த காரணத்துக்காக, சுவர்க்கத்திலிருந்து அந்த இடங்கள் பார்க்கப்பட்டபோது, சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கத்தைப்போன்ற ஏதோ ஒன்று பார்க்கப்படுகிறது. நீளத்தில் கிழக்கிலிருந்து மேற்கு வரையிலும், அகலத்தில் தெற்கிலிருந்து வடக்கு வரையிலும் அவைகள் பரப்பப்பட்டிருக்கின்றன; ஆனால், அகலமானது நீளத்தைவிட குறைவாய் தோன்றுகிறது. சாதாரணமாக, ஒழுங்கு இம்மாதிரி

பிருக்கிறது. முதல் வரிசையில், தாங்கள் குழந்தைகளாக யிருந்த போது இறந்தவர்களும், ஆரம்ப வாலிப வயது வரையில் சுவர்க்கத்தில் வளர்க்கப்பட்டவர்களும், தங்கள் இளம்பிராய நிலைமையை தங்களுக்கு போதித்தவர்களுடன், அங்கே கழித்த பிறகு இங்கே ஆண்டவரால் கொண்டுவரப்பட்டு, கற்பிக்கப்படுகிறவர்களும், இருக்கிருர்கள். இவர்களுக்கு பின் புறத்தில், பருவம் வந்த பிறகு இறந்தவர்களும், தாங்கள் உலகத்திலிருந்த காலத்தில் வாழ்க்கையின் நன்மையிலிருந்து, உண்மையின் ஆசையில் இருந்தவர்களும், போதிக்கப்படுகிற இடங்கள் இருக்கின்றன. இவர்களுக்கு பின் புறத்தில், மகமத்திய மதத்தை அறிக்கையிட்டு, உலகத்தில் சன்மார்க்க வாழ்க்கையை நடத்தி, ஒரு தெய்வத்தையும், ஆண்டவரை தீர்க்க தரிசியாகவேயும் ஒத்துக்கொண்டவர்கள் இருக்கிருர்கள். மகமத் என்பவர் அவர்களுக்கு உதவி செய்ய சக்தி யில்லாதவரானபடியால், அவர்கள் அவரைவிட்டு நீங்கும் காலத்தில், அவர்கள் ஆண்டவரை நெருங்கி, ஆராதித்து அவருடைய தெய்வீகத்தைக் ஒத்துக் கொள்ளுகிருர்கள்; அப்பொழுது கிறிஸ்துவ மதத்தை போதிக்கப்படுகிருர்கள். இவர்களுக்கு பின் புறத்தில், அதிகமாய் வடக்கு பக்கத்தில் தங்களுடைய மதத்தை ஒத்து, நல்ல வாழ்க்கையை உலகத்தில் நடத்தி, அதனுல், ஓர்வித அநுசைதன்னியத்தை அடைந்து, தங்களுடைய துரைத்தனத்தின் சட்டங்களுக்கு அவ்வளவாக அல்லாமல், பரிசுத்தமாய் கவனிக்கப்பட வேண்டியதாகவும், செயல்களினுல் எந்த விதத்திலும் மீறப்படாததாகவும், தாங்கள் நம்புகிற மதத்தின் சட்டங்களின்பொருட்டு, நியாயமானதையும் சரியானதையும் செய்த, பற்பல கிறிஸ்துவர் அல்லாத தேச ஜனங்களுக்கு போதிக்கப்படும் இடங்கள் இருக்கின்றன. இவர்கள் எல்லாம் கற்பிக்கப்பட்டபோது, ஆண்டவரை ஒத்துக்கொள்ள இலகுவாய் நடத்தப்படுகிருர்கள்; ஏனென்ருல், கடவுள் கண்களுக்கு புலப்படாதவர் என்று அல்லாமல், மானிட உருவத்தில் புலப்படக்கூடியவர் என்று, அவர்களுடைய இருதயங்கள் பேரில் அழுத்தப்படுகிறது. மற்றவர்களைவிட இவர்கள் அதிகமாய் இருக்கிருர்கள்; அவர்களில் அதிக மேலானவர் ஆபிரிக்கா கண்டத்திலிருந்து வருகிருர்கள்.

**515.** ஆனுல், எல்லாரும் அதே வழியிலும், சுவர்க்கத்தின் அதே கூட்டங்களினுலும் கற்பிக்கப்படுகிறதில்லை. இளம்பிராய முதல் சுவர்க்கத்தில் கற்பிக்கப்பட்டவர்கள், உள்ளான சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்களுல் கற்பிக்கப்படுகிருர்கள்; ஏனென்ருல்

[illegible] சமயத்தின் பொய்களிலிருந்து பொய்களை உட்கொள்ளவுமில்லை; அன்றியும், உலகத்தின் கீர்த்திகளிலிருந்தும் செல்வங்களிலிருந்தும், உண்டாகும் கூலங்களினால் தங்களுடைய பரமார்த்த வாழ்க்கையை அசுத்தப்படுத்தவுமில்லை. பருவம் வந்த பிறகு, இறந்தவர்கள், அநேகமாய் கடைசி சுவர்க்கத்தின் தேவர்களால் கற்பிக்கப்படுகிறார்கள்; ஏனென்றால், அந்த தேவர்கள், இன்னும் பெற்றுக்கொள்ள முடியாத, உள்ளான ஞானத்திலிருக்கிற உள்ளான சுவர்க்கங்களின் தேவர்களைவிட, தங்களுக்கு அதிகம் பொருந்தினவர்களா யிருக்கிறார்கள். ஆனால், மகமதியர்கள் உலகத்தில் அதே சமயத்தில் இருந்து, கிருஸ்துவ மதத்திற்கு மாற்றப்பட்ட தேவர்களால் கற்பிக்கப்படுகிறார்கள். கிறிஸ்துவர் அல்லாதவர்களும்கூட, தங்கள் சொந்த தேச ஜனங்களின் தேவர்களால் கற்பிக்கப்படுகிறார்கள்.

**516**. எல்லா படிப்பும் அங்கே, கொள்கையில்லாத வேதத்தில் அல்லாமல், வேதத்திலிருந்து வந்த கொள்கையிலிருந்து போதிக்கப்படுகிறது. கிறிஸ்துவர்கள், வேதத்தின் உள்ளான அர்த்தத்துடன் குறைவற்று, இணங்குகிற சுவர்க்கத்துக்கு அடுத்த கொள்கையிலிருந்து கற்பிக்கப்படுகிறார்கள். மகமதியர்களும் கிறிஸ்துவர் அல்லாதவர்களும்போன்ற மற்றவர்கள், தாங்கள் உலகத்தில் தங்கள் வாழ்க்கையை அடைந்த சமயத்தின் நல்ல கோட்பாடுகளுடன் ஒத்து, பரமார்த்த வாழ்வானது, சன்மார்க்க வாழ்க்கையினால் கற்பிக்கப்படுகிறது என்பதில் மாத்திரம், சுவர்க்க கொள்கையிலிருந்து வித்தியாசப்படுகிற, அவர்கள் கிரகிப்புக்கு பொருந்துகிற கொள்கைகளின் மூலமாய் கற்பிக்கப்படுகிறார்கள்.

**517**. சுவர்க்கங்களில் போதனைகள், பூமியில் கொடுக்கப்படும் போதனைகளிலிருந்து, அறிவுகள் ஞாபகத்தில் வைக்கப்படாமல், வாழ்க்கையில் கொண்டுவரவேண்டுமென்கிற இந்த விஷயத்தில் வித்தியாசப்படுகின்றன; ஏனென்றால், தாங்கள் வாழ்க்கையுடன் ஒத்துபோகிற ஒவ்வொன்றையும், அவைகள் பெற்றுக்கொண்டு உட்கொள்ளுகிறபடியினாலும், அதனுடன் ஒத்துப்போகாத எதையும் ஏற்றுக்கொள்ளாமல், இன்னும் குறைவாய் உட்கொள்ளாதபடியினாலும், ஆவிகளின் ஞாபகம் அவைகளின் வாழ்க்கையிலிருக்கிறது; ஏனென்றால், ஆவிகள் ஆசைகளாயிருக்கின்றன; ஆகையினால், தங்களுடைய ஆசைகளுக்கு ஒத்த ஒரு மானிட உருவத்தில் இருக்கின்றன. அவர்கள் விஷயத்தில் விஷயம் இப்படியிருப்பதி

ளுக்கு உண்மையினிடத்து கொள்ளும் ஆசை, வாழ்க்கையின் உப யோகங்களின் பொருட்டு இடைவிடாமல் எழுப்பிவிடப்படுகிறது; ஏனென்றால், ஆண்டவர், ஒவ்வொருவனும் தன்னுடைய சுய குணத்துக்கு தகுந்த உபயோகங்களை நேசிக்கும் பொருட்டு அமைத்துவைக்கிறார்; அந்த அன்பானது ஒரு தேவனுக்கும் எதிர்ப்பார்த்தலில் உயர்த்தப்படுகிறது. சுவர்க்கத்தின் எல்லா உபயோகங்களும், ஆண்டவருடைய இராச்சியம், அவர்கள் தாய் நாடானபடியினால் அந்த இராச்சியத்திற்காக இருக்கும் பொது நன்மைக்கு சம்பந்தப்பட்டிருப்பதினாலும், பொறுக்கி எடுத்ததும், நுட்பமுமாகிய உபயோகங்கள், அந்த பொது உபயோகத்துக்கு, அதிக நெருக்கமாயும் நிறைவாகவும், சம்பந்தப்பட்டிருக்கிறதற்கு தக்கபடி, மதிக்கப்பட வேண்டியிருப்பதினாலும், கணக்கற்றவைகளாயிருக்கிற எல்லா பொறுக்கி எடுத்ததும், நுட்பமானதுமாகிய உபயோகங்கள் நல்லவைகளாகவும் சுவர்க்கத்துக்கு அடுத்தவைகளாகவும் இருக்கின்றன. ஆகையினால், ஒவ்வொருவன் விஷயத்திலும், உண்மையினிடத்து கொள்ளும் ஆசை, உபயோகத்தினிடத்துகொள்ளும் ஆசையுடன், அவைகள் ஒன்றாகும்படி அவ்வளவு ஊடாட்டமாய் சேர்க்கப்பட்டிருக்கிறது; அதனால், உண்மையானது அவர்கள் கற்றுக்கொள்ளும் உண்மைகள், உபயோகத்தின் உண்மைகளாயிருக்கும்படியாக, உபயோகத்தில் நடப்பட்டிருக்கிறது. இந்த விதத்தில் தேவதாசம்பந்தமான ஆவிகள் கற்பிக்கப்பட்டு, சுவர்க்கத்துக்கு ஆயத்தம் பண்ணப்படுகின்றன. அந்த உபயோகத்துக்கு தகுதியான உண்மையினிடத்து கொள்ளும் ஆசை, உலகத்தில் அவைகளில் அநேகம் தெரிந்திருக்கப்படாத பற்பல வழிவகைகளால் புகட்டப்படுகிறது; முக்கியமாய், சூக்கும உலகத்தில் ஆயிரம் விதங்களிலும், தன்னுடைய மனதின் உள்ளானவைகளிலிருந்து, அதன் சரீரத்தின் புறம்பானவைகளுக்கு ஆவிக்குள் பிரவேசித்து, இவ்விதமாக முழுமையும் பகட்டும்படியாக, அவ்வித இன்பங்களுடனும் சந்தோஷங்களுடனும், தெரிய காட்டப்படுகிற உபயோகங்களின் பிரதிநிதிகளால் புகட்டப்படுகிறது. ஆகவே, ஆவியானது தன்னுடைய சொந்த உபயோகத்தைப் போலாகிறது. ஆகையினால், போதனையினால் அது தொடக்கப்படுகிற தன்னுடைய சொந்தக் கூட்டத்திற்குள் பிரவேசிக்கும்போது, அது தன்னுடைய சொந்த உபயோகத்தில் இருக்கும் காலத்தில், தன்னுடைய சொந்த வாழ்வில் இருக்கிறது. இவைகளிலெல்லாமிருந்து, புறம்பான உண்மைகளாயிருக்கிற அறிவுகள்,

[illegible]யும் சுவர்க்கத்துக்கு செலுத்தாமல், அறிவுகளினால் மனம் [illegible] போதிக்கப்பட்ட உபயோகத்தின்உயிராயிருக்கிற உயிரே அப்படி செய்கிறதென்று விசதமாகிறது.

**518.** தங்கள் கல்வியின் பொருட்டும், வேதத்தினுடைய வும், தங்கள் திருச்சபைகளின் கொள்கையினுடையவும், பெரும் ஞானத்தின் பொருட்டும், தாங்கள் ஞானிகளென்றும், "ஞானவான் கள் ஆகாய மண்டலத்தின் ஒளியைப்போலவும், அநேகரை நீதிக் குட்படுத்துகிறவர்கள் நட்சத்திரங்களைப்போலவும்,என்றென்றைக்கு முள்ள சதாகாலங்களிலும் பிரகாசிப்பார்கள்" (தானியல் xii 3.) என்று, சொல்லப்பட்டவர்களால் கருதப்படுகிற அவ்விதமானவர் களாக இருக்கிறோமென்றும் நம்பி, உலகத்தில் அதைப்பற்றி நினைப் பதினால், தாங்கள் சுவர்க்கத்துக்கு சென்றும் மற்றவர்களுக்கு முன் னிட்டு தாங்கள் ஏற்றுக்கொள்ளப்படுவோமென்றும், தாங்களே உள்ளத்தில் கண்டு உணர்ந்த சில ஆவிகளும் இருந்தன. ஆனால் அவர்களுடைய அறிவுகள் ஞாபகத்திலா அல்லது வாழ்க்கையிலா இருந்ததென்று கண்டுபிடிக்க அவைகள் பரீக்ஷிக்கப்பட்டன. அவர் களில், உண்மையினிடத்து உண்மையான ஆசைகொண்டவர்கள் அதாவது, பிரதானமாய் பரமார்த்த உபயோகங்களாயிருக்கிற தங் கள் நோக்கமாக, சரீரத்துக்கும் உலகத்திற்கும் சேர்ந்ததிலிருந்து பிரிக்கப்பட்ட உபயோகங்களை உடைத்தாயிருந்தவர்கள், தாங்கள் கற்பிக்கப்பட்டபோது சுவர்க்கத்தில்ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள்; அப்பொழுது சுவர்க்கததில் பிரகாசிப்பது எதுவென்று, அதாவது அது தெய்வீக உண்மை என்று, தெரிந்துகொள்ள அருள் செய்யப் பட்டது. ஏனென்றால், தெய்வீக உண்மையானது, அந்த வெளிச் சத்தின் கிரணங்களை பெற்று, அவைகளை பலவித மினுக்குகளாக திருப்புகிற ஒரு சமதளமாயிருக்கிற, உபயோகத்தில் யிருக்கும் சுவர்க்கத்தின் வெளிச்சமாயிருக்கிறது. ஆனால், தங்களுடைய அறி வுகள் ஞாபகத்தில்மாத்திரம் இருந்து, அவைகளின் மூலமாய் உண்மைகளைப்பற்றி யூகித்து அறிந்து, பொய்யாயிருந்தபோதிலும், ஸ்திரப்படுத்தப்பட்ட பிறகு, உண்மைகளாக கண்ட நிதார்த்தங் களாக, தாங்கள் ஒத்துக்கொண்டவைகளை ஸ்திரப்படுத்தும் சக் தியை சம்பாதித்தவர்கள், அவர்களுடைய அறிவை மயக்கும் விசு வாசத்திலிருந்து ஈடேற்றும்பொருட்டு, அவர்கள் சுவர்க்கத்தின் எந்த வெளிச்சத்திலுமல்லாமல், அவ்வித விவேகத்துடன் சாதாரண மாய் துணைபோகும், இறுமாப்பிலிருந்து, தாங்கள் மற்றவர்களை

விட அதிகமாக கற்றவர்கள் என்றும், அதனால் சுவர்க்கத்துக்கு வருவோமென்றும், தேவர்களால் தொண்டு செய்யப்படுவோர்களென்றும், கொண்ட நம்பிக்கையில் இன்னும் இருந்தபடியினால், அவர்கள் முதலாவது அல்லது இறுதியான சுவர்க்கத்திற்கு, ஏதோ ஒரு தேவர்கள் கூட்டத்திற்குள் பிரவேசிக்க கொண்டுபோகப்பட்டார்கள்; ஆனால், வாயிலிலேயே சுவர்க்கத்தின் வெளிச்சம் உட்பாய்வதினால், அவர்கள் கண்கள் இருட்டாக்கப்பட ஆரம்பித்து, அவர்கள் புத்தி கலங்கி, கடைசியில் தாங்கள் இறந்துபோகிறது போல் மூச்சுவிட தவித்தார்கள். அவர்கள், சுவர்க்கத்து அன்பாயிருக்கிற சுவர்க்கத்தின் சூட்டை உணர்ந்தபோது, உள்ளுக்குள்ளாய் வேதனைக்கு உள்பட ஆரம்பித்தார்கள். ஆகையினால், அவர்கள் வெளியே தள்ளப்பட்டு, பின்னிட்டு, அறிவுகள் ஒரு தேவனை உண்டாக்காமல், அறிவுகளினால் சம்பாதிக்கப்படும் உயிர் அப்படி செய்கிறதென்று கற்பிக்கப்பட்டார்கள்; ஏனென்றால், அறிவுகளையே நோக்கும்கால் அவைகள், சுவர்க்கத்துக்கு வெளியே யிருக்கின்றன; ஆனால் அறிவுகளினால் சம்பாதிக்கும் வாழ்க்கை சுவர்க்கத்துக்குள்ளிருக்கிறது.

**519**. மேலே விவரித்த இடங்களில் போதனையினால் ஆவிகள் சுவர்க்கத்துக்கு ஆயத்தம் பண்ணபபட்டபோது,—அநேக விவரங்களை ஒன்றுசேர்த்து கிரகிக்கிற சூக்ஷும அபிப்பிராயங்களில் அவைகள் இருப்பதினால் கொஞ்சகாலத்தில் இது செய்யப்படுகிறது—நேர்த்தியான சணனுற்புடைவையினால் செய்யப்பட்டதுபோல், அநேகமாய் வெண்மையாயிருக்கிற தேவர்கள் ஆடைகளால் அப்பொழுது அவைகள் உடுத்தப்படுகின்றன. இவ்விதமாக அவைகள் மேலே சுவர்க்கத்துக்கு போகும் வழிக்கு கொண்டுவரப்பட்டு, தேவர்கள் காப்பில் ஒப்புவிக்கப்பட்டு, பின்னிட்டு, மற்ற தேவர்களால் ஏற்றுகொள்ளப்பட்டு, கூட்டங்களிலும், அநேக தேவ அருள் பெற்றவைகளிலும் விடப்படுகிறார்கள். பின்னிட்டு, ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த கூட்டத்திற்கு நடத்தப்படுகிறான்; இதுகூட பற்பல வழிகளில் செய்யப்படுகிறது; சில சமயங்களில் சுற்றுவழிகளில் செய்யப்படுகிறது. அவைகள் நடத்தப்படுகிற வழிகள் எந்த தேவனுக்கும் தெரியாமல், ஆண்டவருக்கு மாத்திரம் தெரியும். தங்கள் சொந்த கூட்டத்திற்கு வரும்போது, அவைகளுடைய உள்ளானவைகள் திறக்கப்படுகின்றன; அந்த கூட்டத்திலிருக்கும் தேவர்களின் உள்ளானவைகளைப்போல், அவைகள் இருக்கிறபடியினால், அவை

கள் உடனே ஒத்துக்கொள்ளப்பட்டு, சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

**520.** இதுவரையில் சொன்னதுடன், அந்த இடங்களி லிருந்து சுவர்க்கத்துக்கு வழிகாட்டுகிறதும், புதிதாய் வந்த தேவர்கள் உட்செலுத்தப்படுகிறதுமாகிய, வழிகளைப்பற்றி சில குறிப்பானவைகளை நான் சேர்க்கிறேன். போதனை செய்யப்படும் ஒவ்வொரு இடத்திலுமிருந்து, ஒன்று கிழக்குபக்கமும், மற்றது மேற்கு திக்கிலும் செல்லுகிற இரண்டு வழிகள் விதமாக, எட்டு வழிகள் இருக்கின்றன. ஆண்டவருடைய பரமார்த்த இராச்சியத்துக்குள் வருகிறவர்கள், கிழக்கு வழியில் செலுத்தப்படுகிறார்கள்; ஆனால், ஞான சம்பந்தமான இராச்சியத்திற்கு வரப்பட்டவர்கள், மேற்கு வழியில் செலுத்தப்படுகிறார்கள். ஆண்டவருடைய பரம இராச்சியத்திற்கு வழிகாட்டும் நான்கு வழிகளும், ஒலிவை மரங்களாலும், பற்பல பழம் தரும் மரங்களாலும், அலங்கரிக்கப்பட்டதாக தோன்றுகின்றன; ஆனால், ஆண்டவருடைய ஞானசம்பந்தமான இராச்சியத்துக்கு நடத்தப்பட்டவைகள், திராட்ச கொடிகளாலும் வாகை மரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதாக தோன்றுகின்றன. இது அன்னுவயத்திலிருந்து இருக்கிறது; ஏனென்றால், திராட்சக் கொடிகளும் வாகைமரங்களும், உண்மையினிடத்து கொள்ளும் ஆசைக்கும், அதன் உபயோகங்களுக்கும் அன்னுவயப்படுகின்றன; அப்படியிருக்கையில், ஒலிவை மரங்களும், கனிதரும் மரங்களும், நன்மையினிடத்து கொள்ளும் ஆசைக்கும், அதன் உபயோகங்களுக்கும் அன்னுவயப்படுகின்றன.

# LIV

## நிபந்தனையில்லாத இரக்கத்தின் ஒரு செயலினால் எவனும் சுவர்க்கத்துக்கு வருகிறதில்லை.

**521**. சுவர்க்கத்தைப்பற்றியும், சுவர்க்கத்துக்கு போகும் வழியைப்பற்றியும், மனிதனிலிருக்கும் சுவர்க்கத்தின் வாழ்க்கையைப் பற்றியும், கற்பிக்கப்படாதவர்கள், சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப் படுதல், இரக்கத்திலிருந்து மாத்திரம் வருகிறதென்றும், பக்தியுள்ளவர்களுக்கும், ஆண்டவர் பரிந்து பேசுகிறவர்களுக்கும் அருள் செய்யப்படுகிறதென்றும், இவ்விதமாக தயவினால் மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்படுதல் என்றும், அதனால் விலக்கில்லாமல் எல்லா மனிதரும் ஆண்டவர் இஷ்டப்பட்டால் இரக்ஷிக்கப்படலாமென்றும், சிலர், நரகத்திலிருப்பவர்கள் எல்லாரும் அம்மாதிரி கடைதேற்றப்படலாமென்று நம்புகிறார்கள் என்றும் நினைக்கிறார்கள். ஆனால், அப்படி நினைக்கிறவர்கள், மனிதனானவன் தன்னுடைய வாழ்க்கையிருக்கிறபடி முழுமையும் இருக்கிறானென்றும், அவனுடைய வாழ்க்கையானது, அவனுடைய சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும் உள்ளானவைகள் விஷயத்தில் மட்டுமல்லாமல், அவன் சரீரத்தின் புறம்பானவைகள் விஷயத்தில்கூட, அவன் அன்பு இருக்கிறதுபோலிருக்கிறதென்றும், சரீர உருவமானது, உள்ளானவைகள் காரியத்தில் தாங்களே காண்பித்துக்கொள்ளுகிற புறம்பான உருவமாக மாத்திரம் இருக்கிறதென்றும், ஆதலால், ஒருவனுடைய அன்பு முழு மனிதனுயிருக்கிறதென்றும், (மேலே நெ. 363 பார்க்கவும்), அவனைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்களாயிருக்கிறார்கள். அதுவுமன்றி, சரீரமானது, தன்னிடமே இருந்து அன்றி, அதன் ஆவியிலிருந்து உயிருடன் இருக்கிறதென்றும், ஒரு மனிதனுடைய ஆவியானது, அவனுடைய ஆசையாகவேயிருக்கிறதென்றும், அவனுடைய சூக்கும சரீரம் இறந்த பிறகு பகிரங்கமாய் தோன்றுகிற (மேலே நெ. 453 முதல் 460 வரையில் பார்க்கவும்) மானிட உருவத்தில் மனிதன் ஆசையைத் தவிர வேறொன்றுமில்லை என்றும், அவர்களுக்கு தெரியாது. இந்த விஷயங்கள் எல்லாம் தெரியப்படாதிருக்கிறவரையில், மோக்ஷம் என்பது, இரக்கம் என்றும் அருள் என்றும் சொல்

படைப்படுகிற, ஆண்டவருடைய நல்ல ஏதேச்சையைத் தவிர, வேறொன்றுமில்லை என்றும் நம்ப மனிதன் தூண்டப்படலாம்.

**522.** தெய்வ இரக்கம் என்னவென்பது முதலில் சொல்லப்படவேண்டும். தெய்வ இரக்கம் என்பது முழு மானிட வமிசத்தினிடத்தும், அதை இரக்ஷிக்க கொள்ளும் சுத்தமான இரக்கமா இருக்கிறது. இந்த முடிவுக்காக ஒவ்வொரு மனிதனுடனும் அது தொடர்சசியா யிருக்கிறது; எபபொழுதும் அவனைவிட்டு ஒற்றிப் போகிறதில்லை; ஆகையினால, இரக்ஷிக்கப் படக்கூடிய ஒவ்வொருவனும் இரக்ஷிக்கப்படுகிறான். ஆனால், எவனும் வேதத்தில் ஆண்டவரால் வெளியிடபபட்ட தெய்வீக வழி வகைகளால் தவிர இரக்ஷிக்கப் படமாட்டான். தெய்வீக வழிவகைகள் தெய்வீக உண்மைகளென்று சொலலப்படுகின்றன, இவைகள், இரக்ஷிக்கப் பட, எப்படி வாழவேண்டுமென்று மனிதனுக்கு கற்பிக்கின்றன. இந்த உண்மைகளால், ஆண்டவர் மனிதனை சுவாக்கத்துக்கு நடத்துகிறார்; அவைகளினால், சுவர்க்கததின் வாழ்க்கையை அவனுக்குள் நடுகிறார். இதை ஆண்டவா எலலார் விஷயத்திலும் செய்கிறார்; ஆனால், சுவர்க்கத்து வாழ்க்கை, தீமையானது எதிர்க்கிறபடியினால், அந்த தீமையிலிருந்து விலகாத எவனிடத்திலும் நடபபட முடியாது. ஆகையினால், மனிதனானவன் தீமையிலிருந்து எவவளவு தூரம் விலகுகிறானோ, அவ்வளவு தூரம், உலகத்தில் இளம் பிராயம் முதல் வாழ்நாள் முடிவு வரையிலும், பின்னிட்டு, சதா காலம் வரையிலும், ஆண்டவர் அவனை தன்னுடைய தெய்வீக வழிவகைகளால், சுத்தமான இரக்கததிலிருந்து நடத்துகிறார். இது தான், கருதபபட்ட தெய்வ இரக்கம் என்பது. ஆகவே, ஆண்டவருடைய இரக்கம், சுத்தமான இரக்கமாயிருக்கிறது என்றும், ஆனால், அது நிபந்தனை யில்லாததலல, அதாவது, எபபடி வாழ்ந்திருந்த போதிலும், அது ஏதேச்சையாக எல்லாரையும் இரக்ஷிக்க கூடியதல்லவென்றும் விசதமாகிறது.

**523.** ஆண்டவர், தானே ஒழுங்காயிருப்பதினால், ஒழுங்குக்கு விரோதமாய் எப்பொழுதும் செயல் படுகிறதில்லை ஆண்டவரிடமிருந்து புறப்படும் தெயவீக உண்மை ஒழுங்கை ஏற்படுத்துகிறது; தெய்வீக உண்மைகள் ஒழுங்கின் சட்டங்களா யிருக்கின்றன. இந்த சட்டங்களை அனுசரிதது ஆண்டவர் மனிதனை நடத்துகிறார். ஆகையினால், நிபந்தனையில்லாத இரக்கத்தினால் மனிதனை இரக்ஷித்தல், தெய்வீக ஒழுங்குக்கு எதிரிடையா

யிருக்கிறது; தெய்வீக ஒழுங்குக்கு எதிரிடையா யிருக்கிறது, தெய்வத்துக்கே எதிரிடையா யிருக்கிறது. தெய்வீக ஒழுங்கு மனிதனில் சுவர்க்கமாயிருக்கிறது. ஆனால், இந்த ஒழுங்கை, தெய்வீக உண்மைகளா யிருக்கிற ஒழுங்கின் சட்டங்களுக்கு விரோதமாய் வாழ்வதினால், தன்னிலேயே மனிதனானவன் புரட்டினான். இந்த ஒழுங்கிற்குள், மனிதனானவன் ஆண்டவரால், ஒழுங்கின் சட்டங்கள் மூலமாய், சுத்தமான இரக்கத்திலிருந்துகொண்டு வரப்படுகிறான்; அவன் எவ்வளவு தூரம் மறுபடியும் கொண்டு வரப் படுகிறானே, அவ்வளவு தூரம் சுவர்க்கத்தை தன்னிலேயே ஏற்றுக்கொள்ளுகிறான்; தன்னிலேயே சுவர்க்கத்தை பெற்றுக் கொள்ளுகிறவன், சுவர்க்கத்துக்கு வருகிறான். ஆகவே, ஆண்டவருடைய தெய்வீக இரக்கமானது, நிபந்தனையில்லாத இரக்கமாய் அல்லாமல், சுத்தமான இரக்கமாயிருக்கிறதென்று, மறுபடியும் விசதமாகிறது.

**524**. நிபந்தனையல்லாத இரக்கத்தினால், மனிதர்கள் இரக்ஷிக்கப்பட கூடுமானால், எல்லாரும் இரக்ஷிக்கப்படுவார்கள்; நரகத்திலிருப்பவர்களும் இரக்ஷிக்கப்படுவார்கள்; மேலும் நிஜமாகவே, நரகம் என்பதே இருக்காது; ஏனென்றால், ஆண்டவர், இரக்கமேயாகவும், அன்பேயாகவும், நன்மையேயாகவும் இருக்கிறார். ஆகையினால், அவர் எல்லாரையும் நிபந்தனையல்லாமல் இரக்ஷிக்க சக்தியுடையவரா யிருக்கிறாரென்றும், அப்படி இரக்ஷிக்கிறதில்லையென்றும் சொல்லுதல், அவருடைய தெய்வீக தன்மைக்கு எதிரிடையா யிருக்கிறது. ஆண்டவர் எல்லாருடைய மோக்ஷத்தையும், டாரையும் தண்டிக்கா திருத்தலையும், இச்சிக்கிறார் என்று வேதத்திலிருந்து தெரிந்துகொள்ளப்படுகிறது.

**525**. கிறிஸ்தவ உலகத்திலிருந்து, இதர வாழ்விற்கு வருகிறவர்களில் அநேகர், நிபந்தனை யில்லாத இரக்கத்தினால் தாங்கள் இரக்ஷிக்கப்படப் போகிறதாக கொள்ளும் நம்பிக்கையை, தங்களுடன் கொண்டுவருகிறார்கள்; ஏனென்றால், அந்த இரக்கத்திற்காக அவர்கள் பிரார்த்திக்கிறார்கள்; ஆனால், பரிசோதிக்கப்பட்டபோது, சுவர்க்கத்தில் பிரவேசித்தல் என்பது ஏற்கையை அடைதல் மாத்திரம் என்றும், உள்ளே விடப்பட்டவர்கள் சுவர்க்கானந்தத்தில் இருக்கிறார்களென்றும், நம்புவதாக கண்டுபிடிக்கப்படுகிறார்கள். அவர்கள் சுவர்க்கம் என்னவென்றும், சுவர்க்கானந்தம் என்னவென்றும் முழுமையும் தெரியாதவர்களா யிருக்கிறார்

கள்; ஆகையினால், சுவர்க்கமானது, ஆண்டவரால் யாருக்கும் மறுதளிக்கப்படுகிறதில்லை என்றும், அவர்கள் அதில் பிரவேசிக்கலா மென்றும், விரும்பினால் அங்கேகூட நிற்கலாமென்றும், அவர்கள் சொல்லப்படுகிறார்கள். அப்படி விரும்பினவர்கள்கூட, ஏற்றுக்கொள் ளப்பட்டார்கள்; ஆனால், அவர்கள் முதல் வாயிற்படியை எட் டின உடன், தங்களுக்குள்ளேயே சுவர்க்கானந்தத்திற்கு பதிலாக, நரக வேதனையை காணும்படியாகவும், அந்த அதிர்ச்சியினால் தலை கீழாய் விழும்படியாயும், தேவர்கள் இருக்கப்பட்ட அன்பா யிருக்கிற சுவர்க்கத்து சூட்டின் சேர்க்கையிலிருந்தும், தெய்வீக உண்மையா யிருக்கிற சுவர்க்கத்து வெளிச்சத்தின் உட்பெருக்கி லிருந்தும், அவ்வித இருதய வேதனையை அடைந்தார்கள். இவ்வித மான நிபந்தனை யில்லாத இரக்கத்திலிருந்து, எவனுக்கும் சுவர்க்கம் கொடுக்கப்படாதென்று, உயிருள்ள அனுபவத்தினால் அவர்கள் கற்பிக்கப்பட்டார்கள்.

**526.** இந்த விஷயத்தைப்பற்றி, தேவர்களுடன் அப்போ தைக்கப்போது பேசி, உலகத்தில் தீமையிலிருக்கப்பட்டவர்களில் அநேகர், மற்றவர்களுடன் சுவர்க்கத்தைப்பற்றியும், சதாகால வாழ்வைப்பற்றியும், அவர்கள் பேசும்போது, சுவர்க்கத்துக்கு வருதல் என்பது, இரக்கத்திலிருந்து மாத்திரம் சேர்க்கப்படுதல் என்பதைவிட, வேறு இதர அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிற தில்லை என்று, அவர்களுக்கு நான் சொல்லியிருக்கிறேன். மேலும், இது விசுவாசத்தை மோட்சத்தின் நடுத்தரமாக செய்கிறவர்களால் முக்கியமாய் நம்பப்படுகிறது. ஏனென்றால், அவர்களின் சமயத்தின் நியமங்களிலிருந்து வாழ்க்கையைப்பற்றியும், வாழ்க்கையை உண் டாக்குகிற அன்பின் செய்கைகளைப்பற்றியும், அதனால், மனிதனில் சுவர்க்கத்தை ஆண்டவர் நட்டு, சுவர்க்கானந்தத்தை ஏற்றுக்கொள்ள தகுந்தவனாக, அவனை செய்கிற வேறு இதர வழி வகைகளைப் பற்றியும், அவர்களுக்கு எண்ணிக்கையில்லை; மேலும், ஒவ்வொரு நிஜமான மத்தியஸ்தத்தையும், இவ்விதமாக அவர்கள் தள்ளுகிற படியினால், மனிதனானவன் இரக்கத்திலிருந்து மாத்திரம் வருகிறா னென்கிற ஆவசியகமான பலனை ஏற்படுத்தி, பிதாவாகிய கடவுள் குமாரனுடைய பரிந்து பேசுகையினால், இரக்கமுள்ளவர்கள் ஆகி றார் என்று நம்புகிறார்கள். அவ்விதகோட்பாடு, மனிதன் விசுவாசத் தினால் மட்டும் இரக்ஷிக்கப்படுகிறான் என்கிற உத்தேசத்திலிருந்து, ஆவசியகமாய் தொடர்கிறதென்று, தங்களுக்கு தெரியுமென்று

ரவர்கள் இவைகளுக்கு எல்லாம் பதில் சொன்னார்கள்; அந்த ஏட்பாடானது, மற்ற எல்லாவற்றிற்கும் பிரதானமானதாலும், து நிஜமில்லாதபடியினாலும், அதற்குள் எந்த உயிரும் பாயுக் டாதபடியினாலும், ஆண்டவரைப் பற்றியும், சுவர்க்கத்தைப் ற்றியும், இறந்த பிறகு வாழ்க்கையைப்பற்றியும், சுவர்க்க ஆனந் த்தைப்பற்றியும், அன்பினுடையவும் தருமத்தினுடையவும் சாரத் தைப்பற்றியும், பொதுவாக நன்மையைப்பற்றியும், உண்மையுடன் அதன் சேர்க்கையைப்பற்றியும், அதனால் மனிதன் உயிரைப்பற்றி அது எங்கிருந்து வருகிறது என்பதைப் பற்றியும், அது என்ன வென்பதைப்பற்றியும், திருச்சபையில் தற்காலத்தில் பரவி இருக் கிற அஞ்ஞானத்துக்கு இதுதான் காரணம்; அப்படியிருந்தாலும் சிந்தனையானது எவனுடைய உயிரையும் எப்பொழுதும் ஏற்படுத் தாமல், சித்தமும் அதனால் ஏற்படும் செய்கைகளும், அப்படி உண் டாக்குகிறதென்றும், உயிரானது, சிந்தனையானது சித்தத்திலிருந்து உண்டாகிறவரையில்மட்டும், சிந்தனையிலிருந்து வருகிறதென்றும், அதுவுமன்றி, பக்தியானது அன்பிலிருந்து உண்டாகிறவரையில் தவிர, பக்தியிலிருந்து உயிர்வருகிறதில்லை என்றும் தெரிந்திருக்கப் படவேண்டும்; விசுவாசமானது அன்பாயிருக்கிற அதன் மூலம் இங்கலாய், அறிவைத்தவிர வேறு ஒன்றுமில்லாதபடியினாலும், சிலர் விஷயத்தில், அது விசுவாசத்தைப்போன்றதாயிருக்கிற ஓர்வித வசப் படுத்துதலாய்மாத்திரம் இருக்கிறபடியினாலும், தேவர்கள் இந்த ஜனங்களுக்கு விசுவாசம் மாத்திரம் எவனிடத்திலும் இருக்க முடியாதென்று விசனப்படுகிறார்கள் (மேலே நெ. 482 பார்க்கவும்). அவ்வித கொள்கை, ஒரு மனிதனுடைய அன்புடன் ஒட்டிக் கொண்டால் ஒழிய பிரிக்கப்பட்டிருப்பதினால், அது மனிதனுடைய வாழ்க்கையில் அல்லாமல் அதற்கு வெளியேயிருக்கிறது. இன்ன மும், மனிதன் விஷயத்தில், மோக்ஷத்துக்கு பிரதானமான வழி வகைகளைப்பற்றி, அவ்வித நியமத்திலிருக்கிறவர்கள் நிபந்தனை யில்லாத இறக்கத்தை நம்புவதைவிட, வேறு ஒன்றும் செய்ய முடியாதென்று, அவர்கள் சொல்லுகிறார்கள்; ஏனென்றால், தீமை யான வாழ்க்கையை நடத்துகிறவர்கள், மற்றவர்களைப்போல அதேமாதிரி நினைத்து, தாங்களே இணங்கக்கூடுமாகையால், ஸ்தூல வெளிச்சத்திலிருந்தும், அதேமாதிரி பார்வையின் அனுபவத்தி லிருந்தும், விசுவாசம் மாத்திரம் மனிதனுடைய வாழ்க்கையை உண்டாக்குகிறதில்லை என்று அவர்கள் உணருகிறார்கள். ஆகவே,

இறக்கும் காலத்தில் மத்தியஸ்தத்தைப்பற்றியும், அந்த மத்தியஸ்தத்தினுல் இரக்கத்தைப்பற்றியும், நம்பிக்கையுடன் அவர்கள் பேசும்பட்சத்தில், நல்லவர்களைப்போல், பொல்லாதவர்களும் இரக்ஷிக்கப்படக்கூடுமென்று நம்பப்பட நேரிடுகிறது. உலகத்திலிருக்கும் காலத்தில் தன் பேச்சில் விசுவாசம் என்பதினுல் பிரதானமாய் கருதப்படுகிற எவ்வித நம்பிக்கை அல்லது உறுதிப்பாட்டை காண்பித்திருந்தபோதிலும், கெட்ட வாழ்க்கையை நடத்திய எவனும், வழிவகைகள் இல்லாமல் இரக்கத்திலிருந்து சுவர்க்கத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டதை, இதுவரையில் பார்த்ததில்லை என்று தேவர்கள் சொன்னுர்கள். ஆபிரகாம், ஐஸாக், ஜேகப், தாவீது, அப்போஸ்தலர்கள், இவர்களைப்பற்றி வழிவகையில்லாமல், இரக்கத்திலிருந்து சுவர்க்கத்தில் இவர்கள் ஏற்றுக்கொள்ளப்படவில்லையா என்று கேட்டபோது, அம்மாதிரி அவர்களில் ஒருவர்கூட ஏற்றுக் கொள்ளப்படாமல், ஒவ்வொருவரும் உலகத்திலிருக்கும் காலத்தில், தான் நடத்திய வாழ்க்கைக்குத் தக்கபடி ஏற்றுக்கொள்ளப்பட்டார் என்றும், தாங்கள் இருந்த இடம் அவர்களுக்கு தெரியுமென்றும், அங்கே அவர்கள் மற்றவர்களைவிட அதிகமாய் மதிக்கப்படவில்லை என்றும், தேவர்கள் உத்தரம் சொன்னுர்கள். வேதத்தில் கண்யத்துடன் அவர்கள் சொல்லப்படுகிருர்களென்பதற்கு காரணம், அவர்களால் உள்ளார்த்தத்தில் ஆண்டவர் என்று கருதப்படுகிறது, அதாவது ஆபிரகாம், ஈசாக், ஜேகோப், என்பவைகளினுல் தம்முடைய தெய்வீக தன்மை விஷயத்திலும், தெய்வீக மானிடத்தன்மை விஷயத்திலும் ஆண்டவரையும், தாவீது என்பதினுல், தெய்வீக இராஜத்துவம் விஷயத்தில் ஆண்டவரையும், அப்போஸ்தலர்கள் என்பதினுல் தெய்வீக உண்மைகள் விஷயத்தில் ஆண்டவரையும், கருதப்படுகிறதென்றும், அவர்களுடைய பெயர்கள் சுவர்க்கத்துக்குள் பிரவேசிக்காமல் அவைகளுக்கு பதிலாக, சற்று விவரித்த ஆண்டவரின் பிரத்தியக்ஷத்தை உணருகிறபடியினுல், வேதம் மனிதனுல் வாசிக்கப்பட்டபோது, மனிதர்களைப் பற்றி கொஞ்சம்கூட அவர்களுக்கு உணர்ச்சி இல்லை என்றும், ஆகையினுல் சுவர்க்கத்திலிருக்கும் வேதம் உலகத்திலிருக்கும் வேதத்தின் தத்துவார்த்தமா யிருப்பதினுல் (மேலே செ.259 பார்க்கவும்), அந்த வேதத்தில் அவர்கள் எவ்விடத்திலும் சொல்லப்படவில்லை.

527. சுவர்க்கத்து வாழ்க்கைக்கு விரோதமாய் உலகத்தி
ருக்கும் காலத்தில், வாழ்க்கையை நடத்தினவர்களிடத்தில் சுவர்க்
த்து வாழ்க்கையை நடிதல் முடியாத காரியமென்று, அதிக
நுபவத்திலிருந்து நான் சாட்சியிடக்கூடும். தாங்கள் இறந்த
றகு, அவைகளை தேவர்களிடமிருந்து கேட்டபோது, தெய்வீக
ண்மைகளை தாங்கள் இலகுவாய்ப் பெற்றுக்கொள்வோமென்றும்,
ாங்கள் அவைகளை நம்பி, பிறகு வேறு விதமாய் வாழ்ந்து, இவ்
தமாக சுவர்க்கத்தில் ஏற்றுக்கொள்ளப்படுவோம் என்றும், நம்பி
வர்கள் சிலரும் இருந்தார்கள். ஆனால், இந்த நம்பிக்கையை
காண்டவர்கள் விஷயத்தில் மாத்திரம் எல்லைபடுத்தப்பட்டப்
ாதிலும், மனம் திரும்புதல் இறந்த பிறகு முடியாதென்று
வர்களுக்கு கற்பிக்க, அவர்கள் விஷயத்தில் விடப்பட்டபோதி
ம், அநேகர் விஷயத்தில் அந்த சோதனை செய்யப்பட்டது. அந்த
ாதனை செய்யப்பட்டவாகளில் சிலர், உண்மைகளை அறிந்து
ாண்டு, அவைகளை ஏற்றுக்கொள்வதாக தோனறினார்கள்,
னல், தங்களுடைய ஆசையின் வாழ்க்கைக்கு திரும்பின உடனே;
வர்கள் அவைகளைத தள்ளி, அவைகளுக்கு விரோதமாககூட
ிசினார்கள். மற்றவர்கள் அவைகளை கேட்ககூட மனமில்லாதவர்
ாயிருந்து, அவைகளை உடனே தள்ளினார்கள். உலகத்தி
ருந்து தாங்கள் சம்பாதித்த தங்கள் அன்பின வாழ்க்கை, தங்க
டமிருந்து எடுத்துகொள்ளபபட்டு, தேவர்களின் வாழ்க்கை
ல்லது சுவர்க்கத்தின் வாழ்க்கை, அதறகு பதிலாக புகட்டபபட
ண்டும் என்று, ஆவல்கொண்டு சிலர் இருந்தார்கள். இதுகூட,
னுமதியினல் செய்யப்பட்டது; ஆனல், அவர்களின் அன்பின்
ழ்க்கை நீக்கப்பட்டபோது, இறந்தவாகள்போல் இருந்து, தங்
புத்தியில்லாமல் போய்விட்டார்கள். இவைகளிலிருந்தும், மற்ற
அனுபவங்களிலிருந்தும், பேதைமையான நல்லவர்கள், மனி
னுடைய வாழ்க்கையானது இறந்த பிறகு எவ்விதத்திலும் மாற்
படமுடியாதென்றும், ஒவ்வொரு ஆவியும் தலை முதல் பாதம்
ரையில், தன்னுடைய அன்பு இருக்கிறமாதிரி இருக்கிறபடியின
ம், ஆகையினல் தன் வாழ்க்கையைப்போல், அதே குணமுடைய
ிருக்கிறபடியினலும், கெட்ட வாழ்க்கை நல்ல வாழ்க்கையாக
, நரகத்து வாழ்க்கை தேவர்களுக்கு அடுத்த வாழ்க்கையாகவும்,
ற்றப்பட முடியாதென்றும், இந்த வாழ்க்கையை அதற்கு எதி
ாக மாற்றுதல், ஆவியையே முழுமையும் அழித்தலாக

இருக்குமென்றும், கற்பிக்கப்பட்டார்கள். நரகத்திற்கு அடுத்த ஆவியை சுவர்க்கத்து தேவனாக மாற்றுவதைவிட, ஒரு இரவு ஆந்தையை புறாவாக மாற்றுதலும், கொம்புள்ள ஆந்தையை சுவர்க்கத்து பட்சியாக மாற்றுதலும், இலகுவாயிருக்குமென்று தேவர்கள் சொல்லுகிறார்கள். இறந்த பிறகு மனிதன், உலகத்திலிருந்தபோது அவனுடைய வாழ்க்கை இருந்ததுபோல இருக்கிறானென்பது, தன்னுடைய சொந்த அத்தியாயத்தில் (நெ. 470 முதல் 484 வரையில்) மேலே பார்க்கப்படலாம். இவைகளிலிருந்து, நிபந்தனையில்லாத இரக்கத்தினால், சுவர்க்கத்தில் எவனும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டானென்று இப்பொழுது விசதமாகும்.

# LV

## சிலர் நம்புகிறபடி சுவர்க்கத்துக்கு வழிகாட்டுகிற வாழ்க்கையை வாழ்தல் அவ்வளவு பிரயாசமானதாயில்லை.

**528.** பரமார்த்த வாழ்க்கை என்று சொல்லப்படுகிற சுவர்க்கத்துக்கு வழிகாட்டும் வாழ்க்கையை வாழ, ஒரு மனிதன் உலகத்தை விட்டுவிட்டு, சரீரத்தினுடையவும் மாமிசத்தினுடையவும் மோகங்கள் என்று சொல்லப்படுகிற காம விகாரங்களிலிருந்து தானே நீக்கிகொண்டு, பரமார்த்தமாய் வாழவேண்டுமென்று, தங்களுக்கு சொல்லப்பட்டபடியினால், சிலர் அது கஷ்டமானதென்று நம்புகிறார்கள். மேலும், இப்படி சொல்வதினால், செல்வத்தினாலும் கண்யங்களினாலும் அமைந்திருக்கிற உலகப் பொருள்களை தாங்கள் தள்ளவேண்டுமென்றும், கடவுளைப்பற்றியும், மோக்ஷத்தைப் பற்றியும், சதாகால வாழ்க்கையைப்பற்றியும் தேவ பக்தியுடன் தியானத்தில் தொடர்ச்சியாய் நடக்கவேண்டுமென்றும், தாங்கள் வாழ்வை பிரார்த்தனைகளிலும், வேதத்தையும் தேவ பக்தி நிறைந்த புத்தகங்களையும் வாசிப்பதிலும் கழிக்கவேண்டுமென்றும் அவர்கள் அறிந்து கொள்ளுகிறார்கள். இதைத்தான் உலகத்தை விட்டு விடுதலா யிருக்கிறதென்றும், மாமிசத்தில் அல்லாமல் ஆவியில் வாழ்தல் என்றும் அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால், அதிக அநுபவத்திலிருந்தும், தேவர்களுடன் சம்பாஷிப்பதிலிருந்தும், இது அப்படி இல்லவே இல்லை என்றும், நிஜமாகவே, உலகத்தை விட்டுவிட்டு, இம்மாதிரியாக ஆவியில் வாழ்கிறவர்கள், சுவர்க்க ஆனந்தத்தை ஏற்றுக்கொள்ளாததா யிருக்கிற ஒரு வாட்டமான வாழ்வை அடைகிறார்களென்றும், நான் தெரிந்துகொண்டிருக்கிறேன்; ஏனென்றால், ஒவ்வொருவனுடைய வாழ்க்கையும் அவனுடன் இருக்கிறது. மனிதனானவன், சுவர்க்கத்து வாழ்க்கையை பெற்றுக்கொள்ள, அவன் உலகத்தில் வாழ்ந்து, அதன் வேலையிலும் உத்தியோகங்களிலும் பிரவேசித்து, பிறகு, சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய வாழ்க்கையினால், பரமார்த்த வாழ்க்கையை ஏற்றுக்கொள்ளவேண்டி யிருக்கிறது. வேறு எந்த வழியினும் மனிதனில் பரமார்த்த வாழ்வு உண்டாக்கப்படவும், அல்லது அவனுடைய ஆவி சுவர்க்கத்து ஆயத்தம் பண்ணப்படவும் முடி

யாது; ஏனென்றால், அதே காலத்தில் புறம்பான வாழ்க்கை யில்லாமல் உள்ளான வாழ்க்கை வாழ்தல், அஸ்திவாரமில்லாமல், ஆகையினால் படிப்படியாய் இரங்கி, அல்லது வெடிப்புகளினாலும் உடைவுகளினாலும் நிறைந்ததாகி, அல்லது அது விழுகிற வரையில் தள்ளாடுகிற ஒரு வீட்டில் வாழ்தல்போலிருக்கிறது.

**529.** மனிதனுடைய வாழ்க்கை பகுத்தறிவுள்ள இயற்கை உணர்வினால் பார்க்கப்பட்டு பரிசோதிக்கப்பட்டால், அது மூன்று விதமானதாய், அதாவது ஒவ்வொன்றும் முழுமையும் வேறு வேறான பரமார்த்தமானதும், சன்மார்க்கமானதும், தேசாசார மானதுமாக இருக்கிறது காணப்படுகிறது; ஏனென்றால், சன்மார்க்க மானதும் பரமார்த்தமானதுமாகிய வாழ்க்கை யில்லாமல், தேசா சாரமான வாழ்க்கையை வாழ்கிற மனிதர்களும் இருக்கிறார்கள்; மற்றவர்கள் பரமார்த்த வாழ்வில்லாமல் சன்மார்க்க வாழ்க்கையை நடத்துகிறார்கள்; இன்னும் மற்றவர்கள், தேசாசார வாழ்க்கையை யும், சன்மார்க்க வாழ்க்கையையும், அதே காலத்தில் பரமார்த்த வாழ்க்கையையும் நடத்துகிறார்கள். 'பின் கூறியவர்கள் சுவர்க்கத்து வாழ்க்கையை வாழுகிறவர்களா யிருக்கிறார்கள்; ஆனால், முன் கூறியவர்கள், சுவர்க்கத்து வாழ்க்கையிலிருந்து பிரிக்கப்பட்ட உலகத்து வாழ்க்கையில் வாழ்கிறவர்களாயிருக்கிறார்கள். ஆகவே, முதலில், பரமார்த்த வாழ்வானது, ஸ்தூல வாழ்விலிருந்து அல்லது உலக வாழ்விலிருந்து பிரிக்கப்படாமல், ஆன்மாவானது சரீரத் துடன் சேர்ந்திருப்பதுபோல், அது அதனுடன் சேர்ந்திருக்கிற தென்றும், அது பிரிக்கப்பட்டால், மேலே கூறியபடி அஸ்திவாரம் இல்லாத ஒரு வீட்டில் வசிப்பதுபோல இருக்குமென்றும், விசத மாகலாம். ஏனென்றால், சன்மார்க்கமான வாழ்வும் தேசாசார மான வாழ்வும், பரமார்த்த வாழ்வின் முயற்சியாயிருக்கிறது; ஏனென்றால், பரமார்த்த வாழ்வானது நல்லதை இச்சித்தலிலும், சன்மார்க்கமானதும் தேசாசாரமானதுமாகிய வாழ்க்கை நல்காரி யங்களில் செயல்படுதலிலும், அமைந்திருக்கிறது; பின் கூறியது இல்லாவிட்டால், அப்பொழுது பரமார்த்த வாழ்வானது சிந்தனை யிலும் பேச்சிலும் மாத்திரம் அமைந்திருக்கிறது. சித்தமானது, அது நிற்க அஸ்திவாரமில்லாதபடியினால், பின்வாங்குகிறது; அப்படி யிருந்தாலும் சித்தம்தான், பிரதானமாய் மனிதனுடைய பரமார்த்த பாகமாய் இருக்கிறது.

530. சுவர்க்கத்துக்கு வழிகாட்டும் வாழ்க்கையை வாழ்தல், நம்பப்படுகிறபடி அவ்வளவு கஷ்டமாயில்லை என்பது இப்போது பின் வருவதில் அறிந்துகொள்ளப்படலாம். ஒவ்வொருவனும் தேசாசாரமானதும் சன்மார்க்கமானதுமாகிய வாழ்க்கையில் சிறு வயது முதல் பயிற்றப்படுகிறபடியினாலும், உலகத்தில் வாழ்ந்த வாழ்க்கையிலிருந்து அதனுடன் பழகியிருப்பதினாலும், அந்த வாழ்க்கையை வாழ யாருக்கு சக்தியில்லை? ஒவ்வொருவனுங்கூட, நல்லவனும் கெட்டவனும் அந்த வாழ்க்கையை வாழ்கிறான்; ஏனென்றால், உண்மையானவனென்றும், நியாயமானவனென்றும் மதிக்கப்பட்ட யார் விரும்புகிறதில்லை? ஏறக்குறைய எல்லா மனிதரும், இருதயத்தில் உண்மையாகவும் நியாயமாகவும் இருக்கிறதாகவும், அல்லது நிஜமான உண்மையிலிருந்தும் நியாயத்திலிருந்தும் தாங்கள் நடந்ததுபோலவும் தோன்றும்படிக்கு, உண்மையையும் நியாயத்தையும் புறம்பாய் தொழில் நடத்துகிறார்கள். பரமார்த்தமான மனிதன் அம்மாதிரியே வாழவேண்டும்; மேலும், பரமார்த்தமான மனிதன் தெய்வத்தை நம்பி, தேசாசாரமானதும், சன்மார்க்கமானதுமாகிய சட்டங்களுக்கு ஒத்திருக்கிறது என்கிற காரணத்துக்காக மாத்திரம் அல்லாமல், தெய்வீக சட்டங்களுக்கும் கூட ஒத்திருக்கிறது என்பதற்காக, உண்மையாயும் நியாயமாயும் நடக்கிறான் என்கிற வித்தியாசத்துடன் ஸ்தூல மனிதனைப்போல் அவன் இதை அவ்வளவு இலகுவாய் செய்யக்கூடும். தான் செய்வதில் எல்லாம் பரமார்த்த மனிதன் தெய்வீக விஷயங்களை நினைக்கிறபடியினால், அவன் சுவர்க்கத்து தேவர்களுடன் போக்குவரவு வைத்திருக்கிறான்; இது நடக்கிற வரையில், அவன் அவர்களோடு சேர்க்கப்படுகிறான்; அதனால், தன்னையே யோசித்தால் பரமார்த்த மனிதனாயிருக்கிற அவனுடைய உள்ளான மனிதன் திறக்கப்படுகிறான். அவன் இந்த நிலைமையிலிருக்கும் காலத்தில் தனக்கு தெரியாவிட்டாலும், மனிதன் ஆண்டவரால் சுவீகரிக்கப்பட்டு வழிகாட்டப்படுகிறான்; பிறகு, சன்மார்க்கமானதும், தேசாசாரமானதுமாகிய வாழ்க்கைக்கு சேர்ந்த உண்மைக்கும் நியாயத்துக்கும் சேர்ந்த காரியங்களை செய்வதில், அவன் பரமார்த்த மூலத்திலிருந்து, செயல்படுகிறான்; மேலும், ஒரு பரமார்த்த மூலத்திலிருந்து உண்மையாயும் நியாயமாயும் இருப்பதை செய்தலானது, உண்மையான நிஷ்கபடத்திலிருந்தும் நியாயத்திலிருந்துமே, செய்தலாகவே அல்லது இருதயத்திலிருந்து செய்தலாகவே இருக்கிறது.

அவனுடைய நியாயமும் உண்மையும், ஸ்தூல மனிதர்களின் நியாயத்தையும் உண்மையையும்போல் புறம்பாய் ஒரேமாதிரியும், கெட்ட மனிதர்களுடையதையும், நரகத்துக்கு அடுத்த மனிதர்களுடையதையும்போல்கூட தோன்றும்; ஆனால், உள்ளான உருவத்தில் அவைகள், முழுமையும் வேறுமாதிரியிருக்கின்றன. ஏனென்றால், தீமையானவர்கள் தங்களுக்கேயும் உலகத்திற்கேயும் மாத்திரம் நியாயமாயும் யோக்கியமாயும் செயல்படுகிறார்கள்; ஆகையினால், சட்டங்களைக் குறித்தும் சிட்சைகளைக் குறித்தும், பெயர்போய்விடுவதைப்பற்றியும், கண்யத்தைப்பற்றியும், லாபத்தைப்பற்றியும், வாழ்க்கையைப்பற்றியும், அவர்களுக்கு பயமில்லாவிட்டால், அவர்கள் ஒவ்வொரு விஷயத்திலும், முழுமையும் அயோக்கியமாகவும் நியாயமில்லாமலும், நடப்பார்கள்; ஏனென்றால், அவர்கள் கடவுளையும், எந்த தெய்வ சட்டத்தையும் பற்றி பயப்படுகிறதில்லை; ஆகையினால் எந்த உள்ளான கட்டினாலும் அடக்கப்படுகிறதில்லை; ஆகவே, அவர்கள் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும், மற்றவர்களுக்கு மோசம் செய்யவும், கொள்ளையடிக்கவும், கெடுக்கவும் உபயோகிப்பார்கள்; இதைகூட சந்தோஷத்துடன் செய்வார்கள். உள்ளுக்குள்ளாக அவர்கள் அவ்விதமானவர்களாய் இருக்கிறார்களென்பது, ஒவ்வொருவனுடைய புறம்பானவைகள் நீக்கப்பட்டு, சதாகாலம் வரையில் அவன் அங்கே வாழ்கிற உள்ளானவைகள் திறக்கப்படுகிற (மேலே நெ. 499-511 வரையில் பார்க்கவும்), இதர வாழ்விலிருக்கும் அதே நடத்தையுடையவர்களிடமிருந்து தெளிவாய் பார்க்கப்படலாம். அவ்விதமானவர்கள், இப்பொழுது தான் கூறியபடி, சட்டத்துக்கும் பெயர்போகுதலுக்கும், கண்யத்துக்கும், லாபத்துக்கும், வாழ்க்கைக்கும், பயப்படுதலாயிருக்கிற புறம்பான கட்டுப்பாடுகள் அல்லாமல் செயல்படுகிறபடியினால், அவர்கள், உன்மத்தமாய்நடந்து, யோக்கியம் என்பதையும் நியாயத்தையும் பார்த்து சிரிக்கிறார்கள். ஆனால், தங்களுடைய புறம்பானவைகள் நீக்கப்பட்டு, தங்களுடைய உள்ளானவைகளுக்கே விடப்பட்டபோது, தெய்வ சட்டங்களை மதித்து உண்மையாயும் நியாயமாயும் நடந்தவர்கள், அறிவுடன் செயல்படுகிறார்கள்; ஏனென்றால் அவர்கள், தங்களிடமிருந்து ஞானமானது அவர்களுக்கு அறிவிக்கப்படுகிற சுவர்க்கத்து தேவர்களுடன் அவர்கள் சேர்க்கப்படுகிறார்கள். ஆகவே, பாரமார்த்தமான மனிதன், உள்ளான மனிதன் விஷயத்திலும், அல்லது அவன் சித்தம் சிந்தனை விஷயத்திலும், தெய்வத்

ருடன் சேர்க்கப்படும்பட்சத்தில் தேசாசாரமான வாழ்க்கை விஷயத்திலும், சன்மார்க்க வாழ்க்கை விஷயத்திலும், ஸ்தூல மனிதனைப்போல் சரியாய் நடக்கலாமென்று முதலில் இப்பொழுது விசதமாயிருக்கலாம். (மேலே செ. 358, 359, 360 பார்க்கவும்).

**531.** இன்னமும், பரமார்த்த வாழ்வின் சட்டங்களும், தேசாசாரமான வாழ்வின் சட்டங்களும், சன்மார்க்க வாழ்வின் சட்டங்களும், தசாக்ஞையின் பத்து கற்பனைகளிலும் எழுதிவைக்கப்பட்டிருக்கிறது. முதல் மூன்றும் பரமார்த்த வாழ்வின் சட்டங்களை அடக்கியிருக்கின்றன; அடுத்த நான்கும் தேசாசாரமான வாழ்வின் சட்டங்களை அடக்கி வைத்திருக்கின்றன, கடைசி மூன்றும் சன்மார்க்க வாழ்வின் சட்டங்களை அடக்கியிருக்கின்றன. சுத்தமாய் ஸ்தூலமான மனிதன், பரமார்த்த மனிதனைப்போலவே, இந்த கட்டளைகளுக்கு புறம்பாய் ஒத்து வாழ்கிறான்; ஏனென்றால், அவன் அதேமாதிரி தெய்வத்தை ஆராதித்து கோவிலுக்குப்போய், பிரசங்கங்களைகேட்டு, தேவ பக்தியுள்ளவனைப்போல் தோற்றத்தைப் போட்டுக்கொள்ளுகிறான்; அவன் கொலையையாவது, விபசாரத்தையாவது, திருட்டையாவது செய்கிறதில்லை; பொய் சாட்சியம் சொல்லுகிறதில்லை; அயலாரின் சொத்துகளை மோசம் செய்கிறதுமில்லை. ஆனால், இவைகளை எல்லாம் தனக்கேயாகவும், உலகத்திற்கேயாகவும் மாத்திரம் காட்சி கொடுக்க செய்கிறான். அதே மனிதன், உள் உருவத்தில், புறம்பாய் அவன் தோன்றுகிறதற்கு எதிரிடையாய் இருக்கிறான்; ஏனென்றால், அவன் தன்னுடைய இருதயத்தில் தெய்வத்தை மறுதளித்து, ஆராதனையில் வேஷதாரிபோல் நடக்கிறான்; தன்னிலேயும் தன்னிட சொந்த சிந்தனைகளிலும் விடப்பட்டால், திருச்சபையின் பரிசுத்தமானவைகள் எல்லாம், பேதைமையான ஜனக்கூட்டத்துக்கு கட்டுப்பாடாக மாத்திரம் உதவுகிறதென்று நம்பி, அவைகளைப் பார்த்து சிரிக்கிறான். அவ்விதமான மனிதன் சுவர்க்கத்திலிருந்து முழுமையும் பிரிக்கப்படுகிறான்; அவன் பரமார்த்த மனிதனுயில்லாதபடியினால், அவன் சன்மார்க்கமானவனும் அல்ல, தேசாசாரமானவனுமல்ல; ஏனென்றால், அவன் கொலை செய்யாவிட்டாலும், தன்னை எதிர்க்கிற ஒவ்வொருவனையும் வெறுக்கிறான்; வன்மத்திலிருந்து அவனை பழிவாங்க எரிந்துகொண்டிருக்கிறான்; ஆகையினால், தான் பயப்படுகிற தேசாசாரமான சட்டங்களாலும், புறம்பான கட்டுகளாலும்

தடை செய்யப்படாவிட்டால், கொலையையும் செய்வான்; அப்படி செய்ய அவன் விரும்புகிறவரையில், அவன் தொடர்ச்சியாய் கொலை செய்கிறானென்று ஏற்படுகிறது. மறுபடியும் அவன் விபசாரம் செய்யாவிட்டாலும், விபசாரமானது, ஒத்துக்கொள்ளக்கூடியதென்று நம்புகிறபடியினால், அக்காலமெல்லாம் ஒரு விபசாரியாயிருக்கிறான்; ஏனென்றால், தன்னால் கூடியமட்டும் சந்தர்ப்பம் சேரிடும்மட்டும், அதை செய்கிறான். அவன் திருடாவிட்டாலும், மற்றவர்களுடைய சொத்துகளின்பேரில் துராசை கொண்டு, மோசத்தையும் தீமையான சூழ்ச்சிகளையும், தேசாசாரமான சட்டத்துக்கு விரோதமானவைகள் அல்லவென்று மதிக்கிறபடியினால், எண்ணத்தில் திருடன் பாகத்தை தொடர்ச்சியாய் ஆடிக்கொண்டிருக்கிறான். பொய் சாட்சியும் சொல்லக்கூடாதென்றும், மற்றவர்கள் சொத்தின்பேரில் ஆசைகொள்ளக்கூடாதென்றும் கற்பிக்கிற சன்மார்க்க வாழ்வின் கட்டளைகள் விஷயத்திலும், விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது. தெய்வத்தை மறுத்து, மதத்திலிருந்து வந்த எவ்வித மனசாட்சியுமில்லாத ஒவ்வொரு மனிதனுடைய நடத்தையானது அவ்விதமாயிருக்கிறது. அவன் அப்படி யிருக்கிறானென்பது, தங்களுடைய புறம்பானவைகள் நீக்கப்பட்டு உள்ளானவைகளில் விடப்பட்டபோது, மறுமையில் அவ்விதமான நடத்தையுள்ளவர்களிடமிருந்து தெளிவாய் விசதமாகிறது. அவர்கள் அப்பொழுது சுவர்க்கத்திலிருந்து பிரிக்கப்படுகிறபடியினால், நரகத்துடன் ஒன்றாய் செயல்படுகிறார்கள்; அதனால் நரகத்திலிருக்கப்பட்டவர்களுடன் சேர்க்கப்படுகிறார்கள். தங்களுடைய வாழ்க்கையின் இருதயங்களில் தெய்வத்தை ஒத்துக்கொண்டு, தாங்கள் செயல்களில் தெய்வசங்கடங்களை மதித்து, தாசாக்ஞையின் முதல் மூன்று கட்டளைகளுக்கும், மற்றவைகளுக்கும் கீழ்ப்படிந்து நடந்தவர்கள் விஷயத்தில் விஷயம் வேறுமாதிரி. புறம்பானவைகள் நீக்கப்பட்டு, தங்களுடைய உள்ளானவைகளுக்குள் இவர்கள் விடப்பட்ட போது, அவர்கள் உலகத்திலிருந்ததைவிட புத்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் தங்களுடைய உள்ளானவைகளுக்குள் வரும்போது, இருளிலிருந்து வெளிச்சத்திற்கும், அஞ்ஞானத்திலிருந்து ஞானத்துக்கும், விசனமுள்ள நிலைமையிலிருந்து, தேவ அருள் பெற்ற நிலைமைக்கும் செல்லுதல்போலிருக்கிறது; ஏனென்றால், அவர்கள் தெய்வத்திலும், இவ்விதமாக சுவர்க்கத்திலுமிருக்கிறார்கள். இருவரும் ஒரேவிதமான புறம்பான

ாழ்க்கையை வாழ்ந்திருந்தபோதிலும், ஒருவித மனிதன் எப்படி ிருக்கிறனென்றும், மற்றவன் நிஜமாய் எப்படி இருக்கிறனென் றம் தெரிந்திருக்கும்படி, இவைகள் எல்லாம் சொல்லப்பட்டது.

**532.** மனோபவங்கள் உட்குறிப்புகளை ஒத்து அதாவது ஒரு பன் யோசிக்கும் வழிகளிலேயே நடத்தப்படுகின்றன அல்லது சாய் ின்றனவென்று ஒவ்வொருவருக்கும் தெரிந்திருக்கலாம். ஏனென் றல், மனோபவமானது, மனிதனுடைய உட்பார்வையாகயிருந்து கொண்டு, வெளிப்பார்வையுடன், அது எந்த விஷயத்துக்கு செலுத் தப்பட்டபோதிலும் அல்லது நோக்கப்பட்டபோதிலும், அவ்விடத் திற்கு அது திரும்பி, அங்கே நிற்கிறது என்பதில் ஒத்துப்போகிறது. ஆகையினுல், உட்பார்வையானது அல்லது மனோபவம், உலகம் பக் கம் திருப்பப்பட்டு, அங்கே நிற்கையில், மனோபவம், அதனுல் லௌகீகமாகிவிடுகிறது; தன் விஷயமாகவும் தன் கீர்த்திக்கும் அது திரும்பினுல், அது சடமாகிறது. அது சுவர்க்கம்பக்கம் திருப் பப்பட்டால் சுவர்க்கத்துக்கு அடுத்ததாகிறது. அதேமாதிரி சுவர்க் கம்பக்கம் திருப்பப்பட்டால் அது உயர்த்தப்படுகிறது; தன் பக்கமே திருப்பப்பட்டால், சுவர்க்கத்திலிருந்து கீழே இழுக்கப்பட்டு, சட மானதில் அமிழ்த்தப்படுகிறது. உலகம்பக்கம் திருப்பப்பட்டால், சுவர்க்கத்திலிருந்து கீழேகூட திருப்பப்பட்டு, கண்கள்முன்பாக இருக்கும் பொருள்கள் மத்தியில் பரவப்படுகிறது.

மனிதனுடைய உள்ளக் குறிப்பை உண்டாக்குகிறதும், அவன் உட்பார்வைஅல்லது மனோபவத்தை, அது நோக்கும்பொருள்பக்கம் தீர்மானிக்கிறதும் மனிதனுடைய அன்பாயிருக்கிறது. இவ்விதமாக, தன்னையே நேசித்தல் தன் பக்கமே யாகவும், அதன் பொருள்கள் பக்கமும் அதை திருப்புகிறது; உலகத்தை நேசித்தல், உலகத்துக்கு அடுத்த பொருள்கள் பக்கமும், சுவர்க்கத்தை நேசித்தல், சுவர்க்கத் துக்கு அடுத்த பொருள்கள் பக்கமும் அதை திருப்புகிறது. ஆகையி னுல், மனிதனுடைய அன்பு தெரியப்பட்டால், அவனுடைய மன தின் உள்ளானவைகளின் நிலைமைகூட தெரிந்துகொள்ளப்படலாம்; ஏனென்றல், சுவர்க்கத்தை நேசிக்கிறவன் உள்ளானவைகள், சுவர்க்கம் பக்கம் உயர்த்தப்பட்டு, மேலே திறக்கப்பட்டிருக்கிறது; ஆனுல், உலகத்தை நேசிக்கிறவனுடையவும் தன்னையே நேசிக்கிறவ னுடையவும் உள்ளானவைகள் மேலே மூடப்பட்டு, வெளிபக்கம் திறக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, பகுத்தறிவுள்ள மனதின்

அதிக உயர்ந்த இடங்கள் மேலே மூடப்பட்டால், மனிதனானவன் சுவர்க்கத்துக்கும் திருச்சபைக்கும் சேர்ந்தவைகளை பார்க்க முடியாமல், ஆனால், அந்தப் பொருள்கள் அவனுக்கு அடர்ந்த இருளில் இருக்கிறதென்று தீர்மானிக்கப்படலாம்; ஆனால் அடர்ந்த இருளிலிருப்பது எதுவும் நிராகரிக்கப்படுகிறது, அல்லது தெரிந்து கொள்ளப்படுகிறதில்லை. அதனால்தான், தங்களுடைய மனதுகளின் உயர்ந்த இடங்கள் மூடப்பட்டிருப்பதினால், எல்லா பொருள்களுக்கும் மேலாய் தங்களையேயும் உலகத்தையும் நேசிக்கிறவர்கள், இருதயத்தில் உண்மைகளை நிராகரிக்கிறார்கள்; அவர்கள் தங்களுடைய ஞாபகத்திலிருந்து, அவைகளைப்பற்றி ஏதாவது ஒன்றை சொன்னாலும், அவர்கள் அவைகளை அறிந்து கொள்ளுகிறதில்லை, மேலும், உலகத்துக்கு அடுத்த பொருள்களையும், தேகமுள்ள பொருள்களையும், தாங்கள் மதிக்கிறதுபோல அதே மாதிரி அவர்கள் அவைகளை மதிக்கிறார்கள். அவர்கள் குணம் அம்மாதிரியிருப்பதினால், பஞ்சேந்திரியங்கள் மூலமாய் பிரவேசிக்கிறவைகளைப்பற்றி மாத்திரம் அவர்கள் கவனிக்கக்கூடும்; இவைகளில் மாத்திரம் அவர்கள் இன்பத்தைக்காண்கிறார்கள். ஆனால், இவைகளில் அநேகம் அழுக்கானவைகளாகவும், துப்பு கெட்டவைகளாகவும், தேவநிந்தனையுள்ளவைகளாகவும், பொல்லாதவைகளாகவு மிருக்கின்றன; இப்பொழுது தான் சொல்லியபடி, தங்களுடைய மனதுகள் மேலே மூடப்பட்டிருப்பதின் நிமித்தம், அவ்விதமானவர்கள் மனதுகளில் சுவர்க்கத்திலிருந்து உட்பெருக்கு வரக்கூடாதபடியினால், இவைகள் நீக்கப்பட முடியாது. தன்னுடைய உட்பார்வை அல்லது சிந்தனையை தீர்மானிக்கிற மனிதனுடைய உத்தேசம், அவனுடைய சித்தமாயிருக்கிறது; ஏனென்றால், ஒரு மனிதன் இச்சிக்கிறதை அவன் உத்தேசிக்கிறான்; அவன் உத்தேசிக்கிறதை, நினைக்கிறான். ஆகையினால், அவனுடைய நோக்கம் சுவர்க்கம் பக்கம் சார்ந்திருந்தால், அவனுடைய சிந்தனையும், அதனுடன் இவ்விதமாக சுவர்க்கத்திலிருக்கிற அவனுடைய முழுமனதும், சுவர்க்கம் பக்கம் சங்கற்பிக்கப்படுகிறது; மேலும், சுவர்க்கத்திலிருந்து தனக்கு கீழே யிருக்கும் உலகத்தின் பொருள்களை ஒரு வீட்டின் கூரையிலிருந்து கீழே பார்க்கிறதுபோல, பார்க்கிறான். ஆகவே, தன்னுடைய மனதின் உட்பாகங்கள் திறந்துவைக்கப்பட்டிருக்கிறவன், தன்னிடமிருக்கும் குறைமைகளையும் பொய்களையும் பார்க்கக் கூடும்; ஏனென்றால் இவைகள் எல்லாம் சூக்கும மனதுக்கு கீழேயிருக்கின்றன. மற்

டி. தன்னுடைய உள்ளானவைகள் திறக்கப்படாத மனிதன் தன்னுடைய சொந்த தீமைகளையும் பொய்களையும் பார்க்க முடியாது; ஏனென்றால், அவன் அவைகளுக்குமேல் அல்லாமல், அவைகளுக்கு உள்ளேயிருக்கிறான். இவைகளிலெல்லாமிருந்து, மனிதனுக்கு எங்கிருந்து ஞானமும், எங்கிருந்து பைத்தியமும் உண்டாகிறது என்றும், அதனுடன்கூட, இறந்த பிறகு, தன்னுடைய உள்ளானவைகளை அனுசரித்து இச்சிக்கவும், நினைக்கவும், செயல்படவும், பேசவும் விடப்பட்டபோது அவன் என்னமாயிருப்பானென்றும் நாம் தீர்மானிக்கலாம். மற்றவர்களைப் புறம்பாய் ஒத்திருப்பதாக, தான் எவ்வளவு தோன்றினபோதிலும், ஒரு மனிதன் உள்ளுக்குள்ளாய் என்னமாய் யிருக்கிறானென்று தெரிந்திருக்கும் பொருட்டு, இவைகள் எல்லாம் சொல்லப்பட்டன.

**533**. சிலர் நம்புகிறபடி, சுவர்க்க வாழ்க்கையை வாழ்வது, அவ்வளவு பிரயாசமானதல்லவென்பது, தனக்கு அயோக்கியமானதென்றும் நீதிகெட்டதென்றும் தெரிந்திருந்தும், அதன் மேரில் தான் ஆசை கொள்ளுகிற ஏதாவது ஒன்று தனக்கு நேர்ப்பட்டால், அது தெய்வ கட்டளைகளுக்கு விரோதமானதா யிருப்பதினால், அது செய்யப்படாதென்று, ஒருவன் நினைப்பதுமாத்திரம், அவசியகமானதென்பதிலிருந்து, இப்பொழுது அறிந்துகொள்ளப்படலாம். அப்படி அவன் நினைக்கத் தானே பழகிக்கொண்டு, அப்படிப் பழகுவதினால் ஒரு சாதனையை தான் சம்பாதித்தால், அவன் பிறகு படிப்படியாய் சுவர்க்கத்துடன் சேர்க்கப்படுகிறான்; அவன் சுவர்க்கத்துடன் சேர்க்கப்படுகிற அளவு, அவன் மனதின் உயர்ந்த இடங்கள் திறக்கப்படுகின்றன; இவைகள் திறக்கப்படுகிற அளவு, அயோக்கியமானதும், நீதியற்றதுமான எதையும், அவன் பார்க்கிறான். இந்த தீமைகளை அவன் பார்க்கிற அளவு அவைகள் கலைக்கப்படலாம்; ஏனென்றால், எந்த தீமையும் அது பார்க்கப்படுகிறவரையில் கலைக்கப்பட முடியாது.

இது, சுயேச்சையிலிருந்து ஒரு மனிதன் பிரவேசிக்கக்கூடிய ஒரு நிலைமையாயிருக்கிறது; ஏனென்றால், இவ்விதமாக சுயர்ச்சியிலிருந்து நினைக்க யாருக்கு சக்தி கிடையாது? ஆனால், அவன் ஆரம்பம் செய்த பிறகு, அவனுக்குள் இருக்கும் எல்லா நன்மையையும், ஆண்டவர் உற்சாகப்படுத்தி, தீமைகளை பார்க்கப்படுமல்லாமல், அவைகளை இச்சிக்காமலும்கூட இருக்கவும்,

கடைசியாய் அவைகளை வெறுப்பில் வைக்கவும், அவனுக்கு சக்தி கொடுக்கிறார். "என் நுகம் மெதுவாயும், என் சுமை இலகுவாயும் இருக்கிறது"(மத்தே.xi,30)என்கிற ஆண்டவரின் வார்த்தையினால் இதுதான் கருதப்படுகிறது. ஆயினும், இந்த வழியில் நினைத்து, அதனுடன்கூட தீமைகளை எதிர்க்கும் கஷ்டம், சித்தத்திலிருந்து மனிதன் தீமைகளை செய்கிற அளவு, அதிகப்படுகிறது. ஏனென்றால், அவன் அவ்வளவு தூரம், அவைகளைப் பார்க்காமல் போகிற வரையில் அவைகளுடன் பழகிப் போய்விடுகிறான்; கடைசியில் அவைகளை நேசித்து, தன்னுடைய ஆசையின் சந்தோஷத்திலிருந்து அவைகளை மன்னித்து, எல்லாவித பொய்யினாலும், அவைகளை ஸ்திரப்படுத்தி, அவைகள் ஒத்துக்கொள்ளக்கூடியதென்றும், நல்லவைகளென்றும் சொல்லுகிறான். யௌவனத்தில் கட்டுப்பாடில்லாமல் தீமைகளில் பிரவேசித்து, அதனுடன்கூட இருதயத்திலிருந்து தெய்வீக விஷயங்களை தளளுகிறவர்களின் கதி இதுதான்.

**534.** சுவர்க்கத்துக்கு போகும் வழியும், நரகத்துக்கு போகும் வழியும் ஒரு முறை எனக்கு காண்பிக்கப்பட்டது. இடது பக்கம் அல்லது வடக்கு பக்கம் சென்ற ஒரு அகலமான வழி யிருந்தது; அநேக ஆவிகள் அதில் நடந்துக்கொண்டிருப்பதாக தோன்றியது; ஆனால், கொஞ்சம் தூரத்தில் அந்த அகலமான வழி முடிந்த ஒரு பெரிய கல் காணப்பட்டது. அந்த கல்லிலிருந்து, ஒன்று இடது பக்கமும், ஒன்று வலது பக்கத்துக்கு எதிர் பக்கமும், இரண்டு வழிகள் பிரிந்துபோயின. இடதுகை பக்கத்து வழி இடுக்கமானதாயும் அல்லது அகலமற்றதாயுமிருந்தது; அது மேற்கிலிருந்து தெற்கு வரையிலும், இவ்விதமாக சுவர்க்கத்து வெளிச்சத்துக்கும் வழி காட்டியது; ஆனால், வலது பக்கத்து வழி அகலமாயும், விரிவாயுமிருந்தது; அது, நரகத்து பக்கம் கோணலாய் கீழே சென்றது. எல்லா ஆவிகளும், அந்த இரண்டு வழிகளுக்கும் முதலில் இருந்த பெரிய கல்லினிடம் வருகிறவரையில், அதே வழியில் போகிறதாக முதலில் தோன்றியது. ஆனால், அந்த இடத்துக்கு வந்தபோது அவைகள் பிரிக்கப்பட்டன. நல்லவைகள் இடது பக்கம் திரும்பி, சுவர்க்கத்துக்கு வழி காட்டிய இடுக்கமான வழியில் பிரவேசித்தன ஆனால், கெட்டவைகள் அந்த கல்லை பார்க்காமல், அதின்பேரில் விழுந்து காயமடைந்தன. அவைகள் எழுந்தபோது, அவைகள் அகலமான வழியின் மூலமாய், நரகத்துக்கு

சென்ற வலது பக்கம் ஓடின. இவைகளின் அர்த்தங்கள் எல்லாம் பின்னிட்டு பின்வரும்மாதிரி எனக்கு விவரித்து சொல்லப்பட்டது: தங்களுக்குள்ளே பார்க்கக்கூடிய வித்தியாசமில்லாதபடியினால், அநேக நல்லவைகளும் கெட்டவைகளும் சிநேகிதர்களைப்போல் ஒன்றாய்சென்று, ஒன்றுடன் ஒன்று பேசிக்கொண்டிருந்த அகலமாயிருந்த முதல் வழி, புறம்பாய் யோக்கியமாகவும் நியாயமாயும் ஒரேமாதிரி வாழ்ந்து, கண்ணால் வகையறுக்க முடியாதவர்களை காண்பித்தது. தீயவைகள் விழுந்து, அதிலிருந்து நரகத்துக்கு போகும் வழியில் பின்னிட்டு ஓடிய அந்த இரண்டு வழிகளுக்கும், முதலில் அல்லது மூலையில் யிருந்த கல்லானது, நரகத்தை எதிர் பார்க்கிறவர்களால், தள்ளப்படுகிற தெய்வீக உண்மையை சாயல் காட்டியது; மேலான கருத்தில் அதே கல்லானது ஆண்டவரின் தெய்வ மானிடத் தன்மையை காட்டியது. ஆனால், தெய்வீக உண்மையையும், அதேகாலத்தில் ஆண்டவரின் தெய்வத் தன்மையையும் ஒத்துக் கொள்ளுகிறவர்கள், சுவர்க்கத்துக்கு சென்ற வழி மூலமாய் நடத்தப்பட்டார்கள். இவைகளிளெல்லாமிருந்து, புறம்பாய், ஒருவர் மற்றவர்களைப்போல், பொல்லாதவர்கள் நல்லவர்களைப்போல், ஒரேவித வாழ்க்கையை சுலபமாய் நடத்துகிறார்களென்றும், அல்லது அதே வழியில் செல்லுகிறார்களென்றும் மறுபடியும் தெளிவாக்கப்பட்டது; அப்படி யிருந்தாலும், இருதயத்திலிருந்து தெய்வத்தை ஒத்துக்கொள்ளுகிறவர்கள், முக்கியமாய் ஆண்டவரின் தெய்வத் தன்மையை ஒத்துக்கொள்ளுகிற திருச்சபைக் குள்ளிருக்கிறவர்கள், சுவர்க்கத்துக்கு நடத்தப்படுகிறார்கள்; அப்படி ஒத்துக்கொள்ளாதவர்கள் நரகத்துக்கு கொண்டு வரப்படுகிறார்கள். சிந்தையிலிருந்தும் சித்தத்திலிருந்தும் புறப்படுகிற மனிதனுடைய எண்ணங்கள் இதர வாழ்வில் வழிகளால் சாயல் காட்டப்படுகின்றன. வழிகள்கூட அங்கே, சிந்தையின் எண்ணங்களுக்கு தக்கபடி தோற்றத்துக்கு காட்டப்படுகின்றன; ஒவ்வொருவனும், அதேமாதிரி சிந்தையிலிருந்து புறப்படுகிற தன்னுடைய எண்ணங்களுக்கு தக்கபடி நடக்கிறான். அதனால்தான், ஆவிகளினுடையவும், அவைகளின் எண்ணங்களுடையவும் குணம் அவைகளின் வழிகளிலிருந்து அறிந்துகொள்ளப்படுகிறது. இவைகளிலெல்லாமிருந்து ஆண்டவரின் பின்வரும் வார்த்தைகளால் என்ன கருதப்படுகிறதென்று அதேமாதிரி விசதமாகிறது: "இடுக்கமான வாசல் வழியாய் உட்பிரவேசியுங்கள்: கேட்டுக்கு போகிற வாசல் விரிவும்

வழி விசாலமாயுமிருக்கிறது; அதின் வழியாய் பிரவேசிக்கிறவர் அநேகர். ஜீவனுக்குப்போகிற வாசல் இடுக்கமும், வழி நெருக்கமு மாயிருக்கிறது; அதை கண்டு பிடிக்கிறவர்கள் சிலர்'' (மத்தே. vii. 13, 14). ஜீவனுக்கு போகிற வழி, அது கஷ்டமானதென் பதற்கல்லாமல், சொல்லப்படுகிறபடி, அதைக் காண்பவர்கள் சிலர் என்பதன் பொருட்டு இடுக்கமானதாயிருக்கிறது. அகலமானதும் சாதாரணமானதுமாகிய வழிமுடிந்ததும், அதிலிருந்து இரண்டு வழிகள் எதிர் திக்குகளுக்கு வழி காட்டும்படி தோன்றிய மூலையில் பார்க்கப்பட்ட கல்லிலிருந்து, ஆண்டவரின் பின்வரும் வார்த்தை களின் அர்த்தம் தெளிவாகும்: "வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே, மூலைக்குத் தலைக்கல்லாயிற்று என்று எழுதியிருக் கிறதை நீர் வாசிக்கவில்லையா? அந்த கல்லின்பேரில் விழுகிறவன் எவனோ, அவன் நொறுங்கிப்போவான்'' (லூக். xx. 17, 18). கல்லென்பது தெய்வ உண்மையைக் கருதுகிறது; இஸ்ரவேல் கல் என்பது தெய்வீக மானிடத்தன்மை விஷயத்தில், ஆண்டவரை கருதுகிறது. கட்டுகிறவர்கள் திருச்சபையைச் சேர்ந்தவர்கள்; மூலையின் முதல், இரண்டு வழிகள் இருக்கப்பட்ட இடமாயிருக் கிறது; விழுந்து நொறுங்கிப்போகுதல், தள்ளி நாசமடைதலா யிருக்கிறது.

**535.** தேவபக்தியுடனும் பரிசுத்தமாயும் தாங்கள் வாழும் பொருட்டு லௌகிக விஷயங்களிலிருந்து, தாங்களே நீங்கிக் கொண்ட சிலருடனும், தாங்கள் அதினால் உலகத்தை விட்டுவிட்டு, சரீர ஆசைகளை ஜெயிக்கிறோமென்று நம்பி, பல வழிகளில் வருத்தி கொண்ட சிலருடனும்கூட, இதர வாழ்வில் பேச எனக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. ஆனால், இவர்களில் அநேகர் ஒரு விசனமுள்ள வாழ்வை இவ்விதமாக சம்பாதித்து கொண்ட படியினாலும், உலகத்தின் மத்தியில் மாத்திரம் நடத்தக்கூடிய தரும வாழ்க்கையிலிருந்து தாங்களே நீங்கிக் கொண்டபடியினாலும், தேவர்களுடன் சேர்க்கப்படமுடியாது. ஏனென்றால், தேவர் களின் வாழ்க்கை பேரின்பத்திலிருந்து வந்த இன்ப வாழ்க்கையாய், தருமச் செயல்களாயிருக்கிற நற்காரியங்களை செய்வதில் அமைந் திருக்கிறது. இதுவுமன்றி, லௌகிக தொழில்களை விட்டுவிட்டு வாழ்ந்தவர்கள் தங்கள் சொந்த பாத்திரத்தின் அபிப்பிராயத்தினால் ஆசை மூட்டப்பட்டு, இந்த காரணத்துக்காக சுவர்க்கத்தை இடை விடாமல் விரும்பி, சுவர்க்கத்து இன்பம் என்னவென்றே தெரிந்து

கொள்ளாமலே, சுவர்க்க இன்பமே ஒரு வெகுமதியாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்; மேலும், தேவர்கள் மத்தியிலும், பாத்திரமில்லாமல் இருக்கிறதும், கடமைகளை பகிரங்கமாய் செய்வதிலும் பழக்குவதிலும், அதனால் அவர்கள் செய்யும் நன்மையிலிருந்து வரும், தேவ அருளிலும் அமைந்திருக்கிற அவர்கள் இன்பத்திலும் செலுத்தப்பட்டபோது, தங்கள் நம்பிக்கைக்கு முழுமையும் அன்னியமான ஏதோ ஒன்றை காண்கிற ஜனங்களைப்போல், அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள்; மேலும், அந்த இன்பத்தை ஏற்றுக்கொள்ளாதபடியினால், அவர்கள் விட்டுவிட்டு, உலகத்திலிருந்த காலத்தில், அம்மாதிரி வாழ்க்கையை நடத்திய தங்கள் இனத்தைச் சேர்ந்த ஆவிகளுடன் சேர்ந்து கொள்ளுகிறார்கள். ஆனால், தொடர்ச்சியாய் தேவாலயங்களில் இருந்து கொண்டும், பிரார்த்தனைகள் செய்து கொண்டும், உலகத்தில் வெளிப் புறத்து புனிதத்தில் வாழ்ந்து, தங்கள் ஆன்மாக்களை துன்பப்படுத்திக்கொண்டு, இதற்காக மற்றவர்களைவிட தாங்கள் கண்ணியமாக நடத்தப்பட்டு,வணங்கப்படுவார்களென்றும், இதா வாழ்வில் இறந்த பிறகு மெய்த் தேவபக்தனாக கணக்கிடப்படுவார்களென்றும், தங்களைப்பற்றியே இடைவிடாமல் நினைத்தவர்கள், சுவர்க்கத்தில் இருக்கிறதில்லை; ஏனென்றால், தங்களுக்காகவே இவைகளை அவர்கள் செய்துக்கொண்டார்கள். தாங்கள் அவைகளை அமுக்கிவிட்ட சுய நன்மையைக் கோருதலினால் தெய்வீக உண்மைகளை அவர்கள் அழுக்காக்கிவிட்டபடியினால், அவர்களில் சிலர், தாங்களே கடவுள் என்று நினைக்கும்படியாக அவ்வளவு உன்மத்த முள்ளவர்களாயிருக்கிறார்கள். இவர்களுக்கு கதி நரகத்தில் தங்களைப்போன்றவர்கள் மத்தியில் இருக்கிறது. மற்றவர்கள் தந்திரமானவர்களாகவும், மோசமானவர்களாகவும் இருக்கிறார்கள்; மோசக்காரர்கள் நரகங்களில் இருக்கிறார்கள். தந்திரமான வித்தைகளாலும் வஞ்சகங்களாலும் வெளிப்புறத்து நடத்தையில் அவ்விதபாசாங்குகளைச்செய்து, இந்தவழி வகையால் தங்களிடத்தில் ஒரு தெய்வீக புனிதம் இருக்கிறதாக நம்ப சாதாரண ஜனங்களைச் செய்தவர்கள் இவர்கள்தான். ரோமன் காதோலிக் சமயத்தைச்சேர்ந்த அநேக மகாத்துமாக்கள், இந்த நடத்தை உள்ளவர்கள். அவர்களில் சிலரோடு பேச எனக்கு அனுமதி கொடுக்கப்பட்டது; அப்பொழுது, அவர்களுடைய வாழ்க்கையானது உலகத்திலிருந்தபடிக்கும், பின்னிட்டு இருந்தபடிக்கும், தெளிவாய் காட்டப்பட்டது. இந்த சங்கதிகள், சுவர்க்கத்துக்கு வழிகாட்டும் வாழ்க்

கையானது, உலகத்தை விட்டு விட்டு வாழும் வாழ்க்கையல்ல வென்றும், ஆனால் உலகத்தில் வாழ்தல் அவ்விதமானதென்றும், உலகத்தில் மாத்திரம் நடத்தக்கூடிய தரும வாழ்க்கையிலிருந்து பிரிக்கப்பட்ட, பக்திமார்க்கம் சுவர்க்கத்துக்கு நடத்துகிறதில்லை என்றும், ஆனால், தரும வாழ்க்கை அப்படி செய்கிறதென்றும், தரும வாழ்க்கையானது, ஒவ்வொரு வேலையிலும், காரியத்திலும், ஒவ்வொரு தொழிலிலும், உள்ளான அதாவது, சுவர்க்கத்துக்கு அடுத்த நோக்கத்துடன் யோக்கியமாயும் நியாயமாயும் நடத்தலில், அமைந்திருக்கிறதென்றும், இந்த நோக்கமானது தெய்வீக சட்டங்களை அனுசரித்து இருப்பதினால், மனிதனானவன் உண்மையாயும் நியாயமாயும், செயல்படும் காலத்தில் அந்த வாழ்வில் 'இருக்கிறதென்றும், தெரிந்திருக்க சொல்லப்பட்டது. அவ்விதமான வாழ்க்கை கஷ்டமானதல்ல. தருமமில்லாத பக்தி வாழ்க்கை மாத்திரம் பிரயாசமானது; என்றாலும், சுவர்க்கத்துக்கு வழிகாட்டுவதாக நம்பப்படுகிற அளவு, சுவர்க்கத்துக்கு வெளியே கொண்டுபோய் விடுகிறது.

# நரகம்

## LVI

### ஆண்டவர் நரகங்களை ஆளுகிறார்.

**536**. மேலே சுவர்க்கத்தைப்பற்றி பேசுங் காலத்தில், ஆண்டவர்தான் சுவர்க்கத்துக் கடவுள் என்றும், ஆகையினால் சுவர்க்கங்களின் அரசாட்சி எல்லாம் ஆண்டவருடையதென்றும், எவ்விடத்திலும் காண்பிக்கப்பட்டது (முக்கியமாய் நெ. 2முதல் 6வரையில்). நரகத்துக்கு சுவர்க்கத்தின் சம்பந்தமும், சுவர்க்கத்திற்கு நரகத்தின் சம்பந்தமும், தங்கள் சேட்டையினுடையவும், எதிர் தாக்கத்தினுடையவும், பொருள்களுக்கு ஸ்திரத்தை கொடுக்கிற ஒரு சம நிலையுடன், ஒன்றுக்கொன்று எதிரிடையாய் நடக்கிற இரண்டு எதிரான பொருள்களுக்குள் இருக்கும் சம்பந்தத்தைப் போலிருக்கிறபடியினால், எல்லாப் பொருள்களும் சமநிலையில் வைக்கப்படும்பொருட்டு, ஒன்றை ஆளப்பட்டவர் மற்றதையுங்கூட ஆள வேண்டுமென்பது ஆவசியகமானதா யிருக்கிறது; ஏனென்றால், அதே கடவுள் நரகங்களில் எழும் கலகங்களை அடக்கி, அங்கே இருக்கும் பைத்தியங்களைத் தடுத்தாலொழிய, சமநிலை அழிந்து போகும், சமநிலையுடன் முழுமையும் நாசமாகும்.

**537**. ஆனால், இங்கே சமநிலையைப்பற்றி சிலது முதலில் சொல்லப்படவேண்டும். இரண்டு பொருள்கள் ஒன்றுக்கொன்று விரோதமாய் செயல்படும் காலத்திலும், மற்றது செயல்பட்டு தள்ளும் அளவு, ஒன்று எதிர்தாக்கி தடுக்கும் காலத்திலும், அந்த இரண்டிலும், எதற்கும் சக்தியில்லை என்று தெரிந்திருக்கிறது; ஏனென்றால், இரண்டு பக்கங்களிலும் அதே சக்தி யிருக்கிறது. அவ்வித சந்தர்ப்பத்தில், இரண்டும், மூன்றாவதினால் தன் இஷ்டப்படி செயல்படப்படலாம்; ஏனென்றால், சமமான தடையிலிருந்து இரண்டு பொருள்களுக்கு சக்தியில்லாவிட்டால், மூன்றாவதின் சக்தி, தடையில்லாததுபோல் எல்லாவற்றையும் செய்கிறது. சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில் சமநிலை இவ்விதமாய் இருக்கிறது. என்றாலும், தங்கள் வல்லமை சமமாயிருக்கிற இரண்டு சரீர சம்பந்தமுள்ள போராளிகளின் சமநிலையல்ல; ஆனால், அது ஆத்ம சம்பந்தமான சமநிலை, அதாவது உண்மைக்கு விரோதமான பொய்யினு

டையவும், நன்மைக்கு விரோதமான தீமையினுடையவும் சமநிலை. நரகத்திலிருந்து, தீமையிலிருந்து வரும் பொய்யும், சுவர்க்கத்திலிருந்து, நன்மையிலிருந்து வரும் உண்மையானதும் இடைவிடாமல் மூச்சுவிடப்படுகிறது. இந்த ஆத்ம சம்பந்தமான சமநிலைதான், நினைக்கவும் இச்சிக்கவும் சுயர்ச்சியை மனிதனுக்கு நிசப்படுத்துகிறது; ஏனென்றால், ஒரு மனிதன் நினைத்து இச்சிக்கும் எதுவும், தீமைக்கும் அதின் பொய்யிக்கும், அல்லது நன்மைக்கும் அதின் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆதலால், அவன் அந்த சமநிலையில் இருக்கும் காலத்தில், தன்னிஷ்டப்படி நரகத்திலிருந்து தீமையையும், அதன் பொய்யையும் சேர்த்துகொண்டு பெற்றுக்கொள்ளவும், சுவர்க்கத்திலிருந்து நன்மையையும், அதன் உண்மையையும் சோத்துகொண்டு பெற்றுக்கொள்ளவும் கூடும். ஆண்டவர் சுவர்க்கத்தையும் நரகத்தையும் ஆளுகிறபடியினால், ஒவ்வொரு மனிதனும், ஆண்டவரால் இந்த சமநிலையில் வைக்கப்படுகிறான். ஆனால், மனிதன் சமநிலையினால், இந்த சுயேச்சையில் ஏன் வைக்கப்படுகிறானென்பதும், தீமையும் பொய்யும் அவனிடமிருந்து நீக்கப்பட்டு, தெய்வசக்தியினால் அவனிடத்தில் உண்மை ஏன் மனங்கொள்ள போதிக்கப்படவில்லை என்பதும், தன் சொந்த அத்தியாயத்தில் பின்வரும் பக்கங்களில் சொல்லப்படும்.

**538**. நரகத்திலிருந்து வெளிவரும் தீமையிலிருந்து பொய் கோளத்தைப் பார்க்க, நான் அப்போதைக்கப்போது விடப்பட்டிருக்கிறேன். நன்மையானது உண்மையானது எல்லாவற்றையும், அழிக்கும் பொருட்டு, அப்படி செய்யமுடியாதபடியினால் கோபத்துடனும், ஓர்வித பிதற்றுகிற பைத்தியத்துடனும் சேர்ந்த ஒரு சாசுவத முயற்சிபோலிருந்தது; முக்கியமாய், ஆண்டவரிடமிருந்து எல்லா நன்மையும் உண்மையும் வருகிறபடியினால், அவரின் தெய்வீகத்தை நிர்மூலமாக்கி, அழிக்கச் செய்யும் ஒரு முயற்சியாயிருந்தது. ஆனால், சுவர்க்கத்திலிருந்து, நன்மையிலிருந்து வந்த உண்மையின் கோளம் பார்க்கப்பட்டது; அதினால் நரகத்திலிருந்து ஏறும் முயற்சியின் மூர்க்கம் தடுக்கப்பட்டது. இதன் பயன் ஓர் சமநிலையாயிருந்தது. சுவர்க்கத்திலிருந்து வந்த இந்த கோளம், சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களிடமிருந்து வநததாக தோன்றினபோதிலும், ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வந்ததாக காணப்பட்டது. அது ஆண்டவரிடமிருந்து மாத்திரமே வந்தது, தேவர்களிடமிருந்து அல்ல; ஏனென்றால், சுவர்க்கத்திலிருக்கும் ஒவ்வொரு தேவனும் தன்னிடமே

யிருந்து, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் எதுவும் வருகிறதில்லை என்றும், ஆனால், எல்லாம் ஆண்டவரிடமிருந்து வருகிறதாகவும் ஒத்துக்கொள்ளுகிறான்.

**539**. சூக்கும உலகத்தில் எல்லா வல்லமையும், நன்மையிலிருந்து வந்த உண்மைக்கு சேர்ந்திருக்கிறது; தீமையிலிருந்து வந்த பொய்யிக்கு ஒன்றுகூட சேருகிறதில்லை. தெய்வமேகூட சுவர்க்கத்தில் தெய்வீக நன்மையாகவும் தெய்வீக உண்மையாகவும் இருக்கிறபடியினாலும், தெய்வத்துக்கு எல்லா வல்லமையும் இருக்கிறபடியினாலும், எல்லா வல்லமையும் நன்மையிலிருந்து வந்த உண்மைக்கு சேர்ந்திருக்கிறது. எல்லா வல்லமையும் நன்மையிலிருந்து வந்த உண்மைக்கு சேர்ந்திருக்கிறபடியினாலும், தீமையிலிருந்து வந்த பொய்யில், நன்மையிலிருந்து வந்த உண்மை ஒன்றும் இல்லாதபடியினாலும், தீமையிலிருந்து வந்த பொய்யிக்கு ஒரு வல்லமையும் கிடையாது. ஆகையினால், எல்லா வல்லமையும் சுவர்க்கத்திலிருக்கிறது, நரகத்தில் ஒன்றுமில்லை; ஏனென்றால், சுவர்க்கத்திலிருக்கும், ஒவ்வொருவனும் நன்மையிலிருந்து வந்த உண்மைகளில் இருக்கிறான்; நரகத்திலிருக்கும் ஒவ்வொருவனும் தீமையிலிருந்து வந்த பொய்களில் இருக்கிறான். ஏனென்றால், எவனும் நன்மையிலிருந்து வந்த உண்மைகளில் இருக்கிறவரையில், சுவர்க்கத்தில் சேர்க்கப்படுகிறதில்லை; அதுவுமன்றி எவனும் தீமையிலிருந்து வந்த பொய்களில் இருக்கிறவரையில் நரகத்தில் தள்ளப்படுகிறதில்லை. இதுதான் விஷயம் என்பது, இறந்த பிறகு மனிதனுடைய முதலாவது, இரண்டாவது, மூன்றாவது நிலைமைகளைக் குறித்து பேசும் பிரிவுகளில் அறிந்து கொள்ளப்படலாம் (செ. 491-520). எல்லா வல்லமையும் நன்மையிலிருந்து வந்த உண்மைக்கு சேர்ந்ததென்பது, சுவர்க்கத்து தேவர்களின் வல்லமையைக் குறித்து பேசும் அத்தியாயத்தில் அறிந்து கொள்ளப்படலாம்.

**540**. ஆகவே, சுவர்க்கத்திற்கும் நரகத்திற்கும் மத்தியில் இதுதான் சமநிலை. ஆவிகள் உலகம், சுவர்க்கத்திற்கும் நரகத்திற்கும் மத்தியிலிருப்பதினால், அந்த உலகத்திலிருக்கிறவர்கள் அந்த சமநிலையில் இருக்கிறார்கள்; அதனால் உலகத்திலிருக்கும் எல்லா மனிதர்களும் அவ்விதமான சமநிலையில் வைக்கப்படுகிறார்கள். ஏனென்றால், உலகத்திலிருக்கும் மனிதர்கள், அதற்கு தகுந்த அத்தியாயத்தில், இனிமேல் காண்பிக்கப்படுகிறபடி, ஆவிகள் உலகத்தி

விருக்கும் ஆவிகள் மூலமாய் ஆண்டவரால் ஆளப்படுகிறார்கள். ஆண்டவர் சுவர்க்கத்தையும் நரகத்தையும் இரண்டையும் ஆண்டு, இரண்டு பக்கங்களின் முயற்சியை ஒழுங்குபடுத்தினால் ஒழிய, அவ்வித சமநிலை இருக்காது; அல்லாவிட்டால், தீமைகளிலிருந்து உண்டான பொய்கள் மேற்கொண்டு, சுவர்க்கத்தின் முடிவுகளில் இருந்து, தேவர்களையேவிட அதிக சுலபமாய் புரட்டக்கூடிய பேதைமையான நல்லவர்களை நடத்தும்; இவ்விதமாக சமநிலை கெடும்; சமநிலையுடன், மனிதனுடைய சுவேச்சையும் கெடும்.

**541**. நரகமானது, சுவர்க்கத்தைட்போலவே, கூட்டங்களாகவும், சுவர்க்கத்தைப்போல அவ்வளவு கூட்டங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது; ஏனென்றால், சுவர்க்கத்திலிருக்கும் ஒவ்வொரு கூட்டமும், அதற்கு எதிரிடையாய் நரகத்தில் ஒரு கூட்டத்தை உடைத்தாயிருக்கிறது; இதுவும் சமநிலைக்காக இருக்கிறது. ஆனால், சுவர்க்கத்திலிருக்கும் கூட்டங்கள், தங்களுடைய நன்மைகளுக்கும் உண்மைகளுக்கும் தக்கபடி வேறுவேறாயிருக்கிறபடியினால், நரகத்திலிருக்கும் கூட்டங்கள், தீமைகளுக்கும் அவைகளின் பொய்களுக்கும் தக்கபடி, வேறுவேறாயிருக்கின்றன. ஒவ்வொரு நன்மையும் அதற்கு எதிரிடையான தீமையையும், ஒவ்வொரு உண்மையும் அதற்கு எதிரிடையான ஒரு பொய்யையும், உடைத்தாயிருக்கிறதென்பது, தன்னுடைய எதிரிடையானதற்கு சாட்டாதயாதொன்றும் இல்லையென்பதிலிருந்தும், குணமும் பிரமாணமும் அதன் எதிரிடையானதிலிருந்தும், அதன் பிரமாணத்திலிருந்தும் தெரிந்துகொள்ளப்படுகிறதென்பதிலிருந்தும் தெரிந்துகொள்ளப்படலாம்; இதுதான் எல்லா புலப்பாட்டிற்கும் இந்திரிய ஞானத்துக்கும் மூலமாயிருக்கிறது. இந்த காரணத்துக்காக ஆண்டவர், சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டமும், நரகத்தின் ஒரு கூட்டத்தில், அதற்கு எதிரிடையானதை உடைத்தாயிருக்கவும், அவைகளுக்குள்ளேயே சமநிலை இருக்கும்படியாகவும் தொடர்ச்சியாய் ஏற்படுத்திவைத்திருக்கிறார்.

**542**. நரகமானது சுவர்க்கத்தைப்போல், அவ்வளவு அநேக கூட்டங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறபடியினால், சுவர்க்கத்தின் கூட்டங்கள் எவ்வளவோ அவ்வளவு நரகங்கள் இருக்கின்றன; ஏனென்றால், சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டமும் குறைந்த உருவத்தில் ஒரு சுவர்க்கமாயிருக்கிறது (மேலே செ. 51 முதல் 58 வரையில் பார்க்கவும்); நரகத்தின் ஒவ்வொரு கூட்டமும்

குறைந்த உருவத்தில் ஒரு நரகமாகக்கூட இருக்கிறது. மொத்தத்தில் மூன்று சுவர்க்கங்கள் இருக்கிறபடியினால், அம்மாதிரியே மொத்தத்தில் மிகவும் உள்ளான அல்லது மூன்றாவது சுவர்க்கத்துக்கு எதிரான மிகவும் தாழ்ந்த நரகம் என்றும், மத்தியிலுள்ள அல்லது இரண்டாவது சுவர்க்கத்துக்கு எதிர்முகமான மத்தியிலுள்ள நரகமென்றும், மிகவும் தாழ்ந்த அல்லது முதல் சுவர்க்கத்துக்கு எதிரிடையான எதிர்முகமான அதிக உயர்ந்த நரகமென்றும், மூன்று நரகங்கள் இருக்கின்றன.

**543**. ஆண்டவர் நரகத்தை ஆளும்விதம்கூட சுருக்கமாய் விவரிக்கப்படலாம். பொதுவாக நரகங்கள், நரகங்களிலிருந்து புறப்படும் முயற்சியானது தடுக்கப்பட்டு, அமர்த்தப்படுகிற சுவர்க்கங்களிலிருந்துவரும், தெய்வீக நன்மையினுடையவும் தெய்வீக உண்மையினுடையவும் பொதுவான பிரவாகத்தினால் ஆளப்படுகின்றன; ஆனால், ஒவ்வொரு சுவர்க்கத்திலிருந்தும், சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டத்திலிருக்கும் வரும், ஒரு குறிப்பான பிரவாகத்தினால்கூட ஆளப்படுகின்றன. நரகங்களானது, அவைகளைப் பார்த்துக்கொண்டு, அவைகளின் உன்மத்தங்களையும் கலாதிகளையும் அமர்த்த, ஏற்படுத்தப்பட்டிருக்கிற தேவர்களின் மூலமாய் குறிப்பாய் ஆளப்படுகின்றன; சில சமயங்களில் தேவர்கள் அவைகளுக்கு அனுப்பப்படுகிறார்கள்; அவர்கள் தங்கள் சந்நிதானத்தினால், அந்தக் கலாதிகளை குறைக்கிறார்கள். ஆனால், பொதுவாக நரகங்களில் இருக்கிறவர்கள் எல்லாம், பயங்களினால் ஆளப்படுகிறார்கள். சிலர், உலகத்தில் நடப்பட்டு, இன்னும் தங்களை ஒட்டிக்கொண்டிருக்கிற அச்சங்களினால் ஆளப்படுகிறார்கள்; ஆனால், இந்த கலக்கடிகள் போதுமானதாய் அல்லாமல், படிப்படியாய் அடங்குகிறபடியினால், தண்டனையாகும் என்கிற பயத்தினால் அவர்கள் ஆளப்படுகிறார்கள்; இதுதான், தீமைகளை செய்யாமல், அவர்களை தடுப்பதற்கு முக்கியமான வழிவகையாயிருக்கிறது. நரகத்தின் தண்டனைகள் பலவிதமாயிருக்கின்றன; தீமைகளுக்கு தக்கபடி, அவைகள் மிதமாகவும் அல்லது கடினமாகவுமிருக்கின்றன. அநேக சங்கதிகளில், தந்திரத்திலும் சூதிலும் மேற்பட்டு, தாங்கள் ஏவிவிடுகிற தண்டனைகளினாலும் திகில்களினாலும், மற்றவர்களை கீழ்ப்படிதலிலும் அடிமைத் தனத்திலும் வைக்க, சக்தியுடைத்தாயிருக்கிற அதிக கொடுமையான ஆவிகள் அவைகளுக்கு மேலே வைக்கப்படுகின்றன. ஆனால், இந்த ஆளப்பட்டவர்கள், தங்களுக்கு ஏற்படுத்தியிருக்கிற

எல்லைகளுக்கு மேலேயிருக்கிறதென்று தெரியப் படுகிறதில்லை. தண்டனையாய் விடும் என்கிற பயம்தான், நரகத்தில் இருப்பவர்களின் கொடுமை யையும் உக்கிரத்தையும், அமர்த்துவதற்கு ஒரே வழிவகையாயிருக் கிற தென்பது குறித்து வைக்கப் படவேண்டும். வேறு இதர வழி இல்லை.

544 நரகங்களை ஆளுகிற ஏதோ ஒரு பேய் இருக்கிறதாக வும், அது வெளிச்சத்தின் தேவனாக சிருட்டிக்கப் பட்டதாகவும், ஆனால், அது கலகமுள்ளதான பிறகு, நரகத்தில் அதின் கும்புடன் தள்ளப்பட்டதாகவும், உலகத்தில் இதுவரையில் நம்பப்பட் டிருக் கிறது. வேதத்தில் பிசாசைப்பற்றியும், சாத்தானைப்பற்றியும் சாத் தான்போன்ற குணமுள்ளவர்களைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிற படியினாலும், அந்த வாக்கியங்களில் வேதமானது சொல்லார்த் தத்தின்படி, அறிந்துக்கொள்ளப்பட்டபடியினாலும், இந்த நம் பிக்கையானது பிரபலமாகி விட்டது; ஆனால், அவைகளில் பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லியதினால் நரகம் கருதப்படு கிறது; பிசாசு என்பது, பின்புறத்திலிருப்பதும், தீமையான சாத் தான்போன்றகுணமுள்ளவர்களென்றுசொல்லப்பட்டமிகவும்கெட் டவைகள் வசிக்கப்பட்டதுமான, நரகம் அர்த்தம் கொள்ளுகிறது; சாத்தான் என்பது, அதன் குடிகள் அவ்வளவு கொடுமையானவர் களாயல்லாமல், தீமையுள்ள ஆவிகள் என்று சொல்லப்படுகிற எதிரி லிருக்கும் நரகத்தை காண்பிக்கிறது; பூத கணம் என்பது சுவர்க் கத்தைகூட, அரசாட்சி செய்ய பாத்தியம் பாராட்டுகிறவர்களா யிருக்கிற பேபல் அல்லது பாபிலோனியாவைச் சேர்ந்தவர்களை காண்பிக்கிறது. நரகங்களில் இருக்கிற எல்லாரும் சுவர்க்கங்களில் இருக்கிற எல்லாரைப்போலும், மானிட வமிசத்திலிருந்து வந்த படி யினாலும் (நெ. 311 முதல் 317 வரையில் பார்க்கவும்), சிருட்டி ஆரம்பமுதல் தற்காலம் வரையில், அவர்கள் பதினாயிரங் கள் பதினாயிரங்களாக ஆய்விட்டபடியினாலும், அவர்களில் ஒவ் வொருவனும், உலகத்தில் இருக்கும்காலத்தில் தெய்வத்துக்கு விரோ தமாய் இருந்ததற்கு தக்கபடி பிசாசாயிருப்பதினாலும், நரகங்கள் கீழ்ப்பட்டிருக்கிற ஒரு பிசாசுகூட இல்லை என்பதுகூட விசதமா கிறது (இந்த விஷயத்தைப்பற்றி மேலே நெ. 311, 312 பார்க்கவும்).

## LVII

## ஆண்டவரால் எவனும் நரகத்தில் தள்ளப்படுகிறதில்லை; ஆவியாலேயே இது செய்யப்படுகிறது.

**545**. கடவுள் மனிதனிடமிருந்து, தன்னுடைய முகத்தை திருப்பிக்கொண்டு, தன்னைவிட்டு அவனை ஒழித்து, அவனை நரகத்தில் தள்ளி, அவனுடைய துன்மார்க்கத்துக்காக கோபப்படுகிறார் என்று சிலர், அபிப்பிராயப்படுகிறார்கள்; இன்னும் சிலர் கடவுள் மனிதனை தண்டித்து, அவனுக்கு தீமை செய்கிறாரென்று நம்புகிறார்கள். அவ்வித விஷயங்கள் சொல்லப்படுகிற வேதத்தின் சொல்லார்த்தத்திலிருந்து, இந்த அபிப்பிராயத்தில் தாங்களே ஸ்திரப்படுகிறார்கள்; ஏனென்றால், சொல்லார்த்தத்தை விவரிக்கிற வேதத்தின் தத்துவ ஞானார்த்தம் முழுமையும் வேறானதென்றும், ஆகவே வேதத்தின் ஞானார்த்தத்திலிருந்து வருகிற திருசசபையின் உண்மையான கோட்பாடு, வேறுவிதமாய், அதாவது கடவுள் மனிதனிடமிருந்து, தன்னுடைய முகத்தை எப்பொழுதும் திருப்பிக்கொண்டு, தன்னிடமிருந்து நீக்கிக்கொள்ளுகிறதில்லை என்றும், அவர் யாரையும் நரகத்தில் தள்ளுகிறதில்லை என்றும், அவர் யாரிடமும் கோபித்துக்கொள்ளுகிறதில்லை என்றும், கற்பிக்கிறதென்றும், அவர்களுக்கு தெரியாது. தன்னுடைய மனது தெளிவு அடைந்த ஒவ்வொருவனும், கடவுள் நன்மையே யாகவும், அன்பே யாகவும், இரக்கமே யாகவும் இருக்கிறபடியினால், தான் வேதத்தை வாசிக்கும் காலத்தில் இதை அறிந்துகொள்ளுகிறான். மேலும், நன்மையே யாருக்கும் தீங்குசெய்ய முடியாதென்றும், அன்பு என்பதும் இரக்கம் என்பதும்கூட, இது தங்களுடைய சத்துக்கு விரோதமாய் இருக்கிறபடியினால், தெய்வத்துக்கே விரோதமாய் இருக்கிறதின் நிமித்தம், மனிதனை தன்னிடமே யிருந்து நீக்கமுடியாதென்றும் அப்பொழுது அறிந்துகொள்ளுகிறான். ஆகையினால், தெளிந்த மனதிலிருந்து பார்க்கிறவர்கள், வேதத்தைப் படிக்கும் காலத்தில், கடவுள் எக்காலத்திலும், மனிதனைவிட்டு தானே திரும்பிக்கொள்ளுகிறதில்லை என்றும், அவர் அப்படி அவனைவிட்டு திரும்பிக்கொள்ளாதபடியினால், நன்மையிலிருந்தும், அன்பிலிருந்தும், இரக்கத்திலிருந்தும் நடத்துகிறாரென்றும், அதாவது அவனுக்கு நன்மை

உண்டாக இச்சித்து, அவனை நேசித்து, அவன்பேரில் இரக்கம் கொள்ளுகிறாரென்றும், தெளிவாய் அறிந்துகொள்ளுகிறார்கள். மேலும், இவ்வித விஷயங்கள் சொல்லப்பட்ட வேதத்தின் சொல்லார்த்தம், தனக்குள்ளேயே ஒருஞானார்த்தத்தை மறைத்துகொண்டு இருக்கிறதென்றும், மனிதனுடைய கிரகிப்பு ஒத்தும், அவனுடைய முதல் அபிப்பிராயத்துக்கும் பொது அபிப்பிராயங்களுக்கும் தக்கபடி, சொல்லார்த்தத்தில் உபயோகப்படுத்தப்பட்ட, இந்த சொற்கள் ஞானார்த்தத்தை அனுசரித்து, விரித்துரைக்கப்படவேண்டுமென்றும், இதிலிருந்து அவர்கள் அறிந்துகொள்ளுகிறார்கள்.

**546.** தெளிவடைந்தவர்கள், நன்மையும் தீமையும் இரண்டு எதிரானவைகளென்றும், ஆகையால் சுவர்க்கமும் நரகமும் இருக்கிறதுபோல் எதிரிடையாயிருக்கின்றனவென்றும், எல்லா நன்மையும் சுவர்க்கத்திலிருந்து வருகிறதென்றும், எல்லா தீமையும் நரகத்திலிருந்து வருகிறதென்றும், ஆண்டவரின் தெய்வீகம் சுவர்க்கத்தை உண்டாக்குகிறபடியினால் (நெ. 7 முதல் 12 வரையில்), ஆண்டவரிடமிருந்து மனிதனுக்குள் நன்மையைத்தவிர வேறு ஒன்றும் ஓடாதெனறும், நரகத்திலிருந்து தீமையைத் தவிர வேறு ஒன்றும் வராதென்றும், நரகமானது மனிதனை இடைவிடாமல் தீமைக்குள் செலுத்திக்கொண்டிருக்கையில், இவ்விதமாக ஆண்டவர் மனிதனை தீமையிலிருந்து, இடைவிடாமல் நன்மைக்கு இழுத்துக்கொண்டிருக்கிறாரென்றும், இன்னும் அதிகமாய் அறிந்துகொள்ளுகிறார்கள். மனிதன் இரண்டிக்கும் மத்தியில் இருந்தாலொழிய, எந்த சிந்தனையும், எந்த சித்தமும், இன்னும் குறைவாய் எந்த சுவேச்சையும் எந்த பிரீதியும் அவனுக்கு இருக்காது; ஏனென்றால், நன்மைக்கும் தீமைக்கும் மத்தியில் இருக்கும் சம நிலையினால், மனிதனுக்கு இவைகள் எல்லாம் இருக்கின்றன. ஆகையினால், ஆண்டவர் தானே திரும்பிக்கொண்டு, மனிதன் தீமைக்கே மாத்திரம் விடப்பட்டால், அவன் மனிதனாகமாட்டான். துன்மார்க்கனானாலும் நல்லவனானாலும் எவனாயிருந்தபோதிலும், ஆண்டவரிடமிருந்து மனிதனுக்குள் பாய்வது நன்மைதானென்று, இவைகள் எல்லாம் காண்பிக்கிறது; ஆனால், அதில் தீமையான மனிதனை, தீமையிலிருந்து ஆண்டவர் இடைவிடாமல் பிரிக்கிறார் என்பதும், நல்ல மனிதனை நன்மைக்கு இடைவிடாமல் நடத்துகிறார் என்பதுமாகிய, வித்தியாசமிருக்கிறது; மனிதன் பெற்றுக்கொள்பவனாயிருப்பதினால், இந்த வித்தியாசத்திற்கு காரணம் மனிதனிடத்திலேயேயிருக்கிறது.

**547.** இதிலிருந்து, மனிதனானவன் நரகத்திலிருந்து தீமையையும், ஆண்டவரிடமிருந்து நன்மையையும் செய்கிறானென்று விசதமாகலாம்; ஆனால் மனிதன் தான் செய்வதெல்லாம் தன்னிடமே இருந்து செய்கிறதாக நம்புகிறபடியினால், அவன் செய்யும் தீமையானது, அவனை அவன் சொந்தமானதுபோல் ஒட்டிக் கொள்ளுகிறது; அதனால்தான் மனிதனானவன் தன்னுடைய சொந்த தீமைக்கு காரணமாய் இருக்கிறான்; ஆண்டவர் எந்த விதத்திலும் அப்படி இல்லை. மனிதனிடமிருக்கும் தீமை அவனுடன் இருக்கும் நரகமாயிருக்கிறது, ஏனென்றால், தீமையைப்பற்றியாவது நரகத்தைப்பற்றியாவது எதைப்பற்றி பேசினாலும், ஒரே பொருளாகிறது. இப்பொழுது, மனிதனே தன் சொந்ததீமைக்கு காரணமாயிருப்பதினால், அவன் நரகத்திற்கு தானே நடத்திக் கொள்ளுகிறான்; ஆண்டவர் அப்படி செய்கிறதில்லை ஏனென்றால், மனிதனை நரகத்திலிருந்து தப்புவிக்கிறவர் என்று சொல்லும்படியாக, ஆண்டவர் மனிதனை நரகத்திற்குள் செலுத்தாதபடி அவ்வளவு தூரத்திலிருக்கிறார்; மனிதனானவன் தன்னுடைய சொந்த தீமையில் இருக்க இச்சித்து நேசிக்காத அளவு இதை அவர் செய்கிறார். மனிதனுடைய எல்லா சித்தமும் அன்பும், இறந்த பிறகு அவனுடன் இருக்கின்றன (நெ. 470 முதல் 484 வரையில்). உலகத்தில் தீமையை இச்சித்து நேசிக்கிறவன், இதர வாழ்வில் அதே தீமையை இச்சித்து நேசிக்கிறான்; அக்காலத்தில் அதிலிருந்து பிரிக்கப்பட தான் சகிக்கிறதில்லை தீமையிலிருக்கப்பட்ட மனிதன் நரகத்துக்கு செல்லப்பட்டவனாகவும், தன் ஆவி சம்மந்த பட்ட வரையில், உள்ளபடி அங்கே யிருக்கப்பட்டவனாகவும் இருப்பதற்கு, இறந்த பிறகு தன்னுடைய தீமையிருக்கிற இடத்தில் இருப்பதை விட, அதிகம் விரும்பாததற்கும் இதுதான் காரணம்; ஆதலால், இறந்த பிறகு, நரகத்திற்குள் தானே விழுகிறவன் மனிதனே தவிர ஆண்டவர் அல்ல.

**548.** இது எப்படி செய்யப்படுகிறது என்பதுகூட சொல்லப் பட வேண்டும். மனிதன் இதர வாழ்விற்குள் பிரவேசிக்கிறபோது, எல்லா நல்ல உபகாரங்களையும் அவனுக்கு செய்து, அவனுடன் ஆண்டவரைப்பற்றியும், சுவர்க்கத்தைப் பற்றியும், தேவர்கள் வாழ்வைப்பற்றியும்கூட பேசி, உண்மையானதும் நன்மையானதுமாகிய விஷயங்களை, அவனுக்கு கற்பிக்கிற தேவர்களால், அவன் முதலில் ஏற்றுக்கொள்ளப்படுகிறான். ஆனால், இப்பொழுது ஆவி

யாயிருக்கிற மனிதன், உலகத்தில் இவ்விதமான விஷயங்களை தெரிந்துகொண்டிருந்து, தன்னுடைய இருதயத்தில் அவைகளை மறுத்து, அல்லது அலட்சியம் செய்தவனாயிருந்தால், அவன் கொஞ்சநேரம் பேசிவிட்டு, இந்த தேவர்களைவிட்டுப் போகவிரும்பி முயற்சிசெய்கிறான். தேவதூதர்கள் இதை அறிந்துகொள்ளும்போது, அவனை போகும்படி விட்டுவிடுகிறார்கள்; அவன் கொஞ்ச காலம் மற்றவர்களுடன் சேர்ந்திருந்து, தன்னுடனே அதேமாதிரியான தீமையிலிருக்கப்பட்டவர்களுடன் கடைசியில் சேர்ந்திருக்கிறான் (மேலே செ. 445 முதல் 452 வரையில் பார்க்கவும்). இப்படி நடக்க சம்பவிக்கும் காலத்தில், அவன் ஆண்டவரிடமிருந்து தானே திரும்பிகொண்டு, தன்னுடைய முகத்தை, தீமையினிடத்து கொள்ளும் அதே ஆசையிலிருக்கிறவர்கள் இருக்கிற, உலகத்திலிருக்கும்போது சேர்க்கப்பட்ட, நரகம் பக்கம் தன் முகத்தை திருப்பிக்கொள்ளுகிறான். இவைகளிலெல்லாமிருந்து, ஆண்டவர் தேவர்கள் மூலமாயும், சுவர்க்கத்திலிருந்து வரும் உட்பெருக்கினாலும்கூட, ஒவ்வொரு ஆவியையும் தன் பக்கம் இழுத்துக் கொள்ளுகிறார் என்கிறது தெளிவாயிருக்கிறது; ஆனால், தீமையிலிருக்கப்பட்ட அந்த ஆவிகள், முழுமையும் எதிர்த்து, ஆண்டவரிடமிருந்து தாங்களே பிளந்துகொண்டுவந்துவிடுகின்றன; ஏனென்றால், அவைகள் தங்கள் சொந்த தீமையினால் இழுக்கப்படுகின்றன; ஆகையினால், ஒரு கயிற்றினால்போல நரகத்தினால், இழுக்கப்படுகின்றன. அவைகள் இழுக்கப்படுகிற படியினாலும், தீமையினிடத்து கொள்ளும் ஆசையின்பொருட்டு பின்தொடர மனமுடையவர்களாயிருக்கிறபடியினாலும், சுவேச்சையாய் அவைகள் நரகத்தில் தாங்களே விழுகின்றன என்பது வெளிப்படையாகிறது. நரகத்தைக் குறித்து தாங்கள் கொண்டிருக்கும் அபிப்பிராயத்தினால், உலகத்திலிருக்கும் மனிதர்களால், விஷயம் இப்படியிருக்கிறதென்று நம்பப்பட முடியாது. உண்மையில் இதரவாழ்வில், அது நரகத்துக்கு வெளியே இருக்கிறவர்கள் கண்கள் முன்பாக அப்படி தோன்றுகிறதில்லை; ஆனால், தாங்களே நரகத்திற்குள் விழுகிறவர்களுக்கு அப்படி தோன்றுகிறது; ஏனென்றால், அவ்விதமானவர்கள் தங்கள் இஷ்டப்படி பிரவேசிக்கிறார்கள். தீமையினிடத்துகொள்ளும் உக்கிரமான ஆசையினால் பிரவேசிக்கிறவைகள் தலைகீழாகவும், கால்மேலாகவும், தலைகீழாய் தள்ளப்படுவதாக தோன்றுகின்றன. இந்த தோற்றத்தினால்தான், தெய்வ சக்தியினால் அவைகள் நரகத்

தில் தள்ளப்படுவதாக தோன்றுகின்றன. ஆனால், இவைகளைப்பற்றி, மேலே செ. 574-ல் அதிகம் சொல்லப்படும். இவைகளில் எல்லாமிருந்து, ஆண்டவர் யாரையும் நரகத்தில் தள்ளுகிறதில்லை என்றும், ஆனால், ஒவ்வொருவனும், தான் உலகத்திலிருக்கும்போது, பின்னிட்டு ஆவிகள் மத்தியில் இறந்த பிறகு வரும்போதும்கூட, நரகத்திற்குள் தானே விழுகிறானென்றும் அறிந்துகொள்ளப்படலாம்.

**549**. தீமைகளும் அவைகளின் பொய்களும் எதிர்த்து, அவருடைய தெய்வீக உட்பெருக்கை, மறைக்கிறது மட்டுமல்லாமல், தள்ளுகிறபடியினாலும்கூட, நன்மையாகவும் அன்பாகவும் இரக்கமாகவும் இருக்கிற தன்னுடைய தெய்வீக சத்திலிருந்து, ஒவ்வொரு மனிதனுடனும் ஆண்டவர் ஒரே மாதிரி நடக்க முடியாது. சூரியன் மேகங்களின் பின் பிரகாசித்துக்கொண்டிருப்பதின் நிமித்தம், அது எதிர்க்கும் மேகங்களை கலைக்க தொடர்ச்சியான முயற்சியில் இன்னும் இருந்துகொண்டு, மத்திய காலத்தில், பலசுற்றான வழிகளினால், மனிதனுடைய கண்ணில் கொஞ்சம் மந்தாரமான வெளிச்சத்தை அனுப்பினாலும்கூட, தீமைகளும் அவைகளின் பொய்களும், சூரியனுக்கும் கண்ணுக்கும் மத்தியில் இருக்கிற கருத்த மேகங்களைப்போலிருந்துகொண்டு, அதின் வெளிச்சத்தின் பிரகாசத்தையும் தெளிவையும் நீக்கி விடுகின்றன. சூக்கும உலகத்தில் அதேதான்; அந்த சூரியன் ஆண்டவராயும் தெய்வீக அன்பாயும் இருக்கிறது (செ. 116 முதல் 140 வரையில்); அந்த வெளிச்சமானது தெய்வீக உண்மையா யிருக்கிறது (செ. 126 முதல் 140 வரையில்); அங்கிருக்கும் கருத்த மேகங்கள் தீமையிலிருந்து வந்த பொய்களா யிருக்கின்றன; கண்ணானது புத்தியா யிருக்கிறது. அந்த சூக்கும உலகத்தில் தீமையிலிருந்து வந்த பொய்களில், எவனாவது ஒருவன் இருக்கிறதற்கு தக்கபடி, அவன் அவ்வித மேகத்தினால் சூழப்படுகிறான்; இதுவும் தீமையின் அளவுக்குத் தக்கபடி கருப்பாயும் அடர்த்தியாயு மிருக்கிறது. இந்த உவமிக்கையிலிருந்து ஆண்டவரின் பிரசன்னம் ஒவ்வொருவனுடனும் சாசுவதமாயிருக்கிறது என்றும், ஆனால் அவர் பலவிதமாய் ஏற்றுக்கொள்ளப்படுகிறார் என்றும் அறிந்துகொள்ளப்படலாம்.

**550**. தண்டனைகள் மூலமாய் தீய ஆவிகள் தீமை செய்வதிலிருந்து தடுக்கப்படும்பொருட்டு, அவைகள் ஆவிகள் உலகத்தில் கடினமாய் தண்டிக்கப்படுகின்றன ஆண்டவரிட மிருந்து எந்த

தண்டனையும் வராமல், தீமையிலிருந்தே வந்தபோதிலும், இது அம்மாதிரியே ஆண்டவரிடமிருந்து வந்ததுபோல் தோன்றுகிறது; ஏனென்றால், தீமையானது, தன்னுடைய சொந்த தண்டனையுடன் பிரிக்கப்படாதபடி, அம்மாதிரி சேர்க்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், அந்த நரகத்துக்கடுத்த கும்பு, தீமை செய்வதுபோல், முக்கியமாய் மற்றவர்களுக்கு தண்டனையும் வேதனையும் செய்வதுபோல், மற்ற எதின்பேரிலும் ஆசைப்பட்டு நேசிக்கிறதில்லை; மேலும் அவைகள் அதேமாதிரி ஆண்டவரால் காப்பாற்றப்படாத ஒவ்வொருவனுக்கும், தீமையை செய்து தண்டிக்கிறது. ஆகையினால், தீமையானது தீமையான இருதயத்திலிருந்து செய்யப்படும்போது, ஆண்டவரிடமிருந்து எலலா பாதுகாப்பை, தன்னிடமே யிருந்து தள்ளுகிறபடியினால், நரகத்து பேய்கள், அவ்வித தீமையை செய்கிறவன்பேரில் பாய்ந்து அவனை தண்டிக்கிறது. இது, அந்த இரண்டும் கூட சேர்க்கப்பட்டிருக்கிற உலகத்திலிருக்கும் தீமைகளாலும் அவைகளின் தண்டனைகளாலும் கொஞ்சம் திருஷடாந்தப் படுத்தப்படலாம். ஏனென்றால் உலகத்தில் சட்டங்கள், ஒவ்வொரு தீமைக்கும் ஏதோ ஒரு தண்டனையை கற்பிக்கின்றன; ஆகையினால், தீமைக்குள் பாய்கிறவன், தீமையின் தண்டனைக்குள்கூட பாய்கிறான்; தீமையானது உலகத்தில் மறைக்கப்படலாமென்பது மாத்திரம் வித்தியாசமா யிருக்கிறது; ஆனால், மறுமையில் அது மறைக்கப்பட முடியாது. இவைகளி லெல்லாமிருந்து, ஆண்டவர் யாருக்கும் தீங்கு செய்கிறதில்லை என்றும், தீங்கு செய்பவனிடம் இருக்கும் தீமைக்கு காரணமாயில்லாதபடியினால், குற்றவாளி தண்டனை அடைய காரணமாயிருப்பது, அரசனுமல்லாமல் நியாயாதிபதியுமல்லாமல், சட்டமுமல்லாமல் இருக்கிற உலகத்தி லிருப்பதுபோல், அது இருக்கிற தென்றும், வெளிப்படையாகிறது.

# LVIII

## நரகங்களில் இருப்பவர்கள் எல்லாரும், தன்னையே நேசிப்பதிலிருந்தும், உலகத்தை நேசிப்பதிலிருந்தும், உற்பத்தியாகிற தீமைகளிலும் அதிலிருந்துவரும் பொய்களிலும் இருக்கிறார்கள்.

**551**. நரகத்திலிருப்பவர்கள் எல்லாரும் தீமைகளிலும், அதிலிருந்துவரும் பொய்களிலுமிருக்கிறார்கள். அங்கே தீமைகளிலும் அதே காலத்தில் உண்மைகளிலும் இருக்கப்பட்டவன் ஒருவன் கூட இல்லை. உலகத்திலிருக்கும் அநேகம் கெட்டவர்கள், திருச்சபையின் உண்மைகளாயிருக்கிற, பரமார்த்த ஞானசம்பந்தமான உண்மைகளை, அறிவிக்கப்பட்டவர்களாயிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் சிறுவயதிலிருந்தும், பிறகு பிரசங்கத்திலிருந்தும், வேதத்தைப் படிப்பதிலிருந்தும், அவைகளை கற்றுகொண்டு, பின்னிட்டு அவைகளைப்பற்றி பேசியிருக்கிறார்கள். சிலர்கூட, இருதயத்தில், தாங்கள் கிறிஸ்துவர்களென்று நம்ப மற்றவர்களை ஏவினார்கள்; ஏனென்றால், அவர்களுக்கு, பாவனைகாட்டுகிற ஆசையுடன் உண்மைகளிலிருந்து பேசவும், ஞானசம்பந்தமான பக்தியிலிருந்து போல், நேர்மையாய் செயல்படவும்கூட தெரியும். ஆனால், அந்த உண்மைகளுக்கு விரோதமாய் தங்களுக்குள்ளேயே நினைத்து, தேசாசாரமான சட்டங்களின் பொருட்டு மாத்திரமும், கியாதியையும் கீர்த்தியையும் லாபத்தையும் அடையும் நோக்கத்துடனும், தங்கள் சிந்தனைகளுடன் ஒத்து, தீமைகளை செய்வதிலிருந்து நீங்கினவர்கள் எல்லாரும், இருதயத்தில் தீமையுள்ளவர்களாக இருக்கிறார்கள். மேலும், ஆவிவிஷயமல்லாமல், சரீரவிஷயமாய் மாத்திரம், உண்மைகளிலும் நன்மைகளிலும் இருக்கிறார்கள். ஆகையினால், அவர்களுடைய புறம்பானவைகள், மறுமையில் அவர்களிடமிருந்து நீக்கப்பட்டு, அவர்கள் ஆன்மாவின் உள்ளானவைகள் வெளிப்படுத்தப்பட்டபோது, அவர்கள் எந்த உண்மைகளிலும் நன்மைகளிலுமல்லாமல், தீமைகளிலும் பொய்களிலும் முழுமையுமிருக்கிறார்கள் ; மேலும், உண்மைகளும் நன்மைகளும், அவர்களுடைய ஞாபகங்களில்தாங்களே சம்பாதித்த அறிவுகளாக இருந்ததாகவும், தாங்கள் பேசி, நன்மையானது ஞானசம்பந்தமான அன்பிலிருந்தும் விசுவாசத்திலிருந்தும் வந்ததுபோல்,நன்மை

என்கிற பாசாங்கு செய்தபோது, அங்கிருந்து அவைகளை கொண்டுவந்தார்களென்றும் விசதமாக்கப்படுகிறது. அவ்விதமான ஆவிகள் அவைகளுடைய உள்ளானவைகளுக்குள்ளும், இவ்விதமாக அவர்களுடைய தீமைகளுக்குள் விடப்பட்டபோது, அவைகள் அதற்கு அப்புறம் உண்மைகளைப் பேசாமல், பொய்களை மாத்திரம் பேசக்கூடியவைகளாயிருக்கின்றன; ஏனென்றால், அக்காலத்தில் அவைகள் தீமைகளிலிருந்து பேசுகின்றன; ஏனென்றால், ஆவியானது அக்காலத்தில் தன்னுடைய சொந்த தீமையைத் தவிர வேறொன்றுமில்லாதபடியினாலும், தீமையிலிருந்து பொய்யானது மாத்திரம் வெளியே போகிறபடியினாலும், தீமைகளிலிருந்து உண்மைகளைப் பேசுதல் முடியாத காரியம். ஒவ்வொரு தீமையான ஆவியும் நரகத்தில் தள்ளப்படுவதற்கு முன், இந்த நிலைமைக்கு ஒடுக்கப்படுகிறது (மேலே நெ. 499 முதல் 512 வரையில் பார்க்கவும்). இதை உண்மைகள் விஷயத்திலும் நன்மைகள் விஷயத்திலும், பாழாக்கப்படுதல் என்று சொல்லப்படுகிறது; ஆனால், பாழாக்கப்படுதல் என்பது, ஒருவனுடைய உள்ளானவைகளுக்குள்ளும், இவ்விதமாக, ஆவியின் சொந்தமானதற்குள்ளும், அல்லது ஆவிக்குள்ளும் விடப்படுதலைவிட வேறு ஒன்றுமில்லை. இந்த விஷயத்தைப்பற்றி அதிகம் மேலே பார்க்கப்படலாம் (நெ. 425).

**552**. இறந்த பிறகு மனிதன் இந்த நிலைமையிலிருக்கும்போது, தன்னுடைய முதல் நிலைமையில் இருந்ததுபோல், அவன் அப்புறம் மானிட ஆவியல்ல (மேலே நெ. 491 முதல் 498 வரையில்); ஆனால், அவன் நிஜமாய் ஆவியாயிருக்கிறான். ஏனென்றால், நிஜமாய் ஒரு ஆவியாயிருக்கப்பட்டவன், தன்னுடைய மனதுக்கு அனுவயப்படுகிற ஒரு முகத்தையும் சரீரத்தையும் உடைத்தாயிருக்கிறான்; இவ்விதமாக அவனுடைய உள்ளானவைகளின் மாதிரி, அல்லது உருவமாக இருக்கிற ஒரு புறம்பான உருவத்தை உடைத்தாயிருக்கிறான். மேலே பேசிய முதலாவது இரண்டாவது நிலைமைகள் மூலமாய் சென்ற பிறகு ஒரு ஆவியானது அம்மாதிரியிருக்கிறது. ஆகையினால், அது பார்க்கப்பட்ட உடன், முகத்திலிருந்து மட்டுமல்லாமல், சரீரத்திலிருந்துகூட, அதனுடன் பேச்சிலிருந்தும் சைகளிலிருந்தும், அது என்னவென்று உடனே தெரிந்துகொள்ளப்படுகிறது; அது தன்னிலேயே யிருப்பதினால், தன்னைப் போலிருக்கிறவர்கள் இடத்தைவிட, அது வேறு இடத்தில் இருக்க முடியாது. சூக்கும உலகத்தில், ஆசைகளும் அதன் சிந்தனைகளும்

முழுமையும் பகிர்ந்துகொள்ளப்படுகிறபடியினால், ஒரு ஆவியானது தன்னையேபோன்றவன் றினிடம்கடத்தப்படுகிறது; ஏனென்றால், அது அதன் ஆசையிலிருந்தும், அதன் சந்தோஷத்திலிருந்தும் செய்யப்படுகிறது. நிஜமாக, அப்பொழுது தன்னுடைய சொந்த உயிரை புகட்டி அல்லது தன் சுவாசத்தை தன் இஷ்டமாய் இழுக்கிறபடியினாலும், அது வேறுவழியில் திரும்பியகாலத்தில் இதை செய்ய முடியாதபடியினாலும், அதுகூட அந்த திக்கில்தானே திரும்பிக்கொள்ளுகிறது. இந்த மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளுதல், சூக்கும உலகத்தில், முகம்திரும்புதலுக்கு தக்கபடி இருக்கிறதென்றும், ஒவ்வொன்றும் தன்னுடையதைப்போன்ற ஒரு அளவில் இருக்கிறவர்களை, தன் முகத்தின் முன்பாக அடிக்கடி வைத்திருக்கிறதென்றும், இதுகூட சரீரத்தில் ஒவ்வொரு திருப்புதலிலும் நடக்கிறதென்றும், அறிந்துகொள்ளப்படவேண்டும் (மேலே நெ. 151 பார்க்கவும்). அதனால்தான், எல்லா நரகத்து ஆவிகளும், ஆண்டவருக்கு பின்பக்கமாய், இந்த உலகத்துசூரியனுக்கும் சந்திரனுக்கும் பதிலாய், அங்கே யிருக்கிற இருள் இருக்கும் இடத்துக்கும், அடர்ந்த இருள் இருக்கும் இடத்துக்கும், தாங்களே திரும்பிக்கொள்ளுகின்றன; ஆனால், சுவர்க்கத்திலிருக்கும் எல்லா தேவர்களும், ஆண்டவர் பக்கம் சுவர்க்கத்து சூரியனாகவும, சுவர்க்கத்து சந்திரனாகவும் தாங்களே திரும்பிக்கொள்ளுகின்றன (மேலே நெ. 123, 143, 144, 151 பார்க்கவும்). இவைகளிலிருந்து, நரகத்திலிருக்கிறவர்கள் எல்லாம் தீமைகளிலும், அதிலிருந்துவரும் பொய்களிலுமிருக்கிறார்களென்றும் மேலும் அவர்கள் தங்கள் சொந்த அன்பிற்கு திருப்பப்படுகிறார்களென்றும், இப்பொழுது தெளிவாகிறது.

**553.** நரகத்திலிருக்கும் எல்லா ஆவிகளும் சுவர்க்கத்து வெளிச்சத்தின் எந்த பிரமாணத்தில் பார்த்தாலும், தங்கள் தீமையின் உருவத்தில் தோன்றுகிறார்கள்; ஏனென்றால் ஒவ்வொருவரிடத்திலும், உள்ளும் புறம்பும் ஒன்றாகிறபடியினாலும், உள்ளானவைகள், முகமாகவும், சரீரமாகவும், பேச்சாகவும், சைகைகளாயுமிருக்கிற புறம்பானவைகளில் துலக்கமாய் காண்பிக்கிறபடியினால், ஒவ்வொருவனும் தன்னுடைய தீமையின் பிரதிமையாயிருக்கிறான். ஆகையினால், அவர்களுடைய குணம் பார்த்த உடன் தெரிந்துகொள்ளப்படுகிறது. பொதுவாக, கெட்ட ஆவிகள், மற்றவர்களிடத்து காட்டும் அலட்சியத்தினுடையவும், தங்களுக்கு மரியாதை கொடுக்காதவர்களிடத்தில் காட்டும் பயமுறுத்தலையினுடையவும், உருவத்

களாகவுமிருக்கின்றன; பலவிதமானவன்மங்களினுடையவும், பலவித மான பழிவாங்குதலினுடையவும் உருவங்களாகவுமிருக்கின்றன. அவர்களின் உள்ளானவைகளிலிருந்து, வரும் துஷ்டத்தனமும், குரூரமும், இந்த உருவங்கள் மூலமாக தாங்களே காட்டிக்கொள்ளு கின்றன; ஆனால், மற்றவர்கள் மெச்சி, பூஜித்து தங்களை ஆராதித் தால், அவர்களுடைய முகங்கள் அடக்கப்பட்டு, சந்தோஷத்தி லிருந்து உண்டாகிற இன்பதோற்றத்தை உடைத்தாயிருக்கிறது. ஒன்று மற்றொன்றைப் போலில்லாதபடியினால், அவைகள் நிஜமாய் தோன்றுகிறபடி, இந்த உருவங்கள் எல்லாவற்றைப்பற்றியும் சுருக் கமான விவரம் சொல்லமுடியாது: ஒரேமாதிரியான தீமையிலிருக் கிறவர்களுக்குள் மாத்திரம், ஆகையினால், ஒரேவிதமான நரகக் கூட்டத்தில் இருக்கிறவர்களுக்குள், உற்பத்தி ஸ்தானமாயிருக்கிற சமதளத்திலிருந்துபோல, எல்லாருடைய முகங்களும் அங்கே ஒரு பொருத்தம் இருக்கிறதுபோல் தோன்றுகிற ஒரு பொதுவான சாயல் இருக்கிறது. சாதாரணமாக, அவர்கள் முகங்கள், பிணங்கள் முகங்களைப்போல் பயங்கரமாகவும் உயிரில்லாமலும் இருக்கின்றன; ஆனால், சில திருஷ்டாந்தங்களில், அவைகள் கருப்பாயிருக்கின்றன; மற்றவைகளில் சிறு தீவட்டிகளைப் போல் சூடாக இருக்கின்றன; மற்றதில் அவைகள் முகப்பருவினா லும், பாலுண்ணிகளாலும், பெரிய புண்களாலும் உருவழிக்கப்படு கின்றன; சிலர் விஷயத்தில், முகமே இல்லாமல், அதற்கு பதிலாக மயிருள்ளதும் அல்லது எலும்பானதுமாகிய ஏதோஒன்று இருக்கி றது; இன்னும் சிலரிடத்தில் பற்கள் மாத்திரம் காணப்படுகின்றன. அவைகளின் சரீரங்கள்கூட குரூபமானவைகளாயிருக்கின்றன; அவைகளின் பேச்சு, கோபம் வெறுப்பு அல்லதுபழிவாங்குகையின் பேச்சுபோலிருக்கிறது; ஏனென்றால், ஒவ்வொருவனும் தன்னுடைய பொய்யிலிருந்துபேசுகிறான், அவனுடையதொனி அவனுடையதீமை யிலிருந்து வருகிறது: சுருங்கச்சொல்லில், அவைகள் எல்லாம் தங்க ளுடைய சொந்த நரகத்தின் பிரதிமைகளாயிருக்கின்றன. சாதாரண மாக நரகத்தினுடைய உருவம் என்னவென்று பார்க்க எனக்கு அருள் செய்யப்படவில்லை; ஆனால் முழு சுவர்க்கமும் ஒருமிக்க பார்த்தால் ஒரு மனிதனைப் போலிருப்பதைப்போல் (செ. 59 முதல் 67 வரையில்), முழு நரகமும் ஒருமிக்கப் பார்த்தால், ஒரு பிசாசை சாயல் காட்டுகிறதென்றும், ஒரு பிசாசின் பிரதிமையில் அம்மாதி ரியே சாயல் காட்டப்படலாமென்றும் எனக்கு சொல்லப்பட்டது

மலே செ. 544 பார்க்கவும்). ஆனால், நரகங்களின் அல்லது நரகத்து ட்டங்களின் குறிப்பான உருவங்களை பார்க்க, எனக்கு அடிக்கடி ருள் செய்யப்பட்டது; ஏனென்றால், நரகத்தின் வாசல்கள் ன்று சொல்லப்பட்ட, அவைகளின் உட் பிரவேசங்களில், உள்ளே ருக்கப்பட்டவர்களின் உருவத்தை பொதுவாக குறிக்கிற ஒரு ரூபாங்கி வழக்கமாய் தோன்றுகிறது. அங்கே வசிக்கிறவர்களின் வஞ்சினங்கள், நான் விவரிக்காமல் விட்டுவிடுகிற பயங்கரமானதும், காடுமையானதுமாகிய பொருள்களால்கூட, சாயல் காட்டப்படு ன்றன. ஆயினும், சுவர்க்கத்து வெளிச்சத்தில் நரகத்து ஆவி ளின் தோற்றம் இவ்விதமாயிருக்கிறதென்று, தெரிந்திருக்கப்பட வண்டும். ஆனால், அவைகளுக்குள்ளேயே அவைகள் மனிதர்களைப் பால் தோன்றுகின்றன; தாங்கள் தேவர்கள் முன்பாக தோன்று றது போல், ஒருவருக்கொருவர் அருவெருப்பானவர்களாக தோன்றாதபடி, இருக்க செய்வது ஆண்டவரின் இரக்கம் தான். ஆனால், அந்த தோற்றமானது பொய்யானது; ஏனென்றால், சுவர்க் த்திலிருந்து வந்த வெளிச்சத்தின் எந்த ஒரு கிரணம் உள்ளே விடப்பட்டவுடனே, அவர்களுடைய மானிட உருவங்கள், மேலே விவரிக்கப்பட்டபடி, அவைகளே இருக்கிறபடி குரூப மான உருவங் களாக திருப்பப்படுகின்றன; ஏனென்றால், ஒவ்வொன்றும், சுவர்க் கத்து வெளிச்சத்தில் அது நிஜமாய் இருக்கிறபடி தோன்றுகின் றது. அவைகள் சுவர்க்கத்து வெளிச்சத்தைதள்ளி, எரியும் மரக்கரி போலும், சில விஷயங்களில், எரியும் கந்தகம் போலும் இருக்கிற, தங்கள் சொந்த வெளிச்சத்தில் தாங்களேஏன் விழுகின்றன என்ப தற்குகூட, இது தான் காரணம். சுவர்க்கத்திலிருந்து வந்த வெளிச் சத்தின் ஒரு கிரணம் அதின்பேரில் பாயும்போது, இந்த வெளிச்ச மானது முழு இருட்டாக திருப்பப்படுகிறது. அதனால் தான் நரகங்கள் தடித்த இருளிலும் நிழலிலும்இருக்கிறதாகவும், அடர்ந்த இருளும் நிழலும் நரகத்திலிருப்பது போன்ற தீமையிலிருந்து வந்த பொய்களை கருதுகின்றதாகவும் சொல்லப்படுகின்றன.

**554.** மற்றவர்களை அலட்சியம் செய்தல் என்பதன் உருவங் களாகவும், தங்களுக்கு கீர்த்தியையும் மரியாதையையும் செய்யாத வர்களுக்கு, பயமுறுத்துதலாகவும், தங்களுக்கு அனுகூலமில்லாத வர்களுக்கு விரோதமாய், அருவெறுப்பினுடையவும் பழிவாங்கு கையினுடைய உருவங்களாகவும், நான் சொன்னபடி இருக்கிற, நரகத்திலிருக்கும் ஆவிகளின் குரூபமான உருவங்களை பரிசோதனை

செய்வதிலிருந்து, சாதாரணமாக அவைகள் எல்லாம் தன்னையே நேசித்தலினுடையவும் உலகத்தை நேசித்தலினுடையவும் உருவங்களாக இருக்கின்றனவென்றும், இவைகள் குறிப்பான உருவங்களாகயிருக்கிற தீமைகள், இந்த இரண்டு ஆசைகளிலும் உற்பத்தியாகின்றன என்றும் விசதமானது. மேலும், தன்னையே நேசித்தல், உலகத்தை நேசித்தல் என்கிற இந்த இரண்டு ஆசைகளும், நரகங்களில் அரசாட்சி செய்கின்றன வென்றும், நரகங்களை நிலைப்படுத்துகின்றன வென்றும், ஆனல், ஆண்டவரிடத்து அன்பும் அயலானிடத்து அன்பும், சுவர்க்கங்களில் ஆளுகின்றனவென்றும், அதேமாதிரி சுவர்க்கங்களை ஏற்படுத்துகின்றனவென்றும், அதனுடன்கூட, நரகத்தின் ஆசைகளாயிருக்கிற இரண்டு ஆசைகளும், சுவர்க்கத்தின் ஆசைகளாயிருக்கிற இரண்டு ஆசைகளும், ஒன்றுகொன்று நேராய் எதிரிடையாயிருக்கின்றனவென்றும், எனக்கு சுவர்க்கத்திலிருந்து சொல்லப்பட்டு, அதிக அனுபவத்திலிருந்து தெரிவிக்கப்பட்டிருக்கிறேன்.

**555.** தன்னையே நேசித்தலும், உலகத்தை நேசித்தலும், எப்படி அவ்வளவு பேயாட்டமானதென்றும், இந்த ஆசைகளிலிருக்கிறவர்கள், தோற்றத்தில் அவ்வித குரூபாங்கிகளாய் எப்படியிருக்கக்கூடுமென்றும், முதலில் நான் ஆச்சரியப்பட்டேன்; ஏனென்றால், உலகத்தில், தன்னையே நேசித்தலுக்கு அவ்வளவு சிந்தனை செலுத்தப்படாமல், கருவம் என்று சொல்லப்படுகிற புறம்பான விஷயங்களில் காட்டும் மனிதன் இறுமாப்பினிடத்தில் மாத்திரம் செலுத்தப்படுகிறது; இது மாத்திரம் பார்வைக்கு வெளிப்படையாயிருக்கிறபடியினல், தன்னையே நேசித்தலென்று நம்பப்படுகிறது. இன்னமும், தன்னையே நேசித்தல் என்பது, அவ்விதமாய்த் தானே காட்டாவிட்டால், வேலை தேடவும், உபயோகங்களை செய்யவும், மனிதனைவன் ஏவப்படுகிற உயிரின் நெருப்பு என்று உலகத்தில் நம்பப்படுகிறது; இவைகளில், அவன் எந்த கீர்த்தியையும் அல்லது மகிமையையும் காணவிட்டால், அவனுடைய மனது இயக்கமற்றதாய்விடும். மற்றவர்களால் அல்லது மற்றவர்கள் மனதுகளில் கொண்டாடப்பட்டு, கனம் பண்ணப்படும்பொருட்டு தவிர, யார் எந்த பாத்திரமானதும், உபயோகமானதும், அல்லது சிறப்படைந்த செய்கையை, எக்காலத்தில் செய்திருக்கிருர்கள்? இது மகிமையையும் கீர்த்தியையும், அதனல் தனக்காகவே உற்சாகத்துடன் நேசித்தலைத்தவிர வேறு என்ன வென்று மனிதர்கள் கேட்கிருர்கள். இவ்விதமாக

ன்னேயே நேசித்தலேயே யோசித்தால், அது நாகத்தில் அாசாளும் சையாகவும், மனிதன் விஷயத்தில் நாகத்தை உண்டாக்குகிற ாகவும், உலகத்தில் தெரிந்திருக்கப்படவில்லை. விஷயம் இம்மாதிரி ருப்பதினால், நான் முதலில் தன்னேயே நேசித்தல் என்னவென்று வரித்து, பின்னிட்டு எல்லா தீமைகளும், அவைகளின் பொய் ளும், அந்த ஆசையிலிருந்து உற்பத்தியாகின்றன வென்றும் காண் க்கிறேன்.

**556.** தன்னேயே நேசித்தல், என்பது தன்பொருட்டு தவிர ற்றவர்களுக்கு அல்லாமல், திருச்சபைக்கும் தன் தேசத்துக்கும், ல்லது எந்த மானிட கூட்டத்துக்கும்கூட அல்லாமல், தனக்கு ாத்திரம் நன்மையை நேசித்தலாயிருக்கிறது. மேலும், அது முழு மயும், தன்னுடைய சொந்த பிரஸ்தாபத்துக்கும், கண்யத்துக்கும், கிமைக்கும், இவர்களுக்கெல்லாம் நன்மை செய்வதில் அமைந் ிருக்கிறது; மற்றவர்களுக்காக தான் செய்யும் உபயோகங்களில், இவைகள் எல்லாம் கண்டால் ஒழிய, அவன் தன்னுடைய இரு யத்தில், அது எப்படி என் காரியம்? நான் இதை ஏன் செய்ய வேண்டும்? அதிலிருந்து நான் எதை அடைவேன்? என்று சொல் லிக்கொண்டு, அதை செய்கிறதில்லை. ஆகையினால், தன்னேயே நேசித் தலில் இருக்கிறவன், தன்னைதவிர திருச்சபையையாவது, தன் தேசத்தையாவது, கூட்டத்தையாவது, எந்த உபயோகத்தையாவது நேசிக்கிறதில்லை என்பது விசதமாகிறது. அவனுடைய இன்பம், முழுமையும் தன்னேயே நேசித்தலின் இன்பமாயிருக்கிறது; அன்பி லிருந்து புறப்படுகிற இன்பமானது மனிதனுடைய உயிரை உண் டாக்குகிறபடியினால், அவனுடைய வாழ்க்கையானது தன் பொருட்டே நடத்தும் வாழ்க்கையாயிருக்கிறது; தன் பொருட்டே நடத்தும் வாழ்க்கை, மனிதனுடைய சொந்த தன்மையிலிருந்து வரும் வாழ்க்கையாயிருக்கிறது; மனிதனுடைய சொந்த தன்மையா னது, அதையே யோசித்தால், தீமையைத் தவிர வேறு ஒன்றுமில்லை. தன்னேயே நேசிக்கிறவன், விசேஷமாய் தன்னுடைய பிள்ளைகளாக வும், பேரப் பிள்ளைகளாவும், இருக்கிற தன்னைச் சேர்ந்தவர்களையும், பொதுவாய் தன்னுடைய சிநேகிதர்கள் என்று சொல்லுகிற தன் னுடன் ஒன்றுபட்டு செயல்படுகிறவர்களையும்கூட நேசிக்கிறான். அவர்களை நேசித்தலும்கூட தன்னேயே நேசித்தலாயிருக்கிறது; ஏனென்றால், அவன் அவர்களை தன்னிலேயே போலவும், தானே அவர்களிலேயே போலவும் மதிக்கிறான். தனக்குச் சேர்ந்தவர்கள்

என்று சொல்லுகிறவர்கள், அதே மாதிரி அவனை வியந்து பேசி, கனப்படுத்தி, உபசாரம் செய்கிறவர்களாய் இருக்கிறார்கள்.

**557**. சுவர்க்கத்து அன்புடன் தன்னையே நேசித்தலை ஒப்பிட்டு பார்த்தால், அதன் குணம் விசதமாகும். சுவர்க்கத்து அன்பு என்பது, திருச்சபைக்கும், தன் தேசத்துக்கும், மானிட கூட்டத்திற்கும், தன்னகரத்தானுக்கும் ஒரு மனிதன் செய்கிற, உபயோகங்களின் பொருட்டு உபயோகங்களை நேசித்தலிலும், நன்மைகளின் பொருட்டு நன்மைகளை நேசித்தலிலும், அமைந்திருக்கிறது; ஏனென்றால், இதுதான் கடவுளை நேசித்தலும், அயலானை நேசித்தலுமாய் இருக்கிறது; ஏனென்றால், எல்லா உபயோகங்களும் எல்லா நன்மைகளும் கடவுளிடமிருந்து வருகின்றன; அதனுடன்கூட அவைகள், அன்பு பாராட்டக்கூடிய அயலாருமாகவுமிருக்கின்றன. ஆனால், தன்பொருட்டே அவைகளை நேசிக்கிறவன், அவைகளை வேலைக்காரர்களாக மாத்திரம் நேசிக்கிறான்; ஏனென்றால், அவைகள் தனக்கு உதவியானவைகளாயிருக்கின்றன. ஆகவே, தன்னையே நேசித்தலிலிருக்கிறவன், திருச்சபையும், தன்னுடைய தேசமும், மானிடக் கூட்டங்களும், தன் நகரத்தாரும், தான் அவர்களுக்கு அல்லாமல், அவர்கள் தனக்கு ஊழியம் செய்யவேண்டும் என்று இச்சிக்கிறானென்பது, பின் தொடருகிறது; ஏனென்றால், அவன் தானே அவர்களுக்கு மேலே வைத்துகொண்டு, அவர்களை தனக்கு கீழே வைக்கிறான். ஆகையினால், தன்னையே நேசித்தலில், ஒருவன் இருக்கிற அளவு, அவன் சுவர்க்கத்திலிருந்து பிரிந்துகொள்ளுகிறான்; ஏனென்றால், அவன் சுவர்க்கத்து அன்பிலிருந்து தானே பிரிந்துகொள்ளுகிறான்.

**558**. இன்னமும், உபயோகங்களையும் நன்மைகளையும் நேசித்து, திருச்சபையின் பொருட்டும், தன் தேசத்தின் பொருட்டும், மானிட கூட்டத்தின் பொருட்டும், தன்னகரத்தான் பொருட்டும், இருதய சந்தோஷத்துடன், அவைகளை செய்தலில் அமைந்திருக்கிற சுவர்க்கத்து அன்பில், ஒருவன் எவ்வளவு தூரம் இருக்கிறானோ, அவ்வளவு தூரம் அவன் ஆண்டவரால் நடத்தப்படுகிறான்; ஏனென்றால், அந்த அன்பு, அவர் இருக்கிறதும், அவரிடமிருந்து அது இருக்கிறதுமாய் இருக்கிறது. ஆனால், தன் பொருட்டே உபயோகங்களையும் நன்மைகளையும் செய்வதில் அமைந்திருக்கிற தன்னையே நேசித்தலில்கூட, ஒருவன் எவ்வளவு தூரம் இருக்கிறானோ, அவ்வளவு தூரம் தன்னாலேயே அவன்நடத்

தப்படுகிறான்; ஒருவன் எவ்வளவு தூரம் தன்னால் நடத்தப்படுகிறானோ, அவ்வளவு தூரம் அவன் ஆண்டவரால் நடத்தப்படுகிறதில்லை. ஆகவே, எவனாவது ஒருவன், தன்னையே எவ்வளவு தூரம் நேசிக்கிறானோ, அவ்வளவு தெய்வத்தினிடமிருந்தும், இவ்விதமாக சுவர்க்கத்திலிருந்தும், தானே நீங்கிக் கொள்ளுகிறான். மனிதனானவன் தன்னுடைய சொந்த நன்மையிலிருந்து நடத்தப்படும்போது, தன்னாலேயே நடத்தப்படுகிறான்; ஆனால், மனிதனுடைய சொந்த தன்மை, தீமையைத் தவிர வேறு ஒன்றுமில்லை; ஏனென்றால், கடவுளைவிட தன்னையே அதிகமாயும், சுவர்க்கத்தைவிட உலகத்தை அதிகமாயும், நேசித்தலில் அமைந்திருக்கிற அது, அவனுடைய பரம்பரையான தீமையுள்ள சுபாவமாயிருக்கிறது. மனிதனானவன், தான் செய்யும் நன்மையில், தன்னையே மதிக்கிற காலங்களில் தன்னுடைய சொந்த தன்மையில், இவ்விதமாக தன்னுடைய பரம்பரையான தீமைகளில் விடப்படுகிறான்; ஏனென்றால், அவன் தன்னிடமே இருந்து நன்மைக்கல்லாமல், நன்மையிலிருந்து தன்னையே பார்க்கிறான்; ஆகையினால், நல்ல வேலைகளில், தெய்வத்தின் பிரதிமையல்லாமல் தன்னுடைய பிரதிமையையே ஸ்தாபிக்கிறான். இது அனுபவத்திலிருந்து, எனக்கு ருஜுப்படுத்தப்பட்டது. தங்களுடைய இருப்பிடங்கள், சுவர்க்கங்களுக்கு கீழே, வடக்குக்கும் மேற்குக்கும் மத்தியிலிருக்கும் மத்திய திக்கில் இருக்கிறவர்களும், சூசில ஆவிகளை தங்கள் சொந்த தன்மையிலும், இவ்விதமாக பலவிதமான தீமைகளிலும் செலுத்தும் வித்தையில், சாமார்த்திய முள்ளவர்களுமாகிய தீமையுள்ள ஆவிகள் இருக்கின்றன. தோத்திரங்களாலும், கண்யங்களாலும் பகிரங்கமாயும், அல்லது அவர்களுடைய ஆசைகளை தங்களிடமே வழிகாட்டுவதினாலும் இரகசியமாகவும், தன்னைப்பற்றியே சிந்தனைகளில் அவைகளை விடுவதினால், இதை காரியப்படுத்துகிறார்கள்; இதை எவ்வளவு காரியப்படுத்துகிறார்களோ, அவ்வளவு சுசீல ஆவிகளின் முகங்களை சுவர்க்கத்திற்கு வெளியே திருப்பி, அதே அளவில் அவர்களுடைய புத்திகளை இருட்டாக்கி, அவர்களுடைய சொந்த தன்மையிலிருந்து தீமைகளை உற்சாகப்படுத்துகிறார்கள்.

**558 (a)** தன்னையே நேசித்தல் என்பது, அயலானிடத்து காட்டும் அன்புக்கு எதிரிடையாயிருக்கிற தென்பது, இரண்டினுடைய உற்பத்தி ஸ்தானத்திலிருந்தும், சத்திலிருந்தும் அறிந்து

கொள்ளலாம். தன்னையே நேசித்தலில் இருக்கிறவன் விஷயத்தில், அயலானிடத்து அன்பு தன்னிடமே இருந்து ஆரம்பிக்கிறது; ஏனென்றால், அவன் ஒவ்வொருவனும் தனக்கே அயலான் என்று பாத்தியம் பாராட்டுகிறான்; மேலும், அது தன்னிடமிருந்து, தன் மையமாக, அன்பினால் தன்னுடன் அவர்களின் சேர்க்கையின் அளவுக்கு தக்கபடி குறைந்துகொண்டு, அவனிடமிருந்து வெளியே போகிறது. இந்த வட்டத்துக்கு வெளியே யிருப்பவர்கள் எல்லாம் கணக்கில் இல்லை என்று எண்ணப்படுகிறது. அதற்கு சேர்ந்தவர்களுக்கும் அவர்களின் தீமைகளுக்கும் எதிரிடையானவர்கள், அவர்கள் நடத்தை எதாயிருந்தபோதிலும், எவ்வளவு புத்தியுள்ளதாகவும், நேர்மையானதாகவும், உண்மையானதாகவும் அல்லது நியாயமானதாகவும் இருந்தபோதிலும் பகையாளிகளாக கணக்கிடப்படுகிறார்கள். ஆனால், ஒரு மனிதனுடைய அயலானிடத்து காட்டும் ஞானசம்பந்தமான அன்பு, ஆண்டவரிடமிருந்து ஆரம்பிக்கிறது; அதன் மையமாக, அவரிடமிருந்து, அன்பினாலும் பக்தியினாலும், அவர்களுடைய அன்பினுடையவும் பக்தியினுடையவும், குணத்துக்கு தக்கபடியும், அவருடன் சேர்க்கப்பட்டவர் எல்லாரிடமும் செல்லுகிறது ஆகவே, மனிதனிடமிருந்து ஆரம்பிக்கும் அயலானிடத்து காட்டும் அன்பு, ஆண்டவரிடமிருந்து புறப்படுவதற்கு எதிரிடையாயிருக்கிறது என்றும், முன்கூறியது மனிதனுடைய சொந்தமானதிலிருந்து புறப்படுகிறபடியினால், தீமையிலிருந்து புறப்படுகிறது என்றும், பின் கூறியது நன்மையாகவே இருக்கிற ஆண்டவரிடமிருந்து புறப்படுகிறபடியினால், நன்மையிலிருந்து புறப்படுகிறதென்றும் விசதமாகிறது. மனிதனிடமிருந்தும், அவனுடைய சொந்தமானதிலிருந்தும், புறப்படுகிற அயலானிடத்து அன்பு ஜடமானது என்றும், ஆண்டவரிடமிருந்து புறப்படும் அயலானிடத்து காட்டும் அன்பு, சுவர்க்கத்துக்கு அடுத்ததென்றும் கூட விசதமாகிறது. சுருங்கச் சொல்லில், தன்னையே நேசித்தலில் இருக்கிற மனிதன் விஷயத்தில், அந்த அன்பு தலையை உண்டாக்குகிறது; சுவர்க்கத்து அன்பு, அவனுக்கு பாதங்களாகிறது. இதன்பேரில் அவன் நிற்கிறான்; ஆனால், அது அவனுக்கு உதவாவிட்டால், காலின் கீழ் அதை மிதிக்கிறான். நரகத்தில் போடப்படுகிறவர்கள், தலையானது நரகம் பக்கம் கீழேயும், பாதங்களானது சுவர்க்கம் பக்கம் மேலேயும், போடப்பட்டிருக்கிறதாக தோன்றுவதற்கு, இதுதான் காரணம் (மேலே செ. 548 பார்க்கவும்).

**559**. மறுபடியும், தன்னையே நேசித்தல் என்பது, அதற்கு கடிவாளம் கொடுக்கப்படுகிறவரையில், அதாவது சட்டத்துக்கும் அதன் சிட்சைகளுக்கும், பயப்படுதலும், கியாதியும், கண்யமும், லாபமும், உத்தியோகமும், உயிரும் போய்விடுமென்கிற பயப்படுதலுமாயிருக்கிற, புறம்பான பந்தங்கள் எவ்வளவு நீக்கப்படுகிறதோ, அவ்வளவு முழு உலகத்தை மாத்திரமல்லாமல், யாதொரு எல்லையும் முடிவும் அல்லாமல், முழுசுவர்க்கத்தையும் தெய்வத்தையுமே கூட அரசாட்சி செய்ய, கடைசியில் அது ஆசைப்படுகிற வரையில் பிரவாகிக்கிறது. இந்த போக்கு, முன்னமே சொன்ன அவ்வித பந்தங்களால், தடையில் வைக்கப்பட்டிருக்கிற உலகத்தின் முன்பாக தோன்றாவிட்டாலும், தன்னையே நேசித்தலில் இருக்கிற ஒவ்வொருவனிடத்திலும், பதுங்கிக் கொண்டிருக்கிறது. விஷயம் இப்படி இருக்கிறதென்பது, அவ்வித கட்டுப்பாட்டுக்கும் பந்தத்திற்கும் உட்படாத சுயாதிபதிகளிடத்திலும், அரசர்களிடத்திலும் ஒவ்வொருவனும் பார்க்கலாம்; ஏனென்றால், அவர்கள், ஜெயம் தங்களுக்கு உண்டாகிறவரையில மாகாணங்களையும், இராசசியங்களையும் பிரவாகித்து முறியடித்து, முடிவற்ற அதிகாரத்துக்கும் மகிமைக்கும் ஆசைப்படுகிறார்கள்; தனனுடைய இராஜரீகத்தை சுவர்க்கத்துக்கு விசாலித்து, ஆண்டவருடைய தெய்வீக சக்தியை தன்னிடமே மாற்றிகொண்டு, இன்னும் அதிகமாக இடைவிடாமல் இச்சிக்கிற தற்காலத்து பாபிலோனிலிருந்து, இன்னும் தெளிவாய் தெரிந்துகொளளலாம். அவ்விதமான மனிதர்கள், இறந்தபிறகு, இதர வாழ்விற்கு வந்தபோது தெய்வத்துக்கும் சுவர்க்கத்துக்கும் முழுமையும் எதிரிடையாயிருந்து, நரகத்துக்கு அனுகூலமாய் இருக்கிறார்களென்பது, கடைசி தீர்ப்பைப்பற்றியும் பாபிலோன் அதம் செய்யப்பட்டதைப்பற்றியும் எழுதிய சிறிய நூலில் அறிந்துகொள்ளப்படலாம்.

**560**. எல்லாரும் தங்களையே மாத்திரம் நேசித்து, மற்றவர்களை தங்களோடு ஒன்றுகிற வரையில் மாத்திரம், நேசிக்கிறவர்களாகிய, ஒரு கூட்டத்தை நீரே நினைத்துக்கொள்ளும்; அப்பொழுது, நீர் அவர்களுடைய அன்பானது, ஒன்றுபட்டு செயல்படுகிற வரையிலும் தழுவிக்கொண்டு, ஒருவருக்கொருவர் சினேகிதர்கள் என்று சொல்லிக்கொண்டும், ஆனால், ஒத்துக்கொள்ளாதபோது, ஒருவருக்கொருவர் கீழ்ப்படிதலை நீக்கிவிட்டு, எழுந்து ஒருவரை ஒருவர் கொலைசெய்கிற கொள்ளைக்காரருக்குள் இருக்கிற அன்பைப்போல்

மாத்திரம் இருக்கிறதென்று அறிந்துகொள்வீர். அவர்களுடைய உள்ளானவைகள் அல்லது மனதுகள் பரிசோதிக்கப்பட்டால், ஒருவர்மேல் ஒருவர் கொடிய அருவருப்பினால் நிறைந்திருப்பதையும், இருதயத்தில், நியாயத்தையும், உண்மையையும், அதேமாதிரி ஒன்றுக்கில்லாததாக தள்ளுகிற தெய்வத்தையும் பார்த்து, அவர்கள் சிரிக்கிறதையும் அவர்களிடத்தில் காணலாம். மேலே சொல்லப்பட்ட, அவ்வித மனிதர்களின் கூட்டங்களிலிருந்து இது இன்னும் அதிகமாக விசதமாகும்.

**561**. எல்லாவற்றிற்கும் மேலே தங்களையே நேசிக்கிறவர்களின் சிந்தனைகளுடையவும் ஆசைகளுடையவும் உள்ளானவைகள், தங்களிடமேயும் உலகத்தினிடமேயும் திருப்பப்பட்டு, இவ்விதமாக ஆண்டவரிடமிருந்தும் சுவர்க்கத்தினிடமிருந்தும் தூரமாய்த் திருப்பப்படுகின்றன; ஆதலால், அவர்கள் எல்லாவித தீமைகளாலும் நிறைப்பப்படுகிறார்கள், தெய்வமானது உள்ளே பாயமுடியாது. ஏனென்றால், அது அப்படி பாய்ந்தால், அது உடனே தன்னிடமே கொள்ளும் சிந்தனைகளுக்குள் அமுக்கப்பட்டு, அழுக்காக்கப்பட்டு, தங்களுடைய சொந்தமானதிலிருந்து பாய்கிற தீமைகளோடுகூட கலக்கப்படுகின்றன. இந்த காரணத்துக்காக, மறுமையில் இவ்விதமானவர்கள் எல்லாம், உலகத்து சூரியனுக்கு பதிலாக அங்கே இருக்கிறதும், ஆண்டவராயிருக்கிற சுவர்க்கத்து சூரியனுக்கு விட்டமாய், எதிரிடையாயிருக்கிறதுமான அடர்ந்த இருள் இருக்கும் இடத்தை, ஆண்டவரிடமிருந்து தூரமாக பின் பக்கம் பார்க்கிறார்கள் (மேலே செ. 123 பார்க்கவும்). அடர்ந்த இருள் என்பது தீமையையும், உலகத்து சூரியன் என்பது தன்னையே நேசித்தலையும் கருதுகிறது.

**562**. தன்னையே நேசித்தலில் இருக்கிறவர்களுக்கு சேர்ந்த தீமைகள், சாதாரணமாக மற்றவர்களை அலட்சியம் செய்தலும், தங்களுக்கு உதவிசெய்யாத எல்லாருக்கும் விரோதமாய் பொறாமையையும் விரோதத்தை காட்டலும், அதனால் பகையும், பழிவாங்குதலும், தந்திரமும், மோசமும், இரக்கமில்லாதிருத்தலும், குரூரமுமாகிய பற்பல வெறுப்புகளுமாயிருக்கின்றன. சமயவிஷயங்களில், திருச்சபையின் உண்மைகளாகவும் நன்மைகளாகவுமிருக்கிற, தெய்வத்தினிடத்தும் தெய்வவிஷயங்களிடத்தும் அலட்சியமட்டுமல்லாமல், அவைகளிடத்து கோபமும்கூட இருக்கிறது மனிதன் ஒரு ஆவியாகும் காலத்தில், இந்த கோபமானது வெறுப்

பாக இருப்பப்படுகிறது; அக்காலத்தில், அந்த விஷயங்கள் சொல்லப் படுவதை கேழ்க, அவன் பொறுக்க முடியாதவனாயிருப்பது மாத் திரமல்லாமல், தெய்வத்தை ஒத்துகொண்டு, அதை ஆராதிக்கிற வர்கள் எல்லார்பேரிலும் விரோதமாய் வெறுப்புடன் எரிந்து கொண்டிருக்கிறான். உலகத்தில் அதிகாரமுள்ளவனாயிருந்து, தன் னையே மேலாய் நேசித்த ஒரு ஆவியுடன் நான் ஒருதரம் பேசினேன். தெய்வம் என்று சொல்லப்படுவதை, முக்கியமாய், ஆண்டவர் பெயர் சொல்லப்படுவதை, அதுகேட்ட மாத்திரத்தில், அவ ரை கொன்றுபோட ஆசை கொள்ளும்படியாக, கோபத்திலிருந்து வந்த வெறுப்பினால், அது தூண்டப்பட்டது. அதே மனிதன் கூட, தன்னுடைய ஆசைக்கு கடிவாளம் கொடுக்கப்பட்டபோது, தன்னையே நேசித்தலிலிருந்துதான் தொடர்ச்சியாய் சுவர்க்கத்தை குழப்ப தானே பேயாக இருக்க விரும்பினான்; ஆண்டவருக்கு எல்லா சக்தியுமிருக்கிறதாகவும், தங்களுக்கு யாதொன்றுமில்லை என்றும், மறுமையில் அவர்கள் அறிந்து கொள்ளுகிறபோது, ரோமன் கதோலிக் சமயத்தைச் சேர்ந்த சிலருக்கு இதுகூட மனோரதமா யிருக்கிறது.

**563**. உலகத்தில் தாங்கள் பெரிய மேன்மையுள்ள ஸ்தா னங்களில் இருந்ததாகவும், மற்றவர்களைவிட சிறப்பானவர்களாக தெரிந்து எடுக்கப்பட தகுந்தவர்களென்றும், சொல்லிய தெற்கு புறத்தில் மேற்கு திக்கில் சில ஆவிகள் என் முன்பாக தோன்றின. அவைகள், உள்ளுக்குள்ளாய் என்னமாய் இருந்தனவென்று தேவர்களால் பரிசோதிக்கப்பட்டன; உலகத்தில் தாங்கள் செய்யும் தொழில்களில், தங்களையே தவிற, உபயோகங்களை மதிக்கவில்லை என்றும், இவ்விதமாக அவைகள் உபயோகங்களை தள்ளி, தங்களையே முன்வைத்துக் கொண்டனவென்றும், கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால், அவைகள் மற்றவர்களுக்கு மேலாக வைக்கப்பட பேராசை யுள்ளவர்களாவும், பிடிவாதமானவர்களாகவும் இருந்தபடியினால், பெரிய விசேஷமான விஷயங்களை யோசித்துக் கொண்டிருந்தவர் களுடன் சேர்ந்திருக்க அவைகள் விடப்பட்டன அப்பொழுது, அவைகள் விவகாரத்திலிருக்கும் வேலையை கவனிக்கவும், விஷயங் கள் தங்களுக்குள்ளேயே இருக்கிற மாதிரியை பார்க்கவும், தங்கள் சொந்தமானதிலிருந்தல்லாமல், அந்த பொருளின் உபயோகத்தி லிருந்து பேசவும் முடியவில்லை என்றும், தமையின்பேரில் இந்த மானதிலிருந்து செயல்பட அவைகள் விரும்பினவென்றும்,

அதிர்ந்துகொள்ளப்பட்டது. ஆகையினால், அவைகள் தங்களுடைய வேலையிலிருந்து நீக்கப்பட்டு, வேறு இடங்களில் தங்களுக்கு வேலைகளை தேட விடப்பட்டன. அப்பொழுது அவைகள், இன்னும் மேற்குபுறம் சென்றன; அங்கே, அவைகள் அங்கேயும் இங்கேயும் ஏற்றுக்கொள்ளப்பட்டன; ஆனால், எல்லா இடங்களிலும், தங்களை நன்மையையே தவிர எதையும் அல்லாமல், தங்களையே மாத்திரம் நினைத்தனவென்றும், அதனால், அவைகள் மூடமானவைகளென்றும், புலனுக்கடுத்த ஜடமான ஆவிகளாயிருக்கின்றனவென்றும், அவைகள் சொல்லப்பட்டன. இந்த காரணத்துக்காக, அவைகள் சென்ற இடங்களில் எல்லாம், அவைகள் தூரமாய் அனுப்பப்பட்டன. கொஞ்சகாலம் பொருத்து, எளிமையுள்ள நிலைமைக்கு குறைக்கப்பட்டு, அவைகள் பிச்சை கேட்பது பார்க்கப்பட்டன. இம்மாதிரியாக, தன்னையே நேசித்தலிலிருக்கிறவர்கள், அந்த அன்பின் சூட்டிலிருந்து, உலகதத்தில் புத்தியுள்ளவர்களாக பேசுகிறதாக தோன்றினபோதிலும், எந்த பகுத்தறிவுள்ள வெளிச்சத்திலுமிருந்துமல்லாமல், ஞாபகத்திலிருந்து மாத்திரம் பேசுகிறார்களென்று தெளிவாக்கப்பட்டது. ஆகையினால், இதாவாழ்வில், ஸ்தூல ஞாபகத்தின் பொருள்கள், நூதனமாய் தோற்றுவிக்கவிட அனுமதி கொடுக்கப்படாதபோது, அவைகள் தெய்வத்தினிடமிருந்து பிரிக்கப்பட்டிருப்பதினால், மற்றவைகளை விட அதிக மந்தபுத்தி யுள்ளவைகளாயிருக்கின்றன.

**564**. ஒன்று அயலானிடத்து அன்பு காட்டுதலும், மற்றது தன்னையே நேசித்தலும், ஆகிய இராஜரீகத்தில் இரண்டு விதங்கள் இருக்கின்றன. இந்த இரண்டுவித ராஜரீகங்களும், தங்கள் சத்தில், ஒன்றுக்கொன்று முழுமையும் எதிரிடையாயிருக்கின்றன. அயலானிடத்து காட்டும் அன்பிலிருந்து ஆளப்பட்டவன், எல்லாருக்கும் நன்மையைக்கோறி, மற்றவர்களுக்கு நன்மையைக் கோறுதலும், திருச்சபைக்காவது, தேசத்துக்காவது, கூட்டத்துக்காவது, தன்னகரத் தானுக்காவது, உபயோகங்களை செய்தலுமாயிருக்கிற உபயோகங்களை, அதாவது மற்றவர்களுக்கு ஊழியங்களை செய்தலைப்போல், எதையும் அவ்வளவு நேசிக்கிறதில்லை. இது தான், அவனுடைய அன்பாயும், அவனுடைய இருதயத்தினுடைய இன்பமாகவுமிருக்கிறது. இதுவுமன்றி, மற்றவர்களுக்கு மேல், மேன்மையில் உயர்த்தப்படுகிற அளவுகூட அவன் சந்தோஷமாயிருக்கிறான்; ஆனால், அப்படியிருத்தல் மேன்மைகளின் பொருட்டல்

லாமல், பெரும் திரளாகவும் உயர்ந்த முறையிலும் செய்ய அவனுக்கு சக்தியைக் கொடுக்கிற உபயோகங்களின் பொருட்டுதான், சுவர்க்கங்களில் அதிகாரம் இவ்விதமாயிருக்கிறது. ஆனால், தன்னையே நேசித்தலிலிருந்து ஆளுகிறவன், தன்னைத்தவிர வேறு யாருக்கும் நன்மையை கோருகிறதில்லை; அவன் செய்கிற உபயோகங்கள் தன்னுடைய சொந்த கண்யத்துக்கும் மகிமையின் பொருட்டாயுமிருக்கிறது; ஏனென்றால், இவைகள்தான் அவனுக்கு தனிமையான உபயோகங்களாயிருக்கின்றன. அவன் மற்றவர்களுக்கு ஊழியம் செய்தால், அப்படி செய்தல் தனக்கே ஊழியம் செய்யப்படவும், தானே கனம் பண்ணப்பட்டு, அதிகாரத்துக்கு உயர்த்தப்படவும் செய்வதாயிருக்கிறது; தன்னுடைய தேசத்துக்கும் திருச்சபைக்கும், நல்ல உதவிகள் செய்யும் பொருட்டல்லாமல், ஆனால், தான் உன்னதத்திலும், மகிமையிலும், இவ்விதமாக தன்னுடைய இருதயத்தின் சந்தோஷத்திலும் இருக்கும் பொருட்டாக, அவன் மேன்மைகளை தேடுகிறான். அதிகாரம் செய்யும் ஆசை உலகத்தில் வாழ்ந்தபிறகு ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. அயலானிடத்து காட்டும் அன்பிலிருந்து வாழ்ந்தவர்கள், மறுபடியும், சுவர்க்கங்களில் அதிகாரம் கொடுக்கப்படுகிறார்கள்; என்றாலும், ஆளுகிறது அவர்கள் அல்ல; அவர்கள் நேசிக்கும் உபயோகங்கள் அப்படி செய்கின்றன. உபயோகங்கள் ஆளும் காலத்தில், ஆண்டவரே ஆளுகிறார். ஆனால், உலகத்தில் தன்னையே நேசித்தலிலிருந்து ஆண்டவர்கள், உலக வாழ்வு முடிந்தபிறகு நரகத்திலிருக்கிறார்கள்; மேலும், அங்கே இழிவான அடிமைகளாயிருக்கிறார்கள். உலகத்தில் தன்னையே நேசித்தலிலிருந்து ஆண்ட அதிபதிகள், மிகவும் இழிவானவர்கள் மத்தியிலும், அவர்களில் சிலர் மலமுள்ள இடங்களிலும் தள்ளப்பட்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன்.

**565.** உலகத்தினிடத்து காட்டும் அன்பு விஷயத்தில், அது தன்னையே நேசித்தலைப்போல், சுவர்க்கத்து அன்புக்கு அவ்வளவு நேராய் எதிரிடையாயில்லை; ஏனென்றால், அது தனக்குள்ளேயே அவ்வளவு பெரிய தீமைகளை மறைத்துவைத்து இருக்கவில்லை. உலகத்தை நேசித்தல் என்பது, எந்தவித உபாயத்தினாலும், மற்றவர்களுடைய திரவியத்தை தானே அடைய ஒருவன் விரும்புதலிலும், செல்வத்தின்பேரில் மனதை வைத்தலிலும், அயலானிடத்து அன்பாயிருக்கிற ஞானசம்பந்தமான அன்பிலிருந்து, இவ்விதமாக, சுவர்க்கத்திலிருந்தும் தெய்வத்திலிருந்தும் உலகமானது இழுத்து

கொண்டுபோய்விட இடம் கொடுப்பதிலும், அமைந்திருக்கிறது. ஆனால், இந்த அன்பு பலவிதமானதாயிருக்கிறது. கீர்த்திகளே மாத்திரம் நேசிக்கப்படும்போது, அவைகளை அடைய உயர்த்தப்படும் பொருட்டு, செல்வத்தினிடத்து கொள்ளும் ஒரு அன்பு இருக்கிறது. செல்வத்தை அதிகரிக்கும் பொருட்டு கீர்த்திகளிடத்தும் மேன்மைகளிடத்தும் கொள்ளும் ஒரு அன்பு இருக்கிறது. உலகத்தில் இன்பத்தை தருகிற பலவிதமான உபயோகங்களின் பொருட்டு, செல்வத்தினிடத்து கொள்ளும் ஒரு அன்பு இருக்கிறது. லோபிகள் முதலானவர் விஷயத்தில் போல, செல்வத்தின் பொருட்டே செல்வத்தினிடத்து கொள்ளும் ஒரு அன்பு இருக்கிறது. இன்னபல, செல்வம் தேடப்படுகிற முடிவு, அதன் உபயோகம் என்று சொல்லப்படுகிறது; ஒவ்வொரு அன்பும், தன்னுடைய முடிவு அல்லது உபயோகத்திலிருந்து தன் குணத்தை அடைகிறது; ஏனென்றால், நோக்கத்திலிருக்கும் முடிவு இருக்கிறதுபோல அன்பு இருக்கிறது, மற்றவைகள் எல்லாம் அதற்கு வழிவகைகளாக மாத்திரம் உதவுகின்றன.

# LIX

## நரகத்து நெருப்பும், பற்களை கறித்தலும் என்னவென்பது.

**566.** நரகத்திலிருப்பவர்களுடைய அநுபோக மென்று வேதத்தில் சொல்லப்படுகிற என்றுமுள்ள நெருப்பும், பற்களை கறித்தலும் என்னவென்று, இன்னும் யாருக்கும் தெரிந்திருக்கப் படவில்லை; ஏனென்றால், வேதத்தின் ஞானார்த்தம் தெரியாமல், அதில் சொல்லியிருப்பதை மனிதர்கள் ஸ்தூலமாய் நினைத்தார்கள். ஆகையினால், நெருப்பு என்பதினால், சிலர் ஸ்தூல நெருப்பு என்று அறிந்துகொண்டார்கள்; சிலர் பொதுவாக வேதனை யென்றும், சிலர் மனநோய் என்றும் நினைத்தார்கள்; இன்னும் சிலர் துஷ்டர்களுக்குப் பயமுண்டாக்க மாத்திரம் முன்னிட்டே அறிவிக்கப்பட்ட தென்றும் நினைக்கிறார்கள்; பற்களை கறித்தல் என்பதினால், சிலர் நிஜமான பற்களை கறித்த லென்றும், சிலர் பற்கள் நெருக்கும்போது காண்கிற ஒரு பயங்கர மென்றும் அறிந்து கொண்டார்கள். ஆனால், வேதத்தின் ஞானார்த்தத்தை அறிந்தவனுக்கு என்றுமுள்ள நெருப்பும், பற்களை கறித்தலும் என்னவென்று தெரிந்திருக்கலாம்; ஏனென்றால், வேதத்திலுள்ள ஒவ்வொரு சொல்லிலும், சொற்களின் ஒவ்வொரு அர்த்தத்திலும், ஒரு ஞானார்த்தம் அடங்கியிருக்கிறது; ஏனென்றால், வேதமானது அதன் கர்ப்பத்தில், ஞான சம்பந்தமானது; ஞான சம்பந்தமானது, மனிதன் சம்பந்தப்பட்டவரையில், ஸ்தூல விதமாய் தவிர வெளிப்படுத்தமுடியாது; ஏனென்றால் மனிதன் ஸ்தூல உலகத்தில் இருந்துகொண்டு, அந்த உலகத்தின் பொருள்களிலிருந்து நினைக்கிறான். இறந்த பிறகு, தீமையானவர்கள் தங்கள் ஆவிகள் சம்பந்தப்பட்டவரையில் வருகிறதும், அல்லது அக்காலத்தில் சூக்கும உலகத்திலிருக்கும் அவர்களுடைய ஆவிகள் சகிக்கிறதுமான என்றுமுள்ள நெருப்பும், பற்களை கறித்தலும் என்னவென்று இப்பொழுது பின் வருவதில் சொல்லப்படும்.

**567.** ஆண்டவராயிருக்கிற சுவர்க்கத்து சூரியனிடமிருந்து, ஒன்றும், உலகத்து சூரியனிடமிருந்து மற்றதும், ஆகிய சூட்டின் இரண்டு தொடக்கங்கள் இருக்கின்றன. சுவர்க்கத்து சூரியன் அ

ஸ்தூ ஆண்டவரிடமிருந்து வருகிறசூடு, தன் இயல்பில் அன்பாயிருக்கிற, சூக்கும சூடாயிருக்கிறது (மேலே செ. 126 முதல் 140 வரையில் பார்க்கவும்); ஆனால் உலகத்து சூரியனிடமிருந்து வரும்சூடு, தன் சாரத்தில் அன்பாயல்லாமல், சூக்குமசூடு அல்லது அன்பின் ஒரு கொள்களமாக உதவ தகுதியாயிருக்கிற ஸ்தூல சூடா யிருக்கிறது. அந்த அன்பானது தன் சத்தில் சூடா யிருக்கிறதென்பது, அதன் இறுக்கத்துக்கும் குணத்துக்கும் தக்கபடி, மனது சூடாக்குவதிலும், அதிலிருந்து அன்பிலிருந்து சரீரம் சூடாக்குவதிலும் வெளிப்படையாகலாம்; இதை வேனிற் காலத்தில்போல் மாரிகாலத்திலும் அதேமாதிரி மனிதன் அனுபவிக்கிறான். இரத்தத்தை சூடாக்குதலும் அதே மூலத்திலிருந்து வருகிறது. உலகத்து சூரியனிடமிருந்து உண்டாகிற ஸ்தூல சூடு, சூக்கும சூட்டிற்கு ஒரு கொள்களமாக உதவுகிறதென்பது, தன் ஆவியின் சூட்டினால் எழுப்பப்படுகிறதும், சரீரத்தில் அந்த சூட்டிற்கு ஒருவித பிரதிநிதியாயிருக்கிறதுமான சரீரத்தின் சூட்டிலிருந்து விசதமாகிறது. அது, எல்லாவித பிராணிகளிடத்திலும் செல்லும், வசந்தகாலத்தி னுடையவும் வேனிற் காலத்தி னுடையவும் சூட்டிலிருந்து முக்கியமாய் விசதமாகிறது; ஏனென்றால், அக்காலத்தில் அவைகள் ஒவ்வொருவருஷத்திலும் தங்கள் ஆசைகளை புதிதாக்குகின்றன. இந்த விளைவை உண்டாக்குகிறது, ஸ்தூல சூடு அல்ல, ஆனால் அது சூக்கும உலகத்திலிருந்து அவைகளுக்குள் பாயும் சூட்டை ஏற்றுக்கொள்ள, அதன் சரீரங்களை ஒழுங்குபடுத்தி வைக்கிறது; ஏனென்றால், சூக்கும உலகமானது ஸ்தூல உலகத்திற்குள் காரணம் காரியத்தில் பிரவேசிப்பதுபோல பாய்கிறது. ஸ்தூல சூடானது, அவர்களுடைய அன்புகளை உண்டாக்குகிறதென்று நம்புகிறவன் அதிகமாய் ஏமாற்றப்படுகிறான்; ஏனென்றால், ஸ்தூல உலகமானது சூக்கும உலகத்துக்குள் அல்லாமல், சூக்குமஉலகமானது ஸ்தூலஉலகத்துக்குள் செல்லும் ஒரு உட்பெருக்கு இருக்கிறது; எல்லா அன்பும் உயிருக்கே சேர்ந்திருக்கிறபடியினால், சூக்குமமானதா யிருக்கிறது. மறுபடியும், சூக்கும உலகத்திலிருந்து உட்பெருகில்லாமல், ஸ்தூல உலகத்தில் ஏதாவது ஒன்று வருகிறதென்று நம்புகிறவன் அதேமாதிரி ஏமாற்றப் படுகிறான்; ஏனென்றால், ஸ்தூலமானது சூக்கும மானதிலிருந்து முழுமையும் வந்து நிலைத்திருக்கிறது. இன்னமும், ஸ்தூல [illegible] பொருள்கள், தங்கள் உற்பேதங்களை [illegible]

உலகத்திலிருந்து வரும் உட்பெருக்கிலிருந்து அடைகின்றன. வசந்த காலத்தினுடையவும் வேனிர் காலத்தினுடையவும் ஸ்தூல சூடானது, சூக்கும உலகத்திலிருந்து வரும் உட்பெருக்கானது, அங்கே ஒரு காரணமாக செயல்பட, விதைகளை விரிப்பதினாலும் திறப்பதினாலும், அவைகளின் ஸ்தூல உருவங்களாக ஒழுங்கு படுத்துகிறது. சூக்கும சூடென்றும் ஸ்தூல சூடென்றும் இரண்டு வித சூடுகள் இருக்கிறதாகவும், சூக்கும சூடானது சுவர்க்கத்து சூரியனிடமிருந்தும், ஸ்தூல சூடானது உலகத்து சூரியனிடமிருந்தும் வருகிறதாகவும், உட்பெருக்கும், அதனால் உண்டாகும் கூட்டு தொழிலும், உலகத்தில் கண்கள் முன்பாக தோன்றுகிற காரியங்களை உண்டாக்குகிறதாகவும், காண்பிக்கும் பொருட்டு இந்த விஷயங்கள் எல்லாம் எடுத்து காட்டப்பட்டன.

**568**. மனிதன் விஷயத்தில் சூக்கும சூடானது, அவன் உயிரின் சூடாயிருக்கிறது; ஏனென்றால், மேலே சொல்லியபடி, அதன் இயல்பில், அது அன்பாயிருக்கிறது. நெருப்பு என்பதினால் இந்த அன்பும், சுவர்க்கத்து நெருப்பு என்பதினால் ஆண்டவரிடத்து அன்பும் அயலானிடத்து அன்பும் நரகத்து நெருப்பு என்பதினால் தன்னையே நேசித்தலும், உலகத்தை நேசித்தலும், வேதத்தில் கருதப்படுகிறது.

**569**. நரகத்து நெருப்பு அல்லது அன்பு சுவர்க்கத்து நெருப்பு அல்லது அன்பைப்போல் ஒரே மூலத்திலிருந்து, அதாவது ஆண்டவராயிருக்கிற சுவர்க்கத்து சூரியனிடமிருந்து வருகிறது; ஆனால், அது அதைப் பெற்றுக்கொள்ளுகிறவர்களால் நரகத்துக்கு அடுத்ததாக செய்யப்படுகிறது. ஏனென்றால், சூக்கும உலகத்திலிருந்து வரும் எல்லா உட்பெருக்கும், உலகத்து சூரியனிடமிருந்து வரும் சூடும் வெளிச்சமும் செய்கிறதுபோல், ஏற்றுக் கொள்ளுதலுக்கு தக்கபடிக்கும், அது பாய்கிற உருவங்களுக்கு தக்கபடிக்கும் வேறுபடுகிறது. இந்த சூரியனிடமிருந்து வரும் சூடு, செடித் தோட்டங்களிலும், புஷ்ப பாத்திகளிலும் பாய்ந்து, பயிர் செழிப்பை உண்டாக்கி, இனிமையானதும் மதுரமானதுமாகிய வாசனைகளை கொண்டு வருகிறது; ஆனால், அதே சூடானது, மலமுள்ளதும் மக்கிப்போனதுமாகிய பொருள்களில் பாய்ந்து அழுகலை உண்டாக்கி, கெட்ட நாற்றமுள்ளதும் வெறுப்பு [illegible]ம்படியானதுமாகிய துர்கந்தங்களை வெளியே கொண்டு வருகிறது. அதே மாதிரி, அதே சூரியனிடமிருந்து வரும் வெளிச்சம் ஒரு பதார்த்தம் விஷயத்தில் அழகுள்ளதும் இன்பமானது

மரண பிறவிகளையும், மற்றதில் அவலட்சணமானதும், இன்ப மில்லாததுமாகியவைகளை உண்டாக்குகிறது. அன்பாயிருக்கிறசுவர்க் கத்து சூரியனிடமிருந்து வரும் சூடு விஷயத்திலும் வெளிச்சம் விஷயத்திலும், விஷயம் அம்மாதிரியே இருக்கிறது. அதிலிருந்து வரும் அன்பு அல்லது சூடு, நல்லவர்களிடத்திலும், ஆவிகளிடத்தி லும்; தேவர்களிடத்திலும்போல, நல்லவர்களில் பாயும் காலத்தில், அவர்களுடைய நன்மையை செழிப்பானதாக செய்கிறது; ஆனால், துஷ்டர்களுக்குள் அது பாயும் காலத்தில், அது எதிரிடையானதை விளைவிக்கிறது; ஏனென்றால், அவர்கள் தீமைகள் அதை திக்கு முக்காடப் பண்ணுகிறது அல்லது அதை கெடுக்கிறது. அதே மாதிரி சுவர்க்கத்து வெளிச்சம், நன்மையின் உண்மைகளில் பாயும் காலத்தில், அது விவேகத்தையும் ஞானத்தையும் தருகிறது; ஆனால், அது தீமையின் பொய்களில் பாயும் காலத்தில், பலவித உன்மத்தங்களாகவும், மனோபவங்களாகவும் திருப்பப்படுகிறது. இவ்விதமாக, ஒவ்வொரு திருஷ்டாந்தத்திலும், ஏற்றுக் கொள்ளு வதற்கு தக்கபடி பலன் இருக்கிறது.

**570.** நரகத்து நெருப்பானது தன்னையே நேசித்தலாயும், உலகத்தை நேசித்தலாயுமிருப்பதினால், ஒரு மனிதன் நேசிப்பதை அவன் தொடர்ச்சியாய் ஆசிக்கிறதின் நிமித்தம், துராசை தன் தொடர்ச்சியில் அன்பாயிருப்பதினால், அது அந்த அன்புகளின் துராசையாககூட இருக்கிறது. ஒரு மனிதன் ஒன்றை அடைந்த காலத்தில், அவன் நேசிக்கிறதை அல்லது இச்சிக்கிறதை, அனுபவிக் கக் கூடியதாக உணருகிறபடியினால், அது சுகானுபவமாக இருக் கிறது. மனிதனுக்கு இருதய இன்பம் வேறு மூலத்திலிருந்து வரு கிறதில்லை. ஆகையினால், நரகத்து நெருப்பு அந்த இரண்டு ஆசை களிலிருந்தும், அவைகளின் உற்பத்தி ஸ்தானங்களாக புறப்படுகிற துராசையாகவும், இன்பமாகவும் இருக்கிறது. இந்த ஆசைகளி லிருந்து புறப்படும் தீமைகள், மற்றவர்களை அலட்சியம் செய்தலும், விரோதமும், தங்களுக்கு சகாயம் செய்யாதவர்களுக்கு விரோதமும், பொறாமையும், வெறுப்பும், பழிவாங்குதலும், இவைகளிலிருந்து மூர்க்கமும் குரூரமுமாயிருக்கின்றன; தெய்வம் விஷயத்தில், மறுப்பும், அதனால், அலட்சியம் செய்தலும், கேலி செய்தலும், திருச்சபையின் பரிசுத்தமானவைகளை நிந்தனை செய்தலுமாயிருக் கின்றன. இறந்த பிறகு, மனிதன் ஒரு ஆவியானபோது, இந்த [illegible]

வும், வெறுப்பாகவும் திருப்பப்படுகின்றன (மேலே செ. 562 பார்க்கவும்). மேலும், இந்த தீமைகள், தாங்கள் விரோதிகளாக நினைக்கிறவர்களையும், தாங்கள் வெறுத்து பழிவாங்க எரிந்துகொண்டிருக்கிறவர்களையும், நாசப்படுத்தி கொலை செய்ய தொடர்ச்சியாய் நினைக்கிறபடியினால், நாசப்படுத்தவும், கொலை செய்யவும் விரும்புதல், அவர்கள் வாழ்க்கையின் இன்பமாயிருக்கிறது; அப்படி அவர்கள் செய்ய முடியாவிட்டாலும், கெடுதி செய்யவும், சேதமாக்கவும், குரூரத்தை அப்பியாசிக்கவும் அவர்கள் இச்சிக்கிறார்கள். துஷ்டர்களும் நரகங்களும் சொல்லப்படும்போது, வேதத்தில் நெருப்பு என்பதினால் கருதப்படுவது இவைகள்தான். அதிலிருந்து சில வாக்கியங்களை, ஸ்திரப்படுத்தும்பொருட்டு இங்கே எடுத்துக் காண்பிக்கிறேன்:

"அவர்கள் அனைவரும் மாயக்காரரும் பொல்லாதவர்களாயுமிருக்கிறார்கள். எல்லாரையும் ஆகாமியம் பேசும்..... ஆகாமியமானது அக்கினியைப்போல் எரிகிறது. அது முட்செடியையும், நெரிஞ்சிலையும் பட்சிக்கும். அது நெருங்கிய காட்டைக் கொளுத்தும், புகை திரண்டு எழும்பும் .....ஜனங்கள் அக்கினிக்கு இரையாவார்கள். ஒருவனும் தன் சகோதரனை தப்பவிடான்" (ஏசாய. ix. 17-19).

"வானத்திலும் பூமியிலும் இரத்தம் அக்கினி புகை ஸ்தம்பமாகிய அதிசயங்களை கண்டேன்; சூரியன் இருளாக மாறும்" (யோவேல். ii. 30, 31).

"அதின் நிலம் எரிகிற கீலாய் போம்; இரவும் பகலும் அது அவியாது; அதின் புகை என்றைக்கும் எழும்பும்" (ஏசா. xxxiv. 9, 10).

"இதோ, சூளையைப்போல எரிகிற நாள் வரும்; அப்பொழுது அகங்காரிகள் யாவரும் அக்கிரமஞ் செய்கிற யாவரும் துரும்பாயிருப்பார்கள்; வரப்போகிற அந்த நாள் அவர்களைச் சுட்டெரிக்கும்." (மல்கி. iv. 1).

"பாபிலோன் பேய்களுடைய குடியிருப்பாயிற்று ... அது வேகத்தினால் உண்டாகிற புகையை பார்த்து சத்தமிட்டார்கள்...... அவர்களுடைய புகை என்றென்றைக்கும் எழும்புகிறது." (வெளி. xviii. 2, 18; xix. 3).

"அவன் பாதாளக் குழியை திறந்தான்; உடனே பெருஞ் சூளையின் புகையைப்போல் அந்த குழியிலிருந்து புகை எழும்பிற்று;

அந்தக் குழியின் புகையினால் சூரியனும் ஆகாயமும் அந்தகாரப் பட்டது." (வெளி. ix. 2).

"குதிரைகளின் வாய்களிலிருந்து அக்கினியும், புகையும் கந்தக மும் புறப்பட்டன; இவைகளினால் மனுஷரில் மூன்றிலொரு பங்கு கொல்லப்பட்டார்கள்" (வெளி. ix. 17, 18).

"மிருகத்தையும் அதன் சொரூபத்தையும் எவனாவது ஒருவன் வணங்கினால்,......அவன் தேவனுடைய கோபாக்கினையாகிய பாத் திரத்திலே, கலப்பில்லாமல் வார்க்கப்பட்ட அவருடைய உக்கிர மாகிய மதுவை குடிப்பான்......அக்கினியினாலும் கந்தகத்தினாலும் வாதிக்கப்படுவான்" (வெளி xiv, 9, 10)

"நான்காம் தூதன் தன் கலசத்திலுள்ளதைச் சூரியன் மேல் ஊற்றினான்; தீயினால் மனுஷரை தகிக்கும்படிக்கு அதற்கு அதி காரங் கொடுக்கப்பட்டது. ஆகையினால் அப்பொழுது மனுஷர்கள் மிகுந்த உஷ்ணத்தினால் தகிப்பபட்டார்கள்." (வெளி. xvi, 8, 9).

"அவர்கள் கந்தகம் எரிகிற அக்கினிக் கடலிலே உயிரோடே தள்ளப்பட்டார்கள்" (வெளி xiv, 20; xx, 14, 15; xxi 8).

"நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும்" (மத்தே. iii. 10; லூக் iii, 9).

"மனுஷ குமாரன் தம்முடைய தூதர்களை அனுப்புவார்; அவர்கள் அவருடைய ராஜியத்தில் இருக்கிற சகல இடறல்களை யும், அக்கிரமஞ் செய்கிறவர்களையும் சேர்த்து, அவர்களை அக்கினி சூளையிலே போடுவார்கள்" (மத்தே. xiii. 41, 42, 50).

"அப்பொழுது அரசர் இடது பக்கத்திலே நிற்பவர்களைப் பார்த்து: சபிக்கப்பட்டவர்களே, என்னை விட்டு, பிசாசுக்காகவும், அவன் தூதர்களுக்காகவும் ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள்" (மத்தே. xxv, 41).

"நித்திய அக்கினியிலே அவர்கள் தள்ளப்படுவார்கள்.........., எரி நரகத்தில் தள்ளப்படுவார்கள்......அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமிருக்கும்" (மத்தே xviii 8, 19; மாற்கு ix. 43—49).

"நரகத்திலிருந்து ஐசுவரியவான் ஆபிரகாமைப்பார்த்து அக் கினி சுவாலையில் வேதனைப்படுகிறேன் என்று சொன்னான்" (லூக் xvi, 24).

இவைகளிலும் இன்னும் இதர அநேக வாக்கியங்களிலும், "அக்கினி" என்பது தன்னையே நேசித்தலுக்கும் உலகத்தை நேசித்தலுக்கும் சேர்ந்த துராசை என்றும், அதிலிருந்து வரும் "புகை" என்பது, தீமையிலிருந்து வருகிற பொய்யென்றும் அருத்தம் கொள்ளுகிறது.

**571.** தன்னையே நேசித்தலிலிருந்தும், உலகத்தை நேசித்தலிலிருந்தும் உற்பத்தியாகிற தீமைகளைச் செய்யும் துராசை, என்பது நரகத்து அக்கினி என்பதனால் கருதப்படுகிறபடியினாலும், முன் அத்தியாயத்தில் காண்பித்தபடி நரகங்களில்எல்லாருடைய துராசைகளும் அப்படி யிருப்பதினாலும், நரகங்கள் திறக்கப்படும் காலத்தில் தகனங்களில் பார்க்கப்படுகிறதுபோல், தன்னையே நேசித்தல் இருக்கப்பட்ட நரகங்களிலிருந்து, ஒரு அடர்ந்த நெருப்பும், உலகத்தை நேசித்தல் நடமாடும் நரகங்களிலிருந்து ஒரு சுவாலையுள்ள நெருப்பும், புகையுடன் நெருப்பைப்போல, ஒரு தோற்றம் இருக்கிறது. ஆனால், நரகங்கள் மூடப்பட்டபோது, தீயுள்ள தோற்றம் இல்லாமல், அதற்கு பதிலாக, புகையின் ஒரு இருண்ட பிண்டம் காணப்படுகிறது; அப்படி யிருந்தாலும், தீயானது உள்ளே சீறுகிறது; மேலும், தீ எரிந்த பின் தழலிலிருந்து வருவதுபோலவும், அல்லது சில இடங்களில் சூடாக்கப்பட்ட சூளையிலிருந்து போலவும், மற்றவைகளில் ஒரு சூடான ஸ்நானத் தொட்டியிலிருந்துபோலவும், இருக்கிற அதிலிருந்து வரும் சூட்டினால் பார்க்கக் கூடியதாயிருக்கிறது. இந்த சூடானது மனிதனுக்குள் பாயும்போது, அவனுக்குள் துராசைகளையும், கெட்டவர்களுக்குள் வெறுப்பும், பழிவாங்குதலையும், வியாதியஸ்தர்களுக்குள் உன்மத்தங்களையும் எழுப்புகிறது. அவ்விதமான தீ அல்லது அவ்வித சூடு, மேலே கூறிய ஆசைகளுக்குள் இருக்கப்பட்டவர்களிடத்தில் நிலைக்கிறது; ஏனென்றால், சரீரத்தில் இருக்கும் காலத்திலேயே தங்கள் ஆவிகள் சம்பந்தப்பட்டவரையில், அந்த நரகங்களுக்கு அவர்கள் முடிவு கட்டப்பட்டிருக்கிறார்கள். ஆனால், நரகத்திலிருக்கப்பட்டவர்கள் தீயில் இல்லையென்று தெரிந்துகொள்ளப்பட வேண்டும்; அந்த தீயானது ஒரு தோற்றமாயிருக்கிறது. அங்கே இருக்கப்பட்டவர்கள், எந்த தகித்தலையும் உணருகிறதில்லை; ஆனால் உலகத்திலிருந்த காலத்தில், தாங்கள் உணர்ந்ததைப்போன்ற, ஒரு சூட்டை மாத்திரம் உணருகிறார்கள். அன்பு நெருப்புக்கு அன்னியமாயிருக்கிறபடியினாலும், சூக்கும உலகத்தில் பார்க்கப்பட்ட

எல்லா பொருள்களும், அன்னுவயங்களை அனுசரித்து பார்க்கப்படு கிறபடியினாலும், இந்த நெருப்பு தோற்றமானது அன்னுவயத்தி லிருந்து வருகிறது.

**572.** இந்த நரகத்து தீ அல்லது சூடு, சுவர்க்கத்திலிருந்து வரும் சூடு, அதில் பாயும்போது மிகுந்த குளிராக இருப்பப்படுகிற தென்றும், அப்புறம் அதிலிருக்கப்பட்டவர்கள் குளிர்காய்ச்சல் பிடிக்கப்பட்ட மனிதர்கள்போல் அதிர்ந்து, உள்ளுக்குள்ளாய் கூட வுதைக்கப்படுகிறார்களென்றும், மனதில் வைக்கப்படவேண்டும். இது அவர்கள் தெய்வத்தை முழுமையும் எதிர்ப்பதினால் உண்டா கிறது; தெய்வீக அன்பாயிருக்கிற சுவர்க்கத்து சூடு, தன்னையே நேசித்தலாயிருக்கிற நரகத்து சூட்டையும், அதனுடன் அவர்கள் உயிரின் நெருப்பையும் அணைக்கிறது; அதிலிருந்து அவ்விதமான குளிரும், அதனால் உண்டாகும் அதிர்ச்சியும், வேதனையும் வருகி றது. அக்காலத்தில், அம்மாதிரியே, கள்ளிருள் பின் உண்டாகிறது. அதிலிருந்து சித்தப்பிரமையும் குருடும் உண்டாகின்றன. ஆனால், இது அரிதாய் நேரிடுகிறது; அளவுக்கு மிஞ்சி அதிகரித்த பிளப்புகள் அடக்கப்படவேண்டியபோது மாத்திரம் இது நேரிடுகிறது.

**573.** நரகத்து நெருப்பு என்பது தன்னையே நேசித்தலி லிருந்து, வெளியே வருகிற தீமையை செய்ய கொள்ளும் ஒவ் வொரு தாசையையும் கருதுகிறபடியினால், இந்த நெருப்பு என்பது, நரகங்களிலிருக்கிற வேதனைகளைக்கூட கருதுகிறது; ஏனென்றால், அந்த அன்பிலிருந்து உண்டான தாசையானது, தங்களையே கண்யப்படுத்தாமலும், போற்றாமலும், ஆராதிக்காமலும் இருக் கிற மற்றவர்களுக்கு, தீங்கு செய்யும் தாசையா யிருக்கிறது; அவர்கள் கோபத்துக்கும், அதிலிருந்து புறப்படும் வெறுப்புக்கும் பழிவாங்குதலுக்கும் தக்கபடி, அவர்கள்பேரில் குரூரத்தை செலுத் தும் தாசையிருக்கிறது. அவ்வித தாசையானது ஒரு கூட்டத் தின் ஒவ்வொருவனிடத்திலும் இருந்துகொண்டு, சட்டபயம், கீர்த்தி, கண்யம், லாபம், உயிர்போய்விடுமென்ற பயம் போன்ற புறம்பான எந்த கட்டுகளாலும் அடக்கப்படாவிட்டால், ஒவ்வொரு வனும், தன்னுடைய சொந்த தீமையின் வேகத்தினால், மற்றவன் பேரில் பாய்ந்து, தன்னால் கூடிய வரையில் தன்னுடைய அதிகாரத் துக்குள் மற்றவர்களை கொண்டுவருகிறார்கள்; இப்படியாக அவர்கள் பேரில், குரூரமான செயல்களை நடத்த சந்தோஷப்படுகிறார்கள். இந்த இன்பமானது [illegible] நெருக்கம் இருக்கும்படியான

அதிகாரம் செய்யும் ஆசையுடன் அவ்வளவு முழுமையும் சேர்க்கப்பட்டிருக்கிறது.; ஏனென்றால், சேதங்கள் செய்யும் இன்பமானது, மேலேகூறியபடி, அந்த அன்பின் தீமைகளா யிருக்கிற பகையிலும் பொறாமையிலும், வெறுப்பிலும், பழிவாங்குதலிலும், இருக்கிறது. எல்லா நரகங்களும் அவ்விதமான கூட்டங்களாக இருக்கின்றன; ஆகையினால், அங்கே இருக்கும் ஒவ்வொருவனும் தன்னுடைய இருதயத்தில் மற்றவர்களுக்கு விரோதமாய் வெறுப்பை கொள்ளுகிறான்; அப்படி வெறுப்பதிலிருந்து, தனக்கு சக்தி இருக்கிறவரையில் குரூரத்துக்குள் பாய்கிறான். இந்த குரூரங்களும், அவைகள் உண்டாக்கும் வேதனைகளும்கூட, நரகத்து நெருப்பு என்பதினால் அறிந்து கொள்ளப்படுகின்றன; ஏனென்றால், அவைகள் எல்லாம் துராசைகளின் பலன்களாயிருக்கின்றன.

**574**. மேலே நெம்பர் 548 ல், ஒரு துஷ்ட ஆவியானது தானே நரகத்துக்குள் தானாக விழுகிறது என்பது காண்பிக்கப்பட்டது. இவ்விதமான வேதனைகள் நரகத்திலிருக்கும்போது, இது எப்படி நேரிடுகிறது என்று, இப்பொழுது சில வார்த்தைகளில் சொல்லப்படவேண்டும். ஒவ்வொரு நரகத்திலிருந்து அதிலிருப்பவர்கள் இருக்கிற துராசைகளின் ஒரு கோளம் வெளியே வருகிறது. இந்த கோளமானது, அதே மாதிரியான துராசையிலுள்ள எவனாலாவது பார்க்கப்பட்டால், அவனுடைய இருதயம் உருகி, அவன் இன்பத்தில் பூர்த்தியாக்கப்படுகின்றான்; ஏனென்றால், துராசையும் அதன் இன்பமும், ஒன்றாகிறது; அதற்கு காரணம் ஒரு மனிதன் ஆசைப்படுகிறது, அவனுக்கு இன்பமாயிருக்கிறது என்பதாகிறது. ஆகவே, ஆவியானது தானே அங்கே திரும்பி, இருதய சந்தோஷத்திலிருந்து, அங்கேபோக ஆசைப்படுகிறது; ஏனென்றால், அதற்கு அவ்வித வேதனைகள் அங்கே இருக்கிறதென்று இன்னும் தெரியாது; அதை தெரிந்த ஆவிகூட அந்த திக்கில்போக இன்னும் ஆசைப்படுகிறது. ஏனென்றால், சூக்கும உலகத்தில் உள்ள எவனும் தன்னுடைய சொந்த துராசையை எதிர்க்க முடியாது; ஏனென்றால், துராசையானது அன்பைச் சேர்ந்தது; அன்பு இச்சையை சேர்ந்தது; இச்சையானது மனிதனுடைய சுபாவத்தையே சேர்ந்தது; அங்கே ஒவ்வொருவனும் தன்னுடைய சுபாவத்திலிருந்து செயல்படுகிறான். ஆகையினால், ஒரு ஆவியானது, தானாகவே அல்லது தன்னுடைய சுவேச்சையிலிருந்து, தான் போகும் வழியை தன்னுடைய நரகத்துக்கு செலுத்தி, அதில் பிரவேசித்த காலத்தில், சிநேகிதர் மத்தியில்

தான் வந்திருப்பதாக நம்பும்படியாக, முதலில் அது சிநேகித முறையில் ஏற்றுக்கொள்ளப்படுகிறது; ஆனால், இது சில மணி காலங்கள் மாத்திரம் நடக்கிறது. அதற்குள்ளாக, அதன் புத்திக் கூர்மையைப்பற்றியும், அதனால் உண்டாகும் சாமார்த்தியத்தைப் பற்றியும் அது பரிசோதிக்கப்படுகிறது. இந்த சோதனை முடிந்த உடன், அவைகள் அதை பலவிதங்களிலும், அதிகரிக்கும் குரூரத் துடனும், வேகத்துடன் தொந்தரை பண்ணுகின்றன. அதை நரகத் துக்குள் அதிக உள்ளாகவும், ஆழமாகவும் கொண்டுபோவதினால் முடிக்கப்படுகிறது; ஏனென்றால், நரகமானது எவ்வளவு உள்ளாக வும், ஆழமாகவும் இருக்கிறதோ, அவ்வளவு கொடியதாக ஆவிகள் இருக்கின்றன. இந்த உபாதிகள் எல்லாம் உண்டாக்கின பிறகு தண்டனைகளால் அதை குரூரமாய் நடத்த ஆரம்பிக்கின்றன. இது வும் அது ஒரு அடிமையின் நிலைமைக்கு குறைக்கப்படுகிறவரையில் நடக்கிறது. ஆனால், ஒவ்வொருவனும் மிகவும் பெரியதாயிருக்க விரும்பி, மற்றவைகள்பேரில் வெறுப்பில் எரிகிறபடியினால், கீழ்ப் படியாத கலகங்கள் தொடர்ச்சியாய் தோன்றுகின்றன. அதனால், புது கலகங்கள் ஏற்பட்டு, ஒரு வேடிக்கை மற்றொன்றாக மாற்றப் பட்டு, அடிமைகளாக செய்யப்பட்டவைகள், எதோ புதிய பேய் மற்றவைகளை கீழ்ப்படுத்த உதவி செய்யும்பொருட்டு, விடுதலையாக் கப்படுகின்றன; பிறகு, சரணமடைந்து சொன்ன உடனே கீழ்ப்படி யாதவைகள் பல விதங்களில் வதைக்கப்படுகின்றன; அப்படியே தொடர்ச்சியாய் நடக்கிறது. அவ்வித வேதனைகள் நரகத்து நெருப்பு என்று சொல்லப்படுகிற நரகத்தின் வேதனைகளா யிருக்கின்றன.

**575**. பற்கறித்தல் என்பது பொய்கள் ஒன்றோடொன்று செய்யும் தொடர்ச்சியான விவகாரமாகவும், சண்டையாகவும் இருக் கின்றன; அதனால் அது மற்றவர்களை அலட்சியம் செய்தலுடனும், விரோதத்துடனும், பரிகாசத்துடனும், கேலியுடனும், தேவதூஷ ணத்துடனும் சேர்க்கப்பட்ட பொய்களிலிருக்கப்பட்டவர்களுக்கு சேர்ந்ததாயிருக்கிறது; இந்த தீமைகள், பலவித கசப்பான சண்டை களாக பிளக்கின்றன; ஏனென்றால், ஒவ்வொன்றும் தன்னுடைய சொந்த பொய்யிக்காக சண்டைபிடித்து, அதை உண்மை என்று சொல்லுகிறது. இந்த விவகாரங்களும் சண்டைகளும், பற்களை கறித்தல்போல், அந்த நரகங்களிலிருந்து கேட்கப்படுகின்றன; மேலும், சுவர்க்கத்திலிருந்து வரும் உண்மைகள் தங்கள் மத்தியில்

பாயும்போது பற்களை, அம்மாதிரியே கறித்தலாக திருப்பப்படுகின்றன. இயற்கையை ஒத்துக்கொண்டு, தெய்வத்தை மறுத்தவைகள் எல்லாம், அந்த நரகங்களிலிருக்கின்றன; அவ்வித தள்ளுகையில் தாங்களே ஸ்திரப்பட்டவைகள், இன்னும் ஆழமான நரகங்களிலிருக்கின்றன. அவ்விதமானவைகள், சுவர்க்கத்திலிருந்து எந்த வெளிச்சத்தையும் ஏற்றுக்கொள்ள சக்தியற்றவைகளாய் இருக்கிறபடியினாலும், இவ்விதமாக தங்களுக்குள்ளேயே, உள்ளுக்குள்ளாய் எதையும் பார்க்க, சக்தியற்றவைகளாய் இருப்பதினாலும், அவைகள் அநேகமாய் தங்கள் கண்களினால் பார்ப்பதையும், தங்கள் கைகளினால் தொடுவதையும் தவிர, வேறு எதையும் நம்பாத ஸ்தூல ஐம்புலனுக்கடுத்த ஆவிகளா யிருக்கின்றன. ஆகவே, ஐம்புலன்களின் பொய்கள் எல்லாம், அவைகளுக்கு உண்மைகளா யிருக்கின்றன; இவைகளிலிருந்துதான், அவைகள் விவகாரம் செய்கின்றன. இதனால்தான், அவைகளின் விவகாரங்கள் பற்களை கறித்தல்போல் கேட்கப்படுகின்றன; ஏனென்றால், சூக்கும உலகத்தில் எல்லா பொய்களும், கோபம் மூட்டுகிற சத்தத்தை கொடுக்கின்றன; மேலும் பற்கள் இயற்கையின் இறுதிப் பொருள்களுடனும், ஸ்தூல-ஐம்புலனுக்கடுத்ததா யிருக்கிற மனிதனுடைய இறுதிப் பொருள்களுடனும் அன்னுவயப்படுகின்றன. நரகங்களில் பற்கள் கறித்தல் இருக்கிறதென்பது, மத்தே. viii. 12; xiii. 42, 50; xxii. 13; xxiv. 51; xxv. 30; லூக். xiii. 28, இவ்விடங்களில் பார்க்கப்படலாம்.)

# LX

## நரகத்து ஆவிகளின் விஷமமும் தந்திரங்களும்

**576.** மனிதர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், ஆவிகளின் மேலான உயர்ச்சியானது, உள்ளுக்குள்ளாய் நினைத்து, தன்னுடைய சொந்த மனதின் இயக்கங்களைப்பற்றி, ஏதாவது தெரிந்த ஒவ்வொருவனாலும் பார்க்கப்பட்டு கிரகிக்கப்படலாம். ஏனென்றால், ஒரு மனிதனானவன் தன் மனதில், அரை மணி நேரத்தில் பேசி வெளிப் படுத்தக்கூடியதைவிட, அநேக விஷயங்களைப்பற்றி, ஒரு நிமிஷத் தில் நினைத்து, தர்க்கித்து தீர்மானத்துக்கு வரலாம். ஆகவே, மனி தன் ஆவியிலிருக்கும்போது, அதனால் தான் ஒரு ஆவியாகும் போது, எவ்வளவு மேலாகிறானென்பது விசதமாகிறது; ஏனென் றால், நினைக்கிறது ஆவியாயிருக்கிறது; ஆவியானது, தன்னுடைய சிந்தனைகளை பேச்சிலும், எழுத்து மூலமாயும், வெளிப்படுத்துவது சரீரமாயிருக்கிறது. அதனால் தான், இறந்த பிறகு ஒரு தேவனாகிற மனிதன், தான் உலகத்திலிருந்தபோது தனக்கு இருந்ததை ஒப் பிட்டால், சொல்லமுடியாததாயிருக்கிற விவேகத்திலும்ஞானத்திலு மிருக்கிறான்; ஏனென்றால், அது உலகத்திலிருந்தபோது, அதன் ஆவியானது சரீரத்தில் கட்டப்பட்டு, சரீரத்தினால் ஸ்தூல உலகத் தில் இருந்தது. இந்த காரணத்துக்காக, அவன் அக்காலத்தில் சூக் குமமாய் நினைத்தது, ஒப்பீடாய் சாதாரணமானதும், பருக்கனான தும், தெளிவற்றதுமாயிருந்து, சூக்கும சிந்தனையின் கணக்கற்ற விஷயங்களை ஏற்றுக்கொள்ளாமல், உலகத்தினுடைய கவலைகளில் இருந்து, உண்டாகிற மேகங்களில், அதேமாதிரி அவைகளை அகப் படுத்துகிற ஸ்தூல அபிப்பிராயங்களில் பாய்ந்தது. ஸ்தூல உலகத் திலிருந்து, தனக்கு சேர்ந்த சூக்கும உலகத்திற்கு அது போகும் போது விஷயம் இருக்கிறதுபோல், ஆவியானது சரீரத்திலிருந்து விடுதலை செய்யப்பட்டு, தன்னுடைய சூக்கும நிலைக்கு வரும்போது விஷயம் வேறுமாதிரி இருக்கிறது. அக்காலத்தில், சிந்தனைகள் விஷயத்திலும், ஆசைகள் விஷயத்திலும், அதன் நிலைமை, முன் இருந்ததைவிட அதிக மேலானதாக இருக்கிறதென்பது, இப் பொழுதுதான் சொன்னதிலிருந்து தெளிவாயிருக்கிறது. அதனால் தான், தேவர்களின் சிந்தனைகள் வாக்குக் கெட்டாததும் சொல்ல

முடியாததுமாயிருக்கிறது; ஆகையினால், அவைகள் மனிதனுடைய ஸ்தூல சிந்தனைகளில் பிரவேசிக்க சக்தி யற்றவைகளாய் இருக்கின்றன; என்றாலும், ஒவ்வொரு தேவனும் மனிதனாக பிறந்து, ஒரு மனிதனைப்போல் வாழ்ந்தது; அப்பொழுது மற்ற மனிதர்களைவிட அதிக ஞானமுள்ளதாக தனக்கு தோன்றவில்லை.

**577.** தேவர்களுக்கு ஞானமும் விவேகமும் எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவு நரகத்து ஆவிகளுக்கு, பொல்லாங்கும் சூழ்ச்சியு மிருக்கின்றன. தேவர்கள் சம்பந்தமான ஆவி, தன்னுடைய சொந்த நன்மையிலும் நரகத்து சம்பந்தமான ஆவி, தன்னுடைய சொந்த தீமையிலும், இவ்விதமாக, மனிதனுடைய ஆவியானது சரீரத்திலிருந்து விடுதலை செய்யப்பட்டபோது, தன்னுடைய சொந்த நன்மையில் அல்லது தன்னுடைய சொந்த தீமையில் இருக்கிறபடியினால், விஷயம் அதேமாதிரி யிருக்கிறது; ஏனென்றால், நாம் அடிக்கடி சொல்லி முன்னிட்டே காண்பித்தபடி, ஒவ்வொரு ஆவியும், தன்னுடைய சொந்த அன்பாயிருப்பதினால், தன்னுடைய சொந்த நன்மையாகவும் அல்லது தன்னுடையசொந்த தீமையாகவுமிருக்கிறது. ஆகையினால், தேவர்கள் சம்பந்தமான ஒரு ஆவியானது தன்னுடைய சொந்தமான நன்மையிலிருந்து, நினைத்து, இசசித்து, பேசி செயல்படுகிறதுபோல், நரகத்துக்கு அடுத்த ஒரு ஆவியும், தன்னுடைய சொநத தீமையிலிருந்து இதை செய்கிறது; தீமையிலேயே இருந்து, நினைத்து, இச்சித்து, பேசி, செயல்படுதல் என்பது, தீமைக்குள் அடங்கியிருக்கிற எல்லா பொருள்களிலிருந்தும் நினைத்தலாயும், இச்சித்தலாயும், பேசுதலாயும், செயல்படுதலாயுமிருக்கிறது. அது சரீரத்திலிருந்தபோது, விஷயம் வேறு மாதிரியிருந்தது. ஏனென்றால், அக்காலத்தில் மனிதனுடைய ஆவியினுடைய தீமையானது சட்டத்திலிருந்தும், லாபம், கண்யம், கீர்த்தி இவைகளை அடையும் நம்பிக்கையிலிருந்தும், இவைகளை இழந்து விடுவோமென்கிற பயத்திலிருந்தும், ஒவ்வொரு மனிதனும், உணருகிற கட்டுப்பாடுகளுக்குள் இருந்தது; ஆகையினால், அதன் ஆவியின் தீமையானது, அக்காலத்தில் வெளியே வந்து, தன்னிலேதான் என்னவென்று காட்ட முடியாது. இதுவுமன்றி, மனிதனுடைய ஆவியின் தீமையானது, உலகத்தின் பொருட்டு, அவ்விதமான மனிதன் அறிக்கையிட்டு, கள்ளம் செய்கிற புறம்பான நேர்மையிலும், யோக்கியதையிலும், நியாயத்திலும், உண்மையினிடத்தும் நன்மையினிடத்தும் கொள்ளும்ஆசையிலும்

அப்பொழுது சுற்றிக்கட்டப்பட்டு மறைக்கப்பட்டிருந்தது. இந்த புறம்பான தோற்றங்களினால், தன்னுடைய ஆவியின் ஆழ்ந்த பொல்லாங்கையும், தந்திரத்தையும்பற்றி தனக்கேதெரியாதபடி, அதாவது, தன்னுடைய ஆவியானது தன்னிடமேயும், தன்னுடைய சொந்த சுபாவத்திற்கும் வந்தபோது, தான் இறந்த பிறகு ஆகிற அவ்வித பேயாக தன்னிலேயே தான் இருந்ததாக தெரியாதபடி, தீமையானது மறைந்தும் தெளிவற்றதாயுமிருந்தது. அவ்வித பொல்லாங்கு, அப்பொழுது, எல்லா நம்பிக்கையையும் மிஞ்சும்படியாக தானே வெளிப்படையாகிறது. தீமையிலிருந்தே அப்பொழுது புறப்படுகிற ஆயிரங்கள் கணக்கான தீமைகள் இருக்கின்றன; அவைகளில் எந்த பாஷையின் வார்த்தைகளாலும் வெளிப்படுத்தக்கூடாத சில தீமைகள் இருக்கின்றன. அதிக அனுபவத்தால், அவைகளின் குணத்தை தெரிந்துகொண்டும், அதை உணரவும்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது; ஏனென்றால், ஆவிவிஷயத்தில், சூக்கும உலகத்திலும், அதேகாலத்தில் சரீரம் விஷயத்தில், ஸ்தூல உலகத்திலும் இருக்க ஆண்டவர் எனக்கு அருள் செய்திருக்கிறார். ஆயிரத்தில் ஒரு பாகம்கூட விவரிக்கமுடியாதபடி, அவர்களுடைய பொல்லாங்கு அவ்வளவு பெரியதாயிருக்கிறதென்றும், அதனுடன்கூட, ஆண்டவர் மனிதனை காப்பாற்றினால் ஒழிய நரகத்திலிருந்து அது விடுவிக்கப்பட முடியாதென்றும், நான் சாட்சியிடக் கூடும்; ஏனென்றால், ஒவ்வொரு மனிதனிடத்திலும், நரகத்திலிருந்து ஆவிகளும், அதைப்போல சுவர்க்கத்திலிருந்து தேவர்களுமிருக்கிறார்கள். (மேலே செ. 292, 293). மனிதனானவன் தெய்வத்தை ஒத்துக்கொண்டு, விசுவாசத்தினுடையவும் தருமத்தினுடையவும் வாழ்க்கையை வாழ்ந்தாலொழிய, அவனை ஆண்டவர் காப்பாற்றமாட்டார்; ஏனென்றால், அப்படியில்லாவிட்டால், மனிதன் ஆண்டவரை விட்டு திரும்பிகொண்டு, நரகத்து ஆவிகள் பக்கம் திரும்பிக்கொள்ளுகிறான்; இவ்விதமாக அதன் ஆவி, அவ்விதமான தீவினையில் தோய்ந்துவிடுகிறது. அப்படியிருந்தாலும், மனிதனானவன் அந்த ஆவிகளுடன் சேர்வதிலிருந்துதான் பிரயோகிக்கிறதும், தன்னிடமே இருக்கிறதுபோலிருக்கிறதுமாகிய தீமைகளிலிருந்து ஆண்டவரால் தொடர்ச்சியாய் இழுக்கப்படுகிறான்; ஒரு தெய்வத்தை மறுத்தால், தான் பெற்றுக்கொள்ள தவறிப்போகிற, மனசாட்சியின் உள்ளான பந்தங்களால், அவன் இழுக்கப்படாவிட்டால், மேலே கூறியபடி, சட்டத்துக்கும் அதன் அபராதத்துக்கும் பயங்களாகவும், லாபத்தை

இழுத்தலுக்கும், கண்யமும் கீர்த்தியும் இல்லாமற் போய்விடும் என்பதற்கும் பயங்களாகவும் இருக்கிற, புறம்பான கட்டுகளால் இழுக்கப்படுகிறான். உண்மையில், அவ்விதமான மனிதன் தீமைகளிலிருந்து, அவனுடைய அன்பின் இன்பத்தின் மூலமாயும், இன்பத்தை இழந்துவிடுதல் அல்லது இல்லாமல் செய்யப்படுதலின் பயத்தின் மூலமாயும், பிரிக்கப்படலாம்; ஆனால், அதனால் அவன் பரமார்த்த நன்மைகளுக்குள் நடத்தப்பட முடியாது. ஏனென்றால், அவன் இவைகளில் எவ்வளவு கொண்டுவரப்படுகிறானோ, அவ்வளவு தந்திரத்தையும் மோசத்தையும்பற்றி யோசித்து, இசையச் செய்து, இவ்விதமாக மோசம் செய்ய, நல்லதாகவும், யோக்கியமானதாகவும், நியாயமானதாகவும் இருப்பதைப்போல் தோற்றங்களையும் பாசாங்குகளையும் செய்கிறான். அவ்விதமான தந்திரம், அவன் ஆவியின் தீமையுடன் தானே சேர்ந்துகொண்டு, அவனுடைய தீமையானது அதைப்போலவே சுபாவமுடையதாக இருக்கச்செய்து, அதற்கு உருவத்தைக் கொடுக்கிறது.

**578.** எல்லா ஆவிகளிலும், தன்னையே நேசித்தலிலிருந்து, தீமையிலிருந்துகொண்டு, அதே காலத்தில் தங்களுக்குள்ளேயே மோச எண்ணத்திலிருந்து, உள்ளுக்குள்ளாய் செயல் பட்டவைகள் தான் மிகவும் கெட்டவைகள்; ஏனென்றால், மோசமானது மற்ற எந்த தீமையைவிட, சிந்தனைகளிலும் உத்தேசங்களிலும், மிகவும் ஆழமாய் பிரவேசித்து, அவைகளை விஷத்தால் பழுதாக்கி, இவ்விதமாக மனிதனுடைய எல்லா ஞான வாழ்வையும் நாசப்படுத்துகிறது. இந்த ஆவிகளில் அநேகம், பின்பக்கத்திலிருக்கும் நரகங்களில் இருக்கின்றன; அவைகளுக்கு பூதகணங்கள் என்று பெயர்; அங்கே அவைகள் கண்களுக்கு புலப்படாதபடி, தாங்களே செய்துகொள்ளவும், மற்றவர்களைச் சுற்றி மாயா ரூபங்களைப்போல் சலனிக்கவும், விரியன் பாம்புகள் விஷத்தை தூவுகிறதுபோல, சுற்றிலும் சிந்துகிற தீமைகளை இரகசியமாய் உட்செலுத்தவும் சந்தோஷப்படுகின்றன. இவைகள், மற்றவைகளைவிட அதிக பயங்கரமாய் வதைக்கப்படுகின்றன. ஆனால், மோச கருத்தில்லாதவர்களும், கொடிய கபடத்தில் அகப்படாமல் போனபோதிலும், தன்னையே நேசித்தலிலிருந்து, தீமைகளில் இன்னும் இருக்கப்பட்டவைகளும், பின் பக்கத்திலிருக்கும் நரகங்களில்கூட இருக்கின்றன; ஆனால், அவைகள் அவ்வளவு ஆழமுள்ளவைகள் அல்ல. மற்றபடி, உலகத்தை நேசித்தலிலிருந்து தீமையிலிருக்கப்பட்டவைகள், எதிரிலிருக்கும் நரகங்களில் இருக்

கின்றன; அவைகளுக்கு ஆவிகள் என்று பெயர். இந்த ஆவிகள், தன்னையே நேசித்தலிலிருந்து, தீமைகளில் இருக்கப்பட்டவைகள் இருக்கிறதுபோல, தீமையின் அதாவது வெறுப்பினுடையவும், பழி வாங்குதலினுடையவும், அவ்வித உருவங்களாயில்லை; ஆகையினால், அவைகளுக்கு அவ்வித வன்மமும் தந்திரமும் கிடையாது; அதனால், அவைகளின் நரகங்கள் மிதமானதாயிருக்கின்றன.

**579.** பூத கணங்கள் என்று சொல்லப்படுகிறவைகளின் பொல்லாங்கினுடைய குணம் என்னவென்று, அநுபவத்தில் தெரிந்துகொள்ள, எனக்கு அருள் செய்யப்பட்டது. பூதகணங்கள், சிந்தனைகளுக்குள் செயல்பட்டு பாயாமல், நாய்கள் காட்டு மிருகங்களை ஒரு காட்டில் வாசனை பிடிக்கிறதுபோல், தாங்கள் பார்த்து மணந்து பார்க்கிற ஆசைகளுக்குள் அப்படி செய்கின்றன. அவைகள் யாரிடமாவது நல்ல பட்சங்களை பார்க்கும் காலத்தில், அதன் சந்தோஷங்களால் ஆச்சரியப்படும்படியான விதத்தில், அவைகளை இழுத்து, வளைத்து, தீமையான நேசங்களாக அவைகளை திருப்புகின்றன; இதுவும் கூட மற்றதற்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாதபடி, அவ்வளவு இரகசியமாகவும், அவ்விதகொடிய சாமார்த்தியத்துடனும் செய்கின்றன; ஏனென்றால், அவைக்ள் இவ்விதமாக வெளிப்படையாகிறபடியினால், அவைகள் எதுவும் சிந்தனைக்குள் பிரவேசிக்காதபடி, தந்திரமாய் பாதுகாக்கின்றன: அவைகளுக்கு மனிதனுடன், தலையின் பின் பாகத்திற்கு கீழ் ஆசனம் கொடுக்கப்படுகின்றன. மற்றவர்களை, அவர்களுடைய நேசங்களினுடையவும், துராசைகளினுடையவும் இன்பங்களின் மூலமாய் இழுத்து, இசையச் செய்வதினால், மற்றவர்களுடைய மனதுகளை மோச விதமாய் வசிகரித்த மனிதர்களாய், உலகத்தில் இவர்கள் இருந்தார்கள்; ஆனால், அவ்வித ஆவிகள், சீர்திருத்தப்பட ஏதாவது நம்பிக்கையிருக்கிற எந்த மனிதன் சமீபமும் வர, ஆண்டவரால் அனுமதி கொடுக்கப்படுகிறதில்லை; ஏனென்றால், அவைகள் மனசாட்சியை அழிக்க மாத்திரமல்லாமல், மற்றபடி மறைந்து கிடக்கிற பரம்பரையான தீமைகளை மனிதனில் தூண்டி விடவும்கூட சக்தியுள்ளவைகளாயிருக்கின்றன. ஆகையினால், மனிதனானவன் அந்த தீமைகளில் நடத்தப்படாதபடி, இந்த நரகங்கள் முழுமையும் மூடப்பட, ஆண்டவரால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இறந்த பிறகு, அவ்வித நடத்தையுள்ள எந்த மனிதனாவது, மறுமைக்கு வருங்காலத்தில் அவன் அவர்களுடைய நரகத்தில் தள்ளப்படுகிறான். இந்த பூத

கணங்களின் மோசத்தையும் தந்திரத்தையும் பரிசோதித்துப் பார்த்தால், அவைகள் விரியன் பாம்புகளைப்போல் தோன்றுகின்றன.

**580.** நரகத்து ஆவிகளின் ஆழ்ந்த பொல்லாங்கு என்பது, எண்ணிப் பார்த்தால் ஒரு புஸ்தகமாகவும், விவரித்து சொன்னால் அநேக புஸ்தகங்களாகவும், ஆகக்கூடியதாயிருக்கிற அவ்வளவு கணக்கற்றதாயிருக்கிற அவைகளின் கொடிய வித்தைகளிலிருந்து விசதமாகிறது; இந்த வித்தைகள் எல்லாம் ஏறக்குறைய உலகத்தில் தெரியாமலிருக்கிறது. ஒருவிதமானது, அன்னுவயங்களை துர்பிரயோகம் செய்வதற்கு சம்பந்தப்பட்டிருக்கிறது; இரண்டாவது, தெய்வீக ஒழுங்கின் இறுதிப் பொருள்களின் துர்வினியோகங்களுக்கும், மூன்றாவது, மற்றதின் பக்கம் திருப்புவதினாலும், மற்றதின்பேரில் பார்வையை நாட்டுவதினாலும், தங்களை நீக்கி மற்ற ஆவிகளினுடையவும், தங்களால் அனுப்பப்பட்ட ஆவிகளினுடையவும் முகாமையாலும், சிந்தனைகளுடையவும், நேசங்களுடையவும் சம்பந்தத்திற்கும் உட்பெருக்குக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது; நான்காவது, மனோ பாவத்தினால் உண்டாகும் செயற்பாடுகளுக்கும், ஐந்தாவது, தாங்கள் சரீரத்துடன் இருக்கிறவிடத்தை விட்டுவிட்டு, வேறு இடத்தில் ஆஜராகிற தங்களிடமிருந்தே, வெளியே வருதலுக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது; ஆறாவது, பாவனை கூட்டுதலுக்கும் வசப்படுத்தலுக்கும், பொய்களுக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது. சரீரத்திலிருந்து விடுதலையானபோது, ஒரு பொல்லாதவன் ஆவியானது இந்த வித்தைகளுக்குள் தானேபிரவேசிக்கிறது; ஏனென்றால், அவைகள் அவன் அக்காலத்திலிருக்கிற அவனுடைய தீமையின் சுபாவத்தில் இயல்பானதாயிருக்கிறது. இந்த வித்தைகளால் நரகங்களில் ஒருவரை ஒருவர் வதைக்கிறார்கள் ஆனால், பாவனைகளாலும், வசப்படுத்துகையினாலும் பொய்களாலும் சித்தியாக்கப்படுகிறவைகளைத் தவிர, இந்த வித்தைகள் எல்லாம் உலகத்தில் தெரிந்திருக்கப்படாதபடியினால், நான் அவைகளை பிரதானமாய் விவரிக்கமாட்டேன்; ஏனென்றால், அவைகள் கிரகிக்கப்படவும் முடியாது, சொல்லக்கூடாதபடி கெட்டவைகளாயுமிருக்கின்றன.

**581.** ஆண்டவர், நரகங்களில் வேதனைகள் இருக்க, ஏன் அனுமதி கொடுக்கிறார் என்பதற்கு காரணம், தீமைகள் வேறு விதமாய் அடக்கப்பட்டு வெல்லமுடியாது என்பதாயிருக்கிறது. அவைகளை அடக்கி வெல்லுதலுக்கு, இவ்விதமாக அந்த நரகத்து

கும்பை கட்டில் வைப்பதற்கு ஓரே வழி, தண்டனையின் பயந்தான் வேறு இதர வழி இல்லை; ஏனென்றால், தண்டனையும் வேதனையும் உண்டாகும் என்கிற பயமில்லாவிட்டால், சட்டமில்லாமலும், அபராதங்கள் இல்லாமலுமிருக்கிற பூமியின்பேரில் இருக்கிற ஒரு இராச்சியத்தைப்போல், தீமையானது உன்மத்தமாக வெளிப்பட்டு, ஒவ்வொன்றும் சின்னாபின்னமாகிப் போய்விடும்.

## LXI

## நரகங்களின் தோற்றமும் ஸ்தானமும் எண்ணும்

**582.** சூக்ஷும உலகத்தில், அதாவது ஆவிகளும் தேவர்களும் இருக்கப்பட்ட உலகத்தில், ஸ்தூல உலகத்தில்போல், அதாவது மனிதர்கள் இருக்கப்பட்ட இடத்தில்போல், ஒரே விதமான பொருள்கள் தோன்றுகின்றன. வெளிதோற்றத்தில் யாதொரு வித்தியாசமில்லை. அந்த உலகத்தில், மைதானங்களும், மலைகளும், குன்றுகளும், பாறைகளும், அவைகளுக்கு மத்தியில் பள்ளத்தாக்குகளும், அவைகளுடன்கூட ஜலங்களும், பூமியின் பேரில் பார்க்கப்படுகிற இன்னும் இதர பொருள்களும் பார்க்கப்படுகின்றன. அப்படி இருந்தாலும், அவைகள் எல்லாம் சூக்ஷும மூலத்திலிருந்து வந்து, மனிதர்கள் ஸ்தூல உலகத்தில் இருப்பதினால், அவர்கள் கண்களுக்கு புலப்படாமல், ஆவிகளுடையவும் தேவர்களுடையவும் கண்களுக்கு புலப்படுகின்றன. சூக்ஷும சரீரிகள், சூக்ஷும மூலத்திலிருந்து வருகிற பொருள்களைப் பார்க்கின்றன. ஸ்தூல சரீரிகள், ஸ்தூல மூலத்திலிருந்து வருகிறவைகளை பார்க்கின்றன. ஆதலால், மனிதனானவன், ஆவியிலிருக்க விடப்பட்டால் ஒழிய, அல்லது தான் இறந்த பிறகு ஆவியாகும்போது தவிர, சூக்ஷும உலகத்திலிருக்கும் பொருள்களை எந்த வழியிலும் பார்க்க முடியாது. மற்றபடி, ஒரு தேவன் அல்லது ஒரு ஆவி, தன்னுடன் பேச அனுமதி கொடுக்கப்பட்ட ஒரு மனிதனுடன் இருந்தாலொழிய, ஸ்தூல உலகத்தில் எதையும் பார்க்க சக்தியற்றதாயிருக்கிறது. ஏனென்றால், மனிதனுடைய கண்கள், ஸ்தூல உலகத்தின் வெளிச்சத்தை ஏற்றுக்கொள்ள தகுதியாயிருக்கின்றன; தேவர்களுடையவும், ஆவிகளுடையவும் கண்கள் சூக்ஷும உலகத்தின் வெளிச்சத்தை ஏற்றுக்கொள்ள தகுதியாயிருக்கின்றன; அப்படியிருந்தாலும், இருவகையானவர்களின் கண்கள், பிரத்தியட்சமாய் முழுமையும் ஒரே மாதிரி இருக்கின்றன. சூக்ஷும உலகமானது அவ்விதமானதென்று, ஸ்தூல மனிதன் கிரகிக்க முடியாது; தன்னுடைய சரீர கண்களால் பார்ப்பதையும், தன்னுடைய கைகளால் தொடுவதையும், ஆகையினால், பார்வையாலும் பரிசத்தினாலும் எடுத்துக்கொள்வதைத் தவிர, வேறு எதையும் நம்பாத இந்திரிய சம்பந்தமான மனிதனால் கொஞ்சம்கூட கிரகிக்க முடியவே முடி

யாது. அந்த பொருள்களிலிருந்து அவன் நினைக்கிறபடியினால், அவனுடைய சிந்தனையானது சூக்குமமானதல்லாமல், ஸ்தூலமானதாயிருக்கிறது. சூக்கும உலகத்திற்கும், ஸ்தூல உலகத்துக்கும் ஒப்பனை இவ்விதமாயிருப்பதினால், மனிதனானவன் இறந்த பிறகு, தான் பிறந்ததும், அதை விட்டுவிட்டு வந்ததுமான உலகத்தில் தான் இல்லையென்று நம்பமுடியாது. இந்த காரணத்துக்காக, மரணமென்பது, ஒரு உலகத்திலிருந்து அதைப்போன்ற மற்றதற்கு, இடம் பெயர்ச்சியாக மாத்திரம் இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. இரண்டு உலகத்திற்கும் அவ்வித ஒப்பனை இருக்கிறதென்பது, சுவர்க்கத்தின் பிரதிநிதிகளும் தோற்றங்களும் சொல்லப்படுகிற மேல்வரும் நெம்பர் 170-முதல் 176-வரையில் பார்க்கப்படலாம்.

**583.** சுவர்க்கங்கள் சூக்கும உலகத்தின் அதிக உயர்ந்த பாகங்களில் இருக்கின்றன; அதிக தாழ்ந்த பாகங்களில், ஆவிகள் உலகம் இருக்கிறது; எல்லாவற்றிற்கும் கீழே, நரகங்கள் இருக்கின்றன. சுவர்க்கங்கள், சில சமயங்களில் மூடுபனிகள் அல்லது பிரகாசமான மேகங்களாக பார்க்கப்பட்டாலும், அவைகளின் உள்ளான பார்வை திறக்கப்பட்டபோது மாத்திரம், ஆவிகளின் உலகத்தில் இருக்கும் ஆவிகளுக்கு புலப்படுகின்றன. சுவர்க்கத்து தேவர்கள், விவேகத்தினுடையவும் ஞானத்தினுடையவும் உள்ளான நிலைமையில், இவ்விதமாக ஆவிகள் உலகத்தில் இருக்கிறவர்களின் பார்வைக்கு மேலாக இருக்கிறார்களென்பது காரணமாயிருக்கிறது. ஆனால், மைதானங்களிலும் பள்ளத்தாக்குகளிலும் வசிக்கும் ஆவிகள் ஒருவரை ஒருவர் பார்க்கின்றனர்; என்றாலும், அவைகளின் உள்ளானவைகளில் விடப்படுவதினால், இவ்விதமாக அவைகள் பிரிக்கப்பட்டபோது, கெட்ட ஆவிகள் நன்மையை அறிந்துக்கொள்ளுகிறதில்லை. நல்ல ஆவிகள் தீமையைப் பார்க்கக் கூடும்; ஆனால் அவைகள் அவைகளை விட்டுவிட்டு திரும்பி விடுகின்றன; அப்படி தாங்களே திரும்பிகொள்ளும் ஆவிகள் கண்களுக்கு புலப்படாமல் போகின்றன. நரகங்கள்கூட, அவைகள் மூடப்பட்டிருப்பதினால் பார்க்கப்படுகின்றதில்லை. இதரா அதே விதமான ஆவிகள் உள்ளே விட அவைகள் திறக்கப்படும்போது, வாயல்கள் என்று சொல்லப்படுகிற உட்பிரவேசங்கள் பார்க்கப்படுகின்றன. நரகத்துக்கு செல்லும் எல்லா வாயல்களும், சுவர்க்கத்திலிருந்து எதுவும் அல்லாமல், ஆவிகள் உலகத்திலிருந்து திறக்கின்றன.

**584.** நரகங்கள், மலைகளுக்கும், குன்றுகளுக்கும், பாறைகளுக்கும், அதனுடன்கூட, மைதானங்களுக்கும், பள்ளத்தாக்குகளுக்கும் கீழே எவ்விடத்திலுமிருக்கின்றன. மலைகளுக்கும், குன்றுகளுக்கும், பாறைகளுக்கும் கீழேயிருக்கும் நரகங்களின் துவாரங்கள் அல்லது வாயில்கள், பார்வைக்கு பாறைகளின் துவாரங்களையும் வெடிப்புகளையும்போல் தோன்றுகின்றன; சிலது அகன்றும் பெரியதாயும், சிலது நெருக்கமாயும் ஒடுக்கமாகவும், அவைகளில் அநேகம் கரடுமுரடாகவும் நீட்டப்பட்டிருக்கின்றன. உள்ளே பார்த்தால் அவைகள் எல்லாம் இருண்டும், மங்கலாகவும் தோன்றுகின்றன; ஆனால், அவைகளுக்குள்ளிருக்கும் நரகத்து ஆவிகள், அவைகளுடைய கண்கள் ஏற்றுக்கொள்ள தகுதியாயிருக்கிற, எரிந்துகொண்டிருக்கும் மரக்கரியிலிருந்து உண்டாகிறதைப்போன்ற, ஓர் வெளிச்சத்தில் இருக்கின்றன. ஏனென்றால், அவைகள் உலகத்திலிருந்த காலத்தில், தெய்வீக உண்மைகளை மறுத்ததினால், அந்த உண்மைகள் விஷயத்தில், அவைகள் நள்ளிருளிலும், பொய்களை உறுதிபடுத்துவதினால், பொயகள் விஷயத்தில் ஓர் வித வெளிச்சத்திலும் இருந்தன. இந்தமாதிரியாக, அவைகளின் கண்களின் பார்வை, அந்த வெளிச்சத்துக்கு பொருத்தமாய்விட்டது. அதே காரணத்துக்காக, சுவர்க்கத்து வெளிச்சம் அவைகளுக்கு நள்ளிருளாயிருக்கிறது; ஆகையினால், தங்கள் குகைகளைவிட்டு அவைகள் போகும் காலத்தில் எதையும் பார்க்கிறதில்லை. இவைகளிலெல்லாமிருந்து, ஒரு மனிதனானவன் தெய்வத்தை ஒத்துக்கொள்ளுகிற அளவு சுவர்க்கத்து வெளிச்சத்துக்குள் வந்து, சுவர்க்கத்தினுடையவும் திருச்சபையினுடையவும் விஷயங்களை தன்னிலேயே உறுதிபடுத்திக் கொள்ளுகிறானென்றும், அவன் தெய்வத்தை மறுக்கிற அளவு நள்ளிருளில் பிரவேசித்து, சுவர்க்கத்துக்கும் திருச்சபைக்கும் விஷயங்களை தன்னிலேயே உறுதிபடுத்திக்கொள்ளுகிறானென்றும், வெகு தெளிவாய் விசதமாக்கப்பட்டது.

**585.** மைதானங்களுக்கும் பள்ளத்தாக்குகளுக்கும் கீழேயிருக்கும் நரகங்களின் துவாரங்கள் அல்லது வாசல்கள், பற்பல உருவங்களாக தோன்றுகின்றன. சிலது மலைகளுக்கும், குன்றுகளுக்கும் பாறைகளுக்கும் கீழே இருப்பவைகளைப்போலவும், சிலது குகைகளையும் கெபிகளையும்போலவும், சிலது பெரிய வெடிப்புகளையும் நீர்ச்சுழிகளையும்போலவும், சிலது சதுப்புகளைப்போலவும், மற்றவைகள் பாயாத நீர் தடாகங்களைப்போலவும் இருக்கின்றன.

எல்லாம் மூடப்பட்டிருக்கின்றன ; ஆவிகள் உலகத்திலிருந்து, தீய ஆவிகள் அங்கே தள்ளப்பட்டபோது தவிர அவைகள் திறக்கப்படு கிறதில்லை ; அவைகள் திறக்கப்பட்டபோது, அவைகளிலிருந்து, எரிந்துகொண்டிருக்கும் கட்டடங்களிலிருந்து, காற்றில் பார்க்கப் படும் நெருப்பையும் புகையையும் போலவும், அல்லது புகையில்லாத சுவாலையைப்போலவும், அல்லது எரியும் தூமவாகியிலிருந்து வரு கின்ற ஒட்டறைபோலவும்,அல்லது மூடுபனியைப்போலவும் தடித்த மேகத்தைபோலவும், எதோ ஒன்று அவைகளிலிருந்து வெளியே வருகின்றன. நரகத்து ஆவிகள் இன்பங்களை பார்க்கிறதில்லை என் றும் அல்லது உணருகிறதில்லை என்றும் நான் கேழ்விப்பட்டிருக் கிறேன்; ஏனென்றால், அவைகள் அவைகளில் இருக்கும் காலத்தில் தங்களுடைய சொந்த இடத்தில் இருந்துகொண்டு, இவ்விதமாகத் தங்களுடைய வாழ்வின் சந்தோஷத்திலிருக்கின்றன ; நெருப்பு, அருவருப்புக்கும் பழிவாங்குதலுக்கும், புகையும் ஒட்டறையும் அதிலிருந்துவரும் பொய்களுக்கும் சுவாலை தன்னை நேசித்தலின் தீமைகளுக்கும், மூடுபனி அல்லது அடர்ந்த மேகம் அந்த அன்பி லிருந்து வரும் பொய்களுக்கும், அனுவயப்படுகிறதினால் இவை கள் எல்லாம் தாங்கள் இருக்கப்பட்ட தீமைகளுக்கும் பொய்களுக் கும் அனுவயப்படுகின்றனவென்பது இதற்கு காரணமாயிருக் கிறது.

**586.** நரகங்களைப் பார்த்து,அவைகள் உள்ளே எவ்விதமான இடங்களாக இருக்கின்றனவென்று பார்க்க எனக்கு அனுமதி கொடுக்கப்பட்டது ; ஏனென்றால், ஆண்டவர் பிரியப்பட்டபோது, மேலே இருக்கப்பட்ட ஒரு ஆவி அல்லது தேவனுடைய பார்வை யானது, அவைகளின் போர்வைகள் எப்படியிருந்தாலும், பார் வையினால் கீழே இருக்கும் பாதாளங்களுக்குள் சென்று, அவை களின் குணத்தை பரிசோதிக்கலாம். இந்த விதமாக அவைகளுக் குள் பார்க்க எனக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. நரகங்களில் சிலது பார்வைக்கு உள்ளேயும், பிறகு வளைவாய் அல்லது உச்ச மாய் ஒரு பாதாளத்துக்குள் கீழேயும், விரிந்திருக்கிற பாறைகளி லிருக்கும் கெபிகளையும் குகைகளையும்போல் பார்வைக்கு தோன் றின. நரகங்களில் சிலது காடுகளிலிருக்கும் காட்டு மிருகங்கள் குடியிருக்கும் குகைகளையும் கெபிகளையும்போல் தோன்றின ; சிலது, கீழே திறக்கும் கெபிகளுடன் இருக்கும் கனிகளில் பார்க்கப் படும், வில் வளைவாய்க்கட்டப்பட்டிருக்கும் கெபிகளையும் வழிகளை

யும் போலிருந்தன. நரகங்களில் அநேகம், மும்மடங்கானது; மேலே இருக்கப்பட்டவைகள், தீமையின் பொய்களில் இருக்கப்பட்டவர்களால், வாசம் பண்ணப்படுகிறபடியினால், உள்ளே கள்ளிருளால் நிறைந்திருப்பதாக தோன்றுகின்றன; ஆனால், கீழே இருக்கப்பட்டவைகள், தீமைகளாகவே இருக்கப்பட்டவர்களால் வாசம் செய்யப்படுகிறபடியினால், தீயுள்ளதாய் தோன்றுகின்றன; ஏனென்றால், கள்ளிருள் தீமையின் பொய்களுடன் அன்னுவயப்படுகின்றது. நெருப்பு தீமைகளுடனேயே அன்னுவயப்படுகின்றது. அதிக ஆழமான நரகங்களில், தீமையிலிருந்து உள்ளுக்குள்ளாய் செயல்பட்டவர்கள் இருக்கிறார்கள்; ஆனால், இன்னும் குறைந்த ஆழமான நரகங்களில், தீமையிலிருந்து, அதாவது தீமையின் பொய்களிலிருந்து, புறம்பாய் செயல்பட்டவர்கள் இருக்கிறார்கள். சில நரகங்களில், நரகத்து பேய்கள் மறைந்துகொண்டு வசிக்கிற, தகனத்துக்குபின் நிற்கும் வீடுகளுடையவும் நகரங்களுடையவும் சேதங்கள் பார்க்கப்படுகின்றன. மிக மிருதுவான நரகங்களில், சந்துகளையும் தெருக்களையுமுடைய ஒரு நகரத்தைப்போல், சிலது அடுத்தும், துடினமான குடிசைகள் காணப்படுகின்றன. வீடுகளுக்குள் நரகத்து பேய்கள், தொடர்ச்சியான கலகங்களிலும், விரோதங்களிலும், அடிகளிலும், போர்களிலும் உடன்படுகின்றன; தெருக்களிலும் சந்துகளிலும், கொள்ளைகளும், அழிவுகளும் செய்யப்படுகின்றன. சில நரகங்களில், பார்வைக்கு அசங்கியமானதும், எல்லாவித அழுக்குகளாலும் நரகல்களாலும், நிறைந்ததுமான வேசி வீடுகள் தவிர வேறொன்றுமில்லை. நரகத்து பேய்கள் காட்டு மிருகங்களைப்போல் திரிகிறதும், மற்றவர்களால் தொடரப்பட்டவைகள், ஓடிப்போகிறதுமான பூமிக்கு கீழ் இருக்கும் குகைகளும்கூட உள்ள அடர்ந்த காடுகளுமிருக்கின்றன. எல்லாம் பாழாயும், மணலுள்ளதாயுமிருக்கிறதும், சில இடங்களில் கெபிகள் உள்ள உடைந்த பாறைகளும், மற்ற இடங்களில் குடிசைகளும் பாலைவனங்களும் கூட விருக்கின்றன. தண்டனை நிர்பந்தத்தை சகித்த ஆவிகள், இந்த பாலைவனங்களுக்குள், நரகங்களிலிருந்து தள்ளப்படுகின்றன; முக்கியமாய், உலகத்திலிருந்த காலத்தில் தந்திரங்களையும் மோசங்களையும்பற்றி யுக்தி செய்வதிலும், சூழ்ச்சி பண்ணுவதிலும் மற்றவைகளைவிட அதிக தந்திரமுள்ளவைகளாய் இருந்தவைகள், அப்படி தள்ளப்படுகின்றன. அவைகளுடைய கடைசி நிலைமை அவ்வித வாழ்க்கையாயிருக்கிறது.

**587.** நரகங்கள் இருக்கும் இடத்தின் வரலாறு, சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களுக்குகூட, முழுமையும் தெரிந்திராத ஒரு விஷயமாயிருக்கிறது; அது ஆண்டவருக்கு மாத்திரம் தெரியும். ஆனால், அது சாதாரணமாக இருக்கப்பட்ட இடம், அவைகள் இருக்கும் திக்குகளிலிருந்துதெரிந்துகொள்ளப் படுகிறது. ஏனென்றால், சுவர்க்கங்களைப் போல்நரகங்களும், அவைகள் இருக்கும்திக்குகளிலிருந்து, வகையறுக்கப்படுகின்றன; சூக்கும உலகத்தில் திக்குகள் அன்புகளை அனுசரித்து நிர்மானிக்கப்படுகின்றன; ஏனென்றால், சுவர்க்கத்திலெல்லா திக்குகளும், கிழக்காயிருக்கிற சூரியனுயிருக்கும் ஆண்டவரிடம் ஆரம்பிக்கின்றன; மேலும் நரகங்கள் சுவர்க்கங்களுக்கு எதிரிலிருப்பதினுல், அவைகளின் திக்குகள் எதிரிடத்திலிருந்து அதாவது மேற்கிலிருந்து ஆரம்பிக்கின்றன. இதைப்பற்றி சுவர்க்கத்திலிருக்கும் நான்கு திக்குகளைக் குறித்து சொல்லும் அத்தியாயத்தைப் பார்க்கவும் (செ. 141 முதல் 153 வரையில்). மேற்கு திக்கிலிருக்கும் நரகங்கள் எல்லாவற்றையும்விட மிகவும் கெட்டதாகவும், மிகவும் பயங்கரமானதாகவும் இருப்பதற்கும், அவைகள் கிழக்கு திக்குக்கு எவ்வளவு தூரத்திலிருக்கிறதோ அவ்வளவு மிகவும் 'கெட்டதாயும், அதிக பயங்கரமானதாயும் படிப்படியாய் இருப்பதற்கும் இதுதான் காரணம். இந்த நரகங்களில், தன்னையே நேசித்தலிலும், அதனுல் மற்றவர்களை அலட்சியம் செய்வதிலும், தங்களுக்கு அனுகூலம் செய்யாதவர்களுக்கு விரோதமாய் விரோதத்திலும், தங்களை பூஜித்து ஆராதனை செய்யாதவர்களுக்கு விரோதமாய் வெறுப்பிலும் பழிவாங்குதலிலும், உலகத்திலிருந்த போது இருந்தவர்கள், இருக்கிறார்கள். இந்த திக்கில் அதிக தூரமான நரகங்களில், ரோமன் காதோலிக் சமயம் என்று சொல்லப்பட்ட சமயத்தை சேர்ந்திருந்து, கடவுளர்களாக ஆராதிக்கப் படவிரும்பி, ஆகையினுல் மனிதர்களுடைய ஆன்மாக்கள் பேரிலும், சுவர்க்கத்தின் பேரிலும், தங்கள் அதிகாரத்தை ஒத்துக்கொள்ளாத எல்லாருக்கும் விரோதமாய், வெறுப்பிலும் பழிவாங்குதலிலும் எரிந்து கொண்டிருந்தவர்கள் இருக்கிறார்கள். பூமியிருக்கும்போது அவைகளை வகையறுத்த குணத்தை அதாவது தங்களை எதிர்க்கிறவர்கள் பேரில் அதே மாதிரியான வெறுப்பையும் பழிவாங்குதலையும், நரகத்திலிருக்கும் போதும் கூட அவைகள் வளர்க்கின்றன. அவைகளின் மிகவும் பெருத்த இன்பம் குரூரமான செயல்களில்

இருக்கிறது; ஆனால், இந்த இன்பமானது, மறுமையில் தங்களுக்கே விரோதமாக திருப்பப்பட்டிருக்கிறது; ஏனென்றால், மேற்கு திக்கு நிறைந்திருக்கிற அவைகளின் நரகங்களில், ஒவ்வொன்றும் தன்னுடைய தெய்வீக அதிகாரத்திலிருந்து தாழ்த்துகிற மற்ற ஒவ்வொன்றின்பேரிலும் கோபிக்கின்றது. ஆனால், இந்த விஷயத்தைப் பற்றி, கடைசி தீர்ப்பைப்பற்றியும் பாபிலோன் அழித்ததைப்பற்றியும் எழுதிய சிறிய நூலில் அதிகம் சொல்லப்படும். அவ்விதமான மிகவும் பயங்கரமான நரகங்கள் வடக்கு திக்கில் பக்கங்களில் இருக்கின்றனவென்பதும், குறைந்த பயங்கரமானவைகள் தெற்கு திக்கில் இருக்கின்றனவென்பதும் தவிர, அந்த திக்கில் நரகங்கள் ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கிற மாதிரி தெரிந்துகொள்ளப்பட முடியாது. இவ்விதமாக நரகங்களின் பயங்கரம் வடக்கு திக்கிலிருந்து தெற்குக்கும், அதனுடன்கூட கிழக்குக்கும் படிப்படியாய் குறைகிறது. அகந்தையுள்ளவர்களாய் தெய்வத்தை, நம்பாமல், அப்படியிருந்தபோதிலும், அவ்வித வெறுப்பிலும் பழிவாங்குதலிலும், அவ்வித மோசத்திலும், மேற்கு திக்கின் ஆழமான இடங்களில் இருக்கிறவர்களைப்போல் இல்லாமலிருந்தவர்கள், கிழக்கு திக்கில் இருக்கிறார்கள் தற்காலத்தில் கிழக்கு திக்கில், அங்கே இருந்தவர்கள், எதிரிலிருக்கும் மேற்கு திக்குக்கு மாற்றப்பட்டபடியினால், நரகங்கள் இல்லை. வடக்கு திக்குகளிலும், தெற்கு திக்குகளிலும் இருக்கும் நரகங்கள் அநேகமாயிருக்கின்றன; அவைகளில், பூமியின்பேரில் வாழ்ந்த காலத்தில், உலகத்தை நேசித்தலிலும், அதிலிருந்து விரோதம், பகை, திருடு, கொள்ளை, தந்திரம், பொருளாசை, இரக்கமின்மைபோன்ற பலவித தீமைகளில் இருந்தவர்கள் இருக்கிறார்கள். அவ்விதமாக மிகவும் கெட்ட நரகங்கள் வடக்கு திக்கிலும், மிதமானவைகள் தெற்கிலும் இருக்கின்றன. அவைகளின் பயங்கரம், மேற்கு திக்குக்கு அதிக சமீபத்திலும், தெற்கு திக்குக்கு அதிக தூரத்திலும், அவர்கள் இருக்கிறதற்கு தக்கபடி அதிகரிக்கிறது; அது கிழக்கு திக்கு பக்கமும், தெற்குதிக்கு பக்கமும் குறைகிறது. மேற்கு திக்கிலிருக்கும் நரகங்களுக்கு பின்னால், வன்மமுள்ள ஆவிகள் காட்டுமிருகங்களைப்போல் திரிகிற இருண்ட காடுகள் இருக்கின்றன; வடக்கு திக்கிலிருக்கும் நரகங்களுக்கு பின்னால், அவ்விதமான காடுகள்கூட இருக்கின்றன; ஆனால், தெற்கு திக்கிலிருக்கும் நரகங்களுக்கு பின்னால், முன்கூறிய பாலை வனங்கள் இருக்கின்றன, நரகங்கள் இருக்கும் இடத்தைப் பற்றி இவ்வளவு போதும்.

**588.** நரகங்களின் எண்ணைப்பற்றி, சுவர்க்கங்களில் தேவர்கள் கூட்டங்கள் இருக்கிறதுபோல அவ்வளவு அநேக மிருக்கின்றன; ஏனென்றால், ஒவ்வொரு சுவர்க்கத்து கூட்டத்துக்கும் அதற்கு எதிரிடையாக, அதற்கு ஏற்ற நரகத்து கூட்டமிருக்கிறது. சுவர்க்கத்து கூட்டங்கள் கணக்கற்றவைகள் என்பதும், அவைகள் எல்லாம், அன்பினுடையவும், தருமத்தினுடையவும், விசுவாசத்தினுடையவும் நன்மைகளுக்கு தக்கபடி, வேறு வேறானதாயிருக்கின்றனவென்பதும், சுவர்க்கம் அமைந்திருக்கிற கூட்டங்களைப்பற்றி பேசும் அதிகாரத்திலும் (செ. 41 முதல் 50 வரையில்), சுவர்க்கத்தின் எல்லை இன்மையைப்பற்றி பேசும் அதிகாரத்திலும் (செ. 415 முதல் 420), பார்க்கப்படலாம். ஆகையினால், அந்த நன்மைகளுக்கு எதிரிடையாயிருக்கிற தீமைகளுக்குத் தக்கபடி வகையறுக்கப்படுகிற நரகத்து கூட்டங்கள் விஷயத்தில் அது அதே மாதிரி யிருக்கிறது. ஒவ்வொரு தீமையும், ஒவ்வொரு நன்மையைப்போல முடிவற்ற விகற்பங்களை அடக்குகிறது; ஆனால், அலக்ஷியம், விரோதம் வெறுப்பு, பழி வாங்குதல், மோசம் இவ்வித இதர தீமைகள் போன்ற, ஒவ்வொரு தீமையைப்பற்றியும், இலேசான அபிப்பிராயத்தை மாத்திரம் உடையவர்களால், இது கிரகிக்கபட முடியாது; ஆனால், ஒரு புஸ்தகமேகூட, அவைகளைக் கணக்கிட போதாதபடி, இந்தத்தீங்குகள் ஒவ்வொன்றும், அவ்வளவு அநேக குறிப்பான வித்தியாசங்களையும், மறுபடியும் இவைகள் ஒவ்வொன்றும் அவ்வளவு அநேக இதர குறிப்பான அல்லது தனித்த வித்தியாசங்களையும் அடக்குகிறதென்று அவர்களுக்கு தெரிந்திருக்கட்டும். வேறு ஒன்றும் அதிக சம்பூரணமாய் ஒழுங்குபடுத்தப்பட்டிராதபடிக்கும் அதிக வேறு வேறாய் இல்லாதபடிக்கும், நரகங்கள் ஒவ்வொரு தீமையின் வித்தியாசங்களுக்கு தக்கபடி, ஒழுங்கில் அவ்வளவு வேறு வேறாய் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறது. இதிலிருந்துகூட, அவைகள் கணக்கற்றவைகளென்றும், அவைகளின் தீமைகளின் வித்தியாசங்களுக்குத்தக்கபடி சாமானியமாயும், குறிப்பாயும், நுட்பமாயும், அவைகள் ஒன்றுக்கொன்று சமீபமாயும், அல்லது தூரமாயும் இருக்கின்றனவென்று விசதமாகலாம். நரகங்களுக்கு கீழே நரகங்களும்கூட இருக்கின்றன. சில நரகங்களுக்கு மத்தியில், பாதைகளினாலும், அதிகமாய் ஆவியாய் போதலினாலும், வழிகள் உண்டு; ஆனால், எல்லா போக்கு வரவும், மற்ற தீமைகளுடன், தீமையின் ஒருவிதமானதும், ஒரு வகுப்பைச் சேர்ந்ததுமாகிய உறவுக்கு

தக்கபடி ஒழுங்கு படுத்தப்படுகின்றன. நரகங்களின் தொகுதி மிகவும் பெரியதாயிருக்கிறதென்பது, ஒவ்வொரு மலை, குன்று, பாறை, இவைகளின் கீழேயும், அதனுடன்கூட, ஒவ்வொரு மைதானத்தின் கீழேயும், பள்ளத்தாக்கின் கீழேயும் நரகங்கள் இருக்கின்றன வென்பதிலிருந்தும், நீளத்திலும், அகலத்திலும், ஆழத்திலும், அவைகளே கீழே விரிகின்றன என்பதிலிருந்தும், தெரிந்துகொள்ள, எனக்கு அருள் செய்யப்பட்டது. ஒரு வார்த்தையில் சொன்னால், முழு சுவர்க்கமும், முழு ஆவிகள் உலகமும் கீழே தோண்டப்பட்டிருக்கின்றன; அவைகளுக்குக் கீழே ஒரு தொடர்ச்சியான நரகமிருக்கிறது. நரகங்களின் தொகுதியைப்பற்றி இவ்வளவுபோதும்.

## LXII

## சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் இடையிலிருக்கும் சமநிலை

**589.** ஏதாவது ஒன்று நிலைத்திருக்க வேண்டுமானால், எல்லா பொருள்களின் ஒரு சமநிலை இருக்கவேண்டும். சமநிலை இல்லாமல், செயலும் இல்லை, எதிர்தாக்கமுமில்லை; ஏனென்றால், சமநிலை என்பது, ஒன்று செயல்படுகிறதும் மற்றது எதிர் தாக்குகிறதுமான, இரண்டு பலாத்காரங்களுக்கு மத்தியிலிருக்கிறது; அவ்வித செயலினாலும், எதிர் தாக்கத்தினாலும் உண்டாக்கப்படுகிற மற்றவைகள், சமநிலை என்று சொல்லப்படுகிறது. ஸ்தூல உலகத்தில் எல்லா பொருள்களிலும், அதனுடன்கூட ஒவ்வொரு குறிப்பான பொருளிலும் ஒரு சமநிலை இருக்கிறது. பொதுவாக, காற்றுகள் சமநிலையில் இருக்கின்றன; அவைகளில், அதிக தாழ்ந்தது, அதிக உயர்ந்தது செயல்பட்டு, கீழே நெருக்குகிறதற்கு தக்கபடி எதிர்தாக்கி தடுக்கிறது. ஸ்தூல உலகத்தில் கூட, மத்திய நிலைமை அவைகளின் சம நிலையாயிருப்பதினால், சூட்டிற்கும், குளிர்ச்சிக்கும், வெளிச்சத்திற்கும், நிழலுக்கும், உலர்வுக்கும், ஈரத்துக்கும் மத்தியில் ஒரு சமநிலை இருக்கிறது. தாதுவர்க்கம், விருக்ஷவர்க்கம், பிராணி வர்க்கம் என்கிற இயற்கையின் மூன்று வர்க்கங்களுடைய எல்லா பொருள்களிலும்கூட, ஒரு சமநிலை இருக்கிறது; ஏனென்றால், அவைகளில் சமநிலை இல்லாவிட்டால், எதுவும் நிற்கிறதுமில்லை அல்லது பிழைக்கிறதுமில்லை. ஏனென்றால், எவ்விடத்திலும், ஒரு பக்கத்தில் செயல்படுகிறதும், மற்ற பக்கத்தில் எதிர் தாக்குகிறதுமாகிய ஒருவித முயற்சியிருக்கிறது. எல்லா இருப்பும், அதாவது ஒவ்வொரு காரியமும், சமநிலையில் உண்டாக்கப்படுகிறது; மேலும், அது ஒரு சக்தி செயல்படுதலினாலும், மற்ற ஒன்று செயல்படதானே விடுவதினாலும், அல்லது ஒரு சக்தி செய்கையினால் உள்ளே பாய்வதினாலும், மற்றொன்று அதை ஒத்து ஏற்றுக்கொண்டு உடன் படுவதினாலும் உண்டாக்கப்படுகிறது. ஸ்தூல உலகத்தில், செயல்படுகிறதும், எதிர்தாக்குகிறதும் சக்தி என்றும், முயற்சி என்றும்கூட சொல்லப்படுகிறது; ஆனால், சூக்கும உலகத்தில், செயல்படுகிறதும் எதிர் தாக்குகிறதும் உயிரென்றும், சித்தமென்றும் சொல்லப்படுகிறது. அந்த உலகத்தில் உயிரென்பது உயிருள்ள

சக்தியாயும், சித்தமென்பது உயிருள்ள முயற்சியாயுமிருக்கிறது; சமநிலையே, சுவேச்சை என்று சொல்லப்படுகிறது. ஆகையினால், சூக்கும சமநிலை அல்லது சுவேச்சை என்பது, ஒரு பக்கத்தில் நன்மை தாக்குவதற்கும், தீமை மற்ற பக்கத்தில் எதிர்தாக்குவதற்கும், மத்தியிலும், அல்லது தீமை ஒரு பக்கத்தில் தாக்குவதற்கும், நன்மை மற்ற பக்கத்தில் எதிர் தாக்குவதற்கும், மத்தியிலும், நிலைத்து ஜீவிக்கிறது. நல்லது தாக்குவதற்கும், தீமை எதிர் தாக்குவதற்கும், மத்தியில் உள்ள சமநிலையானது நல்லவர்களிடத்தில் நிலைக்கிறது; ஆனால், தீமை தாக்குவதற்கும், நன்மை எதிர் தாக்குவதற்கும் மத்தியில்உள்ள சமநிலை கெட்டவர்களிடத்தில் நிலைக்கிறது. சூக்கும சமநிலை நன்மைக்கும் தீமைக்கும் மத்தியிலிருக்கிறது; ஏனென்றால், மனிதனுடைய சித்தமானது, அவைகளின் கொள்கலமாயிருப்பதினால், அவனுடைய முழு வாழ்வும் நன்மைக்கும் தீமைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது. நன்மைக்கும் தீமைக்கும், மத்தியிலிருக்கும் சமநிலையின்பேரில்,சார்ந்திருக்கிற உண்மைக்கும் பொய்பிக்கும் மத்தியிலிருக்கிற ஒரு சமநிலைகூட இருக்கிறது. உண்மைக்கும் பொய்யிக்கும் மத்தியிலிருக்கிற சமநிலையானது, சூடும் குளிர்ச்சியும், வெளிச்சத்திலும் நிழலிலும் இருக்கிற அளவு மாத்திரம், விருக்ஷ வர்க்க பொருள்களின் பேரில் சேட்டிக்கிற வெளிசசத்திற்கும் நிழலுக்கும் மத்தியிலிருப்பதைப்போல இருக்கிறது. வெளிச்சமும் நிழலும், தாங்களே ஒன்றையும் உண்டாக்காமல், ஆனால் அவைகளால் சூடு உண்டாக்கப்படக்கூடுமென்பது, மாரி காலத்திலும் வசந்த காலத்திலும், வெளிச்சத்திற்கும் நிழலுக்கும் மத்தியிலிருக்கும் ஒப்பனையிலிருந்து, மெய்ப்பிக்க கூடியதாயிருக்கிறது. வெளிச்சத்துடனும் நிழலுடனும், உண்மையினுடையவும் பொய்யினுடையவும் ஒப்பு அன்னுவயத்திலிருந்து வருகிறது; ஏனென்றால், உண்மையானது வெளிச்சத்திற்கும், பொய்யானது நிழலுக்கும், சூடானது அன்பின் நன்மைக்கும் அன்னுவயப்படுகிறது. சூக்கும வெளிச்சம் நிஜமாகவே உண்மையாகவும், சூக்கும நிழல் பொய்யாகவும், சூக்கும சூடு அன்பின் நன்மையாகவும் இருக்கிறது; ஆனால், இந்த விஷயமானது, சுவர்க்கத்து வெளிச்சத்தைப் பற்றியும் சூட்டைப்பற்றியும் பேசும் அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது (நெ. 126 முதல் 140 வரையில்).

**590.** சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில், ஒரு நித்திய சமநிலை இருக்கிறது. நரகத்திலிருந்து தீமைசெய்ய ஒரு

முயற்சியானது, தொடர்ச்சியாய் சுவாசமிடப்பட்டு மேலே ஏறுகிறது; நரகத்திலிருந்து நன்மை செய்ய ஒரு முயற்சியானது தொடர்ச்சியாய் சுவாசமிடப்பட்டு கீழே இறங்குகிறது. ஆவிகள் உலகமானது இந்த சமநிலையிலிருக்கிறது; அந்த உலகமானது சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில் உள்ளதா யிருக்கிறது (மேலே செ. 421—431 வரையில் பார்க்கவும்). இறந்தபிறகு ஒவ்வொரு மனிதனும், ஆவிகள் உலகத்தில் முதலில் பிரவேசித்து, உலகத்தில் அவன் இருந்ததைப்போன்ற நிலைமையில் அங்கே வைக்கப்பட்டிருக்கிறபடியினால், ஆவிகள் உலகம் அந்த சம நிலையிலிருக்கிறது; ஆனால், அங்கே மிகவும் சம்பூரணமான சமநிலை இருந்தாலொழிய, இது முடியாது. ஏனென்றால், எல்லாருடைய குணமும், உலகத்தில் தாங்கள் உடைத்தாயிருந்ததைப்போன்ற சுயாதீனத்தில் தாங்கள் விடப்படுவதில் கண்டுபிடிக்கப்படுகிறது. மனிதர்களிலும் ஆவிகளிலும் இருக்கும் சூக்கும சமநிலை, மேலே சொல்லப்பட்டபடி (செ. 589) சுயாதீனமாயிருக்கிறது. ஒவ்வொன்றினுடைய சுயேச்சையின் குணம், சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களால், தன்னுடைய ஆசைகளினுடையவும், அதனால் உண்டாகும் சிந்தனைகளினுடையவும் போக்குவரவினால், அங்கே கற்றுக்கொள்ளப்படுகிறது; அது தேவதாசம்பந்தமான ஆவிகளின் பார்வைக்கு, அது நடக்கும் வழிகளால் தோன்றுகிறது. நல்ல ஆவிகளாயிருப்பவைகள், சுவர்க்கத்துக்கு சார்கிற வழிகளில் நடக்கின்றன; ஆனால், தீமையான ஆவிகள் நரகம் சார்கிற வழிகளில் நடக்கின்றன. வழிகள் அந்த உலகத்தில் நிஜமாய் பார்க்கப்படுகின்றன; ஆகையினால், வேதத்தில் "வழிகள்" என்பது நன்மைக்கு நடத்துகிற உண்மைகளையும் எதிரான அருத்தத்தில், தீமைக்கு நடத்துகிற பொய்களையும் கருதுகின்றன. அதனால்கூடதான் வேதத்தில் போகிறதும், நடத்தலும், பிரயாணம் செய்தலும் வாழ்க்கையின் போக்குகளை கருதுகின்றன. அந்த வழிகளையும், அதேமாதிரி அவைகளின்பேரில் தங்கள் ஆசைகளின்படிக்கும், அதிலிருந்து வந்த அவர்களின் சிந்தனைகள்படிக்கும், போய்கொண்டும் நடந்துகொண்டுமிருக்கும், ஆவிகளையும் பார்க்க எனக்கு அடிக்கடி அருள்செய்யப்பட்டது.

**591.** தீமையானது, நரகத்திலிருந்து தொடர்ச்சியாய் மூச்சுவிட்டு, மேலே ஏறுகிறது; நன்மையானது சுவர்க்கத்திலிருந்து மூச்சுவிட்டு கீழே இறங்குகிறது; ஏனென்றால், ஒரு சூக்கும கோளம், ஒவ்வொருவனையும் சூழ்ந்திருக்கிறது; அந்த கோளமானது, ஆசை

களுடையவும், அதிலிருந்துவரும் சிந்தனைகளுடையவும் உயிரிலிருந்து பாய்ந்து கொட்டுகிறது; அவ்விதமான உயிரின் கோளமானது, ஒவ்வொன்றினிடமிருந்தும் பாய்கிறபடியினால்கூட, அது ஒவ்வொரு சுவர்க்க கூட்டத்திலிருந்தும், ஒவ்வொரு நரக கூட்டத்திலிருந்தும், அதனால், அந்த எல்லா கூட்டங்களிலுமிருந்தும், அதாவது முழு சுவர்க்கத்திலிருந்தும், முழுநரகத்திலிருந்தும், அது பாய்கிறது. நன்மையானது சுவர்க்கத்திலிருந்து வடிகிறது; ஏனென்றால், சுவர்க்கத்திலிருக்கும் எல்லாரும் நன்மையிலிருக்கிறார்கள்; மேலும், தீமையானது நரகத்திலிருந்து ஒழுகுகிறது. நரகத்திலிருக்கும் எல்லாரும் தீமையிலிருக்கிறார்கள். சுவர்க்கத்திலிருந்துவரும் நன்மையானது எல்லாம் ஆண்டவரிடமிருந்து வருகிறது; ஏனென்றால், சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்கள், தங்கள் சொந்த தன்மையிலிருந்து பின் வைக்கப்பட்டு, நன்மையாகவே இருக்கிற ஆண்டவரின் சொந்த தன்மையில் வைக்கப்படுகின்றன. ஆனால், நரகங்களிலிருக்கும் ஆவிகள் எல்லாம், தங்கள் சொந்த தன்மையிலிருக்கின்றன; ஆனால், ஒவ்வொருவனுடைய சொந்த தன்மையும், தீமையைத் தவிர வேறு ஒன்றுமில்லை; அது தீமையைத் தவிற வேறு ஒன்றுமில்லாதபடியினால், அது நரகமாயிருக்கிறது. ஆகவே, சுவர்க்கங்களில் தேவர்களும், நரகங்களில் ஆவிகளும் வைக்கப்பட்ட சம நிலையானது, ஆவிகள் உலகத்திலிருக்கும் சம நிலையைப் போன்றதல்லவென்பது, விசதமாகலாம். சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்களின் சம நிலையானது, நன்மையிலிருக்க தாங்கள் மனமுள்ளவர்களாயிருந்த அளவு, அல்லது உலகத்தில் நன்மையில் தாங்கள் வாழ்ந்த அளவு, இவ்விதமாக தீமையை வெறுப்பில் வைத்த அளவு நிலைக்கிறது; ஆனால், நரகத்திலிருக்கும் ஆவிகளின் சம நிலையானது, தீமையிலிருக்கும் தாங்கள் மனமுள்ளவர்களாயிருந்த அளவு, அல்லது உலகத்தில் தீமையில் தாங்கள் வாழ்ந்த அளவு, இவ்விதமாக இருதயத்திலும் ஆவியிலும் நன்மைக்கு எதிரிடையாயிருந்த அளவு நிலைக்கிறது.

**592.** ஆண்டவர் சுவர்க்கங்களையும் நரகங்களையும் அரசாட்சி செய்தாலொழிய, யாதொரு சம நிலையும் இருக்காது; யாதொரு சம நிலையுமில்லாவிட்டால், சுவர்க்கமும் நிலைக்காது, நரகமும் நிலைக்காது; ஏனென்றால், ஸ்தூல உலகத்திலாவது சூக்கும உலகத்திலாவது, பிரபஞ்சத்தில் எல்லா பொருள்களும், சம நிலையினால் நிலைகொள்ளுகிறது. இதுதான் உண்மை என்பதை ஒவ்வொரு

பகுத்தறிவுள்ள மனிதனும் அறிந்துகொள்ளலாம்; ஏனென்றால், ஒரு பாகத்தின்பேரில் அதிபாரம் இருந்து, மற்றதில் எதிர்ப்பு இல்லாவிட்டால், இரண்டும் நாசமடையும் என்பதை பார்ப்பது சாதாரவாயிருக்கிறது. இவ்விதமாக, சூக்கும உலகமானது, நன்மையானது தீமைக்கு விரோதமாக எதிர் தாக்கி, அதன் கலகத்தை தொடர்ச்சியாய் அடக்காவிட்டால், நாசமடையும்; மேலும், தெய்வம்மாத்திரமே இதை செய்தாலொழிய, சுவர்க்கமும் நரகமும், அழிந்துபோகும்; அவைகளுடன் முழுமானிட ஜாதியும் அழிந்துபோகும்; ஒரு தேவனிடமாவது, ஆவியினிடமாவது, மனிதனிடமாவது, இருக்கும் சொந்த தன்மை தீமையைத் தவிர வேறொன்றுமில்லாதபடியினால், "தெய்வமே செய்தாலொழிய" என்று சொல்லப்பட்டிருக்கிறது (மேலே தெ. 591 பார்க்கவும்). ஆகையினால், எந்த தேவர்களுக்கும் ஆவிகளுக்கும் நரகங்களிலிருந்து தொடர்ச்சியாய் வரும் தீமைகளை கொஞ்சம்கூட எதிர் தாக்க சக்தியில்லை; ஏனென்றால், அவைகளுடைய சொந்த தன்மையிலிருந்து, அவைகள் எல்லாம் நரகம் பக்கம் சாய்கின்றன. இவைகளிலிருந்து, சுவர்க்கங்களையும், நரகங்களையும் ஆண்டவரே அரசாட்சி செய்தாலொழிய, எவனும் எப்பொழுதும் இரக்ஷிக்கப்பட மாட்டானென்பது விசதமாகிறது. இதுவுமன்றி, சுவர்க்கங்களில் நன்மைகளைப்போல், நரகங்களில் தீமைகள் சேர்க்கப்பட்டிருக்கிறபடியினால், எல்லா நரகங்களும் ஒன்றாக செயல்படுகின்றன; ஆண்டவரிடமிருந்து தனித்து புறப்படுகிற, தெய்வம் மாத்திரமே, கணக்கற்றவைகளாயிருக்கிறதும், சுவர்க்கத்துக்கும், சுவர்க்கத்திலிருப்பவர்களுக்கும், விரோதமாய் செயல்படுகிற எல்லா நரகங்களையும், எதிர் தாக்க சக்தியுள்ளதாயிருக்கிறது.

**593.** சுவர்க்கங்களுக்கும் நரகங்களுக்கும் மத்தியிலிருக்கும் சமநிலையானது, பிரதிதினமும் அநேக ஆயிரங்கள் கணக்காகிற, சுவர்க்கத்திற்குள் பிரவேசிக்கிறவர்களுடைய கணக்குக்கும், நரகங்களிலே பிரவேசிக்கிறவர்கள் கணக்குக்கும் தக்கபடி, ஏதோ ஒரு வழியில் இயக்கப்படுகிறது. ஆனால், நிலுவை எந்த பக்கம் சாய்கிறதென்பதை தெரிந்து உணர்தலும், அதை ஒழுங்குபடுத்தி சமனுக்குதலும், ஆண்டவரை மாத்திரம் தவிர எந்த தேவனுடைய சக்தியிலுமில்லை; ஏனென்றால், ஆண்டவரிடமிருந்து புறப்படும் தெய்வமானது, நிலுவையானதே நிலைத்தன்மையினால், சர்வவியாபகமாயிருந்து, எல்லா திக்குகளிலும் பார்க்கிறது; அப்படியிருக்க, ஒரு

தேவனானவன், தனக்கு சமீபத்தில் இருப்பதை மாத்திரம் பார்க்கிறான்; தன்னுடைய சொந்த கூட்டத்தில்கூட நடப்பதைப்பற்றித் தனக்குள்ளே ஒன்றையும் உணராதவனாயிருக்கிறான்.

**594**. எல்லாரும், கூட்டமாயும் ஒவ்வொருவராகவும், தங்களுடைய சமநிலையிலிருக்கும்பொருட்டு, சுவர்க்கங்களிலும் நரகங்களிலும், எல்லா பொருள்களும் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிற விதம், சுவர்க்கங்களையும் நரகங்களையும் குறித்து, சொல்லப்பட்டு காண்பிக்கப்பட்டதிலிருந்து, அதாவது, சுவர்க்கத்தின் எல்லா கூட்டங்களும், நன்மைகளையும், அவைகளின் மாதிரிகளையும் வேற்றுமைகளையும் அனுசரித்தும், நரகத்தின் எல்லா கூட்டங்களும், தீமைகளையும், அவைகளின் மாதிரிகளையும் வேற்றுமைகளையும் அனுசரித்தும், மிகவும் தெளிவாய் ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கின்றனவென்பதிலிருந்தும், சுவர்க்கத்தின் ஒவ்வொரு கூட்டத்திற்கும் கீழே, அதற்கு எதிரிடையான நரகத்தின் ஒரு பொருந்துகிற கூட்டம் இருக்கிற தென்பதிலிருந்தும், அவைகளின் எதிரிடையான இசைவினால், சமநிலை உண்டாகிற தென்பதிலிருந்தும், கொஞ்சம் அளவு விசதமாகலாம். ஆகையினால், ஒரு சுவர்க்கத்து கூட்டத்திற்கு கீழேயிருக்கிற எந்த நரகத்து கூட்டமும், மேற்கொள்ளாதபடிக்கும், அப்படி மேற்கொள்ள ஆரம்பித்தால், அது பலவித வழி வகைகளால் அடக்கப்பட்டு, சமநிலையின் சரியான அளவுக்கு ஒடுக்கப்படும்படிக்கும், ஆண்டவரால் தொடர்ச்சியாய் முன்னறிந்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த வழி வகைகள் அநேகம், ஆனால், நாம் சிலவற்றை மாத்திரம் சொல்லுவோம். மற்ற வழி வகைகளையும், நரகத்துக்குமேலே இருக்கும் சுவர்க்கங்களில் உபயோகப்படுத்தப்படுகிறவைகளையும் நீக்கி, இந்த வழிவகைகளில் சிலது, ஆண்டவரின் பரமசந்நிதிக்கும், மற்றவைகளுடன் ஒன்று அல்லது அதிக கூட்டங்களின் நெருங்கிய சம்பந்தத்திற்கும் சேர்க்கைக்கும், சிலது மிகுதியான நரகத்து ஆவிகளை பாலைவனங்களில் தள்ளுதற்கும், சிலது சில ஆவிகளை ஒரு நரகத்திலிருந்து மற்றதற்கு மாற்றுதலுக்கும், சிலது நரகத்திலிருப்பவைகளை, பல வழி வகைகளால் செய்யப்படுகிற ஒழுங்குக்குகொண்டு வருதலுக்கும், சிலது சில நரகங்களை அடர்த்தியானதும் தடித்ததுமான *போர்வைகளுக்குள் மறைத்தலுக்கும், அதனுடன்கூட, அவைகளை அதிக ஆழங்களில் விடுதலுக்கும், சம்பந்தப்பட்டிருக்கின்றன. எங்கும் நன்மையினுடையவும் தீமையினுடையவும் ஒரு சமநிலை இருக்கும் பொருட்டும்,

ஆகையினுல், சுவர்க்கத்துக்கும் நரகத்திற்கும் மத்தியில் அது இருக்கும் பொருட்டும், ஆண்டவர் மாத்திரம் முன் அறிந்து ஏற்பாடு செய்கிறுரென்று கொஞ்சம் அளவு தெறிந்திருக்கப்படும்பொருட்டு, இந்த விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன ; ஏனென்றுல், அந்த சமநிலையின்பேரில்தான், சுவர்க்கத்தின்பேரிலும் பூமியின்பேரிலும் இருக்கிறவர்கள் பத்திரமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

**595.** நரகங்கள் தொடர்ச்சியாய் சுவர்க்கத்தை தாக்கி, அதை அழிக்க முயற்சி செய்கின்றனவென்றும், ஆண்டவர், தங்களுடைய சொந்த தன்மையிலிருந்து வந்த தீமைகளிலிருந்து சுவர்க்கங்களிலிருப்பவர்களை தடுப்பதினுலும், தன்னிடமே யிருந்துவரும் நன்மையில் அவர்களை வைப்பதினுலும், சுவர்க்கங்களை தொடர்ச்சியாய் காப்பாற்றுகிறுரென்றும், தெரிந்திருக்கப்பட வேண்டும். ஆண்டவரின் தெய்வீகத்தை, அதனுல் சுவர்க்கத்தை அழிக்க, முயற்சிகளின் திரட்சியாய் மாத்திரம் இருக்கிற, நரகங்களிலிருந்து பாய்கிற திரட்சியைப் உணர, எனக்கு அடிக்கடி அருள் செய்யப்பட்டது. அன்றியும், கிளம்பி அழிக்கும் பொருட்டு முயற்சிகளாயிருந்த, சில நரகங்களின் கொதிப்புகளை, சில சமயங்களில் நான் பார்த்திருக்கிறேன்.

அப்படி அன்றி, சுவர்க்கங்கள் நரகங்களை எப்பொழுதும் தாக்குகிறதில்லை; ஏனென்றுல், ஆண்டவரிடமிருந்து புறப்படும் தெய்வீக திரட்சி, எல்லாரையும் இரக்ஷிக்க செய்யும் சாசுவத முயற்சியாகும்; நரகத்தில் வசிக்கிறவர்கள் எல்லாம் தீமையிலும் ஆண்டவரின் தெய்வீகத்திற்கு எதிரிடையாயிருப்பதின் நிமித்தம், அவைகளில் இருப்பவர்கள் இரக்ஷிக்கப்பட முடியாதபடியினுல், நரகங்களில் குழப்பங்கள், மற்றென்றுக்கு விரோதமாய் ஒன்று, அளவுக்கு மிஞ்சி உண்டாகாதபடி, அவைகளை தடுக்கும்பொருட்டு கூடியவரையில் அவைகள் அடக்கப்பட்டு, குரூரங்கள் சாந்தபடுத்தப்படுகின்றன. இதுகூட தெய்வீக சக்தியின் கணக்கற்ற வழி வகைகளால் செய்யப்படுகின்றன.

**596** சுவர்க்கங்கள் வகையறுக்கப்படுகிற இரண்டு இராஜ்ஜியங்கள் இருக்கின்றன. அவையாவன, பரத்துக்கு அடுத்த இராச்சியமென்றும், ஒன்று சம்பூர்ணமான இராச்சியமென்றும் இருக்கின்றன. அவைகளைப்பற்றி மேலே பார்க்கவும் (செ. 20 முதல் 28 வரையில்). அதேமாதிரி, நரகங்கள் வகையறுக்கப்படுகிற இரண்டு இராச்சியங்கள் இருக்கின்றன; அவைகளில் ஒன்று பரத்துக்கு அடுத்த

இராச்சியத்திற்கும், மற்றது ஞான சம்பந்தமான இராச்சியத்திற்கும், எதிரிடையா யிருக்கிறது. பரத்துக்கு அடுத்த இராச்சியத்திற்கு, எதிரான நரகத்துக்கு அடுத்த இராச்சியம், மேற்கு திக்கில் இருக்கிறது; அதிலிருக்கப் பட்டவர்கள் பூதகணங்கள் என்று சொல்லப்படுகிறார்கள்; ஆனால், ஞான சம்பந்தமான இராச்சியத்திற்கு எதிரான பின் கூறியது, வடக்கு திக்கிலும் தெற்கு திக்கிலும் இருக்கிறது; அதிலிருக்கிறவர்கள் ஆவிகள் என்று சொல்லப் படுகிறார்கள். பரத்துக்கு அடுத்த இராச்சியத்திலிருக்கிறவர்கள் எல்லாம், ஆண்டவரிடத்து அன்பிலிருக்கிறார்கள்; ஆனால், அந்த இராச்சியத்திற்கு எதிரான நரகங்களிலிருக்கிறவர்கள் எல்லாம், தன்னையே நேசித்தலில் இருக்கிறார்கள்; அப்படி யிருக்க, ஞான சம்பந்தமான இராச்சியத்தி லிருக்கிறவர்கள் எல்லாம், அயலானிடத்து அன்பிலிருக்கிறார்கள்; ஆனால், அந்த இராச்சியத்திற்கு எதிரான நரகங்களிலிருக்கிறவர்கள் எல்லாம் உலகத்தை நேசித்தலிலிருக்கிறார்கள். ஆகவே, ஆண்டவரிடத்து அன்பும், தன்னையே நேசித்தலும், எதிரானவைகளா யிருக்கின்றன; அதனுடன்கூட, அயலானிடத்து அன்பும், உலகத்தை நேசித்தலும், அப்படியே இருக்கின்றன. ஆண்டவருடைய பரத்துக்கு அடுத்த இராச்சியத்திற்கு எதிரிடையான நரகங்களிலிருந்து வரும், எந்த பெருக்கும் ஞானசம்பந்தமான இராச்சியத்தில் இருக்கிறவர்கள் பக்கம், வழி காட்டப் படாதபடி, ஆண்டவரால் தொடர்ச்சியாய் முன்னரே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது; ஏனென்றால், விஷயம் இப்படி இருக்கவேண்டி யிருந்தால், ஞான சம்பந்தமான இராச்சியமானது மேலே கூறிய காரணத்துக்காக (செ. 578, 579) நாசமடையும். இவைகள்தான் ஆண்டவரால் ஒழுங்கில் தொடர்ச்சியாய் காப்பாற்றப்படுகிற, இரண்டு பொதுவான சமநிலைகளாக இருக்கின்றன.

## LXIII.

## சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியிலிருக்கும் சமநிலையினுல், மனிதன் சுவாதீனத்தில் இருக்கிறுன்.

**597.** சுவர்க்கத்துக்கும் நரகத்திற்கும் மத்தியிலிருக்கும் சமநிலையானது, மேலே சொல்லப்பட்டிருக்கிறது; மேலும், அது, சுவர்க்கத்திலிருந்து வரும் நன்மைக்கும், நரகத்திலிருந்து வரும் தீமைக்கும், மத்தியிலிருக்கும் ஓர் சமநிலை என்றும், அதனுல், அது தன்னுடைய சத்தில் சுவேச்சையாயிருக்கிற சூக்கும சமநிலை என்றும், காண்பிக்கப்பட்டிருக்கிறது. சூக்கும சமநிலை தன் சத்தில் சுவாதீனமாயிருக்கிறது; ஏனென்ருல், அது நன்மைக்கும் தீமைக்கும் மத்தியிலும், அதனுடன்கூட உண்மைக்கும் பொய்யிக்கும் மத்தியிலிருக்கிறது; இவைகள் எல்லாம் சூக்குமமானதா யிருக்கிறது. ஆகையினுல், நன்மையாவது தீமையாவது இச்சிக்கும் சக்தியும், உண்மையையாவது பொய்யையாவது நினைக்கும் சக்தியும், ஒன்றைவிட்டு மற்றதை நல்லதென்று தெரிந்து எடுக்கும் சக்தியும் தான், நாம் இப்பொழுது பேசுகிற சுவாதீனமா யிருக்கிறது. இந்த சுவாதீனம் ஆண்டவரால் ஒவ்வொரு மனிதனுக்கும் கொடுக்கப் பட்டிருக்கிறது; அன்றியும் அது எப்பொழுதும் நீக்கப்படுகிறதுமில்லை. உண்மையில் தன் உற்பத்தி ஸ்தானத்திலிருந்து, அது ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினுல், மனிதனுடைய சொந்தமானதா யல்லாமல். ஆண்டவருடையதா யிருக்கிறது. அப்படியிருந்தும், மனிதனுனவன் சீர்திருத்தப்பட்டு இரக்ஷிக்கப்படும் பொருட்டு, அவனுக்கு உயிருடன் அவனுக்கு சொந்தமாக கொடுக்கப்படுகிறது; ஏனென்ருல் சுவாதீனமில்லாமல், சீர்திருத்தமும் இல்லை, மோக்ஷமுமில்லை. விவேகத்துடன் இசைந்த இயற்கை அறிவினுல் ஒவ்வொருவனும், மனிதனுனவன் கெடுதியாக அல்லது நன்மையாக, உண்மையாக அல்லது உண்மையாயல்லாமல், நியாயமாக அல்லது நியாயமில்லாமல், நினைக்க சுவாதீனம் உடைத்தாயிருக்கிறுனென்றும், அதனுடன்கூட நன்ருயும் யோக்கியமாயும், நியாயமாயும் அவன் பேசி செயல்படவும் கூடுமென்றும், ஆனுல் அவனுடைய புறம்பானதை கட்டுகளில் வைக்கிற ஞானசம்பந்தமானதும், சன்மார்க்கமானதும், தேசாசாரமானதுமாகிய சட்டங்

களினால், கெடுதியாயும், உண்மையில்லாமலும், அந்நியாயமாயும் பேசி, செயல்பட தடுக்கப்படுகிறானென்றும், அறிந்துகொள்ளலாம். ஆகவே, நினைத்து இச்சிக்கிற மனிதனுடைய ஆவிதான் சுயேச்சையி லிருக்கிறது என்றும், மேலே கண்ட சட்டங்களை ஒத்து இருந்தா லொழிய பேசி செயல்படுகிற மனிதனுடைய புறம்பானது, அப்படி இல்லை என்று விசதமாகிறது.

**598.** மனிதனுக்கு சுவாதீன மில்லாவிட்டால், அவன் சீர் படுத்தப்பட முடியாது; ஏனென்றால், அவன் இரக்ஷிக்கப்படுவ தற்கு முன், நீக்கப்படவேண்டிய எல்லாவித தீமைகளிலும் அவன் பிறந்திருக்கிறான்; ஆனால், அவன் அவைகளை தன்னிலேயே பார்த்து, அவைகளை ஒத்துக்கொண்டு, பின்னிட்டு அவைகளை இச்சிக்காமல் விட்டுவிட்டு, கடைசியில் அவைகளை வெறுப்பில் வைத்தாலொழிய, அவைகள் நீக்கப்படமுடியாது. அப்பொழுது தான், முதல் முதல் அவைகள் நீக்கப்படுகின்றன. மனிதனானவன் நன்மையிலும் தீமையிலும் இருந்தாலொழிய, இது செய்யப்பட முடியாது. ஏனென்றால், அவன் நன்மையிலிருந்து தீமைகளை பார்க்கலாம்; ஆனால், அவன் தீமையிலிருந்து நன்மைகளைப் பார்க்க முடியாது. மனிதனானவன் நினைக்க சக்தியுள்ளவனாயிருக்கிற பரமார்த்த நன்மைகளை வேதத்தை வாசிப்பதிலிருந்தும் பிர சங்கங்களை கேட்பதிலிருந்தும் இளம்பிராயம் முதல் கற்றுக்கொள் ளுகிறான்; உலகத்தில் வாழ்வதினால், சன்மார்க்கமானதும், தேசா சாரமானதுமாகிய நன்மைகளை கற்றுக்கொள்ளுகிறான். மனிதன் சுவாதீனத்தில் இருக்கவேண்டியதற்கு இதுதான் முதல் காரணம். மனிதனுடைய அன்பின் ஆசையிலிருந்து செய்யப்படுவதைத் தவிர அவனுக்கு எதுவும் தனதாக்கப்படுகிறதில்லை என்பது வேறொரு காரணம். மற்றவைகள் பிரவேசிக்கலாம்; ஆனால் சித் தத்தை எட்டாமல், சிந்தனைக்கு மேல்படாமல் தான் பிரவேசிக்க லாம்; மனிதனுடைய சித்தத்திற்குள் பிரவேசிக்காதது, அவ னுடையதாகாது; ஏனென்றால் தனக்கு இருக்கிறதை எல்லாம், ஞாபகத்திலிருந்து சிந்தனையானது அடைகிறது; ஆனால், சித்த மானது, தனக்கு இருக்கிறதை எல்லாம், உயிரிடமே இருந்து அடைகிறது. சித்தத்திலிருந்துவராத, அதேவாகிறபடி அன்பின் ஆசையிலிருந்துவராத எதுவும், எப்பொழுதும் தன் இஷ்டமான தாயிருக்கிறதில்லை. ஏனென்றால், ஒரு மனிதன் இச்சிக்கிற அல் லது நேசிக்கிற எதையும், அவன் தன் இஷ்டமாய் செய்கிறான்

ஆகையினால், மனிதனுடைய சுயேச்சையும் அவன் அன்பினுடைய அல்லது அவனுடைய சித்தத்தினுடைய ஆசையும் ஒன்றாயிருக்கின்றன. ஆகையினால், மனிதன் உண்மையினாலும் நன்மையினாலும் இயக்கப்படவும், அல்லது அவைகளை நேசிக்கவும், இவ்விதமாக, அவைகள் தன்னுடைய சொந்தமானதாகவும், சக்தியுள்ளவனாயிருக்க, அவன் சுயேச்சையை உடைத்தாயிருக்கிறான். சுருங்கச் சொல்லில், சுயேச்சையில் மனிதனுக்குள் பிரவேசிக்காத எதுவும் நிற்கிறதில்லை. ஏனென்றால், அது அவனுடைய அன்பு அல்லது சித்தத்திற்கு சேர்ந்ததல்ல; மேலும், மனிதனுடைய அன்பிற்கும் சித்தத்திற்கும்சேராதது, அவனுடைய ஆவிக்குசேர்ந்ததல்ல ஏனென்றால், மனிதனுடைய ஆவியின் சொரூபம் அன்பு அல்லது சித்தமாயிருக்கிறது. ஒரு மனிதன் தான் நேசிக்கிறதை, அவன் இச்சிக்கிறபடியினால், அன்பு அல்லது சித்தமென்று சொல்லப்படுகிறது. மனிதன் சுவேச்சையிலிருந்தாலொழிய, ஏன் அவன் சீர்படுத்தப்பட முடியாதென்பதற்கு, இதுதான் இப்பொழுது காரணமாயிருக்கிறது.

**599**. மனிதனானவன், தான் சீர்படுததப்படும் பொருட்டு, சுவேச்சையில் அவன் இருப்பதற்காக, அவன் ஆவிசம்பந்தப்பட்டவரையில், சுவர்க்கத்துடனும் நரகத்துடனும் அவன் சேர்க்கப்பட்டிருக்கிறான். ஏனென்றால், ஒவ்வொரு மனுஷனுடனும், நரகத்திலிருந்து ஆவிகளும், சுவர்க்கத்திலிருந்து தேவர்களுமிருக்கிறார்கள். நரகத்திலிருந்து வந்த ஆவிகளால், மனிதன் தன்னுடைய சொந்ததீமையிலிருக்கிறான்; ஆனால், சுவர்க்கத்து தேவர்களினால், அவன் ஆண்டவரிடமிருந்து வந்த நன்மையிலும்,இவ்விதமாக, சூக்கும் சமநிலையிலும்,அதாவது சுயேச்சையிலுமிருக்கிறான்.ஒவ்வொரு மனிதனுக்கும், சுவர்க்கத்திலிருந்து வந்த தேவர்களும், நரகத்து ஆவிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன வென்பது, மானிட ஜாதியுடன் சுவர்க்கத்தின் சேர்க்கையைப்பற்றி கூறும் அதிகாரத்தில் பார்க்கப்படலாம்(நெ. 294 முதல் 302 வரையில்).

**600**. சுவர்க்கத்துடனும் நரகத்துடனும் மனிதனுடைய சேர்க்கை, அவர்களுடன் நேராயல்லாமல், ஆவிகள் உலகத்திலிருக்கிற ஆவிகள் மூலமாய் நடுப்போக்காய் இருக்கிறது என்று தெரிந்திருக்கப்படவேண்டும். இந்த ஆவிகள் மனிதனுடன் இருக்கின்றன. நரகத்திலிருந்தேயாவது சுவர்க்கத்திலிருந்தேயாவது எதும் அவனிடம் வருகிறதில்லை. ஆவிகள் உலகத்தில் உள்ள தீமை

யான ஆவிகள் மூலமாய் மனிதனானவன், நரகத்துடனும் அங்கே யிருக்கும் நல்ல ஆவிகள் மூலமாய் சுவர்க்கத்துடனும், சேர்க்கப்பட் டிருக்கிறான். ஆகையினால், ஆவிகள் உலகம், சுவர்க்கத்துக்கும் நரகத்திற்கும் மத்தியில் இருக்கிறது, அந்த உலகத்தில் சமநிலையே இருக்கிறது. ஆவிகள் உலகம் சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத் தியிலிருக்கிறதென்பது, அந்த உலகத்தை குறித்து எழுதிய அதி காரத்தில் பார்க்கப்படலாம் (நெ. 421 முதல் 431 வரையில்); சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியிலிருக்கும் அந்த சமநிலையே அங்கே இருக்கிறதென்பது, கடைசி அதிகாரத்தில் பார்க்கப்பட லாம் (நெ. 589 முதல் 596). ஆகையினால், மனிதனுடைய சுவேச் சையின் உற்பத்தி ஸ்தானம் இப்பொழுது விசதமாகிறது.

**601**. மனிதனுடன் சேர்க்கப்படுகிற ஆவிகளைக் குறித்து, இன்னும் கொஞ்சம் சொல்லப்பட வேண்டியிருக்கிறது. ஒரு முழு கூட்டமும் மற்றொரு கூட்டத்துடனும், தான் எங்கேயிருந்த போதிலும், அதேமாதிரி ஒருவனுடனும், அந்த கூட்டத்திலிருந்து அனுப்பப்பட்ட ஒரு ஆவியின் மூலமாய் சம்பந்தம் வைத்திருக் கலாம்; அவ்வித ஆவியானது, அநேகருக்கு நினைக்கும் கர்த்தர் என்று சொல்லப்படுகிறது. சுவர்க்கத்திலிருக்கும் கூட்டங்களுட னும், நரகத்திலிருக்கும் கூட்டங்களுடனும், ஆவிகள் உலகத்திலிருந்து வந்த மனிதனுடன் சேர்க்கப்பட்ட ஆவிகள் மூலமாய், அவனுடைய சேர்க்கை விஷயத்தில் அதேமாதிரி யிருக்கிறது.

**602**. கடைசியாய், தனக்குள்ளே சுவர்க்கத்தின் உட்பெருக் கிலிருந்து, இறந்தபிறகு தன்னுடைய வாழ்க்கையைப்பற்றி, மனித னுக்கு இருக்கிற இயற்கை உணர்வைப்பற்றி சிலது சொல்லப்பட வேண்டும். உலகத்திலிருக்கும் காலத்தில் விசுவாசத்தின் நன்மை யில் வாழ்ந்த பேதமையான சாதாரண ஜனங்களில் சிலர் இருந்தார் கள். ஆண்டவருடைய அனுமதியினால் எவன் விஷயத்திலும் செய்யக்கூடிய, தாங்கள் உலகத்திலிருந்த நிலைமைபோன்ற நிலை மைக்குள் அவர்கள் கொண்டுவரப்பட்டார்கள்; இறந்த பிறகு, மனித னுடைய நிலைமையைக் குறித்து, அவர்களுக்கு என்ன அபிப்பிராயம் இருந்ததென்று, அக்காலத்தில் காண்பிக்கப்பட்டது. சில விவேக முள்ள ஜனங்கள் உலகத்தில் இருந்த காலத்தில், உலக வாழ்க் கைக்கு பின், தங்களுடைய ஆன்மாவைப்பற்றி என்ன நினைத்தோ மென்று கேட்டதாகவும், ஆன்மாவென்பது என்னவென்று தங் களுக்கு தெரியாதென்று பதில் சொன்னதாகவும், அவர்கள் சொன்

னூர்கள். இ[illegible] அவர்களுடைய நிலைமையைப்பற்றி அவர்கள் என்ன [illegible] வர்கள் அப்புறம்கேட்கப்பட்டார்கள்; தாங்[illegible] ஆவிகளாக [illegible] ண்டுமென்று, தாங்கள் நம்பினதாக அ[illegible] சொன்னூர்கள். [illegible] ஆவியைப்பற்றி தங்களுக்கு என்ன நம்[illegible]கை இருந்ததென்று அ[illegible]ள் அப்புறம் கேட்கப்பட்டார்கள்; அ[illegible] மனிதன் என்று அவர்கள் சொன்னூர்கள். இது எப்படி அ[illegible]ருக்கு தெரியுமென்று அப்புறம் அவர்கள் கேட்கப்பட்டார் கள்; [illegible] அப்படி யிருந்தபடியினூல், அது தங்களுக்கு தெரியு மென்[illegible] அவர்கள் சொன்னூர்கள். பேதைமையானவர்களுக்கு அவ்வித ந[illegible]க்கை இருந்ததென்றும், அது தங்களுக்கு இல்லாமல் போய்விட்டதென்றும், இந்த விவேகமுள்ள ஜனங்கள் ஆச்சரியப் பட்டார்கள். ஆகவே, சுவர்க்கத்துடன் சேர்க்கையில் இருக்கிற ஒவ்வொரு மனிதனும், இறந்த பிறகு தன்னுடைய வாழ்க்கையைப் பற்றி, ஒரு இயற்கை உணர்வை உடைத்தாயிருக்கிறு னென்று விசதமானது. இந்த இயற்கை உணர்வு, சுவர்க்கத்திலிருந்து வரும் உட்பெருக்கிலிருந்து தவிர, வேறு எந்த மூலத்திலும் வருகிறதில்லை; அதாவது, அது ஆவிகள் உலகத்தில், மனிதனுடன் சேர்க்கப்பட் டிருக்கிற ஆவிகளால், ஆண்டவரிட மிருந்து சுவர்க்கத்தின் மூல மாய் வருகிறது. மனிதனுடைய ஆன்மாவைப்பற்றி, பற்பல வழி களில் கற்பிக்கப்பட்டு, ஸ்திரப்படுத்தப்பட்ட கொள்கைகளினூல், சிந்தனையின் சுவேச்சையை அழித்து விடாதவர்களால், அது உடைத்தாயிருக்கப்படுகிறது; அதை அவர்கள் சுத்தமான சிந்தனை என்ருவது, சரீரத்தில் அதன் பீடத்தை தேடுகிற ஏதோ ஒரு ஜீவனுள்ள மூலவஸ்து வென்ருவது, சொல்லுகிறூர் கள்; அப்படியிருந்தாலும், ஆன்மாவானது மனிதனுடைய உயி ரைத்தவிர வேறு ஒன்றுமில்லை; ஆவியானது அந்த மனிதனுகவே இருக்கிறது; உலகத்தில் தன்னுடன் கொண்டு போகிற மண்சரீரமா னது, மனிதனுகவே இருக்கிற ஆவியானது ஸ்தூல உலகத்தில் தகுதியாய் செயல்பட சக்தி உண்டாக்கப்படுகிற ஒரு துணைக் கருவியாக இருக்கிறது.

**603.** சுவர்க்கத்தைப் பற்றியும், ஆவிகள் உலகத்தைப்பற்றி யும், நரகத்தைப்பற்றியும் இந்த நூலில் சொல்லப்பட்டவைகள், ஞான சம்பந்தமான உண்மைகளின் அறிவில் இன்பம் இல்லாதவர் களுக்கு தெளிவற்றதாய் தோன்றும்; ஆனுல், அந்த இன்பத்தில் இருப்பவர்களுக்கும், முக்கியமாய், உண்மையின் பொருட்டே

உண்மையினிடத்து கொள்ளும் ஆசையி விருப்பவர்களுக்கு, அதாவது, உண்மையாயிருப்பதினால், உண்மையை நேசிக்கிறவர்களுக்கு, தெளிவாய் தோன்றும்; ஏனென்றால், நேசிக்கப்பட்ட எதுவும், மனதினுடைய சிந்தனையில் வெளிச்சத்துடன் பிரவேசிக்கிறது; முக்கியமாய், எல்லா உண்மையும் வெளிச்சத்தில் இருப்பதினால், நேசிக்கப்பட்ட உண்மையானது அப்படி பிரவேசிக்கிறது.

The B. N. Press, Educational Printers, Mount Road, Madras.